உங்களுடைய உலகம் செழிப்படைகிறது. இந்த உலகமானது துக்கத்தை அடையும் தருணத்தில் தேவதைகளும் (இந்த உலகத்தின் துக்கத்தை) அனுஸரித்துத் துக்கிக்கிறார்கள். சாஸ்திரத்தில் சொல்லிய விதிப்படி ஹவ்யகவ்யங்களால் பூஜிக்கப்படுவார்களாகில் அந்தத் தேவர்கள் விருத்தியடைகிறார்கள். ராக்ஷஸ! நாங்கள் ராஜ்யத்தைப் போஷிப்பவர்கள். (ஆபத்துக்களிலிருந்து) பாதுகாப்பவர்களாகவுமிருக்கிறோம். ராஜ்யமானது பாதுகாக்கப்படாமற்போனால் ஸம்பத்து ஏது? ஸுகம் ஏது? குற்றமிருந்தாலன்றி ராக்ஷஸர்கள் அரசனை ஒருகாலும் அவமதிக்கலாகாது. மனிதர்களைப் பக்ஷிக்கிறவனே! எங்களிடத்தில் அபசாரமானது அணுவளவுகூட இல்லை. நாங்கள் எப்பொழுதும் ஸத்யத்துக்குக் கட்டுப்பட்டு [1] விகஸத்தைப் புஜிக்கின்ற குருக்களையும் பிராம்மணர்களையும் தேவதைகள் முதலியவர்களின் ஸ்தானத்தில் சக்திக்குத் தக்கபடி ஏற்படுத்துகிறோம். ஒருவன் மித்திரர்களிடத்திலும் நம்பினவர்களிடத்திலும் அன்னமிட்டவர்களிடத்திலும் வஸிக்க இடங்கொடுத்தவர்களிடத்திலும் ஒருபொழுதும் துரோகம் செய்யலாகாது. அப்படிப்பட்ட நீ எங்களுடைய வீட்டில் பூஜிக்கப்படுகிறவனாக ஸுகமாக வஸித்துவந்தவன். துஷ்டபுத்தியுள்ளவனே! எங்களுடைய அன்னங்களையும் புஜித்து எங்களை எவ்வாறு அபஹரிக்க விரும்புகிறாய்? இவ்விதமாகவே வீணான ஆசாரமுள்ளவனும் வீணாக வளர்ந்திருப்பவனும் வீணான புத்தியையுடையவனும் வீணாக மரணத்தை அடையத்தகுதியுள்ளவனுமான நீ இப்பொழுது வீணாக மரிக்கப்போகிறாய். அல்லது, நீ துஷ்ட புத்தியுள்ளவனும் எல்லாத் தர்மங்களாலும் விடுபட்டவனுமாயிருந்தால் எங்களுடைய சஸ்திரங்களை எங்களிடம் கொடுத்துவிட்டு யுத்தத்தினால் திரௌபதியைக் கொண்டு போ. அப்படியின்றி நீ தெரிந்துகொள்ளாமல் இந்தக் காரியத்தைச் செய்வாயாகில் அதர்மத்தையும் உலகத்தில் அபகீர்த்தியையும் மாத்திரம் அடைவாய். ராக்ஷஸனே! இப்பொழுது இந்த மானிடப் பெண்ணைத் தொட்டு உன்னால் இந்த விஷமானது நன்றாகக் கலக்கிக் குடத்தோடு குடிக்கப்பட்டது' என்று அந்த ராக்ஷஸனைப் பார்த்துச் சொன்னார். பிறகு, யுதிஷ்டிரர் அந்த ராக்ஷஸனுக்கு அதிக பாரமுள்ளவரானார். பாரத்தால் அழுத்தப்பட்ட தேகமுள்ளவனான அவனோ முன் சென்றதுபோல விரைந்து செல்பவனாகவில்லை. யுதிஷ்டிரர், பிறகு, திரௌபதியையும் நகுலனையும் பார்த்து, 'மூடனான ராக்ஷஸனிடத்

[1] தேவர்கள் முதலியவர்களுக்கு நிவேதனம் செய்த மிச்சம்.

ன்று பயப்படாதீர்கள். இவனுடைய நடையின் வேகமானது என்னால் குறைக்கப்பட்டது. புஜபலம் மிக்க வாயுகுமாரனான பீமன் அதிக தூரம் சென்றிருக்கமாட்டான். அவன் வந்தவுடன், ராக்ஷஸன் ஒரு முகூர்த்தநேரத்தில் உயிர் துறப்பான்' என்று சொன்னார். மன்னரே! ஸஹதேவனோ, மூடபுத்தியுள்ள அந்த ராக்ஷஸனைப் பார்த்துவிட்டு, குந்தீபுத்ரரான யுதிஷ்டிரரை நோக்கி, 'அரசரே! க்ஷத்ரியனுக்கு யுத்தத்தில் (பகைவனை) எதிர்த்துநின்று உயிரை விடுவதோ, அல்லது, பகைவனை வெல்வதோ இதனைக்காட்டிலும் மேலான நல்ல காரியம் என்ன இருக்கின்றது? பகைவரைவாட்டு பவரே! போர்புரிந்து இந்த ராக்ஷஸனாவது நம்மைக் கொல்லக் கடவன். அல்லது, நாமாவது இவனைக் கொல்லக்கடவோம். மிக்க பாஹுபலமுள்ளவரே! அரசரே! இது தக்க இடமும் காலமுமன்றோ? ஸத்ய பராக்கிரமமுள்ளவரே! க்ஷத்திரியதர்மத்திற்கு ஸமயம் வாய்த்திருக்கிறது. ஜயித்தோ கொல்லப்பட்டோ நற்கதியை அடைவதற்கு நாம் தகுதியுள்ளவர்களாக இருக்கிறோம். பாரதரே! இப்பொழுது ராக்ஷஸன் ஜீவித்திருக்கையில் ஸூர்யன் அஸ்தமயத்தை அடைவானாகில் மறுபடியும் நான் க்ஷத்திரியனென்று ஒருகாலும் சொல்லத் துணியேன்' என்கிற வசனத்தைச் சொன்னான். பிறகு, ஸஹதேவன் ராக்ஷஸனைப் பார்த்து, 'ஓ! ஓ! ராக்ஷஸ! நில்; நான் பாண்டுவின் புதல்வனான ஸஹதேவன். என்னையாவது கொன்று இவளைக் கொண்டுபோ; அல்லது, நீயாவது கொல்லப்பட்டு இங்கே படு' என்று சொன்னான்.

அப்பொழுது, மாத்ரீபுத்திரன் சொல்லிக்கொண்டிருக்கையிலேயே, மிக்க தோள்வலிமையுள்ள பீமஸேனன் வஜ்ரபாணியான இந்திரன்போலத் தற்செயலாகக் காணப்பட்டான். அவன் அந்த இடத்தில் பிராதாக்களையும், கீர்த்தியுள்ளவளான பாஞ்சாலியையும், பூமியில் நின்றுகொண்டு ராக்ஷஸனை அப்பொழுது அதட்டுகின்ற ஸஹதேவனையும், வழியினின்று (தவறி) மயங்குகிறவனும் காலத்தால் கெடுக்கப்பட்ட மதியுள்ளவனும் ஆங்காங்கு சுற்றுகிறவனும் தெய்வத்தால் மதிமயக்கமடையும்படி செய்யப்பட்டவனுமான ராக்ஷஸனையும் கண்டான். மகாபலசாலியான பீமன் அந்தப்பிராதாக்களும் திரௌபதியும் கொண்டுபோகப்படுவதைக்கண்டு கோபத்தை ஏறிட்டுக்கொண்டான். அவன் ராக்ஷஸனையும் பார்த்து, 'நீ ஆயுதங்களைப் பரீக்ஷிக்கும் விஷயத்தில் வேலைசெய்பவனாக என்னால் முன்பே அறியப்பட்டிருக்கிறாய். (உன்னைக்கொல்லும் விஷயத்தில்) எனக்கு

விருப்பமில்லாததுபற்றி அப்பொழுது நீ கொல்லப்படாமலிருந்தாய். பிராம்மணவேஷத்தால் மறைக்கப்பட்டவனாக இருந்துகொண்டு எங்களுக்கு அப்ரியத்தை நீ சொல்லாமலிருந்தாய். பிரியமான விஷயங்களில் மகிழ்கிறவனும் அப்ரியத்தையே செய்யாதவனும் பிராம்மணவேஷத்தைத் தரித்திருப்பவனும் குற்றம் செய்யாதவனுமான உன்னை ராக்ஷஸனென்று அறிந்திருந்தாலும் நான் கொல்லாமலே இருந்தேன். அப்படிப்பட்டவனை எவன் கொல்வனோ அவன் நரகத்தை அடைவான். மேலும், [1] காலத்தால் பக்குவமாகாத உனக்கு வதம் அப்பொழுது இல்லை. அத்புதமான செய்கையுள்ள காலமானது கிருஷ்ணையை அபஹரிக்கும் விஷயத்தில் இப்படிப்பட்டபுத்தியை உனக்குக் கொடுத்துவிட்டபடியால் இப்பொழுது நீ நன்கு பக்குவமாக இருக்கிறாயென்பது திண்ணம். நீ அப்படி பலசாலியாக இருந்தாலும் அப்படிப்பட்ட காலத்தை அடைந்து விட்டமையால் இப்பொழுது இருக்கமாட்டாய். காலமென்கிற நூலுடன் தொங்கவிடப்பட்டிருக்கிற இந்தத் தூண்டிலானது உன்னால் விழுங்கப்பட்டுவிட்டது. ஜலத்தில் தூண்டில்முள்ளினால் வாய்கோக்கப்பட்ட மீன்போல இப்பொழுது எப்படி (விடுபட்டு)ச் செல்லுவாய்? எந்த இடத்தைக் குறித்து நீ புறப்பட்டாயோ, எந்த இடத்தைக்குறித்து உன்னுடைய மனமானது முந்திச்சென்றதோ அந்த இடத்தை நீ அடையப்போகிறதில்லை. பகன் ஹிடிம்பன் ஆகிய இவர்களுடைய வழியை அடைவாய்' என்னும் இதனைச் சொன்னான். பீமனால் இவ்வாறு சொல்லப்பட்டவனும் யமனால் தூண்டப்பட்டவனுமான ராக்ஷஸனோ பயந்தவனாக அவர்களனைவரையும் விட்டுவிட்டு யுத்தத்திற்காக அருகில் வந்தான். கோபத்தால் உதடுகள் மிகத்துடிக்கிறவனாக மீண்டும் பீமனைப்பார்த்து, 'பாவி! எனக்குத் திசைகள் தெரியாமல் போகவில்லை. உனக்காகவே நான் தாமதித்தேன். யுத்தத்தில் எந்த எந்த அரக்கர்கள் உன்னால் கொல்லப்பட்டார்களென்று நான் கேட்டிருக்கிறேனோ அவர்களுக்கு இப்பொழுது உன்னுடைய ரக்தத்தால் ஜலதர்ப்பணம் செய்யப்போகிறேன்' என்றும் சொன்னான். ராக்ஷஸன் அப்பொழுது பீமனைப்பார்த்து இவ்வண்ணம் உரைத்துப் பயங்கரமான முகத்துடன் கோபத்தால் கருநாகம்போலப் பெருமூச்சுவிட்டுக் கொண்டு யுத்தத்திற்காக எதிர்த்து வந்தான். பிறகு, இவ்வாறு சொல்லக்கேட்ட பீமன், கடைவாய்களை நக்கிக்கொண்டும், கோபத்தால் சிரித்துக்கொண்டும், நேரில்வந்திருக்கிற காலனுக்கும் அந்தக

[1] மரணகாலம் நேராத என்பது.

னுக்குமொப்பானவனுகி, 'நில், நில்' என்று சொல்லிக்கொண்டும், கோபத்தினுல் கண்கள் நன்குசிவந்தவனுகக் கைச்சண்டையையே விரும்பி ராக்ஷஸனை எதிர்த்தோடி வந்தான். ராக்ஷஸனும் அப் பொழுது அடிக்கடி வாயைத்திறந்துகொண்டும், இருகடைவாய்க ளேயும் நக்கிக்கொண்டும், போரைவிரும்பி எதிரில் நிற்கின்ற பீமனை, பலனென்கிற அஸுரன் வஜ்ரத்தைத் தரித்த இந்திரனை எதிர்த்து ஓடியதுபோலப் பரபரப்புடன் எதிர்த்து ஓடினுன். பீமஸேனனும் கைச்சண்டைக்கு ஆயத்தமாக நின்றான். ராக்ஷஸனும் அதிக உத்ஸா ஹத்துடன் கைச்சண்டையை விரும்பினுன்.

அரசரே! அவ்விருவருக்கும் மிக்க பயங்கரமான கைச்சண்டை நடந்துவரும்போது, மாத்ரீகுமாரர்களிருவரும் அதிககோபத்துடன் எதிர்த்தோடிவந்தார்கள். குந்திபுத்திரனை பீமன் உரக்கச் சிரித்துக் கொண்டு, 'நானே ராக்ஷஸனை (க்கொல்ல) வல்லவன்' என்று அவ்விருவரையும் தடுத்தான்; 'பார்த்துக்கொண்டிருங்கள்' என்றும் சொன்னுன்; (யுதிஷ்டிரரைப் பார்த்து,) 'அரசரே! என்மீதும் பிராதாக்கள்மீதும் தர்மத்தின்மீதும் ஸுக்ருதத்தின்மீதும் யாகத் தின்மீதும் ஆணையிடுகிறேன். ராக்ஷஸனை நான் நாசம் செய்வேன்' என்று சொன்னுன். (பீமன்) இவ்வண்ணம் கூறியபின், வீரர்க ளான அந்த ராக்ஷஸனும் பீமஸேனனுமாகிய இருவரும் ஒருவரோ டொருவர் போட்டிபோட்டுக்கொண்டு கைகளால் கட்டிச் சண்டை செய்யத் தொடங்கினுர்கள். யுத்தத்தில் (ஒருவரையொருவர்) பொருதவர்களும் கோபங்கொண்டவர்களுமான அந்தப் பீமனுக்கும் ராக்ஷஸனுக்கும், இந்திரனுக்கும் சம்பரனுக்கும் நேர்ந்ததுபோல யுத்தம் நேர்ந்தது. அந்த வீரர்களிருவரும் மிக்க கோபங்கொண்டு ஒருவர்மீதொருவர் பாய்ந்தார்கள். மாரிக்காலத்து மேகங்கள்போலக் கர்ஜிப்பவர்களும் மிக்க பலசாலிகளுமான அவர்கள் மரங்களை ஒடித் தொடித்து (அவைகளால்) ஒருவரை ஒருவர் அடித்தார்கள். பலசாலிகளுள் சிறந்தவர்களான அவர்கள், ஒருவர்மீது ஒருவர் மிகுந்த கோபமுள்ளவர்களும் ஒருவரை ஒருவர் கொல்வதில் விருப்பமுள்ளவர்களுமாகித் தொடைகளால் பெரிய மரங்களை ஒடித் தார்கள். முற்காலத்தில் வானரர்களுள் சிறந்தவர்களும் பிராதாக்க ளுமான வாலிசுக்ரீவர்களுக்கு நடந்த யுத்தம் போன்ற அந்த மரச் சண்டையானது மரங்களை அழிப்பதாயிற்று. அந்த இருவரும் அடிக்கடி உரக்கக் கர்ஜித்துக்கொண்டு மரங்களைச் சுழற்றிச் சுழற்றி ஒருவரை ஒருவர் ஒரு முகூர்த்தகாலம் அடித்தார்கள். பாரதரே!

அந்த இடத்தில் எல்லா மரங்களுமே ஒருவரை ஒருவர் கொல்வதி லுள்ள விருப்பத்தால் நூறு நூறாகப்பிடுங்கி (நொறுக்கிக்) குவிக்கப் பட்டபின் கற்களை எடுத்துக்கொண்டு மகாபலசாலிகளான அவ்விரு வரும் பெரிய மேகங்களால் பொழியப்படுகிற இரண்டு பெரிய மலைகள் போல ஒரு முகூர்த்தகாலம் போர்புரிந்தார்கள். கோபமுள்ளவர்க ளான அவ்விருவரும் பயங்கரமான உருவமுள்ள பெரிய கற்களால் மிக்க வேகமுள்ள வஜ்ராயுதங்களால் அடித்துக்கொள்வதுபோல ஒருவரை ஒருவர் அடித்தார்கள். பிறகு, தத்தம் பலத்தினால் கர்வங்கொண்ட அவ்விருவரும் மறுபடியும் (ஒருவரை ஒருவர்) எதிர்த்தோடி இருகைகளாலும் கட்டிப்பிடித்து இரண்டு யானைகள் போல இழுத்தார்கள். அதிகப் பயங்கரமான முஷ்டிகளால் ஒருவரை யொருவர் எதிர்த்துக் குத்தினார்கள். மிக்க பலசாலிகளான அவர்க ளுக்கு அப்பொழுது, 'கடகட' என்னும் ஒலி உண்டாயிற்று. பிறகு, பீமனே ஐந்துதலைநாகம்போன்ற முஷ்டியை நன்றாகப்பிடித்து ராக்ஷஸனுடைய கழுத்தில் வேகத்தோடு குத்தினான். பிறகு, பீமஸே னனுடைய கையினால் அடிக்கப்பட்டவனும் களைத்தவனுமான அந்த ராக்ஷஸன் மிக்க மயக்கமடைந்ததைக் கண்டு, பீமஸேனன் அவனை எதிர்த்து வந்தான். மிக்க புஜபலமுள்ளவனும் தேவனுக்கு ஒப்பான வனுமான பீமன், பிறகு, அந்த ராக்ஷஸனைத் தன்னிருகைகளாலும் வலிந்து உயரத்தூக்கிப் பூமியில் நன்றாகத் தேய்த்தான். பிறகு, கோபம் மூண்டவனான பாண்டவன் இருகைகளாலும் அந்த ராக்ஷ ஸனை வலிந்து நசுக்கி அவனுடைய எல்லா அவயவங்களையும் நொறுக் கினான். முஷ்டியினால் கழுத்தை நன்றாக நாற்புறங்களிலும் அடித்து நசுக்கித் தலையை உடலினின்றும் பறித்தான். உதடுகளைக் கடித்துக் கொண்டதும் பிதுங்கி வெளியில் வந்திருக்கின்ற கண்களுடன் கூடியதும் மரத்தினின்று நழுவின கனிபோன்றதுமான ஜடா ஸுரனுடைய தலையானது பீமஸேனனுடைய பலத்தால் கவரப் பட்டதும் ரக்தத்தினால் எங்கும் பூசப்பட்டதுமாகப் பற்களால் உதடுகளை நன்கு கடித்துக்கொண்டு கீழே விழுந்தது. மகாவில்லாளி யான பீமஸேனன் அந்த ராக்ஷஸனைக்கொன்று தேவர்களால் இந்திரன் துதிக்கப்படுவதுபோலப் பிராம்மணச்ரேஷ்டர்களால் துதிக்கப்படுகின்றவனாகி யுதிஷ்டிரரருகில் வந்தான்.

ஜடாஸுரவதபர்வம் முற்றிற்று.

---

## நூற்றைம்பத்தோன்பதாவது அத்யாயம்.

## யக்ஷயுத்த பர்வம்.

**(யுதிஷ்டிரர் பரிஜனங்களுடன் மறுபடியும் நரநாராயணாச்ரமத்தில் வஸித்ததும், வ்ருஷபர்வாவின் ஆச்ரமமுதலிய இடங்களில் ஸஞ்சரித்ததும், ஆர்ஷ்டிஷேணனுடைய ஆச்ரமத்துக்குச் சென்றதும்.)**

அந்த ராக்ஷஸன் கொல்லப்பட்ட பிறகு, பிரபுவும் அரசருமான குந்திபுத்ரர் மறுபடியும் நரநாராயணாச்ரமத்தை அடைந்து வாஸம் செய்தார். திரௌபதியுடனிருக்கும் அந்த யுதிஷ்டிரர், ஸமயத்தில் பிராதாவான அர்ஜுனனை நினைத்துக்கொண்டு அந்தத் தம்பிமாரனைவரையுமழைத்து, 'க்ஷேமமாக வனத்தில் ஸஞ்சரிக்கின்ற நமக்கு நான்கு வருஷங்கள் சென்றன. 'மலைகளுள் சிறந்ததும், பூத்திருக்கிற சோலைகளாலும் மதித்திருக்கிற குயில்களாலும் வண்டுகளாலும் மயில்களாலும் சாதகங்களாலும் நித்யோத்ஸவம்போல அலங்கரிக்கப்பட்டதும், புலிகளாலும் பன்றிகளாலும் எருமைகளாலும் கவயங்களாலும் அப்படியே மான்களாலும் மதயானைபோன்ற துஷ்ட மிருகங்களாலும் புள்ளிமான்களாலும் அடையப்பட்டதும், மலர்ந்திருக்கின்ற [1] ஸஹஸ்ரபத்ரங்களாலும் [2] சதபத்ரங்களாலும் உத்பலங்களாலும் நன்கு மலர்ந்த [3] கமலங்களாலும் கருநெய்தல்களாலும் (விளங்குவதும்,) மிக்க புண்யமானதும், பரிசுத்தமானதும், தேவர்களாலும் அஸுரர்களாலும் அடையப்பட்டதும், பர்வத ராஜனுமான கைலாஸத்தைக் குறித்து ஐந்தாவது வர்ஷக் கடைசியில் நான் வருகிறேன்' என்று அர்ஜுனன் ஸங்கேதம் செய்திருக்கிறான். அர்ஜுனனுடைய வரவைக் காண எண்ணங்கொண்ட நம்மாலும் அந்த இடத்தில் (வந்து பார்ப்பதாக) ஸங்கேதம் செய்யப்பட்டிருக்கிறது. அளத்தற்கரிய ஆற்றலுள்ள அந்தப் பார்த்தனால், முற்காலத்தில், 'அஸ்திர வித்தையை விரும்பினவனாக ஐந்துவர்ஷங்கள் (ஸ்வர்க்கலோகத்தில்) வசிப்பேன்' என்று என்னிடத்தில் ஸங்கேதம் செய்யப்பட்டிருக்கிறது. அஸ்திரங்களைப் பெற்றவனும்

1, 2, 3 தாமரையின் வகைகள்.

பகைவரையடக்குபவனும் தேவலோகத்தினின்று இவ்வுலகத்திற்குத் திரும்பிவந்தவனும் காண்டீவமென்கிற வில்லைக் கையில் பிடித்திருக்கிறவனுமான அர்ஜுனனை இந்த இடத்தில் பார்ப்போம்' என்ற வசனத்தைச் சொன்னார். யுதிஷ்டிரர் இவ்வண்ணமுரைத்துப் பிராம்மணர்களனைவரையும் அழைத்தார்; தவசிகளான அவர்களுக்கு அந்தக் காரணத்தையும் சொன்னார். உக்கிரமான தவமுள்ள அந்தப் பிராம்மணர்கள் மகிழ்ச்சியுடன் யுதிஷ்டிரரை வலமாகச் சுற்றிவந்து 'பரதஶ்ரேஷ்டனே! தர்மங்களை அறிந்தவனே! ஸுகத்தைப் பின்தின பயனுகக்கொண்ட இந்தத் துன்பத்தை க்ஷத்திரியனுக்குரிய தர்மத்தினால் விரைவாகத் தாண்டிப் பூமியைப் பரிபாலனம் செய்யப் போகிறாய்' என்று மங்களத்தோடும் க்ஷேமத்தோடும் சேர்ந்திருக்கும்படி அன்புடன் அந்தச் சொல்லை ஏற்றுக்கொண்டார்கள். பகைவரை வாட்டுபவரும் திரௌபதியுடனிருப்பவரும் ஸ்ரீமானுமான அரசர் அந்தத் தவசிகளுடைய அந்த வசனத்தை ஏற்றுக்கொண்டு அப்பொழுது அந்தப் பிராம்மணர்களாலும் பிராதாக்களாலும் கடோத்கசன்முதலிய ராக்ஷஸர்களாலும் பின்தொடரப்பட்டவராகவும் லோமசரால் பாதுகாக்கப்பட்டவராகவும் புறப்பட்டார்.

மிக்க தேஜஸுள்ளவரும் நல்ல விரதமுள்ளவருமான அவர் ஆங்காங்கே தம்பிமார்களுடன் சிலவிடங்களில் கால்களால் நடந்து சென்றார்; சிலவிடங்களில் அரக்கர்களால் தூக்கிச் செல்லப்பட்டார். பிறகு, யுதிஷ்டிரராஜர் பல துன்பங்களைச் சிந்தித்துக்கொண்டு சிங்கங்களாலும் புலிகளாலும் யானைகளாலும் நிரம்பின வடதிசையை நோக்கிச் சென்றார். அவர் கைலாசத்தையும் மைனுகமலையையும் கந்தமாதனத்தைச் சார்ந்த குன்றுகளையும் மேரு பர்வதத்தையும் மலையின் மேன்மேலான இடங்களில் மங்களகரமான பல நதிகளையும் பார்த்துக்கொண்டு பதினேழாவது நாளில் புண்ணியமான இமயமலையின் உச்சியை அடைந்தார். வேந்தரே! பாண்டவர்கள், கந்தமாதனத்திற்கு அருகில், புண்யமானதும் பலவகை மரங்களாலும் கொடிகளாலும் சூழப்பட்டதுமான இமயமலையின் மேற்பிரதேசத்தில் நீர்நிலைகளில் முளைத்தவைகளும் புஷ்பித்திருப்பவைகளுமான மரங்களால் சூழப்பட்ட மிக்க புண்யமான விருஷபர்வாவினுடைய ஆஶ்ரமத்தைக் கண்டார்கள். பகைவர்களை அடக்குகிறவர்களான பாண்டவர்கள் ராஜரிஷியும் தர்மாத்மாவுமான அந்த விருஷபர்வாவை

அணுகிக் களைதீர்ந்தவர்களாகி நமஸ்கரித்தார்கள். ராஜரிஷியான அவன் பரதஸ்ரேஷ்டர்களான அவர்களைப் புத்திரர்களைப்போல வரவேற்றான். பகைவர்களை அடக்குகிறவர்களான அவர்கள் அவனால் பூஜிக்கப்பட்டவர்களாக அங்கே ஏழுநாள் வசித்தார்கள். எட்டாவதுநாள் வந்தவுடன், உலகத்தில் பிரசித்திபெற்ற அந்த விருஷபர்வா என்கிற ரிஷியிடம் விடைபெற்றுக்கொண்டு புறப்பட விரும்பினார்கள். அரசரே! பிறகு, அந்தப் பாண்டவர்கள் தங்களிடத்தில் அடைக்கலமாக இருப்பவர்களும் காலம் தவறாமல் பந்துக்களைப்போல் நன்கு பூஜிக்கப்பட்டவர்களுமான அந்தப் பிராம்மணர்களை ஒவ்வொருவராக விருஷபர்வாவினிடம் தெரிவித்து மிச்சமிருக்கிற அந்தப் பரிஜனங்களை மகாத்மாவான அவனிடம் ஒப்பித்து யஜ்ஞபாத்திரங்களையும் ரத்தினங்களையும் ஆபரணங்களையும் விருஷபர்வாவின் ஆஸ்ரமத்தில் வைத்தார்கள். சென்றதிலும் வருவதிலும் சிறந்த ஞானமுள்ளவனும் திறமையுள்ளவனும் கடமைகளனைத்தையுமறிந்தவனும் தர்மங்களை அறிந்தவனுமான அந்த வ்ருஷபர்வா பரதஸ்ரேஷ்டர்களான அவர்களுக்கு, புத்திரர்களுக்கு உபதேசிப்பதுபோல உபதேசித்தான். அனுமதிபெற்ற வீரர்களான அந்த மஹாத்மாக்கள் கிருஷ்ணையுடனும் மகாத்மாக்களான பிராம்மணர்களுடனும் சேர்ந்து வடதிசையை நோக்கிச் சென்றார்கள். மிக்கதேஜஸுள்ள விருஷபர்வாவானவன், அப்பொழுது பாண்டவர்களைப் பிராம்மணர்களுக்குத் தெரிவித்துப் புறப்பட்டுச் செல்லுகின்ற அரசர்களான அவர்களைப் பின்தொடர்ந்து சென்றான். விருஷபர்வாவானவன் குந்திபுத்ரர்களைப் பின்தொடர்ந்து சென்று ஆசிர்வாதங்களால் மகிழ்வித்து வழியையும் சொல்லிவிட்டுத் திரும்பினான். ஸத்தியமான பராக்கிரமமுள்ளவரும் குந்திநந்தனருமான யுதிஷ்டிரர் தம்பிமார்களுடன் கால்களால் நடந்தே பலவகை மிருகக்கூட்டங்களால் அடையப்பட்ட வழியில் சென்றார். அந்தப் பாண்டவர்கள் பலவகை மரங்களால் நெருங்கிய மலையின் சரிவுகளில் வஸிப்பவர்களாகி நான்காவது நாளில் அந்தமலையில் பிரவேசித்தார்கள். அவர்கள் விருஷபர்வாவினால் சொல்லப்பட்ட வழியை அடைந்து பெரிய நீருண்டமேகம்போன்றதும் ஜலமுள்ளதும் மங்களகரமானதும் ரத்தினங்களாலும் பொன்னாலும் அழகியதும் பலவகைக்கொடுமுடிகளுள்ளதுமான மலையையும், பல குகைகளையும் அருவிகளையுமுடையதும் கற்பிளவுகளால் விசாலமாக இருப்பதும் கொடிகளாலும் மரங்களாலும் நெருங்கியதும் அழகியதுமான இமயமலையின் தாழ்வரையையும், பலவித மலைகளையும் பார்க்கின்றவர்களாகிக் குறிப்பிட்ட

இடத்தைநோக்கிச் சென்றார்கள். அவர்கள் மலையின் மேன்மேலான இடங்களில் அடைதற்கு மிக அரியவைகளான குகைகளையும் நடந்து செல்வதற்கு மிக அரியவையான மிகப்பல இடங்களையும் ஸுகமாகவே தாண்டிச் சென்றார்கள். தௌம்யரும் கிருஷ்ணையும் பார்த்தர்களும் லோமசமஹரிஷியும் ஒன்றுசேர்ந்தவர்களாகச் சென்றார்கள். அந்த இடத்தில் ஒருவராவது தளரவில்லை. மிக்க பாக்கியசாலிகளான அவர்கள் மிருகங்களாலும் பக்ஷிகளாலும் ஒலிக்கப்பெற்றதும் பல வகை மரங்களோடும் கொடிகளோடும் சேர்ந்ததும் குரங்குக் கூட்டங்களால் அடையப்பட்டதும் மனத்தை மிக மகிழ்விப்பதும் புண்யமானதும் தாமரை ஓடைகளோடு கூடியதும் குட்டைகளும் பெருங்காடுகளுமுள்ளதுமான மால்யவானென்கிற பெரியமலையை அடைந்தார்கள். அவர்கள் அதற்கு அப்புறத்தில் கிம்புருஷர்களுக்கு இருப்பிடமும் ஸித்தர்களாலும் சாரணர்களாலும் அடையப்பட்டதும் வித்யாதரர்களாலும் கின்னரப்பெண்களாலும் ஸஞ்சரிக்கப்பட்டதும் யானைக் கூட்டங்களுக்கு இருப்பிடமானதும் சிங்கக் கூட்டங்களோடும் புலிக் கூட்டங்களோடுங் கூடியதும் சரபங்களின் பேரொலியினால் முழக்கப்பட்டதும் பலவித மிருகங்களால் அடையப்பட்டதுமான கந்தமாதனமலையை மயிர்புளகித்தவர்களாகிக் கண்டார்கள். மகிழ்ச்சி அடைந்தவர்களும் வீரர்களுமான அந்தப்பாண்டுபுத்ரர்கள் நந்தனவனம் போன்றதும் மனத்தையும் கண்களையும் மகிழ்விப்பதும் [1] வஸிக்கத் தக்கதும் அழகிய சோலைகளுள்ளதுமான அந்தக் கந்தமாதனவனத்தில் முறையே நுழைந்தார்கள். வீரர்களான அவர்கள் திரௌபதியுடனும் மஹாத்மாக்களான அந்தப் பிராம்மணர்களுடனும் சேர்ந்து கந்தமாதன மலைவெளிகளில் மகிழ்ச்சியை உண்டுபண்ணுகின்றவையும் அழகியவையும் மந்தமாகவும் தெளிவில்லாமலும் இனிமையாகவுமிருப்பவையும் மங்களகரமானவையும் காதுக்கினியவையும் மிக்க மதுரமானவையும் பறவைகளுடைய வாய்களால் வெளியிடப்பட்டவையுமான சப்தங்களைக்கேட்டுக்கொண்டும், எல்லாருதுக்களிலுமுண்டாகிற பழங்களின் பாரங்களால் நிறைந்தவையும் எல்லாருதுக்களிலுமுண்டாகிற புஷ்பங்களால் பிரகாசிக்கின்றவையும் பழங்களின் பாரத்தால் வளைக்கப்பட்டவையுமான பூத்திருக்கிற [2] மா, ஆம்ராதகம், தென்னை, திந்துகம், முஞ்சாதகம், ஆஞ்சீரம், மாதுளை, கொய்யா, பலா, எலுமிச்சை, வாழை, பேரீந்து, புளி, வஞ்சி, பரா, சண்பகம்,

1 வேறுபாடம். 2 சிலமரங்களின்பெயர் இரட்டித்து வருகின்றன.

மனத்துக்கு இன்பத்தைத் தருகின்ற கடம்பு, வில்வம், விளா, நாவல், காஸ்மரி, இலந்தை, இறலி, அத்தி, ஆல், அரசு, [1] க்ஷீரிகம், சேமரம், நெல்லி, கடுமரம், தான்றி, புன்கு, காமர்த்தம், அதிகமான பழங்களுள்ள திந்துகம் ஆகிய பலவிதமான இந்த மரங்களையும் அம்ருதம் போன்ற ருசியுள்ள பழங்களால் நிறைக்கப்பட்டிருக்கிற அப்படிப் பட்ட மற்றவிருக்ஷங்களையும் பார்த்துக்கொண்டும் நுழைந்தார்கள். அப்படியே, அந்தப் புருஷஸ்ரேஷ்டர்கள் கந்தமாதன மலைவெளி களில் செவிக்கினிமையாகவும் மிக மதுரமாகவும் கூவுகின்ற சகோ ரங்களாலும் சதபத்ரங்களாலும் வலியன்குருவிகளாலும் கிளிகளா லும் குயில்களாலும் ஊர்க்குருவிகளாலும் பச்சைக்குருவிகளாலும் ஜீவஜீவகப் பறவைகளாலும் வல்லூறுகளாலும் சாதகபக்ஷிகளாலும் அப்படியே வேறு பலவகைப் பறவைகளாலும் அடையப்பட்ட சம்பகம், அசோகு, தாழை, மகிழ், புன்னை, ஏழிலைம்பாலை, தாழைக ளோடுகூடின கோங்கு, பாதிரி, அழகிய வெட்பாலை, மந்தாரம், நீலோத்பலம், பாரிஜாதம், மலையகத்தி, தேவதாரு, ஆச்சா, பனை, பச்சிலை, திப்பிலி, பெருங்காயம், இலவு, பலாசு, அசோகம், சிம் சுபை, ஸர்ஜகம் ஆகிய மரங்களையும், ஜலத்தில் ஸஞ்சரிக்கின்ற பற வைகளால் நான்கு பங்கங்களிலும் மனத்தைக் கவர்கின்றவைகளும் அல்லிகளாலும் [2] புண்டரீகங்களாலும் [3] கோகநதங்களாலும் கரு நெய்தல்களாலும் செங்கழுநீர்களாலும் [4] கமலங்களாலும் நான்கு பக்கத்திலும் நிறைக்கப்பட்டவைகளும், [5] கலஹம்ஸங்கள், சக்கிரவா கங்கள், அன்றில்கள், நீர்க்கோழிகள், காரண்டவங்கள், வாத்துக்கள், அன்னங்கள், கொக்குக்கள், நாரைகள் ஆகிய இவைகளும் மற்றவை களுமான நீர்வாழ் பறவைகளால் எங்கும் நிரம்பினவைகளுமான தடாகங்களையும், அவ்வாறே ஸந்தோஷமுள்ளவைகளும் தாமரை மலர்களிலுள்ள ரஸமாகிற மத்யத்தைப் பானம் செய்வதினாலுண் டான மதத்தால் ஆலஸ்யமுள்ளவைகளும் தாமரை மலர்களின் மத்தியினின்று நழுவி விழுகின்ற மகரந்தங்களாலும் கிஞ்சல்கங்க ளாலுமுண்டான சிவப்பு நிறத்தால் அலங்கரிக்கப்பட்டவைகளும் இனிய குரலுள்ளவைகளுமான வண்டுகளால் ஒலிமிக்கவைகளும்

1 பாலுள்ள ஆல்முதலிய மரங்கள். 2, 3, 4 தாமரையின் வகைகள்.

5 கூட்டமாக வஸிப்பவையும் இனிய குரலுள்ளவையுமான ஒருவகை அன் னங்கள். இவற்றுக்குக் காதம்பம் என்றும் பெயர்.

அவ்வாறே தாமரை மலர்களின் கூட்டங்களால் எல்லாப்பக்கங்களி லும் அலங்கரிக்கப்பட்டவைகளுமான தாமரை ஓடைகளையும் பார்த் தார்கள். கொடிகளடர்ந்த புதர்களின்மீது பெண்மயில்களோடு சேர்ந்திருப்பவைகளும், மேகமாகிற தூர்யவாத்தியத்தின் சப்தத்தி னால் விருத்தியடைந்திருக்கிற மன்மத விகாரத்தினால் மிகவும் மனங் கலங்கியவைகளும், இனிய குரலுடன் கேகா என்கிற த்வனியினால் மதுரமாயிருக்கிற பாடலைப் பாடிக்கொண்டே பல நிறங்களுள்ள தோகைகளை விரித்துக்கொண்டு விலாஸத்துடன்கூடியவைகளாகவும் மதத்தினால் ஆலஸ்யமுள்ளவைகளாகவும் ஆடுகின்றவைகளும், ஸந் தோஷமுள்ளவைகளும், வனங்களில் அதிக ஆவலுள்ளவைகளுமான மயில்களைக் கண்டார்கள். சில மயில்கள் பிரியமான பேடுகளோடு சேர்ந்து விளையாடுவதையும் சில மயில்கள் சிறுகொடிகளாலும் பெருங் கொடிகளாலும் நெருக்கமாகச் சுற்றப்பட்டிருக்கிற வெட்பாலை மரங்க ளிலிருப்பதையும் சில மயில்கள் வெட்பாலை மரங்களின் கிளைகளில் அதிகமதங்கொண்டவைபோன்றவைகளும் தோகைகளினால் அழகிய ஆடம்பரங்களால் கவரப்பட்டவைகளும் அந்த மரங்களுக்குக் கிரீடம் போன்றவைகளுமாக மரங்களின் சந்துகளில் அழகாக வீற்றிருப்ப தையும் அவர்கள் கண்டார்கள். அவர்கள் அப்படியே நன்றாகப் பிரகாசிக்கின்றவைகளும் மன்மதனுடைய தோமராயுதம்போன்ற வைகளுமான [1] ஸிந்துவாரங்களையும், மலைகளுடைய சிகரங்களில் பொன்னிறமான மலர்களுள்ளவைகளும் சிறந்த காதணிகள் போன்ற வைகளும் மலர்ந்திருப்பவைகளுமான கோங்குகளையும், அவ்வாறே வனவரிசைகளில் பூத்திருப்பவைகளும் காமவசப்பட்டவர்களுக்கு ஆவலை உண்டுபண்ணுகிறவைகளும் மன்மதனுடைய அம்புக்கூட்டம் போன்றவைகளுமான மருதோன்றிகளையும், அப்படியே வனவரிசை களாகிற ஸ்திரீகளுக்கு ஒழுங்காக நெற்றியிலிடப்பட்ட திலகங்கள் போல நன்றாக ப்ரகாசிக்கின்ற மஞ்சாடிமரங்களையும் கண்டார்கள். அரசரே! அப்படியே, மன்மதனுடைய பாணங்கள் போன்றவை களும் மனத்தை மகிழ்விப்பவைகளுமான மாம்பூக்களையும் பூங்கொத் துக்களோடு பிரகாசிக்கிற வண்டுகளையும் கண்டார்கள். மலையின் தாழ்வரைகளில் பூத்திருக்கிற மரங்கள், பொன்போன்றவைகளும் காட்டுத்தீப்போன்றவைகளும் சிவந்தவைகளும் மைந்நிறமுள்ளவை களும் வைடூர்யம்போன்றவைகளுமான புஷ்பங்களால் அதிகமாகப்

---

1 வெண்ணொச்சி; 'ஒருவகைத் தாமரைகள்' என்பது பழையவுரை.

மனோசிலையின் குகைகளும், சில இடங்களில் முயலிரத்தம்போலப் பிரகாசிக்கின்றவைகளும் வெண்மையும் கருமையுமான மேகம் போன்றவைகளும் பாலசூரியன்போன்ற ஒளி பொருந்தியவைகளும் அதிக காந்தியுள்ளவைகளும் பலவிதமாயிருப்பவைகளும் மலையிலுண்டானவைகளுமான இந்தத் தாதுக்களும் மலையைப் பிரகாசிக்கச் செய்கின்றன. பார்த்த! பயங்கரமான பராக்கிரமமுள்ள கந்தர்வர்கள் மலையுச்சிகளில் இஷ்டப்படி நாயகிகளுடனும் கிம்புருஷர்களுடனுங்கூடக் காணப்படுகிறார்கள். பீம! எல்லாப் பிராணிகளுடைய மனத்தையும் கவருகின்ற ஸமமான தாளங்களுடன் கூடின கானங்கள் ஸாமங்கள் ஆகிய இவற்றின் ஒலியானது பலவாறு கேட்கிறது. புண்யமானதும் மங்களங்களை உண்டுபண்ணுகிறதும் கலஹம்ஸங்களுடைய கூட்டங்களாலடையப்பட்டதும் ரிஷிகளாலும் கின்னரர்களாலும் அடையப்பட்டதும் தேவநதியுமாகிய மஹாகங்கையைப் பார்ப்பாயாக. கௌந்தேய! பகைவர்களை அடக்குகிறவனே! எல்லாப்பக்கங்களிலும், தாதுக்களுடனும் நதிகளுடனும் கின்னரர்களுடனும் மிருகங்களுடனும் பறவைகளுடனும் கந்தர்வர்களுடனும் அப்ஸரஸுகளுடனும் அழகிய காடுகளுடனும் பலவித வடிவமுள்ளவைகளும் நூறு தலைகளுள்ளவைகளுமான ஸர்ப்பங்களுடனும் கூடியிருக்கிற, சிறந்த மலையைப் பார்ப்பாயாக' என்று இப்படிப்பட்ட அன்புள்ள வசனத்தை உரைத்தார். பகைவரை வாட்டுபவர்களும் சூரர்களுமான அவர்கள் மனமகிழ்ந்தவர்களும் ஒப்புயர்வற்ற ஸ்தானத்தை அடைந்தவர்களுமாகி, சிறந்த அந்த மலையைப் பார்ப்பதில் (போதுமென்கிற) திருப்தியை அடையவில்லை. புஷ்பங்களாலும் பழங்களாலும் நிறைந்த மரங்களோடு கூடிய ராஜரிஷியான ஆர்ஷ்டிஷேணருடைய ஆச்ரமத்தை அப்பொழுது கண்டார்கள். பிறகு, அவர்கள் கடுமையான தவமுள்ளவரும் இளைத்திருப்பவரும் நரம்புகள் நிறைந்தவரும் எல்லா வித்தைகளிலும் கரைகண்டவருமான ஆர்ஷ்டிஷேணரை அணுகினார்கள்.

---

நூற்றறுபதாவது அத்யாயம்.

## யக்ஷயுத்தபர்வம். (தொடர்ச்சி.)

(ஆர்ஷ்டிஷேணர் யுதிஷ்டிரருக்குக் கைலாஸ மலையைப்பற்றிக் கூறி அவர்களை அர்ஜுனன் வருகிற வரையில் தம்முடைய ஆஶ்ரமத்திலேயே வஸிக்கச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், தவத்தினால் பாவத்தை எரித்தவரான அந்த ஆர்ஷ்டிஷேணரை அடைந்து, பிரியத்துடன் தமது நாமதேயத்தைச் சொல்லித் தலையால் (வணங்கி) அபிவாதனம் செய்தார். பிறகு, கிருஷ்ணையும் பீமனும் நல்ல தவமுள்ள நகுலஸஹதேவர்களும் அந்த ராஜரிஷியை முடிகளால் வணங்கிச் சூழ்ந்து நின்றார்கள் அப்படியே தர்மங்களை அறிந்தவரும் பாண்டவர்களுக்குப் புரோஹிதருமான தௌம்யர் விரதங்களை நன்கு அனுஷ்டித்தவரான அந்த ரிஷியை முறைப்படி அணுகினார். தர்மங்களை அறிந்த அந்த முனிவர் ஞானக்கண்ணால் குருஶ்ரேஷ்டர்களான பாண்டுபுத்திரர்களை நன்றாக அறிந்துகொண்டார்; 'உட்காரலாம்' என்றும் சொன்னார். மிக்க தவமுள்ள அவர், கற்றறிந்தவரான கௌரவஶ்ரேஷ்டரைப் பூஜித்துத் தம்பிமார்களுடன் உட்கார்ந்த அவரை [1] அநாமயத்தை வினவினார். ஆர்ஷ்டிஷேணர், 'பொய்யில் எண்ணத்தைச் செலுத்தாமலிருக்கிறாயா? தர்மத்தில் செல்லுகிறாயா? பார்த்தனே! தாய்தந்தையரிடத்தில் உன்னுடைய பணிதொழிலானது குறைவடையாமலிருக்கிறதா? குருக்களனைவரும் முதியவர்களும் கல்வியினால் பிரஸித்திபெற்றவர்களும் உன்னால் பூஜிக்கப்பட்டு வருகிறார்களா? பார்த்த! பாப காரியங்களில் மனத்தை வைக்காமலிருக்கிறாயா? குருஶ்ரேஷ்டனே! நன்மையைச் செய்வதற்கும் தீமையை விடு

1 'ஸந்தித்தபோது பிராமணனை, 'குசலம்' என்றும், க்ஷத்ரியனை, 'அநாமயம்' என்றும், வைஶ்யனை, 'க்ஷேமம்' என்றும், சூத்ரனை, 'ஆரோக்யம்' என்றும் வினவ வேண்டும்' என்பது மனுஸ்ம்ருதி 2வது அத்யாயம் 127-வது ஶ்லோகம்.

வதற்கும் முறைப்படி நீ தெரிந்துகொண்டிருக்கிறுயா? தற் புகழ்ச்சி செய்துகொள்ளாமலிருக்கிறுயா? ஸாதுக்கள் தகுதிக்குத் தக்கபடி உன்னால் பூஜிக்கப்பட்டு மகிழ்கிறார்களா? காடுகளில் வஸித்துக்கொண்டிருந்தாலும் தர்மத்தையே பின்பற்றுகிறுயா? பார்த்த! தௌம்யர் உன்னுடைய நடைகளால் மனவருத்தமடையாமலிருக்கிறாரா? குந்திநந்தன! தானத்தாலும் தர்மத்தாலும் தவத்தாலும் சுத்தியினாலும் உள்ளும் புறமும் ஒத்திருத்தலாலும் பொறுமையினாலும் தகப்பன்பாட்டன்மார்களுடையதான நடையை நீ அனுஸரிக்கிறுயா? பாண்டவ! ராஜரிஷிகள் சென்ற வழியில் நீ செல்லுகிறுயா? தத்தம் குலத்தில் புத்திரனே பௌத்திரனே பிறந்தால், பித்ருலோகத்திலுள்ள பித்ருக்கள், 'இவனுடைய கெட்ட செய்கையால் நம்மால் எது அடையத்தக்கதாகுமோ? இவனுடைய நல்ல செய்கையினால் நம்மால் எந்த நன்மை அடையத்தக்கதாகுமோ?' என்று துக்கத்தையும் ஆனந்தத்தையும் அடைகிறார்கள். பார்த்தனே! எவனால் மாதாவும் பிதாவும் அப்படியே அக்னியும் குருவும் ஐந்தாவதான ஆத்மாவும் பூஜிக்கப்படுகிறார்களோ அவனால் இந்த உலகம் பரலோகம் இரண்டும் ஜயிக்கப்பட்டனவாகும்' என்று சொன்னார்.

யுதிஷ்டிரர், 'பகவானே! ஆரியரே! உள்ளபடி இந்தத் தர்ம நிச்சயத்தைத் தேவரீர் என்னை உத்தேசித்து உபதேசித்தீர். என்னால் சக்திக்குத் தக்கபடி நியாயம் தவறாமல் விதிப்படி (தர்மம்) செய்யப்படுகிறது' என்று சொன்னார். ஆர்ஷ்டிஷேணர், 'ஜலத்தையே ஆகாரமாகக்கொண்டவர்களும் காற்றையே ஆகாரமாகக் கொண்டவர்களுமான ரிஷிகள் ஆகாச மார்க்கமாகப் பறந்து வந்து மலைகளுள் சிறந்த இந்த மலையைப் [1] பர்வஸந்திகளில் அடைகிறார்கள். அரசனே! காதல்கொண்டவர்களான கிம்புருஷர்கள் தங்கள் காதலிகளுடன் ஒருவரை ஒருவர் அனுஸரித்தவர்களாகவும் மலையினுடைய சிகரங்களிலிருப்பவர்களாகவும் காணப்படுகிறார்கள். பார்த்த! அழுக்கில்லாத ஆடைகளையும், பட்டு வஸ்திரங்களையும் உடுத்த கந்தர்வர்கள் அப்ஸரஸுகள் ஆகிய இவர்களுடைய கூட்டங்கள் பல காணப்படுகின்றன. மாலைகளை அணிந்தவைகளும் காட்சிக்கினியவைகளுமான வித்யாதரர்களுடைய கூட்டங்களும் மஹாநாகர்களுடைய கூட்டங்களும்

[1] பூர்ணிமை அல்லது அமாவாஸ்யையும் பிரதமையும் ஸந்திக்குங் காலம்.

ஸுபர்ணர்களும் சாரணர் முதலியவர்களும் காணப்படு கிறார்கள். இந்த மலையினுடைய மேற்பிரதேசத்தில் பர்வ ஸந்திகளில் பேரீவாத்தியங்கள், பணவங்கள், சங்கங்கள், மிருதங் கங்கள் ஆகிய இவைகளின் சப்தமானது கேட்கப்படுகிறது. பரத ஶ்ரேஷ்டர்களே! நீங்கள் இந்த இடத்திலிருந்துகொண்டே அவை அனைத்தையும் கேட்கவேண்டும். அவ்விடத்தை நோக்கிச் செல் வதில் நீங்கள் எவ்விதத்தாலும் புத்தியைச் செலுத்தலாகாது. பரதஶ்ரேஷ்டர்களே! இதற்குமேல் செல்வதும் இயலாது. அந்தஇடமானது தேவர்களுடைய விளையாட்டிடம். அது மனிதர் களால் அடைய முடியாததன்றோ? பாரத! இந்த இடத்தில் சிறிது சபலமான செய்கைகளையுடைய மனிதனையும் எல்லாப் பிராணி களும் பகைக்கின்றன; ராக்ஷஸர்களும் அடிக்கிறார்கள். யுதிஷ் டிர! மிக்க ஸித்தியடைந்த தேவர்கள் ரிஷிகள் ஆகிய இவர்களின் ஸ்தானமானது இந்தக் கைலாஸசிகரத்துக்கப்பால் பிரகாசிக்கிறது. பார்த்த! பகைவர்களை அழிப்பவனே! [1] சாபல்யத்தால் அதற் கப்பாலுள்ள [2] வழியில் செல்பவர்களை ராக்ஷஸர்கள் இரும்பினால் செய்யப்பட்ட சூலம் முதலிய ஆயுதங்களால் கொல்லுகிறார்கள். அப்பா! இந்த இடத்தில் விஶ்ரவஸின் புதல்வனான குபேரனும், (செல்வப்பெருக்கினால்) மனிதர்களையே வாகனமாக உடையவ னும் அப்ஸரஸுகளால் சூழப்பட்டவனுமாகப் பர்வஸந்திகளில் காணப்படுகிறான். சிகரத்தில் வீற்றிருப்பவனும் யக்ஷர்களுக்கும் ராக்ஷஸர்களுக்கும் அதிபனுமான அவனை எல்லாப் பிராணிகளும் (உதயபர்வதத்தில்) உதித்திருக்கிற சூரியனைப்போலப் பார்க்கின் றன. பரதஶ்ரேஷ்டனே! மலையினுடைய இந்தச் சிகரமானது தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் ஸித்தர்களுக்கும் அப்படியே குபேரனுக்கும் உத்யானவனமாக இருக்கிறது. ஐயா! குபேரனை உபாஸிக்கின்ற தும்புருவினுடைய கானம்பண்ணப்படுகின்ற ஸாமங்களின் தொனியானது பர்வஸந்திகளில் கந்தமாதனத்தில் கேட்கப்படுகிறது. அப்பா! யுதிஷ்டிர! இந்த இடத்தில் இப்படிப் பட்ட இந்த ஆச்சர்யத்தை எல்லாப் பிராணிகளும் பர்வஸந்தி களில் பலவாறாகக் காண்கின்றன. பாண்டவஶ்ரேஷ்டர்களே! முனிவர்களால் புஜிக்கத்தக்க சுவையுள்ள பழங்களைப் புஜித்துக்

---

1 மனவுறுதியின்மை; அல்லது, முரட்டுத்தனம்; உத்யோகபர்வம் 174-ம் பக்கத்திலும் சாந்திபர்வம் 375-ம் பக்கத்திலும் குறிப்புக்களிற் காண்க. 2 வேறுபாடம்.

கொண்டு அர்ஜுனனைக் காண்கிறவரையில் (இங்கே) வாஸம் செய்யுங்கள். ஐயா! இந்த இடத்தை அடைந்தவர்கள் எவ்விதத்தாலும் சாபல்யமுள்ளவர்களாக இருக்கக்கூடாது. சபலனான மனிதன் எல்லாப் பிராணிகளுக்கும் விரோதியாகிறான். சிறப்புடையவனே! இந்த இடத்தில் இஷ்டப்படி வாஸம் செய்தும், மனக்கவலையைவிட்டு ஸுகமாக விளையாடியும், பிறகு, சஸ்திரங்களால் ஜயிக்கப்பட்ட பூமியைப் பரிபாலிப்பாய்' என்று கூறினார்" என்றார்.

## நூற்றறுபத்தோராவது அத்யாயம்.

## யக்ஷயுத்தபர்வம். (தொடர்ச்சி.)

(திரௌபதி கருடனுடைய சிறகுக்காற்றினால் கொண்டுவரப்பட்ட அத்புதமான ஒரு தாமரைமலரைக் கண்டு அப்படிப்பட்ட பல மலர்களைக் கொண்டுவரும்படியும் துஷ்டர்களான யக்ஷர்களையும் ராக்ஷஸர்களையும் கொல்லும்படியும் பீமனை வேண்டியதும், அவன் அதற்காகக் கந்தமாதன மலையின் சிகரத்தில் ஏறியதும், மணிமான் முதலியவர்களை யுத்தத்தில் கொன்றதும்.)

ஜனமேஜயர், "மகாத்மாக்களும் திவ்யமான பராக்கிரமமுள்ளவர்களும் என்னுடைய முந்தின பாட்டன்மார்களுமான பாண்டுபுத்திரர்கள் கந்தமாதன பர்வதத்தில் அந்த ஆர்ஷ்டிஷேணருடைய ஆச்ரமத்தில் எவ்வளவு காலம் வஸித்தார்கள்? மகாவீர்யமுள்ளவர்களும் வலிமையும் ஆண்மையும் மிக்கவர்களுமான அந்தப் பாண்டவர்களனைவரும் என்ன செய்தார்கள்? அங்கே வஸிக்கின்றவர்களும் மகாத்மாக்களும் உலகத்தில் பிரஸித்திபெற்ற வீரர்களுமான அவர்களுக்கு எவைகள் ஆகாரமாயின? ஸாதுக்களுள் உத்தமரே! அவற்றைச் சொல்லுவீராக. மிக்க புஜபலமுள்ள பீமஸேனன் அந்த இமயமலையில் எதை எதைச் செய்தானோ அந்த அந்தப் பீமஸேனனுடைய பராக்கிரமத்தை எனக்கு விரித்து உரைப்பீராக. பிராம்மணோத்தமரே! குபேரனால் வாஸம் செய்யப்பட்ட அந்தப் பர்வதத்தில் நித்யமாக வஸிக்கின்ற அந்தப் பீமஸேனனுக்கு யக்ஷர்களோடு மறுபடியும் யுத்தம் உண்டாகவில்லையா? அவர்களுக்கும் குபேரனுக்கும் ஸந்திப்பு நேர்ந்

ததா? ஆர்ஷ்டிஷேணர் சொன்னவண்ணம் அந்தப் பர்வதத்திற்குக் குபேரன் வந்துகொண்டிருந்தானா? தபோதனரே! நான் இதனை விஸ்தாரமாகக் கேட்க விரும்புகிறேன். அவர்களுடைய செய்கையைக் கேட்கிற எனக்கு (ப்போதுமென்கிற) திருப்தியுண்டாகவில்லையன்றோ?" என்று வினவினார்.

வைசம்பாயனர், "பரதஸ்ரேஷ்டர்கள், நிகரற்ற தேஜஸுள்ள அந்த ஆர்ஷ்டிஷேணருடையதும் தங்களுக்கு ஹிதமுமான இந்த வசனத்தைக் கேட்டு அப்படியே அவருடைய கட்டளையை எப்பொழுதும் செய்துவந்தார்கள். பரதஸ்ரேஷ்டர்களான அந்தப் பாண்டவர்கள் அந்த இமயமலையின் மேல் பாகத்தில் முனிவர்களால் புஜிக்கத்தக்க ஆகாரங்களையும் சுவையுள்ள பழங்களையும் சுத்தமான பாணங்களால் அடிக்கப்பட்ட மிருகங்களுடைய மாம்ஸங்களையும் புஜிக்கின்றவர்களாகவும் பரிசுத்தமான பலவகை மதுக்களைக் குடிப்பவர்களாகவும் இவ்வண்ணம் வஸித்தார்கள். லோமசரால் சொல்லப்பட்ட பலவித வாக்கியங்களைக் கேட்டுக்கொண்டு அவ்விடத்தில் வஸிக்கின்ற பாண்டவர்களுக்கு ஐந்தாவது வர்ஷம் சென்றது. பிரபுவே! கடோத்கசன், 'காரியகாலத்தில் வந்து சேருவேன்' என்று சொல்லிவிட்டு எல்லா ராக்ஷஸர்களுடனும் முந்தியே போய் விட்டான். ஆர்ஷ்டிஷேணருடைய ஆஸ்ரமத்தில் வஸிப்பவர்களும் மிக்க ஆச்சரியங்களைப் பார்ப்பவர்களும் மஹாத்மாக்களுமான அந்தப் பாண்டவர்களுக்குப் பல மாதங்கள் சென்றன. அவ்விடத்தில் விளையாடுபவர்களும் மனக்களிப்புள்ளவர்களுமான அந்தப் பாண்டவர்களால் அன்பு உண்டுபண்ணப்பட்டவர்களும் மிக்க பாக்கியசாலிகளும் பரிசுத்தமான மனமுள்ளவர்களும் விரதங்களை நன்கு அனுஷ்டிப்பவர்களுமான முனிவர்களும் அவ்வாறே சாரணர்களும் பாண்டவர்களைப் பார்ப்பதற்கு வந்தார்கள். பரதஸ்ரேஷ்டர்களான அந்தப் பாண்டவர்கள் அவர்களோடு திவ்யமான கதைகளைப் பேசினார்கள். பிறகு, சிலநாட்கள் செல்லவே, ஒரு பெரிய மடுவில் வாஸம்செய்துகொண்டிருந்த கொழுத்த ஒரு பெரிய ஸர்ப்பத்தைக் கருடன் வேகத்துடன் கவர்ந்தான். பெரியமலை மிக நடுங்கியது. பெரிய மரங்கள் நன்கு முறிக்கப்பட்டன. எல்லாப் பிராணிகளும் பாண்டவர்களும் அந்த ஆச்சர்யத்தைக் கண்டார்கள். பிறகு, பெரிய மலையின் உச்சியிலிருந்து பாண்டவர்களை நோக்கி, காற்றானது நல்ல மணமுள்ள மங்களகர

மான புஷ்பங்களனைத்தையும் அடித்துக்கொண்டு வந்தது. அந்த இடத்தில் அன்பர்களோடு கூடிய பாண்டவர்களும் கீர்த்தியுள்ளவளான பாஞ்சாலியும் ஐந்துவர்ணங்களுள்ள திவ்ய புஷ்பங்களைக் கண்டார்கள்.

பிறகு, கிருஷ்ணையானவள் மலையைச்சார்ந்த ஏகாந்தமான ஓரிடத்தில் சுகமாக வீற்றிருப்பவனும் மிக்க புஜபலமுள்ளவனுமான பீமஸேனனைப் பார்த்து, தக்க ஸமயத்தில், 'பரதச்ரேஷ்டரே! கருடனுடைய சிறகுக் காற்றினால் வேகங்கொண்ட வாயுவினால் ஐந்து வர்ணமுள்ள புஷ்பங்கள் மிகவலிந்து உதிர்க்கப்படுகின்றன. பரதச்ரேஷ்டரே! திவ்ய வர்ணமுள்ளவையும் திவ்ய வாஸனையுள்ளவையுமான திவ்ய புஷ்பங்கள் வாஸனையினால் என் மனத்தைக் களிப்படைவிக்கின்றனபோலும். பகைவரைத் தவிக்கச் செய்பவரே! பார்ப்பதனாலும் தொடுவதனாலும் அப்படியே வாஸனையினாலும் என்னுடைய இந்த மனத்துயரத்தைப் போக்குகின்றவையும் திவ்ய வாஸனையுள்ளவையும் மங்களமாயுள்ளவையுமான சிறந்த மலர்களால் தேவதைகளை அர்ச்சித்து நான் உம்மோடு சேர விரும்புகிறேன். புருஷச்ரேஷ்டரே! அவற்றுள்ளும் நறுமணம் நிரம்பினதும் என்னுடைய மனத்திற்கு உத்ஸாஹத்தை வளர்ப்பதும் மங்களகரமாயிருப்பதுமான இந்தத் தாமரைமலரோ எல்லா உலகத்தாராலும் நேரில் பார்க்கப்பட்டிருக்குமென்று எனக்குத் தோன்றவில்லை. வாஸுதேவரைத் துணையாகக்கொண்டவரும் வாஸுதேவருக்கு நண்பரும் சொல்தவறாதவரும் மகாத்மாவும் உம்முடைய பிராதாவுமான அர்ஜுனரால் காண்டவவனத்தில் கந்தர்வர்களும் உரகர்களும் ராக்ஷஸர்களும் இந்திரனும் தோல்வி அடைவிக்கப்பட்டார்கள்; கொடியவர்களான மாயாவிகளும் கொல்லப்பட்டார்கள்; காண்டீவமென்கிற வில்லும் அடையப்பட்டது. இந்திரனையொத்த பராக்கிரமமுள்ளவரே! உம்முடைய தேஜஸும் மிகப்பெரிது. உம்முடைய தோள்வலிமையும் பெரிது; பகைவரால் தாங்குதற்கரியது. அவமதிக்கவும் முடியாதது. பீமஸேனரே! உம்முடைய கைவன்மையின் வேகத்தால் பயமுறுத்தப்பட்ட எல்லா ராக்ஷஸர்களும் மலையை விட்டுவிட்டுப் பத்துத் திக்குக்களையும் அடையக்கடவர். பிறகு, உம்முடைய நண்பர்கள் அச்சமும் மதிமயக்கமுமற்றவர்களாகப் பலவகை மலர்களைத் தரித்துக்கொண்டிருக்கிறதும் மங்களகரமாயிருப்பதுமான சிறந்த மலையினுடைய உச்சியைப் பார்க்கக்கடவர். பீமஸேனரே!

என்மனமானது நெடுங்காலத்துக்கு முன்னிருந்தே இவ்விதமான எண்ணத்துடனிருக்கிறது. உம்முடைய கைவன்மையை அடுத்து மலையின் உச்சியைப் பார்க்க விரும்புகிறேன். பாதர்களுள் சிறந்தவரே! நரஶ்ரேஷ்டரே! உம்மால் விரைவாகக் கொண்டுவரப்படுகின்ற இப்படிப்பட்ட மலரை நான் நேரில் காணவிரும்புகிறேன்' என்கிற வசனத்தைக் கூறினாள்.

பிறகு, பகைவர்களைத் தவிக்கச் செய்பவனும் மிக்கபாஹுபலமுள்ளவனுமான அந்தப் பீமன் திரௌபதியினால் தன்னை அவமதிக்கப்பட்டவன்போலெண்ணிக்கொண்டு அந்த அவமதிப்பை, நல்ல யானையானது அடியைப் பொருதது போலப் பொறுக்கவில்லை. பலசாலியும் சிங்கம்போலவும் காளைபோலவும் நடப்பவனும் சிறந்த காந்தியுள்ளவனும் உதாரமனமுள்ளவனும் பொன்போன்ற ஒளியுடையவனும் கம்பீரமான மனமுள்ளவனும் செருக்குள்ளவனும் தன்மதிப்புடையவனும் சூரனும் சிவந்தகண்களுடன் கூடியவனும் பருத்த சிறந்த தோள்களையுடையவனும் மதயானை போன்ற வலிமையமைந்தவனும் சிங்கத்தின் கோரப்பற்கள் போன்ற பற்களுள்ளவனும் காளையின் தோள்போன்ற தோள்களை உடையவனும் உயர்ந்து வளர்ந்திருக்கின்ற இளமையான ஆச்சா மரம் போன்றவனும் மகாத்மாவும் அழகிய எல்லா அங்கங்களுமுள்ளவனும் வலம்புரிச் சங்கம்போன்ற கழுத்துள்ளவனும் பருத்த மோவாயுள்ளவனுமான அந்தப் பீமஸேனன் பொன்மயமான பின்புறமுள்ள வில்லையும் கத்தியையும் அம்புத்தூணிகளையும் தரித்துக் கொண்டு, கர்வமுள்ள சிங்கம்போலவும் மதப்பெருக்குண்ட யானை போலவும் அச்சமும் மதிமயக்கமுமற்றவனாக மலையின்மீதேறினான். கத்தியையும் வில்லையும் கையில் பிடித்தவனும் சிங்கம்போலவும் மதப்பெருக்குண்ட யானைபோலவும் வருகின்றவனுமான அந்தப் பீமனை எல்லாப்ராணிகளும் பார்த்தன. பாண்டவனான பீமன் திரௌபதிக்கு ஸந்தோஷத்தை விருத்தியடையச்செய்யும் பொருட்டுக் கதையை எடுத்துக்கொண்டு அச்சமும் மயக்கமுமற்றவனாகச் சிறந்த மலையில் ஏறினான். வாயுவினுடைய புத்திரனான பீமனை வாட்டமும் பயமும் ஊக்கமின்மையும் பிறராக்கம் பொறாமையும் ஒருபொழுதும் அணுகவில்லை. மகாபலசாலியான பீமஸேனன் மேடுபள்ளமாக இருப்பதும் பயங்கரமான தோற்றமுள்ளதுமான அந்த ஒற்றையடிப்பாதையை அடைந்து பல பனைமரங்களளவு உயர்ந்திருக்கிற மலையின் உச்சியில் ஏறினான். மகா பலசாலியான

பீமஸேனன் கின்னரர்களையும் மகாநாகர்களையும் முனிவர்களையும் கந்தர்வர்களையும் அரக்கர்களையும் மகிழ்வித்துக்கொண்டு மலையின் உச்சியில் ஏறினான். பிறகு, பரதஸ்ரேஷ்டனான பீமன் ஸ்வர்ணமயமாயும் ஸ்படிகமயமாயுமிருக்கிற வீடுகளாலலங்கரிக்கப்பட்டிருப்பதும், எல்லா ரத்தினங்களுடைய காந்திகளுடனுங்கூடியதும், அப்படியே எல்லா உத்யானவனங்களுமுள்ளதும், மலையைவிடமேலான வளர்ச்சியுடையதாயும் மதில்களுக்கு ஆதாரவாகச் சுற்றிக் கட்டப்பட்டிருக்கிற அடிமேடைகளாலும் கொத்தளங்களாலும் விளங்குகின்றதாயும் உள்வாசல்களாலும் வெளி வாசல்களாலும் மரங்களால் கட்டப்பட்ட கொடுங்கைகளாலும் கொடிகளாலும் கொடிமரங்களை நாட்டுகிற மேடைகளாலும் பிரகாசிக்கின்றதாயுமிருக்கிற பொன்னுலாகிய மதிலால் எல்லாப்பக்கங்களிலும் சூழப்பட்டதும், எல்லாப்பக்கங்களிலும் அளவுகடந்து நர்த்தனம் செய்கின்ற பெண்களாலும் காற்றினால் அலைக்கப்படுகிற கொடிகளாலும் அலங்கரிக்கப்பெற்றதுமான குபேரனுடைய அரண்மனையைக் கண்டான். பீமன் வளைந்திருக்கிற கையினால் வில்லின் நுனியைப் பிடித்துக்கொண்டும் தனங்களுக்கு அதிபதியான குபேரனுடைய பட்டணத்தை மனவருத்தத்தோடு பார்த்துக்கொண்டும் ஸஞ்சரித்தான். அந்த இடத்தில் எல்லாப் பிராணிகளையும் மகிழ்விக்கின்றதும் எல்லா வாஸனைகளையும் கொண்டுவருகின்றதும் கந்தமாதனத்திலுண்டானதுமான காற்றானது மிக இனிமையாக வீசியது. அந்த இடத்தில் விசித்ரமானவைகளும் பலவித நிறங்களால் பிரகாசிக்கின்றவைகளும் விசித்திரமான பூங்கொத்துக்களைத் தரித்தவைகளும் சிந்திக்கமுடியாதவைகளும் நிகரற்றகாந்தியுள்ளவைகளுமான பலவகை மரங்கள் காணப்பட்டன. பரதஸ்ரேஷ்டனான பீமன் ரத்தினஸமூகங்களால் எல்லாப்பக்கங்களிலும் மிழைக்கப்பட்டதும் பலவித மலர்மாலைகளால் நன்கு அலங்கரிக்கப்பட்டதுமான குபேரனுடைய இருப்பிடத்தையும் பார்த்தான். மிக்க புஜபலமுள்ள பீமஸேனன் கதாயுதத்தையும் கத்தியையும் வில்லையும் கையில்பிடித்தவனாகவும் உயிரையும்விடத்துணிந்தவனாகவும் மலைபோல் அசைவற்றுநின்றான். பிறகு, பகைவர்களுக்கு மயிர் சிலிர்த்தலைச் செய்கிற சங்கத்தை ஊதியும் நாணொலியையும் தலத்வனியையும் செய்தும் பிராணிகளை மயக்கமடையச் செய்தான்.

பிறகு, யக்ஷர்களும் ராக்ஷஸர்களும் கந்தர்வர்களும் மயிர் சிலிர்த்தவர்களாக அந்த ஒலியை நோக்கிப் பீமனுடைய

ஸமீபத்தில் ஓடிவந்தார்கள். யக்ஷர்கள் ராக்ஷஸர்கள் ஆகிய இவர்களுடைய கைகளால் பிடிக்கப்பட்ட கதாயுதங்களும் பரிகங்களும் [1] நிஸ்த்ரிம்சங்களும் சூலங்களும் சக்திகளும் கோடாலிகளும் மிக விளங்கின. பாரதரே! பிறகு, அவர்களுக்கும் அவனுக்கும் யுத்தம் தொடங்கியது. மஹா மாயாவிகளான அந்த யக்ஷராக்ஷஸர்களால் பிரயோகிக்கப்பட்ட சூலங்களையும் சக்திகளையும் கோடாலிகளையும் பீமன் பயங்கரமான மிக்க வேகமுள்ள அர்த்த சந்திரபாணங்களால் துண்டித்தான். மகா பலசாலியான பீமன், ஆகாயத்தை அடைந்தும் பூமியிலிருந்தும் கர்ஜிக்கின்ற ராக்ஷஸர்களுடைய சரீரங்களை அம்புகளால் அடித்தான். பாரதரே! ராக்ஷஸர்களுடைய தேகங்களினின்று எல்லாப் பக்கங்களிலும் பெருகி வருகின்ற இரத்தத் தாரைகள் மேகங்களினின்று நீர்த்தாரைகள் விழுவதுபோல் விழுந்தன. [2] கதைகளையும் ஈட்டிகளையும் கையில் பிடித்தவர்களான ராக்ஷஸர்களுடைய சரீரங்களிலிருந்து உண்டான அந்தப் பெரிய இரத்த மழையானது மஹா பலசாலியான பீமன்மீது எல்லாப்பக்கத்திலும் பொழிந்தது. ராக்ஷஸர்களுடைய சரீரங்களிலிருந்து எல்லாப்பக்கங்களிலும் இரத்ததாரைகள் பெருகின. பீமனுடைய புஜபலத்தால் பிரயோகிக்கப்பட்ட ஆயுதங்களால் யக்ஷராக்ஷஸர்களுடைய சரீரங்களும் தலைகளும் அறுக்கப்பட்டவைகளாகக் காணப்பட்டன. ராக்ஷஸர்களால் நன்கு மூடப்படுகின்றவனும் இனிய தோற்றமுள்ளவனுமான பாண்டவனை எல்லாப் பிராணிகளும் மேகக் கூட்டங்களால் மூடப்படுகின்ற சூரியனைப்போலப் பார்த்தன. நீண்ட கைகளுள்ளவனும் சிறந்த பலமுள்ளவனும் ஸத்யமான பராக்கிரமமுள்ளவனுமான பீமன், சூரியன் கிரணங்களைப் பாய்ச்சுவது போல, பகைவரை வீழ்த்துகிற அம்புகளை அனைவர்மீதும் பாய்ச்சினன். எதிர்த்து அதட்டுகின்றவர்களும் பேரிரைச்சலிடுகிறவர்களுமான எல்லா ராக்ஷஸர்களும் பீமஸேனனுடைய ஸன்னாஹத்தைக் கண்டார்கள். அவர்கள், எல்லா அங்கங்களும் காயம் பண்ணப்பட்டவர்களும் பீமஸேனனிடமிருந்து உண்டான பயத்தால் பீடிக்கப்பட்டவர்களும் மகாயுதங்கள் சிதறினவர்களுமாகிப் பயங்கரமான தீனஸ்வரத்தை வெளியிட்டார்கள். உறுதியான வில்லுள்ள பீமனால் பயமுறுத்தப்பட்ட அந்த ராக்ஷஸர்கள் கதாயுதங்களையும் சூலங்களையும் கத்திகளையும் சக்திகளையும்

1 முப்பது அங்குலத்துக்குமேல் நீண்ட கத்தி. 2 வேறுபாடம்.

கோடாலிகளையும் எறிந்துவிட்டுத் தெற்குத் திசையை நோக்கி ஓடிவந்தார்கள்.

அந்த இடத்தில் சூலத்தையும் கதையையும் கையில் பிடித்தவனும் அகன்ற மார்புள்ளவனும் நீண்ட கைகளுள்ளவனும் குபேரனுக்குத் தோழனுமான மணிமானென்கிற ராக்ஷஸன் இருந்தான். மகாபலசாலியான அவன் பீமனுடைய செய்கைக்குப் பரிகாரத்தையும் தனது ஆண்மையையும் காண்பிப்பவனாகி, திரும்பிவந்த அந்த ராக்ஷஸர்களைப்பார்த்து, சிரித்துக்கொண்டு, 'ஒருமனிதனால் பலராக்ஷஸர்கள் யுத்தத்தில் தோல்வியடைவிக்கப் பட்டார்கள். குபேரனுடைய அரண்மனையை அடைந்து அவனைப் பார்த்து என்ன சொல்லப்போகிறீர்கள்?' என்று சொன்னான். ராக்ஷஸன் அவர்களனைவரையும் பார்த்து இவ்வண்ணமுரைத்துச் சக்தியையும் சூலத்தையும் கதையையும் கையில் எடுத்துக்கொண்டு பாண்டவனை எதிர்த்து விரைவாகச் சென்றான். வேகத்தோடு வருகின்றவனும் மதத்தைப் பெருக்குகிற யானை போன்றவனுமான அந்த மணிமானைப் பீமஸேனன் மூன்று வத்ஸதந்தமென்கிற பாணங்களால் விலாவில் நன்றாக அடித்தான். மகாபலமுள்ளவனான மணிமானும் மிக்க கோபங்கொண்டு பெரிய கதையை எடுத்துச் சுழற்றிப் பீமஸேனன்மீது எறிந்தான். பீமஸேனன் ஆகாயத்தில் மின்னல்போலப் பிரகாசிக்கின்ற மிக்க பயங்கரமான பெரிய கதாயுதத்தைச் சாணையில் தீட்டப்பட்ட அனேகபாணங்களால் அடித்தான். அந்த எல்லாப் பாணங்களும் கதையை அடைந்து திருப்பி அடிக்கப்பட்டன. வேகப்படுத்தப்பட்ட பாணங்கள் கதையில் மிக்க தேர்ச்சியுள்ள மணிமானுடைய (கதையின்) வேகத்தைத் தாங்கவில்லை. அவனுடைய அந்தக் கதையடியை, கதாயுத்த முறையை அறிந்தவனும் நல்ல வீரியமுள்ளவனும் பயங்கரமான பராக்கிரமமுள்ளவனுமான அந்தப் பீமன் வீணாக்கினான். பிறகு, சிறந்த புத்தியுள்ளவனான அந்த ராக்ஷஸன் அதே ஸமயத்தில் மிகக்கோரமானதும் பொற்காம்புள்ளதும் உருக்கினால் செய்யப்பட்டதுமான சக்தியைப் பீமஸேனன் மீது எறிந்தான். பயங்கரமான சப்தத்துடன் கூடியதும் அக்னிஜ்வாலைகளுடன்கூடியதும் மகாபயங்கரமாயிருப்பதுமான அந்தச் சக்தியானது பீமனுடைய வலக்கையைப் பிளந்துகொண்டு விரைவாகப் பூமியில் விழுந்தது. சக்தியினால் மிக அடிக்கப்பட்டவனும் வெகு தூரத்தினின்றே அம்புகளை எய்பவனும் அளவுகடந்த பராக்கிரமமுள்ளவனும் கதாயுத்தத்தில்

ஸாமர்த்யமுள்ளவனுமான அந்தக் குந்தீநந்தனன் கதையைக் கையிலெடுத்தான். பிறகு, பீமன் பொற்பட்டங்களால் கட்டப்பட்டிருப்பதும் சத்ருக்களுக்குப் பயத்தை விருத்தியடையச் செய்கின்றதும் பகைவர்களை அவமதிக்கின்றதும் முழுதும் உருக்குமயமாயிருப்பதுமான அந்தக் கதையை எடுத்துக் கர்ஜித்துக்கொண்டு மகாபலசாலியான மணிமானைநோக்கி விரைவாக ஓடினன். மணிமானும் ஜ்வலிக்கின்ற பெரிய சூலத்தை எடுத்துக் கர்ஜித்துக்கொண்டு அதிவேகத்தோடு பீமஸேனன்மீது பிரயோகித்தான். கதாயுத்தத்தின் பாகுபாடுகளை நன்முக அறிந்தவனுன பீமன், சூலத்தைக் கதையின் நுனியினுல் அடித்து நொறுக்கிக் கருடன் பாம்பைநோக்கி ஓடுவதுபோல அந்த மணிமானைக் குறித்து விரைவாக ஓடினன். மிக்கபுஜபலமுள்ள பீமன் யுத்தமுனையில் சிங்கநாதம் செய்து ஆகாயத்தில் எழும்பி விரைவாகக் கதையைச் சுழற்றி மணிமான்மீது எறிந்தான். இந்திரனுல் பிரயோகிக்கப்பட்ட வஜ்ராயுதம்போன்ற அந்தக்கதாயுதமானது ராக்ஷஸனைக்கொன்று பூமியை அடைந்து பிசாசுபோலக் கீழேவிழுந்தது. பீமஸேனனுடைய பலத்தால் கொல்லப்பட்ட மகாபலசாலியான அந்த ராக்ஷஸனை, சிங்கத்தால் கொல்லப்பட்ட காளையைப்போல எல்லாப் பிராணிகளும் கண்டன. கொல்லப்பட்டுப் பூமியில் விழுந்துகிடக்கிற அந்த மணிமானைப்பார்த்து மாண்டவர்கள்போக மிகுந்திருக்கிறராக்ஷஸர்கள் பயங்கரமானதீனஸ்வரத்தை வெளியிட்டுக்கொண்டு கிழக்குத்திசையைநோக்கிச் சென்றூர்கள்.

---

## நூற்றறுபத்திரண்டாவது அத்யாயம்.
## யக்ஷயுத்தபர்வம். (தொடர்ச்சி.)

(பீமனைக்காணுமையால் மனம்வருந்தின யுதிஷ்டிரர்முதலியவர்கள் மலையுச்சியில் ஏறி அவனுடைய ஸமீபத்தை அடைந்ததும், பீமனுல் கொல்லப்பட்டவர்கள் போக மிகுந்திருப்பவர்கள் மணிமான் முதலியவர்களின் வதத்தைச் சொல்லக்கேட்ட குபேரன் யுத்தம் செய்ய விரும்பிப் பீமனை நோக்கி வந்ததும், அவ்விடத்தில் யுதிஷ்டிரர்முதலியவர்களைக் கண்டு கோபந்தணிந்து தனக்கு அகஸ்திய சாபம் வந்ததைச் சொல்லிப் பீமஸேனனுடைய காரியத்துக்கு மகிழ்ந்ததும்.)

பலவித சப்தங்களால் முழக்கப்படுகின்ற மலையின் குகையினின்று வெளிப்படும் சப்தத்தைக் கேட்டு, குந்திபுத்திரரான

அஜாதசத்ருவும் மாத்ரீபுத்திரர்களிருவரும் தௌம்யரும் க்ருஷ்ணையும் பிராம்மணர்களும் அப்படியே எல்லா நண்பர்களும் பீமஸேனனைக் காணாமையால் எல்லோருமே மனமிழந்தவர்களாயினர். அப்பொழுது, சூரர்களும் மகாரதர்களுமான பாண்டவர்கள் திரௌபதியை ஆர்ஷ்டிஷேணரிடம் அடைக்கலமாக ஒப்புவித்து, ஒன்றுசேர்ந்து ஆயுதங்களை எடுத்துக்கொண்டு மலையின் மீதேறினார்கள். பிறகு, மகாரதர்களும் சிறந்த வில்லாளிகளுமான அந்தப்பார்த்தர்கள் மலையுச்சியை அடைந்து பார்க்கின்றவர்களாகிப் பகைவரையடக்குபவனான பீமஸேனனையும் பீமஸேனனால் அடித்துக் கீழேதள்ளப்பட்டவர்களும் மிக்க பலமுள்ளவர்களும் மிக்க முயற்சியுள்ளவர்களும் பெரிய சரீரமுள்ளவர்களும் துடிக்கின்றவர்களும் உயிரை இழந்தவர்களுமான ராக்ஷஸர்களையும் கண்டார்கள். மிக்கதோள்வலியமைந்தவனும் கதையையும் கத்தியையும் வில்லையும் தரித்தவனுமான அந்தப்பீமன், யுத்தத்தில் அஸுரர்களை இந்திரன் கொன்றதுபோல ராக்ஷஸர்களைக் கொன்று விளங்கினான். பிறகு, அந்தப்பார்த்தர்கள் வழியைத்தாண்டிச் சென்று பீமஸேனனைத் தழுவி மிகச்சிறந்த ஓரிடத்தை அடைந்து அந்த இடத்தில் உட்கார்ந்தார்கள். தூரத்திலிருந்தே லக்ஷ்யத்தில் அம்புகளை எய்பவர்களான அந்த நான்குபாண்டவர்களும் வீற்றிருக்கிற அந்தமலையின் சிகரமானது, மகாபாக்கியமுள்ளவர்களும் தேவர்களுள் சிறந்தவர்களுமான லோகபாலர்களால் ஸ்வர்க்கம் பிரகாசிப்பதுபோலப் பிரகாசித்தது. பிராதாவான யுதிஷ்டிரர், குபேரனுடைய அரண்மனையையும் கீழே தள்ளப்பட்டிருக்கிற ராக்ஷஸர்களையும் பார்த்து, உட்கார்ந்துகொண்டிருக்கிற பிராதாவான பீமனை நோக்கி, 'பீம! ஸாஹஸத்தாலோ அறியாமையாலோ இந்தப்பாவம் (உன்னால்) செய்யப்பட்டுவிட்டது. வீரனே! முனிவன்போலக் காட்டில் வஸிக்கிற உனக்கு நிஷ்காரணமான இந்த ராக்ஷஸக்கொலையானது தகுந்ததன்று. ராஜத்வேஷத்தை உண்டுபண்ணுகிற காரியம் செய்யத்தக்கதன்றென்று தர்மத்தை அறிந்தவர்கள் அறிகிறார்கள். பீமஸேன! தேவர்களுக்குப்பகையை உண்டுபண்ணுகிற இந்தக்காரியம் உன்னால் செய்யப்பட்டது. பார்த்த! அர்த்தத்தையும் தர்மத்தையும் விட்டுவிட்டு எவன் பாவத்தில் மனத்தைச் செலுத்துகிறானோ அவன் பாவச்செய்கைகளுடைய பலனை நிச்சயமாக அடைகிறான்; கஷ்டம், ஸாஹஸமானது தேவர்களுக்கும் அப்ரியமானது. உனக்கு மங்களம்.

எனக்கு ப்ரியத்தை விரும்புகிறாயாகில் மீண் [redacted] று செய்ய லாகாது' என்று சொன்னார். தர்மாத்மாவ [redacted] தத்துவங்களின் பாகுபாட்டை அறிந்த [redacted] ஸுள்ளவரும் குந்தீநந்தனருமான பிராதாவான அந்த [redacted] பகைவரைக் கொல்லுகிற விரதத்தினின்று நழுவாதவனும் [redacted] பலமிக்கவனும் (பகைவர்களால்) அவமதிக்கமுடியாத பராக்கிரமமுள்ளவனும் பிராதாவுமான பீமஸேனனைப்பார்த்து இவ்வண்ணம் உரைத்துவிட்டு, அதேவிஷயத்தை அதிகமாக நினைக்கின்றவராகிப் பேசாமலிருந்தார்.

பிறகு, பீமஸேனனால் கொல்லப்பட்டவர்கள்போக மிகுந்திருந்த ராக்ஷஸர்கள்ஒன்றுசேர்ந்து குபேரனுடைய இருப்பிடத்தைநோக்கி ஓடினார்கள். பீமஸேனனிடத்திலிருந்துண்டான பயத்தால் பீடிக்கப்பட்டவர்களும் அதிவேகமுள்ளவர்களுமான அந்த ராக்ஷஸர்கள் வேகத்தோடு குபேரனுடைய அரண்மனையை அடைந்து பயங்கரமான தீனஸ்வரத்தை வெளியிட்டனர். வேந்தரே! சஸ்திரங்களையும் ஆயுதங்களையும் கீழேவைத்துவிட்டவர்களும் வாட்டமுற்றவர்களும் ரக்தத்தால் நனைக்கப்பட்டிருக்கிற கவசம் வஸ்திரம் ஆயுதம் முதலியவைகளையுடையவர்களும் நன்குவிரிந்த தலைமயிர்களுள்ளவர்களுமான அந்த ராக்ஷஸர்கள் யக்ஷர்களுக்கு அதிபதியாகிய குபேரனை நோக்கி, 'தேவனே! கதைகளாலும் ஈட்டிகளாலும் பட்டாக்கத்திகளாலும் தோமரங்களாலும் ப்ராஸங்களாலும் போர்புரிகின்றவர்களும் உனக்கு முந்திச்செல்பவர்களுமான எல்லா ராக்ஷஸர்களும் கொல்லப்பட்டார்கள். தனேஶ்வர! பலத்தினால் மலையை மிக அழித்து ஒரு மனிதனால் யுத்தத்தில் க்ரோதவசர்களென்கிற ராக்ஷஸர்களுடைய கூட்டங்கள் கொல்லப்பட்டன. நராதிபனே! தேவனே! ராக்ஷஸஶ்ரேஷ்டர்களுள்ளும் யக்ஷர்களுள்ளும் மிகச்சிறந்தவர்கள் ஆயுதங்களால் அடிக்கப்பட்டு ஆண்மையை இழந்தவர்களும் உயிரை இழந்தவர்களுமாகிப் படுத்திருக்கிறார்கள். மலை நொறுக்கப்பட்டது; நாங்கள் முறிய அடிக்கப்பட்டோம். உன்னுடைய தோழனான மணிமானும் கொல்லப்பட்டான். ஒருமனிதனால் இந்தக்காரியம் செய்யப்பட்டது. அடுத்துச்செய்யவேண்டியதைச்செய்' என்று சொன்னார்கள். எல்லாயக்ஷகணங்களுக்கும் அதிபதியான குபேரன், அதைக் கேட்டு மிக்க கோபங்கொண்டவனாகவும், கோபத்தால் கண்கள் நன்குசிவந்தவனாகவும், 'எப்படி!' என்கிறவசனத்தை உரைத்தான். யக்ஷர்களுக்கு அதிபதியான தனேஶ்வரன் பீமன் இரண்டாமுறை

குற்றஞ்சொன்னபதைக் ... ருக்கேட்டுக் கோபங்கொண்டான். டுங்கள்’ ... டிப்படியிறும் சொன்னான். பிறகு, நீருண்டச்சமமாகவும், எல் ... ரில் ... இருப்பதும் மலையின்கொடுமுடி போல ... தும், ஸூர்ன் ரதத்தில் பொன்மாலைகளை அணிந்த குதிரைகளைப் பூட்டினார்கள். எல்லாக்குணங்களும் அமைந்தவைகளும் குற்றமற்ற [1] பத்துச்சுழிகளுள்ளவைகளும் தேஜஸோடும் பலத்தோடும் நற்குணங்களோடும் கூடியவைகளும் பலவிதரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்டவைகளும் ரதத்தில் பூட்டப்பட்டவைகளும் பிரகாசிக்கின்றவைகளுமான அந்தக் குபேரனுடைய சிறந்த குதிரைகள் (ஆகாசத்தைத்) தாண்டப்போகின்றவைகள்போல வேகமாகச்சென்றன. பிறகு, அந்தயக்ஷாதிகாரிகள் தனேச்வரன் கோபமுற்றதைப் பார்த்து, வெற்றியை உண்டுபண்ணுகின்ற இங்கிதங்களால் ஒருவரை ஒருவர் ஸந்தோஷிக்கச்செய்தார்கள். சிறந்த ஐச்வர்யமுள்ளவனை அந்த ராஜராஜன் அந்தப் பெரிய ரதத்தின் மீதேறித் தேவர்களாலும் கந்தர்வர்களாலும் துதிக்கப்படுகின்றவனாகவும் மிக்க ஒளிபொருந்தியவனாகவும் சென்றான். ரதத்தின் மீதேறிச்செல்பவனும் [2] மகாத்மாவும் தனேச்வரனுமான அந்தக் குபேரனைப் பயங்கரமான தோற்றமுள்ளவர்களான எல்லா யக்ஷர்களும் பின்தொடர்ந்தார்கள். சிவந்த கண்களையுடையவர்களும் பொன்போன்ற காந்தியையுடையவர்களும் பருத்ததேகத்தையுடையவர்களும் மிக்கவலிமையுள்ளவர்களும் ஆயுதங்களைத் தரித்தவர்களும் கத்திகளைக்கட்டிக்கொண்டவர்களும் நூற்றுக் கணக்கான ஆயுதங்களையுடையவர்களுமான அந்த யக்ஷர்கள், மிக்கவேகமுள்ளவர்களாக ஆகாயத்தில் வேகத்துடன் பறந்துகொண்டு, ஆகாசத்தை நன்றாக இழுத்துக்கொண்டுவருகிறவர்கள்போலக் கந்தமாதனபர்வதத்தைநோக்கி வந்தார்கள். குதிரைகளுடைய பெருங்கூட்டங்களால் வியாபிக்கப்பட்டதும் குபேரனால் காக்கப்பட்டதும் அழகியதும் பாண்டவர்கள் இருக்குமிடமுமான கந்தமாதனபர்வதத்தின் சிகரத்தை அடைந்தார்கள். பாண்டவர்கள் மயிர்க்கூச்சலுள்ளவர்களாக மகாத்மாவும் யக்ஷராக்ஷஸர்களுடைய கூட்டங்களால் நாற்புறங்களிலும் சூழப்பட்டவனும் காட்சிக்கினியவனுமான குபேரனைக் கண்டார்கள். குபேரனே அப்பொழுது அதிகபலமுள்ளவர்களும் மகா

---

1 253-ம் பக்கம் பார்க்க.

2 இரட்டித்தலால் ஒரு சொல் விடப்பட்டது.

ர்தர்களும் விற்களையும் கத்திகளையும் கையிலெடுத்தவர்களுமான பாண்டுவின் புதல்வர்களைப் பார்த்துப் பிரீதியுள்ளவனானான். 'இந்திரனுக்குச் சமமான செளர்யமுள்ள இந்தப் புருஷச்ரேஷ்டர்களனைவரும் தேவகார்யத்தைச் செய்யப்போகிறார்கள்' என்று மனத்தினால் ஸந்தோஷித்தான். தனேச்வரனுக்கு முந்திச் செல்பவர்களான அந்தயக்ஷர்களும் கந்தர்வர்களும் அதிகவேகமுள்ளவர்களாகப் பறவைகள்போல மலையின் சிகரத்தில் வந்து இறங்கினார்கள்; அந்தப்பார்த்தர்களுடைய பக்கத்தில் வந்து நின்றார்கள்.

பாரதரே! பிறகு, பாண்டவர்களைக் குறித்து மனத்தில் ஸந்தோஷமடைந்த அந்தக் குபேரனைக் கண்டு யக்ஷர்களும் கந்தர்வர்களும் போர் முயற்சியின்றி நின்றார்கள். மகாத்மாக்களும் மகாரதர்களும் பாண்டுபுத்ரர்களுமான நகுலன் ஸஹதேவன் தர்மங்களை நன்றாக அறிந்தவரான தர்மபுத்திரர் இவர்களெல்லாரும் தங்களைக் குற்றம் செய்தவர்களைப்போல எண்ணிப் பிரபுவான குபேரனை நமஸ்கரித்துக் கைகளைக் குவித்துக்கொண்டு தனேச்வரனைச் சூழ்ந்து நின்றார்கள். குபேரன், சயனங்களுடனும் ஆஸனங்களுடனும் கூடியதும் காந்தியுள்ளதும் விச்வகர்மாவினால் உண்டுபண்ணப்பட்டதும் நாற்புறமும் விசித்திரமாயிருப்பதுமான புஷ்பக விமானத்தில் இருந்தான். பருத்தசரீரமுள்ளவர்களும் முளைபோன்ற காதுகளையுடையவர்களும் அதிகவேகமுள்ளவர்களுமான யக்ஷர்களும் ராக்ஷஸர்களும் விமானத்தில் வீற்றிருக்கின்ற குபேரனை அடுத்து ஆயிரமாயிரமாக வீற்றிருந்தார்கள். நூறுநூறாகக் கந்தர்வர்களும் அப்படியே அப்ஸரஸுகளுடைய கூட்டங்களும் தேவர்கள் இந்திரனைத் துதிப்பதுபோலச் சூழ்ந்துகொண்டு துதித்தார்கள். பொன்னாலாகியதும் மங்களகரமுமான மாலையை முடியில் அணிந்திருப்பவனும் பாணங்களையும் கத்தியையும் வில்லையும் கையில் பிடித்தவனுமான பீமஸேனன் தனாதிபனை ஏறிட்டுப்பார்த்தான். ராக்ஷஸர்களால் நன்றாக அடிக்கப்பட்டிருந்தும் குபேரனைப்பார்த்தும் பீமஸேனனுக்கு அந்தநிலைமையில் பயமும் உண்டாகவில்லை; வாட்டமும் உண்டாகவில்லை. குபேரன், கூர்மையுள்ள பாணங்களை எடுக்கிறவனும் யுத்தம்பண்ணுவதில் விருப்பங்கொண்டு நிற்பவனுமான பீமனைப்பார்த்து, தர்மபுத்திரரை நோக்கி, 'குந்திநந்தன! எல்லாப் பிராணிகளும் உன்னைப் பிராணிகளுக்கு நன்மையைச் செய்வதில் பற்றுதலுள்ளவனென்று அறிந்திருக்கின்றன. நீ பந்துக்க

ளுடன்கூட மலையின் சிகரத்தில் பயமில்லாமல் வாஸம் செய்வாயாக. பாண்டவ! பீமஸேனன் விஷயத்தில் நீ கோபிக்கலாகாது. இவர்கள் காலத்தால் முந்தியே கொல்லப்பட்டார்கள். உன்னுடைய இளையஸஹோதரன் நிமித்தமாத்திரமாக ஏற்பட்டான். பீமனால் செய்யப்பட்ட ஸாஹஸமான இந்த விஷயத்தில் நீ வெட்கப்படலுமாகாது. தேவர்களால் முந்தியே யக்ஷர்கள் ராக்ஷஸர்கள் ஆகிய இவர்களுடைய அழிவானது கண்டறியப்பட்டிருக்கிறது. பரதர்களுள் சிறந்தவனே! நான் ப்ரீதியுள்ளவனாக இருக்கிறேன். பீமஸேனனிடத்தில் எனக்குக் கோபமில்லை. பீமஸேனனுடைய செய்கையினால் எனக்கு ஸந்தோஷமானது முந்தியே உண்டாகிவிட்டது' என்று சொன்னான். அந்தக் குபேரன் யுதிஷ்டிரராஜரைப் பார்த்து இவ்வண்ணமுரைத்து, பீமஸேனனைப்பார்த்து, 'கௌரவர்களுள் சிறந்தவனே! அப்பனே! இதை நான் மனத்தில் வைக்கவில்லை. பீம! உனது புஜபலத்தையே அடுத்து என்னையும் தேவர்களையும் அலக்ஷ்யம் செய்து திரௌபதிக்காக யக்ஷர்கள் ராக்ஷஸர்கள் இவர்களுடைய விநாசமாகிற நீ செய்த ஸாஹஸகாரியத்தினால் நான் உன்னிடத்தில் பிரீதியுள்ளவனாக இருக்கிறேன். விருகோதர! கோரமான சாபத்தினின்று இப்பொழுது நான் விடுபட்டேன். 'நான் முற்காலத்தில் கோபம் கொண்ட அகஸ்தியமகரிஷியினால் ஒரு குற்றத்துக்காகச் சபிக்கப்பட்டேன். அதற்கு இது பிராயச்சித்தம்; நிச்சயம். பாண்டவர்களை மகிழ்விக்கிறவனே! (யக்ஷராக்ஷஸ வதமாகிற இந்தத்) துக்கம் வருமென்பது என்னால் முந்தியே அறியப்பட்டிருக்கிறதன்றோ. பாண்டவ! எவ்விதத்தாலும் இந்த விஷயத்தில் நீ குற்றவாளியல்லை' என்று சொன்னான். யுதிஷ்டிரர், 'பகவானே! மகாத்மாவான அகஸ்தியரால் எதற்காகச் சபிக்கப்பட்டாய்? தேவனே! இந்தச் சாபத்திற்குக்காரணம் ஏற்பட்டவிதத்தைக் கேட்க விரும்புகிறேன். சிறந்த புத்தியுள்ளவரான அந்த அகஸ்தியருடைய கோபத்தால் அப்பொழுதே சேனையுடனும் பின்தொடர்ந்துவந்த பரிவாரங்களுடனும் நீ எரிக்கப்படாமலிருந்தாயென்னும் இது எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது' என்று வினவ, தனேச்வரன் சொல்லலானான்.

'நரேச்வரனே! தேவதைகளுக்குக் குசஸ்தலி என்னுமிடத்தில் மந்திராலோசனை ஸபை ஏற்பட்டது. நான் பலவித ஆயுதங்களைத் தரித்தவர்களும் கோரரூபமுள்ளவர்களுமான முந்நூறு

[1] மகாபத்மஸங்கியை அளவுள்ள யக்ஷர்களால் சூழப்பட்டவனாக அந்த இடத்திற்குச் செல்லலானேன். பிறகு, பலவகைப் பறவைக் கூட்டங்களால் வியாபிக்கப்பட்டுப் பூத்திருக்கிற மரங்களால் விளங்குகின்ற யமுனையின்கரையை அடைந்து கடுந்தவஞ்செய்கின்ற அகஸ்தியமஹரிஷியை நான் வழியில் பார்த்தேன். அரசனே! கைகளை மேலேதூக்கிக்கொண்டிருப்பவரும் சூரியனுக்கு எதிரில் நிற்பவரும் தேஜஸுகளின் குவியலாக இருப்பவரும் நன்கு மூட்டப்பட்ட அக்னிபோல ஜ்வலிப்பவருமான அந்த அகஸ்தியரைப் பார்த்தவுடனே, ராக்ஷஸர்களுக்கு அதிபதியும் ஐஶ்வர்யமுள்ளவனும் எனக்குத்தோழனுமான மணிமானென்பவன் ஆகாசத்திலிருந்துகொண்டு மூர்க்கத்தன்மையினாலும் (அகஸ்தியரென்று) தெரிந்துகொள்ளாமையினாலும் செல்வச் செருக்கினாலும் (செல்வம் நிலையற்றதென்று) அறியாமையினாலும் அந்த அகஸ்தியமகரிஷியினுடைய தலையில் எச்சிலை உமிழ்ந்தான். அதனால் கோபங்கொண்ட தபோதனரான அந்த அகஸ்தியபகவான், 'தனேஶ்வர! கெட்ட எண்ணமுள்ளவனும் உனக்குத்தோழனுமான இந்த மணிமான் என்னை அவமதித்து நீ பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே இந்த அக்கிரமத்தைச் செய்தானாதலால் அப்படிப்பட்ட இந்தச் சேனைகளுடன் மனிதனிடத்தினின்று வதத்தை அடைவான். கெட்டபுத்தியுள்ளவனே! நீயும் இந்தச் சேனைகள் கொல்லப்படுவதனால் வருத்தத்தை அடைவாய்; அந்த மனிதனையே கண்டு பாவத்தினின்று விடுபடுவாய். உன்னுடைய இந்தச் சேனாவீரர்களுடைய புத்திரர்களோடும் பௌத்திரர்களோடும் கூடின சேனையானது கோரமான இந்தச் சாபத்தை அடையாது; போ. உன்னுடைய கட்டளையை அந்தச் சேனையானது செய்யும்' என்று சொன்னார். முற்காலத்தில் ரிஷிகளுள் மிகவும் சிறந்தவரான அந்த அகஸ்தியரிடத்தினின்று இந்தச் சாபம் என்னாலடையப்பட்டது. மஹாராஜனே! அந்தச்சாபத்தினின்று உன்னுடைய பிராதாவான பீமனால் நான் விடுவிக்கப்பட்டேன்.

1 ஸபாபர்வம் 276-ம் பக்கம் குறிப்பிற் காண்க.

## நூற்றறுபத்துமூன்றாவது அத்யாயம்.

## யக்ஷயுத்தபர்வம். (தொடர்ச்சி.)

(குபேரன் யுதிஷ்டிரரைப்பார்த்துக் கட்டளையிட்டுவிட்டுத் தன் அரண்மனை சென்றதும், குபேரனுடைய கட்டளையினால் ராக்ஷஸர்களால் பூஜிக்கப்பட்ட யுதிஷ்டிரர் முதலியவர்கள் அன்றிரவு அவனுடைய மாளிகையில் ஸுகமாக வஸித்ததும்.)

யுதிஷ்டிர! தைர்யம், விடாமுயற்சி, தகுந்த இடம், காலம், பகைவர்களை அவமதிப்பதற்குக்காரணமான செய்கை ஆகிய ஐந்துவிதமான இவை உலகிலுள்ள ஜனங்களின் கார்யஸித்திக்குக்காரணம். பாரத! மனிதர்கள் க்ருதயுகத்தில் தத்தம்கார்யத்தில் தைர்யமுள்ளவர்களாகவும் விடாமுயற்சியுள்ளவர்களாகவும் பராக்கிரமத்தை உபயோகிக்கும்முறையை அறிந்தவர்களாகவுமிருந்தார்கள். க்ஷத்திரியச்ரேஷ்டனே! தைர்யமுள்ளவனும் தேசகாலங்களை அறிந்தவனும் எல்லாத்தர்மங்களின் அனுஷ்டானமுறையையும் அறிந்திருப்பவனுமான க்ஷத்திரியன் பூமியை நெடுங்காலம் ஆளுகிறான். பார்த்த! வீர! எல்லாக் காரியங்களிலும் இவ்வண்ணமிருக்கும் மனிதன் இவ்வுலகத்தில் கீர்த்தியை அடைகிறான்; மறுமையிலும் நற்கதியை அடைகிறான். தேசகாலங்களுடைய அனுகூலத்தை எதிர்பார்த்திருந்த இந்திரன் பராக்கிரமத்தை வெளியிட்டு வ்ருத்ரனைக்கொன்று வஸுக்களோடு கூட ஸ்வர்க்கத்தில் தேவராஜ்யத்தை அடைந்தான். எவன் வீணானகோபத்தால் தனதுசக்தியை அறியவில்லையோ, எவன் கெட்டகாரியங்களில் மனத்தைச்செலுத்தினவனாகவும் பாபபுத்தியுள்ளவனாகவும் பாபத்தையே அனுஸரிக்கிறானோ கர்மங்களுடைய பாகுபாடுகளை அறியாதவனான அந்த மனிதன் இம்மையிலும் மறுமையிலும் நாசமடைகிறான். காலத்தை அறியாதவனும் மிகவும் கெட்டபுத்தியுள்ளவனும் கார்யங்களுடைய விசேஷங்களை அறியாதவனும் வீணானசெய்கையும் முயற்சியுமுள்ளவனுமான மனிதன் இம்மையிலும் மறுமையிலும் நாசமடைகிறான். ஸாஹஸத்தில் நிலைபெற்றிருப்பவர்களும் வஞ்சனையில் முக்கியமான நோக்குள்ளவர்களும் கெடுமதியுள்ளவர்களும் அர்த்தத்தில் பேராவலுள்ளவர்களுமான எல்லாருக்கும் பாவத்தை விளைவிக்கக்கூடிய நிச்சயம் உண்டாகிறது. புருஷச்ரேஷ்டனே! இந்தப்பீமஸேனன்

தர்மங்களை அறியாதவன்; கர்வங்கொண்டவன்; சிறுபிள்ளையின் புத்தியுள்ளவன்; கோபமுள்ளவன்; பயமற்றவன். அப்படிப்பட்ட இந்தப்பீமனுக்கு உபதேசிப்பாயாக. ஆர்ஷ்டிஷேணரென்கிற ராஜரிஷியினுடைய ஆஸ்ரமத்தை நீ மீண்டுமடைந்து அந்த ஆஸ்ரமத்தில் [1] இருளடர்ந்ததும் ராக்ஷஸர்களுக்குரியதுமான பக்ஷமுழுவதும் சோகமும் பயமுமற்று வஸிப்பாயாக. மிக்கபுஜபலமுள்ளவனே! நான் கந்தர்வர்களோடும் யக்ஷர்களோடும் கின்னரர்களோடும் அளகாநகரிக்குச் செல்வேன். நீயும் பதரிகாஸ்ரமத்தைக் குறித்துச் செல்வாயாக. நீண்டகைகளுள்ளவனே! அரசனே! என்னால் உத்தரவளிக்கப்பட்ட மலைவாஸிகளனைவரும் பிராம்மணோத்தமர்களோடு சேர்ந்திருக்கிற உன்னைப் பாதுகாக்கக்கடவர். வேந்தே! தார்மிகர்களுள் சிறந்தவனே! மலையில் ஸாஹஸகார்யங்களில் நிலைபெற்றிருக்கிற இந்த விருகோதரனை நீ நன்கு தடுக்கவேண்டும். அரசனே! இதற்குப்பிறகு, காட்டில் வஸிப்பவர்கள் உங்களைப் பார்ப்பார்கள்; அரசனே! உங்களைத் துதிப்பார்கள்; உங்களை எப்பொழுதும் பாதுகாப்பார்கள். புருஷஸ்ரேஷ்டர்களே! என்னுடைய வேலைக்காரர்கள் அப்படியே சுவையுள்ள அன்னபானங்களை எப்பொழுதும் உங்களுக்கு மிகுதியாகக் கொண்டுவந்து கொடுப்பார்கள். யுதிஷ்டிர! அப்பா! அர்ஜுனன் மகேந்திரனுக்கும், விருகோதரன் வாயுவுக்கும், யோகமகிமையினால் உண்டுபண்ணப்பட்ட தன் புத்திரனை நீ தர்மதேவனுக்கும், ஆத்மகுணங்களால் நிறைந்த குமாரர்களான நகுலஸஹதேவர்கள் இருவரும் அஸ்வினிதேவர்களுக்கும் எவ்வாறு ரக்ஷிக்கத்தக்கவர்களோ அவ்வாறே எனக்கும் நீங்களெல்லோரும் இப்பொழுது ரக்ஷிக்கத்தக்கவர்கள். அர்த்ததத்துவங்களின் முறையை அறிந்தவனும் எல்லாத்தர்மங்களுடைய விதிகளையும் நன்கு அறிந்தவனும் பீமஸேனனுக்கு இளைய ஸஹோதரனுமான பல்குனன் ஸ்வர்க்கத்தில் க்ஷேமமாக இருக்கிறான். ஐயா! உலகத்தில் எந்தச் சிறந்த ஸம்பத்துக்கள் ஸ்வர்க்கத்திற்கு ஹிதமானவையென்று எண்ணப்பட்டனவோ அவை அனைத்தும் தனஞ்சயனிடத்தில் பிறந்ததுமுதல் நிலைபெற்றிருக்கின்றன. அதிகமான பலமுள்ளவனும் அளவுகடந்த தேஜஸுள்ளவனுமான அர்ஜுனனிடத்தில் ஐம்பொறி அடக்கல், தானம், பலம், புத்தி, அகார்யத்தில் வெட்கம், தைர்யம், உத்தமமான தேஜஸ்

1 வேறு பாடம்.

இவைகளும் நிலைபெற்றிருக்கின்றன. ' பாண்டுநந்தன! அர்ஜுனன் மதிமயக்கத்தால் நிந்திக்கத்தக்க செய்கையைச் செய்கிற தில்லை. மனிதர்கள் வேறு மனிதர்களிடம், 'அர்ஜுனனுடைய வசனங்கள் பொய்யானவைகள்' என்று சொல்லுகிறதில்லை. பாரத! கௌரவர்களுக்குக் கீர்த்தியை விருத்திபண்ணுகிற அந்த அர்ஜுனன் தேவர்களாலும் பித்ருக்களாலும் கந்தர்வர்களாலும் அழைத்துவரப்பட்டு இந்திரனுடைய அரண்மனையில் அஸ்திரங் களைப் பயிற்சி செய்கிறான். பார்த்த! எவன் எல்லா அரசர்களையும் தர்மத்தால் தனக்கு வசப்படும்படி செய்தானோ மிக்கதேஜஸுள்ள வனும் உன்னுடைய பிதாவுக்குப் பாட்டனுமான அந்தச்சந்தனு மகாராஜன் ஸ்வர்க்கத்தில் காண்டீவத்தை வில்லாகக்கொண்டவ னான பார்த்தனால் பிரீதி அடைகிறான். அதிகவீர்யமுள்ளவனான அந்தச் சந்தனுசக்கரவர்த்தியானவன் நன்னடையுடன் கூடியவ னாகக் கௌரவவம்சத்தில் குலத்தைத் தாங்குபவன்போலிருந் தான். பெரும்புகழ் வாய்ந்த சந்தனுவானவன் பித்ருக்களையும் தேவர்களையும் ரிஷிகளையும் பிராம்மணர்களையும் பூஜித்து யமுனை யினருகில் முக்கியமான ஏழு மகாயாகங்களைச் செய்தான். அரசே! சக்கரவர்த்தியும் ஸ்வர்க்கத்தை ஜயித்தவனும் இந்திர லோகத்தி லிருப்பவனும் உன் பாட்டனுக்குத் தந்தையுமான அந்தச் சந்தனு சக்ரவர்த்தி க்ஷேமத்தை விசாரிக்கிறான்' என்று

குபேரனால் சொல்லப்பட்ட இந்தவசனத்தைக் கேட்டுப் பாண்ட வர்கள் பிறகு அந்த வசனத்தினால் அதிக ஸந்தோஷமுள்ளவர்க ளானார்கள். பரதஸ்ரேஷ்டனான விருகோதரன், பிறகு, சக்தியை யும் கதையையும் கத்தியையும் வில்லையும் வைத்துவிட்டுக் குபேர னுக்கு நமஸ்காரம் செய்தான். பிறகு, சரண்யனான தனாத்யக்ஷன் சரணமடைந்திருப்பவனான பீமனைப் பார்த்து, 'பகைவர்களுடைய மானத்தையழிப்பவனாகவும் நண்பர்களுடைய செல்வத்தைப் பெருக்குகிறவனாகவுமிருப்பாயாக. அப்பா! மலையின் உச்சியில் பந்துக்களுடன் பயமில்லாதவனாக வஸித்துக்கொண்டு கருடனுக் கும் பித்ருக்களுக்கும் தேவர்களுக்கும் எப்பொழுதும் பூஜையைச் செய்பவனாக இருப்பாயாக. ருஜுவாகப் பாருங்கள்; கோண லாகப் பாராதீர்கள்; உண்மையைப் பேசுங்கள்; பொய்யைச்சொல் லாதீர்கள்; தீர்க்கமாகப் பாருங்கள்; குறுகலாகப் பாராதீர்கள்; மேலான பொருளைப் பாருங்கள்; கீழ்ப்பட்ட பொருளைப் பாராதீர் கள். பகைவரை வாட்டுபவர்களே! அழகிய நம்முடைய வீடுக

ளில் வஸியுங்கள். பரதஸ்ரேஷ்டர்களே! உங்களுடைய விருப்பங் களை யக்ஷர்கள் குறைக்கமாட்டார்கள்; செய்யவே செய்வார்கள். 1 சோம்பலில்லாதவனும் அஸ்திரங்களில் நல்ல பயிற்சியுள்ளவ னும் புருஷஸ்ரேஷ்டனுமான தனஞ்சயன் மகிமையுடையவனுல் இந்திரனாலனுப்பப்பட்டுச் சீக்கிரமாகவே வருவான்' என்று சொன் ஞன். குஹ்யகர்களுக்கு அதிபதியாகிய குபேரன் நல்ல செய்கைக ளுடன் கூடின யுதிஷ்டிரரைப் பார்த்து இவ்வண்ணம் கட்டளை யிட்டு ஸூர்யன் அஸ்தகிரியை நோக்கிச் செல்வதுபோல (அள கையைக் குறித்து) ச் சென்றான். அப்படிச் செல்லுகின்ற குபே ரனை யக்ஷர்களும் ஆயிரக்கணக்கான ராக்ஷஸர்களும் சித்திர கம் பளங்களால் செய்யப்பட்ட மேல் விரிப்புடன் கூடியவைகளும் பலவித ரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்டவைகளுமான வாக னங்களுடன் பின்தொடர்ந்து சென்றார்கள். குபேரனுடைய வீட்டை நோக்கிச் செல்லுகின்ற உத்தமமான குதிரைகளுடைய கனைப்பானது இந்திரனுடைய நகரத்தைச் சார்ந்த இடத்தில் பக்ஷிகளுடைய சப்தம்போலத் தோன்றியது. அந்தத் தனதிப னுடைய குதிரைகள் மேகங்களை இழுக்கின்றவைகள்போலவும் காற்றைப் பானம்பண்ணுகிறவைகள்போலவும் ஆகாயத்தை அடைந்து விரைவாகச் சென்றன. பிறகு, உயிர்போன ராக்ஷஸர் களுடைய அந்தச் சரீரங்களைக் குபேரனுடைய கட்டளையினால் யக்ஷர்கள் மலையுச்சியிலிருந்து இழுத்தெறிந்தார்கள். அவர்களுக் குச் சிறந்த புத்தியுள்ளவரான அகஸ்தியரால் அது சாபம் (பலிக் கிற) காலமாக ஏற்படுத்தப்பட்டிருந்ததன்றோ? அதனால், அவர் கள் யுத்தத்தில் கொல்லப்பட்டார்கள். அப்பொழுது சாபத் திற்கு முடிவு ஏற்பட்டது. மஹாத்மாக்களான பாண்டவர்கள் அச்சமற்றவர்களாகவும் பூஜிக்கப்பட்டவர்களாகவும் ராக்ஷஸர்க ளோடுகூட அந்தக் குபேரனுடைய மாளிகைகளில் அந்தஇரவு முழுமையும் ஸுகமாக வஸித்தார்கள்.

———

1 'குடாகேச:' என்பது மூலம்.

## நூற்றறுபத்துநான்காவது அத்யாயம்.

## யக்ஷயுத்தபர்வம். (தொடர்ச்சி.)

(தௌம்யர் மேரு மந்தரங்களைப்பற்றிக் கூறிச் சந்திரன் ஸூர்யன் முதலிய கிரஹங்கள் செல்லும் முறையைத் தெரிவித்தது.)

பிறகு, ஸூர்யோதய காலத்தில் தௌம்யர் ஆர்ஷ்டிஷேணரோடு, பாஞ்சாலியுடனிருக்கிற அந்தப் பாண்டவர்களை வந்தடைந்தார். அவர்களனைவரும் ஆர்ஷ்டிஷேணர் தௌம்யர் இவர்களுடைய பாதங்களில் தண்டனிட்டு, பிறகு, கைகூப்பி அந்தப் பிராம்மணர்களைப் பூஜித்தார்கள். பரதர்களுள் சிறந்தவரே! மிக்க தவமுள்ள அந்தத் தௌம்ய மகரிஷியானவர் புத்திரனைப் போல ஆர்ஷ்டிஷேணரைக் கட்டிக்கொண்டும் தர்மராஜரைக் கையில் கையினால் பிடித்துக்கொண்டும் கீழ்த்திசையை நோக்கி, 'மஹாராஜனே! இந்த மந்தரமென்கிற பெரிய மலையானது ஸமுத்திரத்தினால் சூழப்பட்ட பூமியைச் சூழ்ந்துகொண்டிருக்கிறது. பாண்டவ! நான்கு பக்கங்களையும் பிரகாசிக்கச்செய்கின்ற மந்தர கிரியானது இந்திரனோடும் குபேரனோடும் சேர்ந்திருக்கிற திசையைப் பாதுகாக்கிறது. ஐயா! எல்லாத்தருமங்களையுமறிந்திருக்கிற ரிஷிகளும் எல்லா வித்வான்களும் மலைகளோடும் காட்டு வெளிகளோடும் காடுகளோடும் பிரகாசிக்கின்ற இந்த மலையை மஹேந்திரனுக்கும் அரசனான குபேரனுக்கும் உரியதென்று சொல்லுகிறார்கள். பிரஜைகளும் தர்மங்களை அறிந்தவர்களான ரிஷிகளும் ஸித்தர்களும் ஸாத்யர்களும் தேவதைகளும் இந்தமலையினின்று உதிக்கின்ற ஸூர்யனை மந்திரங்களால் துதிக்கிறார்கள். தர்மங்களை அறிந்தவனும் எல்லாப் பிராணிகளுக்கும் தலைவனுமான யமதர்மராஜன் மரித்த பிராணிகளால் அடையத்தக்க இந்தத் தென்திசையை அடைந்திருக்கிறான். புண்யமானதும் மிகவும் அத்புதமான காட்சியுள்ளதும் சிறந்த செல்வப் பெருக்குடன் கூடியதுமான இந்த ஸம்யமநீ நகரமானது ப்ரேதராஜனான யமனுக்கு வாஸஸ்தானம். அரசனே! ஸூர்யன், எதை அடைந்து ஸத்யத்தோடு நிலைபெற்றிருக்கிறானோ அப்படிப்பட்ட இந்தச் சிறந்த பர்வதத்தை அஸ்தகிரி என்று அறிஞர்கள் சொல்லுகிறார்கள். இவ்விதப் பர்வத ராஜாவான அஸ்தகிரியிலும் மஹோததி என்கிற ஸமுத்திரத்திலும் வருண

ராஜன் வஸித்துக்கொண்டு பிராணிகளைப் பாதுகாக்கிறான். மிக்க பாக்கியமுள்ளவனே! புகழ்பெற்றதும் மங்களகரமானதும் பிரம்ம வித்துக்களுக்கு அடையத்தக்க ஸ்தானமுமான இந்த மகாமேருவானது வடதிசையைப் பிரகாசிக்கச் செய்துகொண்டிருக்கிறது. இதில் பிரம்மஸபை இருக்கிறது. எல்லாப் பிராணிகளுக்கும் ஆத்மாவான பிரம்மாவானவர் ஜங்கமங்களாகவும் ஸ்தாவரங்களாகவுமிருக்கிற எல்லா வஸ்துக்களையும் படைத்துக்கொண்டு இங்கு நிலைபெற்றிருக்கிறார். தக்ஷரை ஏழாமவராகக் கொண்டவர்களும் பிரம்மாவினுடைய மானஸபுத்திரர்களாகச் சொல்லப்படுகிறவர்களுமான அவர்களுக்குங்கூட மகாமேருவானது மங்களகரமான ஆரோக்கியஸ்தானமாக இருக்கிறது. அப்பா! வஸிஷ்டரை முதன்மையாகக் கொண்ட ஏழு தேவரிஷிகளும் இந்தப் பர்வதத்திலேயே அஸ்தமிக்கிறார்கள்; மீண்டும் உதிக்கிறார்கள். எந்த இடத்தில் பிரம்மா ஆத்மத்தியானத்தினால் திருப்தியடைந்த தேவர்களோடு வஸிக்கிறாரோ அப்படிப்பட்ட ரஜோகுண ஸம்பந்தமில்லாத மேருவினுடைய உத்தமமான சிகரப்பிரதேசத்தைப் பார்ப்பாயாக. தேவரும் பிரபுவுமான எந்த நாராயணரைச் சராசரங்களனைத்துக்கும் மூலகாரணமான மூலப்ரக்ருதிக்கும் சாச்வதமான காரணமென்றும் ஆதியந்தமில்லாதவரென்றும் பரம்பொருளென்றும் சொல்லுகிறார்களோ அவருடைய ஸ்தானமானது பிரம்மதேவருடைய வாஸஸ்தானத்தைக்காட்டிலும் சிறப்புள்ளதாகப் பிரகாசிக்கிறது. எல்லாத்தேஜஸுகளின் உருவமுமாக இருப்பதும் மங்களகரமானதும் ஸூரியனையும் அக்கினியையும்விட அதிகமாகப் பிரகாசிப்பதுமான மகாத்மாவான விஷ்ணுவினுடைய அந்த ஸ்தானத்தைத் தேவர்களும் பெருமுயற்சியால் பார்க்கிறார்கள். வேந்தே! ஐயா! எல்லாப் பிராணிகளுக்கும் அதிபதியும் எல்லாவஸ்துக்களுக்கும் மூலகாரணரும் தாமே தோன்றினவருமான ஸ்ரீமந்நாராயணர் நல்ல காந்தியினால் எல்லாப்பிராணிகளையும் பிரகாசிக்கச் செய்துகொண்டு தாமும் பிரகாசிக்குமிடமும் தன்னுடைய ஒளியினாலேயே தேவர்களாலும் அஸுரர்களாலும் பார்க்கமுடியாததுமான நாராயணருடைய ஸ்தானமானது மேருவில் கிழக்குத்திசையில் மிகப் பிரகாசிக்கின்றது. அப்பா! இங்கே மனத்தினால் பரமாத்மாவைத் தியானிக்கின்ற யதிகளால் அடையத்தக்க இந்தஸ்தானத்தைப் பிரம்மரிஷிகளே அடைகிறதில்லை. அவ்வாறிருக்க, மஹரிஷிகள் எவ்வாறு அடைவார்கள்? பாண்டவ! அந்தஸ்தானத்தை அடைந்து

எல்லாஜோதிகளும் பிரகாசிக்கிறதில்லை. தமக்குத்தாமே பிரபு வாக இருப்பவரும் இவ்விதமென்று நினைக்க முடியாத ஸ்வ ரூபத்துடன் கூடியவருமான நாராயணர் அந்த இடத்தில் மிகவும் பிரகாசிக்கிறாரன்றோ? சிறந்த தவத்தையுடையவர்களும் மங்களகர மான செய்கைகளால் பகவானை ஆராதிக்கின்றவர்களும் யோக ஸித்திபெற்றவர்களும் மகாத்மாக்களும் அஜ்ஞானத்தாலும் மயக் கத்தாலும் விடுபட்டவர்களுமான யதிகள் அந்த இடத்தில் பக்தி யினால் நாராயணரான ஹரியை அடைகிறார்கள். பாரத! அந்த இடத்தில் ஸ்வயம்புவும் மகாத்மாவும் தேவர்களுக்கெல்லாம் தேவ ரும் சாச்வதருமான ஹரியை அடைந்தவர்கள் மீண்டு இந்த உல கத்துக்கு வருகிறதில்லை. [1] பெரும்பாக்கியமுள்ளவனே! இது நித்யமாயும் நாசமற்றதாயும் குறைவற்றதாயுமிருக்கிற ஈச்வரரு டைய ஸ்தானம். யுதிஷ்டிர! எப்பொழுதும் இந்த இடத்தில் இதனை நமஸ்காரம் செய்வாயாக. குருநந்தன! சூரியனும் சந்திரனும் சாச் வதமாக இருக்கிற இந்தமேருவைத் தினந்தோறும் [2] வலமாகச் சுற்றிவருகிறார்கள். குற்றமற்றவனே! மஹாராஜனே! எல்லாச் சோதிக் கிரஹங்களும் மிகுதியின்றி மலைகளுள் சிறந்த மஹா மேருவை நாற்புறமும் வலமாகச் சுற்றிவருகின்றன. இருளைப் போக்குகிற செய்கையுடன் கூடின ஸூர்ய பகவானும் எல் லாச் சோதிக் கிரஹங்களையும் இழுத்துக்கொண்டு இந்த மலையைப் பிரதக்ஷிணம் செய்கின்றான். பிறகு, திவாகரன் அஸ்தமயத்தை அடைந்து பிறகு ஸந்தியைக்கடந்து [3] பர்வஸந்தி களில் பலமுறை வடதிசையை அடைகிறான். பாண்டவ! எல்லாப் பிராணிகளுக்கும் நன்மையைச் செய்வதில் பற்றுதலுள்ள தேவ னான அந்தச் சூரியன் கீழ்த்திசையைநோக்கினவனாக மீண்டும் ஸுமேருபர்வதத்தை அணுகிச் செல்லுகிறான். அப்படியே அந் தச் சந்திரபகவான் நக்ஷத்திரங்களோடுகூடக் காலங்களைப் பல வாறு பகுத்துக்கொண்டு பர்வஸந்திகளில் செல்லுகிறான். சந்திர னும் இவ்வண்ணம் இந்த மகாமேருவைத் தவறாமல் தாண்டிக் காலத்தைப் பலவாறு பகுத்துக்கொண்டு பர்வஸந்திகளில் எல்

1 வேறு பாடம்.

2 'இடமாகச் சென்றுசேரண்டே ஜோதிச்சக்கர வேகத்தினால், குயவனுடைய சக்கரத்தில் எதிர்த்துச் சுற்றும் எறும்புபோல வலமாகச் சுற்றிவருகிறார்கள் என்பது கருத்து' என்பது பழையவுரை.

3 582-ம் பக்கம் குறிப்பிற் காண்க.

லாப் பிராணிகளையும் பிரகாசிக்கச் செய்கின்றவனாகி மறுபடியும் ஸமுத்திரத்தை அடைகிறான். அப்படியே, இருளை நாசம்பண்ணுகிற ஆதித்யதேவன், கிரணங்களால் உலகத்தைப் பிரகாசிக்கச் செய்துகொண்டு, விசாலமான இந்த வழியில் சுற்றிவருகிறான். குளிர்காலங்களை உண்டுபண்ணவேண்டித் தென்திசையை அடைகிறான். அதனால், எல்லாப் பிராணிகளும் குளிர்காலத்தை அடைகின்றன. தென்திசையிலிருந்து திரும்புகின்ற அந்த ஸூர்யன் ஸ்தாவரங்களும் ஜங்கமங்களுமான பொருள்களுடைய தேஜஸ்ஸுகளைத் தன் தேஜஸினால் நன்கு கவர்கிறான். அதனால், வேர்வையும் மனத்தளர்ச்சியும் சோம்பலும் உடல் தளர்ச்சியும் மனிதர்களை அடைகின்றன. பிராணிகளால் எப்பொழுதும் உறக்கமானது அடிக்கடி அனுபவிக்கப்படுகிறது. சூரியபகவான் இவ்வண்ணம் இந்த ஆகாசமார்க்கத்தில் சுற்றிக்கொண்டு பிரஜைகளைப் பிரகாசிக்கச்செய்கின்றவனாக மறுபடியும் மழைகளை உண்டுபண்ணுகிறான். மிக அதிகமான தேஜஸ்ஸுள்ள ஸூர்யன் ஸுகத்தை உண்டுபண்ணுகிற மழைகளாலும் காற்றுக்களாலும் வெப்பத்தாலும் ஸ்தாவரங்களையும் ஜங்கமங்களையும் வளரச் செய்துகொண்டு மீண்டும் திரும்பி வருகிறான். பார்த்த! இவ்வண்ணம் இந்த ஸூர்யன் ஆலஸ்யமில்லாதவனாகக் காலசக்ரத்தில் ஸஞ்சரித்துக்கொண்டும் எல்லாப் பிராணிகளுடைய (ஆயுளையும்) அபஹரித்துக்கொண்டும் சுற்றி வருகிறான். பாண்டவ! இந்தச் சூரியனுடைய கதியானது ஓய்வில்லாதது. இவன் நிற்கிறதில்லை. பிராணிகளுடைய தேஜஸை எடுத்தே மறுபடியும் விடுகிறான். பாரத! எங்கும் வியாபித்திருக்கிற இந்த ஸூர்யன் எப்பொழுதும் எல்லாப் பிராணிகளுடைய ஆயுளையும் செய்கைகளையும் பகுத்துக்கொண்டு பகலையும் இரவையும் விநாடிகளையும் நாழிகைகளையும் உண்டு பண்ணுகிறான்' என்று சொன்னார்.

---

## நூற்றறுபத்தைந்தாவது அத்யாயம்.

## யக்ஷயுத்தபர்வம். (தொடர்ச்சி.)

(இந்திரனிடம் அஸ்திரங்களைக் கற்றறிந்த அர்ஜுனன் ஸ்வர்க்கத்திலிருந்து கந்தமாதனமலையில் வசிக்கின்ற யுதிஷ்டிரர் முதலியவர்களிடம் திரும்பிவந்தது.)

அந்த மலையில் வாஸம்செய்பவர்களும் மஹாத்மாக்களும் நல்ல விரதங்களை அனுஷ்டிப்பவர்களும் அர்ஜுனனுடைய தர்ச

னத்தை விரும்புகின்றவர்களுமான அந்தப் பாண்டவர்களுக்கு ஆவலும் ஸந்தோஷமும் உண்டாயின. வீர்யத்துடன்கூடியவர்களும் மிகவும் சுத்தமான அந்தக்கரணத்தையுடையவர்களும் தேஜஸுள்ளவர்களும் ஸத்தியத்தையும் தைர்யத்தையும் பிரதானமாகக்கொண்டவர்களுமான அந்தப் பாண்டவர்களை நோக்கி நல்ல ப்ரீதியுள்ளவர்களான அநேக கந்தர்வர்களும் மஹரிஷிகளும் கூட்டம் கூட்டமாக வந்தார்கள். புஷ்பங்களும் பழங்களுமுள்ள மரங்களோடு சேர்ந்திருக்கின்ற அந்தச் சிறந்த மலையை அடைந்த மஹாரதர்களான பாண்டவர்களுக்கு ஸ்வர்க்கத்தை அடைந்த தேவகணங்களுக்கு மனத்தெளிவுண்டாவதுபோல நிகரற்ற மனத்தெளிவு உண்டாயிற்று. அவர்கள் மயில்களின் சப்தங்களாலும் அன்னங்களின் சப்தங்களாலும் ஒலியுள்ளவைகளாகச் செய்யப்பட்டவைகளும் புஷ்பங்களால் இறைக்கப்பட்டிருப்பவைகளுமான மிக்க காந்தியுள்ள மலையினுடைய சிகரங்களையும் தாழ்வரைகளையும் பார்த்துக்கொண்டு அதிக ஸந்தோஷத்தை அடைந்திருந்தார்கள். அந்தச் சிறந்த மலையில் மகிமை பொருந்திய குபேரனாலேற்படுத்தப்பட்டவைகளும் மரங்களின் நுனிகள் மறைக்கப்பட்டுக் கொடிகளடர்ந்த புதர்களுடன் கூடியவைகளும் [1] காதம்பங்களாலும் காரண்டவங்களாலும் [2] ஹம்ஸங்களாலும் அடையப்பட்டிருப்பவைகளும் தாமரைமலர்களால் நிறைக்கப்பட்டவைகளுமான ஓடைகளைக் கண்டார்கள். அழகு நிறைந்தவையும் மேடைகளோடு கூடியவையும் நன்றாக அமைக்கப்பட்டவையும் ரத்தினங்களால் நன்கு இழைக்கப்பட்டவையும் அரசனான குபேரனுடைய விளையாட்டிடங்கள்போல மனத்தை மகிழ்விக்கின்றவையுமான விளையாட்டிடங்களில் அவர்கள் வஸித்தார்கள். எப்பொழுதும் தவத்தைப் பிரதானமாகக்கொண்டு ஸஞ்சரிக்கின்ற பாண்டவர்கள் பலநிறங்களுள்ளவைகளும் நறுமணம் பொருந்தியவைகளுமான பெரிய மரங்களாலும் மேகங்களுடைய கூட்டங்களாலும் அடர்ந்திருக்கிற மலையினுடைய சிகரத்தை நினைக்கவும் சக்தியற்றவர்களானார்கள். [3] புருஷஶ்ரேஷ்டரே! அந்தச் சிறந்த மலையினுடைய ஒளியினாலும் அப்படியே மஹிமை பொருந்திய ஓஷதிகளின் பிரகாசத்தாலும் பகல்களுக்கும் இரவு

1 576-ம் பக்கம் 5-வது குறிப்பிற் காண்க.

2 வெண்மையான சிறகும் வட்டமான அங்கங்களுமுள்ள அன்னங்கள் 3 வேறுபாடம்.

களுக்கும் வேறுபாடொன்றும் உண்டாகவில்லை. அந்தப் பர்வதத்திலிருக்கின்றவர்களும் வீரர்களும் புருஷஶ்ரேஷ்டர்களுமான அந்தப் பாண்டவர்கள், எந்த ஸூர்யனை ஆஶ்ரயித்து அக்னியானது ஸ்தாவரங்களையும் ஜங்கமங்களையும் (இராக்காலத்தில்) பிரகாசிப்பிக்கிறதோ அந்த ஸூர்யனுடைய உதயத்தையும் அஸ்தமயத்தையும் அவ்விடத்திலிருந்து பார்த்தார்கள். அந்த வீரர்களான பார்த்தர்கள் ஸூர்யனுடைய உதயாஸ்தமன ஸ்தானங்களையும் அப்படியே உதயகிரியையும் அஸ்தகிரியையும் ஸூர்யனுடைய கிரண ஸமூகங்களால் சூழப்பட்டிருக்கிற திசைகளையும் திக்கோணங்களையும் பார்த்து வேதாத்யயனத்தையும் இடையறாத கர்மானுஷ்டானத்தையுமுடையவர்களாகவும், தர்மத்தைப் பிரதானமாகக்கொண்டவர்களாகவும், சுத்தமான விரதமுள்ளவர்களாகவும், ஸத்யத்தில் நிலைபெற்றவர்களாகவும், ஸத்யத்தைக் கைவிடாதவனும் மகாரதனுமான அந்த அர்ஜுனனுடைய வரவை எதிர்பார்க்கின்றவர்களாகவும், 'அஸ்திரங்களில் விரைவாகத் தேர்ச்சியுற்ற தனஞ்சயனோடு சேர்க்கையைப் பெற்றவர்களாகி நமக்கு இவ்விடத்திலேயே ஸந்தோஷமுண்டாகட்டும்' என்று சிறந்த தங்களுடைய மனோரதங்களைச் சொல்லுகின்றவர்களாகவும் தவத்தையும் யோகத்தையும் பிரதானமாக அனுஷ்டித்துக் கொண்டிருந்தார்கள். மலையில் விசித்திரமான காடுகளைப் பார்த்துக் கிரீடியை அடிக்கடி நினைக்கின்ற அந்தப் பாண்டவர்களுக்கு ஓர் இரவும் பகலும் ஒரு வருஷத்தோடொப்பாகவே இருந்தன. மகாத்மாவான அந்தஜிஷ்ணுவானவன் தௌம்யருடைய அனுமதியினால் சடையை அமைத்துக்கொண்டு சென்றபொழுதே, அவர்களுக்கு ஸந்தோஷம் போய்விட்டது. அவனையே அடைந்த மனமுள்ள பார்த்தர்களுக்கு ஆனந்தம் எப்படி உண்டாகும்? யானைபோல நடப்பவனான அந்த அர்ஜுனன் பிராதாவான யுதிஷ்டிரருடைய கட்டளையினால் காம்யக வனத்தினின்று எப்பொழுது சென்றானோ, அப்பொழுதே, அவர்கள் துக்கத்தால் துன்பமடைவிக்கப்பட்டவர்களானார்கள். பாரதரே! அப்படியே அஸ்திரங்களைக் கற்கவேண்டி இந்திரனை அடைந்த அந்த ஶ்வேதவாகனனை நினைக்கின்ற பாண்டவர்களுக்கு அந்த மலையில் 1 நீண்ட அந்தக் காலமானது அரிதில்சென்றது. அர்ஜுனன் இந்திரனுடைய அரண்

1 'அப்பொழுது ஒரு மாதம் பிரயாஸத்தால் சென்றது' என்பது வேறுபாடத்தின் பொருள்.

மனையில் ஐந்துவர்ஷகாலம் வாஸம்செய்து தேவராஜனிடத்தி னின்று ஆக்னேயமும் வாருணமும் ஸௌம்யமும் வாயவ்யமும் வைஷ்ணவமும் ஐந்திரமும் பாசுபதமும் பிராம்மமும் பாரமேஷ்ட்யமும் ப்ரஜாபதி, யமன், தாதா, ஸவிதா, த்வஷ்டா, வைச்ரவணன் ஆகிய இவர்களுடைய அஸ்திரங்களும் ஆகிய திவ்யாஸ்திரங்களனைத்தையும் இந்திரனிடத்தினின்று அடைந்து அவனை நமஸ்கரித்து அவனால் அப்பொழுது அனுமதி கொடுக்கப்பட்டு அவனைப் பிரதக்ஷிணமும் செய்து ப்ரீதியுடன்கூடியவனாகவும் ஸந்தோஷமுள்ளவனாகவும் கந்தமாதன வரையை வந்தடைந்தான்.

யக்ஷயுத்தபர்வம் முற்றிற்று.

## நூற்றறுபத்தாறுவது அத்யாயம்.

## நிவாதகவசயுத்தபர்வம்.

(அர்ஜுனன் தான் ஸ்வர்க்கத்தில் வஸித்த விதத்தை யுதிஷ்டிரர் முதலியவர்களுக்குச் சுருக்கமாகச் சொல்லியது.)

பிறகு, ஒரு ஸமயத்தில் குதிரைகள் பூட்டப்பட்டதும் விரைவாக வந்ததும் மின்னலொளி போன்ற ஒளி பொருந்தியதுமான இந்திரனுடைய ரதத்தைப் பார்த்து, அர்ஜுனனை நினைத்துக் கொண்டிருக்கிற மகாரதர்களான பாண்டவர்களுக்கு ஸந்தோஷமுண்டாயிற்று. பிரகாசிக்கின்றதும் விரைவாக ஆகாசத்தைப் பிரகாசிக்கச்செய்கின்றதும் மாதலியினால் நடத்தப்படுகின்றதுமான அந்த இந்திரனுடைய ரதமானது மேகத்தின் நடுவிலிருக்கிற பெரிய உற்கைபோலவும், ஜ்வலிக்கின்றதும் புகை இல்லாததுமான அக்னியின் ஜ்வாலைபோலவும் விளங்கியது. கிரீடியானவன் அந்த ரதத்தில் வீற்றிருப்பவனாகக் காணப்பட்டான். மாலையை அணிந்தவனும் புதிய ஆபரணங்களைப் பூண்டவனும் வஜ்ராயுதத்தைத் தரித்த இந்திரனுடைய ப்ரபாவம் போன்ற ப்ரபாவமுள்ளவனுமான தனஞ்சயன் காந்தியினால் ஜ்வலித்துக்கொண்டு கந்தமாதன பர்வதத்தை நோக்கி வந்தான். கிரீடதாரியான அந்த அர்ஜுனன் மலையை அடைந்து அந்த மஹேந்திரனுடைய ரதத்தினின்று இறங்கி முதலில் தௌம்யருடைய பாதங்களில் நமஸ்கரித்தும் அதற்குப் பிறகு அஜாதசத்ருவின் பாதங்களிலும்

விருகோதரனுடைய பாதங்களிலும் வந்தனம்செய்தும் மாத்ரீ புத்திரர்களால் வந்தனம் செய்யப்பட்டும் கிருஷ்ணையை அடைந்து அவளுக்கு இன்சொல் கூறியும் பிராதாவான யுதிஷ்டிரரருகில் வணக்கத்துடன் நின்றான். அங்கே அளத்தற்கரிய மகிமையுள்ள அந்த அர்ஜுனனோடு சேர்க்கைபெற்று அந்தப் பாண்டவர்களுக்கு அதிக ஸந்தோஷம் உண்டாயிற்று. கிரீடதாரியான அவனும் அவர்களைப் பார்த்து யுதிஷ்டிரராஜரைப் புகழ்ந்து ஸந்தோஷித்தான். நமுசி என்கிற அஸுரனைக் கொன்ற இந்திரன் எந்தத் தேரிலேறித் தைத்யர்களுடைய ஏழு கூட்டங்களைக் கொன்றானோ அந்த இந்திரனுடைய தேரினை அடைந்து தளராத மனமுள்ள பார்த்தர்கள் பிரதக்ஷிணம் செய்தார்கள். குருராஜபுத்திரர்களான அவர்கள், அதிக ஸந்தோஷமுள்ளவர்களாக, தேவராஜனுக்குச் செய்வதுபோல மாதலிக்குச் சிறந்த பூஜையைச் செய்தார்கள். உள்ளபடி, தேவர்களுடைய ஸமூக முழுமையையும்பற்றி அந்த மாதலியை முறைப்படி குசலப்ரச்னம் செய்தார்கள். அந்த மாதலியும் அந்தப் பார்த்தர்களுக்கு, தகப்பன் புத்திரர்களுக்கு உபதேசிப்பதுபோல உபதேசித்து மகிழ்ந்தான்; நிகரற்ற ஒளியுடன்கூடின ரதத்தோடு மறுபடியும் தேவராஜனிடம் சென்றான்.

இந்திரனுடைய குமாரனும் எல்லாப் பகைவர்களையும் அழிப்பவனும் ஸாக்ஷாத் இந்திரன்போலப் பிரஸித்திபெற்றவனும் சிறந்த காந்தியுள்ளவனும் மகாத்மாவுமான அர்ஜுனன் அந்தச் சிறந்த தேவரதமானது சென்றபிறகு, இந்திரனால் கொடுக்கப்பட்டவைகளும் அதிக விலைமதிப்புள்ளவைகளும் சிறந்த தோற்றமுள்ளவைகளும் சூரியனைப்போலப் பிரகாசிக்கின்றவைகளுமான பூஷணங்களைத் தன்னுடைய தேகத்தினின்று கழற்றி அன்புடன் ஸுதஸோமனுக்கு மாதாவான திரௌபதிக்குக் கொடுத்தான். பிறகு, அந்த அர்ஜுனன் அந்தக் குருபுங்கவர்களுக்கும் சூரியனும் அக்னியும் போன்ற காந்தியுடையவர்களான பிராம்மணோத்தமர்களுக்கும் நடுவில் உட்கார்ந்து எல்லா விருத்தாந்தங்களையும் உள்ளபடி உரைத்தான். 'என்னால் இவ்வண்ணமாக இந்திரனிடத்தினின்றும் வாயுவினிடத்தினின்றும் ஸாக்ஷாத் சிவபிரானிடத்தினின்றும் அஸ்திரங்கள் கற்றுக்கொள்ளப்பட்டன. அப்படியே என்னுடைய நல்ல ஒழுக்கத்தாலும் ஸமாதியினாலும் இந்திரனோடு சேர்ந்த தேவர்கள் ஒன்றுகூடி என்விஷயத்தில்

பிரியத்தை அடைந்தார்கள்' என்று சொன்னான். பரிசுத்தமான செய்கைகளுள்ள அந்தக் கிரீடியானவன் அவர்களுக்குத் தான் ஸ்வர்க்கத்துக்குச் சென்றதைச் சுருக்கமாகச் சொல்லி மாத்ரீபுத்திரர்களுடன்கூட அந்த இரவில் ஸுகமாக உறங்கினான்.

---

நூற்றறுபத்தேழாவது அத்யாயம்.

## நிவாதகவசயுத்தபர்வம். (தொடர்ச்சி.)

(தம்பிமார்களுடனிருக்கிற யுதிஷ்டிரரிடம் இந்திரன் வந்து ஜயத்தைக் கொடுக்கிற ஆசீர்வசனத்தைக் கூறி மறுபடியும் ஸ்வர்க்கம் சென்றது.)

பிறகு, இரவு விடிந்தவுடன், எல்லாப் பிராதாக்களுடனும் சேர்ந்த தனஞ்சயன் தர்மராஜரான யுதிஷ்டிரரை வந்தனம் பண்ணினான். இந்த ஸமயத்திலேயே, ஆகாசத்தில் தேவர்களுடைய நான்குவிதவாத்தியங்களின் நெருங்கிய ஒலியானது உண்டாயிற்று. பாரதரே! தேரினுடைய சக்கரத்தின் ஓசையும் மணியோசையும் இறைச்சியுண்ணும் மிருகங்கள் மற்ற மிருகங்கள் பறவைகள் இவற்றின் தனித்தனி ஒலியும் எங்கும் தோன்றின. குருவம்சத்தைத் தாங்குபவரே! சத்தம் வந்த வழியை நோக்கின அந்தப் பாண்டவர்கள் தேவர்களோடுகூட ஆகாயவழியால் வருகின்ற இந்திரனைப் பிரியத்துடன் பார்த்தார்கள். பகைவர்களை அடக்குகிற தேவராஜனை அந்தக்கந்தர்வர்களும் அப்படியே அப்ஸரஸுகளும் சூரியனுக்கு ஸமமான விமானங்களோடு நான்குபக்கத்திலும் தொடர்ந்துவந்தார்கள். பிறகு, பகைவர்பட்டணங்களை அழிப்பவனை அந்தத் தேவராஜன் குதிரைகள் பூட்டப்பட்டதும் பொன்னால் அலங்கரிக்கப்பட்டதும் மேகம்போல் ஒலிக்கின்றதுமான ரதத்தின் மீதேறி நிகரில்லாத காந்தியோடு ஜ்வலித்துக்கொண்டு பார்த்தர்களை நோக்கி விரைவாக வந்தான். இந்திரன் வந்து ரதத்திலிருந்து இறங்கினான். மகாத்மாவான அந்த இந்திரனைக் கண்டவுடனே, ஸ்ரீமானும் தர்மத்தால் பிரகாசிப்பவருமான யுதிஷ்டிரர் தம்பிமார்களுடன்கூடத் தேவராஜனை அவனை அடைந்தார். பிறகு, அதிகமான ஔதார்ய குணமுள்ள யுதிஷ்டிரர் அளவுகடந்த புத்தியுள்ளவனை இந்திரனைச் சாஸ்திரத்தில் சொல்லிய செய்கையினால் தக்கவாறு முறைப்படி பூஜித்தார். அதிக தேஜஸுள்ள

தனஞ்சயனும் புரந்தரனை நமஸ்கரித்துத் தேவராஜனுடன் அவ னுடைய ஸமீபத்தில் வேலைக்காரன்போல வணக்கமுள்ளவனாக நின்றான். அதிக தேஜஸுள்ள குந்தீபுத்திரரான யுதிஷ்டிரர் இந்திரனுடைய ஸமீபத்தில் வணக்கத்துடனிருப்பவனும் சடை களைத் தரித்தவனும் தவத்துடன்கூடியவனும் பாவமில்லாதவனு மான அந்தத் தனஞ்சயனை நேரில் பார்த்து அவனுடைய உச்சியை முகர்ந்து அந்தப் பல்குனனுடைய காட்சியினா லுண்டான அதிக ஸந்தோஷத்தால் கவரப்பட்டுத் தேவராஜனைப் பூஜித்து நிகரில்லாத பிரீதியுள்ளவரானார். புத்திமானான புரந்தரன், அவ்வாறு உறுதியான மனமுள்ளவரும் ஆனந்தத்தில் முழுகின வருமான அந்த யுதிஷ்டிரராஜரைப் பார்த்து, 'வேந்தே! பாண்டு நந்தன! நீ இந்தப்பூமியை ஆளப்போகிறாய். குந்தீபுத்திர! நீ க்ஷேமமாக மீண்டு காம்யகவனத்திலுள்ள ஆச்ரமத்தை அடை வாயாக. அரசனே! பரிசுத்தனான அர்ஜுனனால் என்னிடத்தி லிருந்து எல்லா அஸ்திரங்களும் அடையப்பட்டன. தனஞ்சயனால் பிரியமான காரியம் செய்யப்பெற்றவனாக இருக்கிறேன். இந்த அர் ஜுனன் மூன்று உலகங்களாலும் ஜயிக்க முடியாதவன்' என்று சொன்னான். இந்திரன் குந்தீபுத்திரரான யுதிஷ்டிரரைப் பார்த்து இவ்வண்ணம் உரைத்துவிட்டு மகரிஷிகளால் துதிக்கப்படுகின்றவனாக வும் ஸந்தோஷமுள்ளவனாகவும் ஸ்வர்க்கலோகத்திற்குச் சென்றான்.

கற்றறிந்தவனும் ஒரு வருஷம் பிரம்மசர்யத்துடனிருந்த வனும் நியமமுள்ளவனும் கடுமையான விரதமுள்ளவனுமான எந்த மனிதன் தனேச்வரனுடைய மாளிகையிலிருப்பவர்களான பாண்டவர்களுக்கு இந்திரனோடு நேர்ந்த ஸந்தியைச் சொல்லுகிற இந்த அத்யாயத்தை மன அடக்கத்துடன் அத்யயனம் செய் வானோ அவன் துன்பமில்லாதவனும் நல்ல ஸுகமுள்ளவனுமாக நூறு வர்ஷகாலம் உயிர்வாழ்ந்திருப்பான்.

---

## நூற்றறுபத்தேட்டாவது அத்யாயம்.

## நிவாதகவசயுத்தபர்வம். (தொடர்ச்சி.)

(அர்ஜுனன் தனக்குச் சிவவேடனோடு யுத்தம் நடந்ததையும் பாசுபதாஸ்திரத்தைத் தானடைந்ததையும் சொல்லியது.)

இந்திரன் வந்தபடி திரும்பிச் சென்றவுடன், பீபத்ஸுவான வன் பிராதாக்களோடும் திரௌபதியோடும் சேர்ந்து தர்மராஜ

ரைப் பூஜித்தான். நமஸ்கரிக்கின்ற அந்த அர்ஜுனனை உச்சியில் முகர்ந்து மிக்க மனக்களிப்புடன் ஸந்தோஷத்தால் தடுமாற்றமுள்ள வாக்கினால் அவனைப் பார்த்து, 'அர்ஜுன! இந்தக் காலமானது ஸ்வர்க்கத்தில் உனக்கு எவ்வாறு சென்றது? எவ்வாறு அஸ்திரங்கள் அடையப்பட்டன? தேவராஜனும் எவ்வாறு (உன்னால்) ஸந்தோஷப்படுத்தப்பட்டான்? பாண்டவ! அஸ்திரங்கள் உன்னால் நன்றாகக் கற்றுக்கொள்ளப்பட்டனவா? தேவராஜனும் ருத்திரரும் பிரீதியை அடைந்து உனக்கு அஸ்திரங்களைக் கொடுத்தார்களா? இந்திரனும் பிநாகத்தைத் தரித்திருக்கிற பகவானும் எவ்வண்ணம் உன்னால் பார்க்கப்பட்டார்கள்? எவ்விதம் அஸ்திரங்கள் அடையப்பட்டன? எவ்வாறு அவர்கள் உன்னால் ஆராதிக்கப்பட்டார்கள்? பகைவர்களை அடக்குகிறவனே! பகவானான இந்திரன், 'உன்னால் பிரியமான காரியம் செய்யப்பெற்றவனாக இருக்கிறேன்' என்று உன்னை நோக்கிச் சொன்னானே? அப்படிப்பட்ட எந்தப் பிரியமான கார்யம் உன்னால் அவனுக்குச் செய்யப்பட்டது? மிக்க காந்தியுள்ளவனே! நான் இதை விஸ்தாரமாகக் கேட்க விரும்புகிறேன். தோஷமில்லாதவனே! மகாதேவரும் தேவராஜனும் எப்படி மகிழ்ந்தனர்? பகைவரை அடக்குபவனே! தனஞ்சய! இந்திரனுக்கு எந்தப் பிரியமானது உன்னால் செய்யப்பட்டதோ அவ்அனைத்தையும் மிச்சமின்றி எனக்குச் சொல்வாயாக' என்று வினவினார்.

அர்ஜுனன், 'மஹாராஜரே! நான் எந்த விதியினால் தேவனான இந்திரனையும் பகவானான சங்கரரையும் கண்டேனோ அதனை ஸந்தோஷத்துடன் கேளும். அரசரே! பகைவரை அழிப்பவரே! உம்மால் உபதேசிக்கப்பட்ட அந்த வித்தையை அத்யயனம் செய்து உம்மால் கட்டளையிடப்பட்டுத் தவம்புரிவதற்காகக் கானகம் சென்றேன். பிறகு, காம்யகவனத்திலிருந்து ப்ருகுதுங்கத்தை அடைந்து தவம் செய்தேன். ஓர் இரவு அவ்விடத்தில் வஸித்து வழியில் ஒரு பிராம்மணனைக் கண்டேன். அவன் என்னைப் பார்த்து, 'குந்தீநந்தன! நீ எங்கே செல்லுகிறாய்? எனக்குச் சொல்வாயாக' என்று வினவினான். குருநந்தனரே! அவனுக்கு எல்லாவற்றையும் உள்ளபடி உரைத்தேன். ராஜஸ்ரேஷ்டரே! அந்தப் பிராம்மணன் என்னுடைய அந்த உண்மையான வசனத்தைக் கேட்டு என்னைப் புகழ்ந்தான். அரசரே! என்னிடத்தில் அன்புள்ளவனுமானான். பிறகு, பிரீதியுடைய

வனான அந்தப் பிராம்மணன் என்னைப் பார்த்து, 'பாரத! தவத்தைச்செய்வாயாக. தவத்தைச் செய்கின்றவனான நீ விரைவில் தேவராஜனைப் பார்ப்பாய்' என்று சொன்னான். மகாராஜரே! பிறகு, நான் அந்தப் பிராம்மணனுடைய வசனத்தினால் பனி நிறைந்த மலையிலேறி ஒருமாதகாலம் கிழங்குகனிகளைச் சாப்பிட்டுக்கொண்டு தவம் புரிந்தேன். எனக்குத் தண்ணீரைப் பருகி இரண்டாவது மாதமும் சென்றது. பாண்டவர்களை மகிழ்விப்பவரே! பிறகு, மூன்றாவது மாதத்தில் ஆகாரமில்லாதவனாக இருந்தேன். நான்காவதுமாதத்தில் கைகளை உயரத் தூக்கிக்கொண்டு நின்றேன். அப்பொழுதும் எனக்குப் பலம் குறையவேயில்லை. அது ஆச்சர்யமாயிருந்தது. பிறகு, ஐந்தாவது மாதம் வந்து முதல் நாள் செல்லவே, பன்றிவடிவங்கொண்ட ஒரு பிராணியானது பூமியை மூக்கினால் கல்லிக்கொண்டும் கால்களால் பறித்துக்கொண்டும் வயிற்றினால் பூமியை நன்றாகத் தேய்த்துக்கொண்டும் அடிக்கடி [1] இங்குமங்கும் திரிந்துகொண்டும் என்பக்கத்தில் வந்தது. வேடவடிவங்கொண்டதும் வில்லும் அம்புகளும் கத்தியும் தரித்ததும் ஸ்த்ரீகளுடைய கூட்டங்களால் பின்தொடரப்பட்டதுமான வேறொரு பெரிய பூதமானது அப்பொழுது அந்தப் பன்றியைப் பின்தொடர்ந்து வந்தது. பிறகு, நான் வில்லையும் அப்படியே அக்ஷயமான பெரிய தூணீரங்களையும் எடுத்துக்கொண்டு, மயிர்க்கூச்சலை உண்டுபண்ணுகிற அந்தப் பன்றியைப் பாணத்தால் அடித்தேன். கிராதனோ வில்லை வளைத்து இழுத்துப் பூமியை நடுங்கச் செய்துகொண்டு ஒரே ஸமயத்தில் அந்தப் பன்றியை மிக்க திடமாக அடித்தான். அந்த வேடன், என்னைப் பார்த்து, 'அரசனே! என்னால் முந்திக் குறிவைக்கப்பட்ட இந்தப் பன்றியானது, வேட்டை முறையை விட்டு, எதற்காக உன்னால் அடிக்கப்பட்டது? கூருள்ள அம்புகளால் உன்னுடைய கொழுப்பை அழிக்கிறேன். உறுதியாக நில்' என்று சொன்னான். பிறகு, பருத்த தேகமுள்ள அவன் சண்டைசெய்யும் விருப்பத்துடன் என்னை எதிர்த்தோடி வந்தான். பிறகு, அவன் மலைபோல நிற்கிற என்னைப் பெரியபாணங்களால் மிகமூடினான். நானும் அவன்மீது பெரிய அம்புமழையைப் பொழிந்தேன். பிறகு

1 'கெட்ட எண்ணத்துடனிருந்துகொண்டு எனினுமாம்' என்பது பழையவுரை.

நான் ஜ்வலிக்கின்ற வாயுள்ளவைகளும் வில்லில் பூட்டி இழுக்கப்பட்டவைகளுமான அம்புகளால், வஜ்ராயுதங்களால் மலையை அடிப்பதுபோல அவனைத் திருப்பியடித்தேன். அவனுடைய அந்த உருவமானது நூறு விதமும் ஆயிரம் விதமுமாயிற்று. நான் அவனுடைய அந்தச் சரீரங்களையும் அம்புகளால் அடித்தேன். பாரதரே! மறுபடியும் அந்தச் சரீரங்கள் ஒன்றுசேர்ந்தவைகளாகக் காணப்பட்டன. மகாராஜரே! அவைகளை நான் மறுபடியும் அடித்தேன். அரசரே! அவன் பெரிய தலையுள்ள சிறிய உருவமுள்ளவனும் சிறிய தலையுள்ள பெரிய உருவமுள்ளவனுமாகி மறுபடியும் ஒன்றுசேர்ந்து அப்பொழுது யுத்தத்தில் என்னை எதிர்த்தோடிவந்தான். பரதஸ்ரேஷ்டரே! நான் அவனை யுத்தத்தில் அம்புகளால் தோற்கச்செய்யச் சக்தியற்றவனானபொழுது வாயுவைத் தேவதையாகக்கொண்ட மகாஸ்திரத்தை எடுத்தேன். வாயவ்யாஸ்திரத்தால் அவனை அடிப்பதற்குச் சக்தியற்றவனானேன். அது ஆச்சரியமாயிருந்தது. அந்த அஸ்திரமானது முறிய அடிக்கப்பட்டவுடன், எனக்குப் பெரிதும் ஆச்சரியமுண்டாகியது. மகாராஜரே! அந்தச் சமயத்திலும் நான் பெரிய அஸ்திரக்குவியலைப் பூதத்தின் மீது இறைத்தேன். பிறகு, ஸ்தூணாகர்ணத்தையும் வாருணாஸ்திரத்தையும் [1] மிகுதியான அம்பு மழையையும் சலபாஸ்திரத்தையும் அஸ்மவர்ஷத்தையும் ப்ரயோகித்துக்கொண்டு நான் எதிர்த்தேன். அரசரே! என்னுடைய அந்த எல்லா அஸ்திரங்களையும் பலாத்காரத்தால் அந்தப் பூதம் விழுங்கிவிட்டது. அந்த அஸ்திரங்கள் விழுங்கப்பட்டவுடன், பெரிதான பிரம்மாஸ்திரத்தை நான் பிரயோகித்தேன். அதிலிருந்து நன்றாக ஜ்வலிக்கின்ற பாணங்களால் அவனை எல்லாப்பக்கங்களிலும் நிரப்பினேன். மஹாஸ்திரத்தால் நிரப்பப்படுகிற அவன் அப்பொழுது விருத்தியடைந்தான். பிறகு, என்னால் உண்டுபண்ணப்பட்ட தேஜஸினால் மூன்று உலகங்களும் மிகவும் வாட்டப்பட்டன. ஒரு க்ஷணத்தில் திசைகளும் ஆகாயமும் எங்கும் நன்கு ஜ்வலிக்கும்படி செய்யப்பட்டன. மிக்கதேஜஸ்வியான அவன் அந்த அஸ்திரத்தையும் ஒரு நொடியிலே தணியச்செய்துவிட்டான். அரசரே! பிரம்மாஸ்திரமானது நாசம் பண்ணப்பட்டவுடன், என்னைப் பெரும்பயம் வந்தடைந்தது. பிறகு, நான் வில்லையும் அக்ஷய

[1] வேறு பாடம்.

தூணீரங்களையும் எடுத்து விரைவாக அந்தப் பூதத்தை அடித்தேன். அது அந்த அஸ்திரங்களையும் விழுங்கியது. பூதத்தால் இந்த அஸ்திரங்களும் ஆயுதங்களும் பக்ஷிக்கப்பட்டவுடன், எனக்கும் அந்தப் பூதத்துக்கும் கைச்சண்டை நேர்ந்தது. முஷ்டிகளால் ஒருவரை ஒருவர் குத்திச் சண்டைசெய்து உள்ளங்கைகளால் மிக அடிக்கப்பட்டவர்களானோம். அந்தப் பூதமானது என்னைக் கீழே தள்ளியது. நானும் அந்தப் பூதத்தைப் பூமியில் தள்ளினேன். மகாராஜரே! பிறகு, ஆச்சரியமான அந்தப் பூதமானது உரக்கச் சிரித்துக்கொண்டு நான் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே, ஸ்திரீகளோடுகூட அந்த இடத்திலேயே மறைந்தது. மகாராஜரே! [1] பகவானும் தேவேஸ்வரருமான மஹேஸ்வரர், பிறகு, தம்முடைய முக்கியமான வேறு தேவரூபத்தை எடுத்துக்கொண்டு அற்புதமான வஸ்திரத்தை உடுத்தார்; கிராதவடிவத்தை விட்டுத் தமது திவ்ய ஸ்வரூபத்தை ஏற்றுக்கொண்டு அந்த இடத்தில் நின்றார். பிறகு, சிறந்த விருஷபத்தைக் கொடியாகவுடையவரும் அனேக ரூபங்களுள்ளவரும் பிநாகத்தைத் தரித்தவரும் பகவானுமான அந்த ஸாக்ஷாத் பரமசிவன் [2] கையில் வில்லைப் பிடித்துக்கொண்டு நிற்பவராக அப்பொழுது காணப்பட்டார். பிறகு, சூலத்தைக் கையிலேந்தியவரான அந்தப் பரமசிவன் யுத்தத்தில் அப்படியே எதிரில் நிற்கின்ற எனக்கு எதிராகவந்து, 'பகைவரை வாட்டுபவனே! நான் ஸந்தோஷமுள்ளவனாக இருக்கிறேன்' என்று சொன்னார். பிறகு, ருத்ரபகவான் அந்த வில்லையும் அம்புகள் வற்றாத இரண்டு தூணிகளையும் எடுத்து எனக்கே கொடுத்தார். 'குந்தீநந்தன! உன்விஷயத்தில் ஸந்தோஷமுள்ளவனாக இருக்கிறேன். சொல்; உனக்கு நான் எதைச் செய்யக் கடவேன்? வீர! உன்னுடைய மனத்திலிருக்கிறதைச் சொல்வாயாக. வேண்டிய வரன்களை நீ வரிப்பாயாக. நான் அவைகளைக் கொடுக்கிறேன். சாவாமையைத் தவிர மற்ற உன்மனத்திலுள்ள விருப்பத்தைச் சொல்வாயாக' என்று சொன்னார். பிறகு, அஸ்திரங்களில் மனம் வைத்த நான் கைகூப்பி ஈஸ்வரரைத் தலையினால் வணங்கி, பிறகு, 'பகவானான தேவரீர் என் விஷயத்தில் பிரஸன்னராயிருந்தால் தேவர்க

---

1 இரட்டித்தலால் ஒரு சொல் விடப்பட்டது.

2 'உமையை ஸஹாயமாகக்கொண்டு ஸர்ப்பங்களைத் தரித்து' என்பது வேறு பாடத்தின் பொருள்.

ளிடம் எந்த அஸ்திரங்களுண்டோ அவைகளை நான் அறிவதற்கு விரும்புகிறேன். இதுதான் என்னால் விரும்பப்பட்ட வரன்' என்று சொன்னேன். பகவானான முக்கண்ணரும் என்னை நோக்கி, 'அவைகளை நான் உனக்குக் கொடுக்கக் கடமைப்பட்டிருக்கிறேன்' என்றே சொன்னார். பிரபுவான அந்தப் பரமசிவன், 'பாண்டவ! என்னுடையதான ரௌத்ராஸ்திரமானது உன்னை அடையப் போகிறது' என்று சொல்லிப் பிரியத்துடன் பாசுபதாஸ்திரத்தை எனக்குக் கொடுத்தார்; மகாதேவர் சாச்வதமான அஸ்திரத்தை எனக்குக் கொடுத்துவிட்டு, 'அர்ஜுன! இந்த அஸ்திரமானது எவ்விதத்தாலும் மனிதர்கள்மீது பிரயோகிக்கத்தக்கதாகாது. அப்படி அல்பவீர்யமுள்ளவர்களிடம் பிரயோகிக்கப்பட்டால் இந்த அஸ்திரமானது உலகத்தையே எரித்துவிடும். தனஞ்சய! (பகைவர்களால்) மிகத்துன்பப்படுத்தப்படுகின்றவனால் இது பிரயோகிக்கத்தக்கதாகும். அஸ்திரங்கள் முழுமையும் அற்றபோது பிரயோகிப்பாயாக' என்று சொன்னார். பிறகு, விருஷபத்வஜர் பிரஸன்னரானவுடன், தடையற்றதும் திவ்யமானதும் எல்லா அஸ்திரங்களையும் தடுப்பதும் பகைவர்களை அழிப்பதும் பகைவர்களுடைய சேனையை அறுப்பதும் அடையமுடியாததும் தேவர்களாலும் தானவர்களாலும் ராக்ஷஸர்களாலும் தாங்கமுடியாததுமான பாசுபதாஸ்திரமானது உருவமெடுத்துக்கொண்டு என்னுடைய பக்கத்தில் வந்து நின்றது. நான் அந்தப் பரமேச்வரரால் அனுமதி கொடுக்கப்பட்டு அவ்விடத்திலேயே உட்கார்ந்தேன். மஹாதேவர் நான் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே அந்த இடத்திலேயே மறைந்தார்.

---

நூற்றறுபத்தோன்பதாவது அத்யாயம்.

## நிவாதகவசயுத்தபர்வம். (தொடர்ச்சி.)

(அர்ஜுனன் தான் இந்திரலோகத்திற்குப் போனதையும்
அங்கே வஸித்ததையும் இந்திரனிடத்தினின்று
அஸ்திரங்களைப் பெற்றதையும்
சொல்லியது.)

பாரதரே! பிறகு, தேவதேவரும் மகாத்மாவுமான முக்கண்ணருடைய அருளால் பிரீதியுள்ளவனான நான் அந்த இடத்தில் அந்த இரவு முழுதும் வஸித்தேன். அந்த இரவு கழிந்து விடிந்த

வுடன், நான் காலையில் செய்யத்தக்க வைதிக கிரியைகளைச் செய்து முடித்துவிட்டு, எந்தப் பிராம்மணஶ்ரேஷ்டனை முந்திப் பார்த்தேனே அந்தப் பிராம்மணஶ்ரேஷ்டனையே பார்த்தேன். பாரதரே! 'நான் பகவானான மகாதேவரை அடைந்தேன்' என்று அனைத்தையுமே அவனுக்கு நடந்தபடி தெரிவித்தேன். ராஜஶ்ரேஷ்டரே! ப்ரீதியை அடைந்த அந்த ப்ராம்மணோத்தமன் என்னைப்பார்த்து, 'ஒருவராலும் பார்க்கப்பட்டிராத மகாதேவர் உன்னால் பார்க்கப் பட்டார். தோஷமற்றவனே! யமன் முதலிய எல்லா லோகபாலர்களுடனும் சேர்ந்திருக்கிற தேவேந்திரனைப் பார்ப்பாய். அவன் உனக்கு அஸ்திரங்களைக் கொடுப்பான்' என்று சொன்னான். அரசரே! ஸூர்யனுக்குஸமமான அந்தப்ராம்மணன் இவ்வண்ணம் என்னைப் பார்த்துச் சொல்லி அடிக்கடி என்னைத் தழுவிக்கொண்டு தன் னிஷ்டப்படி சென்றான். பகைவரைக் கொல்பவரே! பிறகு, அந்தப் பகலின் பிற்பாதியில் பரிசுத்தமான காற்றானது இந்த உலகத்தை மறுபடியும் புதிதாகச் செய்கின்றதுபோல வீசியது. தேவலோகத்திலுள்ள நறுமணம்பொருந்திய புதியமலர்கள் ஸமீபத்தில் இமயமலையைச் சார்ந்த தாழ்வரையில் தோன்றின. எல்லாப்பக்கங்களிலும் நல்ல சப்தத்துடன்கூடின தேவலோகத்திலுள்ள நான்கு வித வாத்தியங்களும் இந்திரஸம்பந்தமானவையும் மனத்தை மகிழ்விப்பவையுமான ஸ்தோத்திரங்களும் கேட்கப்பட்டன. அப்ஸரஸுகளின் கூட்டங்களும் அப்படியே கந்தர்வர்களின் கூட்டங்களும் தேவதேவனுக்கு எதிரில் எல்லாவிதமான கானங்களையும் பாடின. இந்திரனுடைய வேலைக்காரர்களும் தேவராஜனுடைய அரண்மனையில் வஸிக்கிற இந்திராணி ஜயந்தன் முதலியவர்களும் தேவர்களுடைய கூட்டங்களும் விமானங்களோடு அந்த இடத்தில் வந்தனர். பிறகு, இந்திரன் இந்திராணியுடன்கூடினவனாக ரதத்தில் பூட்டப்பட்டவையும் நன்றாக அலங்கரிக்கப்பட்டவையும் பசுமை நிறமுள்ளவையுமான குதிரைகளுடனும் எல்லாத் தேவர்களுடனும் அப்பொழுது அங்குவந்தான். அரசரே! இதே ஸமயத்தில் மனிதர்களை வாகனமாகக்கொண்ட குபேரன் ஒப்பற்ற காந்தியுடன் எனக்குக் காட்சிகொடுத்தான். தென்திசையில் நிலைபெற்றிருக்கிற யமனையும் தன் தன் ஸ்தானத்திலிருக்கிற வருணனையும் தேவராஜனையும் பார்த்தேன்.

மஹாராஜரே! அந்தத் தேவஶ்ரேஷ்டர்கள் எனக்கு இன் சொற்கூறி, 'ஸவ்யஸாசியே! நேரில் நிற்கின்ற லோகபாலர்களான

எங்களை நன்றாகப்பார். தேவகார்யத்தின்பயன் கைகூடும்பொருட்டுச் சங்கரரை நீ கண்டவனாக இருக்கிறாய். நீ எங்களிடத்தினின்றும் அஸ்திரங்களெல்லாவற்றையும் பெற்றுக்கொள்' என்று சொன்னார்கள். பிறகு, நான் பரிசுத்தனாக இருந்துகொண்டு தேவஸ்ரேஷ்டர்களைத் தண்டனிட்டு அப்பொழுது பலவித மஹாஸ்திரங்களைப் பெற்றுக்கொண்டேன். பாரதரே! அஸ்திரங்களைப் பெற்றுக்கொண்ட நான், பிறகு, தேவர்களால் அனுமதி கொடுக்கப்பட்டவனானேன். பகைவர்களை அடக்குகிறவரே! பிறகு, தேவர்களனைவரும் வந்தவண்ணம் திரும்பிச் சென்றார்கள். அதிக கீர்த்தியுள்ள தேவனான இந்திரபகவானும் என்னை நல்ல ஒளிபொருந்திய தேரிலேற்றிவைத்துக்கொண்டு புன்சிரிப்புடன், 'தனஞ்சய! இங்கு வருவதற்குமுந்தியே நான் உன்னை அறிவேன். பரதஸ்ரேஷ்டனே! நானோ இதற்குப்பின்னும் உன்னைப் பார்ப்பேன். முன்பு உன்னால் தீர்த்தங்களில் அடிக்கடி ஸ்நானம் செய்யப்பட்டிருக்கிறது. பாண்டவ! இந்தப் பெரிய தவமும் செய்யப்பட்டது. ஸ்வர்க்கத்தைச் சீக்கிரம் நீ அடையப்போகிறாய். ஒருவராலும் அநுஷ்டிக்கமுடியாததும் கோரமானதும் உன்னுடைய அஸ்திரங்களுக்கும் தவத்துக்கும் வலிமையை உண்டுபண்ணக்கூடியதுமான உத்தமமான தவத்தை நீ மறுபடியும் செய்வாயாக. பகைவர்களை நாசம் செய்பவனே! நீ ஸ்வர்க்கத்துக்கு அவஸ்யம் வரவேண்டும். என்னுடைய கட்டளையினால் மாதலியானவன் உன்னை ஸ்வர்க்கத்தை அடையும்படி செய்வான். பாண்டவஸ்ரேஷ்டனே! ஒருவராலும் செய்யமுடியாத தவத்தைச் செய்துகொண்டு நீ இங்கிருப்பவனாக மகாத்மாக்களான தேவர்களாலும் முனிவர்களாலும் அறியப்பட்டிருக்கிறாய்' என்று சொன்னான்.

பிறகு, நான் இந்திரனை நோக்கி, 'பகவானே! என் விஷயத்தில் அனுக்ரஹம் செய்யவேண்டும். தேவராஜனே! நான் உன்னை அஸ்திரங்களைக் கற்பதற்காக ஆசார்யனாக வரிக்கிறேன்' என்று சொன்னேன். இந்திரன், 'ஐயா! பகைவர்களைத் தவிக்கச்செய்பவனே! குரூரமான காரியங்களைச்செய்கிற அஸ்திரங்களை அறிந்தவனாவாய். பாண்டவ! எதற்காக நீ அஸ்திரங்களை அடைவதற்கு விரும்புகிறாயோ அந்த விருப்பத்தை அடைவாயாக' என்று சொன்னான். பிறகு, நான், 'பகைவரைக் கொல்பவனே! மற்ற அஸ்திரங்கள் முறிய அடிக்கப்பட்டு வீணாகப்போனாலொழியத் திவ்யாஸ்திரங்களை மனிதர்கள் மீது பிரயோகிக்கமாட்டேன். தேவர்களுக்கு அதிபதியே! அந்தத்

திவ்யாஸ்திரங்களை எனக்குக் கொடு. தேவர்களுள் சிறந்தவனே! பிறகு, அஸ்திரங்களால் ஜயிக்கப்பட்ட உலகங்களை அடையக் கடவேன்' என்று வேண்டினேன். இந்திரன், 'தனஞ்சயனே! உன்னைப் பரீக்ஷிப்பதற்காக என்னால் இந்தவாக்கியமானது உரைக்கப்பட்டது. என்னுடைய புத்திரனான உனக்கு இந்த வசனமானது மிகப் பொருத்தமுள்ளது. பாரத! என்னுடைய மாளிகையை அடைந்து என்னிடத்தினின்று எல்லா அஸ்திரங்களையும் கற்றுக் கொள். குருவம்சத்தைத் தாங்குபவனே! வாயுவினிடத்தினின்றும் அக்னியினிடத்தினின்றும் வஸுக்களிடத்தினின்றும் மருத்துக்களுடையகணத்துடன் கூடின வருணனிடத்தினின்றும் அடையத்தக்க அஸ்திரங்களையும் பிரம்மாஸ்திரத்தையும் காந்தர்வாஸ்திரத்தையும் நாகாஸ்திரத்தையும் ராக்ஷஸாஸ்திரத்தையும் விஷ்ணுவைத் தேவதையாகக்கொண்ட எல்லா அஸ்திரங்களையும் அப்படியே நிருருதியைத் தேவதையாகவுடைய அஸ்திரங்களையும் என்னிடத்திலுள்ள மற்ற எல்லா அஸ்திரங்களையும் அறிந்து கொள்வாயாக' என்று இவ்வண்ணம் என்னைப் பார்த்து உரைத்து அந்த இடத்திலேயே மறைந்தான்.

வேந்தரே! பிறகு, குதிரைகள் பூட்டப்பட்டதும் தேவலோகத்ததும் மிக ஆச்சர்யமானதும் புண்யமானதும் மாதலியினால் நடத்தப்பட்டதுமான இந்திரனுடைய ரதம் அருகில் வந்திருப்பதைப் பார்த்தேன். லோகபாலர்கள் சென்றபிறகு, மாதலியானவன் என்னைப்பார்த்து, 'மகாதேஜஸுடன் கூடியவனே! தேவராஜனான இந்திரன் உன்னைப் பார்க்க விரும்புகிறான். மிக்க புஜபலமுள்ளவனே! நீ நன்றாக ஸித்திபெற்று நிகரற்ற கார்யத்தைச் செய்வாயாக. நல்வினையைச் செய்தவர்களாலடையத்தக்க உலகங்களைப்பார். சரீரத்துடனே ஸ்வர்க்கத்தை அடைவாயாக. பாரத! ஆயிரம் கண்களையுடையவனான தேவராஜன் உன்னைப் பார்க்க விரும்புகிறான்' என்று சொன்னான். மாதலியினால் இவ்வாறு சொல்லப்பட்ட நான் இமயமலையினிடம் விடைபெற்றுக் கொண்டு ஒப்பற்ற ரதத்தை வலமாகச்சுற்றிவந்து அதிலேறினேன். குதிரைகளின் இயல்புகளை உள்ளபடி அறிந்தவனும் மிக்க ஸமர்த்தனும் ஸாரதியுமான அந்த மாதலியானவன் வாயுவேக மனோவேகமுள்ள குதிரைகளை ஓட்டினான். பிறகு, அந்த ஸாரதியானவன் (ரதத்தில்) உறுதியாக இருக்கிற என்னுடைய முகத்தைப் பார்த்தான். அரசரே! ரதமானது அப்படிச் சுழலவே, ஆச்சர்யமடைந்

தவனாக என்னைப் பார்த்து, 'அர்ஜுன! திவ்யரதத்தில் வீற்றிருக்கிற நீ இருந்த இடம் விட்டுச் சிறிதும் அசையாமலிருக்கிறாயென்னும் மிக்க ஆச்சரியமான உன்னுடைய இந்த இருப்பானது இப்பொழுது எனக்கு விசித்ரமாகத் தோன்றுகிறது. பரதஸ்ரேஷ்டனே! குதிரைகள் முதலில் தாவும்போது இந்தரதத்தில் தேவராஜன்கூட அசைகின்றதை நான் தினமும் கண்டிருக்கிறேனன்றோ? குருக்களைத் தாங்குகிறவனே! நீயோ சுழலுகின்ற இந்த ரதத்தில் அசைவற்றவனாகவே இருக்கிறாய். உன்னுடையதான இதெல்லாம் இந்திரனுடைய செய்கையை மீறி இருப்பதாக எனக்குத் தோன்றுகிறது' என்று சொன்னான். வேந்தரே! பாரதரே! மாதலியானவன் இவ்வண்ணமுரைத்து ஆகாயத்தில் பிரவேசித்து, தேவர்களுடைய மாளிகைகளையும் விமானங்களையும் எனக்குக் காண்பித்தான். புருஷஸ்ரேஷ்டரே! குதிரைகளுடன் பூட்டப்பட்டிருக்கிற அந்த ரதமானது அந்த இடத்தினின்று மேலே எழும்பிச்சென்றது. ரிஷிகளும் தேவதைகளும் பூஜித்தார்கள். பிறகு, விரும்பினபடி செல்லக்கூடிய தேவரிஷிகளுடைய உலகங்களையும் அளவுகடந்த சக்தியுள்ள கந்தர்வர்கள் அப்ஸரஸுகள் இவர்களுடைய பிரபாவத்தையும் பார்த்தேன். இந்திர ஸாரதியான மாதலியானவன் நந்தனம் முதலிய தேவர்களுடைய வனங்களையும் உபவனங்களையும் எனக்குச் சீக்கிரமாகக் காண்பித்தான். பிறகு, தேவலோகத்திலுண்டானவையும் இஷ்டமான பலன்களைக் கொடுப்பவையுமான மரங்களாலும் ரத்தினங்களாலும் நன்கு அலங்கரிக்கப்பட்டிருக்கிற இந்திரனுடையவாஸஸ்தானமான அமராவதியைக் கண்டேன். வேந்தரே! அந்த நகரியைச் சூரியன் [1] காய்கிறதில்லை. அங்கே சீதோஷ்ணங்களில்லை; வாட்டமில்லை. அந்த இடத்தில் ரஜோகுணமானது ஒருவரையும் துன்பப்படுத்துகிறதில்லை; மூப்பும் இல்லை. அந்த இடத்தில் சோகமாவது எளிமையாவது நிறம்மாறுதலாவது காணப்படுகிறதில்லை. மகாராஜரே! பகைவரை நொறுக்குபவரே! தேவர்களுக்குக் களைப்பு இல்லை. பிரஜைகளுக்கு நாதரே! அந்த இடத்தில் கோபமாவது லோபமாவது அமங்களமாவது இல்லை. வேந்தரே! தேவர்களுடைய வாஸஸ்தானமான ஸ்வர்க்கத்தில் அந்தத் தேவர்கள் நித்யம் மகிழ்ச்சியுள்ளவர்களாக இருக்கிறார்கள். அந்தஸ்வர்க்கத்தில் மரங்கள் எப்பொழுதும் புஷ்பங்களும் பழங்களுமுள்ளவை

1 வேறு பாடம்.

களாகவும் பசுமையான இலைகளுள்ளவைகளாகவும் இருக்கின்றன. பலவிதமான ஓடைகள் தாமரைமலர்களோடும் ஸௌகந்திகமலர்களோடும் என்றும் சேர்ந்திருக்கின்றன. அந்த இடத்தில் குளிர்ந்ததும் நல்ல வாஸனையுள்ளதும் [1] உற்சாகத்தைத் தருவதும் பரிசுத்தமுமான காற்று வீசிற்று. தரையானது எல்லா ரத்தினங்களாலும் பலநிறமுள்ளதாகவும் புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்டதாகவுமிருக்கிறது. பல மிருகங்களும் பட்சிகளும் அழகியவைகளாகவும் இனிய குரலுள்ளவைகளாகவுமிருக்கின்றன. அந்த இடத்தில் அனேக தேவர்கள் விமானங்களால் ஸஞ்சரிப்பவர்களாகக் காணப்படுகிறார்கள். பிறகு, வஸுக்களையும் ருத்திரர்களையும் ஸாத்தியர்களையும் மருத்கணங்களுடன் கூடின தேவர்களையும் அச்விநீதேவர்களையும் கண்டேன். அவர்களனைவரையும் பூஜித்தேன். அவர்கள் என்னை, 'வீர்யத்தோடும் கீர்த்தியோடும் தேஜஸோடும் பலத்தோடும் அஸ்திரங்களோடும் யுத்தத்தில் விஜயத்தோடும் சேரக்கடவை' என்று அனுக்ரஹித்தார்கள். திவ்யமானதும் தேவர்களாலும் கந்தர்வர்களாலும் பூஜிக்கப்பட்டதுமான அந்த நகரியில் பிரவேசித்து ஆயிரம்கண்ணனை தேவராஜனைக் கைகூப்பித் துதித்தேன். கொடையாளிகளுள் சிறந்தவனான இந்திரன் மகிழ்ந்து எனக்குத் தன்னுடைய ஆஸனத்தில் பாதியைக் கொடுத்தான். இந்திரன் நன்மதிப்புடன் என்னுடைய சரீராவயவங்களைத் தடவிக்கொடுத்தான். பாரதரே! நான் அந்த ஸ்வர்க்கத்தில் மிக்க உதாரர்களான தேவர்களோடும் கந்தர்வர்களோடும் கூடி அஸ்திரங்களை அறிவதற்காக அவற்றைக் கற்றுக்கொண்டு ஸ்வர்க்கத்தில் வஸித்தேன். விச்வாவஸுவின் குமாரனான சித்திரஸேனன் எனக்குத் தோழனானான். அரசரே! அவன் என்னைக் காந்தர்வவித்தை அனைத்தையும் கற்றுக்கொள்ளும்படி செய்தான். அரசரே! நான் அஸ்திரங்களைக் கற்றுக்கொண்டும் நன்கு கௌரவிக்கப்பெற்றும் விரும்பிய எல்லாவற்றுடனும் சேர்ந்தும் ஸ்வர்க்கத்தில் இந்திரனுடைய அரண்மனையில் ஸுகமாக வஸித்தேன். பரதச்ரேஷ்டரே! பாரதரே! பாட்டொலியையும் சிறந்த தூர்யவாத்தியங்களின் முழக்கத்தையும் கேட்டுக்கொண்டும் சிறந்த அப்ஸரஸுகள் நடிப்பதைப் பார்த்துக்கொண்டும் அவை அனைத்தையும் அலட்சியம் செய்யாமல் உள்ளபடி புருஷார்த்தமென்று கருதிக் கிரகித்துக்கொண்டும் அஸ்திரங்களிலேயே நிலைபெற்றிருந்

---

1 வேறு பாடம்.

தேன். பிறகு, பிரபுவான ஆயிரங்கண்ணனான இந்திரன் எனக்கு அஸ்திரங்களிலுள்ள அந்த விருப்பத்தால் ஸந்தோஷமடைந்தான். வேந்தரே! ஸ்வர்க்கத்தில் வசிக்கின்ற எனக்கு இந்தக் காலம் இவ்விதம் சென்றது.

---

## நூற்றேழுபதாவது அத்யாயம்.

## நிவாதகவசயுத்தபர்வம். (தொடர்ச்சி.)

(அஸ்திரவித்தை கற்று முடிந்தவுடன், நிவாதகவசர்களுடைய வதத்தைக் குருதக்ஷிணையாகக் கேட்ட இந்திரனுடைய விருப்பத்தை நிறைவேற்றுதற்காக அர்ஜுனன் புறப்பட்டது.)

பிறகு, அதிக நம்பிக்கைகொண்ட மஹேந்திரன் அஸ்திரங்களைக் கற்றறிந்தவனான என்னை இருகைகளாலும் தலையில் நன்றாகத் தொட்டுக்கொண்டு, 'அர்ஜுன! நீ இப்பொழுது தேவர்களுடைய கூட்டங்களாலும் யுத்தத்தால் ஜயிக்கமுடியாதவன். அவ்வாறிருக்க, மானிடலோகத்தில் திவ்யாஸ்திரப்பயிற்சி பெறாத மனிதர்களால் எவ்வாறு ஜயிக்கத்தக்கவனாவாய்? நீ அளத்தற்கரிய சக்தியுள்ளவன். ஒருவராலும் ஜயிக்க முடியாதவன். அப்படியே, யுத்தங்களில் நிகரில்லாதவன். நீ யுத்தத்தில் தேவாஸுரர்களனைவராலும் ஜயிக்க முடியாதவனன்றோ?' என்று சொன்னான். பிறகு, மீண்டும், மஹேந்திரன் மிக்க புளகமுற்று, 'வீர! அஸ்திரயுத்தத்தில் உனக்கு ஸமானனாக ஒருவனும் இரான். கௌரவர்களுள் சிறந்தவனே! நீ எப்பொழுதும் அஜாக்கிரதை இல்லாதவன்; ஸாமர்த்தியமுள்ளவன்; உண்மை பேசுகிறவன்; இந்திரியங்களை அடக்கினவன்; பிராம்மணர்களுக்கு நன்மையைச் செய்பவன்; அஸ்திரங்களை நன்கு அறிந்தவனாகவுமிருக்கிறாய்; சூரனாகவுமிருக்கிறாய். பார்த்த! உன்னால் பதினைந்து அஸ்திரங்கள் நன்கு அடையப்பட்டன. ஐந்துவிதிகளால் உனக்கு ஸமானனான மனிதன் இல்லை. தனஞ்சய! நீ பிரயோகிப்பதையும், திருப்பியழைப்பதையும், திரும்பத் திரும்பப் பிரயோகித்துத் திருப்பியழைப்பதையும், [1] பிராயச்சித்தத்தையும் பகைவனுடைய அஸ்திரத்தினாலடிக்கப்

1 'அஸ்திராக்கினியினால் எரிக்கப்பட்ட குற்றமற்றவர்களை மறுபடி பிழைப்பித்தல்' என்பது பழையவுரை.

பட்ட தன்னுடைய அஸ்திரத்தை மறுபடி மிகப் பிரகாசிக்கச் செய்தலையும் எல்லாவிதத்தாலும் அறிந்திருக்கிறாய். பகைவர்களைத் தவிக்கச் செய்பவனே! நீ குருதக்ஷிணை கொடுப்பதற்குக் காலம் இதோ நேர்ந்திருக்கிறது. அதைச் செய்வதற்கு நீ உறுதி கூறுவாயாக. நான் பிறகு செய்யவேண்டிய காரியத்தைத் தெரிவிப்பேன்' என்று சொன்னான்.

வேந்தரே! பிறகு, நான் தேவராஜனைப் பார்த்து, 'என்னால் எது செய்வதற்கு ஸாத்தியப்படுமோ அந்தக் கார்யத்தைச் செய்யப்பட்டதென்றே நீ தெரிந்துகொள்' என்னும் இந்த வசனத்தைச் சொன்னேன். வேந்தரே! பிறகு, பலனையும் விருத்ரனையும் கொன்றவனான இந்திரன் உரக்கச் சிரித்து என்னைப்பார்த்து, 'மூவுலகங்களிலும் உனக்குச் செய்யத்தகாதது ஒன்றுமே இல்லை. ஒத்த உருவமும் பலமும் ஒளியுமுள்ளவர்களும் பிரசித்திபெற்றவர்களும் எனக்குப் பகைவர்களுமான நிவாதகவசர்களென்கிற மூன்றுகோடி அஸுரர்கள் ஸமுத்திரத்தின் நடுவை அடைந்து பிரவேசிக்கமுடியாத இடத்தில் வசிக்கின்றார்கள். குந்தீ நந்தன! அந்த இடத்திலிருக்கிற அவர்களைக் கொல்வாயாக. அது உன்னுடைய குருதக்ஷிணையாகும்' என்று சொன்னான். பிறகு, இந்திரன் மாதலியுடன்கூடியதும் மயில்நிறம்போன்ற நிறமுள்ள மயிர்களையுடைய குதிரைகள் பூட்டியதும் அதிக ஒளிபொருந்தியதுமான திவ்யரதத்தை எனக்குக் கொடுத்தான். என்னுடைய தலையில் இந்த உத்தமமான கிரீடத்தையும் சூட்டினான். தன் உருவத்திற்குத் தகுந்த அங்கபூஷணத்தையும் உடைக்க முடியாததும் தொடுதற்கினியதும் அழகியதுமான உத்தமமான இந்தக் கவசத்தையும் கொடுத்தான். பழையதாகாத இந்த நாண்கயிற்றையும் காண்டீவத்தில் நன்றாகக் கட்டிக்கொள்ளும்படி செய்தான். பிறகு, முற்காலத்தில் தேவராஜன் எந்தரதத்தால் விரோசனனுடைய புத்திரனான பலியை ஜயித்தானோ அப்படிப்பட்ட பிரகாசிக்கின்ற ரதத்தோடு நான் யுத்தத்திற்காகச் சென்றேன். பிரஜைகளுக்கு அதிபதியே! பிறகு, அந்த ரதகோஷத்தால் யுத்த யாத்திரையை அறிவிக்கப்பட்டவர்களான எல்லாத் தேவர்களும் என்னைத் தேவராஜனென்று எண்ணிவந்தார்கள். அவர்கள் என்னைப்பார்த்து, 'பல்குன! நீ என்ன செய்யப்போகிறாய்?' என்று கேட்டார்கள். நான் அவர்களைப்பார்த்து நடந்ததைச் சொன்னேன். 'யுத்தத்தில் இதைச் செய்யப்போகிறேன். மகாபாக்கியசாலிகளே! நிவாத

கவசர்களுடைய வதத்தை விரும்பிப் புறப்பட்டவனாக என்னைத் தெரிந்துகொள்ளுங்கள். தோஷமில்லாதவர்களே! எனக்கு மங்களத்தை விரும்புங்கள்' என்று சொன்னேன். பூமிக்குத் தலைவரே! பிறகு, பிரஸன்னர்களான அந்தத்தேவர்கள் சிறந்தவாக்குக்களால் தேவனான புரந்தரனைத் துதிப்பதுபோல என்னைத் துதித்தார்கள். 'இந்திரன் இந்த ரதத்தால் யுத்தத்தில் சம்பரனையும் நமுசியையும் பலனையும் விருத்ரனையும் பிரஹ்லாதனையும் நரகனையும் ஜயித்தான். இந்திரன் யுத்தத்தில் இந்த ரதத்தால் ஆயிரக் கணக்காகவும் பதினாயிரக்கணக்காகவும் [1] அர்ப்புதக் கணக்காகவுமுள்ள அஸுரர்களையும் ஜயித்தான். குந்தீநந்தன! நீயும் இந்த ரதத்தால் முற்காலத்தில் பிரபுவான இந்திரன்ஜயித்தது போல யுத்தத்தில் பராக்கிரமத்தை வெளியிட்டு நிவாதகவசர்களை ஜயிப்பாய். எதனால் அஸுரர்களை ஜயிப்பாயோ அப்படிப்பட்ட சிறந்த சங்கம் இதோ இருக்கிறது. மகாத்மாவான இந்திரனாலும் இதனால் உலகங்கள் ஜயிக்கப்பட்டன' என்று சொன்னார்கள். அப்பொழுது தேவர்களால் துதிக்கப்படுகின்றவனாகித் தேவர்களால் கொடுக்கப்பட்ட தேவதத்தமென்கிற இந்தச் சங்கத்தை நான் பெற்றுக்கொண்டேன். அப்படிப்பட்ட நான் சங்கத்தைக் கையில் பிடித்தவனாகவும் கவசமணிந்தவனாகவும் பாணங்களுள்ளவனாகவும் விற்பிடித்தவனாகவும் யுத்தம் செய்யும் விருப்பத்தால் மிகவும் உக்கிரமான தானவர்களுடைய வாஸஸ்தானத்தைக் குறித்துச் சென்றேன்.

## நூற்றெழுபத்தோராவது அத்யாயம்.

## நிவாதகவசயுத்தபர்வம். (தொடர்ச்சி.)

**(பார்த்தன் நிவாதகவசர்களுடன் யுத்தம்செய்ய விரும்பி மாதலியினால் செலுத்தப்படும் இந்திரரதத்துடன் அவர்களுடைய பட்டணம் சென்றதும், அர்ஜுனனுடைய சங்க முழக்கத்தினால் ஸன்னத்தர்களான அவர்களோடு அவன் சண்டை தொடங்கியதும்.)**

பிறகு, நான், ஆங்காங்கு, தேவர்களாலும் ரிஷிகளாலும் துதிக்கப்படுகின்றவனாகிப் பயங்கரமானதும் குறைவில்லாததும்

---

1 ஸபாபர்வம் 276-ம் பக்கம் குறிப்பிற் காண்க.

ஜலங்களுக்கு நாதனுமான ஸமுத்திரத்தைக் கண்டேன். நுரை யுள்ளவையும் சிதறுகின்றவையும் மோதுகின்றவையும் மிக எழும்பினவையுமான அலைகள் அந்த ஸமுத்திரத்தில் அசைந்துகொண்டிருக்கின்ற மலைகள்போலக் காணப்பட்டன. அந்த ஸமுத்திரத்தில் ரத்தினங்களால் நிறைக்கப்பட்ட கப்பல்கள் ஆயிரமாயிரமாக ஆகாயத்தில் விமானங்கள் ஸஞ்சரிப்பதுபோல எங்கும் ஸஞ்சரித்துக்கொண்டு விளங்கின. அந்த ஸமுத்திரத்தில் திமிங்கிலங்களும் ஆமைகளும் திமிதிமிங்கிலங்களும் சுறுமீன்களும் ஜலத்தில் மூழ்கி இருக்கிற மலைகள்போலக் காணப்பட்டன. இரவில் மெலிவான மேகத்தால் மூடப்பட்டிருக்கிற நக்ஷத்திரங்கள்போல எல்லாப் பக்கங்களிலும் ஜலத்தில் முழுகி இருக்கின்ற ஆயிரக்கணக்கான சங்கங்கள் காணப்பட்டன. அப்படியே, அந்த ஸமுத்திரத்தில் ஆயிரமாயிரமாக ரத்னங்களின் குவியல்கள் மிதந்தன. பயங்கரமான வாயுவும் சுழன்று வீசியது. அது ஆச்சரியமாயிருந்தது. மிக்கவேகமுள்ளதும் எல்லாத்தீர்த்தங்களுக்கும் நிதியும் சிறந்ததுமான அந்த ஸமுத்திரத்தைத்தாண்டி ஸமீபத்தில் தானவர்களால் வியாபிக்கப்பட்டிருக்கிற அந்த அஸுரர்களுடையபட்டணத்தைக் கண்டேன். மாதலியானவன் அந்த இடத்திலேயே ரதத்தின் கோஷத்தால் பூமியில் தானவர்களை விரைவாகக் கீழே விழும்படி செய்து அந்த நகரத்தில் விரைவாக ரதத்தை நடத்தினன். தானவர்கள் ஆகாயத்தில் மேகத்தின் இடிமுழக்கம்போன்ற அந்த ரதத்தின் சப்தத்தைக்கேட்டு என்னைத் தேவராஜனுகை எண்ணிப் பயம் மிக்கவர்களானர்கள். எல்லாரும் பரபரப்புள்ள மனத்துடன் அம்புகளையும் விற்களையும் தரித்து அப்படியே கத்திகளையும் சூலங்களையும் கோடாலிகளையும் கதைகளையும் உலக்கைகளையும் கையில் எடுத்துக்கொண்டு நின்றார்கள். பிறகு, தானவர்கள் பயந்த மனமுள்ளவர்களாகி வாயில்களை மூடினர்கள். நகரத்தில் காவலை நன்றாக அமைத்துவிட்டு, ஒருவனும் வெளியேகாணப்படவில்லை. பிறகு, நான் பேரொலியுள்ள தேவதத்தமென்கிற சங்கத்தை எடுத்து அதிக ஸந்தோஷத்தை அடைந்து அதை மெதுவாக ஊதினேன். அந்தச் சத்தமோ ஆகாயத்தில்பரவி எதிரொலியை உண்டுபண்ணியது. மிகப் பெரிய பிராணிகளும் அதிகமாகப்பயந்தன; ஒளிந்தன. பாரதரே! பிறகு, திதியின் புத்திரர்களான நிவாதகவசர்களனைவருமே ஸந்நத்தர்களும் பலவிதக் கவசங்களுடன்கூடியவர்களும் விசித்திரமான ஆயுதங்களைக் கைகளில்

பிடித்தவர்களும் உருக்குமயமான பெரிய சூலங்களோடும் கதாயுதங்களோடும் உலக்கைகளோடும் பட்டஸங்களோடும் கத்திகளோடும் ரதசக்கரங்களோடும் சதக்னிகளோடும் புசுண்டிகளோடும் பலவிதமானவையும் நன்கு அலங்கரிக்கப்பட்டவையும் நன்கு பிடிக்கப்பட்டவையுமான கத்திகளோடும் ஆயிரமாயிரமாகத் தோன்றினார்கள். பரதஸ்ரேஷ்டரே! பிறகு, மாதலியானவன் அந்தக் குதிரைகளை ரதமார்க்கங்களில் பலவாறாக நடத்தி ஸமமான இடத்தில் விரைவாக ஓட்டினான். அந்த மாதலியினால் நன்றாக ஓட்டப்பட்டு விரைவாகச் செல்லுகிற அந்தக் குதிரைகளின் வேகத்தால் அப்பொழுது [1] ஒன்றையும் நான் பார்க்கவில்லை. அது எனக்கு ஆச்சரியமாயிருந்தது. பிறகு, அந்தத் தானவர்கள் அந்த இடத்தில் விகாரமான குரலும் உருவமுமுள்ள போர்வீரர்களுடைய கூட்டங்களனைத்தையும் பலவாறு யுத்தத்திற்காக மிகத் தூண்டினார்கள். அந்தச் சத்தத்தால் மலைபோன்ற லக்ஷக்கணக்கான மீன்கள் அறிவிழந்து ஸமுத்திரத்தில் பயந்தோடின. பிறகு, தானவர்கள் நூறுநூறாகவும் ஆயிரமாயிரமாகவும் கூர்மையுள்ள பாணங்களைப் பிரயோகித்துக்கொண்டு அதிவேகத்துடன் என்னை நோக்கி அருகில் ஓடிவந்தார்கள். பாரதரே! அவர்களுக்கும் எனக்கும் அதிகோரமானதும் நிவாதகவசர்களுக்கு முடிவைச் செய்கிறதுமான அப்படிப்பட்ட ஸங்குலயுத்தமானது நடந்தது. பிறகு, அந்த மகாயுத்தத்தைப் பார்ப்பதற்காகத் தேவரிஷிகளும் தானவரிஷிகளின் கூட்டங்களும் பிரம்மரிஷிகளும் ஸித்தர்களும் வந்து சேர்ந்தார்கள். ஜயத்தை விரும்புகின்ற அந்த முனிவர்கள் தகுதியான இனிய வாக்குக்களால் தாரகாஸுர யுத்தத்தில் இந்திரனைத் துதித்ததுபோல என்னைத் துதித்தார்கள்.

## நூற்றெழுபத்திரண்டாவது அத்யாயம்.

## நிவாதகவசயுத்தபர்வம். (தொடர்ச்சி.)

(அர்ஜுனனுக்கு நிவாதகவசர்களோடு யுத்தம்.)

பாரதரே! பிறகு, நிவாதகவசர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து ஆயுதங்களை எடுத்துக்கொண்டு யுத்தத்தில் வேகத்தோடு என்னை எதிர்த்து ஓடிவந்தார்கள். மகாரதர்களான அந்த

[1] வேறு பாடம்.

நிவாதகவசர்கள் ரதம் செல்லும் வழியை மறைத்துக்கொண்டும் உரத்த சிங்கநாதத்தைச் செய்துகொண்டும் நாற்புறங்களிலும் என்னைச் சூழ்ந்துகொண்டும் அம்புமழைகளைப் பொழிந்தார்கள். பிறகு, அதிக வீர்யமுள்ளவர்களான மற்றத் தானவர்கள் சூலங்களையும் பட்டஸங்களையும் கையில் பிடித்தவர்களாக என்மீது சூலங்களையும் புசுண்டிகளையும் பிரயோகித்தார்கள். அவர்களால் எப்பொழுதும் விடப்படுகின்றதும் மிகப்பெரிதும் கதைகளும் சக்திகளும் பரவினதுமான நெருங்கின ஆயுதமழையானது என் ரதத்தின்மீது விழுந்தது. கூர்மையான சஸ்திரங்களும் ஆயுதங்களுமுள்ளவர்களும் பயங்கரமானவர்களும் யமன்போன்றவர்களும் நன்கு அடிப்பவர்களுமான நிவாதகவசர்கள் சிலர் யுத்தத்தில் என்னை எதிர்த்து ஓடிவந்தார்கள். நான் யுத்தத்தில் அவர்கள் ஒவ்வொருவரையும் வேகமுள்ளவைகளும் நேராகச்செல்பவைகளும் காண்டீவத்தினின்று விடுபட்டவைகளுமான பலவகையான பத்துப்பத்தம்புகளால் அடித்தேன். அவர்களனைவரும் என்னால் பிரயோகிக்கப்பட்டவையும் சாணையில் தீட்டப்பட்டவையுமான அம்புகளால் புறங்காட்டி ஓடுகிறவர்களாகச் செய்யப்பட்டார்கள். பிறகு, மாதலியினால் அந்தக் குதிரைகள் விரைவாகத் தூண்டப்பட்டு, பிறகு, வாயுவேகமுள்ளவைகளாகப் பல வழிகளில் ஸஞ்சரித்தன; மாதலியினால் நன்கு அடக்கி நடத்தப்பட்டுத் தைத்யர்களை நன்றாக மிதித்துக் கொன்றன. அந்தப் பெரியரதத்தில் கட்டப்பட்டிருக்கிற பதினாயிரம் குதிரைகள் அப்பொழுது மாதலியினால் நடத்தப்பட்டவைகளாகிச் சிலவேபோல ஸஞ்சரித்தன. அந்த அஸுரர்கள் அந்தக் குதிரைகளுடைய கால்களின் மிதியினாலும் தேருருளையின் ஒலியினாலும் என்னுடைய அம்புகளின் வீழ்ச்சிகளாலும் நூறு நூறாகக் கொல்லப்பட்டார்கள். பாண்டவர்களுள் சிறந்தவரே! அப்படியே, அந்த யுத்தத்தில் சில அஸுரர்கள் உயிரிழந்தும் ஸாரதி கொல்லப்பட்டும் குதிரைகளால் நன்கு இழுக்கப்பட்டார்கள். அடிப்பவர்களான அந்த அஸுரர்களனைவரும் திசைகளையும் திக்கோணங்களையும் மறைத்துக்கொண்டு பலவித ஆயுதங்களால் எதிர்த்தடித்தார்கள். அதனால், எனமனமானது துன்பமடைந்தது. பிறகு, வேகமுள்ள குதிரைகளைப் பிரயத்தனமின்றி அப்படி நடத்தினமையால் மாதலியினுடைய அற்புதமான வல்லமையை நான் நன்கு கண்டேன். வேந்தரே! பிறகு, யுத்தத்தில் ஆயுதங்களுடன் கூடின அந்த அஸுரர்களை நான் விரைவாகச் செல்லுகின்ற

பலவித அஸ்திரங்களால் நூறு நூருகவும் ஆயிரமாயிரமாகவும் துண்டாடினேன். பகைவர்களைக் கொல்பவரே! அந்த யுத்தத்தில் இவ்வாறு முழுமுயற்சியுடன் ஸஞ்சரிக்கின்ற என் விஷயத்தில் வீரனும் இந்திரனுக்கு ஸாரதியுமான மாதலியானவன் பிரீதியுள்ளவனுனன்.

பிறகு, சில அஸுரர்கள் அந்தக் குதிரைகளாலும் அந்தரதத்தாலும் கொல்லப்பட்டு நாசமடைந்தார்கள். அப்படியே சிலர் திரும்பிச் சென்ருர்கள். யுத்தத்தில் நிவாதகவசர்கள் எங்களோடு போட்டியுடையவர்கள்போல அம்புகளால் துன்பமடைவிக்கப்பட்ட என்னைப் பெரிய அம்புமழைகளால் தடுத்தார்கள். நான் பாணவேகங்களால் அம்புமழையை நாசம்செய்து அம்புகளைத் தடுப்பவைகளும் பிரகாசிப்பவைகளும் நிகரில்லாதவைகளும் விரைவாகச் செல்பவைகளுமான அஸ்திரங்களால் அந்த அஸுரர்களை ஆயிரமாயிரமாக அடித்தேன். பிறகு, நன்ருக அடிக்கப்படுகின்ற அந்த மகாஸுரர்கள் கோபத்தினுல் மூடப்பட்டவர்களாகவும் ஒன்று சேர்ந்தவர்களாகவும் சக்திகள், சூலங்கள், கத்திகள் இவைகளின் மழைகளால் என்னைத் துன்பமடையச் செய்தார்கள், பாரதரே! பிறகு நான் தேவராஜனுக்குப் பிரியமானதும் [1] சிறந்ததும் கடுமையாக எரிப்பதுமான [2] மாதவமென்கிற அஸ்திரத்தைப் பிரயோகித்தேன். பிறகு, நான் அவர்களால் விடப்பட்ட சுத்திகளையும் திரிசூலங்களையும் ஆயிரமாயிரமாகப் பிரயோகிக்கப்பட்ட தோமரங்களையும் அஸ்திர வீர்யத்தினுல் நூறுதுண்டாகத் துண்டித்தேன். நான் அந்த அஸுரர்களுடைய ஆயுதங்களைத் துண்டித்துப் பிறகு அவர்களனைவரையும் கோபத்தால் பத்துப்பத்து பாணங்களால் திருப்பி அடித்தேன். அப்பொழுது, யுத்தத்தில் காண்டீவத்தினின்று வண்டுகளின் வரிசைகள்போலப் பெரியபாணங்கள் புறப்பட்டன. அதை மாதலி புகழ்ந்தான். அந்த அஸுரர்களுடைய அந்தப் பாணங்களும் பலவாயிருப்பதால் விட்டிற்பூச்சிகள்போல என்னை மொய்த்துக்கொண்டன. நான் பலசாலியாயிருப்பதனுல் அம்புகளால் அவைகளை நாசம்செய்தேன். பிறகு, கொல்லப்படுகின்ற நிவாதகவசர்கள் மீண்டும் பெரிய அம்புமழைகளால் என்னை நாற்புறங்களிலும் சூழ்ந்து அடித்தார்கள். நான் அஸ்திரங்களை அழிப்

---

1 வேறு பாடம்.

2 'மது என்னும் அஸுரனைக் கொல்வதற்காகச் செய்யப்பட்ட அஸ்த்ரம்' என்பது பழையவுரை.

பவைகளும் ஜ்வலிப்பவைகளும் சிறந்தவைகளும் விரைவாகச் செல்பவைகளுமான அஸ்திரங்களால் (அந்தப்) பாணமேகங்களைத் தடுத்து அவர்களையும் ஆயிரமாயிரமாக அடித்தேன். அஸ்திரங்களால் பிளக்கப்பட்ட அவர்களுடைய சரீரங்கள் மழைக்காலத்தில் நாற்புறங்களிலும் மேகங்களால் பொழியப்பட்ட மலைகளினுடைய சிகரங்கள் ஜலத்தைச் சொரிவதுபோல இரத்தத்தைச் சொரிந்தன. இந்திரனுடைய வஜ்ராயுதம்போலத் தாக்குகின்றவையும் வேகமுள்ளவையும் நேராகச் செல்லுகின்றவையுமான என்னுடைய பாணங்களால் அடிக்கப்படுகின்ற அந்த அஸுரர்கள் அதிக பயத்தை அடைந்தார்கள். நூறு துணுக்காகப் பிளக்கப்பட்ட தேகமுள்ளவர்களும் ஆயுதங்களும் சௌர்யமும் குறைந்துபோனவர்களுமான அந்த நிவாதகவசர்கள், பிறகு, என்னுடன் மாயையினால் போர்புரிந்தார்கள்.

---

## நூற்றெழுபத்துமூன்றாவது அத்யாயம்.

## நிவாதகவசயுத்தபர்வம். (தொடர்ச்சி.)

(அர்ஜுனன் திவ்யாஸ்திரங்களால் அஸுரர்களுடைய மாயையை ஒழித்து அவர்களை வதம் செய்தது.)

பிறகு, மலைகள் போன்ற கல்துண்டுகளோடு மிகவும் பெரிதான கல்மழையானது எல்லாப்பக்கங்களிலும் தோன்றியது. அது என்னை மிக்க துன்பத்தையடையச்செய்தது. நான் யுத்தத்தில் அதனை ஒவ்வொன்றையும் ஐந்திராஸ்திரமந்திரத்துடன் விடப்பட்டவைகளும் வஜ்ராயுதம்போன்றவைகளும் வேகமுள்ளவைகளுமான அம்புகளால் நூறு துணுக்குக்களாகும்படி நொறுக்கினேன். கல்மாரியானது பொடிபண்ணப்படும்பொழுது நெருப்பு உண்டாயிற்று. அதில் நெருப்புக்குவியல்கள்போலக் கற்பொடிகள் விழுந்தன. பிறகு, கல்மழையானது அழிக்கப்பட்டவுடன், மிகப் பெரிய ஜலவர்ஷமானது தேரச்சின் அளவுள்ள தாரைகளோடு என்பக்கத்தில் தோன்றியது. ஆகாசத்திலிருந்து ஆயிரமாயிரமாக விழுகின்ற கடுமையான வேகமுள்ள நீர்த்தாரைகள் ஆகாயத்தையும் திசைகளையும் அப்படியே திக்கோணங்களையும் எங்கும் மூடின. தாரைகள் விழுவதாலும் காற்றின் மிகுதியினாலும் மேகங்களுடைய கர்ஜனத்தினாலும் ஒன்றும் அறியப்பட

வில்லை. ஆகாயத்திலும் பூமியிலும் எல்லா இடங்களிலும் தொடர்ச்சியுள்ளவைகளும் எப்பொழுதும் தரையில் விழுகின்றவைகளுமான நீர்த்தாரைகள் அந்த ரணகளத்தில் என்னை மயங்கச்செய்தன. அந்த ஸமயத்தில், இந்திரனால் உபதேசிக்கப்பட்டதும் ஜலத்தை மிகவும் வற்றச்செய்கிறதும் ஜ்வலிக்கிறதும் கோரமாயிருப்பதுமான திவ்யாஸ்திரத்தைப் பிரயோகித்தேன். அந்த அஸ்திரத்தினால் அந்த ஜலமானது வற்றியது. பாரதரே! என்னால் கன்மாரியும் அடிக்கப்பட்டு, ஜல வர்ஷமும் வறளச் செய்யப்பட்டபொழுது தானவர்கள் மாயாமயமான அக்னியையும் வாயுவையும் பிரயோகித்தார்கள். பிறகு, நான் வாருணாஸ்திரத்தினால் அக்னியை முழுமையும் நாசம்செய்தேன். பெரிதான சைலாஸ்திரத்தினால் வாயுவின் வேகத்தையும் தடுத்து நிறுத்தினேன். பாரதரே! அந்த மாயை அழிக்கப்பட்டவுடன், யுத்தத்தில் கெட்ட மதங்கொண்டவர்களான அந்தத் தானவர்கள் பலவித மாயையை ஒரே ஸமயத்தில் வெளியிட்டார்கள். பிறகு, மிகப் பெரியதும் மயிர்சிலிர்க்கச் செய்கிறதுமான கோரரூபமுள்ளவைகளான அக்னி வாயு சிலை இவற்றினுடைய அஸ்திர வர்ஷமானது தோன்றியது. அந்த மாயாமயமான மழையானது யுத்தத்தில் என்னைத் துன்பமடையச் செய்தது. பிறகு, கோரமாகவும் கடுமையாகவுமிருக்கிற இருளானது எல்லாப்பக்கங்களிலும் தோன்றியது. கோரமான கொடிய இருட்டினால் உலகமானது நன்றாக மூடப்படவே குதிரைகள் திரும்பினவைகளாயின; மாதலியும் [1] தடுமாறினான். அவனுடைய கையிலிருந்து பொன்னாலாகிய குறடாவும் பூமியில் விழுந்தது. அவன் பயந்து என்னைப் பார்த்து, 'என்ன செய்யப்போகிறோம்?' என்றும் அடிக்கடி சொன்னான். அவன் புத்தியிழந்திருக்கும் தருணத்தில் தீவிரமான பயமானது என்னையும் வந்தடைந்தது.

அறிவிழந்தவனான அந்த மாதலியானவன் என்னைப் பார்த்து, 'பார்த்த! முற்காலத்தில் தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் அம்ருதத்திற்காக மிகப்பெரிய போர் நடந்தது. தோஷமற்றவனே! அதுவும் என்னால் பார்க்கப்பட்டிருக்கிறது. சம்பரனுடைய வதத்துக்காக மிகப் பெரிய கோரமான யுத்தம் நடந்தது. நான் அந்த யுத்தத்திலும் தேவராஜனுக்கு ஸாரத்யம் செய்தேன். அப்படியே, விருத்ரனை

---

1 'ப்ராஸ்கலத்' என்பது வேறுபாடம்; 'விழுந்தான்' என்பது இங்கிலீஷ் மொழிபெயர்ப்பு.

வதம் செய்வதற்காக நடந்த யுத்தத்திலும் என்னால் குதிரைகள் பிடித்து நடத்தப்பட்டன. மிக்க பயங்கரமான பலியினுடைய யுத்தமும் என்னால் பார்க்கப்பட்டது. மிக்க பயங்கரமான இந்த யுத்தங்கள் என்னால் நேரில் அனுபவிக்கப்பட்டிருக்கின்றன. பாண்டவ! இதற்குமுன் நான் எக்காலத்திலும் பிரஜ்ஞை தப்பினவனானதில்லை. பிரம்மதேவரால் பிரஜைகளுக்கு ஸம்ஹாரமானது ஏற்படுத்தப்பட்டுவிட்டது நிச்சயம். உலகத்துக்கு நாசகாலத்தைத் தவிர மற்ற ஸமயத்தில் இந்த யுத்தம் பொருந்தாதன்றோ?' என்று மிக்க பயத்துடன்கூடின இதனைச் சொன்னான். அவனுடைய அந்த வசனத்தைக்கேட்டு நான் என்னை நானாகத் திடப்படுத்திக் கொண்டு அஸுரர்களுடைய பெரிய மாயாபலத்தை வீணாக்க விரும்பி, பயந்திருக்கிற மாதலியைப் பார்த்து, 'இப்பொழுது என் கைகளுடைய பலத்தையும் அஸ்திரங்கள் காண்டீவமென்கிற வில் இவற்றினுடைய பிரபாவத்தையும் பார். இப்பொழுது அஸ்திர மாயையினால் இவர்களுடைய மிகவும் பயங்கரமான இந்த மாயையையும் கொடிய இருளையும் நாசம்செய்கிறேன். ஸாரதியே! பயப்படாதே. உறுதியாக இரு' என்று சொன்னேன். வேந்தரே! இவ்வாறு சொல்லிவிட்டு, நான் எல்லாப் பிராணிகளையும் மயங்கச்செய்கிற அஸ்திர மாயையைத் தேவர்களுடைய நன்மையின்பொருட்டு உண்டுபண்ணினேன். அந்த அந்த மாயைகள் அழிக்கப்படவே, அஸுரச்ரேஷ்டர்கள் அளவு கடந்த சௌரியத்துடன் மீண்டும் பலவிதமான மாயைகளை வெளியிட்டார்கள். மறுபடி பிரகாசமுண்டாயிற்று. மறுபடியும், இருளால் உலகம் விழுங்கப்பட்டது. உலகம் கண்ணுக்குப் புலப்படாததாயிற்று. மீண்டும் ஜலத்தில் முழுகியது. பிரகாசமுண்டாகவே மாதலியானவன் மயிர்பொடிக்கச்செய்கிற யுத்தத்தில் குதிரைகள் நன்கு நடத்தப்படுகின்ற சிறந்த ரதத்துடன் ஸஞ்சரித்தான். பிறகு, கொடியவர்களான நிவாதகவசர்கள் என்மீது எல்லாப்பக்கங்களிலும் தாக்கினார்கள். நான் அவர்களை ஸமயம்பார்த்து யமலோகத்திற்கு அனுப்பினேன். நிவாதகவசர்களுக்கு நாசத்தை உண்டுபண்ணுகிற அப்படிப்பட்ட யுத்தம் நடந்துவரும் தருணத்தில், திடீரென்று மாயையினால் மூடப்பட்ட எல்லா அஸுரர்களையும் நான் காணவில்லை.

---

## நூற்றெழுபத்து நான்காவது அத்யாயம்.

# நிவாதகவசயுத்தபர்வம். (தொடர்ச்சி.)

(அர்ஜுனன் நிவாதகவசர்களைக் கொன்றபிறகு மீண்டும் ஸ்வர்க்கத்திற்குப் போனது.)

அந்தத்தைத்யர்கள் மாயையினால் கண்ணுக்குப் புலப்படாதவர்களாக இருந்துகொண்டு போர்புரிந்தார்கள். நானும் (அவர்களால்) பார்க்கமுடியாத அஸ்திர வீர்யத்தால் அவர்களுடன் போர்புரிந்தேன். காண்டீவத்தினின்று விடுபட்டவைகளும் அஸ்திரமந்திரத்தினால் நன்கு பிரயோகிக்கப்பட்டவைகளுமான பாணங்கள் அவர்களிருந்த இடங்களில் அவர்களுடைய தலைகளை அறுத்தன. பிறகு, என்னால் யுத்தத்தில் கொல்லப்படுகின்ற நிவாதகவசர்கள் மாயையை அடக்கிக்கொண்டு விரைவாகத் தங்களுடைய பட்டணத்தில் நுழைந்தார்கள். தைத்யர்களும் ஓடி, வெளிச்சமும் ஏற்படவே, அந்த ரணகளத்தில் தானவர்கள் லக்ஷக்கணக்காகக் கொல்லப்பட்டிருக்கிறதைப் பார்த்தேன். அந்த இடத்தில் நன்கு நொறுக்கப்பட்ட அந்த அஸுரர்களுடைய சஸ்திரங்களும் ஆபரணங்களும் சரீரங்களும் கவசங்களும் நூறு நூறாகக் காணப்பட்டன. குதிரைகளுக்கு ஓரடியிலிருந்து மற்றோரடி நகருவதற்குக்கூட இடைவெளி இல்லை. அதனால், விரைவாக மேலே எழும்பி ஆகாயத்தில் செல்பவைகளாக இருந்தன. பிறகு, நிவாதகவசர்கள் ஆகாயத்தைமாத்திரம் நன்றாக மூடிக்கொண்டு கண்ணுக்குப்புலப்படாதவர்களாகவும் மலைகளைப் பிரயோகிக்கின்றவர்களாகவும் என்னை எதிர்த்து வந்தார்கள். பாரதரே! பிறகு, பயங்கரமான தானவர்கள் சிலர் பூமிக்குள் இருந்துகொண்டு குதிரைகளின் கால்களையும் தேருருளைகளையும் இறுகப் பிடித்தார்கள். சிலர் யுத்தம் செய்கின்ற என்னுடைய குதிரைகளையும் ரதத்தையும் நகரவொட்டாமல் பிடித்து, ரதத்துடனிருக்கிற என்னை மலைகளால் எல்லாப்பக்கங்களிலும் அடித்தார்கள். விருத்தியடைகின்ற மலைகளாலும் அப்படியே விழுகின்ற வேறு மலைகளாலும் நானிருந்த இடம் குகைபோலாயிற்று. மலைகளால் மூடப்பட்டவனும் நடக்கமுடியாதபடி தடுக்கப்பட்ட குதிரைகளுள்ளவனுமான நான் அதிகத்துன்பத்தை அடைந்தேன். அதை மாதலி கண்டான். அவன், நான் பயந்திருப்பதைக்கண்டு

'அர்ஜுன! அர்ஜுன! நீ பயப்படாதே. வஜ்ராஸ்திரத்தைப் பிர யோகம் செய்' என்கிற இந்த வசனத்தைச் சொன்னான். வேந்தரே! பிறகு, நான் அவனுடைய அந்த வசனத்தைக்கேட்டுத் தேவராஜ னுக்குப் பிரியமான வஜ்ராஸ்திரத்தைப் பிரயோகித்தேன். அசை வில்லாத ஸ்தானத்தை அடைந்து காண்டீவத்தை அபிமந்த்ரணம் செய்து இடிபோல் தாக்குகின்றவைகளும் நீண்டவைகளும் கூருள் ளவைகளுமான அம்புகளைப் பிரயோகித்தேன். பிறகு, வஜ்ராஸ் திரத்தினால் பிரயோகிக்கப்பட்ட அந்தப்பாணங்கள் வஜ்ரங்களாகி அந்த எல்லாமாயைகளையும் அந்த நிவாதகவசர்களையும் நன்றாகத் தாக்கின. வஜ்ரவேகத்தாலடிக்கப்பட்ட மலைபோன்ற அந்தத்தான வர்கள் ஒருவரை ஒருவர் கட்டிக்கொண்டு பூமியில் விழுந்தார்கள். பூமிக்குள் எந்தத் தானவர்கள் தேரையும் குதிரைகளையும் நகரா மல் பிடித்தார்களோ அவர்களையும் அந்தப்பாணங்கள் உள்ளே புகுந்து யமலோகத்திற்கு அனுப்பின. கொன்று தள்ளப்பட்ட வர்களும் மலைபோன்றவர்களுமான அந்த நிவாதகவசர்களால் அந்தஇடமானது, சிதறிக்கிடக்கிறமலைகளால் மூடப்படுவதுபோல நன்றாக மூடப்பட்டது. குதிரைகளுக்காவது ரதத்திற்காவது மாதலிக்காவது எனக்காவது அப்பொழுது ஒருவிதமான கெடுதியுங்காணப்படவில்லை. அது ஆச்சர்யமாயிருந்தது. அரசரே! பிறகு, மாதலியானவன் உரக்கச் சிரித்துக்கொண்டு என்னைப் பார்த்து, 'அர்ஜுன! உன்னிடத்தில் காணப்படுகிற இந்த வீர்யம் தேவர்களிடம் இல்லை' என்று சொன்னான். அஸுரக்கூட்டங்கள் கொல்லப்பட்டவுடன், அவர்களுடைய மனைவிகளனைவரும் சரத் காலத்தில் ஸாரஸபட்சிகளின் பேடுகள்போல அந்த நகரத்தில் உரக்க அலறினார்கள். பிறகு, நான் மாதலியுடன்கூடியவனாக ரதத் தின் சப்தத்தால் நிவாதகவசர்களுடைய மாதர்களைப் பயமடை யச் செய்துகொண்டு அந்தப்பட்டணத்தை நோக்கிச் சென்றேன். மயிலுக்கு ஒப்பான நிறமுள்ள அந்தப் பதினாயிரம் குதிரைகளையும் ஸூர்யனுக்கொப்பான ரதத்தையும் பார்த்து, ஸ்த்ரீகள் கூட்டம் கூட்டமாக ஓடினார்கள். பயமுறுத்தப்பட்ட அந்த மாதர்களின் ஆபரணங்களால் உண்டுபண்ணப்பட்ட ஒலியானது அப்பொழுது மலைகளின்மீது விழுகின்ற கற்களின் ஒலிபோலாகியது. அதிக மாகப் பயந்திருக்கிற அந்த அஸுரஸ்திரீகள், பிறகு, அனேக ரத் தினங்களால் விசித்திரமாகவும் ஸ்வர்ணமயமாகவுமிருக்கிற தத்தம் வீடுகளில் புகுந்தார்கள். ஆச்சர்யமான வடிவமுள்ளதும் தேவர்

களின் நகரத்தைக்காட்டிலும் அதிக மேன்மைவாய்ந்ததுமான அந்த உத்தமமான நகரத்தைப் பார்த்து, பிறகு, நான் மாதலியை நோக்கி, 'இப்படிப்பட்ட இந்த நகரத்தில் யாதுகாரணத்தால் தேவதைகள் பிரவேசிக்கிறதில்லை? இந்த நகரத்தை இந்திரனுடைய நகரத்தைக்காட்டிலும் மேன்மைபெற்றதெனக் காண்கிறேன்' என்று சொன்னேன். மாதலியானவன், 'பார்த்த! முற்காலத்தில் இந்த நகரமானது நம்முடைய தேவராஜனது நகரமாக இருந்தது. பிறகு, நிவாதகவசர்களால் தேவர்கள் இந்தநகரத்திலிருந்து துரத்தப்பட்டார்கள்; பெரிய கடுந்தவத்தைச்செய்து பிரம்மதேவரை மகிழ்வித்து, வசிப்பதற்காக இந்தநகரமும் யுத்தத்தில் தேவர்களிடத்திலிருந்து பயமின்மையும் வேண்டப்பட்டன. பிறகு, இந்திரன், தனக்கு ஹிதத்தைத் தேடிக்கொள்வதில் விருப்பத்தால், 'இந்த விஷயத்தில் பகவானான தேவரீர் தகுந்த பரிஹாரம் செய்யவேண்டும்' என்று பகவானான பிரம்மதேவரை வேண்டிக்கொண்டான். பாரத! பிறகு, பகவானான பிரம்மதேவர், 'விருத்திரனைக் கொன்றவனே! இந்த விஷயத்தில் நீயே வேறுதேகத்தால் இந்த அஸுரர்களுக்கு நாசத்தை உண்டு பண்ணுகிறவனாவாய்' என்று சொன்னார். அதனால், இவர்களைக் கொல்வதற்காக இந்திரன் உனக்கு அஸ்திரங்களைக் கொடுத்தான். உன்னால் கொல்லப்பட்ட இந்த அஸுரர்கள் தேவர்களால் கொல்வதற்கு ஸாத்தியப்படாதவர்கள். பாரத! இவர்களழியுங்காலம் வந்ததாதலால் நீ இந்த ஸமயத்தில் இவர்களுக்கு நாசத்தை உண்டுபண்ணுகிறவனாக வந்தாய். உன்னாலும் அது அப்படியே செய்யப்பட்டது. புருஷஶ்ரேஷ்டனே! தானவர்களை அழிப்பதற்காக மகாஸ்திரங்களுடைய பெரிதான அந்தச் சிறந்த பலத்தை இந்திரனால் நீ பெற்றுக் கொள்ளும்படி செய்யப்பட்டாய்' என்று சொன்னான். பிறகு, நகரத்தை நன்கு அடக்கி அந்தத் தானவர்களையும் கொன்று மீண்டும் மாதலியுடன் அந்தத் தேவராஜனுடைய இருப்பிடத்தை நோக்கிச் சென்றேன்.

---

## நூற்றெழுபத்தைந்தாவது அத்யாயம்.

# நிவாதகவசயுத்தபர்வம். (தொடர்ச்சி.)

(அர்ஜுனன் ஸ்வர்க்கத்தைக்குறித்து திரும்பிவருகையில் நடுவழியில் ஹிரண்யபுரத்தைப் பார்த்ததும், அதில் வஸிக்கின்ற பௌலோமர்களையும் காலகேயர்களையும் கொன்று ஸ்வர்க்கத்துக்கு வந்ததும்.)

அந்த இடத்திலிருந்து திரும்பிவருகின்ற மன்னால் பெரிதும் நினைத்தவண்ணம் செல்லுவதும் ஆகாயத்திலுள்ளதும் அக்நியும் ஸூர்யனும்போன்ற காந்தியுள்ளதுமான வேறொரு பட்டணம் பார்க்கப்பட்டது. வேந்தரே! பலவகை ரத்தினமயமான மரங்களாலும், [1] இனிய குரலுள்ள பக்ஷிகளாலும் எப்பொழுதும் ஸந்தோஷமுள்ள பௌலோமர்களாலும் காலகேயர்களாலும் அடையப்பட்டதும், கோபுரங்களோடும் [2] அட்டாலகங்களோடும் சேர்ந்திருப்பதும், நான்கு வாயில்களுள்ளதும் அடைய முடியாததும், எல்லா ரத்தினங்களாலும் இழைக்கப்பட்டதும், திவ்யமானதும், ஆச்சர்யமான காட்சியுள்ளதும், புஷ்பங்களோடும் பழங்களோடும்கூடினவைகளும் எல்லா ரத்னங்களாலும் இழைக்கப்பட்டவைகளுமான மரங்களால் சூழப்பட்டதும், அப்படியே திவ்யமானவையும் மிக அழகியவையுமான பறவைகளோடு கூடியதும், என்றும் ஸந்தோஷமுள்ளவர்களும் சூலங்களையும் ரிஷ்டிகளையும் உலக்கைகளையும் ஆயுதமாக உடையவர்களும் வில்லையும் குண்டாந்தடிகளையும் கையில் பிடித்தவர்களும் மாலைகளை அணிந்தவர்களுமான அஸுரர்களால் எல்லாப்பக்கங்களிலும் சூழப்பட்டதும், அற்புதமான காட்சியுள்ளதுமான தைத்யர்களுடைய அந்தப் பட்டணத்தைப் பார்த்து, நான், 'காணப்படுகிறதே இதென்ன?' என்று மாதலியைக் கேட்டேன்.

மாதலி, 'புலோமை என்றும் காலகை என்றும் சொல்லப்படுகிற திதியின் புத்திரிகளான இரண்டு பெரிய அஸுரஸ்த்ரீகள் தேவவர்ஷத்தில் ஆயிரம் வர்ஷகாலம் சிறந்த தவத்தைச் செய்தார்கள். பிறகு, தவத்தின் முடிவில் பிரம்மதேவர் அவ்விருவருக்கும் வரத்தைக் கொடுத்தார். ராஜஸ்ரேஷ்டனே! அந்த இரண்டு அஸு

1 வேறுபாடம். 2 மேல்மாடி.

அஸுரபட்டணமானது மிக உடைபட்டுப் பூமியில் விழுந்தது. அரசரே! வஜ்ராயுதத்தின் வேகம்போன்ற வேகமுள்ள உருக்கினாலாகிய என்னுடைய பாணங்களால் அடிக்கப்படுகின்ற அந்த அஸுரர்கள் காலத்தால் தூண்டப்பட்டவர்களாக எல்லாப் பக்கங்களிலும் சுழன்றார்கள். பிறகு, மாதலியானவன் உயர ஏறி நேரில் விழுகிறவன்போல ஸூர்யனுடைய காந்திபோன்ற காந்தியுள்ள ரதத்தோடு ஆகாயத்தினின்று விரைவாகப் பூமியில் இறங்கினான்; பாரதரே! பிறகு, கோபமுள்ளவர்களும் என்னோடு சண்டைசெய்வதில் விருப்பமுள்ளவர்களுமான அந்த அஸுரர்களுடைய அறுபதினாயிரம் ரதங்கள் என்னைச் சூழ்ந்துகொண்டன. நான், அவைகளைக் கழுகிறகுகளால் பிரகாசிக்கின்ற கூர்மையுள்ள பாணங்களால் அடித்தேன். அவர்கள் கடலின் அலைகள் திரும்புவதுபோல யுத்தத்தில் என்னிடத்தினின்று திரும்பிவிட்டார்கள். பிறகு, நான், 'இவர்களை மனிதர்களால் செய்யத்தக்க யுத்தத்தால் ஜயிப்பதற்கு ஸாத்தியப்படாது' என்று நன்கு ஆலோசித்து, பிறகு, வரிசையாகத் திவ்யாஸ்திரங்களைப் பிரயோகித்தேன். பிறகு, என்னுடைய திவ்யாஸ்திரங்கள் சித்திரயுத்தஞ்செய்கின்ற அந்த ஆயிரக்கணக்கான ரதிகர்களை மெதுவாக எதிர்த்தடித்தன. மிக்கபலசாலிகளான அந்த அஸுரர்கள் விசித்திரமான ரதமார்க்கங்களில் ஸஞ்சரிக்கின்றவர்களாகி யுத்தத்தில் நூறு நூறாகவும் ஆயிரமாயிரமாகவும் காணப்பட்டார்கள். விசித்திரமான கிரீடங்களைத் தலையிலணிந்தவர்களும் விசித்திரமான கவசத்துடனும் த்வஜத்துடனும்கூடியவர்களும் விசித்திரமான ஆபரணங்களை அணிந்தவர்களுமான அஸுரர்கள் எனக்குப் பிரீதியை உண்டுபண்ணுகிறவர்களானார்கள். நானோ, யுத்தத்தில் திவ்யாஸ்திரமந்திரங்களால் பிரயோகிக்கப்பட்ட அம்புமழைகளால் அவர்களைத் துன்புறுத்துவதற்குச் சக்தியற்றவனானேன். அவர்களோ, என்னைத் திருப்பித் துன்புறுத்தினார்கள். அஸ்திரங்களில் பயிற்சியுள்ளவர்களும் யுத்தத்தில் ஸமர்த்தர்களும் அனேகர்களுமான அந்த அஸுரர்களால் துன்புறுத்தப்படுகின்ற நான் துன்பமடைந்தவனானேன். பெரும்போரில் அதிக பயமும் என்னை அடைந்தது. பிறகு, நான் மிக்க முயற்சியுள்ளவனாகி மாதலியைப் பார்த்து, 'திவ்யாஸ்திரங்களால் அபிமந்திரணஞ் செய்யப்பட்டவைகளும் மிக்க கோரரூபமுள்ளவைகளுமான என்னுடைய அம்புக்கூட்டங்களால் இந்த அஸுரர்கள் ஏன் கொல்லப்

படவில்லை? கேட்கின்ற எனக்கு உண்மையை உரைப்பாயாக' என்று வினவினேன். பரதஶ்ரேஷ்டரே! அவன் என்னைப்பார்த்து, 'நீ இவர்களைக்கொல்வதில் போதுமான திறமையுள்ளவன். ஆதலால், அவர்களை மர்மங்களில் குறிவைத்து அடித்தலைச் செய்வாயாக' என்று சொன்னான். ராஜஶ்ரேஷ்டரே! இந்த வசனத்தைக் கேட்டு நான் மிக்க மனக்களிப்படைந்து அந்த மாதலியைப்பார்த்து, 'ரதத்தைச் சீக்கிரம் திருப்பு; என்னால் இவர்கள் அடித்துத் தள்ளப் படுவதைப் பார்' என்று சொன்னேன். இவ்வாறு சொல்லப்பட்ட மாதலியானவன் அந்த இடத்தில் தேரைத் திருப்பினான்.

மகாராஜரே! பிறகு, தானவர்கள் யுத்தத்தில் என்னைத் தோற்றவனாக எண்ணி மிக்க மனக்களிப்புற்றவர்களாக, 'எவராலும் போர்த்தலையில் தோல்வி அடைவிக்கப்படாத இந்தப் பாண்டவன் நம்மால் யுத்தத்தில் தோல்வியடைவிக்கப்பட்டான்' என்று இவ்விதம் அப்பொழுது கூட்டம் கூட்டமாக உரத்த குரலுடன் அடிக்கடி கத்தினார்கள். பிறகு, நான் தேவதேவரும் அவ்யக்தமூர்த்தியும் மகாத்மாவுமான ருத்திரரை நமஸ்கரித்துப் பரிசுத்தனாகவும் வணங்கினவனாகவுமிருந்து, 'பூதங்களுக்கு மங்களம்' என்று சொல்லி ரௌத்திரமென்று பிரசித்திபெற்றதும் எல்லாச் சத்துருக்களையும் நாசம்பண்ணுவதும் திவ்யமானதும் எல்லா உலகத்தாராலும் நமஸ்கரிக்கப்பட்டதுமான பாசுபத மஹாஸ்திரத்தைப் பூட்டினேன். பகைவர்களைக் கொல்பவரே! பிறகு, மூன்று தலைகளுடன்கூடியவனும் ஒன்பது கண்களுள்ளவனும், மூன்று முகமுள்ளவனும், ஆறுகைகளுள்ளவனும், ஜ்வலிக்கின்றவனும், ஸூர்யனைப்போன்றதும் அக்னியைப்போன்றதுமான தலைமயிருள்ளவனும், கடைவாய்களை அடிக்கடி நக்குகிற பெரிய ஸர்ப்பங்களால் அடையாளமிடப்பட்டவனுமான ஒரு புருஷனைப் பார்த்தேன். பரதஶ்ரேஷ்டரே! பாரதரே! பிறகு, நான் பயமற்றவனாகக் கோரமாகவும் சாஶ்வதமாகவுமிருக்கிற அந்த ரௌத்ராஸ்திரத்தைக் கண்டு அதைக் காண்டீவத்தில் சேரச் செய்து எல்லாரும் அளவுகடந்த தேஜஸுள்ளவருமான த்ரியம்பகருக்கு நமஸ்காரம் செய்து தானவஶ்ரேஷ்டர்கள் அழிவதன்பொருட்டு அந்தப் பாசுபதாஸ்திரத்தை விடுத்தேன். அரசரே! அந்த அஸ்திரமானது விடப்பட்டவுடன், மான்கள், சிங்கங்கள், புலிகள், கரடிகள், எருமைகள், ஸர்ப்பங்கள், பசுக்கள், சரபங்கள், யானைகள், கூட்டம் கூட்டமான குரங்குகள், காளைகள், பன்றிகள்,

பூனைகள், செந்நாய்கள், பிரேதங்கள், புருண்டங்கள், கழுகுகள், கருடன்கள், கவரிமான்கள், தேவர்கள், ரிஷிகள், கந்தர்வர்கள், யக்ஷர்கள், பிசாசங்கள், அஸுரர்கள், குஹ்யகர்கள், ராக்ஷஸர்கள், யானைமுகமுள்ள மீன்கள், கோட்டான்கள், மீன்களுக்கும் குதிரைகளுக்கும் ஸமமான ரூபமுள்ளவர்களும் பலவித ஆயுதங்களையும் கத்திகளையும் கையில்பிடித்தவர்களும் கதைகளையும் முத்கரங்களையும் தரித்திருப்பவர்களுமான ராக்ஷஸர்கள் இவைகளுடைய உருவங்கள் ஆயிரமாயிரமாகத் தோன்றின. அப்பொழுது அந்த அஸ்திரம் பிரயோகிக்கப்பட்டவுடன், உலகமனைத்தும் இவைகளாலும் பலவித ரூபங்களைத்தரித்த மற்ற அநேகம் பிராணிகளாலும் வியாபிக்கப்பட்டதாயிற்று. மூன்று தலைகளையுடையவைகளும் நான்கு தெற்றிப் பற்களையுடையவைகளும் நான்கு முகங்களுள்ளவைகளும் நான்கு கைகளுள்ளவைகளும் பல ரூபங்களுடன்கூடியவைகளும் மாம்ஸத்துடனும் கொழுப்புடனும் ஊனீருடனும் எலும்புடனும் கூடினவைகளுமான பூதங்களால் அடிக்கடி கொல்லப்படுகிற அந்தத் தானவர்கள் [1] நாசத்தை அடைந்தார்கள். பாரதரே! சூரியனும் அக்னியும்போன்ற தேஜஸுள்ளவைகளும் வஜ்ராயுதத்திற்கும் அசனிக்கும் ஸமமான ஒளியுடையவைகளும் எஃகினலான வைகளும் அழிக்கிறவைகளுமான மற்றப் பாணங்களாலும் ஒரு முகூர்த்தகாலத்திற்குள்ளாகவே எல்லா அஸுரர்களையும் வதம் செய்தேன்; அஸுரர்கள் காண்டீவத்தினின்று புறப்பட்ட பாசுபதாஸ்திரத்தினால் தூக்கி எறியப்பட்டு உயிர் துறந்து ஆகாயத்திலிருந்து கீழே விழுந்ததைப் பார்த்து, நான், முப்புரங்களை அழித்தவரான பரமசிவனை உத்தேசித்து மறுபடியும் வந்தனம் செய்தேன். திவ்யாபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட அஸுரர்கள் அவ்வாறு பாசுபதாஸ்திரத்தால் பொடிபண்ணப்பட்டதைப் பார்த்துத் தேவஸாரதியானவன் அதிக ஸந்தோஷத்தை அடைந்தான். இந்திரஸாரதியான மாதலியானவன் ஸஹிக்கமுடியாததும் தேவர்களால்கூட எவ்விதத்தாலும் நாடமுடியாததுமான அந்தக் காரியம் என்னால் செய்யப்பட்டதைக் கண்டு என்னைப் புகழ்ந்தான்.

என்னால் யுத்தத்தில் அந்தத் தானவர்கள் ஆயிரமாயிரமாகக் கொல்லப்பட்டதைப் பார்த்து மகிழ்ந்த மாதலியானவன், கைகுவித்துக்கொண்டு என்னை நோக்கி, 'உன்னால் செய்யப்பட்ட இங்

---

1 வேறு பாடம்.

தக் காரியம் தேவர்களாலும் அஸுரர்களாலுங்கூடச் செய்ய முடியாததன்றோ? தேவராஜன்கூட யுத்தத்தில் இதனைச் செய்வதற்கு வல்லமையுள்ளவனல்லன். தனஞ்சய! அஸுர பட்டணத்தை அழித்தவனே! உன்விஷயத்தில் இந்திரன் பிரீதியை அடைந்துவிட்டான்; நிச்சயம். வீர! தேவர்களாலும் அஸுரர்களாலும் நாசம்செய்யத்தகாததும் ஆகாயத்தில் ஸஞ்சரிப்பதும் பெரிதுமான இந்தப் பட்டணமானது உன்னால் சொந்தமான வீர்யபலத்தாலும் தபோபலத்தாலும் நன்குநொறுக்கப்பட்டதன்றோ?" என்னும் இந்த வசனத்தைச் சொன்னான். அந்த ஆகாச பட்டணமானது நாசம் செய்யப்பட்டுத் தானவர்களும் கொல்லப்பட்டபொழுது, பெண்களனைவரும் அதிகமாக அலறிக்கொண்டு நகரத்தினின்று வெளியில் வந்தார்கள். கூந்தலை விரித்துக்கொண்டவர்களும் மனவருத்தமுற்றவர்களும் அன்றிற்பேடுகள்போலத் துக்கித்தவர்களும் புத்திரர்களையும் தகப்பன்களையும் பிராதாக்களையும் குறித்துத் துக்கிப்பவர்களும் அழுகிறவர்களும் தீனமான குரலுள்ளவர்களும் உரக்க அலறுகின்றவர்களும் நாதர்கள் கொல்லப்பெற்றவர்களுமான அஸுர ஸ்திரீகள் மாலைகளும் பூஷணங்களும் நழுவக் கைகளால் மார்புகளில் அடித்துக்கொண்டு பூதலத்தில் விழுந்தார்கள். சோகத்துடன் கூடியதும் அழகிழந்ததும் துக்கத்தாலும் தைன்யத்தாலும் தாக்கப்பட்டதுமான அந்த அஸுர பட்டணமானது ஒளி கெடுக்கப்பட்டதும் தலைவரை இழந்ததுமாகிப் பிரகாசிக்கவில்லை. அந்த நகரமானது (ஆகாயத்தில் தோன்றி மறைகிற மேகக் கூட்டமாகிய) கந்தர்வ நகரம் போலவும் [1] நாகம்பிடிக்கப்பட்ட மடுப்போலவும் மரங்கள்பட்டுப்போன காடுபோலவும் பார்க்கத்தகாததாயிற்று. மாதலியானவன் மனம் மிகக்களித்தவனும் காரியத்தை முடித்தவனுமான என்னை யுத்தரங்கத்தினின்று தேவராஜனுடைய அரண்மனைக்குச் சீக்கிரம் அழைத்துவந்தான். ஹிரண்யபுரத்தை அழித்தும், மகாஸுரர்களையும் நிவாதகவசர்களையும் கொன்றும், பிறகு, நான் இந்திரனை அடைந்தேன். மகாகாந்தியுள்ளவரே! மாதலியானவன், ஹிரண்யபுரத்தை அழித்ததும், மாயைகளைத் தடுத்ததும், யுத்தத்தில் மிக்க பலசாலிகளான நிவாதகவசர்களுடைய வதமும், அத்புதமானதும் மயிர்சிலிர்க்கச் செய்வதுமான காலகேயர்களுடைய வதமும் ஆகிய என்னுடைய

1 'யானை' என்பது இங்கிலீஷ் மொழிபெயர்ப்பு.

அந்தச் செய்கைகளனைத்தையும் நடந்தபடி தேவராஜனுக்கு விஸ்தாரமாகச் சொன்னேன்.

பிறகு, ஆயிரம் கண்களையுடையவனும் தேவர்களுடனிருப்பவனும் ஸ்ரீமானுமான இந்திரபகவான் அதனைக்கேட்டு மகிழ்ந்து புன்னகையுடன் என்னை அன்போடு தழுவியும் உச்சியில் முகர்ந்தும், 'நல்லது! நல்லது!' என்று கூறினான். பிறகு, தேவராஜன் தேவர்களுடன்கூட என்னை அடிக்கடி இன்சொற்கூறி, 'பார்த்தா! யுத்தத்தில் தேவாஸுரர்களுடைய செய்கைக்கு மேற்பட்ட செய்கையே உன்னால் செய்யப்பட்டது. என்னுடைய பெரும் பகைவர்களைக் கொன்று உன்னால் குருதக்ஷிணையும் கொடுக்கப்பட்டது. தனஞ்சய! நீ இவ்வண்ணமே எப்பொழுதும் யுத்தத்தில் உறுதியாயிருக்கவேண்டும். மயங்காமலிருந்துகொண்டு அஸ்திரங்களைப் பிரயோகிக்கவேண்டும். நீ யக்ஷர்களுடனும் [1] அஸுரர்களுடனும் கந்தர்வர்களுடனும்கூடியவர்களும் பக்ஷிகளின் கூட்டங்களோடும் பன்னகர்களோடும்கூடினவர்களுமான தேவர்களாலும் தானவர்களாலும் ராக்ஷஸர்களாலும் யுத்தத்தில் ஸஹிக்க முடியாதவனன்றோ? குந்திநந்தன! தர்மாத்மாவும் குந்திபுத்திரனுமான யுதிஷ்டிரன் உன்னுடைய புஜபலத்தால் ஜயிக்கப்பட்ட பூமியைப் பரிபாலிக்கப்போகிறான்' என்று சொன்னான்.

## நூற்றெழுபத்தாறுவது அத்யாயம்.

## நிவாதகவசயுத்தபர்வம். (தொடர்ச்சி.)

---

**(அர்ஜுனன், இந்திரன் தனக்கு அனுக்ரஹத்துடன் கவசம் கிரீடம் முதலியவைகளைக் கொடுத்ததை யுதிஷ்டிரனுக்குச் சொல்லியதும், அவர் திவ்யாஸ்திரங்களைப்பார்க்க விரும்பியதும், அர்ஜுனன் மறுநாள் காட்டுவதாகச் சொல்லியதும்.)**

பிறகு, அதிக நம்பிக்கைக்குரியவனும் தேகத்தில் பாய்ந்த அம்புகளால் மிகக் காயப்படுத்தப்பட்டவனுமான என்னைத் தேவராஜன் அனுக்கிரஹித்து, ஸமயத்தில், 'பாரத! திவ்யாஸ்திரங்கள் அனைத்தும் உன்னிடத்திலிருக்கின்றன. பூமியில் மனிதனொருவனாவது உன்னை அவமதிப்பதற்குச் சக்தியுள்ளவனல்லன். புத்திர!

[1] அஸுரர் தானவர் என்று வருதலால் அஸுரர் தனுபுத்ரரல்லாத மற்றவரென்று கொள்ளவேண்டும்.

பீஷ்மர், த்ரோணர், க்ருபர், கர்ணன், சகுனி ஆகிய இவர்கள் (மற்ற) அரசர்களோடு சேர்ந்தும் யுத்தத்தில் நிற்கின்ற 'உன்னுடைய பதினாறில் ஓர் அம்சத்துக்கும் ஈடாகார்' என்னும் இந்தவசனத்தை உரைத்தான். பிரபுவும் தேவனுமான இந்திரன் சரீரத்தைக் காக்கிறதும் உடைக்கமுடியாததுமான இந்தத் திவ்யகவசத்தையும் பொன்மயமான மாலையையும் பேரொலியுள்ள தேவதத்தமென்கிற சங்கத்தையும் [1] எனக்குக் கொடுத்தான். இந்திரன் தானே இந்தத் திவ்ய கிரீடத்தையும் (என்தலையில்) சூட்டினான். இந்திரன், பிறகு, அழகியவைவையும் பெரியவைவையுமான இந்தத் திவ்ய வஸ்திரங்களையும் திவ்யாபரணங்களையும் எனக்குக் கொடுத்தான். வேந்தரே! இவ்வண்ணம் நன்றாகப் பூஜிக்கப்பட்டுப் புண்யமான அந்த இந்திரனுடைய அரண்மனையில் கந்தர்வச் சிறுவர்களோடுகூடி ஸுகமாக வஸித்துக்கொண்டிருந்தேன். பிறகு, தேவர்களோடுகூட மகிழ்ந்த இந்திரன் என்னைப் பார்த்து, 'அர்ஜுன! உனக்குச் செல்வதற்கு இது ஸமயம். ஏனெனில், உன்னுடைய ப்ராதாக்கள் நினைக்கிறார்கள்' என்று சொன்னான். பாரதரே! அரசரே! சூதாட்டத்தாலுண்டான துன்பத்தை நினைத்துக்கொண்டு நான் இப்படி ஐந்துவர்ஷகாலம் இந்திரனுடைய அரண்மனையில் வஸித்தேன். பிறகு, பிராதாக்களால் சூழப்பட்டிருக்கிற உம்மை இந்தக் கந்தமாதனமலையை அடைந்து இதனுடைய சிகரத்தில் கண்டேன்' என்று சொன்னான்.

யுதிஷ்டிரர், 'பாரத! தனஞ்சய! பாக்கிய விசேஷத்தால் உன்னால் அஸ்திரங்கள் அடையப்பட்டன; தேவர்களுக்கு ஈஸ்வரனும் பிரபுவுமான தேவராஜனும் பாக்கிய விசேஷத்தால் ஆராதிக்கப்பட்டான்; பகைவர்களை வாட்டுபவனே! பகவானான ஸ்தாணுவும் பார்வதியுடன்கூடப் பாக்கிய விசேஷத்தால் நேரில் காணப்பட்டார்; குற்றமற்றவனே! உன்னால் சொந்தயுத்தத்தினால் மகிழ்விக்கப்பட்டார். பரதஸ்ரேஷ்டனே! பாக்கிய விசேஷத்தால் நீ லோகபாலர்களோடு சேர்க்கைபெற்றாய். பார்த்த! பாக்கிய விசேஷத்தால் விருத்தி அடைகிறோம். பாக்கிய விசேஷத்தால் நீ திரும்பிவந்தாய். குந்திநந்தன! பட்டணங்களுடைய வரிசைகளுள்ள இந்தப் பூமியை நீ முழுமையும் ஜயித்து எனக்குக் கொடுத்துவிட்டதாக இப்பொழுது நான் பார்க்கிறேன். திருதராஷ்டிரருடைய புத்திரர்களையும் வசப்படுத்தப்பட்டவர்களாக

1 இரட்டித்தலால் ஒரு சொல் விடப்பட்டது.

நான் எண்ணுகிறேன். பாரத! எந்தத் திவ்யாஸ்திரங்களால் அப்படி வல்லவர்களான அந்த நிவாதகவசர்கள் கொல்லப்பட்டார்களோ அப்படிப்பட்ட இந்தத் திவ்யாஸ்திரங்களை நான் பார்க்கவும் விரும்புகிறேன்' என்று சொல்ல, அர்ஜுனன், 'கோரர்களான நிவாதகவசர்கள் என்னால் எந்த அஸ்திரங்களால் நாசம்பண்ணப்பட்டார்களோ அந்தத் திவ்யாஸ்திரங்களனைத்தையும் நீர் நாளைக் காலையில் பார்ப்பீர்' என்று சொன்னான். தனஞ்சயன் அவ்விடத்தில் இவ்வண்ணமாகத் தன்வரவைச் சொல்லிவிட்டு, அந்த ராத்திரி எல்லாப் பிராதாக்களோடும் வஸித்தான்.

---

## நூற்றெழுபத்தேழாவது அத்யாயம்.

## நிவாதகவசயுத்தபர்வம். (தொடர்ச்சி.)

**(அர்ஜுனன் யுதிஷ்டிரருக்குத் திவ்யாஸ்திரங்களைக் காட்டியதும், அஸ்திரங்களின் தேஜஸினால் உலகங்களுக்குக் கலக்கம் உண்டாகவே, இந்திரனுடைய தூண்டுதலால் நாரதர் அர்ஜுனனைக்கண்டு அஸ்திரங்களைக் காட்டக்கூடாதென்று தடுத்ததும்.)**

அந்த இரவு சென்றவுடன், தர்மராஜரான யுதிஷ்டிரர் எழுந்திருந்து பிராதாக்களோடுகூட அவசியமாகச் செய்யத்தக்க காரியங்களைச் செய்தார். பிறகு, அந்த யுதிஷ்டிரர் மாதாவுக்கு ஸந்தோஷத்தை உண்டுபண்ணுகிற அர்ஜுனனை நோக்கி, 'குந்தீநந்தன! உன்னால் எந்த அஸ்திரங்களால் தானவர்கள் ஜயிக்கப்பட்டார்களோ அந்த அஸ்திரங்களைக் காண்பிப்பாயாக' என்று கட்டளையிட்டார்.

அரசரே! பாரதரே! பிறகு, பாண்டுவின் புதல்வனான தனஞ்சயன், தேவர்களால் கொடுக்கப்பட்ட அந்தத் திவ்யாஸ்திரங்களைக் காட்டலானான். மகாதேஜஸ்வியும் பாண்டுவின் புதல்வனும் பிரகாசிப்பவனும் நீண்டபுஜங்களுள்ளவனும் கௌந்தேயனுமான அந்தத் தனஞ்சயன், அதிகமான சுத்தியைப் பெற்றவனாக நியாயப்படி த்ரியம்பகருக்கும் இந்திரனுக்கும் நமஸ்காரம் செய்து மலைகளாகிற மூக்கணையுடனும் சக்கரங்களுடனும் அச்சுடனும் கூடியதும் மங்களகரமான மூங்கில்களையுடையதும் 1 த்ரிவேணு

---

1 'அச்சையும் மூக்கணையையும் சேர்க்கும் முப்பட்டையான மரம்' என்பது பழைய உரை.

வுள்ளதுமான மனத்தினால் ஏற்படுத்தப்பட்ட பூமியாகிற ரதத்திலேறி விளங்குகிறவனாகவும் நல்ல ஒளி பொருந்திய அந்தத் திவ்ய கவசத்தால் நன்கு மூடப்பட்டவனாகவும் காண்டீவமென்கிற வில்லையும் தேவதத்தமென்கிற சங்கத்தையும் எடுத்து மிக விளங்குகிறவனாகவும் வரிசையாக அந்தத் திவ்யாஸ்திரங்களைக் காண்பிக்கத்தொடங்கினான். பிறகு, அந்தத் திவ்யாஸ்திரங்கள் பிரயோகிக்கப்படும்பொழுது, (அர்ஜுனனால்) கால்களால் திடமாக மிதிக்கப்பட்ட பூமியானது மரங்களுடன்கூட நடுக்கமுற்றது; நதிகளும் கலங்கின; அப்படியே பெருங்கடலும் தத்தளித்தது; மலைகளும் வெடித்தன; காற்று வீசவில்லை; ஸூர்யன் பிரகாசிக்கவில்லை; நெருப்பு ஜ்வலிக்கவில்லை; பிராம்மணர்களுக்கு என்ன பிரயாசைப்பட்டும் வேதங்கள் நினைவுக்கு வரவில்லை; ஜனமேஜயரே! பூமிக்குள்ளிருந்த பிராணிகள் துன்பப்படுத்தப்பட்டு மேலே எழுந்து பாண்டவனைச் சூழ்ந்துகொண்டன. நடுக்கமுற்றவைகளும் அஸ்திரங்களால் எரிக்கப்படுகின்றவைகளும் முகம் வேறுபட்டவைகளுமான அந்தப் பிராணிகளனைத்தும் கைகுவித்துக்கொண்டு அப்பொழுது தனஞ்சயனை (உயிருக்கு) வேண்டிக்கொண்டன. பிறகு, பிரம்மரிஷிகளும் ஸித்தர்களும் மஹரிஷிகளும் ஜங்கமங்களான எல்லாப் பிராணிகளுமே நேரில் வந்தனர். சிறந்த தேவரிஷிகளும் தேவர்களும் யக்ஷர்களும் ராக்ஷஸர்களும் கந்தர்வர்களும் அப்படியே பக்ஷிகளும் ஆகாயத்தில் ஸஞ்சரிக்கின்ற எல்லாப் பிராணிகளுமே நேரில் வந்தனர். பிறகு, பிரம்மதேவரும் எல்லா லோகபாலர்களும் ப்ரமதகணங்களுடன்கூடின பகவான் மகாதேவரும் அப்பொழுது நேரில் வந்தார்கள். மகாராஜரே! பிறகு, தேவலோகத்திலுண்டான புஷ்பங்களோடுகூடின காற்றானது அர்ஜுனன்மீது நாற்புறங்களிலும் விசித்திரமான புஷ்பங்களை வாரி இறைத்தது. தேவர்களால் ஏவப்பட்ட கந்தர்வர்கள் பலவிதக்காதைகளைப் பாடினார்கள். வேந்தரே! அப்ஸரஸுகளின் கூட்டங்கள் கூடிக்கூடி நடித்தன.

அரசரே! அப்படிப்பட்ட அந்த ஸமயத்தில், தேவர்களால் ஏவப்பட்ட நாரதர் வந்து அர்ஜுனனைப் பார்த்து, 'பாரத! அர்ஜுன! அர்ஜுன! திவ்யாஸ்திரங்களைப் பிரயோகம் செய்யாதே. இந்த அஸ்திரங்கள், குறிவைத்தடிக்கத்தக்க லக்ஷ்யமில்லாமலிருக்கும் தருணத்தில் எவ்விதத்தாலும் பிரயோகிக்கத்தக்கவைகளல்ல. குருநந்தன! லக்ஷ்யத்திலும் ஆபத்தை அடை

யாதவன் ஒருபொழுதும் பிரயோகிக்கக்கூடாது. அப்படி அஸ்திரங்களைப் "பிரயோகித்தால் பெரிதான தோஷம் நேரும். தனஞ்சய! இந்த அஸ்திரங்கள் சாஸ்திரப்படி ரக்ஷிக்கப்படுமாகில் நல்ல பலமுள்ளவைகளும் ஸுகத்தை உண்டுபண்ணத்தக்கவைகளுமாகும்; ஸம்சயமில்லை. பாண்டவ! இவைகள் ரக்ஷிக்கப்படாமற்போனால் மூவுலகங்களுடைய விநாசத்திற்கும் காரணமாகும். மீண்டும் இவ்வண்ணம் ஒருபொழுதும் செய்யாதே. 'அஜாத சத்துருவே! அர்ஜுனனால் பகைவர்களைக் கொல்வதற்காகப் பிரயோகிக்கப்படுகின்ற அந்த அஸ்திரங்களை யுத்தத்தில் நீயும் பார்ப்பாய்' என்று சொன்னார். பரதஸ்ரேஷ்டரே! பிறகு, எல்லாத் தேவர்களும் மற்றும் அங்கு வந்திருந்தவர்களும் பார்த்தனைத் தடுத்துவிட்டு வந்தபடியே சென்றார்கள். குருவம்சத்தில் உதித்தவரே! அவர்களனைவரும் திரும்பிப்போனபிறகு, அந்தப் பாண்டவர்கள் ஸந்தோஷத்துடன்கூடினவர்களாக அதேவனத்தில் திரௌபதியுடன் வாஸம்செய்தார்கள்" என்று கூறினார்.

நிவாதகவசயுத்தபர்வம் முற்றிற்று.

---

## நூற்றெழுபத்தேட்டாவது அத்யாயம்.

## [1] ஆஜகர பர்வம்.

**(அர்ஜுனன் வந்தபின் யுதிஷ்டிரர் கந்தமாதனமலையினின்று இறங்க முயன்றதும், லோமசர் பாண்டவர்களுக்கு ஜயத்தைக்கொடுக்கிற ஆசீர்வசனங்களைக்கூறி ஸ்வர்க்கம் சென்றதும்.)**

ஜனமேஜயர், "அஸ்திரங்களில் தேர்ச்சிபெற்றவனும் ரதிகர்களுள் சிறந்த வீரனுமான அந்த அர்ஜுனன் இந்திரனுடைய மாளிகையிலிருந்து திரும்பி வந்தபிறகு, பார்த்தர்கள் சூரனை தனஞ்சயனுடன் சேர்ந்து, அதற்குப்பின்பு என்ன செய்தார்கள்?" என்று வினவ, வைசம்பாயனர் சொல்லலானார்.

"குபேரனுடைய உத்யானவனத்தை அடைந்த வீரர்களான அந்த அரசர்கள் இந்திரனுக்கு நிகரான அர்ஜுனனோடு அந்த வனங்களிலும் மிக அழகிய அந்தச் சிறந்த மலையிலும் விளையாடினார்கள். வில்லாளியும் அஸ்திரங்களில் எப்பொழுதும் முயற்சியுள்ளவனும் அரசனுமான அந்தக் கிரீடியானவன் இணையில்லாதவைகளான அந்த வீடுகளையும் பலவகை மரங்

---

[1] அஜகரம் = மலைப்பாம்பு.

களால் சூழப்பட்ட விளையாட்டிடங்களையும் பார்த்துக்கொண்டு பலவாறு ஸஞ்சரித்தான். அரசரே! ராஜகுமாரர்களான பாண்டவர்கள் அரசனான குபேரனுடைய அனுக்ரகத்தாலுண்டான வாஸஸ்தானத்தைப்பெற்றபின் மனிதர்களுடைய ஐஶ்வர்யத்தை விரும்பவில்லை. அவர்களுக்கு அந்தக்காலம் மங்களகரமாயிருந்தது. பாண்டவர்கள் அந்தக் கந்தமாதனத்தில் அர்ஜுனனோடு சேர்ந்து நான்கு வருஷகாலம் ஒருதினம்போல் ஸுகமாக வஸித்தார்கள். வனங்களில் வஸிக்கின்ற பாண்டவர்களுக்கு முந்தின ஆறுவருஷங்களும் பிந்தின நான்குவருஷங்களுமாகச் சேர்ந்து பத்துவருஷங்களும் மங்களகரமாகச் சென்றன. பிறகு, பலசாலியான பீமஸேனனும் அர்ஜுனனும் தேவராஜனுக்கு ஸமானர்களும் வீரர்களுமான நகுல ஸஹதேவர்களும் அரசரான யுதிஷ்டிரருடைய ஸமீபத்தில் உட்கார்ந்து ஏகாந்தமான ஸமயத்தை அடைந்து கூறலாயினர்.

'குருராஜரே! உம்முடைய பிரதிஜ்ஞையை உண்மையாகச் செய்யக்கருதியும் உம்மை அனுஸரித்து உமக்குப் பிரியத்தைச் செய்ய விரும்பியும் நாங்கள் பரிஜனங்களுடன்கூடின துர்யோதனனைக் கொல்வதற்காகக் காடுகளைவிட்டுச் செல்லவில்லை. ஸுகத்துக்குத் தகுந்தவர்களான நாம் துர்யோதனனால் ஸுகம் கவரப்பட்டவர்களாக இந்தப் பதினோராவது வருஷத்தில் வனத்தில் வஸிக்கிறோம். அதமமான புத்தியும் நடையுமுள்ள அந்தத் துர்யோதனனை வஞ்சித்து அஜ்ஞாதவாஸத்தை ஸுகமாக அடைவோம். வேந்தரே! உம்முடைய கட்டளையினால் சங்கையற்றவர்களாகக் கௌரவத்தைவிட்டுக் காடுகளில் ஸஞ்சரிக்கிறோம். ராஜ்யானுபவத்தில் பேராசையுள்ளவர்களான அந்தக் கௌரவர்கள் ஸமீபத்தில் வாஸம்செய்தால் நம்மை அறிந்துவிடுவார்கள்; தூரதேசத்திலிருந்தால் நம்மை அறியமாட்டார்கள். அப்படிப்பட்ட தூரதேசத்தில் ஒருவருஷகாலம் மறைந்து ஸுகமாக வஸித்துச் சத்ருவதமாகிற புஷ்பத்துடனும் ராஜ்யப்ராப்தியாகிற பழத்துடனும்கூடின வைரத்தை அரசர்களுள் அதமனும் பரிஜனங்களால் சூழப்பட்டவனுமான அந்தத் துர்யோதனனுக்குத் [1] திருப்பிக்கொடுத்து மனிதர்களுள் அதமனான அந்தத் துர்யோதனனை எளிதில் ராஜ்யத்தினின்று எடுத்துவிடுவோம். தர்மராஜரே! பிறகு, பூமியை அடைவீராக. நரதேவரே! ஸ்வர்க்கம்

1 தீமை செய்தவனுக்குத் தீமையே செய்து என்பது கருத்து.

போன்ற இந்த இடத்தில் ஸஞ்சரிக்கின்ற நாம் சோகத்தைப் போக்கிக்கொள்ளலாம். பாரதரே! ஆனால், புண்யஸம்பந்தம் பெற்ற உம்முடைய கீர்த்தியானது ஜங்கமங்களும் ஸ்தாவரங்களுமான உலகங்களில் அழிந்துபோய்விடுமன்றோ? ஆகையால், கௌரவஶ்ரேஷ்டர்களுடைய ராஜ்யத்தை அடைந்து, பிறகு, பெரும்புகழையும், அதற்குமேல், நல்ல க்ரியைகளையும் அடைதல் கூடும். அரசரே! குபேரனிடத்தினின்று அடைகிற இந்த ஸுகமோ உம்மால் எப்பொழுதும் அடையக்கூடியது. பாரதரே! குற்றம் செய்தவர்களான பகைவர்களைக் கொல்வதிலாவது அவர்களைச் சிறைசெய்வதிலாவது புத்தியைச் செலுத்தும். வேந்தரே! வஜ்ராயுதத்தைக் கையில் தாங்கின மஹேந்திரன்கூட நேரில் யுத்தரங்கத்தை அடைந்து உம்முடைய உக்கிரமான தேஜஸ்ஸைத் தாங்க மாட்டான். தர்மராஜரே! உம்முடைய கார்யஸித்தியின்பொருட்டு முயற்சியுள்ளவர்களான அந்தக் கிருஷ்ணனும் ஸாத்யகியும் யுத்தத்திற்காகத் தேவர்களால் எதிர்க்கப்பட்டாலும் ஒருபொழுதும் மனவருத்தத்தைப் பாராட்ட மாட்டார்கள். அரசரே! கிருஷ்ணன் எப்படி பலத்தினால் நிகரில்லாதவரோ அப்படியே ஸாத்யகியும் நிகரில்லாதவன். ராஜஶ்ரேஷ்டரே! கிருஷ்ணன் எவ்வாறு அந்த யாதவர்களோடு கூடி உம்முடைய கார்யஸித்தியின்பொருட்டு முயற்சியுள்ளவரோ அவ்வாறே வீரர்களும் அஸ்திரப்ரயோகத்தில் ஸமர்த்தர்களுமான இந்த நகுலஸஹதேவர்களும் முயற்சியுள்ளவர்களாக இருக்கிறார்கள். உம்முடைய தனலாபத்தையும் ஐஶ்வர்யத்தாலுண்டான மேன்மையையும் பிரதானமாகக்கொண்டவர்களான நாங்கள் பகைவர்களை எதிர்த்துப் போர்புரிந்து வைரசாந்தியைச் செய்யப் போகிறோம்' என்று ஹிதமாயும் பிரியமாயுமிருக்கிற வசனத்தை உரைத்தார்கள்.

பிறகு, பெரிய மனமுள்ளவரும் மிகச்சிறந்தவருமான தர்மபுத்திரர், அவர்களுடைய அந்த அபிப்ராயத்தைத் தெரிந்துகொண்டு, அரசனான வைஶ்ரவணனுடைய வாஸஸ்தானத்தை அடைந்து வலமாகச் சுற்றிவந்தார். தர்மராஜர் வீடுகளையும் நதிகளையும் தடாகங்களையும் எல்லா ராக்ஷஸர்களையும் கேட்டு விடைபெற்றுக்கொண்டு வந்தவழியை நோக்கலானார். பிறகு, பெரிய மனமுள்ளவரும் பரிசுத்தமான புத்தியுள்ளவருமான அந்த யுதிஷ்டிரர் மலைகளுள் சிறந்த மலையை மறுபடியும் நோக்கி, 'பர்வதராஜனே! காரியங்களை முடித்தவனாகவும் ஸுஹ்ருத்துக்களுடன்

சேர்ந்தவனாகவும் சத்துருக்களை ஜயித்து ராஜ்யத்தையும் திருப்பி யடைந்து தவம்புரிவதற்காக மனத்தை அடக்கினவனாகவும் உன்னை நான் மறுபடியும் பார்ப்பேன்' என்று சொல்லிவிட்டுப் பிரயாணத்தில் புத்தியைச் செலுத்தினர்; எல்லாத் தம்பிமார்களாலும் பிராம்மணர்களாலும் சூழப்பட்டவராக மீண்டும் அந்த வழியினாலேயே திரும்பினர். இவர்களைக் கூட்டம் கூட்டமாக மலைஅருவிகளில் கடோத்கசன் முன்போலவே சுமந்தான். மனமகிழ்ந்தவரும் நிலைத்த பிரம்மதேஜஸுள்ளவருமான அந்த லோமச மஹரிஷியானவர், புறப்பட்ட அந்தப் பாண்டவர்களனைவருக்கும் தகப்பன் புத்திரர்களுக்கு உபதேசிப்பதுபோல உபதேசித்து அப்பொழுது அவர்களுக்கு விஜயத்தையும் சொல்லி ஸ்வர்க்கத்தை அடைந்தார். புருஷஶ்ரேஷ்டர்களான பாண்டவர்கள் அந்த ஆர்ஷ்டிஷேணராலும் அவ்வாறே உபதேசிக்கப்பட்டவர்களாக அழகிய தீர்த்தங்களையும் தர்மாரண்யங்களையும் மற்றப் பெரிய தடாகங்களையும் பார்த்துக்கொண்டு சென்றார்கள்.

## நூற்றெழுபத்தொன்பதாவது அத்யாயம்.

## ஆஜகரபர்வம். (தொடர்ச்சி.)

---

(பாண்டவர்கள் கந்தமாதனத்தினின்று இறங்கி முறையே கைலாஸத்தையும் வ்ருஷபர்வா ஸுபாது முதலியவர்களின் இருப்பிடத்தையுமடைந்து திரும்பவும் த்வைதவனம் வந்து ஸரஸ்வதீநதியின் கரையில் ஸுகமாக மகிழ்ந்திருந்தது.)

1மலை அருவிகளோடும் திக்கஜங்களோடும் கின்னரர்களோடும் பறவைகளோடுங்கூடியதும் ஸுகமான இருப்பிடமுமான சிறந்த கந்தமாதன மலையை விட்டு அகலுகின்ற பரதஶ்ரேஷ்டர்களான அந்தப் பாண்டவர்களுக்கு மகிழ்ச்சி உண்டாகவில்லை. பிறகு, குபேரனுக்குப் பிரியமானதும் மேகங்களால் பிரகாசிப்பதுமான கைலாய மலையைப் பார்த்துப் பரதஶ்ரேஷ்டர்களான அவர்களுக்கு மறுபடியும் பெருமகிழ்ச்சி உண்டாயிற்று. வீரர்களும் பிரஸித்திபெற்றவர்களும் வில்லாளிகளும் கத்தியைப் பிடித்தவர்களுமான அந்தப் புருஷஶ்ரேஷ்டர்கள் மிக மேடான இடங்களையும் மலைக்கணவாய்களையும் சிங்கங்களிருக்குமிடங்களையும் மலைக்குகைகளையும் ஆங்

காங்குப் பலவிதமான பள்ளத்தாக்குக்களையும் நன்றாகப் பார்த்துக்கொண்டும் அப்படியே மிருகங்களாலும் பறவைகளாலும் யானைகளாலும் வியாபிக்கப்பட்ட மற்றப் பெரிய காடுகளையும் பார்த்துக்கொண்டும் சென்றார்கள். அழகிய காடுகள், நதிகள், தடாகங்கள் மலைகளிலுள்ள சிறிய குகைகள் மலையிலுள்ள பெரிய குகைகள் இவைகள் அடிக்கடி இரவு வந்தபொழுது அந்தப் புருஷஸ்ரேஷ்டர்களுக்கு இருப்பிடமாயின. அவர்கள் பலவாறான தூர்க்கங்களில் வாஸம் செய்து நினைத்தற்கரிய உருவமுள்ள கைலாஸத்தைத் தாண்டி, மிக அழகியதான விருஷபர்வாவினுடைய அந்தச் சிறந்த ஆஸ்ரமத்தை அடைந்தார்கள். அந்தப் பார்த்தர்கள் அரசனான விருஷபர்வாவுடன் சேர்ந்து அவனால் உபசரிக்கப்பட்டுக் களைதீர்ந்து மங்களகரமான தேசாந்தரப் பிரயாணத்தை விரிவாக உள்ளபடி அந்த விருஷபர்வாவுக்குச் சொன்னார்கள். வீரர்களான அந்தப் பாண்டவர்கள் தேவர்களாலும் மகரிஷிகளாலும் அடையப்பட்ட அவனுடைய புண்யாஸ்ரமத்தில் ஓரிரவு ஸுகமாக வஸித்து மறுபடியுமே வாஸத்தை (விரும்பி) விசாலையென்னும் பதரியை நோக்கி ஸுகமாக வந்தார்கள்.

பிறகு, மஹானுபாவர்களும் நாராயணருடைய ஸ்தானத்தை அடைந்தவர்களுமான பாண்டவர்களனைவரும் குபேரனுக்குப் பிரியமானதும் தேவர்களாலும் ஸித்தர்களாலும் அடையப்பட்டதுமான தாமரை ஓடையை நன்குபார்த்துத் துக்கம் நீங்கினவர்களாகி அந்த இடத்தில் வஸித்தார்கள். எல்லா மனிதர்களுள்ளும் தலைமைவாய்ந்தவர்களான பாண்டுவின் புதல்வர்கள் அந்தத் தாமரைஓடையைக் கண்டு சோகம் நீங்கி நந்தனவனத்தில் வாஸத்தைப்பெற்று மனமாசற்றவர்களான பிரம்மரிஷிகள்போல மகிழ்ந்தார்கள். நரஸ்ரேஷ்டர்களான பாண்டவர்களனைவரும் ஸுகமாக ஒருமாதகாலம் பதரிகாஸ்ரமத்தில் மகிழ்ந்திருந்து, பிறகு, முன்போனவழியினாலேயே அடைவில் கிராதர்களுக்கு அரசனான ஸுபாகுவினுடைய தேசத்தை நோக்கி வந்தார்கள்; சீனதேசத்தையும் துஷாரதேசத்தையும் தரததேசத்தையும் மிக அழகிய குளிந்தனுடைய தேசமனைத்தையும் பிரவேசிக்கமுடியாத இமயமலையைச் சார்ந்த பிரதேசங்களையும் தாண்டி ஸுபாகுவினுடைய நகரத்தைக் கண்டார்கள். அந்த ஸுபாகுவென்கிற அரசன் ராஜபுத்திரர்களும் ராஜபௌத்திரர்களுமான அந்தப் பாண்டவர்களனைவரும் தன் தேசத்தில் வந்திருப்பதைக் கேட்டு அன்புடன் அவர்களை எதிர்

கொண்டு வரவேற்றான். கௌரவஸ்ரேஷ்டர்களான பாண்டவர்களும் ஸுபாகுவை மகிழ்வித்தார்கள். அந்தப் • பாண்டவர்களனைவரும், ஸுபாகுவென்கிற அரசனோடும் 1 விசோகன் முதலிய புத்திரர்களோடும் இந்திரசேனனுடன் சேர்ந்த பரிசாரகர்களோடும் சமையல் கட்டிலிருந்த 2 சமையற்காரர்களோடும் சேர்ந்து, அந்த இடத்தில் ஓர் இரவு ஸுகமாக வாஸம் செய்து, ஸாரதிகளையும் எல்லா ரதங்களையும் அழைத்துக்கொண்டு, அனுசரர்களோடுகூடின கடோத்கசனை அனுப்பி விட்டு, பிறகு, யமுனையின் உத்பத்திஸ்தானமான சிறந்தமலையை நோக்கிச் சென்றார்கள். புருஷர்களுள் சிறந்த வீரர்களான பாண்டவர்கள் அருவிகளுடன்கூடியதும் பனியாகிற உத்தரியத்தையும் வெளுப்பும் சிவப்புமான தாழ்வரையாகிற (தலைப்பாகையையும்) உடையதுமான அந்த மலையில் விசாகயூபமென்கிற ஸ்தலத்தை அடைந்து அப்பொழுது வாஸம் செய்தார்கள். வேட்டையில் அதிகப்பற்றுதலுள்ள பாண்டவர்கள் பன்றிகளாலும் பலவகை மிருகங்களாலும் பலவகைப் பறவைகளாலும் வியாபிக்கப்பட்டதும் குபேரனுடைய உத்யானவனம்போலப் பிரகாசிக்கின்றதுமான பெரிய காட்டை க்ஷேமமாக அடைந்து அங்கே ஒரு வருஷகாலம் மகிழ்ந்திருந்தார்கள். அந்த இடத்தில் அதிக பலமுள்ளதும் பசியினால் பீடிக்கப்பட்டதும் யமன்போலப் பயங்கரமான ரூபமுள்ளதும் மலையினுடைய குகையில் இருப்பதுமான பெரும் பாம்பின்வாயில் அகப்பட்டுப் பீமஸேனன் வ்யஸனத்தாலும் மதிமயக்கத்தாலும் துன்பமுற்ற மனமுள்ளவனானான். அங்கே, தர்மவான்களுள் சிறந்தவரும் முடிவற்ற தேஜஸுள்ளவருமான யுதிஷ்டிரர் மலைப்பாம்பினால் உடம்புமுழுவதும் சுற்றப்பட்ட பீம

1 'ஸுதை:' என்பது கிருஷ்ணாசாரியர் பதிப்பின் பாடமும் நீலகண்ட வியாக்யானம் பம்பாய்ப் பதிப்பின் பாடமுமாம்; 'விசோகன் முதலிய தேர்ப்பாகர்களோடும்' என்பது இங்கிலீஷ் மொழிபெயர்ப்பு. அதற்கு, 'ஸூதை:' என்னும் பாடம் இருக்கவேண்டும். பாண்டவ புத்ரர்களில் விசோகனென்னும் பெயருடையவன் காணப்படாமையாலும் அவர்கள் பாண்டவர்களுடன் வனம் வந்தது சொல்லப்படாமையாலும் பீமஸேனனுடைய தேர்ப்பாகனுக்கு விசோகனென்ற பெயரிருத்தலாலும், 'ஸூதை:' என்ற பாடமே பொருத்தமுடையதென்று தோன்றுகிறது.

2 'பௌரோகவை:' என்பது மூலம்; 'கூடார முதலியவற்றைச் சுமந்து முன்னே செல்பவர்களுடன்' என்பது பழைய உரை.

ஸேனனுக்குத் திட்டுப்போலாகி அவனை விடுவித்தார். பிரஸித்தர்களான அந்தக் கௌரவர்கள், பிறகு, ஸமீபித்து வருகின்ற பன்னிரண்டாவது வருஷம் முழுவதும் வனத்தில் ஸுகமாக மகிழ்ந்து வஸிப்பதற்காகக் குபேரனுடைய உத்யானம்போலப் பிரகாசிக்கின்ற அந்த வனத்தினின்று காந்தியினால் ஜ்வலிப்பவர்களாகவும் தவத்துடன்கூடியவர்களாகவும் புறப்பட்டார்கள். பிறகு, எப்பொழுதும் வில்வித்தை பயிலுதலையே முக்கியமான பொழுதுபோக்காகவுடைய பாண்டவர்கள் அந்த இடத்தினின்று பாலைவனங்களின் ஓரமாகச்சென்று வஸிக்கவிரும்பி ஸரஸ்வதீ நதியை அடைந்து அங்கிருந்து த்வைதவன தடாகத்தைநோக்கி வந்தார்கள். அந்தப் பாண்டவர்கள் த்வைதவனத்தில் வஸிப்பதற்காக வந்ததைக் கண்டு, தவத்தையுடையவர்களும் ஐம்பொறியடக்கினவர்களும் ஆசாரமுள்ளவர்களும் ஸமாதியுள்ளவர்களும் தர்ப்பத்தையும் தீர்த்தபாத்திரத்தையுமுடையவர்களும் கற்களால் பொடிபண்ணப்பட்ட தான்யங்களைப் பக்ஷிப்பவர்களுமான மஹரிஷிகள் அங்கே பாண்டவர்களைநோக்கி வந்தார்கள். இறலிமரங்களும் ருத்திராக்ஷமரங்களும் [1] ரௌஹீதகமரங்களும் வஞ்சிமரங்களும் அப்படியே இலந்தைமரங்களும் கருங்காலிகளும் வாகைமரங்களும் பில்வமரங்களும் புன்கமரங்களும் பீலுவிருக்ஷங்களும் வன்னிமரங்களும் மூங்கில்களும் ஸரஸ்வதி நதியின் கரையில் முளைத்து வளர்ந்திருந்தன. ராஜகுமாரர்களான பாண்டவர்கள் யக்ஷர்களாலும் கந்தர்வர்களாலும் மஹரிஷிகளாலும் ரமணீயமானதும் தேவர்களுக்கு வாஸஸ்தானம்போலிருப்பதுமான அந்த ஸரஸ்வதிநதியின் கரையில் ப்ரீதியுடன்கூடியவர்களாக ஸஞ்சரித்துக்கொண்டு ஸுகமாக மகிழ்ந்திருந்தார்கள்" என்று கூறினர்.

---

## நூற்றெண்பதாவது அத்யாயம்.

## ஆஜகரபர்வம். (தொடர்ச்சி.)

**(பீமன் வனத்தில் வேட்டைக்காகத் திரிகையில் பெரிய மலைப்பாம்பினால் பிடிக்கப்பட்டது.)**

ஜனமேஜயர், "மகரிஷியே! பதினாயிரம் யானைகளின் பலமுள்ளவனும் பயங்கரமான பராக்கிரமமுள்ளவனுமான பீமன் அந்த

---

1 ஆல் அரசு முதலிய சில மரங்களின் பொதுப்பெயர்.

மலைப்பாம்பினிடத்தினின்று எவ்வாறு மிக்க பயத்தை அடைந்தான்? கர்வமுள்ளவனும் எவன் தாமரைஓடையில் சண்டை செய்து யக்ஷர்களையும் ராக்ஷஸர்களையும் கொன்று புலஸ்தியவம்சத்தில் பிறந்தவனுன குபேரனை யுத்தத்திற்காக அழைத்தானே பகைவர்களைக்கொல்பவனுன அந்தப் பீமஸேனனைப் பயத்தால் கவரப்பட்டவனுகவும் ஆபத்தை அடைந்தவனுகவும் சொல்லுகிறீர். நான் இதைக் கேட்க விரும்புகிறேன். எனக்கு ஆவல் அதிகமாக இருக்கிறதன்றோ?" என்று வினவ, வைசம்பாயனர் சொல்லலானர்.

"அரசரே! அநேக ஆச்சர்யங்களுள்ள காட்டில் வஸிப்பவர்களும் உக்கிரமான விற்களுள்ளவர்களுமான அந்தப் பாண்டவர்கள் ராஜரிஷியான வ்ருஷபர்வாவினுடைய ஆச்ரமத்தை அடைந்திருக்கும்போது, விற்பிடித்தவனும் கத்தியைக் கட்டிக்கொண்டவனுமான பீமஸேனன், அழகியதும் தேவர்களாலும் கந்தர்வர்களாலும் அடையப்பட்டதுமான அந்தக் காட்டைத் தற்செயலாகக் கண்டான். அந்தப் பீமஸேனன் அப்பொழுது தேவர்களாலும் ரிஷிகளாலும் ஸித்தர்களாலும் ஸஞ்சரிக்கப்பெற்றவைகளும், அப்ஸரஸுகளுடைய கூட்டங்களால் அடையப்பட்டவைகளும், சகோரங்களாலும் சக்கரவாகங்களாலும் ஜீவஜீவகங்களாலும் குயில்களாலும் பிருங்கராஜங்களாலும் ஆங்காங்கு ஒலிக்கப்பெற்றவைகளும், எப்பொழுதும் புஷ்பங்களோடும் பழங்களோடும் கூடியவைகளும் குளிர்ந்த பரிசத்துடன் மெத்தென்றிருப்பவைகளும் அதிக நிழலுள்ளவைகளும் உள்ளத்தையும் கண்களையும் மகிழ்விப்பவைகளுமான மரங்களோடுகூடியவைகளுமான இமயமலையைச் சார்ந்த மங்களகரமான இடங்களைப் பார்த்தான். மஹாபலசாலியான அந்தப் பீமஸேனன் வைடூர்யமணிபோன்ற ஜலத்துடனும் பனிபோன்ற நிறமுள்ள பதினுயிரக் கணக்கான அன்னங்களுடனும் காரண்டவங்களுடனுங் கூடிய மலையருவிகளையும் மேகங்களுக்கு வலைகள்போன்ற தேவதாருமரங்களுடைய காடுகளையும் ஹரிசந்தன மரங்களோடு கலந்திருக்கின்ற துங்கமரங்களும் காளீயகமரங்களுமுள்ள காடுகளையும் பார்த்துக்கொண்டும் மேடுபள்ளமில்லாதவைகளும் தண்ணீரில்லாதவைகளுமான மலைவெளிகளில் வேட்டையைக் குறித்து அலைந்துகொண்டும் சுத்தமான அம்புகளால் மிருகங்களை அடித்துக்கொண்டும் திரிந்தான். அநேக யானைகளின் பலமுள்ளவனும் அதிக பலசாலியும்

பருத்ததோள்களுள்ளவனும் பயங்கரமான பராக்கிரமத்தை யுடையவனும் பிரஸித்திபெற்றவனும் பயங்கரனுமான பீம ஸேனன் அந்தக் காட்டில் பெரிய பன்றியை அடித்துப் பன்றிகளுடன்கூடின மான்களையும் எருமைகளையும் ஆங்காங்கு அடித்தான். அநேக யானைகளின் பலமுள்ளவனும் அநேக மனி தர்களைத்தடுத்து யுத்தம் செய்யக்கூடியவனும் சிங்கமும் புலியும் போன்ற பராக்ரமமுள்ளவனுமான அந்தப் பீமஸேனன் பூமி யின் பிரதேசங்களையும் காடுகளையும் ஒலிக்கச்செய்துகொண்டு அந்தக் காட்டில் மரங்களை வேரோடு பறித்தான்; வேகத்தால் அவைகளை ஒடிக்கவும் ஒடித்தான். அச்சத்தைச் செய்பவனும் அஞ்சாதவனும் நெடுநாளாகச் சேர்ந்த கொழுப்புள்ளவனுமான பீமஸேனன் மலையினுடைய சிகரங்களை நொறுக்கிக்கொண்டும் ஒலிக்கச்செய்துகொண்டும் கவலையற்று மரங்களைக் கீழே தள்ளிக் கொண்டும் நாதத்தினால் பூமியை எங்கும் நிரப்பிக்கொண்டும் அடிக் கடி தோள்களைத் தட்டிக்கொண்டும் சிங்கநாதம் செய்துகொண் டும் கைத்தாளம்போட்டுக்கொண்டும் அப்பொழுது வனத்தில் வேகத்தோடு திரிந்தான். அதிக பலமுள்ள சிறந்த யானைகளும் அதிக பலமுள்ள சிங்கங்களும் பீமஸேனனுடைய சத்தத்தாலுண் டான பயத்தினால் குகைகளை விட்டன. மிக்க பயங்கரமான காட் டில் மிருகங்களை அடைய விருப்பமுள்ள பீமஸேனன் பயமில்லா மல் ஓரிடத்தில் ஓடுகிறவனாகவும் ஓரிடத்தில் நிற்கிறவனாகவும் அப்படியே ஓரிடத்தில் உட்காருகிறவனாகவும் ஸஞ்சரித்தான். மனிதர்களுள் சிறந்தவனும் காட்டில் ஸஞ்சரிக்கின்ற வேடன் போன்றவனும் மஹாபலசாலியுமான அந்தப் பீமஸேனன் அந் தக் காட்டில் எங்கும் கால்களாலேயே நடந்து சென்றான். அதிக மனோதைர்யத்துடனும் பராக்ரமத்துடனும்கூடிய அந்தப் பீமஸே னன் பெரிய காட்டில் பிரவேசித்து, எல்லாப் பிராணிகளையும் நடுங்கச் செய்துகொண்டு அத்புதமான நாதங்களைச் செய்தான். பிறகு, பீமனுடைய சத்தத்தினால் பயந்தவைகளும் குகையில் படுத்துக்கொண்டிருப்பவைகளுமான ஸர்ப்பங்கள் வேகத்தோடு வெளியில் சென்றன. பிறகு, தேவஶ்ரேஷ்டன்போலப் பிரகா சிப்பவனும் மஹா பலசாலியுமான பீமஸேனன் மெதுவாக அவை களைப் பின்தொடர்ந்து சென்றான்.

அந்தப் பீமஸேனன், பருத்த தேகமுள்ளதும், மயிர் சிலிர்த் தலைச் செய்கிறதும், உடலினால் குகை முழுமையும் வியாபித்

துக்கொண்டு கிரிதுர்க்கத்தில் வஸிப்பதும், மலைபோலப் பெரிதான தேகமுள்ளதும் [1] தேகத்துக்குமிஞ்சின பெரிய பலமுள்ளதும், உடலிலுண்டான பலவிதப் புள்ளிகளால் விசித்ரமான தேகமுள்ளதும், மஞ்சளுக்கொப்பான காந்தியுள்ளதும், குகைபோன்றதும் நான்கு தெற்றிப்பற்களுடன்கூடியதும் பிரகாசிக்கின்றதுமான வாயையுடையதும், மிகச் சிவந்த ஜ்வலிக்கின்ற கண்களுள்ளதும், அடிக்கடி கடைவாய்களை நக்குகிறதும், எல்லாப் பிராணிகளுக்கும் பயத்தை உண்டுபண்ணுகிறதும், காலனுக்கும் அந்தகனுக்கும் யமனுக்கும் ஒப்பாயிருப்பதும், விஷமயமான மூச்சுவிடுகிற காற்றின் ஓசையினால் அதட்டுகிறதுபோலிருப்பதுமான ஒரு ஸர்ப்பத்தைக் கண்டான். மிகப்பசித்திருக்கிற அந்த மலைப்பாம்பானது விரைவாக எதிரில் வந்து பீமஸேனனை இரண்டு கைகளிலும் வலிந்து பிடித்துக்கொண்டது. அந்தப் பாம்புக்குக் கொடுபட்டிருக்கிற வரத்தின்படி அந்தப் பாம்பினால் சரீரம் நன்கு பிடிக்கப்பட்ட பீமஸேனனுக்கு அப்பொழுது அறிவானது உடனே மயங்கியது. பதினாயிரம் யானைகளுக்குள்ளதும் மற்றவைகளோடு ஒப்பிடக்கூடாததுமான பலமானது பீமஸேனனுடைய இருகைகளுக்குமிருக்கிறது. அந்தப் பாம்பினால் அவ்வாறு வசப்படுத்தப்பட்ட பராக்ரமசாலியான அந்தப் பீமன் மெதுவாகத்துடித்துக்கொண்டு அசைவதற்குச் சக்தியற்றவனானான். பதினாயிரம் யானைகளுக்குச் சரியான தேகபலமுள்ளவனும் சிங்கத்தினுடைய தோள்போன்ற தோள்களையுடையவனும் மிக்க தோள்வலியமைந்தவனுமான பீமஸேனன் பிடிக்கப்பட்டு ஸர்ப்பத்திற்கு ஏற்பட்டிருக்கிற வரதானத்தினால் மதிமயங்கிப் பலத்தை இழந்தான். வீரனான அந்தப் பீமஸேனன் தன்னை விடுவித்துக்கொள்வதில் தீவ்ரமான பிரயத்தினத்தைச் செய்தான்; எவ்விதத்தினாலும் அந்த மலைப்பாம்பைத் திருப்பி அடிப்பதற்குச் சக்தியுள்ளவனாகவில்லை.

[1] வேறு பாடம்.

## நூற்றெண்பத்தோராவது அத்யாயம்.

## ஆஜகரபர்வம். (தொடர்ச்சி.)

(மலைப்பாம்பானது பீமனை நோக்கித் தான் மலைப்பாம்பானதற்குக் காரணத்தைச் சொல்லியதும், கெட்ட நிமித்தங்களைக் கண்டு மனவருத்தமடைந்த யுதிஷ்டிரர் பீமன் சென்ற வழியைத் தொடர்ந்து சென்று அவன் மலைப்பாம்பினால் பிடிக்கப்பட்டிருக்கிறதைக் கண்டதும்.)

சௌர்யமுள்ளவனை அந்தப் பீமஸேனன், அப்பொழுது ஸர்ப்பத்திற்குவசப்பட்டு, அந்த ஸர்ப்பத்தினுடைய வல்லமையை மிகவும் ஆச்சரியமானதென்றும் பெரிதென்றும் எண்ணினன். அவன் பெரும்பாம்பைப் பார்த்து, 'பன்னக! உன் இஷ்டப்படி சொல். ஓ! புஜகச்ரேஷ்ட! நீ யார்? என்னைக்கொண்டு என்ன செய்யப்போகிறாய்? பாண்டுவின் புதல்வனும் தர்மராஜரை அடுத்துப் பிறந்திருப்பவனும் பதினாயிரம் யானைகளுக்குச் சமமான பலமுள்ளவனுமான பீமஸேனன் என்கிற நான் உன்னால் எவ்வாறு வசப்படுத்தப்பட்டேன்? யுத்தத்தில் எதிர்த்துவந்த பிடரிமயிருள்ள சிங்கங்களும் புலிகளும் எருமைகளும் யானைகளும் பலமுறை என்னால் கொல்லப்பட்டிருக்கின்றன. ஸர்ப்பங்களுள் மிகச் சிறந்தவனே! ராக்ஷஸர்களும் பிசாசங்களும் அதிக பலமுள்ள ஸர்ப்பங்களும் என்னுடைய புஜவேகத்தைத் தாங்குவதற்குச் சக்தியுள்ளவைகளாகா. முயற்சியைச் செய்கின்றவனாக இருந்தும் நான் உன்னால் வசப்படுத்தப்பட்டவனாக இருக்கிறேன். இது வித்யாபலமா? அல்லது, உனக்கு ஏற்பட்டிருக்கிற வரதானமா? நாகனே! என்னுடைய பெரிதான இந்தப் பலமானது உன்னால் தோல்வியடைவிக்கப்பட்டதாதலால் மனிதர்களுக்கு உடல் வலிமை நிலையற்றதென்ற எண்ணம் எனக்கு உண்டாகிவிட்டது' என்று சொன்னான்.

இவ்வாறு சொல்லுகின்றவனும் கார்யங்களை எளிதிற் செய்பவனும் வீரனுமான பீமனை அந்த ஸர்ப்பமானது தன் பெரிய உடலினால் எல்லாப் பக்கத்திலும் நன்றாகக்கட்டிச் சுற்றிக்கொண்டது. பிறகு, அந்த ஸர்ப்பமானது அப்பொழுது மிக்க புஜபலமுள்ள அந்தப் பீமனை அடக்கி அவனுடைய பருத்த இருகைகளையும் விட்டுவிட்டு அவனைப்பார்த்து, 'மிக்க புஜபலமுள்ளவனே!

பசித்திருக்கிற எனக்கு, நீ, என்பாக்கிய விசேஷத்தால், நெடுங்காலத்திற்குப்பிறகு, இப்பொழுது, தேவர்களால் ஆகாரமாகக் கொடுக்கப்பட்டாய். பிராணிகளுக்குப் பிராணன் பிரியமானதன்றோ? பகைவரை அடக்குபவனே! என்னால் இந்த ஸர்ப்பரூபம் அடையப்பட்டவிதத்தை நீ என்னிடத்தினின்று அவசியம் கேட்கவேண்டும். என்னுடைய அதனை நீ கேட்பாயாக. நான் மஹரிஷியினால் கோபத்தினால் இந்த நிலைமையை அடையும்படி செய்யப்பட்டேன். சாபத்தினுடைய முடிவை அடையவேண்டுமென்கிற எண்ணமுள்ளவனாக அவை அனைத்தையும் உனக்குச் சொல்லுகிறேன். உன்னுடைய முன்னோர்களுக்கெல்லாம் மூத்தவனும் வம்சத்தைத் தரிப்பவனும் ஆயுவின் புத்ரனுமான நகுஷன் என்கிற ராஜரிஷியானவன் உன்னால் தெளிவாகக் கேட்கப்பட்டிருக்கலாம். அப்படிப்பட்ட நான் பிராம்மணர்களை அவமதித்து அகஸ்தியருடைய சாபத்தால் இந்த நிலைமையை அடைந்தேன். என்னுடைய இந்த விதியைப் பார். இங்கு வந்துகொண்டிருக்கிறவனும் மிக்க பிரியமான தோற்றமுள்ளவனும் கொல்லத்தகாதவனுமான உன்னை நான் இப்பொழுது ஆஹாரமாக உபயோகிக்கப் போகிறேனென்றால் விதியானது எவ்விதமிருக்கிறதென்பதைப் பார். புருஷஶ்ரேஷ்டனே! தினத்தினுடைய ஆறாவது பாகத்தில் யானையோ எருமைக்கடாவோ ஏதொன்று என்னால் பிடிக்கப்படுகிறதோ அது எவ்விதத்தாலும் என்னால் விடப்படுகிறதில்லையன்றோ? குருகுலத்தில் பிறந்தவர்களுள் உத்தமனே! திர்யக்ஜாதிகளில் பிறந்திருக்கிற ஸாமான்யமான ஸர்ப்பத்தினால் நீ பிடிக்கப்படவில்லை. இது எனக்குக் கொடுக்கப்பட்ட வரதானம். இந்திரன் வீற்றிருக்கிற விமானத்தின்மேலிருந்து விரைவாகக் கீழே விழுகின்ற என்னால், 'சாபத்துக்கு முடிவை ஏற்படுத்தும்' என்று சொல்லப்பட்டவரும் ரிஷிகளுள் மிகச் சிறந்தவரும் தேஜஸுள்ளவருமான அந்த அகஸ்தியபகவான் கருணையினால் மூடப்பட்டு என்னை நோக்கி, [1] 'அரசனே! சிலகாலஞ் சென்றபின் உனக்கு (ச் சாபத்தினின்று) மோக்ஷம் உண்டாகும்' என்று சொன்னார். பிறகு, நான் பூமியில் விழுந்தேன். என்னை ஞாபகமானது விடவில்லை. (சாபமானது) நெடுங்காலத்துக்கு முந்தியதானாலும் அடையப்பட்டபடியே எனக்கு நினைவிலிருக்கிறது. அகஸ்தியமஹரிஷியானவர் என்னைப்பார்த்து, 'ஆத்மா, ஆத்மாவல்

1 பொருந்தாமையால் அதிக பாடமான அரைஶ்லோகம் விடப்பட்டது.

லாதது இவற்றின் பாகுபாட்டை அறிந்த எவன் உன்னால் கேட்கப்பட்ட வினாக்களுக்கு விடை கூறுவனோ அவன் உன்னைச் சாபத்தினின்று விடுவிப்பான்' என்று சொன்னார்.

தயையுள்ளவர்களும் என்னிடத்தில் இரக்கமுண்டானவர்களுமான அந்தப் பிராம்மணர்களுடைய, 'வேந்தே! உன்னால் பிடிக்கப்பட்ட பிராணிகள் (உன்னிலும்) அதிக பலசாலிகளாக இருந்தாலும் அவைகள் எல்லாவற்றுக்கும் பலக்குறைவானது விரைவாக உண்டாகும்' என்ற வசனத்தையும் நான் கேட்டேன். பிறகு, அந்தப் பிராம்மணர்கள் மறைந்து போய்விட்டார்கள். அதிக காந்தியுள்ளவனே! நிகரற்ற தீமையைச் செய்த அப்படிப்பட்ட நான் இந்த ஸர்ப்பப்பிறப்பை அடைந்து காலத்தை எதிர்பார்த்துக்கொண்டு, அசுத்தமான நரகத்தில் வஸிக்கிறேன்' என்று கூறியது. மிக்க கைவலிமையுள்ள பீமஸேனன், அந்த ஸர்ப்பத்தைப் பார்த்து, 'மஹாஸர்ப்பமே! நான் உன்விஷயத்தில் கோபிக்கவில்லை. என்னையும் நிந்திக்கவில்லை. மனிதன் ஸுகத்தையோ துக்கத்தையோ வருவிப்பதிலோ போக்குவதிலோ சில ஸமயம் திறமையுள்ளவனும் சில ஸமயம் திறமையில்லாதவனும் ஆகிறான். ஆகலால், அந்த விஷயத்தில் மனத்தை வருத்தக்கூடாது. எந்த மனிதன் தன் வல்லமையினால் தெய்வத்தை வஞ்சிப்பதற்கு ஸாமர்த்தியமுள்ளவனாவான்? தெய்வத்தையே சிறந்ததாக நினைக்கிறேன். மனித முயற்சியோ பயனற்றது. பாகுபலத்தை ஆதாரமாகக் கொண்டவனும் காரணமின்றி இவ்விடத்தில் வந்து இப்பொழுது துரதிர்ஷ்டத்தினால் இந்த நிலைமையை அடைந்திருக்கிறவனுமான என்னைப் பார். எவ்வாறு ராஜ்யத்தினின்று துரத்தப்பட்டவர்களும் காட்டில் வஸிக்கும்படி செய்யப்பட்டவர்களுமான பிராதாக்களைக் குறித்துத் துக்கமடைகிறேனோ அவ்வாறு நான் அழிவதைப்பற்றி இப்பொழுது நான் துக்கிக்கவில்லை. யக்ஷர்களும் ராக்ஷஸர்களும் நிரம்பியிருக்கிற இந்த இமயமலையானது செல்லுதற்கு மிக அரியது. அந்தப் பாண்டவர்கள் மனவருத்தமுற்று என்னைப் பார்க்க விரும்பி முயலுவார்கள். பிறகு, நான் அழிந்ததைக்கேட்டு முயற்சியற்றவர்களாவார்கள். ராஜ்யத்தை அடைவதில் பேராவலுள்ள என்னாலே தர்மசீலர்களான அந்தப் பாண்டவர்கள் துன்புறுத்தப்படுகிறார்களன்றோ? அல்லது, எல்லா அஸ்திரங்களையும் அறிந்தவனும் தேவர்களாலும்

கந்தர்வர்களாலும் ராக்ஷஸர்களாலும் ஜயிக்கமுடியாதவனும் சிறந்த புத்தியுள்ளவனுமான அர்ஜுனன் விசனமடையமாட்டான். மிகுந்த பலமுள்ளவனும் நீண்ட கைகளையுடையவனுமான அந்த அர்ஜுனன் ஒருவனுயிருந்தாலும் தேவராஜனைக்கூட ஸ்தானத்தினின்று விரைவாக நழுவச்செய்யத் திறமையுள்ளவன். அப்படியிருக்க, கெட்ட சூதாட்டத்தை விளையாட்டாகக்கொண்டவனும் உலகத்தாரனைவராலும் பகைக்கப்பட்டவனும் டம்பத்திலும் அறியாமையிலும் பற்றுள்ளவனுமான திருதராஷ்டிரருடைய புத்திரனை ராஜ்யத்தினின்று நழுவும்படி செய்வானென்பதில் ஸந்தேகமென்ன? எங்களுக்குப் பகைவர்களைக்காட்டிலும் அதிகமான மேன்மையைத் தினந்தோறும் விரும்புகிறவளும் புத்திரர்களிடத்தில் பேராவலுள்ளவளும் இரக்கப்படத்தக்கவளுமான என் தாயைப்பற்றியும் விசனமடைகிறேன். ஸர்ப்பமே! நாதனற்றவளான அந்தக் குந்திதேவி என்னால் நிறைவேறுமென்று நினைத்திருந்த அந்த எல்லா விருப்பங்களும் நான் நாசமடைந்தால் எவ்வாறு நிறைவேறினவையாகும்? பெரியோர்களுக்கு வசப்பட்டவர்களும் என் புஜபலத்தால் நன்றாகப் பாதுகாக்கப்பட்டவர்களும் எப்பொழுதும் ஆண்பிள்ளைகளென்கிற கர்வமுள்ளவர்களும் இரட்டைப்பிள்ளைகளுமான நகுலஸஹதேவர்கள் என்னுடைய விநாசத்தினால் உத்ஸாகத்தை இழந்தவர்களும் வீர்யமும் பராக்கிரமமும் நழுவினவர்களும் விசனமுற்றவர்களும் ஆவார்களென்பது எனது எண்ணம்' என்று சொன்னான்.

பீமஸேனன் ஸர்ப்பத்தினுடைய உடலினால் நன்றாக இறுக்கப்பட்டவனாகி அப்பொழுது இவ்வண்ணம் மிகப் புலம்பினான்; கைகாலை அசைப்பதற்குச் சக்தியற்றவனுமானான். குந்திபுத்திரரான யுதிஷ்டிரரோ, அனிஷ்டத்தைத் தெரிவிக்கின்ற கோரமான உத்பாதங்களை நன்றாகச் சிந்திக்கின்றவரும் நல்ல நிலைதப்பின புத்தியுள்ளவருமானார். எரிச்சலுடன் கூடின திசையில் குள்ளநரியானது அவருடைய ஆச்ரமத்திற்குத் தென்புறத்தில் நின்றுகொண்டு அதிக பயமுள்ளதாகிப் பயங்கரமும் அமங்களகரமுமான சப்தத்துடன் ஊளையிட்டது. ஒரு சிறகும் ஒரு கண்ணும் ஒரு காலுமுள்ளதும் கோரமான காட்சியுள்ளதும் பிரகாசமில்லாததுமான விச்சவி என்கிற பக்ஷியானது சூரியனுக்கு எதிரில் ரக்தத்தைக் கக்குகின்றதாகக் காணப்பட்டது. வறண்டதும் அதிவேகமுள்ளதும் பரற்கற்களை அடித்து வருகின்

றதுமான காற்றும் வீசியது. மிருகங்கள் பறவைகள் ஆகிய இவற்றின் சத்தங்களனைத்தும் அமங்களகரமாக இருந்தன. கறுத்த காக்கையானது பின்புறத்தில் இருந்துகொண்டு, 'செல்; செல்' என்று கரைந்தது. அப்படியே, இவருடைய வலக்கையும் அடிக்கடி துடித்தது. இவருடைய மனமும் இடக்காலும் சோர்வை அடைந்தன. அனிஷ்டமான இடக்கண் துடித்தலும் ஏற்பட்டது. பாரதரே! மேதாவியான தர்மராஜரும் பெரும்பயம்சேர்ந்ததாக ஸந்தேகித்துத் திரௌபதியைப் பார்த்து, 'பீமன் எங்கே?' என்று கேட்டார். பாஞ்சாலியானவள், பீமஸேனன் நெடுநேரத்திற்கு முந்தியே (வெளியே) சென்றதாக அவருக்குச் சொன்னாள். மஹாபாகுபலமுள்ள அந்தத் தர்மராஜர் தௌம்யரோடு கூடியவராகப் புறப்பட்டார். தனஞ்சயனைப் பார்த்து, 'த்ரௌபதியின் ரக்ஷணமானது உன்னால் செய்யப்படத்தக்கது' என்று சொன்னார். நகுலனையும் ஸஹதேவனையும் பிராம்மணர்களைப் பாதுகாக்கும்படி கட்டளையிட்டார். குந்தீபுத்ரரும் பிரபுவுமான அந்தத் தர்மராஜர் அந்த ஆஶ்ரமத்திலிருந்தே பீமஸேனனுடைய காலடியை உற்றுப்பார்த்துக்கொண்டு பெருங்காட்டில் அவனைத் தேடினார். அந்த யுதிஷ்டிரர், கீழ்த்திசையை அடைந்து பெரிய கஜயூதபதிகளையும் பீமனுடைய காலடிகளால் பூமி எங்கும் அடையாளமிடப்பட்டிருக்கிறதையும் கண்டார். பிறகு, அரசர், வனத்தில் கொன்றுதள்ளப்பட்டிருக்கிற ஆயிரக்கணக்கான மிருகங்களையும் நூற்றுக்கணக்கான சிங்கங்களையும் மிருகங்களுக்காக ஓடுகின்றவனும் காற்றின் வேகம்போன்ற வேகமுள்ளவனும் வீரனுமான அந்தப் பீமஸேனனுடைய தொடையினால் உண்டுபண்ணப்பட்ட காற்றினால் முறிக்கப்பட்டு வழியில் நிலைகுலைந்து கிடக்கின்ற மரங்களையும் கண்டு அவனுடைய வழியில் சென்றார். அந்த யுதிஷ்டிரர், அப்பொழுது அந்த அடையாளங்களால் சென்று, வறள்காற்று மிகுந்ததும் இலைகளில்லாத மரங்களால் நெருங்கியதும் உவர்நிலமுள்ளதும் ஜலமில்லாததும் முண்மரங்களால் அடர்ந்ததுமான ஓர் இடத்தில் கற்களாலும் மொட்டை மரங்களாலும் சிறிய மரங்களாலும் எல்லாப்பக்கங்களிலும் வியாபிக்கப்பட்டதும் செல்லுதற்கு மிக அரியதும் மேடுபள்ளங்கள் மிகுந்ததுமான மலையின் குகையில் பெரும்பாம்பினால் பிடிக்கப்பட்டு அசைவற்றிருக்கிற தம்பியான பீமனை அப்பொழுது கண்டார்.

---

## நூற்றெண்பத்திரண்டாவது அத்யாயம்.

## ஆஜகரபர்வம். (தொடர்ச்சி.)

### (யுதிஷ்டிரருக்கும் மலைப்பாம்புக்கும் ஸம்வாதம்.)

சிறந்த புத்தியுள்ள யுதிஷ்டிரர் ஸர்ப்பத்தின் உடலினால் சுற்றப்பட்டிருக்கிற அந்தப் பிரியமான தம்பியையடைந்து, 'குந்தியைத் தாயாராக உடையவனே! நீ இந்த ஆபத்தை எவ்வாறு அடைந்தாய்? மலைபோலப் பருத்த உடலுடன்கூடின இந்தப் பன்னக ச்ரேஷ்டன் யார்?' என்னும் இந்த வசனத்தைச் சொன்னார். ஸஹோதரனான அந்தப் பீமஸேனன் தமையனாரான தர்மராஜரைப் பார்த்து, 'அண்ணா! பக்ஷிப்பதற்காக என்னைப்பிடித்துக்கொண்டிருக்கிறதும் ஸர்ப்பம்போலிருப்பதும் அதிக பலமுள்ளதுமான இந்தப் பிராணியானது நகுஷன் என்கிற ராஜரிஷி' என்று தன்னைப் பிடித்தது முதலான அந்தச் செய்கைகளனைத்தையும் கூறினான்.

யுதிஷ்டிரர், ஸர்ப்பத்தைப் பார்த்து, 'ஆயுஷ்மானே! அளவு கடந்தவல்லமையுள்ள என்னுடைய இந்த ப்ராதாவை விட்டுவிடு. நாம் உனக்குப் பசியைப் போக்கக்கூடிய வேறு ஆகாரத்தைக் கொடுப்போம்' என்று சொன்னார். ஸர்ப்பம், 'என் வாயில் வந்து விழுந்திருக்கிற இந்த ராஜபுத்திரன் என்னால் ஆகாரமாக அடையப்பட்டான். நீ போகலாம். இந்த இடத்தில் நீ இருக்கக்கூடாது. இருந்தால், நாளைத்தினம் எனக்கு நீயும் ஆகாரமாகிவிடுவாய். அதிக பாகுபலமுள்ளவனே! இது என்னுடைய விரதம். எவன் நான் இருக்குமிடத்தை அடைகிறானோ அவன் எனக்கு ஆகாரமாகவேண்டும். அப்பனே! நீயும் என்னுடைய இருப்பிடத்தில்வந்து சேர்ந்துவிட்டாய். நெடுங்காலம் கழித்து என்னால் உன்னுடைய இந்தத்தம்பி இப்பொழுது ஆகாரமாக அடையப்பட்டான். நான் இவனைவிடமாட்டேன். வேறொன்றையும் விரும்பமாட்டேன்' என்று சொல்லிற்று.

யுதிஷ்டிரர், 'ஸர்ப்பமே! நீ தேவனா? அல்லது, அஸுரனா? அல்லது, ஸர்ப்பமா? உண்மையான வசனத்தைச் சொல். யுதிஷ்டிரன் உன்னைக் கேட்கிறான். ஸர்ப்பமே! பீமஸேனன் உன்னால் எதற்காகப் பிடிக்கப்பட்டான்? ஸர்ப்பமே! எதை ஆஹாரமாகக் கொண்டால், அல்லது, எதை அறிந்தால் உனக்கு ப்ரீதியுண்டாகும்? நான் உனக்கு எந்த ஆஹாரத்தைக் கொடுப்பேன்? எப்படி

நீ இவனை விடுவாய்?" என்று வினவினர். ஸர்ப்பம், 'தோஷமில்லாதவனே! அரசனே! நான் பிரஸித்திபெற்றவனும் சந்திரனிலிருந்து ஐந்தாமவனும் ஆயுவின் மைந்தனும் உன்குலத்தில் முந்தினவனுமான நகுஷன் என்கிற அரசனாக இருந்தேன். யாகங்களாலும் தவத்தினாலும் வேதாத்தியயனத்தினாலும் இந்திரிய நிக்கிரஹத்தினாலும் விக்கிரமத்தினாலும் நான் மூவுலகங்களுடைய ஆட்சியையும் கவலையற்று அடைந்தேன். அந்த ஐச்வர்யத்தைப் பெற்றதனால் அப்பொழுது கர்வமானது என்னை வந்தணுகியது. ஆயிரம் பிராம்மணர்கள் என் பல்லக்கைத் தூக்கினார்கள். பிறகு, நான் ஐச்வர்யமதத்தால் இறுமாப்படைந்து பிராம்மணர்களை அவமதித்து அகஸ்தியரால் இந்தநிலைமையை அடைவிக்கப்பட்டேனென்று எனக்கு நினைவிருக்கிறது. அரசனே! [1] பாண்டவ! மஹாத்மாவான அந்த அகஸ்தியருடைய அனுக்கிரஹத்தினாலேயே பிரஜ்ஞை இதுவரையும் என்னை விடவில்லை. பகலினுடைய ஆறுவது பாகத்தில் உன்னுடைய இளைய ஸகோதரன் என்னால் ஆஹாரமாக அடையப்பட்டான். நான் இவனை விடப்போகிறதில்லை. மற்றொன்றையும் நான் விரும்பவில்லை. என்னால் இப்பொழுது கேட்கப்படுகிற வினாக்களுக்கு விடைகூறுவாயாகில் அதற்குப் பிறகு உன்னுடைய பிராதாவான பீமஸேனனை விடுவேன்' என்று சொல்லியது.

யுதிஷ்டிரர், 'ஸர்ப்பமே! உன்னிஷ்டப்படி வினவுவாயாக. ஸர்ப்பமே! உனக்குப் பிரீதியை உண்டுபண்ணுவதற்கு நான் சக்தியுள்ளவனாக இருந்தால், உன் கேள்விகளுக்கு மறுமொழி உரைப்பேன். இவ்வுலகில் பிராம்மணனால் எது அறியத்தக்கதோ அதை நீ முழுமையும் அறிகிறாய். ஸர்ப்பராஜனே! ஆகையால், உன் வசனத்தைக் கேட்டு உனக்கு மறுமொழி உரைப்பேன்' என்று சொன்னார். ஸர்ப்பம், 'வேந்தே! எவன் பிராம்மணனாகிறான்? யுதிஷ்டிர! எது அறியத்தக்கது? சொல். உன்னுடைய வாக்கியங்களால் உன்னை அதிகபுத்திசாலி என்று ஊகிக்கிறேன்' என்று சொல்லியது.

யுதிஷ்டிரர், 'நாகேந்திர! எவனிடத்தில் உண்மை, கொடை, பொறுமை, நல்லொழுக்கம், இரக்கம், தவம், கருணை இவைகள் காணப்படுகின்றனவோ அவன் பிராம்மணனென்று கருதப்படு

1 வேறு பாடம்.

கிறான். ஸர்ப்பமே! எது விசேஷங்களில்லாததாயும் தேசத்தாலும் காலத்தாலும் வஸ்துக்களாலும் அளவிட முடியாததாயும் துக்கமில்லாததாயும் ஸுகமில்லாததாயும் இருக்கிறதோ, அகண்ட ஏகரஸமாக இருக்கிற எந்த வஸ்துவினிடத்தில் சென்று மனிதர்கள் மீண்டு ஸம்ஸாரத்தை அடைகிறதில்லையோ அது அறியத்தக்கது. நீ இன்னும் எதைச் சொல்ல விரும்புகிறாய்?' என்று சொன்னார். ஸர்ப்பம், 'யுதிஷ்டிர! பிரமாணமும் ஸத்யமும் வேதமும் நான்கு வர்ணத்தார்களுக்கும் ஹிதமாயிருக்கின்றன. சூத்திரர்களிடத்திலும் உண்மையும் கொடையும் கோபமின்மையும் மன இளக்கமும் அஹிம்ஸையும் கருணையும் இருக்கின்றன. அரசனே! இவ்வுலகில் துக்கமில்லாததும் ஸுகமில்லாததுமான எது அறியத்தக்கதென்று சொல்லப்பட்டதோ ஸுகம் துக்கம் இரண்டினாலும் விடப்பட்ட அவ்வாறான அறியத்தக்க வேறுவஸ்துவானது இருக்கிறதென்று நான் காணவில்லை' என்று சொல்லிற்று.

யுதிஷ்டிரர், 'சூத்திரனிடத்தில் எந்த அடையாளமிருக்கிறதோ அது பிராம்மணனிடத்திலில்லை. சூத்திரஜாதியில் பிறந்ததனால் சூத்திரன் சூத்திரனாகான். பிராம்மணஜாதியில் பிறந்ததனால் பிராம்மணனும் பிராம்மணனாகான். ஸர்ப்பமே! எவனிடத்தில் இந்தச் சமதமாதிகுணங்கள் காணப்படுகின்றனவோ அவன் பிராம்மணனாக எண்ணப்படுகிறான். ஸர்ப்பமே! எவனிடத்தில் இந்தச் சமதமாதிகுணங்களில்லையோ அவனைச் சூத்ரனென்று குறிக்கவேண்டும். ஸர்ப்பமே! அறியத்தக்கதில்லையென்றும் ஸுகதுக்கங்களால் விடுபட்ட ஸ்தானமானது இந்த இடத்தைக்காட்டிலும் வேறிடத்தில் இல்லை என்றும் எது உன்னால் கூறப்பட்டதோ இந்த உன்னபிப்ராயம் இவ்வண்ணமே. ஸுகம் துக்கம் இரண்டினாலும் விடுபட்டிருக்கிற ஸ்தானம் இல்லை. எவ்வாறு சீதவஸ்துவின் நடுவில் உஷ்ணமும் உஷ்ணவஸ்துவின் நடுவில் சீதமும் இராவோ அவ்வாறே ஸுகமுள்ளவஸ்துவில் துக்கமும் துக்கமுள்ளவஸ்துவில் ஸுகமும் இரா. இவ்வாறான (பிராகிருத) ஸுகதுக்கங்களால்விடுபட்ட (ஆனந்தமயமான) ஸ்தானம் ஓரிடத்திலிருக்கிறது. இது எனது எண்ணம். ஸர்ப்பமே! நீ எப்படி எண்ணுகிறாயோ?' என்று கூறினார். ஸர்ப்பம், 'அரசனே! ஆயுஷ்மானே! உன்னால் ஒழுக்கத்தால் ஒருவன் ப்ராம்மணனென்று சொல்லப்படுவானேயாகில் அப்பொழுது பிராம்

மணனுக்குரிய செய்கை இல்லாதவரையில் ஜாதி பயனற்றது' என்று சொல்லிற்று.

யுதிஷ்டிரர், 'மகா ஸர்ப்பமே! பேரறிவாளனே! இந்த மனித ஜாதியில் இப்பொழுது எல்லாப் புருஷர்களும் எல்லா ஸ்த்ரீகளிடமும் குழந்தைகளை உண்டுபண்ணுகிறார்கள். ஆகையால், எல்லாவர்ணங்களும் கலந்துபோவதால் ஜாதியானது எவ்விதத்தாலும் பரீக்ஷிக்கத்தகாததென்பது என்னுடைய எண்ணம். மனிதர்களுக்கு வாக்கும் ஆண்பெண்களின் சேர்க்கையும் பிறப்பும் இறப்பும் ஸமமானவை. 'நாங்கள் பிராம்மணர்களாயிருக்கிறோமோ அப்பிராம்மணர்களாயிருக்கிறோமோ எப்படியிருந்தாலும் யாகம்செய்கிறோம்' என்கிற பொருளுள்ள (யேயஜாமஹே என்கிற) வேதவாக்யமும் (ஜாதி, பிறப்பினால் நிச்சயிக்கத்தக்கதன்று) என்னும் விஷயத்தில் பிரமாணம். ஆகையால், தத்துவத்தைக் கண்டறிந்தவர்கள் ஆசாரமே (இந்தவிஷயத்தில்) முக்யமாகக் கருதப்பட்டதென்று அறிகிறார்கள். தொப்புள்கொடி அறுப்பதற்குமுன்னம் புருஷனுக்கு ஜாதகர்ம ஸம்ஸ்காரமானது விதிக்கப்படுகிறது. அப்படியே, இருபிறப்புடையவர்களான மூன்றுவர்ணத்தார்களுக்கும் முறையே உபநயனம் சொல்லப்பட்டிருக்கிறது. அந்த உபநயன ஸம்ஸ்காரத்தில் இவனுக்கு ஸாவித்ரி மாதாவாகிறாள்; ஆசார்யன் பிதாவாகச் சொல்லப்படுகிறான். பிராம்மணன் வேதத்தோடுகூடுகிறவரையில் செய்கையினால் சூத்ரனுக்கொப்பானவன். இப்படிப்பட்ட அந்த ஸம்சயத்தில் ஸ்வாயம்புவமனுவானவர், 'வைதிக ஸம்ஸ்காரமில்லாவிட்டால் மூன்று வர்ணத்தார்களும் சூத்ரர்களுக்கு ஸமானர்களாவார்கள்' என்று இவ்வண்ணம் கூறி இருக்கிறார். ஸர்ப்பராஜனே! ஸம்ஸ்காரமில்லாத விஷயத்தில் வர்ணஸாங்கர்யமே முக்யகாரணமென்று காணப்பட்டிருக்கிறது. ஸர்ப்பராஜனே! மகாஸர்ப்பமே! எவனிடத்தில் இக்காலத்தில் வைதிக ஸம்ஸ்காரத்துடன் கூடின நல்லாசாரமிருக்கிறதாக எண்ணப்படுகிறதோ அவனையே பிராம்மணனாக முன்னே சொல்லியிருக்கிறேன்' என்று கூறினார். ஸர்ப்பம், 'யுதிஷ்டிர! அறியவேண்டியதை அறிந்திருக்கிற உன்னுடைய வாக்கியமானது கேட்கப்பட்டது. நான் உன்னுடைய பிராதாவான பீமஸேனனை என் பக்ஷிப்பேன்?' என்று கூறியது.

---

நூற்றெண்பத்துமூன்ருவது அத்யாயம்.

## ஆஜகரபர்வம். (தொடர்ச்சி.)

(தன் வினுக்களுக்கு உத்தரமளித்ததனுல் மகிழ்ந்தவனும் மலைப் பாம்பு வடிவத்துடனிருப்பவனுமான நகுஷன் தனக்கு அவ்வு ருவம்வரக் காரணத்தை யுதிஷ்டிரனுக்குக் கூறிப் பீமனை விட்டுவிட்டு மீண்டு ஸ்வர்க்கம் சென்றது.)

யுதிஷ்டிரர், 'இப்படிப்பட்ட நீ உலகத்தில் வேதங்கள் வேதாங் கங்கள் இவற்றின் கரையை அடைந்தவன். எந்தக் கர்மாவைச் செய்தவனுக்கு அதனிலும் சிறந்ததில்லாத கதியானது ஏற்படும்? சொல்' என்று வினவ, ஸர்ப்பம், 'பாரத! பாத்திரத்தில் கொடுத் தும் இனியவை கூறியும் உண்மையைப் பேசியும் அஹிம்ஸையில் பற்றுதலுள்ள மனிதன் ஸ்வர்க்கத்தை அடைவானென்பது என் னுடைய நிச்சயம்' என்று சொல்லிற்று.

யுதிஷ்டிரர், 'ஸர்ப்பமே! தானத்தைக்காட்டிலும் ஸத்யமா, ஸத்யத்தைக்காட்டிலும் தானமா எது பெரியதென்று காணப்படு கிறது? அஹிம்ஸை இன்சொல் இரண்டனுள் எது பெரிது? எது சிறிது? சொல்லுவாயாக' என்று வினவ, ஸர்ப்பம், 'தானம் 1 ஸத்யம் அஹிம்ஸை இன்சொல் இவைகளுள் பயனுல் பெருமை யும் சிறுமையும் காணப்படுகின்றன. சில ஸமயத்தில் தானம் செய்வதைக்காட்டிலும் ஸத்தியமே மேலாகிறது. ராஜேந்திர! சில ஸமயத்தில் ஸத்தியவாக்கியத்தைக்காட்டிலும் தானமே மேலாகி றது. பெரிய விற்பிடித்தவனே! அரசனே! இவ்வண்ணமே, சிலஸம யம் இன்சொற்கூறுவதைக்காட்டிலும் அஹிம்ஸையானது பெரி தாகக் காணப்படுகிறது. சிலவேளை அந்த அஹிம்ஸையைக்காட் டிலும் இன்சொல் பெரிதென விரும்பப்படுகிறது. வேந்தே! இவ்வாறு, இவற்றின் இந்தப்பெருமை சிறுமைகள் பயனைப்பொறுத் தவை? இன்னும் வேறு கேட்க விரும்பியதைச் சொல். நான் மறுமொழியுரைப்பேன்' என்று சொல்லிற்று.

யுதிஷ்டிரர், 'ஸர்ப்பமே! சரீரத்தை விட்டவனுக்கு ஸ்வர்க் கத்தில் கதியும் கர்மங்களுடைய பலன் அழியாமலிருப்பதும் விஷயானுபவமும் எப்படி காணப்படும்? எனக்குத் தெளிவாகச் சொல்' என்று வினவ, ஸர்ப்பம், 'அரசனே! தன்னுடைய கர்மங்

1 பொருள் இரட்டித்தலால் ஒரு சொல் விடப்பட்டது.

களால் உண்டாகிற கதிகள் மனிதனாகப் பிறப்பது, ஸ்வர்க்கத்தில் வஸிப்பது, திர்யக்ஜாதியில் பிறப்பது என மூன்றுவிதமாகக் காணப்பட்டிருக்கின்றன. அவைகளுள், அஹிம்ஸையுடன்கூடின அநாதியான தானம்முதலிய காரணங்களால் (தேஹியானவன்) மானிட உலகத்தினின்று ஸ்வர்க்கத்தை அடைகிறான். ராஜேந்திரனே! (இவற்றுக்கு) மாறுபட்ட காரணங்களால் மனிதனாகவும் அப்படியே விலங்காகவும் பிறக்கிறான். ஐயா! விலங்குப்பிறவியில் விசேஷத்தைச் சொல்லுவேன். காமக்ரோதங்களுடன்கூடினவனும் ஹிம்ஸையுடனும் பேராசையுடனும்கூடினவனுமான மனிதன் மானிடப்பிறவியிலிருந்து தவறி விலங்குஜாதியில் பிறக்கிறான். மனிதப்பிறப்புக்காக விலங்குஜாதியிலிருந்து வேறுபாடு (=உயர்தல்) வேதத்தில் விதிக்கப்படுகிறது. யாகங்களில் உபயோகிக்கப்படுகிற கோ முதலியவற்றுக்கும் குதிரைகளுக்கும் (அந்த விலங்குப்பிறவிகளிலிருந்தே) தேவனாதலும் காணப்படுகிறது. ஐயனே! இருவினைகளுள்ள அப்படிப்பட்ட இந்த ஜீவன் (பிறப்பிறப்புக்களாகிய) இந்தக் கதிகளை அடைகிறான். இருவினைகளில்லாத பிராம்மணன் நித்யமான பிரம்மத்தினிடம் ஆத்மாவைக் கலக்கச்செய்கிறான். தேகாபிமானியான ஜீவாத்மாவானவன் அத்ருஷ்டத்தால் கவரப்பட்டுப் பிறந்து பிறந்து ஸுகத்தில் விருப்பமுள்ளவனாகித் தேகஸம்பந்தத்தாலுண்டான பலனை அனுபவிக்கிறான். பயனில் பற்றில்லாதவன் பிரஜைகளுக்கு அறிகுறிகளான ஜனனம் மரண முதலியவைகளைத் தோஷங்களாகப் பார்க்கிறான்' என்று சொல்லியது.

யுதிஷ்டிரர், 'ஸர்ப்பமே! சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் ஆகிய இவைகள் அறியப்படும் ஸமயத்தில், அறிகிற ஜீவனுக்கும் அறியப்படுகிற அந்தவிஷயங்களுக்கும் ஆதாரத்தை ஒருவழிப்பட்ட மனத்துடன் உள்ளபடி கூறுவாயாக. அதிக புத்தியுள்ளவனே! நீ ஏன் விஷயங்களை ஒரே ஸமயத்தில் அறிகிறதில்லை. பன்னகங்களுள் மிகச் சிறந்தவனே! கேட்கப்பட்ட இவையனைத்தையும் சொல்லுவாயாக' என்று வினவ, ஸர்ப்பம், 'ஆயுஷ்மானே! ஸுகம் துக்கம் முதலிய குணங்களுக்கு ஆதாரமாயிருக்கிற ஆத்மவஸ்துவானது தேஹரூபமான உபாதியுடன் கூடியதாகவும் கரணங்களால் அடையப்பட்டதாகவுமிருந்துகொண்டு தன் வினைகளுக்குத் தக்கபடி போகங்களை அனுபவிக்கிறது. பரதஸ்ரேஷ்டனே! அந்த ஆத்மாவின் போகங்களுக்கு ஆதாரமான இந்தக்

தேஹத்தில் ஞானமும் புத்தியும் மனமும் காரணங்களென்று என்னிடத்திலிருந்து தெரிந்துகொள். ஐயனே! ஜீவன், விஷயங்களை அறிவதற்கு ஸாதனமான இந்திரியங்களில் நிலைபெற்றிருக்கிற மனத்தின் வழியாய்த் தேகத்தினின்று வெளிப்பட்டு, முறையே, இந்த விஷயங்களை அடைகிறான். புருஷச்ரேஷ்டனே! ஜீவனுக்கு அந்த விஷயத்தை அறியவேண்டியபொழுது, மனமானது புத்தியினால் வேலையுடன் கூடியதாகச் செய்யப்படுகிறது. ஆதலால், இந்த ஜீவனுக்கு அந்தச் சரீரத்தில் ஒரே ஸமயத்தில் எல்லா விஷயங்களுடைய பரிவும் பொருந்துகிறதில்லை. புருஷோத்தமனே! அந்த ஜீவாத்மானவன் புருவங்களுடைய மதியத்தை அடைந்திருக்கிறான். ரூப [illegible] குணங்களுடன் கூடின பலவித வஸ்துக்களை அறியவேண்டியபொழுது உயர்ந்ததும் தாழ்ந்ததுமான புத்தியை ஏவுகிறான். ராஜச்ரேஷ்டனே! புத்தியுண்டானதற்கு அடுத்த க்ஷணத்தில் ஸாக்ஷிரூபமாக யோகிகளால் காணப்படுகிற ஞானம்தான் ஆத்மாவைப் பிரகாசப்படுத்துகின்ற ஸ்வயம்பிரகாச ஞானம்' என்று சொல்லிற்று.

யுதிஷ்டிரர், 'மனம் புத்தி இவற்றின் சிறந்த லக்ஷணத்தை எனக்குச் சொல். இது அத்யாத்ம சாஸ்திரத்தை அறிந்தவர்களுக்குச் சிறந்த காரியமாக விதிக்கப்படுகிறது' என்று வினவ, ஸர்ப்பம், 'புத்தியானது ஆத்மாவோடு மிகவும் ஒற்றுமையை அடைந்து விஷயங்களில் தாண்டிச் செல்லுதலால், ஆத்மாவை வசப்படுத்துகிறது. அந்தப் புத்தியானது அந்த ஆத்மாவைச் சார்ந்திருப்பதாக அறியத்தக்கது. அந்தப்புத்தி தன் ஸ்வரூபம் ஸித்திப்பதன்பொருட்டு அதிஷ்டானமாக ஆத்மாவை விரும்புகிறதாகும். புத்தியானது விஷயேந்திரியங்களுடைய ஸம்பந்தரூபமான காரியத்தால் உண்டாகிறது. மனமோ முந்தியே நிலைபெற்றிருக்கிற காரணவஸ்துவாயிருக்கிறதன்றோ? புத்தியை மனத்துக்குக் குணமாகச் சொல்லியிருப்பதால், மனமானது அந்தப் புத்தியைக் குணமாகவுடைய தர்மியாக இருக்கிறது. ஐயனே! மனம் புத்தி இவ்விரண்டிற்கும் பேதத்தைத் துலக்கிக்காட்டுகிற லக்ஷணம் இது. இந்த விஷயத்தில் நீயும் விசேஷமான அறிவுடையவன். நீ எவ்வாறாக நினைக்கிறாய்?' என்றுசொல்லியது.

யுதிஷ்டிரர், 'புத்தியுடையவர்களுள் சிறந்தவனே! மங்களகரமான உன்னுடைய இந்தப் புத்தியானது அற்புதமாக இருக்கிறது. நகுஷா! அறியத்தக்கது உன்னால் அறியப்பட்டிருக்கிறது.

ஏன் கேட்கிறாய்? இவ்வாறு அற்புதமான கர்மங்களுடன்கூடிய வனும் எல்லாமறிந்தவனும் ஸ்வர்க்கத்தில் வஸிப்பவனுமான [illegible]னை எவ்வாறு மோஹம் வந்தடைந்தது? இந்த விஷயத்தில் [illegible] பெரிய ஸம்சயம்?' என்று வினவினார். ஸர்ப்பம், [illegible] மனிதனை நல்ல விவேகமுள்ளவனும் சூரனு[illegible] செய்கிறது[illegible] லோகத்திலிருப்பவரனை [illegible]தில் [illegible] என்பது என்னுடைய [illegible] நான் ஐச்வர்யத்தினு[illegible]த்தால் கவரப்பட்டவனாக [illegible] பூந்தேன். மீண்டும் அறிவடைந்த [illegible]றிவிக்கிறேன். மஹாராஜனே! பகைவரை [illegible] உன்னால் என்னுடைய காரியம் செய்யப்பட்டு [illegible]. மிக்க கஷ்டத்தை உண்டுபண்ணிக்கொண்டிருந்த என் [illegible]டைய சாபமானது ஸாதுவான உன்னுடன் ஸம்பாஷித்ததனால் நாசம் அடைந்தது. நான் முற்காலத்தில் ஆகாயத்தில் திவ்விய விமானத்தினால் ஸஞ்சரிப்பவனும் அகங்காரத்தினால் மதமுள்ள வனுமாகி வேறொருவனையும் மதிக்கவில்லை. மூவுலகங்களிலும் வாஸம்செய்கின்ற பிரம்மரிஷிகள், தேவர்கள், கந்தர்வர்கள், யக்ஷர்கள், ராக்ஷஸர்கள், பன்னகர்களாகிய அனைவரும் எனக்குக் [1] கப்பங்களைக் கொடுத்தார்கள். பூமிக்கதிபதியே! கண்ணால் எந்தப் பிராணியைப் பார்க்கிறேனோ அந்தப் பிராணியி னுடைய வல்லமையை விரைவில் கவர்கிறேன். எனது பார்வையின் பலம் அப்படிப்பட்டதன்றோ? அரசனே! ஆயிரம் பிரம்ம ரிஷிகள் என் பல்லக்கைத் தூக்கினார்கள். அந்த அநீதியான து என்னை ஸ்தானத்தினின்று நழுவும்படி செய்துவிட்டது. அந்த ஸமயத்தில் பல்லக்குத் தூக்குகின்ற அகஸ்தியமஹரிஷியானவர் (என்னால்) காலால் தொடப்பட்டார். அதனால் உண்டான கோபத்தினால் அகஸ்தியரால், 'நீ ஸர்ப்பமாகி நாசமடை' என்று சொல்லப்பட்டேன். பிறகு, அந்தச் சிறந்த விமானத்தினின்று நழுவி (மனித)லக்ஷணங்கள்போய்க் கீழே விழுகின்ற நான் என்னைப் பாம்பாகித் தலைகீழே விழுபவனாகத் தெரிந்துகொண்டேன். நான் அந்தப் பிராம்மணரை, 'பகவானே! தவறுதலால் புத்திமயங்கிய என்னைப் பொறுக்கக்கடவீர். சாபத்திற்கு முடிவேற்படவேண்டும்' என்று வேண்டினேன். பிறகு, அந்த அகஸ்தியர் கீழே விழு

1 வேறு பாடம்.

கின்ற என்னைக் கருணையுடன் நோக்கி, 'தர்மராஜனான யுதிஷ்டிரன் சாபத்தினின்று உன்னை விடுவிப்பான். அரசனே! மஹாராஜனே! அப்படிப்பட்ட அகங்காரத்திற்கும் பலத்துக்கும் பயனானது க்ஷீணித்தபிறகு புண்யபலனை அடைவாய்' என்னும் இதனைச் சொன்னார். பிறகு, அந்தத் தவத்தினுடைய வலிமையைக் கண்டு எனக்கு ஆச்சர்யமுண்டாயிற்று. அதனால், உன்னைப் பிரம்மத்தைப்பற்றியும் பிராம்மணத்தன்மையைப்பற்றியும் வினவினேன். அரசனே! சாதுக்களுக்கு ஸத்தியம், தமம், தவம், யோகம், அஹிம்ஸை, ஞானத்திலேயே எப்பொழுதும் நிலைபெற்றிருத்தல் ஆகிய இவைகள் (நற்கதிக்கு) ஸாதனங்கள். ஜாதியும் குலமும் ஸாதகங்களாகா. நீண்ட கைகளுள்ளவனே! உன் பிராதாவான இந்தப் பீமன் க்ஷேமமுள்ளவனாகவே என்னால் விடப்பட்டான். மஹாராஜனே! உனக்கு க்ஷேமமுண்டாகட்டும். நான் மீண்டும் ஸ்வர்க்கம் செல்வேன். புருஷச்ரேஷ்டனே! அப்படிப்பட்ட நற்காலமும் இதோ வந்துவிட்டது. பார்த்த! இந்தக் காரணத்தினால் [1] அப்படிப்பட்ட பெரிய காரியம் உன்னால் என் விஷயத்தில் செய்யப்பட்டது' என்று கூறியது.

பிறகு, அந்த முகூர்த்தத்தில், இஷ்டப்படி செல்லுகிற அப்படிப்பட்ட உத்தம விமானமானது அதிவேகத்துடன் அவ்விடம் வந்தது. அந்த நகுஷ மஹாராஜன் இவ்வாறு சொல்லிவிட்டு, அந்த மலைப்பாம்புடலைவிட்டுத் திவ்ய சரீரத்தைப் பெற்று ஸ்வர்க்கத்தைக் குறித்தே சென்றான். தர்மாத்மாவும் ஸ்ரீமானுமான யுதிஷ்டிரரும் பிராதாவான பீமனோடு சேர்ந்து தௌம்யரோடு மீண்டும் ஆச்ரமத்தையடைந்தார். பிறகு, தர்மராஜரான யுதிஷ்டிரர், அவை அனைத்தையும் ஒன்று சேர்ந்திருக்கிற எல்லாப் பிராம்மணர்களுக்கும் உள்ளபடி சொன்னார். வேந்தே! அந்த எல்லாப் பிராம்மணர்களும் இவருடைய அந்த மூன்று பிராதாக்களும் கீர்த்தியுள்ளவளான பாஞ்சாலியும் அதனைக்கேட்டு மிக வெட்கினவர்களானார்கள். பிராம்மண ச்ரேஷ்டர்களான அவர்களனைவரும் பாண்டவர்களுடைய ஹிதத்தைச் செய்வதிலுள்ள விருப்பத்தினால் பீமனைப் பார்த்து அவனுடைய முரட்டுத்தனத்தைப்பற்றி நிந்தித்து, 'இனி இவ்வாறு செய்யவேண்டாம்' என்று சொன்னார்கள். பாண்டவர்களோ, பயத்தினின்று விடுபட்டிருக்கிற மிக்க பலசாலியான பீமனைப்

1 இரட்டித்தலால் ஒருமொழி விடப்பட்டது.

றது. அன்றில்களாலும் அன்னங்களாலும் நிரம்பியதும் புற்கள் மிக முளைத்திருக்கிற காடுகளும் மலைச்சரிவுகளுமுள்ளதும் ஜலம் தெளிந்த நதிகளுள்ளதுமான சரத்காலமானது மிக்க மகிழ்ச்சியை உண்டுபண்ணுகிறதாயிற்று. அந்த மஹாத்மாக்களுக்கு ஆகாசமும் நக்ஷத்திரங்களும் மாசற்றிருப்பதும், மிருகங்களும் பறவைகளும் நிரம்பியதுமான சரத்காலமானது மங்களகரமாயிற்று. இரவுகள் புழுதி தணிந்தவைகளும் மேகத்தினால் குளிர்ந்தவைகளும் கிரஹங்களாலும் நக்ஷத்திரங்களுடைய கூட்டங்களாலும் சந்திரனாலும் பிரகாசிக்கிறவைகளுமாகக் காணப்பட்டன. அவர்கள் குளிர்ந்த ஜலத்தையுடைய மங்களகரமான நதிகளையும் அல்லிகளாலும் தாமரைகளாலும் நன்கு அலங்கரிக்கப்பட்ட ஓடைகளையும் கண்டார்கள். ஆகாசம்போலத் தெளிவான ஜலமுள்ளதும் கரைகளில் வஞ்சிமரங்களடர்ந்ததும் புண்யதீர்த்தங்களுள்ளதுமான ஸரஸ்வதி நதிக்கரையில் ஸஞ்சரிக்கிற அந்தப் பாண்டவர்களுக்கு ஸந்தோஷமுண்டாயிற்று. உறுதியான வில்பிடித்த அந்த வீரர்கள் தெளிந்த ஜலமுள்ளதும் மங்களகரமானதும் நிறைந்து நடப்பதுமான ஸரஸ்வதி நதியைப் பார்த்து மகிழ்ந்தார்கள். ஜநமேஜயரே! பர்வஸந்தியில் மிக்க புண்யமானதும் சரத்காலத்தைச்சார்ந்ததுமான கார்த்திகைமாதத்துப் பூர்ணிமைராத்திரியானது, அவர்கள் அவ்விடத்தில் வசிக்கையிலேயே சென்றது. பரதஸ்ரேஷ்டரே! புண்ணியர்களான தபஸ்விகளும் அதிகமான ஸத்வகுணமுடையவர்களுமான ரிஷிகளோடுகூடப் பாண்டவர்கள் எல்லா வாகனங்களிலும் பாரமேற்றினார்கள். தௌம்யரோடுகூடிய பாண்டவர்கள் அந்தக் க்ருஷ்ணபக்ஷத்தொடக்கத்தில் ஸாரதிகளோடும் சமையற்காரர்களோடும் காம்யகவனத்தை நோக்கிச் சென்றார்கள்.

---

## நூற்றெண்பத்தைந்தாவது அத்யாயம்.

## மார்க்கண்டேயஸமாஸ்யாபர்வம். (தொடர்ச்சி.)

(பாண்டவர்கள் மீண்டும் காம்யக வனத்திற்கு வந்ததைக் கேட்ட க்ருஷ்ணன் ஸத்யபாமையுடன் அங்கே வந்ததும், நாரதரும் மார்க்கண்டேயரும் வந்ததும், ஸ்ரீ க்ருஷ்ணனுடைய தூண்டுதலால் மார்க்கண்டேயர் புராணகதைகளைச் சொல்லத் தொடங்கியதும்.)

குருவம்சத்தில் பிறந்தவரே! யுதிஷ்டிரரைத் தலைவராகக் கொண்ட பாண்டவர்கள் காம்யகவனத்தை அடைந்து முனிவர்

களின் கூட்டங்களால் ஆதித்யம் செய்யப்பெற்றுத் திரௌபதி யுடன் வீற்றிருந்தார்கள். பிறகு, அங்கே நம்பிக்கையுள்ளவர்க ளாக வஸிக்கின்ற அந்தப்பாண்டவர்களை அனேகம் பிராம்மணர் கள் அந்த இடத்தில் எல்லாப் பக்கங்களிலும் சூழ்ந்திருந்தார்கள். பிறகு, அர்ஜுனனுக்கு இனிய தோழரான ஒரு பிராம்மணர் பாண் டவர்களைப் பார்த்து, 'குருவம்சத்தைத் தாங்குபவர்களே! மிக்க தோள்வலிமையுள்ளவரும் பிரபுவும் பேரறிவாளருமான அப்படிப் பட்ட வாஸுதேவர் வரப்போகிறார். நீங்கள் இங்குவந்துவிட்டது, ஹரியான அவருக்குத் தெரியுமன்றோ? ஸ்ரீ கிருஷ்ணன் எப்பொ ழுதும் உங்களைப் பார்ப்பதில் விருப்பமுள்ளவர்; உங்களுடைய நன்மையைத் தேடிக்கொண்டிருப்பவர். அநேக வர்ஷகாலம் ஜீவிப்பவரும் பெரிய விரதமுள்ளவரும் வேதாத்தியயனத்தோடும் தவத்தோடும்கூடியவருமான மார்க்கண்டேயர் விரைவாக உங் களை வந்தடைவார்' என்று சொன்னார். அந்தப்பிராம்மணர் அவ்வாறு சொல்லிக்கொண்டிருக்கும்பொழுதே, தேராளிகளுள் சிறந்தவரான கேசவர் சைப்யம் ஸுக்ரீவமென்கிற குதிரைகள் பூட்டின ரதத்தோடு காணப்பட்டார். தேவகீபுத்திரர் அந்தக் கௌரவச்ரேஷ்டர்களைப் பார்க்க விரும்பி, இந்திரன் இந்திராணி யுடன் சேர்ந்துவருவதுபோல் ஸத்யபாமையுடன் சேர்ந்து வந் தார். சிறந்த புத்தியுள்ளவரான கிருஷ்ணபகவான் ரதத்தினின்று இறங்கி விதிப்படி தர்மராஜரையும் பலசாலிகளுள் சிறந்த பீமனையும் மகிழ்ச்சியுடன் வந்தனம்பண்ணினார். நகுல ஸஹதேவர்களால் நமஸ்கரிக்கப்பட்டவராகித் தௌம்யரையும் பூஜித்தார். [1] அர் ஜுனனைத் தழுவிக்கொண்டு திரௌபதிக்கு இன்சொல் கூறினார். பகைவர்களை அழிப்பவரான அந்தத் தாசார்ஹர் நெடுங்காலம் கழித்துவந்தவனும் வீரனும் நண்பனுமான அர்ஜுனனைப்பார்த்து அடிக்கடி கட்டிக்கொண்டார். அப்படியே கிருஷ்ணனுடைய அன் புள்ள மனைவியான ஸத்யபாமையும் பாண்டவர்களுடைய அன்புள்ள மனைவியான திரௌபதியைத் தழுவிக்கொண்டாள். பிறகு, அந்தப் பாண்டவர்களனைவரும் பார்யையுடனும் புரோஹிதருடனும் கூடிய வர்களாகி, செந்தாமரைக்கண்ணனைப் பூஜித்து எல்லாப்பக்கங் களிலும் சூழ்ந்திருந்தார்கள். கற்றறிந்தவரான கிருஷ்ணனே, அஸுரர்களை அழித்தவனும் குந்தியின் புதல்வனுமான தனஞ் சயனோடு சேர்ந்து, மஹாத்மாவும் பகவானும் பூதபதியுமான

1 வேறு பாடம்.

ஸாக்ஷாத் சிவபெருமான் ஸுப்ரம்மண்யரோடு சேர்ந்து பிரகாசிப்பதுபோலப் பிரகாசித்தார். பிறகு, அர்ஜுனன் கூதனுக்கு மூத்தவரான கிருஷ்ணனிடம் வனங்களில் நடந்த எல்லா விருத்தாந்தங்களையும் உள்ளபடி சொல்லிவிட்டு, மறுபடியும், அவரிடத்தில் ஸுபத்ரையைப்பற்றியும் அப்படியே அபிமன்யுவைப்பற்றியும் வினவினன். தசார்ஹர்களுள் சிறந்தவரான கிருஷ்ணனும் தௌம்யரையும் திரௌபதியையும் யுதிஷ்டிரரையும் நகுல ஸஹதேவர்களையும் பீமனையும் பார்த்து, 'உங்களுடைய பாக்கிய விசேஷத்தால் அர்ஜுனன் அஸ்திரங்களில் தேர்ச்சியடைந்து ஸந்தோஷத்துடன் க்ஷேமமாகவந்துசேர்ந்தான்' என்று சொன்னார். அந்த மதுஸூதனர், தக்கபடி பார்த்தர்களையும் திரௌபதியையும் புரோஹிதரையும் பூஜித்து யுதிஷ்டிரராஜரை நேரில் புகழ்ந்துகொண்டு அவருடன்கூட உட்கார்ந்து, 'பாண்டவரே! அரசரே! ராஜ்யலாபத்தைக்காட்டிலும் தர்மம் சிறந்தது. அதற்குத் தவத்தையே மூலமாகச் சொல்லுகிறார்கள். ஸத்யத்துடனும் உள்ளும்புறமும் ஒத்திருத்தலுடனும் ஸ்வதர்மத்தை அனுஷ்டிக்கின்ற உம்மால் இந்த உலகமும் பரலோகமும் ஜயிக்கப்பட்டன. முற்காலத்தில் பிரம்மசர்ய விரதங்களை அனுஷ்டிக்கின்ற உம்மால் அத்தியயனத்தைச் செய்து, தனுர்வேதம் முழுவதையும் நன்கு அடைந்து, க்ஷத்திரியனுக்குரிய தர்மத்தினால் தனங்களைத்தேடி, புராதனமான யாகங்களனைத்தும் நன்குசெய்யப்பட்டன. அரசரே! கிராம்ய தர்மங்களில் உமக்குப் பற்றுதலில்லை. காமத்தினால் ஒன்றையும் நீர் செய்கிறதில்லை. பொருளிலுள்ள பேராவலால் தர்மத்தை நீர் விடுகிறதில்லை. அந்தப் பிரபாவத்தால் தர்மராஜராக இருக்கிறீர். குந்திநந்தனரே! அரசரே! தேசங்களையும் தனங்களையும் போகங்களையும் அடைந்திருக்கிற உமக்கு, தானம், ஸத்யம், தவம், பொறுமை, சாந்தி, இந்திரிய நிக்கிரஹம், மனோதைர்யம் இவை களிலேயே எப்பொழுதும் இப்படிப்பட்ட சிறந்தபற்றுதலிருக்கிறது. பாண்டவரே! [1] உம்மைக்காட்டிலும் வேறு எவன், குருஜாங்கலதேசங்கள் பகைவரால்கவரப்பட்டதையும் ஸபையில் திரௌபதி பரவசமானதையும் பார்த்துக்கொண்டு சாஸ்திரத்துக்கும்

[1] 'குரு ஜாங்கலதேசத்து ஜனக்கூட்டமானது ஸபையில் திரௌபதி பரவசமாயிருந்ததைப் பார்த்தபொழுது உம்மைக்காட்டிலும் வேறெவன் சாஸ்திரத்துக்கும் ஒழுக்கத்துக்கும் விலக்கான அந்தக் கெட்ட நடையைப் பொறுப்பான்' என்பது வேறு பாடத்தின் பொருள்.

வழக்கத்துக்கும் விலக்கான அந்தக் கெட்டநடையைப் பொறுப்பான்? நீர் ஐயமின்றி எல்லா விருப்பங்களும் நிறைவேறி விரைவில் பிரஜைகளை நன்கு பரிபாலிக்கப்போகிறீர். உம்முடைய பிரதிஜ்ஞையானது முடிக்கப்பட்டுவிட்டால், கௌரவர்களைச் 1 சிக்ஷிப்பதில் இதோ நாங்கள் ஸித்தமாயிருக்கிறோம்' என்று சொன்னார்.

தசார்ஹர்களைப் போஷிப்பவரான ஸ்ரீக்ருஷ்ணன், நண்பர்களோடு கூடியவராக யஜ்ஞஸேனனுடைய குமாரியான க்ருஷ்ணையைப் பார்த்தும், 'பாக்ய விசேஷத்தினால் தனஞ்சயனோடு சேர்ந்து (விருப்பம்) நிறைவேறினவளாகிறாய். க்ருஷ்ணையே! யஜ்ஞஸேனனுடைய குமாரியே! உன்னுடைய குமாரர்களான அந்தச்சிறுவர்கள் தனுர்வேதத்தில் முக்கியமான பற்றுள்ளவர்களும் நல்லொழுக்கத்தையுடையவர்களுமாகிப் பெரியோர்களால் எப்பொழுதும் அநுஷ்டிக்கப்பட்டுவருகிற ஸமாதியை அநுஷ்டிக்கிறார்கள். க்ருஷ்ணையே! உன்னுடைய பிள்ளைகள் உன் பிதாவான த்ருபதராஜனாலும் உன் ஸஹோதரர்களாலும் அரசாட்சியையும் நாடுகளையும் கொடுத்து அழைக்கப்பட்டும் யஜ்ஞஸேனனுடைய அரண்மனைகளிலும் அம்மான்மார்களுடைய மாளிகைகளிலும் மகிழ்ச்சியை அடையவில்லை. க்ருஷ்ணையே! உன்னுடைய குமாரர்கள் தனுர்வேதத்தில் முக்கியமான பற்றுதலுள்ளவர்களாகி ஆனர்த்ததேசத்தையே நோக்கி க்ஷேமமாகச் சென்று வ்ருஷ்ணிகளுடைய பட்டணமான த்வாரகையில் பிரவேசித்தபின் தேவர்களாயிருத்தலைக்கூட விரும்பவில்லை. அவர்களிடம் நீயும் சிறப்புடையவளான குந்திதேவியும் நடந்துகொள்வதுபோலவே ஸுபத்ரையும் தவறாமல் நடந்துவருகிறாள். க்ருஷ்ணையே! ருக்மிணியின் புதல்வனான ப்ரத்யும்னன், அநிருத்தனுக்கும் அபிமன்யுவுக்கும் ஸுநீதனுக்கும் பானுவுக்கும் அஸ்திரவித்தையைக் கற்பிப்பதுபோலவே உன்புத்திரர்களுக்கும் அஸ்திரவித்தையைக் கற்பிக்கிறான்; பாதுகாவலாயுமிருக்கிறான். நன்றாகக் கற்பிப்பவனான 2 ப்ரத்யும்னன் கதைகளையும் கத்திகளையும் கேடகங்களையும் பிடிப்பதிலும் அஸ்திரங்களிலும் ஆயுதசிக்ஷைகளிலும் ரதங்களையும் குதிரைகளையும் நடத்துவதிலும் சூரர்களான அந்த உன்குமாரர்களையும் அபிமன்யுவையும் எப்பொழுதும் சோம்பலின்றிக் கற்பிக்கிறான். அந்தப் பிரத்யும்னனும், இவர்களுக்கு நன்கு பயிற்சியைச் செய்வித்து

1 வேறு பாடம்.

2 'ராஜகுமாரனான அபிமன்யு,' என்பது வேறுபாடத்தின் பொருள்.

விதிப்படி சஸ்திரங்களையும் கொடுத்து உன் குமாரர்களும் அபிமன்யுவுமாகிய இவர்களுடைய பராக்கிரமங்களால் ஸந்தோஷமடைகிறான். யஜ்ஞஸேனனுடைய குமாரியே! உன் புத்ரர்கள் விளையாட்டிடங்களைப் பார்ப்பதற்காக வெளியில் செல்லும்பொழுது அங்கே இவர்களுள் ஒவ்வொருவனையும் ரதங்களும் வாகனங்களும் யானைகளும் பின் தொடர்ந்து செல்லுகின்றன' என்று சொன்னார்.

பிறகு, கிருஷ்ணன், தர்மராஜனைப் பார்த்து, 'அரசரே! இந்த யுத்தவீரர்களான தாசார்ஹர்களும் குகுரர்களும் அந்தகர்களும் எந்த இடத்தில் நீர் விரும்புகிறீரோ அந்த இடத்தில் உம்முடைய கட்டளையைப் பரிபாலனம் செய்கின்றவர்களாக இருக்கக்கடவர். வேந்தரே! விற்களுடைய வேகத்தால் காற்றை உண்டுபண்ணி வரும் பலராமனைத் தலைவராகக் கொண்டதுமான மதுரைவாஸிகளுடைய சேனையானது, குதிரைவீரர்களோடும் காலாட்களோடும் குதிரைகளோடும் ரதங்களோடும் யானைகளோடும் கூடினதாக உம்முடைய காரியங்களில் ஸன்னத்தமாயிருப்பதாகுக. பாண்டவரே! பாவிகளுள் மிகச்சிறந்தவனும் திருதராஷ்டிரபுத்திரனுமான அந்தத் துர்யோதனன், பந்துக்களுடனும் நண்பர் கூட்டங்களுடனும், நரகாஸூரன் ஸௌபதேசாதிபதியான ஸால்வன் இவர்களின் வழியை அடைந்து செல்லும்படி செய்யப்படக்கடவன். அரசரே! நீர் ஸபையில் செய்த அந்தப் பிரதிஜ்ஞையில் நன்று நிலைத்திரும். தாசார்ஹவீரர்களால் பகைவீரர்கள் கொல்லப்பட்டு, ஹஸ்தினாபுரம் மிக அழிக்கப்பட்டதை நீர் பார்க்கலாம். நீர் கோபம் தணிந்தவராய் பாவம் நீங்கினவராகி விரும்பின இடத்தில் நன்றாய் ஸஞ்சரித்திருந்து, பிறகு, சோகம் நீங்கி, ஸம்பத்துக்களுக்குப் பிறப்பிடமும் தேசங்களுடன் கூடினதுமான ஹஸ்தினாபட்டணத்தை அடைவீர்' என்று சொன்னார். பிறகு, மஹாத்மாவான தர்மராஜர் புருஷோத்தமரால் உள்ளபடி சொல்லப்பட்ட அந்த அபிப்பிராயத்தை அறிந்து கேசவரைப் புகழ்ந்தும் பார்த்தும் கைகூப்பிக்கொண்டு, 'கேசவரே! ஸம்சயமில்லாமல் பாண்டவர்களுக்கு நீர்தாம் கதி. பார்த்தர்கள் உம்மையே சரணமாகக் கொண்டவர்களன்றோ? காலம் வரும்பொழுது அந்தக் காரியத்தை மீண்டும் நீர் செய்வீர். அதில் ஸம்சயமில்லை. ஜனஸஞ்சாரமில்லாத காடுகளில் பிரதிஜ்ஞைப்படி செய்தபடி பன்னிரண்டு வருஷங்கள் முழுமையும் ஸுகமாக வஸித்தோம். கேசவரே!

பாண்டவர்கள் அஜ்ஞாதவாஸத்தை விதிப்படி நிறைவேற்றியபின் உம்மை அடைவார்கள். கேசவரே! உம்மை அடைந்திருக்கிற பாண்டவர்களுக்கு எப்பொழுதும் இதுவே எண்ணம். பாண்டவர்கள் ஸத்தியத்திலிருப்பவர்கள். தானதர்மங்களுடனும் ஜனங்களுடனும் மனைவிகளுடனும் பந்துக்களுடனும்சேர்ந்தவர்களான பார்த்தர்கள் உம்மை ரக்ஷகராகக்கொண்டவர்களன்றோ?' என்று சொன்னார்.

பாரதரே! பிறகு, கிருஷ்ணனும் தர்மராஜரும் அவ்வாறு பேசிக்கொண்டிருக்கும் தருணத்தில், தவத்தினால் முதிர்ந்தவரும் பல்லாயிரம்வருஷங்களாக ஜீவித்திருப்பவரும் தர்மாத்மாவும் பெருந்தவமுள்ளவருமான மார்க்கண்டேயர் காணப்பட்டார். மூப்பில்லாதவரும் மரணமில்லாதவரும் ரூபத்தையும் ஔதார்ய குணத்தையும் உடையவருமான அந்த மார்க்கண்டேய மஹரிஷியானவர் இருபத்தைந்து வயதுள்ளவர்போலக் காணப்பட்டார். முதிர்ந்தவரும் பல்லாயிர வருஷங்களாக ஜீவித்திருப்பவரும் வந்தவருமான அந்தரிஷியை அந்தப்பாண்டவர்கள் எல்லாரும் யாதவர்களோடுகூடியவர்களாக நன்கு பூஜித்தார்கள். அர்ச்சிக்கப்பட்டவரும் நல்ல விஸ்வாஸமுள்ளவரும் வீற்றிருப்பவருமான அந்தரிஷிஸ்ரேஷ்டரைப் பார்த்து, கிருஷ்ணன், பிராம்மணர்களும் பாண்டவர்களுமாகிய இவர்களின் அபிப்ராயத்தின்மேல், 'மார்க்கண்டேய மஹரிஷியே! பாண்டவர்களும் கூடியிருக்கின்ற பிராம்மணர்களும் திரௌபதியும் ஸத்தியபாமையும் அப்படியே நானும் தேவரீருடைய நிகரற்றவசனத்தைக் கேட்க விரும்புகிறோம். முன் நடந்த புண்ய கதைகளையும் அரசர்கள் ஸ்திரீகள் ரிஷிகள் ஆகிய இவர்களுடைய தொன்றுதொட்டுவரும் ஸதாசாரங்களையும் எங்களுக்குச் சொல்லுவீராக' என்று கூறினார். அவர்கள் அங்கு உட்கார்ந்திருக்கும்பொழுது பரிசுத்தசித்தரும் தேவரிஷியுமான நாரதரும் பாண்டவர்களைப் பார்ப்பதில் விருப்பத்துடன் வந்தார்.

பிறகு, கற்றறிந்தவர்களான அந்தப்புருஷஸ்ரேஷ்டர்களெல்லாரும் மஹாத்மாவான அந்தநாரதரைப் [1] பாத்யத்தாலும் [2] அர்க்கியத்தாலும் நியாயப்படி பூஜித்தார்கள். பிறகு, தேவரிஷியான நாரதரோ, அவர்களனைவரையும் (மார்க்கண்டேயருடைய சொல்

1 கால் கழுவக் கொடுக்கும் நீர். 2 பூஜைக்குரிய பொருள்கள்; இக்காலத்தில் சுத்த ஜலத்தைக் கொடுக்கிறார்கள்; அது மதுபர்க்கஸ்தானத்தில் கொடுக்கப்படுகிறதென்று தெரிகிறது.

லைக் கேட்பதில்) பற்றுவைத்தவர்களாக அறிந்து சொல்லுகின்ற மார்க்கண்டேயருடைய அந்தக் கதையைப் பாராட்டிப் பேசினார். அந்த நாரதர், புன்சிரிப்புடன், காலத்தை அறிந்தவரான அந்த மார்க்கண்டேயரைப் பார்த்து, 'பிரம்மரிஷியே! பாண்டவர்கள் விஷயத்தில் சொல்லக்கருதியதைச் சொல்லக்கடவீர்' என்று சொன்னார். இவ்வாறு சொல்லப்பட்டவரும் பெருந்தவமுள்ளவருமான மார்க்கண்டேயர், 'மனத்தை ஒருவழிப்படுத்திக்கொள்ளுங்கள். சொல்லவேண்டிய விஷயம் விரிவாக இருக்கும்' என்று மறுமொழி கூறினார். இவ்வாறு சொல்லப்பட்ட அந்தப் பாண்டவர்கள், அந்தப் பிராம்மணர்களோடுகூட, நடுப்பகலிலுள்ள சூரியனைப்போன்ற மஹரிஷியையே பார்ப்பவர்களாகி மனத்தை ஒருவழிப்படுத்திக்கொண்டார்கள்.

---

## நூற்றெண்பத்தாறுவது அத்யாயம்.

## மார்க்கண்டேயஸமாஸ்யாபர்வம். (தொடர்ச்சி.)

(மார்க்கண்டேயர், யுதிஷ்டிரர் முதலியவர்களுக்குப் பிராணிகளுடைய புண்யபாப கர்மங்களுக்குப்பயனான ஸுகதுக்கங்களின் அனுபவ முதலியவற்றின் முறையை நிரூபித்தது.)

குரு ராஜரான தர்மபுத்திரர், மஹரிஷியான அந்த மார்க்கண்டேயர் சொல்லவிருப்பமுள்ளவராயிருப்பதைக்கண்டு (சொல்லவேண்டிய) கதையைக் குறிப்பிடுவதற்காக, 'தேவரீர் தேவர்கள், தைத்யர்கள், மஹாத்மாக்களான ரிஷிகள், எல்லா ராஜரிஷிகள் ஆகிய இவர்களுடைய சரித்திரங்களை அறிந்தவர்; புராதனர். தேவரீர் எங்களால் அடையத்தக்கவரென்றும் வழிபடத்தக்கவரென்றும் எண்ணப்பட்டிருக்கிறீர்; நெடுநாளாகவும் விரும்பப்பட்டீர். இந்தத் தேவகீபுத்திரரும் எங்களைப் பார்ப்பதற்காக வந்திருக்கிறார். ஸுகத்திலிருந்து நழுவியிருக்கிற என்னையும், கெட்ட நடையுள்ளவர்களும் செல்வப்பெருக்குடையவர்களுமான திருதராஷ்டிரபுத்திரர்களனைவரையும் பார்த்து, என்னுடைய புத்தியானது சுழலிலே சுழலுகிறதன்றோ? நல்ல கர்மங்களையோ கெட்ட கர்மங்களையோ மனிதன் செய்கிறான்; தான் செய்த அந்த வினைப்பயனை அனுபவிக்கிறான். அவ்வாறிருக்க, ஈஸ்வரன் எவ்வாறு கர்த்தா ஆவான்? பிரம்மஜ்ஞானிகளுள் சிறந்தவரே! அல்லாமலும், மனிதர்களுக்கு ஸுகதுக்

கங்களைக்கொடுக்கும் விஷயத்தில் வினையானது (செய்தவினை) இந்தச் சரீரத்திலேயே பின்தொடர்கிறதா? அல்லது, வேறு தேகத்திலா? பிராம்மணர்களுள் சிறந்தவரே! நல்வினைகளாலும் தீவினைகளாலும் தேடப்படுகின்ற தேஹியானவன் அவற்றுடன் எவ்வாறு சேர்கிறான்? தேகத்தைவிட்டுப் பரலோகத்திலா? இவ்வுலகத்திலா? பிருகுகுலத்தில் பிறந்தவரே! இந்த வினைப்பயன் இந்த லோகத்திலேயே அனுபவிக்கப்படுகின்றதா? அல்லது, பரலோகத்திலா? உடல் துறந்த ஜீவனுடைய நல்வினைதீவினைகள் எங்கேதான் இருக்கின்றன?' என்று வினவினார்.

மார்க்கண்டேயர், 'பேசுகிறவர்களுள் சிறந்தவனே! உள்ளபடி உன்னால் கேட்கப்பட்ட இந்தக் கேள்வியானது உனக்குத் தகுந்தது. அறியத்தக்கதை நீ அறிந்திருக்கிறாய். ஆயினும், உலகங்களைக் காப்பதின்பொருட்டு நீ என்னைக் கேட்கிறாய். அதனை இங்கே உனக்குச்சொல்லுவேன். மனிதன், இம்மையிலும் மறுமையிலும் ஸுகதுக்கங்களை அடையும் விதத்தை இப்பொழுது ஒரே மனத்துடன் கேள். முதலில் தோன்றின பிரம்மதேவர் பிராணிகளுக்குக் குற்றமற்றவையும் மிக்க பரிசுத்தியுள்ளவையும் தர்மத்தை முக்கியமாகக்கொண்டவையுமான சரீரங்களைப் படைத்தார். கௌரவர்களுள் மிகச்சிறந்தவனே! பண்டைக்காலத்து மனிதர்கள் எண்ணியவற்றை எண்ணியபடி அடைபவர்களும் நல்ல விரதமுள்ளவர்களும் உண்மை பேசுகிறவர்களும் பரிசுத்தர்களுமாயிருந்து பிரம்மமானார்கள். எல்லோரும் தேவர்களோடு ஒப்பானவர்கள்; தம்மிஷ்டப்படி ஆகாயத்தில் போவார்கள்; அங்கிருந்து திரும்பிவருவார்கள். எல்லோரும் தம்மிஷ்டப்படி ஸஞ்சரிப்பார்கள். மனிதர்கள் தம் இஷ்டப்படி மரிப்பவர்களும் தம் இஷ்டப்படி உயிர்வாழ்கிறவர்களும் துக்கமில்லாதவர்களும் கவலையற்றவர்களும் விருப்பம் நிறைவேறினவர்களும் துன்பமில்லாதவர்களுமாயிருந்தார்கள். மனிதர்கள் தேவர்களுடைய கூட்டங்களையும் மஹாத்மாக்களான ரிஷிகளையும் பார்ப்பவர்களும் எல்லாத் தர்மங்களையும் நேரில் அறிந்தவர்களும் அடங்கினவர்களும் [1] மத்ஸரம் அற்றவர்களும் பல்லாயிர வருஷங்கள் ஜீவித்திருப்பவர்களும் அப்படியே பல ஆயிரம் பிள்ளைகளுள்ளவர்களுமாயிருந்தார்கள். அதன் பிறகு, வேறொரு காலத்தில் மனிதர்கள் பூதலத்தில் ஸஞ்சரிப்பவர்களும், காமக்ரோதங்

---

1 பிறர் செழிப்பைக்கண்டு பொருமைப்படுதல்.

களால் கவரப்பட்டவர்களும், கபடத்தையும் டம்பத்தையும் அடுத்துப் பிழைப்பவர்களும், பேராசையாலும் அஜ்ஞானத்தினாலும் மூடப்பட்டவர்களும், தேவர்களால் விடப்பட்டவர்களும் ஆனார்கள். [1] பாவிகள் தீச்செயல்களால் பலவிதமான பிறப்பிறப்புக்களில் விலங்குப் பிறவியையும் நரகத்தையும் அடைகிறவர்களும், திரும்பத்திரும்ப வேவிக்கப்படுகிறவர்களும், விருப்பங்கள் வீணானவர்களும், எண்ணங்கள் வீணானவர்களும், ஞானம் வீணானவர்களும், மனமிழந்தவர்களும், [2] எல்லாப்பொருள்களையும் விரும்புகின்றவர்களும், [3] நாஸ்திகர்களும், தர்மமாகிற அணையை உடைக்கிறவர்களும், எல்லா விஷயங்களிலும் ஸம்சயமுள்ளவர்களும், (பிறருக்குத்) துன்பத்தைக் கொடுப்பவர்களும், பெரும்பாலும் தீய செய்கைகளால் அடையாளமிடப்பட்டவர்களும், கெட்ட குலத்தில் பிறப்பவர்களும், பலவகை நோயுள்ளவர்களும், துராத்மாக்களும், எல்லாருக்கும் தாபத்தை உண்டுபண்ணுகிறவர்களும், அற்ப ஆயுளுள்ளவர்களும், பாவிகளும், பயங்கரமான செய்கைகளின் பயன் விளையப்பெற்றவர்களும், எல்லாப்பொருள்களையும் வேண்டுகின்றவர்களும், நாஸ்திகர்களும், மனம் உடைந்தவர்களும் ஆகிறார்கள். குந்திநந்தன! உடல் துறந்து லோகாந்தரம் செல்லுகின்ற ஜீவனுக்கு இவ்வுலகத்தில் செய்த தன்னுடைய வினைகளால் கதி ஏற்படுகிறது. 'கற்றறிந்தவன் புத்தியில்லாதவன் ஆகிய இவர்களுடைய வினைப்போக்கமானது எங்கிருக்கிறது? அவன் எவ்விடத்திலிருந்துகொண்டு நல்வினைப்பயனையோ தீவினைப்பயனையோ அனுபவிக்கிறான்?' என்று நீ அறியவிரும்பிய விஷயத்திலும் ஸித்தாந்தத்தைக்கேள்.

இந்தமனிதன் கடவுளால்படைக்கப்பட்ட முதற்சரீரத்தால் நல்வினைகள் தீவினைகளுடைய பெரிய குவியலைச் செய்கிறான்; வாழ்நாளுடைய முடிவில் பெரும்பாலும் க்ஷீணித்திருக்கிற இந்தச் சரீரத்தை விட்டு அதேக்ஷணத்தில் வேறு பிறவியில் தவறாமல் பிறக்கிறான்; இடையில் சரீரமில்லாமை இல்லை. தன்னால் செய்யப்பட்ட வினையானது அந்த இவனுடைய வேறு சரீரத்தில் எப்பொழுதும் நிழல்போலத் தொடர்ந்துகொண்டு பலனைக் கொடுக்கிறது. அதனால் ஸுகத்தை அனுபவிப்பதற்கோ துக்கத்தை அனுபவிப்பதற்கோ தகுதியுள்ளவனாகிறான். அந்த ஜீவனானவன் ஞானத்ருஷ்டியுடையவர்களாலோ நல்ல அடையாளங்களாலோ

---

[1] இது இரண்டுதரம் வருகிறது. [2], [3] இவை இரட்டித்து வருகின்றன.

கெட்ட அடையாளங்களாலோ யமனால் (ஸுகதுக்கானுபவத்தில்) கட்டளையிடப்பெற்றவனென்றும், தன்னை அடைந்த ஸுகத்தையோ துக்கத்தையோ விலக்குவதற்குச் சக்தியற்றவனென்றும் அறியப்படுகிறான். யுதிஷ்டிர! அஜ்ஞானிகளுடைய இந்தக்கதி உரைக்கப்பட்டது.

இதற்குமேல் ஞானிகளுடைய உத்தமகதியைத் தெரிந்துகொள். ஞானிகள் கடுந்தவம்புரிகிறவர்களும் எல்லாச் சாஸ்திரங்களிலும் பற்றுள்ளவர்களும் உறுதியான விரதமுள்ளவர்களும் ஸத்தியத்தைப் பிரதானமாகக்கொண்டவர்களும் குருக்களுடைய பணிவிடைகளில் பற்றுள்ளவர்களும் நல்லொழுக்கமுடையவர்களும் யோகத்தாலுண்டாகிற ஞானத்தைத் தேடுவதிலேயே நோக்கமுள்ளவர்களும் பொறுமையுள்ளவர்களும் இந்திரியங்களை அடக்கினவர்களும் நல்லதேஜஸுள்ளவர்களும் சுத்தமான பிறப்பை அடைந்தவர்களும் பெரும்பாலும் நல்ல லக்ஷணமுள்ளவர்களும் இந்திரியங்களை ஜயித்திருப்பதனால் ஸுதந்திரர்களும் 1 நல்வினைகளால் ஆசையில்லாதவர்களும் துக்கமும் பயமுமற்றவர்களும் துன்பமற்றவர்களும் ஆகிறார்கள். ஞானக்கண்ணுடையவர்களும் தம்ஆத்மாவும் பிறஆத்மாவும் (சரீரத்தினின்று) கிளம்புவதையும் வேறு கர்ப்பத்தில் வஸிப்பதையும் பிறப்பதையும் முழுமையும் அறிகிறார்கள். பரதஸ்ரேஷ்டனே! மகாத்மாக்களும் சாஸ்திரங்களை நேரில் கண்டறிந்தவர்களுமான அப்படிப்பட்ட ரிஷிகள் இந்தக் கர்மபூமியை அடைந்து ஞானத்தினால் நல்ல கர்மங்களைச் செய்து மறுபடியும் ஸ்வர்க்கத்தை அடைகிறார்கள். அரசனே! மனிதர்கள் 2 தெய்வத்தினால் சிலவற்றையும் ஹடாத்காரத்தால் சிலவற்றையும் தம் செய்கைகளால் சிலவற்றையும்

---

1 'ஶுசிகாமாஶ்ச ரோகிண:' என்பது வேறுபாடம்; 'சுத்தர்களாக இருப்பதால்' என்று பொருள் கூறி அந்தர் சுத்தியை யோகமென்று கொண்டு சரீரத்தை யோகாக்நிமயமாக்கினவனுக்குச் சோகமும் மூப்பும் மரணமுமில்லை என்னும் பொருளுள்ள வேதவாக்கியத்தை எடுத்துக் காட்டுவதும், மேலும் வேறுவிதமாகப் பாடங்கொண்டு வேதாந்த பரமாகப் பொருள்கூறுவதும் பழையவுரை.

2 'மூடர் பித்தர் ஜடபாதர் முதலியோர் வந்ததை அநுபவித்தது தெய்வத்தால்' என்றும், 'யோகஸித்திபெற்ற விஸ்வாமித்ரர் முதலியவர்கள் வலிந்து அடைந்தது பிடிவாதத்தால்' என்றும், 'மற்றவர்கள் அடைந்தது தம் வினைகளால்' என்றும் கூறுவது பழைய உரை.

அடைகிறார்கள். இந்த மூன்றனுள் ஒன்றுதானுண்டென்னும் எண்ணம் உனக்கு வேண்டாம். பேசுகிறவர்களுள் சிறந்தவனே! இந்த விஷயத்தில் இந்த உவமையையும் தெரிந்துகொள். யுதிஷ்டிர! மானிடவுலகத்திலுள்ள ஸுகத்தையே சிறந்ததென்று எண்ணுகிறேன். ஒருவனுக்கு இந்த உலகத்தில்மட்டுமே ஸுகம் உண்டாகிறது; பரலோகத்தில் இல்லை. மற்றொருவனுக்குப் பரலோகத்தில்மட்டுமே ஸுகம் உண்டாகிறது; இவ்வுலகிலில்லை. வேறு ஒருவனுக்கு இவ்வுலகத்திலும் பரலோகத்திலும் ஸுகம் உண்டாகிறது. ஒருவனுக்கு இவ்வுலகத்திலும் ஸுகம் உண்டாகிறதில்லை; பரலோகத்திலும் இல்லை. வலிய பகைவர்களையுங் கொல்பவனே! எவர்களுக்கு ஏராளமான பொருள்கள் இருக்கின்றனவோ, எவர்கள் நன்கு அலங்கரிக்கப்பட்ட அங்கங்களுடன் எப்பொழுதும் ஸுகத்தை அனுபவிக்கிறார்களோ, எப்பொழுதும் கிராம்ய ஸுகத்தில் பற்றுதலுள்ள அந்த மனிதர்களுக்கு இந்த லோகஸுகம் மாத்திரம் உண்டு; பரலோகஸுகம் இல்லை. பகைவர்களைக் கொல்பவனே! எவர்கள் யோகம்செய்பவர்களும் தவத்தில் மிக்க பற்றுள்ளவர்களும் இந்திரியங்களை அடக்கினவர்களும் பிராணிகளுக்கு நன்மை செய்வதில் ஊக்கமுள்ளவர்களுமாகி வேதமோக்ஷமே முக்கியமாகக்கொண்டு தேகங்களை ஜீர்ணமாகச்செய்கிறார்களோ அவர்களுக்குப் பரலோகஸுகமே உண்டு. இந்த உலகஸுகம் இல்லை. எவர்கள் தர்மத்தையே முதன்மையாக அனுஷ்டிக்கிறார்களோ, தர்மத்தினால் தக்க ஸமயத்தில் தனங்களைத் தேடியும் மனைவியை அடைந்தும் யாகங்களால் தேவர்களைப் பூஜிக்கிறார்களோ அவர்களுக்கு இம்மையும் மறுமையு முண்டு. பாக்கியமில்லாத எந்த மூடர்கள் கல்வியைக் கற்காமலும் தவத்தைச் செய்யாமலும் ஒன்றையும் கொடாமலும் இருந்துகொண்டு புத்திரனை உண்டுபண்ணுவதில் முயலவுமில்லையோ, மங்களங்களையும் அடைகிறதில்லையோ, அவர்களுக்கு இவ்வுலகமுமில்லை; பரலோகமுமில்லை. நீங்களெல்லோரும் வீர்யமும் பலமும் மிக்கவர்களும் தெய்வசக்தியுள்ளவர்களும் தேகக்கட்டுள்ளவர்களும் வித்தைகளை நன்கு கற்றவர்களுமாகத் தேவகார்யநிமித்தம் பரலோகத்தினின்று பூமியை அடைந்திருக்கிறீர்கள். சூரர்களும் தவத்தையும் இந்திரிய நிக்கிரஹத்தையும் ஆசாரத்தையும் ஸஞ்சாரத்தையும் இயற்கையாகக்கொண்டவர்களுமான நீங்கள் பெரிய காரியங்களைச் செய்தே எல்லாத் தேவர்களையும் ரிஷிகளையும் பித்

ருக்களேயும் சிறந்தவிதியினுல் நன்கு திருப்தி அடையச்செய்து உங்களுடைய கர்மங்களால் புண்ணியஞ் செய்தவர்களுக்கு இருப்பிடமான சிறந்த ஸ்வர்க்கத்தைக் காலக்ரமத்தில் அடைவீர்கள். கௌரவ ராஜனே! உன்னுடைய இந்தத் துன்பத்தைப் பார்த்து ஸுகவிஷயத்தில் உனக்குச் சம்சயம்வேண்டாம்' என்று கூறினர்.

## நூற்றெண்பத்தேழாவது அத்யாயம்.

## மார்க்கண்டேயஸமாஸ்யாபர்வம். (தொடர்ச்சி.)

(மார்க்கண்டேயர் மரித்தவனை மீண்டும் பிழைக்கச்செய்கிற சக்தி முதலிய பிராம்மண மகிமையை யுதிஷ்டிரர் முதலியவர்களுக்குச் சொல்லியது.)

அப்பொழுது, பாண்டுவின் புதல்வர்கள் மஹாத்மாவான மார்க்கண்டேயரைப் பார்த்து, 'சிறந்த பிராம்மணர்களுடைய மகிமையைக் கேட்க விரும்புகிறோம். சொல்லக்கடவீர்' என்று சொன்னர்கள். இவ்வாறு சொல்லக்கேட்டவரும் பெருந்தவமுள்ளவரும் மிகப்பெரிய தேஜஸுள்ளவரும் எல்லாச் சாஸ்திரங்களிலும் தேர்ந்தவருமான அந்த மார்க்கண்டேயர், பார்த்தர்களைப் பார்த்து, 'ஹேஹயதேசத்து அரசர்களுடைய வம்சத்தை விருத்தி செய்பவனும் பகைவர்களுடைய பட்டணங்களை ஜயிப்பவனும் அழகு நிரம்பினவனும் பலசாலியுமான ஒரு ராஜகுமாரன் வேட்டையாடுவதற்காகக் காட்டில் ஸஞ்சரித்தான். புற்களாலும் கொடிகளாலும் நன்கு மூடப்பட்ட காட்டில் ஸஞ்சரிக்கின்ற அந்த ராஜகுமாரன், மான்தோலைப் போர்த்துக்கொண்டிருக்கிற ஒரு முனிவரைப் பக்கத்தில் கண்டான். காட்டில் அவனுல் அவர் மிருகமென்றெண்ணிக் கொல்லப்பட்டார். பூமிக்கு நாதனே! தாமரைமலர்போன்ற கண்களையுடைய அந்த ராஜகுமாரன், அந்தக் காரியத்தைச் செய்து துன்பமுற்றவனும் சோகத்தால் தாக்கப்பட்ட புத்தியுள்ளவனுமாகி, பிரஸித்தி பெற்றவர்களான ஹேஹயராஜர்களின் ஸமீபத்தில் சென்றான். அந்த ராஜகுமாரன் அப்பொழுது அந்த விருத்தாந்தத்தை அந்த ஹேஹயராஜர்களிடத்தில் உள்ளபடி உரைத்தான். அப்பனே! அந்த அரசர்கள் கிழங்குகனிகளைப் புஜிக்கின்ற அந்த முனிவர் கொல்லப்பட்டதைக் கேட்டுப் அங்கே

(போய்)பார்த்தும் மனவருத்தமுள்ளவர்களானார்கள். அவர்களனைவரும், 'இந்த முனிவர், யாரைச்சேர்ந்தவர்?' என்று அங்கங்கே தேடிக்கொண்டு, பிறகு, கஸ்யபருடைய புத்திரரான அரிஷ்டநேமியின் ஆஸ்ரமத்தை விரைவாக அடைந்தார்கள். அவர்களனைவரும் மஹாத்மாவும் கடுமையான விரதமுள்ளவருமான அந்தமுனிவரைவணங்கி நின்றார்கள். பிறகு, அந்தமுனிவர் அவர்களுக்குப் பூஜைக்குரிய பொருள்களைக் கொண்டுவந்தார். அவர்கள் மஹாத்மாவான அந்தமுனிவரைப் பார்த்து, 'முனிவரே! செய்கைக்குற்றத்தால் நாங்கள் உம்மிடத்திலிருந்து உபசாரணையைப் பெறுவதற்குத்தகுதியுள்ளவர்களல்லோம். எங்களால் பிராம்மணர் கொல்லப்பட்டாரன்றோ?' என்று சொன்னார்கள். அந்தப்பிரம்மரிஷியானவர், அவர்களைப் பார்த்து, 'உங்களால் எவ்வாறு பிராம்மணன் கொல்லப்பட்டான்? அவன் எங்கிருக்கிறான்? சொல்லுங்கள். ஒன்றுசேர்ந்தவர்களான நீங்கள் என்னுடைய தபோபலத்தைப் பாருங்கள்' என்று சொன்னார். அவர்களோ அந்தமுனிவருக்கு அவை அனைத்தையும் மிச்சமின்றி உள்ளபடி உரைத்துவிட்டுத் திரும்பிவந்து (பார்க்கையில்) அந்த இடத்தில் உயிர்துறந்த அந்தமுனிவரைக் காணவில்லை. உயிர்துறந்த முனிவரைத் தேடுகின்ற அந்த அரசர்கள் லஜ்ஜையுள்ளவர்களும் உறங்குகிறவர்கள்போல மனமிழந்தவர்களுமாயினர். பகைவர்களுடைய பட்டணங்களை ஜயிப்பவனே! அந்த ஹைஹயக்ஷத்ரியர்களைப் பார்த்துக் கஸ்யபருடைய குமாரரான அரிஷ்டநேமி முனிவர், அச்சமயத்தில், 'உங்களால் கொல்லப்பட்டவன் இந்தப் பிராம்மணனாக இருக்கலாம். அரசர்களே! இவன் தபோபலத்துடன் கூடின என்னுடைய புத்திரன்' என்று சொன்னார்.

வேந்தே! அந்த ரிஷியைப் பார்த்தவுடனே சொல்லாத ஆச்சர்யத்தை அடைந்த அந்த அரசர்கள், 'இது பெரிய ஆச்சர்யம்' என்று சொன்னார்கள். 'இந்த முனிவர் இந்த இடத்தில் உயிர் துறந்தவராகக் காணப்பட்டார்; எவ்வாறு உயிரை அடைந்தார்? இந்த முனிவர் மறுபடியும் பிழைப்பிக்கப்பட்டது தவத்தின் வீரியத்தினாலா? பிராம்மணரே! இது கேட்கத்தக்கதாயிருந்தால் கேட்க விரும்புகிறோம்' என்று வேண்டினார்கள். அவர் அந்த அரசர்களைப் பார்த்து, 'அரசர்களே! எங்கள் விஷயத்தில் மிருத்யுவானவன் அதிகாரஞ்செலுத்தத் திறமையுள்ளவனல்லன். க்ஷத்ரியர்களே! எங்கள்திறத்தில் மிருத்யு

வானவன் திறமையில்லாதவனானதற்குக் காரணத்தை [1] யுக்தியுடன் சுருக்கமாகச் சொல்வேன். நாங்கள் சுத்தமான ஆசாரத்தினால் ஆலஸ்யமற்றவர்களும் ஸாதிக்கத்தக்க பிரம்மோபாஸனத்தில் முக்கியமான நோக்கமுள்ளவர்களும் சுத்தமான அன்னத்தைப் புஜிப்பவர்களும் சுத்தமான வீட்டில் வஸிப்பவர்களும் பிரம்மசர்ய விரதத்தையுடையவர்களுமாகி உண்மையையே அறிகிறோம். பொய்யில் மனத்தைச் செலுத்துவதில்லை. எங்களுக்குரிய தர்மத்தை அனுஷ்டிக்கிறோம். ஆகலால், எங்களுக்கு மிருத்யுபயம் இல்லை. பிராம்மணர்களுக்கு நன்மையைச் சொல்லுகிறோம். அவர்களுடைய நன்னடையைப் பேசுகிறோம். அதனால், எங்களுக்கு மிருத்யுபயமில்லை. அதிதிகளை அன்னபானங்களாலும், எங்களையடுத்தவர்களை அதிக ஆகாரத்தாலும் நன்கு உண்பித்து மிச்சத்தைப் புஜிக்கிறோம். அதனால் எங்களுக்கு மிருத்யுபயமில்லை. மனவமைதியுள்ளவர்களும் இந்திரியங்களை அடக்கினவர்களும் பொறுமையை இயற்கையாகக்கொண்டவர்களும் தீர்த்தயாத்ரையிலும் கொடையிலும் மிக்க பற்றுள்ளவர்களுமாகப் புண்ய தேசங்களில் வஸிக்கிறோம். அதனால், எங்களுக்கு மிருத்யுபயமில்லை. யோகத்தால் ஸித்திபெற்றவர்களுடைய ஸமீபத்தில் நாங்கள் வாஸம்பண்ணுகிறோம். அதனால், எங்களுக்கு மிருத்யுபயமில்லை. பொறுமையில்லாதவர்களே! இந்த விஷயம் ஒரு சிறிதே உங்களுக்குச் சொல்லப்பட்டது. நீங்களெல்லாரும் ஒன்றுசேர்ந்து செல்லுங்கள். உங்களுக்குப் பாவத்தினின்று பயமில்லை' என்று சொன்னார். பரதர்களுள் சிறந்தவனே! அந்த அரசர்களனைவரும், 'அப்படியே ஆகட்டும்' என்று மஹரிஷியைப் பூஜித்து ஸந்தோஷமுள்ளவர்களாகத் தம் தேசத்தைக் குறித்துச் சென்றார்கள்.

[1] வேறு பாடம்.

## நூற்றெண்பத்தெட்டாவது அத்யாயம்.

## மார்க்கண்டேயஸமாஸ்யாபர்வம். (தொடர்ச்சி.)

(மார்க்கண்டேயர் ப்ருது சக்ரவர்த்தியினுடைய அச்வமேத யாகத்தில் அத்ரிக்கும் கௌதமருக்கும் நடந்த விவாதத்தைச் சொல்லுமுகத்தால் ப்ராம்மண மகிமையைக் கூறியது.)

பிராம்மணர்களுடைய மகிமையை என்னிடமிருந்து பின்னும் தெரிந்துகொள். இவ்வுலகில், [1] வைன்யன் என்கிற ராஜரிஷியானவன் அச்வமேத யாகத்தின்பொருட்டுத் தீக்ஷையை அடைந்தான். அத்ரிமஹரிஷியானவர் பொருள் நிமித்தம் அவனை அடையத் தொடங்கினாரென்று நமக்குக் கேள்வி. அவர் தர்மத்தை அழியாமல் காக்கும் எண்ணத்தால் மறுபடியும் பொருளை விரும்பவில்லை. பேரறிவுள்ள அந்த அத்ரியானவர் நன்கு ஆலோசித்துக் காட்டையே விரும்பினார். அவர் தர்மபத்னியையும் புத்ரர்களையும் அழைத்து, 'முடிவில்லாததும் அதிகமானதும் குறைவுபடாததுமான போகத்தை நாம் அடைவோம். குணம் மிகுந்த வனம்செல்லுகையை நீங்கள் விரைந்து விரும்பக்கடவீர்' என்று சொன்னார்.

பிறகு, மனைவியானவள் பொருளையே விரும்பினவளாக அவரைப்பார்த்து, 'மஹாத்மாவான வைன்யனை அடைந்து அதிகமான பொருளை வேண்டுவீராக. யாகம் செய்கின்ற அந்த ராஜரிஷியானவன் வேண்டுகிற உமக்குப் பொருளைக் கொடுப்பான். ப்ரம்மரிஷியே! அவனிடத்திலிருந்து மிகுதியான தனத்தை வாங்கிக்கொண்டு போஷிக்கத்தக்கவர்களுக்கும் புத்ரர்களுக்கும் நன்றாகப் பங்கிட்டுக்கொடுத்துவிட்டுப் பிறகு இஷ்டப்படி செல்வீராக. இதுதான் இணையில்லாத தர்மமென்று தர்மத்தை அறிந்தவர்களால் சொல்லப்பட்டது' என்று விடை கூறினாள். அத்ரி, 'மஹாபாக்யமுள்ளவளே! வைன்யனை, தர்மத்தோடும் பொருளோடும் சேர்ந்தவனென்றும் ஸத்யமான விரதத்தோடு சேர்ந்தவனென்றும் மஹாத்மாவான கௌதமர் எனக்குச் சொல்லியிருக்கிறார். ஆனால், ஒன்றிருக்கிறது. கௌதமர் சொல்லியவண்ணம் அவ்விடத்தில் என்னைப் பகைக்கின்ற பிராம்மணர்கள் வசிக்கிறார்

1 வேனன் குமாரனான ப்ருது சக்ரவர்த்தி.

களன்றோ? அதனால் நான் முயலவில்லை. அங்கே, அவர்கள், என்னால் சொல்லப்பட்டதும் மங்களகரமானதும் அறம்பொருளின்பங்களோடுகூடியதுமான சொல்லைப் பொருளில்லாததென்று மறுத்துப் பேசுவார்கள். அதிகம் கற்றறிந்தவளே! (ஆயினும்) உன் வசனமானது எனக்குப் பிடிக்கிறது. செல்வேன். வைன்யன் எனக்குப் பசுக்களையும் ஏராளமான பொருட்குவியல்களையும் கொடுப்பான்' என்று சொன்னார். பெருந்தவமுள்ள அத்ரியானவர் இவ்வண்ணமுரைத்து வைன்யனுடைய யாகத்தைக் குறித்து விரைவாகச் சென்றார். அவர் யஜ்ஞசாலையை அடைந்து அந்த அரசனைத் துதிக்கலானார். அத்ரியானவர், மங்களங்களோடுகூடின வாக்கியங்களால் புகழ்கின்றவராகி, 'அரசனே! நீ பாக்யசாலி. நீ பிரபு. பூமியில் நீ முதன்மையான அரசன். உன்னை ரிஷிகணங்கள் துதிக்கின்றன. தர்மத்தை அறிந்தவன் உன்னைக்காட்டிலும் வேறொருவனுமில்லை' என்கிற வசனத்தைச் சொன்னார்.

பெருந்தவமுள்ள கௌதமரிஷியானவர், கோபங்கொண்டு அந்த அத்ரியைப்பார்த்து, 'ஓ! அத்ரியே! நீர் மறுபடியும் இவ்வாறு சொல்லாதீர். உமக்கு அறிவானது நல்ல நிலையில் இல்லை. இவ்வுலகில் நமக்கு முதன்மையான அரசன் மஹேந்திரன். அவன்தான் பிரஜைகளுக்கு ரக்ஷகன்' என்று சொன்னார். ராஜச்ரேஷ்டனே! பிறகு, அத்ரியும், கௌதமரைப் பார்த்து, 'இந்த அரசனே சக்ரவர்த்தி; அப்படியே இந்திரன்; பிரஜைகளைக்காப்பவன். நீர்தாம் மயங்குகிறீர். மயக்கத்தினால் உமக்கு நல்ல அறிவு இல்லை' என்று சொன்னார். கௌதமர், 'நான் நல்ல அறிவுள்ளவனாக இருக்கிறேன். நான் மயங்கவில்லை. பேச விரும்பிய நீர் மயங்குகிறீர். ஜனங்கள் நிறைந்த ஸபையில் நீர் அரசனுடைய பார்வையை அடைய விரும்பி அவனைத் துதிக்கிறீர். நீர் உத்தமகர்மத்தை அறியவில்லை; (அதன்) பயனையும் [1] அறியவில்லை. நீர் சிறுபிள்ளையாகவும் மூடராகவுமிருக்கிறீர். ஏதோ ஒரு காரணத்தினால் நீர் முதியவராகிவிட்டீர்' என்று சொன்னார். அவனுடைய யாகசாலையில் வந்திருந்தவர்கள், அவ்வாறு விவாதப்படுகின்றவர்களும் ரிஷிகளுடைய முன்னிலையில் இருப்பவர்களுமான அவ்விருவரையும் பார்த்து, 'யாரால் இவ்விருவருக்கும் வைன்யனுடைய ஸபையில் பிரவேசம் கொடுக்கப்பட்டது? இவர்கள் இருவரும் என்ன காரியத்துக்காக

1 வேறு பாடம்.

உரக்கப் பேசிக்கொண்டிருக்கிறார்கள்?' என்று கேட்டார்கள். பிறகு, எல்லாத் தர்மங்களையும் அறிந்தவரும் பரமதார்மிகரு மான காஸ்யபர், யாகசாலையில் வந்திருப்பவர்களும் விவாதப்பட் டுக்கொண்டிருப்பவர்களுமான அவ்விருவரையும் ஸபையோர் களுக்குத் தெரிவித்தார். பிறகு, கௌதமமுனிவர், ஸபை யில் வீற்றிருக்கின்ற முனிஶ்ரேஷ்டர்களைப் பார்த்து, 'பிராம் மணோத்தமர்களே! எங்களிருவருடைய (விவாத ஸம்பந்த மான) வினுக்கள் சொல்லப்படுவதைக் கேளுங்கள். இந்த ஸபை யில் வைன்யனை அத்ரியானவர் கடவுளாயிருப்பவனென்று சொல்லு கிறார். இந்த விஷயத்தில் எங்களுக்கு ஸந்தேகம் பெரிதாயிருக் கிறது' என்று சொன்னார். பிறகு, வைன்யனுடைய ஸபையில் கௌதமரால் சொல்லப்பட்ட வாக்கியத்தைக் கேட்டவுடனே, மஹாத்மாக்களான முனிவர்கள், தர்மங்களை அறிந்தவரான ஸநத் குமாரரிடம் ஸந்தேகத்தைத் தீர்த்துக்கொள்வதற்காக விரைவாக ஓடினார்கள். எல்லோரும், தேவர்கள் பிரம்மாவை வணங்குவது போல, அந்த ஸநத்குமாரரை வணங்கி வினவினார்கள்.

பெருந்தவமுள்ள அந்த ஸநத்குமாரர், அவர்களுடைய அந்த வார்த்தையை உள்ளபடி கேட்டு, பிறகு, அவர்களனைவரையும் நோக்கி, 'பிரம்மதேஜஸானது க்ஷத்திரிய தேஜஸோடு சேர்ந்து கொண்டும் க்ஷத்திரிய தேஜஸானது பிரம்ம தேஜஸோடு சேர்ந்து கொண்டும், நெருப்பும் காற்றும் காடுகளை எரிப்பதுபோலப் பகைவர்களை எரிக்கின்றன. அரசன் பிரவிருத்தியை அடைந் தவன்; தர்மத்தை நிலைநாட்டுகிறவன்; பிரஜைகளுக்குப் பதி யாகவே இருப்பவன். அவனே ரக்ஷகன். அவனே நீதியை அறிந்தவன். அதனாலேயே ஜனகன் (=தந்தை); ஹிதத்தை உப தேசிப்பவன். அவனே பிரஜைகளுக்குப் பதி. அவனே விராட். அவனே ஸம்ராட். அவன் க்ஷத்திரியன். அவனே பூமிக்கு இறைவன். அவனே மனிதர்களைப் பாதுகாப்பவன். எவன் இந் தச் சொற்களால் துதிக்கப்படுகிறானோ அவனை எவன்தான் பூஜிப் பதற்குத் தகுதியுள்ளவனல்லன்? அரசன், தர்மங்களை நடத்துவத னால் (உலகத்துக்கு) முதன்மையான காரணமென்றும், யுத்தத் தில் ஜயத்தை அடைவதனால் துன்பங்களை ஒழிப்பவனென்றும், ஜனங்களுடைய க்ஷேமத்தின்பொருட்டு எல்லாப்பக்கத்திலும் செல்லுபவனென்றும், ஈஸ்வரனென்றும் (பிரஜைகளை) ஸ்வர்க்கத் தை அடைவிப்பவனென்றும், பகைவரை எதிர்த்தவுடனே வெல் பவனென்றும், விஷ்ணுவென்றும், ஸத்யத்திற்குப் பிறப்பிடமென்

னும், புராதனமான தர்மங்களை அறிபவனென்றும், ஸத்யத்தை யும் தர்மத்தையும் நடத்துபவனென்றும் சொல்லப்படுகிறான். ரிஷிகள் அதர்மத்தினின்று பயந்தவர்களாக க்ஷத்திரியனிடத்தில் பலத்தை நன்கு அமைத்தார்கள். அதனால், பிரம்மதேஜஸினால் க்ஷத்திரியதேஜஸும், க்ஷத்திரிய தேஜஸினால் பிரம்மதேஜஸும் குறைவற்றிருக்கின்றன. தேவர்களுள் ஸூர்யன் தேஜஸினால் எவ்வாறு ஆகாயத்தில் இருளைப் போக்குகிறானோ அவ்வாறே அர சன் பூமியில் அதர்மங்களை முழுமையும் போக்குகிறான். ஆகை யால், சாஸ்திரத்தினுடைய பிராமாண்யத்தைப் பார்த்தால் அர சனுக்குத் தலைமை ஏற்படுகிறது. அரசன் இவ்வாறு (பெருமை யுள்ளவனென்று) சொல்லியவருடைய பக்ஷம் ஸித்தாந்தமாக நிலைக்கிறது' என்று தர்மத்தோடும் அர்த்தத்தோடுங்கூடிய வச னத்தை மறுமொழியாக உரைத்தார்.

பிறகு, (அத்ரியினுடைய) கக்ஷியானது ஸித்தாந்தமான வுடன், உதார மனமுள்ள அந்த அரசன் மிகமகிழ்ந்தவனும் பிரீதியடைந்தவனுமாகி முன்பு தன்னைப் புகழ்ந்த அத்ரியைப் பார்த்து, 'பிரம்ம ரிஷியே! இச்சபையில் முன்பு என்னை மனி தர்களுள் மிகச் சிறந்தவனென்றும் எல்லாத் தேவர்களோடும் ஒப்பானவனென்றும் ச்ரேஷ்டனென்றும் சொன்னீராதலால் நான் உமக்கு அதிகமான பலவித தனங்களையும் நல்ல வஸ் திரங்களால் அலங்கரிக்கப்பட்ட [1] ச்யாமைகளான ஆயிரம் வேலைக்காரிகளையும் பத்துக்கோடி பொன்னாபரணங்களையும், பத்துப் பாரம் பொன்னையும் கொடுப்பேன். பிரம்மரிஷியே! உம் மை எல்லாமறிந்தவரென்று நான் எண்ணுகிறேன். அதனால், இவற் றைக் கொடுக்கிறேன்' என்று சொன்னான். நன்றாக மர்யாதை செய்யப்பட்டவரும் நல்ல தேஜஸுள்ளவரும் தவம் மிக்கவருமான அத்ரியானவர் நியாயமாக அவையனைத்தையும் பெற்றுக்கொண்டு தம் வீட்டைக்குறித்துத் திரும்பிச்சென்றார். பரிசுத்த மன முள்ள அத்ரியானவர் ப்ரீதியுள்ளவராகப் புத்ரர்களின்பொருட்டுத் தனத்தைக் கொடுத்துவிட்டுத் தவத்தை எண்ணி வனத்தையே அடைந்தார்.

1 நடு யௌவனத்திலிருப்பவள்; வனபர்வம் 243-ம் பக்கம் குறிப்பிற் காண்க.

## நூற்றெண்பத்தொன்பதாவது அத்யாயம்.

## மார்க்கண்டேயஸமாஸ்யாபர்வம். (தொடர்ச்சி.)

(மார்க்கண்டேயர், தானம் அக்னிஹோத்ரம் மோக்ஷம் முதலியவைகளை நிரூபிக்கிறதான தார்க்ஷ்யருக்கும் ஸரஸ்வதிக்கும் நடந்த ஸம்வாதத்தை யுதிஷ்டிரர் முதலியவர்களுக்குக் கூறியது.)

பகைவர்பட்டணத்தை அழிப்பவனே! வீரனே! சிறந்த புத்தியுள்ள தார்க்ஷ்யமுனிவர் வினவ, ஸரஸ்வதி சொல்லிய விஷயத்தைக் கேள். தார்க்ஷ்யர், 'கல்யாணி! இவ்வுலகில் மனிதனுக்கு ஏது நன்மை? எதைச்செய்கிறவன் தனக்குரிய தர்மத்தினின்று நழுவாமலிருக்கிறான்? அழகிய எல்லா அங்கங்களுமுள்ளவளே! எல்லாவற்றையும் எனக்குச் சொல்வாயாக. உன்னால் உபதேசிக்கப்பட்டு எனக்குரிய தர்மத்திலிருந்து நான் நழுவாமலிருக்கக்கடவேன். எந்தக்காலத்தில் அக்னியில் எவ்வாறு ஹோமஞ் செய்வேன்? எவ்வாறு பூஜிப்பேன்? எதனால் தர்மமானது அழியாமலிருக்கும்? நல்ல மஹிமையுள்ளவளே! நான் ரஜோகுணத்தைவிட்டு எவ்வாறு உலகங்களில் ஸஞ்சரிப்பேன்? இவை அனைத்தையும் நன்கு கூறுவாயாக' என்று வினவினார். ப்ரீதியுள்ளவரும் கேட்கவிரும்புகிறவருமான அவரால் இவ்வாறு வினவப்பட்ட ஸரஸ்வதியானவள் சிறந்த புத்தியுடன்கூடிய தார்க்ஷ்யரென்கிற பிராம்மணரைப் பார்த்து, 'எவன் வேதாத்யயனத்தில் எப்பொழுதும் பற்றுள்ளவனாகவும் சுத்தனாயும் கவலையில்லாதவனாகவும் உபதேசிக்கத்தவனாய் வேதத்தை அறிகிறானோ அவனே முதலில் தேவலோகத்துக்குப் போகிறான்; தேவர்களோடுகூட அளவற்ற சௌக்கியத்தைப் பெறுவான். அந்தத் தேவலோகத்தில் அழகியவையும் விசாலமானவையும் சோகத்தைப் போக்குபவையும் நன்றாக மலர்ந்திருக்கின்ற புஷ்பங்களோடு கூடியவையும் மிகப் புண்ணியமானவையும் சேறில்லாதவையும் மீன்களுள்ளவையும் நல்லதீர்த்தமுள்ளவையும் பொற்றாமரைமலர்களால் மூடப்பட்டவையுமான ஓடைகள் இருக்கின்றன. ஸுமானமுள்ளவர்களும் அலங்கரிக்கப்பட்டவர்களும் பொன்னிறமுள்ளவர்களுமான அப்ஸரஸ்ஸுகளாலே தனித்தனி பூஜிக்கப்படுகின்றவர்களும் மிக்கமகிழ்ச்சியுள்ளவர்களுமான புண்ய புருஷர்கள் அவற்றின் கரைகளில் இருக்கிறார்கள். பசுவைத்தானம்

பண்ணுகிறவர்கள் சிறந்த உலகத்தை அடைகிறார்கள். காளையைத் தானம்பண்ணுகிறவர்கள் ஸூர்யலோகத்தை அடைகிறார்கள். வஸ்திரத்தைக் கொடுப்பவர்கள் சந்திரலோகத்தை அடைகிறார்கள். பொன்னைத் தானம்செய்பவர்கள் தேவத்தன்மையை அடைகிறார்கள். நல்ல காந்தியுடையதும் நல்ல கறவையுள்ளதும் அழகிய கன்றுள்ளதும் வெருண்டு ஓடாமலிருப்பதுமான புதிதாக ஈன்ற பசுவைத் தானம் செய்பவர்கள் அந்தப் பசுவினுடைய தேஹத்தில் எவ்வளவு உரோமங்களிருக்கின்றனவோ அவ்வளவு வர்ஷகாலம் தேவலோகத்திலிருக்கின்றார்கள். எவன் நன்கு அடங்கினதும் கலப்பையை இழுக்கிறதும் அதிக வீர்யமுள்ளதும் பாரத்தைச் சுமக்கக்கூடியதும் சிறந்த பலமுள்ளதும் இளம் வயதுள்ளதுமான விருஷபத்தைத் தானம் செய்கிறானோ அவன் பத்துப்பசுக்களைத் தானம் செய்தவனுக்குள்ள லோகங்களை அடைகிறான். எவன் வஸ்திரத்தோடுகூடியதும் கறக்க வெண்கலப்பாத்திரமுள்ளதுமான கபிலைப்பசுவைப் பின்னே கொடுக்கப்படும் தக்ஷிணை முதலிய திரவியங்களோடு தானம்பண்ணுகிறானோ (அவன் மரித்த) பின் 1 அந்தப் பசுவானது தனது அந்தஅந்தக் குணங்களாலே அவனுக்கு விரும்பியவற்றைக் கொடுப்பதாகிக் கொடுத்த அவனை அடைகிறது. பசுவைத் தானம்செய்தால் அதன் தேகத்தில் எவ்வளவு ரோமங்களிருக்கின்றனவோ அவ்வளவு பலன்களை அடைகிறான். அவன் தனது புத்திரர்களையும் பௌத்திரர்களையும் 2 குலமனைத்தையும் ஏழுதலைமுறைவரையில் பரலோகத்தில் உத்தாரணம் செய்கிறான். தக்ஷிணையுடன்கூடியதும் பொன்னாற்செய்த அழகிய கொம்புகளுள்ளதும் கறக்க வெண்கலப்பாத்திரமுள்ளதும் பின்பு கொடுக்கப்படுகிற தக்ஷிணைமுதலிய திரவியங்களையுடையதுமான திலதேனுவைப் பிராம்மணனுக்குத் தானம் செய்பவனுக்கு வஸுக்களுடைய உலகங்கள் எளிதில் அடையக்கூடியவையாகின்றன. தன்னுடைய தீவினைகளால் அஸுரர்கள் நிரம்பின கடுமையான இருளுள்ள நரகத்தில் விழுகின்றவனை, மஹாஸமுத்திரத்தில் முழுகுகிறவனை அநுகூலமான காற்றுடன்கூடின படகு கரையேற்றுவதுபோல, கோதானமானது பரலோகத்தில் கரையேற்றுகிறது. தானம் செய்யத்தக்க தன் கன்னிகையைப் பிராம்மவிவாகவிதிப்படி கொடுக்கிறவனும் பூமியைப் பிராம்மண

1 வேறுபாடம். 2 'குலம் ஸர்வம்' என்பது மூலம்; 'முன்னோர்களையும்' என்பது இங்கிலிஷ் மொழிபெயர்ப்பு.

னுக்குக் கொடுக்கிறவனும் விதிப்படி (மற்றத்) தானங்களையும் செய்கிறவனும் இந்திரலோகத்தை அடைகின்றனர். தார்க்ஷ்ய! எவன் நியமமுள்ளவனாகவும் நல்லொழுக்கமுள்ளவனாகவும் ஏழு வருஷங்கள் இடைவிடாமல் அக்னியில் ஹவிஸ்ஸை ஹோமம் செய்கிறானோ அந்த மனிதன் தன்கர்மங்களாலே முன்னேழுதலைமுறை பாட்டன்மார்களையும் பின்னேழுதலைமுறையாரையும் தன்னையும் பரிசுத்தப்படுத்துகிறான்' என்று தர்மத்துடன் கூடிய ஹிதமான இந்த வாக்கியத்தை உரைத்தாள்.

தார்க்ஷ்யர், 'அழகிய ரூபமுள்ளவளே! அக்னிஹோத்திரத்தினுடைய புராதனமான முறை யாது? நான் இப்பொழுது இந்த இடத்தில் உன்னால் உபதேசிக்கப்பட்டுப் புராதனமான அக்னிஹோத்திர விரதத்தை அறியக்கடவேன். எனக்குச் சொல்வாயாக' என்று வினவ, ஸரஸ்வதியானவள், 'சுத்தியில்லாதவனும் கைகளைச் சோதித்துக்கொள்ளாதவனும் வேதங்களை அறியாதவனும் வேதார்த்தங்களை அறிந்தும் அனுஷ்டியாதவனும் அக்னியில் ஹவிஸ்ஸை ஹோமம் செய்யக்கூடாது. பிறர் மனத்தை அறிய விரும்புகிறவர்களும் சுத்தியில் விருப்பமுள்ளவர்களுமான தேவர்கள் ச்ரத்தையில்லாதவனிடமிருந்து ஹவிஸ்ஸைப் பெற்றுக்கொள்ளார். சீலம் கோத்ரம் முதலியவற்றை அறிவதற்கு முன் பயனற்றவனை வேதமோதாதவனைத் தேவதைகளுக்கு உத்தேசமான ஹவிஸ்ஸைக்கொடுப்பது முதலியவற்றில் (ரித்விக்காக) நியமிக்கலாகாது. அப்படிப்பட்ட (ச்ரோத்ரியன்) அல்லவோ ஹோமம் செய்யத்தக்கவன்? வேதமானது தன்னை ஓதாதவனைக் குலமும் ஒழுக்கமும் அறியப்படாதவனென்று சொல்லுகிறது. தார்க்ஷ்ய! இப்படிப்பட்ட (ச்ரோத்ரியனல்லாதவன்) அக்னிஹோத்திர ஹோமம் செய்யக்கூடாது. எவர்கள் ச்ரத்தையுள்ளவர்களாகவும் ஸத்தியத்தையே விரதமாகக்கொண்டவர்களாகவும் ஹோமஞ்செய்தமிச்சத்தைப் புசிப்பவர்களாகவும் அக்னியில் ஹோமம் செய்கிறார்களோ அவர்கள் புண்யகந்தமுள்ள கோலோகத்தை அடைந்து சிரேஷ்டமான பிரம்மதேவனையும் (பிறகு அடைவில்) சிரேஷ்டமான பிரம்மத்தையும் பார்க்கிறார்கள்' என்று சொன்னாள்.

தார்க்ஷ்யர், 'நல்ல மதியுள்ளவளே! பரமாத்மஸ்வரூபியும், ஆத்மஸ்வரூபவிஷயத்திலும் கர்மவிஷயத்திலும் மிகச் சிறந்த புத்தியை அடைந்திருப்பவளும், ஞானஸ்வரூபியானவளுமான உன்னை ஆத்ம

தத்வம் கர்மதத்வம் இரண்டினையும் பிரகாசிக்கச் செய்பவளென்று அறிந்து வினவுகிறேன். அழகிய உருவமுள்ளவளே! நீயார்?' என்று வினவினார். ஸரஸ்வதி, 'பிராம்மணச்ரேஷ்டர்களுடைய ஸந்தேகத்தைப் போக்குவதற்காக (ப் பராபரவித்யாஸ்வரூபியான ஸரஸ்வதியென்கிற) நான் அக்னிஹோத்திரத்திலிருந்து வந்திருக்கிறேன். உள்ளத்தில் நிலைபெற்றிருக்கிற நான் உன்னுடைய ஸமீபத்தை அடைந்து உண்மையான இந்த 1 அர்த்தத்தை உள்ளபடி உரைத்தேன்' என்று கூறினாள்.

தார்க்ஷ்யர், 'உனக்கு நிகரானவர் ஒருவரும் இல்லை. லக்ஷ்மி போல மிகமிஞ்சிப் பிரகாசிக்கிறாய். நல்ல கீர்த்தியுள்ளவளே! உன்னுடைய ரூபமானது தேவஸம்பந்தமுள்ளதாயும் முடிவற்ற ஒளியுள்ளதாயுமிருக்கிறது. பிரகாசிக்கின்ற அறிவையும் தரிக்கிறாய்' என்று கூறினார். ஸரஸ்வதி, 'மனிதர்களுள் பெருமையுடையவனே! கற்றறிந்தவனே! பிராம்மணனே! யாகஞ் செய்பவர்கள் யாகங்களில் நல்ல ஸ்வரத்துடன் உச்சரிக்கிற சிறந்த மந்திரங்களாலேயே நான் நன்றாக வளர்ந்தவளும் திருப்திசெய்யப்பட்டவளும் ரூபவதியும் ஆகிறேன். வித்வானே! அக்னிஹோத்திரங்களில் மரத்தினாலோ இரும்பினாலோ மண்ணாலோ செய்யப்பட்ட பாத்திரம் உபயோகிக்கப்படுதலாலேயே எனக்குத் திவ்யரூபமும் பிரஜ்ஞையும் ஸித்திக்கின்றனவென்று அறிவாயாக' என்று சொன்னாள்.

தார்க்ஷ்யர், 'மிக்க பிரஸித்திபெற்றவர்களான முனிவர்கள் இதைச் சிறந்த நன்மையென்றெண்ணி முயல்கின்றார்கள். அறிஞர்கள் சிறந்த எந்தப் பதத்தை அடைகிறார்களோ நிகரில்லாததும் சோகமில்லாததுமான அந்த மோக்ஷத்தை எனக்குச் சொல்வாயாக. ஸாங்க்யர்களும் யோகிகளும் எதை ஸர்வோத்தமமென்று அறிகிறார்களோ புராதனமான அந்தப்பதத்தை நான் அறியேன்' என்று சொன்னார். ஸரஸ்வதி, 'வேதத்தை அறிந்தவர்களும் தவத்தைப் பொருளாகக்கொண்டவர்களும் தூக்கமற்றவர்களும் ஸம்ஸாரபந்தத்திலிருந்து விடுபட்டவர்களுமான முமுக்ஷுக்கள் வேதாத்தியயனத்தாலும் தானத்தாலும் விரதங்களாலும் புண்யத்தாலும் யோகத்தாலும் சிறந்த வஸ்துக்களைக்காட்டிலும் சிறந்ததும் பிரஸித்திபெற்றதும் புராதனமாக இருப்பதுமான அந்த உத்தமமான பதத்தை அடைகிறார்கள். அதன் மத்தியில் நல்ல

1 'கர்மாக்கள் பரம்பரையாக மோக்ஷஸாதனமென்பதையும் ஸத்யமான ப்ரம்மவித்தையையும்' என்பது பழைய உரை.

வாஸனையுள்ளதும் ஆயிரம் கிளைகளுள்ளதுமான பெரிய நீர்நொச்சி மரமானது பிரகாசிக்கிறது. அதனுடைய அடியிலிருந்து தேன் போல ருசியான நீர்ப்பெருக்குள்ள மிக்க புண்யமான நதிகள் பெருகுகின்றன. அதனுடைய ஒவ்வொரு கிளையிலிருந்தும் பொரிகளும் பணிகாரங்களும் மாம்ஸங்களும் கீரைகளும் பாயஸமாகிற சேறும் எப்பொழுதுமுள்ள மஹாநதிகள் மனதிற்பாங்கான தரைகளில் ஓடுகின்றன. ரிஷியே! எந்த இடத்தில் அக்னியைத் தலைவனாகக்கொண்டவர்களும் இந்திரனோடு கூடியவர்களும் மருத்துக்களுடைய கணங்களோடு கூடியவர்களுமான தேவர்கள் சிறந்த யாகங்களைச் செய்தார்களோ அந்த ஸ்தானம் நிகரற்றது' என்று கூறினான்' என்றார்.

## நூற்றுத்தொண்ணூறாவது அத்யாயம்.

## மார்க்கண்டேயஸமாஸ்யாபர்வம். (தொடர்ச்சி.)

(மார்க்கண்டேயர், மத்ஸ்யரூபியானவிஷ்ணு வைவஸ்வதமனு இவர்களின் சரித்ரமான மத்ஸ்யோபாக்கியானத்தை யுதிஷ்டிரர் முதலியவருக்குச் சொல்லியது.)

பிறகு, அந்தப்பாண்டவர், மீண்டும் மார்க்கண்டேயரைப் பார்த்து, 'வைவஸ்வதமனுவினுடைய சரித்திரத்தைச் சொல்வீராக' என்று வினவ, மார்க்கண்டேயர், 'அரசனே! புருஷச்ரேஷ்டனே! நல்ல பிரதாபமுள்ளவரும் பிரம்மதேவர்போன்ற காந்தியுள்ளவரும் ஸூர்யனுடைய புத்திரருமான மஹரிஷி ஒருவர் இருந்தார். அந்த மனுவானவர் ஐச்வர்யத்தாலும் தேஜஸாலும் காந்தியினாலும் முக்கியமாகத் தவத்தினாலும் தம் பிதாவுக்கும் பிதாமஹருக்கும் மேற்பட்டிருந்தார். அரசரான அந்த மனுவானவர் விசாலையென்னும் பதரியில் கைகளை உயரத் தூக்கிக்கொண்டும் ஒரு காலால் நின்றுகொண்டும் கடுமையான மிகப் பெரியதவத்தைச் செய்தார். அப்பொழுது, அவர் தலைகீழாக நின்றுகொண்டும் அவ்வாறே கண்கொட்டாமலும் பதினாயிரம் வருஷம் கோரமும் உறுதியுமான தவத்தைச்செய்தார். தவம் செய்கின்றவரும் நனைந்திருக்கின்ற மரவுரியையும் சடைகளையும் தரித்திருப்பவருமான அவரை ஒரு ஸமயத்தில் ஒரு மத்ஸ்யமானது சீரிணிநதியின் கரை

யண்டை வந்து, 'பகவானே! நான் சிறிய மீனாக இருக்கிறேன். பலமுள்ள மீன்களிடத்தில் எனக்குப் பயமுண்டாகிறது. நல்ல விரதமுள்ளவரே! ஆதலால், நீர் என்னை அந்தப் பயத்தினின்று பாதுகாக்கத்தக்கவராகிறீர். பலமுள்ள மீன்கள் பலமில்லாத மீன்களை மிகத்தின்னுகின்றன. எங்களுக்குச் சாச்வதமான இந்த ஜீவனமானது எப்பொழுதும் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. மிகவும் முழுகுகிற என்னைப் பெரிதான அந்தப்பயமாகிற வெள்ளத்தினின்று காக்கக்கடவீர். இந்த உபகாரத்தைச் செய்வீராகில் நான் உமக்குப் பிரத்யுபகாரம் செய்வேன்' என்று சொல்லியது.

அந்த வைவஸ்வதமனுவானவர் மத்ஸ்யத்தினுடைய வசனத்தைக் கேட்டுக் கருணைமேலிட்டு அந்த மத்ஸ்யத்தைத் தாமே கையினால் எடுத்தார். வைவஸ்வதமனுவானவர் சந்திரகிரணம் போன்ற ஒளிபொருந்திய அந்த மத்ஸ்யத்தை [1] ஜலம் வைக்குமிடத்திற்குக் கொண்டுபோய்த் தண்ணீர் நிறைந்த ஒரு சாலில் போட்டார். அரசனே! அந்த மத்ஸ்யமானது மிகப்போஷிக்கப்பட்டு அந்தச் சாலில் வளர்ந்தது. மனுவானவர் அந்த மத்ஸ்யத்தினிடம் புத்திரனிடம் அன்புவைப்பதுபோல மிக்க அன்புவைத்தார். அந்த மத்ஸ்யமானது, நெடுங்காலம் சென்றபிறகு, மிகப் பெரிதாகிவிட்டது. அந்த மத்ஸ்யம் அந்தச் சால்ஜலத்தில் அடங்காமல் போய்விட்டதாம். பிறகு, மத்ஸ்யமானது மறுபடியுமே மனுவைப்பார்த்து, 'பகவானே! இப்பொழுது எனக்கு வேறு ஒரு நல்ல இடத்தைக்கொடும்' என்று சொல்லியது. பிறகு, பகவானான அந்த மனு அந்தச்சாலினின்று மத்ஸ்யத்தை மேலே எடுத்து அப்பொழுது ஒரு பெரிய தடாகத்திற்குக் கொண்டுபோனார். பகைவர்பட்டணங்களை ஜயிப்பவனே! மனுவானவர் அந்த மத்ஸ்யத்தை அதில் போட்டார். பிறகு, அந்த மத்ஸ்யம் அங்கேயே மிகப்பல வருஷங்கள் வளர்ந்தது. [2] தாமரை மலர்போன்ற கண்களுள்ளவனே! அந்தத்தடாகமானது இரண்டு யோஜனை நீளமும் ஒரு யோஜனை அகலமுமுள்ளதாக இருந்தது. குந்திநந்தன! பிரஜைகளுக்கு இறைவனே! அந்த மத்ஸ்யமானது அந்தத் தடாகத்தில் அடங்கவில்லை; அசைவதற்கும் முடியவில்லை.

1 'உதகாந்தம்' என்பது மூலம்.

2 'ராஜீவலோசந' என்பது மூலம்; 'ராஜீவலோசந:' என்று கொண்டு மத்ஸ்யத்துக்கு அடைமொழியாக்குவது பழையவுரை.

பிறகு, மத்ஸ்யமானது [1] மனுவைப்பார்த்து, 'பகவானே! ஸாதுவே! புத்திமான்களுள் சிறந்தவரே! நான் இந்தத் தடாகத்திலும் வஸிக்கச் சக்தியற்றவனாக இருக்கிறேன். ஆதலால், ஸமுத்திரராஜனுக்குப் பிரிய மஹிஷியான கங்கையில் என்னைச் சேர்த்துவிடும். நான் அஸூயையில்லாமல் உம்முடைய கட்டளையில் நிற்பேன். தோஷமற்றவரே! உமது செய்கையாலன்றோ ஒப்பற்ற வளர்ச்சியை நான் அடைந்தேன்?' என்று சொல்லிற்று. இவ்வாறு சொல்லக் கேட்டவரும் ஸ்வதந்திரரும் பகவானுமான மனுவானவர் தாமே அந்த மத்ஸ்யத்தைக் கங்காநதிக்குக் கொண்டுபோய் அதில் விட்டார். பகைவர்களை அழிப்பவனே! அந்த மத்ஸ்யமானது அந்தக் கங்கையில் சிலகாலம் வளர்ந்தது. மறுபடியும், மத்ஸ்யமானது மனுவை அடைந்து அவரைப் பார்த்து, 'பிரபுவே! நான் பருத்திருப்பதனால் கங்கையில் அசைவதற்குச் சக்தியற்றவனாக இருக்கிறேன். பகவானே! என்னை விரைவாக ஸமுத்திரத்தில் கொண்டு சேர்த்துவிடும்; கிருபை செய்யும்' என்று வேண்டிக்கொண்டது. பார்த்த! மனுவானவர், பிறகு, தாமே அந்தக் கங்காஜலத்திலிருந்து மத்ஸ்யத்தை எடுத்து ஸமுத்திரத்திற்குக் கொண்டுபோய் அதிலும் அதனை விட்டார். அந்த மத்ஸ்யமானது மிகப் பெரிதாயிருந்தும், அதைத் தூக்கிச் செல்லுகிற மனுவுக்கு அப்பொழுது இஷ்டப்படி கொண்டுபோகத்தக்கதும், தொடுவதற்கு இனியதும் வாஸனையுள்ளதுமாயிருந்தது. அந்த மத்ஸ்யமானது, மனுவினால் ஸமுத்திரத்தில் போடப்பட்டபொழுது, புன்சிரிப்புடன் அவரைப் பார்த்து, இந்த வாக்கியத்தை உரைக்கலாயிற்று.

'பகவானே! உம்மால் விசேஷமாக ரக்ஷணை முழுமையும் செய்யப்பட்டது. ஸமயம் வந்தபொழுது செய்யத்தக்கதை என்னிடமிருந்து நீர் கேளும். மகாபாக்கியசாலியே! பகவானே! பூமியிலுள்ள இந்த ஸ்தாவரம் ஜங்கமம் அனைத்துமே அதிசீக்கிரத்தில் நாசமடையப் போகின்றன. உலகங்களெல்லாம் மஹாஜலத்தில் முழுகிப்போகிற காலம் வந்துவிட்டது. ஆகையால், இப்பொழுது எது உமக்கு ஒப்பற்ற நன்மையோ அதனை உமக்குத் தெரிவிக்கிறேன். ஜங்கமங்களுள்ளும் ஸ்தாவரங்களுள்ளும் அசைவன அசையாதனவாகிய எல்லாவற்றிற்கும் அதிபயங்கரமான காலம் வந்துவிட்டது. நீர் நல்ல கயிறுள்ள உறுதியான ஓர் ஓடக்

1 'பகவானே! ஸாதுவே! என்னை ஸமுத்ரத்துக்குப் பிரியமஹிஷியான கங்கையை அடைவிப்பீராக. அதில் வஸிப்பேன். தந்தையே! அல்லது நீர் எண்ணுகிறபடி செய்வீராக' என்பது வேறு பாடத்தின் பொருள்.

தைச் செய்யக்கடவீர். மஹரிஷியே! அந்த ஓடத்தில் ஸப்த ரிஷிகளுடன்* கூட ஏறுவீராக. என்னால் முன் சொல்லப்பட்ட வித்துக்களெல்லாவற்றையும் வகை வகையாக நன்றாகக்கட்டி ஓடத்தில் ஏற்றுவீராக. முனிஜனங்களுக்குப் பிரியமானவரே! பிறகு, நீர் ஓடத்திலிருந்துகொண்டு என்னை எதிர்பார்க்கக்கடவீர். முனிவரே! நான் கொம்புள்ளவனாக வருவேன். தவமுள்ளவரே! அதனால், என்னை அறியக்கடவீர். இதனை நீர் இவ்விதம் செய்ய வேண்டும். நான் உம்மிடம் விடைபெற்றுச் செல்லுவேன். நான் இல்லாவிடில் அந்தப் பெரிய வெள்ளமானது உம்மால் தாண்ட முடியாது. பிரபுவே! என்னுடைய இந்த வசனத்தையும் நீர் ஸந்தேகிக்கலாகாது' என்று சொல்லிற்று. மனுவானவர், 'இவ்வண்ணமே செய்வேன்' என்று அந்த மத்ஸ்யத்தைப் பார்த்து மறுமொழிகூறினார். (இருவரும்,) ஒருவரை ஒருவர் கேட்டு விடைபெற்றுக்கொண்டு, இஷ்டப்படி சென்றார்கள்.

மஹாராஜனே! பகைவர்களை அடக்குபவனே! வீரனே! பிறகு, மனுவானவர் மத்ஸ்யம் சொல்லியபடி எல்லாவித்துக்களையும் சேகரித்துக்கொண்டு நல்ல ஓடத்தினால் பெரிய அலைகளுடன்கூடின ஸமுத்திரத்தில் அப்பொழுது மிதந்தார். பூமிக்கிறைவனே! அந்த மனுவானவர் அந்த மத்ஸ்யத்தை நினைத்தார். பகைவர் நகரங்களை ஜயிப்பவனே! பரதர்களுள் மிகச் சிறந்தவனே! அந்த மத்ஸ்யமானது, அந்த மனுவினுடைய எண்ணத்தை அறிந்து, கொம்புள்ளதாக அந்த இடத்தில் அப்பொழுது விரைவாக வந்தது. புருஷ ச்ரேஷ்டனே! மனுவானவர் ஜலத்தால் நிறைந்த கடலில் தான் சொல்லியபடியுள்ள உருவத்தால் மலைபோல உயர்ந்திருப்பதும் கொம்புள்ளதுமான [1] அந்த மத்ஸ்யத்தைப் பார்த்து, பிறகு, அந்த மத்ஸ்யத்தின் தலையிலுள்ள கொம்பில் முறுக்கின கயிற்றைப் போட்டார். பகைவர் பட்டணத்தை ஜயிப்பவனே! அந்தக் கயிற்றால் கட்டப்பட்ட மத்ஸ்யமானது ஓடத்தை உப்புநீரில் அதிவேகமாக இழுத்தது. மனிதர்களுக்கிறைவனே! அந்த மனுவானவர் அலைகளால் கூத்தாடுகிறதுபோலிருப்பதும் ஜலத்தினால் கர்ஜிக்கின்றதுபோலிருப்பதுமான ஸமுத்திரத்தை அந்த ஓடத்தால் தாண்ட ஆரம்பித்தார். பகைவர் பட்டணங்களை ஜயிப்பவனே! பெருங்கடலில் பெருங்காற்றுக்களால் அலைக்கப்படுகிற அந்த ஓடமானது, மதங்கொண்டு நிலைதவறியிருக்கிற மாதுபோலச்

---

1 இரட்டித்தலால் ஒரு சொல் விடப்பட்டது.

சுழன்றது. பூமியும் திசைகளும் மூலைத்திசைகளும் பிரகாசிக்கவேயில்லை. நரஸ்ரேஷ்டனே! ஆகாயமும் ஸ்வர்க்கமும் எல்லாம் ஜலமாகவே ஆயின. பரதஸ்ரேஷ்டனே! அப்பொழுது, உலகம் முழுகிப்போன ஸமயத்தில், ஸப்தரிஷிகளும் மனுவும் அப்படியே மத்ஸ்யமும் காணப்பட்டனர். அரசனே! பிறகு, அந்த மத்ஸ்யமானது சோம்பலின்றி அந்த நீர்ப்பெருக்கில் அந்த ஓடத்தை இவ்வண்ணம் மிகப் பலவருஷங்கள் இழுத்தது. பரதஸ்ரேஷ்டனே! குருநந்தன! பிறகு, இமயமலையைச் சார்ந்த உயர்ந்த சிகரத்தினருகில் அந்த மத்ஸ்யம் ஓடத்தை இழுத்துச் சென்றது. பிறகு, அந்த மத்ஸ்யமானது அப்பொழுது அந்த ரிஷிகளைப் பார்த்து மெல்லச் சிரித்துக்கொண்டு, 'இந்த இமயமலையினுடைய சிகரத்தில் ஓடத்தைத் தாமதமில்லாமல் கட்டுங்கள்' என்று சொல்லியது. பரதஸ்ரேஷ்டனே! மத்ஸ்யத்தினுடைய சொல்லைக்கேட்டு, அந்த ரிஷிகள் அந்த ஓடத்தை அப்பொழுது அந்த இமயமலையின் சிகரத்தில் விரைவாகக் கட்டினர். குந்திநந்தன! பரதஸ்ரேஷ்டனே! சிறந்த அந்த இமயமலையின் சிகரமானது இன்றுங்கூட 1 நௌபந்தனமென்று பிரஸித்திபெற்றதாக இருக்கிறது. அதைத் தெரிந்துகொள்.

பிறகு, மத்ஸ்யமானது, அப்பொழுது ஒன்று சேர்ந்திருக்கிற அந்த ரிஷிகளைப்பார்த்து, 'நான் ப்ரஜைகளுக்குப் பதியான பிரம்மா; என்னைவிடச் சிறந்த வஸ்து இல்லை; மத்ஸ்யவடிவம்கொண்டிருக்கிறவனால் நீங்கள் இந்தப் பயத்திலிருந்து விடுவிக்கப்பட்டீர்கள். (இந்த) மனுவினால் தேவர்களோடும் அஸுரர்களோடும் மனுஷ்யர்களோடும் கூடின எல்லா ப்ரஜைகளும் எல்லா உலகங்களும் அசைவன அசையாதன ஆகிய அனைத்தும் படைக்கப்படத்தக்கவைகள். கடுந்தவத்தினால் இவருக்கு நல்ல புத்திசக்தி உண்டாகும். என் அனுக்கிரஹத்தால் பிரஜைகளை ஸ்ருஷ்டிக்கும் விஷயத்தில் மயக்கத்தை அடையமாட்டார்' என்று சொல்லியது. மத்ஸ்யமானது இவ்விதமான சொல்லைச் சொல்லி ஒரு க்ஷணத்தில் மறைந்துபோய்விட்டது. ப்ரஜைகளைத் தாமே படைக்க எண்ணம்கொண்ட வைவஸ்வதமனுவானவர் ப்ரஜைகளைப் படைப்பதில் மிக மயக்கமுள்ளவரானார். பிறகு, பெருந்தவம் புரிந்தார். பரதஸ்ரேஷ்டனே! பெருந்தவத்தோடு கூடின அந்த மனுவானவர், பிறகு, தாமே முறைப்படி எல்லாப் பிரஜைகளையும் படைக்கத்தொடங்கினார். புராதன கதை என்று

1 ஓடங்கட்டினது.

சொல்லப்பட்டதும் எல்லாப் பாவங்களையும் போக்குவதுமான இந்த மாத்ஸ்யோபாக்யானமானது இவ்வண்ணம் என்னால் சொல்லப்பட்டது. இந்த மனுவின் சரித்திரத்தைத் தினந்தோறும் ஆதிதொடங்கிக் கடைசிவரையில் கேட்கும் மனிதன் ஸுகமுள்ளவனாகவும் எல்லா விருப்பங்களும் நிறைவேறினவனாகவும் எல்லா உலகங்களையும் அடைவான்' என்று சொன்னார்.

---

## நூற்றுத்தொண்ணூற்றோராவது அத்யாயம்.

## மார்க்கண்டேயஸமாஸ்யாபர்வம். (தொடர்ச்சி.)

(மார்க்கண்டேயர் நான்கு யுகங்களுடைய தர்மங்களையும் கூறிப் பிரளயத்தை வர்ணித்துப் பிரளயஜலத்தில் மிதக்கின்ற தாம் ஆலிலையில் குழந்தைவடிவத்துடன் படுத்திருந்த ஹரியின்வயிற்றினுள்புகுந்து பிரம்மாண்டங்களைப் பார்த்துத் திரும்பிவந்ததையும் யுதிஷ்டிரர் முதலியவர்களுக்குக் கூறியது.)

பிறகு, வினயத்துடன்கூடியவரும் தர்மங்களால் பிரகாசிப்பவருமான அந்த யுதிஷ்டிரர் தவசியான மார்க்கண்டேயரைப் பார்த்து, மறுபடியும், 'மஹரிஷியே! உம்மால் பல்லாயிரம் யுகங்கள் பார்க்கப்பட்டிருக்கின்றன. மகாத்மாவும் ஸத்யலோகத்திலிருப்பவருமான பிரம்மதேவரைத்தவிர உமக்கொப்பான ஆயுளுள்ளவர் ஒருவரும் இவ்வுலகில் காணப்படவில்லை. பிராம்மணோத்தமரே! தேவர்களும் அஸுரர்களுமில்லாத இந்த அந்தரிக்ஷலோகத்தில் ஆயுளினால் உமக்கு ஒப்பாக ஒருவரும் இல்லை. பிராம்மணரே! நீரே பிரளயத்தில் ப்ரம்மாவை அடைந்து துதிக்கிறீர். பிரம்மரிஷியே! பிரளயம் முடிந்து, பிரம்மதேவரும் விழித்துக்கொண்டவுடன், பிரம்மதேவரால் திசைகளைக் காற்று (நிரம்பினவை) ஆகச் செய்து ஜலங்களை அங்கங்கே உரியஇடங்களில் விலக்கி உள்ளபடி [1] நான்கு விதமான பிராணிகளும் இவ்வுலகில் படைக்கப்படுவதை நீர் ஒருவரே பார்க்கிறீர். பிராம்மணச்ரேஷ்டரே! உம்மால் உலகங்களுக்குக் குருவும் எல்லா உலகங்களுக்கும் பிதாமஹருமான பிரம்மதேவர் அவரையே விஷயமாகக்கொண்ட தியா

1 ஆதிபர்வம் 57-ம் பக்கத்திலும் ஸபாபர்வம் 198-ம் பக்கத்திலும் குறிப்பிற் காண்க.

னத்தால் நேரில் ஆராதிக்கப்பட்டார். பிராம்மணரே! மேலும், பிரம்மதேவர் பலமுறை உலகத்தைப் படைப்பதை நீர் நேரில் பார்த்திருக்கிறீர். நீர் கடுமையான தவத்தில் அமிழ்ந்து (மரீசி முதலிய) பிரம்மாக்களை ஜயித்தீர். நீர் பரலோகத்தில் நாராயணனுடைய ஸமீபத்திலிருக்கிற பிரஸித்திபெற்ற உத்தமபக்தரென்று மிகப்புகழப்படுகிறீர். எங்கும் வியாபித்திருப்பதும் நினைத்த உருவமெடுப்பதுமான பிரம்மத்தை நேரில் பார்க்குமிடமான ஹ்ருதய புண்டரீகத்தை யோககலையினால் திறந்து உலகத்தை உண்டுபண்ணுகிறவரான பகவான் உம்மால் பலமுறை சிறந்த வைராக்யம் அப்யாஸம் என்கிற இரண்டு கண்களால் முற்காலத்தில் பார்க்கப்பட்டார். பிரம்மரிஷியே! பரமாத்மாவினுடைய அந்த அனுக்கிரஹத்தால், முதுமையைச் செய்கிற யமனும் தேகத்தைக்கெடுக்கிற மூப்பும் உம்மை அடைகிறதில்லை. எக்காலத்தில் ஸூர்யன், அக்னி, வாயு, சந்திரன், ஆகாயம், பூமி ஒன்றும் மிச்சமின்றி அழிந்துபோகின்றனவோ, உலகம் ஒரே ஸமுத்திரமாகி ஸ்தாவரங்களும் ஜங்கமங்களும் நாசமடைகின்றனவோ, தேவாஸுரர்களுடைய கூட்டங்களும் மஹோரகர்களும் முற்றிலும் அழிந்துபோகின்றனவோ அக்காலத்தில் தாமரைமலரில் படுத்திருப்பவரும் பெரிய மனமுள்ளவரும் தாமரைமலரை இருப்பிடமாகக்கொண்டவரும் எல்லாப் பிராணிகளுக்கும் அதிபதியுமான பிரம்மதேவரை நீர் ஒருவர் அடைகிறீர். பிராம்மணோத்தமரே! முற்காலத்தில் நடந்த இவையனைத்தும் உம்மால் நேராகக் காணப்பட்டிருக்கின்றன. ஆதலால், நான் பிரமாணத்தோடுகூடிய எல்லாக் கதைகளையும் உம்மிடமிருந்து கேட்க விரும்புகிறேன். பிராம்மணச்ரேஷ்டரே! உம் ஒருவராலேயே பலமுறை புராதன வ்ருத்தாந்தங்கள் நேரில் காணப்பட்டிருக்கின்றனவன்றோ? எல்லா உலகங்களிலும் எப்பொழுதும் மறக்கப்படுவது ஒன்றுமில்லை’ என்று வினவினார்.

மார்க்கண்டேயர், ‘பிறப்பில்லாதவரும் நாசமில்லாதவரும் என்றும் ஒரே ரூபமுள்ளவரும் ஆதியற்றவரும் என்றுமிருப்பவரும் எல்லாருக்கும் புலப்படாத மகிமையுள்ளவரும் மிக்க ஸூக்ஷ்மமாக இருப்பவரும் [1] நிர்க்குணரும் சுத்த ஸத்வகுண ரூபியுமான பரமாத்மாவுக்கு வந்தனம்பண்ணி ஸந்தோஷத்துடன் கதையை

[1] குணங்களில்லாதவர்; பிராகிருத குணங்களெல்லாம் தம்மிடம் பற்றுதலற்றவ ரென்றபடியாம்.

உனக்குச் சொல்லுவேன். அகன்று நீண்ட கண்களுள்ளவரும் பீதாம்பரம் தரித்தவரும் ஜனார்த்தனருமான இந்தக்கிருஷ்ணனே உலகத்தைப் படைப்பவர்; அழிப்பவர்; பிராணிகளிடத்தில் அந்தராத்மாவாக இருப்பவர்; பிராணிகளுக்கு நன்மையையளிப்பவர்; பிரபுவாயிருப்பவர். இந்தப் பகவான் நினைக்கமுடியாததும் பெரிதும் ஆச்சர்யமானதும் பரிசுத்தமானதும் ஆதி அந்தமில்லாததும் உலகங்களை வடிவமாகக்கொண்டதும் குறைவற்றதும் அழிவற்றதுமான வஸ்துவென்று சொல்லப்படுகிறார். இவர் படைக்கிறார்; படைக்கப்படுகிறாரில்லை. மனிதமுயற்சிக்கும் இவரேகாரணம். எவன் இந்தப்புருஷரை அறிவான்? இவரைத் தேவர்களும் அறியார். ராஜஸ்ரேஷ்டனே! புருஷஸ்ரேஷ்டனே! ஆதியில் எல்லா உலகத்திற்கும் நாசம் வந்தபோது இவரால் செய்யப்படுகிற படைப்புமுழுமையும் ஆச்சர்யமே. (தேவவருஷத்தில்) நாலாயிரம் வருஷங்களடங்கின அந்த யுகத்தைக் கிருதயுகமென்று சொல்லுகிறார்கள். அதற்கு [1] ஸந்தியும் ஸந்தியாம்சமும் தனித்தனியே நானூறு நானூறு வருஷ அளவுள்ளனவாகும். பிறகு, இவ்வுலகில் மூவாயிரம் தேவ வருஷங்கள் திரேதாயுகம் என்று சொல்லப்படுகின்றன. அந்த யுகத்திற்கு ஸந்தியும் ஸந்த்யாம்சமும் தனித்தனி முந்நூறு முந்நூறு வருஷங்கள் என்று கூறப்படுகின்றன. அவற்றுக்குப் பிறகு, இரண்டாயிரம் வருஷங்கள் த்வாபரயுகத்தின் அளவென்று சொல்லப்படுகின்றன. அந்த த்வாபரயுகத்திற்கும் ஸந்தியும் ஸந்த்யாம்சமும் அப்படியே தனித்தனி இருநூறு இருநூறு வருஷங்களென்று சொல்லப்படுகின்றன. பிறகு, கலியுகமானது ஆயிர வருஷமென்று கருதப்பட்டது. அதனுடைய ஸந்தியும் ஸந்த்யாம்சமும் தனித்தனி நூறு நூறு வருஷங்களென்று கருதப்பட்டன. ஸந்திக்கும் ஸந்த்யாம்சத்துக்கும் கால அளவானது ஸமமென்று அறிந்துகொள். கலியுகம் சென்றவுடன், க்ருதயுகம் தொடங்குகிறது. இந்த யுகங்களின் கால அளவானது பன்னீராயிரம் வருஷங்களென்று சொல்லப்பட்டது. இப்படி ஆயிரம் சதுர்யுகங்கள் பிரம்மாவுக்கு ஒருபகல் என்று சொல்லப்பட்டன. உலகமனைத்தும் பிரம்மதேவருடைய பகற்காலத்தில் எங்கும் நடைபெற்றுவருகிறது. புருஷஸ்ரேஷ்டனே! பிரம்ம

1 'யுகதர்மங்கள் கலக்குங்காலம். யுகத்தின் தொடக்கம் சந்தியும் முடிவு ஸந்தியாம்சமுமாம். ஆயினும், யுகங்களினிடையில் இங்ஙனம் கூறப்படுங்காலம் முன்யுகத்தை நோக்க ஸந்தியாம்சமும் பின்யுகத்தைநோக்க ஸந்தியுமாம்' என்பது பழையவுரையின் கருத்து.

தேவர் கண்வளர்கிற காலத்தை அறிஞர்கள் உலகங்களுக்குப் பிரளயமென்று அறிகிறார்கள். பரதஸ்ரேஷ்டனே! ஆயிரம்வருஷ அளவுள்ள கலியுகத்தின் முடிவானது சிறிது மிச்சமிருக்கும்பொழுது எல்லா மனிதர்களும் பெரும்பாலும் பொய் சொல்லுவார்கள். பார்த்த! அக்காலத்தில் யாகத்திற்கு [1]ப்ரதிநிதியும் அப்படியே தானத்திற்கு ப்ரதிநிதியும் விரதத்திற்குப் பிரதிநிதியும் ஏற்படுகின்றன. இந்த யுகமுடிவில், பிராம்மணர்கள் சூத்திரர்தொழிலைச் செய்வார்கள். அப்படியே, சூத்ரர்கள் க்ஷத்திரியர் தொழிலால் பொருளைத் தேடுவார்கள். கலியுகத்தில், பிராம்மணர்கள் யாகத்தையும் வேதாத்யயனத்தையும் இழந்தவர்களும் தண்டத்தையும் மான்தோலையும் இழந்தவர்களும் எல்லாவற்றையும் தின்பவர்களும் ஆவார்கள். ஐயனே! பிராம்மணர்கள் மந்திர ஜபத்தை இழந்துவிடுவார்கள். சூத்திரர்கள் மந்திர ஜபத்தைப் பிரதானமாகக் கைக்கொள்ளுவார்கள். உலகமானது விபரீதப்படுகிற காலத்தை, அழிவுக்கு முந்தின அடையாளமென்று அறியவேண்டும். அரசனே! பூமியில் மிலேச்ச அரசர்கள்பலர் கொடுமையாக ஆள்கிறவர்களும் பாவிகளும் பொய் சொல்வதிலேயே பற்றுள்ளவர்களுமாக இருப்பார்கள். மனிதருட்சிறந்தவனே! சூரர்களான ஆந்த்ரர்களும் சகர்களும் புளிந்தர்களும் யவனர்களும் காம்போஜர்களும் பாஹ்லிகர்களும் அவ்வாறே ஆபீரர்களும் அரசர்களாக இருப்பார்கள். அப்பொழுது, ஒருபிராம்மணனாவது தன்தொழிலைக்கொண்டு ஜீவனம் செய்யமாட்டான். அரசனே! க்ஷத்திரியர்களும் வைசியர்களும் தமக்குரியனவல்லாத தொழில்களில் நிலைபெற்றவர்களும் அல்பாயுளுள்ளவர்களும் அல்ப பலமுள்ளவர்களும் அல்பமான வீர்யமும் பராக்கிரமமுமுள்ளவர்களும் அல்ப வல்லமையுள்ளவர்களும் சிறிய தேகமுள்ளவர்களும் அவ்வாறே உண்மைபேசாதவர்களும் ஆவார்கள். தேசங்கள் பெரும்பாலும் சூன்யமாகும். திசைகள் மிருகங்களாலும் பாம்புகளைப் புஜிக்கின்ற பிராணிகளாலும் சூழப்பட்டவைகளாகும். யுகத்தின் முடிவானது நெருங்கும்பொழுது, பிரம்மவாதிகள் (அனுபவமில்லாமையால்) வீண்பொழுதை வாதிப்பார்கள். அப்படியே, சூத்திரர்கள் உயர்ந்த வர்ணத்தார்களை, 'அடே!' என்று அழைப்பார்கள். பிராம்மணர்கள் கீழ்வர்ணத்தார்களை, 'ஆர்ய!' என்று அழைப்பார்கள். புருஷஸ்ரேஷ்டனே! யுகம் முடியும் தருணத்தில்

[1] பிரதிநிதிகள் ஏற்படுகின்றனவே.

அனேக ஜந்துக்கள் உண்டாகும். அரசனே! அப்படியே எல்லா மணங்களும் துர்கந்தக்கவையாகா. புருஷஸ்ரேஷ்டனே! அப்படியே ரஸங்களும் ருசியோடு சேர்ந்தவைகளாகா. அரசனே! யுகமுடிவு வரும்போது, ஸ்திரீகள் பலகுழந்தைகளை உடையவர்களும் குறுகின தேகமுள்ளவர்களும் நல்ல ஸ்வபாவத்தாலும் ஆசாரத்தாலும் விடுபட்டவர்களும் முகத்தினாலேயே ஸம்போகசுகத்தை உண்டுபண்ணுகிறவர்களும் ஆவார்கள். வேந்தே! தேசங்கள் அன்னவிக்கிரயம் செய்பவைகளும் பிராம்மணர்கள் வேதத்தை விற்கிறவர்களும் ஸ்திரீகள் [1] அங்கத்தை விற்பவர்களும் ஆவார்கள். அரசனே! அப்படியே, பசுக்கள் சிறிதுபாலுள்ளவைகளாகும். மரங்கள் மலர்களும் கனிகளும் குறைந்தவையும் காக்கைகள் நிறைந்தவையும் ஆகும். அரசனே! பிராம்மணர்கள் பிரம்மஹத்திதோஷமுள்ளவர்களும், அப்படியே பொய் சொல்பவர்களுமான அரசர்களிடத்தினின்று ப்ரதிக்ரஹத்தைச் செய்வார்கள். அரசனே! பேராசையும் அறியாமையும் மேலிட்டவர்களும் கபடமான தர்மங்களைப் பிரஸித்திக்காகச் செய்பவர்களுமான ஆங்காங்கு வஸிக்கின்ற ஜனங்கள், பிக்ஷைக்காகத்திரிகின்ற பிராம்மணர்களால் அடிக்கடி துன்புறுத்தப்படுவார்கள். க்ருஹஸ்தர்கள் அதிக வரியினாலுண்டான பயத்தால் நடுக்கமுற்றவர்களும் எல்லாவிடங்களிலும் திருடுகிறவர்களும் கபடமான முனிவேஷத்தால் மறைந்தவர்களுமாகி வாணிபம் செய்து ஜீவிப்பார்கள். அப்பொழுது, பிராம்மணர்கள் வீணாக நகங்களையும் உரோமங்களையும் தரித்திருப்பார்கள். புருஷஸ்ரேஷ்டனே! பிரம்மசாரிகள் பொருளிலுள்ள பேராசையினால் அந்த ஆஸ்ரமங்களில் வீணாக வஸிப்பவர்களும் வீணான ஆசாரமுள்ளவர்களும் கள்குடிப்பவர்களும் குருவின் படுக்கையை அடைபவர்களுமாயிருப்பார்கள். ஜனங்கள், மாம்ஸத்தையும் இரத்தத்தையும் விருத்திபண்ணுகின்றவையும் இவ்வுலகில் மாத்திரம் பயன்படத்தக்கவையுமான அன்னபானங்களை விரும்புவார்கள். ஜனங்கள் பரலோக ஸாதகமான காரியங்களில் ஊக்கமில்லாதவர்களும் மிக்க நாஸ்திகர்களும் பெரும்பான்மையாகப் [2] பாஷண்டர்களுடன் கலந்தவர்களும் பரான்னங்களின் குணங்களைப் பேசுகிறவர்களும் ஆவார்கள். புருஷஸ்ரேஷ்டனே! யுகமுடிவில் (நான்கு) ஆஸ்ரமங்களும் இரா. அப்படியே பகவானை இந்திரன் ருதுக்கள் தவறாமல்

---

1 'கோசுகா:' என்பது மூலம்.

2 வேதத்துக்கு விலக்கான ஒழுக்கமுள்ளவர்கள்.

மழை பொழியமாட்டான். பாரத! எல்லா வித்துக்களும் நன்கு முளையா. ராஜஸ்ரேஷ்டனே! எல்லா இடத்திலும் தர்மத்தினுடைய பலன் குறைவடைகிறது. அப்படியே, ஜனங்கள் ஹிம்ஸையில் விருப்பமுள்ளவர்களும் அசுத்தர்களும் ஆகிறார்கள். தோஷமற்றவனே! அப்பொழுது, அதர்மபலனானது துக்கமானது அதிகமாகிறது. பூமியை ரக்ஷிப்பவனே! அப்பொழுது எந்த மனிதன் தர்மத்தைச் செய்கிறானோ அவன் குறைந்த ஆயுளுள்ளவனென்று எண்ணத்தக்கவன். அக்காலத்தில் தர்மம் சிறிதும் இராதன்றோ? ஜனங்கள் விற்கவேண்டியவற்றைப் பெரும்பாலும் கபடமான அளவுகளால் விற்கிறார்கள். நரஸ்ரேஷ்டனே! வியாபாரிகள் நிச்சயமாக மிக்க கபடிகளாகிறார்கள். தார்மிகர்கள் குறைவடைகிறார்கள். கொடிய பாவம்செய்கிற ஜனங்கள் விருத்தியடைகிறார்கள். தர்மத்திற்குப் பலக்குறைவு உண்டாகும். அதர்மம் பலமுள்ளதாகிறது. யுகமுடிவுக்காலத்தில், தர்மத்தை அனுஷ்டிக்கின்ற மனிதர்கள் அல்பாயுளுள்ளவர்களும் தரித்திரர்களும், தர்மத்தை விட்டவர்கள் தீர்க்காயுளுள்ளவர்களும் செல்வமுள்ளவர்களும் ஆகிறார்கள். யுகக்ஷயகாலத்தில், பிரஜைகள் தர்மத்தை விட்டு நகரங்களைச்சார்ந்த பொதுவிடங்களில் தர்மவிரோதமான உபாயங்களால் வழக்குப்பேசுகிறார்கள். அப்படியே, சிறிதுபொருள் சேர்ந்ததனால், 'நாம் தனிகர்களாக இருக்கிறோம்' என்கிற மதமுள்ளவர்களாகிறார்கள். அரசனே! மனிதர்கள், நம்பிக்கையினால் அடைக்கலமாக வைக்கப்பட்ட பொருளைப் பெரும்பாலும் ரஹஸ்யத்தில் அபஹரிக்க முயற்சியுள்ளவர்களும் கெட்ட நடையுள்ளவர்களும் வெட்கமில்லாதவர்களும், 'இது என்னிடமில்லை' என்று சொல்லுகிறவர்களுமாக இருப்பார்கள். மனிதர்களைத் தின்னுகின்ற (நாய் புலி முதலிய) ஜந்துக்களும் பறவைகளும் அவ்வாறே மற்ற மிருகங்களும் நகரங்களுடைய பொதுவிடங்களிலும் மேடை கட்டின மரத்தினடிகளிலும் படுக்கின்றன. வேந்தே! எழுட்டுப் பிராயமுள்ள ஸ்திரீகள் கர்ப்பம் தரிப்பார்கள். பத்து அல்லது பன்னிரண்டு பிராயமுள்ள புருஷர்களுக்குப் புத்திரனுண்டாவான். அப்படியே, பதினாறாவது பிராயத்தில் மனிதர்கள் நரைத்தமயிருடையவர்களாவார்கள். மனிதர்களுக்கு ஆயுள்முடிவானது சீக்கிரமாகவே உண்டாகிறது. மஹாராஜனே! யௌவனமுள்ளவர்கள் முதிர்ந்தவனுடைய தன்மையுடையவர்களும் ஆயுள்குறைந்தவர்களும் ஆகிறார்கள். யௌவனமுள்ளவ

களுக்குரிய தன்மை முதிர்ந்தவர்களிடம் உண்டாகிறது. அப்பொழுது ஸ்திரீகள் இயற்கைமாறுப்பட்டவர்களும் கெட்ட நடையுள்ளவர்களுமாகி, யோக்யர்களான கணவர்களை வஞ்சித்து, வேலைக்காரர்களோடும் மிருகங்களோடும் வியபிசரிப்பார்கள். அரசனே! அப்படியே, வீரபத்னிகளான ஸ்திரீகள் ஸாமான்ய மனிதர்களை அடைகிறார்கள். கணவன் ஜீவித்திருக்கும்பொழுதே, பிறரை அடைந்து வியபிசரிக்கிறார்கள். மஹாராஜனே! அந்த ஆயிரம் (சதுர்) யுகமுடிவு வந்து ஆயுளுக்கும் அழிவு வரும்பொழுது, பல வருஷங்கள் மழையின்மை உண்டாகிறது. பூமிக்கதிபதியே! பிறகு, பூமியில் பிராணிகளெல்லாம் அல்ப வலிமையுள்ளவைகளாகவும் பசியுள்ளவைகளாகவும் பெரும்பான்மையாக நாசமடைகின்றன. அரசனே! பிறகு, ஜ்வலிக்கின்ற 1 ஏழுசூரியர்களால் ஸமுத்திரங்களிலும் நதிகளிலுமுள்ள ஜலமனைத்தும் உறிஞ்சப்படுகிறது. பாரத! பரதஸ்ரேஷ்டனே! உலர்ந்தவையும் ஈரமாயிருப்பவையுமான கட்டையும் புல்லும் அனைத்தும் சாம்பலானவையாகக் காணப்படுகின்றன. பாரத! பிறகு, ஸம்வர்த்தகம் என்ற அக்னியானது காற்றோடுகூட முந்திச் சூரியர்களால் வறட்டப்பட்டிருக்கிற உலகத்தில் பிரவேசிக்கிறது. பிறகு, அந்த நெருப்பானது பூமியைப்பிளந்து பாதாளத்தில் பிரவேசித்துத் தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் யக்ஷர்களுக்கும் அதிகபயத்தை உண்டுபண்ணுகிறது. பூமியைக்காப்பவனே! நாகலோகத்தையும் இந்தப் பூமியிலுள்ள பொருள்களனைத்தையும் நன்கு எரிக்கின்ற அந்த அக்னியானது பாதாளலோகத்திலுள்ள எல்லாப்பொருள்களையும் ஒரு க்ஷணநேரத்தில் நாசம் செய்கிறது. பிறகு, அமங்களகரமான காற்றுடன்கூடின ஸம்வர்த்தகாக்னியானது இருபது லக்ஷயோஜனை தூரம் (உலகத்தை) எரிக்கிறது. பிறகு, எங்கும் பரவினதும் ஜ்வலிக்கின்றதுமான அந்த அக்னியானது தேவர்களோடும் அஸுரர்களோடும் கந்தர்வர்களோடும் யக்ஷர்களோடும் உரகர்களோடும் ராக்ஷஸர்களோடும் கூடின உலகமனைத்தையுமே எரிக்கிறது. பிறகு, யானைக்கூட்டங்கள்போலப் பிரகாசிக்கின்றவையும் மின்னல்களின் வரிசையினால் அலங்கரிக்கப்பட்ட

1 'பன்னிரண்டு சூரியர்களாலும் ஸமுத்திரங்களிலும் நதிகளிலுமுள்ள ஜலமனைத்தும் குடிக்கப்படுகிறது; ஊழித்தீயினால் உலர்ந்தவையும் ஈரமாயிருப்பவையுமான கட்டையும் புல்லும் அனைத்தும் சாம்பலாக்கப்பட்டவையாகக் காணப்படுகின்றன' என்பது பழைய உரை.

வையும் அத்புதமான காட்சியுள்ளவையுமான பெரிய மேகங்கள் ஆகாயத்தில் எழுகின்றன. சில மேகங்கள் கருநெய்தல் புஷ்பங்கள்போலக் கருமைநிறமுள்ளவைகள். சில அல்லிப்பூப்போல வெண்மைநிறமுள்ளவைகள். சில தாமரைமலரின் உள்ளிதழ் போன்ற நிறமுள்ளவைகள். சில பொன்னிறமுள்ளவைகள். சில மஞ்சள்போன்றவைகள். சில காரண்டவமென்னும் பறவைக்கு ஒப்பானவைகள். சில தாமரைமலரின் இதழ் போன்ற காந்தியுள்ளவைகள். சில ஜாதிலிங்கத்துக்கொப்பான ஒளியுள்ளவைகள். சில சிறந்தபட்டணம்போன்ற உருவமுள்ளவைகள். சில யானைக்கூட்டம்போன்றவை. சில மைபோன்றவைகள். சில முதலைகளுக்கு ஒப்பானவை. மஹாராஜனே! இவ்வண்ணம் மேகங்கள் பயங்கரமான உருவமுள்ளவைகளும் கோரமான சத்தத்தினால் எதிரொலி உண்டுபண்ணுகிறவைகளும் மின்னற்கொடிகளின் வரிசைகளால் கட்டப்பட்ட மேனியுள்ளவைகளுமாக நன்கு மேலே எழும்புகின்றன. பூமியை ரக்ஷிப்பவனே! பிறகு, மலைகளுக்கொப்பான மேகங்கள் இடிமுழக்கத்துடன் கூடியவைகளாக ஆகாயமனைத்தையும் வியாபிக்கின்றன. மஹாராஜனே! அந்த மேகங்களால் மலைகளுக்கும் வனங்களுக்கும் இருப்பிடமான இந்தப் பூமியனைத்தும் நீர்ப்பெருக்கினால் நனைக்கப்பட்டு எங்கும் ஜலத்தால் நிறைக்கப்படுகிறது. புருஷச்ரேஷ்டனே! பிறகு, கோரரூபமுள்ளவையும் இடிமுழக்கத்துடன் கூடியவையுமான அந்த மேகங்கள் பிரம்மதேவரால் ஏவப்பட்டு மலைகளை விரைவாக நனைக்கின்றன. அதிக ஜலத்தைப் பொழிகின்றவைகளும் பூமியை நிரப்புகின்றவைகளுமான மேகங்கள் மிக்க கோரமானதும் அமங்களகரமானதும் பயங்கரமாயுள்ளதுமான நெருப்பை நாசம் செய்கின்றன. பிறகு, அந்த மேகங்கள் அந்த யுகமுடிவுக்காலத்தில் மஹாத்மாவான ப்ரம்மதேவரால் ஏவப்பட்டுப் பன்னிரண்டு வருஷகாலம் இடைவிடாமல் மழைத்தாரைகளால் உலகத்தை நிறைக்கின்றன. பாரத! பிறகு, கடலானது தன் கரையைத் தாண்டுகிறது; மலைகளும் பிளக்கப்படுகின்றன; பூமியும் பிளக்கப்படுகிறது. ஆகாசத்தைச் சூழ்ந்து எல்லாப் பக்கத்திலும் விரைவாகச் சுற்றிக்கொண்டிருக்கிற மேகங்கள் வாயுவேகத்தினால் அடிக்கப்பட்டு நாசமடைகின்றன. மனிதர்களுக்கதிபதியே! பாரத! பிறகு, முதலில் தோன்றியவரும் தாமரைமலரை இருப்பிடமாகக்

கொண்டவருமான பிரம்மதேவர், அந்தக் கோரமான காற்றைப் பானம் செய்துவிட்டு நித்திரை செய்கிறார். அரசனே! அந்த உலகமானது கோரமான ஒரே ஸமுத்திரமாக இருக்கும் தருணத்தில் ஸ்தாவரங்களும் ஜங்கமங்களும் அழிந்து தேவாஸுர கணங்களும் நாசமடைந்து யக்ஷர்களும் ராக்ஷஸர்களும் மனிதர்களும் துஷ்ட மிருகங்களும் செடி கொடி மரங்களும் அற்று ஆகாயமும் இல்லாமல் போனபோது, இந்த உலகத்தில் நான் ஒருவன் கவலையுற்றவனாகச் சுற்றுகிறேன். அரசர்களுள் சிறந்தவனே! கோரமான ஒரே ஸமுத்ரமான ஜலத்தில் ஸஞ்சரிக்கின்ற நான் எல்லாப் பிராணிகளையும் பாராதவனாக மிகுந்த மனவருத்தத்தை அடைந்தேன். பூமிக்கதிபதியே! பிறகு, மிதந்து கொண்டிருக்கிற நான் சோம்பலின்றி நெடுந்தூரம் சென்று களைத்து ஓரிடத்திலும் ரக்ஷகனை அடையவில்லை. அரசனே! பிறகு, ஒரு ஸமயத்தில் அந்த ஸமுத்திரத்தில் மிகப் பெரிதாயிருக்கிற விசாலமான ஓர் ஆலமரத்தைக் கண்டேன். மனிதர்களுக்கதிபதியே! பூமியைப் பாதுகாப்பவனே! மஹாராஜனே! பாரத! விசாலமாயிருக்கிற அந்த மரத்தினுடைய கிளையில் திவ்யமான விரிப்பினால் மூடப்பட்டிருக்கிற கட்டிலில் வீற்றிருப்பவனும் தாமரைமலருக்கும் சந்திரனுக்கும் ஒப்பான முகமுள்ளவனும் மலர்ந்திருக்கின்ற செந்தாமரைமலர்போல விசாலமான கண்களுள்ளவனுமான ஒரு சிறு குழந்தையைக் கண்டேன். பூமியை ரக்ஷிப்பவனே! பிறகு, உலகம் நாசமடைந்திருக்கும் தருணத்தில் இக்குழந்தை எவ்வாறு படுத்துறங்குகிறதென்று எனக்குப் பெரிய ஆச்சர்யமுண்டாகியது. அரசனே! சென்றதையும் நிகழ்கின்றதையும் வருவதையும் நான் அறிகிறவனாக இருந்தும், தவத்தினாலே ஆலோசித்துத் தெரிந்துகொள்ளுகிறவனாக இருந்தும், அந்தக் குழந்தையை அறியவில்லை. காயாம்பூவினுடைய நிறம்போன்ற காந்தியையுடையதும் ஸ்ரீவத்ஸமென்கிற மறுவினால் அலங்கரிக்கப்பட்டதுமான அந்தக் குழந்தையானது அப்பொழுது ஸாக்ஷாத் லக்ஷ்மிக்கு இருப்பிடம்போல எனக்குத் தோன்றியது. பிறகு, தாமரை மலர்போன்ற கண்களுள்ளவனும் ஸ்ரீவத்ஸத்தைத் தரித்திருப்பவனும் காந்தியுள்ளவனுமான அந்தப்பாலன், என்னைப்பார்த்து, 'அப்பனே! உன்னைக் களைத்திருப்பவனென்றும், களைப்பாறுதலை விரும்புகிறவனென்றும் நான் அறிகிறேன். மார்க்கண்டேய! பிருகுகுலத்தில் பிறந்தவனே! முனிவர்களுள் சிறந்தவனே!

நீ விரும்புகிற அதிகமான தேகபலத்தை அடைகிறவரையில் என் சரீரத்தில் உட்புகுந்து இரு. இந்தச் சரீரத்தில் உனக்கு வாஸம் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. என்னால் உனக்கு அநுக்கிரஹம் செய்யப்பட்டது' என்று செவிகளுக்கு இன்பத்தை உண்டு பண்ணுகிற வசனத்தை உரைத்தான்.

பாரத! பிறகு, அந்தச் சிறுவனால் இவ்விதம் சொல்லப்பட்ட எனக்கு, அப்பொழுது, நீண்ட வாழ்நாளிலும் மானிடத்தன்மையிலும் வெறுப்புண்டாயிற்று. பிறகு, அந்தப்பாலனால் வாயானது விரைவாகத் திறக்கப்பட்டது. நான் என்வசமற்று அவனுடைய வாயில் தெய்வச்செயலால் நுழையும்படி செய்யப்பட்டேன். மனிதர்களுக்குக்கதிபதியே! பிறகு, அவனுடையவயிற்றில் நான் விரைவாகப் பிரவேசித்து நாடுகளும் நகரங்களும் நிரம்பின பூமி முழுமையையும்பார்த்தேன். பாரத! மஹாராஜனே! புருஷச்ரேஷ்ட! நான் அந்த மகாத்மாவின்வயிற்றில் அங்குமிங்கும் திரிகையில், கங்கை, சதத்ரு, ஸீதை, யமுனை, கௌசிகி, சர்மண்வதி, வேத்ரவதி, சந்திரபாகை, ஸரஸ்வதி, ஸிந்து, விபாசை, கோதாவரி நதி, வஸ்வோகஸாரை, நளினி, நர்மதை, தாம்ராநதி, பரிசுத்தஜலத்துடன்கூடியதும் மங்களத்தை உண்டுபண்ணுகிறதுமான வேணை, ஸுவேணை, கிருஷ்ணவேணை, மஹாநதியான இராமை, விதஸ்தை, மஹாநதியான காவேரி, துங்கபத்ரை, கிருஷ்ணவேணி, மஹாநதியான காலை, சோணம், விசல்யை, கிம்புனை ஆகிய இந்தநதிகளையும் இன்னும் பூமியிலுள்ள மற்றநதிகளையும் கண்டேன். பகைவரைக்கொல்பவனே! பிறகு, ஜலஜந்துக்களுடைய கூட்டங்களால் அடையப்பட்டதும் ரத்தினங்களுக்குப் பிறப்பிடமும் ஜலத்திற்குச் சிறந்த இருப்பிடமுமான ஸமுத்திரத்தையும் பார்த்தேன். பிறகு, சந்திரஸூர்யர்களால் அதிகமாகப்பிரகாசிக்கிறதும் மற்ற (க்ரகமுதலிய) ஜ்யோதிகளால் பிரகாசிக்குமதும் அக்னிக்கும் ஸூர்யனுக்கும் ஸமமான ஜ்யோதியுள்ளதுமான ஆகாசத்தையும் கண்டேன். அரசனே! அரண்யங்களால் விளங்குவதும் மலைகளும் காடுகளும் தீவுகளுமுள்ளதும் பலநதிகள் நிரம்பினதுமான பூமியையும் பார்த்தேன். அரசனே! பிராமணர்கள் அந்தப்பூமியில் பல யாகங்களால் தேவதைகளைப் பூஜித்துக்கொண்டிருக்கிறார்கள். க்ஷத்திரியர்களும் எல்லாவர்ணத்தார்களையும் மகிழ்விக்கின்ற செய்கைகளால் ரக்ஷிக்கின்றார்கள். அரசனே! வைசியர்கள் முறைப்படி பயிர்த்தொழிலைச் செய்கிறார்கள். அப்படியே, சூத்திரர்கள் மற்ற

மூன்றுவர்ணத்தார்களுக்கும் பணிவிடைசெய்வதில் பற்றுதலுள்ளவர்களாக இருக்கிறார்கள். வேந்தே! பிறகு, அந்த மஹாத்மாவினுடைய வயிற்றில் எல்லாப்பக்கங்களிலும் ஸஞ்சரிக்கிற நான் இமயமலையையும் ஹேமகூடபர்வதத்தையும் பார்த்தேன். நிஷதத்தையும் வெள்ளியோடுகூடின ஸ்வேதகிரியையும் பார்த்தேன். பூமியைக்காப்பவனே! கந்தமாதன மலையையும் கண்டேன். புருஷஸ்ரேஷ்டனே! மகாராஜ! மந்தரத்தையும் நீலமென்கிற பெரிய மலையையும் மேருவென்கிற ஸ்வர்ணமலையையும் கண்டேன். மஹேந்திரகிரியையும், உத்தமமான விந்தியமலையையும் கண்டேன். மலயபர்வதத்தையும் பாரியாத்ரமலையையும் கண்டேன். இவைகளும் இன்னும் ரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்ட மற்றப் பல மலைகளுமாகிய அனைத்தும் என்னால் அந்தப்பாலனுடைய வயிற்றில் காணப்பட்டன. மனிதர்களுக்கதிபதியே! சிங்கங்களையும் புலிகளையும் பன்றிகளையும் பார்த்தேன். பூமியைப் பாதுகாப்பவனே! பூமியில் மற்றுமுள்ள பிராணிகளெல்லாவற்றையும் நான் அவ்விடத்தில் பார்த்துக்கொண்டு அப்பொழுது எல்லாப்பக்கத்திலும் ஸஞ்சரித்தேன். நரஸ்ரேஷ்டனே! பூபதியே! மானிடர்க்கிறைவனே! அவனுடைய வயிற்றில் நுழைந்தவனும் திசைகளில் ஸஞ்சரிப்பவனுமான நான் இந்திரன் முதலிய எல்லாத் தேவகணங்களையும் ஸாத்தியர்களையும் ருத்திரர்களையும் ஆதித்யர்களையும் குஹ்யகர்களையும் பித்ருக்களையும் ஸர்ப்பங்களையும் [1]நாகர்களையும் ஸுபர்ணர்களையும் வஸுக்களையும் அஸ்வினீதேவர்களையும் கந்தர்வர்களையும் அப்ஸரஸுகளையும் யக்ஷர்களையும் ரிஷிகளையும் தைத்யதானவர்களுடைய கூட்டங்களையும் நாகர்களையும் ஸிம்ஹிகையினுடைய புதல்வர்களையும் இன்னும் மற்றுள்ள தேவசத்துருக்களையும் பார்த்தேன். அரசனே! உலகத்தில் என்னால் ஸ்தாவரமோ ஜங்கமமோ எதெதெல்லாம் பார்க்கப்பட்டிருக்கிறதோ அவ்வனைத்தையும் நான் மஹாத்மாவான அந்தப் பாலனுடைய வயிற்றில் பார்த்தேன். பெரியோய்! தினந்தோறும் பழங்களை ஆஹாரமாகக்கொண்டவனுமான நான் அந்தப் பாலனுடைய சரீரத்தினுள் பல நூற்றாண்டுகள் ஸஞ்சரித்துக்கொண்டு உலகமனைத்தையும் கண்டேன். நான் ஒருபொழுதும் அந்தப் பாலனது தேகத்தினுடைய எல்லையைக் காணவில்லை. பிரஜைகளுக்கு நாயகனே! பூமியைப்பாதுகாப்பவனே! அரசனே! அந்தர்

1 இது இரண்டுமுறை வருகிறது.

சரீரத்தில் எப்பொழுதும் ஓடுகின்றவனும் சிந்திக்கின்றவனும் மிகப் பல வருஷங்கள் சுற்றுகின்றவனுமாயிருந்தும் மஹாத்மாவான அந்தப் பாலனுடைய தேகத்தின் எல்லையை நான் அடையாமற் போனபொழுது, ஶ்ரேஷ்டரும் வரங்களைக் கொடுப்பவருமான அந்தத் தேவரையே மனத்தினாலும் செய்கையினாலும் விதிப்படி சரணமடைந்தேன். அரசனே! புருஷோத்தமனே! பிறகு, நான் திறக்கப்பட்டிருக்கிற அந்த மஹாத்மாவினுடைய வாயினின்று வாயுவேகத்தால் விரைவாக வெளிப்படுத்தப்பட்டேன். பிரஜைகளுக்கு ரக்ஷகனே! புருஷஶ்ரேஷ்டனே! பிறகு, அதே ஆலமரத்தின்கிளையில் எல்லா உலகத்தையும் வயிற்றிலடக்கிக்கொண்டு அந்தப் பாலவேஷத்தோடேயே இருப்பவரும் ஸ்ரீவத்ஸமென்கிற மறுவினால் அடையாளமிடப்பட்டவரும் அளவிறந்த தேஜஸுள்ளவருமான அவரைக் கண்டேன். பிறகு, ஸ்ரீவத்ஸமென்கிற மச்சத்தைத் தரித்திருப்பவரும் காந்தியுள்ளவரும் பீதாம்பரத்தைத் தரித்தவரும் மிக்க தேஜஸுள்ளவருமான அந்தச் சிறுவர் ப்ரீதியுள்ளவராக நகைத்துக்கொண்டு என்னைப் பார்த்து, 'முனிஶ்ரேஷ்டனே! இப்பொழுது இந்த என் சரீரத்தில் வஸித்து நீ களைத்துவிட்டாயா? மார்க்கண்டேயா! நீ எனக்குச் சொல்' என்று சொன்னார்.

பிறகு, அந்த க்ஷணத்தில் புதிய கண்ணானது எனக்கு மறுபடியும் உண்டாயிற்று. என்னை மாயையினின்று விடுபட்டவனும் தத்வஞானத்தை அடைந்தவனுமாகக் கண்டேன், ஐயனே! உள்ளங்கால்கள் சிவந்தவையும் நன்கு அமைந்தவையும் மிக அழகியவையும் மிருதுவான சிவந்த விரல்களால் விளங்குகின்றவையுமான அவருடைய இருசரணங்களும் என்னால் முயற்சியுடன் பிடிக்கப்பட்டு முடியினால் நமஸ்கரிக்கப்பட்டன. அளவுகடந்த சௌர்யமுள்ள அவருடைய அபரிமிதமான மகிமையைக்கண்டு வினயத்துடன் கைகளைக் குவித்து முயற்சியுடன் ஸமீபத்தில் நெருங்கி, எல்லாப் பிராணிகளுக்கும் அந்தர்யாமியாக இருப்பவரும் தாமரைமலர்போன்ற கண்களுள்ளவருமான அந்தத் தேவரை நான் கண்டேன். நான், அவரைக் கைகூப்பினவனாகி நமஸ்கரித்து அவரைப் பார்த்து, 'தேவரே! உம்மையும் உம்முடைய உத்தமமான இந்த மாயையையும் அறியவிரும்புகிறேன். பகவானே! நான் உம்முடைய சரீரத்தில் உமது வாயினால் புகுந்தேன்; உம்முடைய வயிற்றில் எல்லா உலகங்களையும் கண்டேன். தேவரே! தேவர்களும் அஸுரர்களும் ராக்ஷஸர்களும் யக்ஷர்களும் கந்தர்வர்களும்

என்னிடத்தினின்று உண்டாகின்றன; என்னிடத்திலேயே பிரவேசிக்கின்றன. நல்ல முயற்சியுள்ளவர்களும் சாந்தியைப் பிரதானமாகக் கொண்டவர்களும் மனத்தை அடக்கினவர்களும் மோக்ஷத்தில் விருப்பமுள்ளவர்களும் காமம், க்ரோதம், த்வேஷம் இவைகளால் விடுபட்டவர்களும் ப்ரஸித்தியில் ப்ரியமில்லாதவர்களும் பாவமில்லாதவர்களும் ஸத்வகுணத்தில் நிலைபெற்றிருக்கிறவர்களும் அஹங்காரமில்லாதவர்களும் எப்பொழுதும் அத்யாத்ம சாஸ்திரத்தை அறிந்தவர்களுமான பிராம்மணர்கள் இடைவிடாமல் என்னையே சிந்தித்துக்கொண்டு வழிபடுகிறார்கள். நான் பிரளயகாலத்து நெருப்பு. நான் பிரளயத்தை உண்டுபண்ணுகிற யமன். நான் பிரளயத்தைச் செய்கிற சூரியன். நான் பிரளயகாலக்காற்று. பிராம்மணோத்தமனே! ஆகாயத்தில் நக்ஷத்திர வடிவமாகக் காணப்படுகிற தேஜஸ்ஸுகளை நீ என்னுடைய ரூபங்களாக அறியக்கடவாய். ரத்தினங்களுக்குப் பிறப்பிடமான எல்லா ஸமுத்திரங்களையும் நான்கு திசைகளையும் எனக்கு ஆடையாகவும் படுக்கையாகவும் இருப்பிடமாகவும் அறிவாயாக. அவைகள் தேவர்களுடைய கார்யங்களின்பயன் ஸித்திப்பதன்பொருட்டு என்னாலேயே நன்றாகப் பகுக்கப்பட்டிருக்கின்றன. மிகச்சிறந்தவனே! காமம், கோபம், ஸந்தோஷம், பயம் அப்படியே மோஹம் இவைகளனைத்தையும் என்னுடைய ரோமங்களென்று அறிவாயாக. பிராம்மண! எந்தக்கர்மத்தைச்செய்து மனிதர்கள் மங்களத்தை அடைகிறார்களோ ஸத்தியம் தானம் கடுந்தவம் பிராணிகளை ஹிம்ஸை செய்யாமை ஆகிய இவைகள் என்னுடைய கட்டளையினால் ஏற்படுத்தப்பட்டவை. என்னுடைய தேகத்தினுள் ஸஞ்சரிப்பவர்கள் என்னால் அறிவு வசப்படுத்தப்பட்டவர்களாகி இஷ்டப்படி ஸஞ்சரிக்கிறதில்லை. நன்றாக வேதத்தை அத்தியயனம் செய்கிறவர்களும் சாந்தமான மனத்தையுடையவர்களும் குரோதத்தை அடக்கினவர்களுமான பிராம்மணர்கள் பலவித யாகங்களால் என்னை ஆராதிக்கிறார்கள்; அடையவும் அடைகிறார்கள். கற்றறிந்தவனே! பாவச்செயல்களுள்ளவர்களும் பேராசையினால் கவரப்பட்டவர்களும் இழிகுணமுள்ளவர்களும் அயோக்யர்களும் அசுத்த புத்தியுடையவர்களுமான மனிதர்களால் அடைவதற்கு முடியாததும் புண்யம் செய்தவர்களால் அடையத்தக்கதும் மூடர்களால் எவ்விதத்தாலும் அடைய முடியாததும் யோகங்களால் அடையப்படுவதும் தேடத்தக்கதுமான பதத்தைப் பெரும்பயனுள்ள

தென்று அறிவாயாக. மிகச் சிறந்தவனே! எப்பொழுது எப்பொழுது தர்மத்திற்கு வாட்டமுண்டாகுமோ அதர்மத்திற்கு அபிவ்ருத்தியுண்டாகுமோ அப்பொழுது அப்பொழுது நான் என்னை அவதரிக்கும்படி செய்வேன். ஹிம்ஸையில் பற்றுதலுள்ளவர்களும் சிறந்த தேவர்களால் கொல்லமுடியாதவர்களுமான தைத்யர்களும் ராக்ஷஸர்களும் பயங்கரர்களாக இவ்வுலகில் எப்பொழுது உண்டாவார்களோ அப்பொழுது நான் நல்வினை செய்தவர்களுடைய வீடுகளில் பிறக்கிறேன். மனுஷ்ய தேகத்தில் பிரவேசித்து நான் எல்லாவற்றையும் அடக்குகிறேன். நான் என்னுடைய மாயையினால் தேவர்களையும் மனுஷ்யர்களையும் கந்தர்வர்களையும் உரகர்களையும் ராக்ஷஸர்களையும் ஸ்தாவரங்களையும் ஜங்கமங்களையும் படைத்து அழிக்கிறேன். தர்மத்தின் எல்லை கட்டுப்படுதற்காக நான் மனுஷ்ய சரீரத்தில் பிரவேசித்துக் (காரியம் செய்யுங்) காலம் வந்தபோது ஆலோசித்து மறுபடியும் தேகத்தை உண்டுபண்ணிக்கொள்ளுகிறேன். க்ருதயுகத்தில் எனக்கு வெண்மை நிறம்; த்ரேதாயுகத்தில் மஞ்சள் நிறம்; த்வாபரயுகத்தை அடைந்தால் எனக்கு நீலவர்ணம். அப்படியே, கலியுகத்தில் கருமை நிறம். பிராம்மணோத்தம! எப்பொழுது என்னுடைய நிறமானது கருமையாயிருக்கிறதோ அப்பொழுது அதர்மத்தினுடைய மூன்று பாகங்கள் இருக்கின்றன. முடிவுக்காலம் வந்தவுடன், நான் ஒருவனே அதி பயங்கரனான காலனாகி ஸ்தாவரங்களாலும் ஜங்கமங்களாலுமடர்ந்த மூவுலகங்களையும் முழுதும் நாசம் செய்கிறேன். நான் மூன்று வழிகளையுடையவன். உலகத்துக்கே ஆத்மாவாயிருப்பவன்; எல்லா உலகங்களுக்கும் ஸுகத்தை உண்டுபண்ணுகிறவன்; ஜயிக்கப்படாதவன்; எல்லா இடத்திலும் செல்பவன்; முடிவில்லாதவன்; இந்திரியங்களை நடத்துபவன்; பெரிய காலடிகளால் (உலகத்தை) அளந்தவன். ப்ராம்மணா! நானொருவன் உருவமற்றதும் எல்லாப் பிராணிகளையும் அழிப்பதும் எக்காலங்களிலும் முயற்சிசெய்வதுமான காலசக்ரத்தை நடத்துகிறேன். முனிவர்களுள் ச்ரேஷ்டனே! இவ்வாறு மாயையினால் நான் எல்லாப் பிராணிகளிடமும் நன்கு வியாபித்திருக்கிறேன். பிராம்மணோத்தமனே! ஒருவரும் என்னை அறிவதில்லை. பக்தர்கள் எல்லா உலகங்களிலும் என்னை எல்லா விதங்களாலும் பூஜிக்கிறார்கள். பிராம்மணா! தோஷமில்லாதவனே! உன்னால் என்னிடத்தில் அடையப்

பட்ட துன்பங்களெல்லாம் உனக்கு ஸுகமுண்டாவதற்கும் நன்மைக்கும் ஆகின்றன. உலகத்தில் உன்னால் காணப்பட்ட ஸ்தாவர ஜங்கமமெல்லாம் எல்லா விதத்தாலும் பிராணிகளைப்போஷிக்கின்ற என்னுடைய சரீரமாகச் சொல்லப்படுகின்றன. எல்லா உலகங்களுக்கும் பிதாமஹரான பிரம்மதேவர் என் சரீரத்தினுடைய பாதியாக இருக்கிறார். நான் சங்கத்தையும் சக்ரத்தையும் கதாயுதத்தையும் தரித்துக்கொண்டிருக்கிற நாராயணனென்று பிரஸித்திபெற்றவன். பிரம்மரிஷியே! எல்லா உலகங்களையும் சரீரமாகக் கொண்டவனான நான் எல்லாஉலகங்களுக்கும் பிதாமஹனாயிருந்துகொண்டு யுகங்கள் ஆயிரம்முறை சுற்றிவருகிறவரையில் தூங்குகிறேன். முனிவர்களுள் மிகச்சிறந்தவனே! பிரம்மா விழித்துக்கொள்ளுகிறவரையில், சிசுவல்லாதவனான நான் சிசுவின் ரூபத்தோடு இவ்வண்ணம் எப்பொழுதும் இவ்விடத்திலிருக்கிறேன். பிராம்மணோத்தம! பிரம்மரிஷிகளுடைய கூட்டங்களால் பூஜிக்கப்பட்டவனே! அடிக்கடி ஸந்தோஷமடைந்த என்னால் பிரம்மாவின் ரூபத்துடனிருந்து உனக்கு வரம் கொடுக்கப்பட்டது. ஸ்தாவரம் ஜங்கமமெல்லாம் நாசமடைந்து ஓரே ஸமுத்திரமாயிருப்பதைக்கண்டு நீ பயந்திருக்கிறாயென்பதை நான் அறிந்தேன். அதற்காக உனக்கு உலகம் காண்பிக்கப்பட்டது. நீ இச்சரீரத்தினுள் நுழைந்தபொழுது, (அங்கே) எல்லாஉலகத்தையும் பார்த்து ஆச்சர்யமடைந்துவிட்டமையால் (என்னைத்) தெரிந்து கொள்ளவில்லை. பிரம்மரிஷியே! அதனால், என்னால் வாய்வழியாக விரைவில் வெளியில் கொண்டுவரப்பட்டாய். என் ஸ்வரூபம் தேவர்களாலும் அஸுரர்களாலும் அறியமுடியாததாயிருந்தும், உனக்கு என்னால் சொல்லப்பட்டது. பெருந்தவமுள்ள பகவானான அந்த ப்ரம்மதேவர் விழித்துக்கொள்ளுகிறவரையில், நீ இந்த இடத்தில் கவலையற்று ஸுகமாக ஸஞ்சரிக்கக்கடவாய். ப்ராம்மணோத்தம! எல்லா உலகங்களுக்கும் பிதாமஹரான அந்தப்பிரம்மதேவர் விழித்தெழுந்தவுடன், (அவருடன் கலந்து) ஒருவனாகிச் சரீரங்களாயிருக்கிற ஆகாசத்தையும் பூமியையும் தேஜஸையும் வாயுவையும் ஜலத்தையும் இவ்வுலகத்தில் மிச்சமுள்ள ஸ்தாவரஜங்கமங்களையும் [1] படைப்பேன்' என்று கூறினார். ஐயா! மிக்க ஆச்சர்யமான அந்தத் தேவர் இவ்வாறு கூறிவிட்டு மறைந்தார். படைக்கப்பட்டவையும் விசித்திரமானவையும் பலவிதமாயிருப்பவையுமான இந்த ப்ரஜைகளை நான்

1 வேறு பாடம்.

காண்கிறேன். அரசனே! பரதஸ்ரேஷ்டனே! தர்மத்தை வளர்ப்ப வரனைவருள்ளும் சிறந்தவனே! அந்த யுகமுடிவானது நேர்ந்த பொழுது, என்னால் இவ்வண்ணம் ஆச்சர்யம் காணப்பட்டது. புருஷ ஸ்ரேஷ்டனே! முற்காலத்தில் தாமரைமலர்போல நீண்ட கண்களை யுடைய எந்தத்தேவர் என்னால் காணப்பட்டாரோ அப்படிப்பட்ட இந்த ஜநார்த்தனரே இங்கு உனக்கு உறவினராக இருக்கிறார். குந்தி யின் புதல்வனே! இவருடைய வரதானத்தாலேயே ஞாபகசக்தியா னது என்னை விட்டகலுகிறதில்லை. எனக்குத் தீர்க்கமான ஆயுளும் என்னிஷ்டப்படி மரணமும் ஸித்தித்திருக்கின்றன. எங்கும் வியா பித்திருப்பவரும் புராணபுருஷரும் நினைத்தற்கரிய உருவமுள்ளவ ரும் நீண்டபுஜங்களையுடையவருமான அந்த ஹரியானவர் வ்ருஷ்ணி வம்சத்தில் அவதரித்துக் கிருஷ்ணனென்கிற பெயருடன்கூடினவ ராக விளையாடுகிறவர்போல இதோ வீற்றிருக்கிறார். இவர் எல்லா வற்றையும் படைப்பவர்; காப்பவர்; அழிப்பவர்; அழிவற்றவர்; ஸ்ரீவத்ஸமென்கிறமறுவை மார்பில் உடையவர்; கோவிந்தர்; பிரம் மாக்களுக்கெல்லாம் ரக்ஷகர்; பிரபு; வ்ருஷ்ணிவீரர்களுள் மிகச்சிறந் தவரும் தேவர்களுக்கெல்லாம் முந்தினவரும் சத்துருக்களைஜயிப்ப வரும் புருஷசப்தத்தால் சொல்லப்படுகிறவரும் பீதாம்பரத்தைத் தரித்தவருமான இவரைக்கண்டு இந்தநினைவு எனக்கு வந்தது. கௌரவஸ்ரேஷ்டர்களே! மாதவர் எல்லாப்பிராணிகளுக்கும் பிதா வாகவும் மாதாவாகவுமிருக்கிறார். ரக்ஷிப்பதில் வல்லமையுள்ளவ ரான இவரைச் சரணமடையுங்கள்' என்றுசொன்னார். இவ்வண்ணம் உரைக்கக்கேட்ட அந்தக் குந்திபுத்ரர்களும் புருஷஸ்ரேஷ்டர் களான நகுல ஸஹதேவர்களும் திரௌபதியுடன் கூடினவர் களாக எல்லோரும் ஜநார்த்தனரை நமஸ்கரித்தார்கள். புருஷ ஸ்ரேஷ்டனே! கௌரவிக்கத்தக்கவரும் விதிப்படி பூஜிக்கப் படுகின்றவருமான அந்தக்ருஷ்ணன் இந்தப்பார்த்தர்களை இணை யற்ற இன்சொற்களுடன்கூடிய ஸமாதானவசனத்தால் தேறுத லடையச்செய்தார்.

---

## நூற்றுத்தொண்ணூற்று மூன்றுவது அத்யாயம்.

## மார்க்கண்டேயஸமாஸ்யாபர்வம். (தொடர்ச்சி.)

(மார்க்கண்டேயர் கலியில் வரப்போகிற உலகவ்ருத்தாந்தங்களையும் கலியின் முடிவில் கல்கியாக அவதரிக்கும் ஹரியினால் துஷ்டர்கள் ஸம்ஹரிக்கப்படுவதையும் யுதிஷ்டிரர் முதலியவர்களுக்குக் கூறியது.)

குந்தியின் புத்ரரான யுதிஷ்டிரரோ, மந்திரிகளோடு மார்க்கண்டேயமகாமுனிவரைப் பார்த்து, வரப்போகிற உலகத்தின்கதியை மீண்டும் வினவலானார். யுதிஷ்டிரர், 'சொல்பவர்களுள் சிறந்தவரே! பிருகுவம்சத்திலுதித்த முனிவரே! யுகத்தின் தொடக்கத்தில் நடந்த ஆச்சரியமான விருத்தாந்தமும் உத்பத்தியும் நாசமும் உம்மிடத்தினின்று எங்களால் கேட்கப்பட்டன. மறுபடியும் எனக்கு ஆவல் இருக்கிறது. இந்தக் கலியுகத்தில் தர்மங்கள் நிலைகுலைந்திருக்கும் தருணத்தில் எது மிகுந்திருக்கப் போகிறது? அந்த யுகமுடிவில் மனிதர்கள் எப்படிப்பட்ட வீர்யமுள்ளவர்களும் எவ்வித ஆகாரமுள்ளவர்களும் எவ்வித நடையுள்ளவர்களும் எவ்வளவு ஆயுளுள்ளவர்களும் எதை உடுப்பவர்களுமாயிருப்பார்கள்? எந்தக் கால எல்லையை அடைந்து மீண்டும் க்ருதயுகம் உண்டாகும்? முனிவரே! விஸ்தாரமாகச் சொல்லக்கடவீர்; இப்பொழுது விசித்திரமானவைகளைச் சொல்லுகிறீர்' என்று வினவினர்.

இவ்வாறு சொல்லக்கேட்டவரும் முனிஶ்ரேஷ்டருமான அந்த மஹரிஷியானவர், விருஷ்ணிகளுள் சிறந்தவரான கிருஷ்ணனையும் பாண்டவர்களையும் ஆனந்தமடையச் செய்துகொண்டு, யுதிஷ்டிரரைப் பார்த்து, 'அரசனே! ராஜஶ்ரேஷ்டனே! என்னால் முற்காலத்தில் தேவதேவருடைய அருளால் காணவும் கேட்கவும் அனுபவிக்கவும்பட்டவைகளைக் கேள். பரதர்களுள் சிறந்தவனே! (இனி) இந்தப் பாவம் மிக்க காலத்தையடைந்து வரப்போகிற உலகங்களுடைய வரலாறனைத்தும் சொல்லப்படுவதை என்னிடத்திலிருந்து தெரிந்துகொள். பரதர்களுள் சிறந்தவனே! தர்மமென்கிற விருஷபமானது க்ருதயுகத்தில் கபடமில்லாததாயும் பேராசை முதலிய தீயகுணங்களில்லாததாயும் நான்கு கால்களோடு கூடியதாயும் ஸம்பூர்ணமாக

மனிதனிடத்தில் நிலைபெற்றிருந்தது; த்ரேதாயுகத்தில் அதர்மத்தால் ஒருகால் அடிக்கப்பட்டு மூன்று கால்களோடு நிலைத்திருந்தது. த்வாபரயுகத்தில் பாதி அதர்மத்தோடு தர்மமானது கலந்திருக்கிறதென்று சொல்லப்படுகிறது. பரதஸ்ரேஷ்டனே! தாமஸயுகமான கலியுகத்தை அடைந்து அதர்மமானது மூன்று அம்சங்களால் உலகங்களை வலிந்து கவர்ந்துகொண்டிருக்கிறது. தர்மமோ, நான்காவது அம்சத்தால் மனிதர்களை அடைந்திருக்கிறது. பாண்டவ! மனிதர்களுக்கு யுகந்தோறும் ஆயுள், வீர்யம், மனம், புத்தி, பலம், தேஜஸ் இவைகளெல்லாம் குறைவடைகின்றனவென்று என்னிடமிருந்து தெரிந்துகொள். யுதிஷ்டிர! பிராம்மணர்களும் க்ஷத்திரியர்களும் வைஸ்யர்களும் சூத்திரர்களும், தர்மமென்கிற வலையை வீசி உலகங்களை வஞ்சிக்கிறவர்களாகக் கபடங்களால் தர்மத்தை அனுஷ்டிப்பார்கள். பண்டிதரென்கிற கர்வமுள்ள மனிதர்களால் உலகத்தில் ஸத்யமானது சுருக்கப்படும். பிறகு, ஸத்யத்தின் விநாசத்தினால் அவர்களுக்கு ஆயுளானது அல்பமாக ஏற்படும். ஆயுளின் குறைவினால் வித்தையைக் கற்றுக்கொள்வதற்குச் சக்தியுள்ளவர்களாகார்கள். வித்தையில்லாதவர்களை அஜ்ஞானத்தினால் பேராசையானது கவர்ந்துகொள்ளும். மனிதர்கள் பேராசையையும் அறியாமையையும் பிரதானமாகக்கொண்டவர்களும் மூடர்களும் காமத்தில் பற்றுள்ளவர்களும் திடமான வைரமுள்ளவர்களும் ஒருவரை ஒருவர் கொல்லுவதில் விருப்பமுள்ளவர்களும் ஆவார்கள். பிராம்மணர்களும் க்ஷத்திரியர்களும் வைஸ்யர்களும் ஒருவரோடொருவர் கலந்துபோவார்கள்; தவத்தினாலும் ஸத்யத்தாலும் விடுபட்டுச் சூத்திரர்களுக்கு ஒப்பாவார்கள். கீழ்ப்பட்ட ஜாதியிலிருப்பவர்கள் நடுஜாதியை அடைந்தவர்களாக இருப்பார்கள். நடுஜாதியிலிருப்பவர்கள் கீழ்ஜாதியை அடைந்தவர்களாக இருப்பார்கள். ஸந்தேகமில்லை. யுகத்தினுடைய முடிவு வரும்போது உலகம் இவ்விதமாகும். யுகமுடிவுக்காலத்தில், சணல் நாரால் நெய்யப்பட்ட கோணிகள் வஸ்திரங்களுள் மிகச் சிறந்தவையாகும். வரகுகள் தான்யங்களுள் சிறந்தவைகளாகும். புருஷர்கள் மனைவியை நட்பாகக் கொண்டவர்களாவார்கள். யுகமுடிவுக்காலத்தில், எப்பொழுதும் விரதத்தைத் தரித்திருக்கிற மனிதர்களும், பசுக்கள் நாசமடையவே, மத்ஸ்யமாம்ஸத்தால் ஜீவிப்பவர்களும் வெள்ளாடுகளையும் செம்மறியாடுகளையும் கறப்பவர்களும் பேராசையுள்ளவர்களும் ஆவார்கள். யுகமுடிவில், மனிதர்கள் ஒருவர் மற்றொருவ

ருடைய பொருளை அபகரிக்கிறவர்களும் ஒருவரை ஒருவர் ஹிம்ஸிப்பவர்களும் மந்திரஜபமில்லாதவர்களும் நாஸ்திகர்களும் திருடர்களும் ஆவார்கள். யுகக்ஷயத்தில், நதி தீரங்களில் குந்தாலிகளால் (பூமியை வெட்டி) [1] அற்பதானியங்களை விதைக்கச் செய்வார்கள். அவைகளும் அவர்களுக்கு அல்ப பலனைக் கொடுப்பவைகளாகும். ஸ்ராத்தத்திலும் தேவகார்யத்திலும் எப்பொழுதும் விரதத்தைத் தரிக்கிற மனிதர்களும் பேராசையினால் கவரப்பட்டு இவ்வுலகில் ஒருவரை ஒருவர் பக்ஷிப்பார். யுகக்ஷயத்தில், பிதா புத்திரன் பொருளைக் கவர்ந்து அனுபவிப்பான். அப்படியே, புத்திரனும் தகப்பன் பொருளைக் கவர்ந்து அனுபவிப்பான். உணவுப்பொருள்கள் அழிந்துபோம். பிராம்மணர்கள் வேதத்தை நிந்திக்கிறவர்களாகி விரதங்களை அனுஷ்டியார். யுக்திவாதத்தால் மயக்கப்பட்டவர்களாகி யாகம் செய்யமாட்டார்கள்; ஹோமங்களையும் செய்யமாட்டார்கள்; யுக்திவாதத்தால் மயக்கப்பட்டு இகழப்பட்ட செய்கைகளில் விருப்பத்தை வைப்பார்கள். பயிரிடுவதற்குத்தகாத களர் நிலத்தில் க்ருஷி செய்வார்கள். நுகத்தில் பசுக்களைக் கட்டுவார்கள். மனிதர்கள் ஒரு வயதுக்கன்றுகளைச் சுமை சுமக்கச் செய்வார்கள். புத்திரன் பிதாவைக் கொல்வான். அப்படியே தகப்பனும் புத்திரனைக் கொல்வான். யுகக்ஷயத்தில், ஸ்திரீகளும் கணவன் புத்திரன் முதலியவர்களைக் கொல்லுவார்கள். அருவருப்பில்லாதவனாக அர்த்தமில்லாத சொற்களால் உரக்கப் பேசுகிற மனிதன் நிந்தையை அடையமாட்டான். உலகம் முழுமையும் மிலேச்சமயமும் ஸத்கர்மானுஷ்டானமில்லாததும் கொடையில்லாததும் ஆனந்தமில்லாததும் அப்படியே உத்ஸவமில்லாததும் ஆகும். இவ்வுலகில் நல்லொழுக்கமுள்ளவர்களுடைய பந்துக்களான மனிதர்களும், அல்பமான வீர்யமும் பலமுமுள்ளவர்களும் இறுமாப்புள்ளவர்களும் பேராசையும் மோகமும் குடிகொண்டவர்களும் அவைகளைச்சார்ந்த கதைகளைக் கேட்டு மகிழ்பவர்களுமாகி லோபிகளின் பொருள்களையும் அவ்வாறே உறவினரற்ற மனிதர்களுடைய பொருள்களையும் விதவைகளுடைய பொருள்களையும் அபஹரிப்பார்கள். கௌந்தேய! அரசர்கள் கபடமான ஆசாரத்தைக் கைக்கொண்டவர்களும் பாவத்தில் புத்தி செலுத்துபவர்களும் மிகுந்த துன்புறுத்துபவர்களுமாகி வரி

[1] 'ஓஷதய:' என்பது மூலம்; ஒரு வருஷத்திற்குள் பலன்கொடுத்துப் பின்பு பட்டுப்போகின்றவை.

வாங்குவார்கள். யுகமுடிவில், க்ஷத்திரியர்கள் ஒருவரை ஒருவர் கொல்லுவதில் முயற்சியுள்ளவர்களும் மூர்க்கர்களும் பண்டிதரென்கிற கர்வமுள்ளவர்களும் லோக கண்டகர்களும் ஆவார்கள். யுகமுடிவில், அரசர்கள் பிரஜைகளைக் காவாதவர்களும் பேராசையுள்ளவர்களும் கர்வமும் அகங்காரமும் கொழுப்புமுள்ளவர்களும் தண்டிப்பதிலேயே விருப்பமுள்ளவர்களும் ஆவார்கள். பாரத! ஸாதுக்கள் அழுதுகொண்டிருக்கும்போதுகூட, அவர்களுடைய மனைவிகளையும் பொருள்களையும், அரசர்கள், தயையில்லாதவர்களாகி, ஆக்ரமித்து ஆக்ரமித்து அனுபவிப்பார்கள். யுகத்தின் முடிவுவந்தகாலத்தில் ஒருவனும் கன்னிகையை வேண்டமாட்டான். ஒருவனுக்கும் கன்னியும் கொடுக்கப்படமாட்டாள். அவர்கள் தாமே (கணவர்களை) அடைபவர்களாவார்கள். யுகத்தின் முடிவு வந்தபோது, அரசர்களும் போதுமென்ற எண்ணமில்லாதவர்களும் மூடபுத்தியுள்ளவர்களுமாகி எல்லா உபாயங்களாலும், பிறர்பொருள்களை அபஹரிப்பார்கள். யுகத்தின் முடிவுக் காலம் வந்தவுடன், உலகமனைத்தும் மிலேச்சத்தன்மையுள்ளதாகும். ஸந்தேகமில்லை. [1] வலக்கை இடக்கையையும் இடக்கை வலக்கையையும் வஞ்சிக்கும். உலகத்தில் பண்டிதரென்கிற கர்வங்கொண்ட மனிதர்களால் ஸத்தியமானது மிக விலக்கப்படும். வயது முதிர்ந்தவர்கள் சிறுவனுக்குரிய புத்தியுள்ளவர்களும் சிறுவர்கள் முதியவனுடைய புத்தியுள்ளவர்களும் ஆவார்கள். அப்படியே, பயந்தவன் (தன்னைச்) சூரனென்று எண்ணுவான். சூரர்கள் பயந்தவர்களும் துயரமுள்ளவர்களும் ஆவார்கள். யுகத்தினுடைய முடிவாகும் தருணத்தில், ஒருவரை ஒருவர் நம்பமாட்டார்கள். உலகினர் எல்லாரும் [2] ஒருவனுக்கு ஒருத்தி மனைவி என்கிற முறையுடன் இரார்; பேராசையிலும் மோகத்திலும் நிலைபெற்றிருப்பார். அக்காலத்தில், அதர்மம் விருத்தியடையும்; தர்மம் நடைபெறாது. ஜனங்களுக்கதிபனே! யுகக்ஷயத்தில், பிராம்மணர்களும் க்ஷத்திரியர்களும் வைசியர்களும் நாசமடைவர். அப்பொழுது,

1 'மனிதர்களுடைய கைகள்போல ஒரு தாய் வயிற்றில் பிறந்த ஸஹோதரர்களும் ஒருவர் மற்றொருவரை வஞ்சிப்பர்' என்பது பழையவுரை.

2 'ஏகபார்யம்' என்பது மூலம்; 'ஏகாஹார்யம்' என்ற பாடங்கொண்டு, 'மாம்ஸமோ, காய்கறிகளோ ஒரேவித ஆகாரமுள்ளவராகத் தின்னத்தக்கது தகாததென்னும் வரையறை அற்றுப்போம் என்பது கருத்து' என்பது பழையவுரை.

உலகமானது ஒரே ஜாதியுள்ளதாகும். யுகக்ஷயத்தில், தகப்பன் புத்திரனைப் பொறுக்கமாட்டான். அப்படியே, புத்திரனும் தகப்பனைப் பொறுக்கமாட்டான். யுகமுடிவில், மனைவிகள் கணவர்களுக்குப் பணிவிடை செய்யமாட்டார்கள். யுகமுடிவு வரும் தருணத்தில், யவையையும் அப்படியே கோதுமையையும் உணவாகக்கொள்ளுகிற தேசங்களை ஜனங்கள் அடைவார்கள். பிரஜைகளுக்கு அதிபதியே! யுகக்ஷயம் வரும் தருணத்தில், புருஷர்களும் ஸ்திரீகளும் இஷ்டப்படி உண்பார்கள்; ஒருவரை ஒருவர் பொறுக்கமாட்டார்கள். யுதிஷ்டிரா! உலகமனைத்தும் மிலேச்சத்தன்மையுள்ளதாகும். மனிதர்கள் ச்ராத்தத்தில் தேவர்களையும் பிதிர்க்களையும் திருப்தியடையச் செய்யமாட்டார்கள். ஜனங்களுக்கு அதிபதியே! ஒருவனும் மற்றொருவனுடையசொல்லைக் கேளான். ஒருவனும் ஒருவனுக்கு ஆசார்யனல்லன். அப்பொழுது, உலகமானது தமோகுணத்தால் கவரப்பட்டதாகும். யுகாந்தம்வரும் தருணத்தில், பதினாறுவருஷம்தான் பூர்ணமான ஆயுளாகும். பிறகு, பிராணன்களை இழப்பார்கள். கன்னிகையானவள் ஐந்தாவது பிராயத்திலோ ஆறாவது பிராயத்திலோ பிரஸவிப்பாள். அப்பொழுது, ஏழுவயதும் எட்டுவயதுமுள்ள ஆண்பிள்ளைகள் குழந்தைகளை உண்டுபண்ணுவார்கள். அரசனே! ராஜச்ரேஷ்டனே! யுகாந்தத்தில், ஸ்திரீகள் புருஷர்களிடத்திலோ புருஷர்கள் ஸ்திரீகளிடத்திலோ ஸந்தோஷத்தை அடையமாட்டார்கள். மனிதர்கள் சிறிதே பொருளுள்ளவர்களும் ஜாதிக்குரிய அடையாளங்களை விடுவிப்பவர்களுமாவார்கள். துன்பமும் அதிகமாகும். யுகமுடிவில் எவனும் எவனுக்கும் (எதையும்) கொடுப்பவனாகான். யுகமுடிவில், தேசங்கள் சோற்றைவிற்பவைகளும் பிராம்மணர்கள் வேதவிக்ரயம்செய்பவர்களும் ஸ்திரீகள் அங்கத்தை விற்பவர்களும் ஆவார்கள். யுகமுடிவுக்காலத்தில், மனிதர்கள் மிலேச்சருடைய ஆசாரமுள்ளவர்களும் எல்லாவற்றையும் பக்ஷிப்பவர்களும் எல்லாச்செய்கைகளிலும் பயங்கரர்களும் ஆவார்கள். இதில் சந்தேகமில்லை. பரதச்ரேஷ்டனே! யுகாந்தகாலத்தில், கொள்ளுதல் விற்றல் செய்யும்பொழுது பொருளாசையினால் எல்லோரும் எல்லோருக்கும் வஞ்சனை செய்வார்கள். யுகமுடிவுக்காலத்தில், அறியவேண்டியவற்றை அறிந்துகொள்ளாமல் கர்மங்களைச் செய்வார்கள். அப்படியே, எல்லோரும் தம்மிஷ்டப்படி இருப்பார்கள். யுகமுடிவுவந்தகாலத்தில், எல்லாஜனங்களும் இயற்

கையிலேயே கொடிய செய்கைகளுள்ளவர்களும் ஒருவரை ஒருவர் அவதூறு சொல்லுகிறவர்களும் ஆவார்கள். ஜனங்கள் மனவருத்தமில்லாமல் பூந்தோட்டங்களையும் மரங்களையும் அழிப்பார்கள். உலகத்தில் பிராணிகளுடைய உயிருக்கு ஸம்சயமுண்டாகும். அரசனே! அப்படியே, மனிதர்கள் பேராசையினால் கவரப்பட்டவர்களாவார்கள்; பிராம்மணர்களுடைய பொருள்களால் ஜீவிப்பவர்கள், பிராம்மணர்களைக் கொல்லுவார்கள். பிராம்மணர்களும், சூத்திரர்களால் பீடிக்கப்பட்டவர்களும் பயத்தினால் துன்புறுத்தப்பட்டவர்களும், 'ஆ! ஆ!' என்று அலறுகின்றவர்களுமாகிக் காப்பவன் கிடையாமல் இந்தப் பூமியில் சுற்றுவார்கள். மனிதர்கள் உயிரைப் போக்குகிறவர்களும் கொடியவர்களும் பயங்கரர்களும் பிராணிகளை அதிகமாகத் துன்பம் செய்பவர்களும் ஆகும்பொழுது, யுகம் முடிவையடையும். குருகுலத்தை மேன்மையடையச் செய்பவனே! பிராம்மணர்கள் அதிகமான பயத்தை அடைந்தவர்களும் ஓடுகின்றவர்களுமாகி நதிகளையும் மலைகளையும் மேடுபள்ளங்களையும் அடைவார்கள். அரசனே! பூமியைப் பாதுகாப்பவனே! பயங்கரமான யுகமுடிவில், பிராம்மணோத்தமர்கள் திருடர்களால் பீடிக்கப்பட்டவர்களும் கொடுங்கோல் மன்னர்களால் எப்பொழுதும் ஏற்படுத்தப்பட்ட வரிகளின் சுமையினால் மிகப் பீடிக்கப்பட்டவர்களுமாகிக் காகங்கள்போலத் தைரியத்தை இழந்து சூத்திரர்களுக்குப் பணிசெய்பவர்களாகி ஜாதிக்குரியனவல்லாத செய்கைகளைச்செய்வார்கள். சூத்திரர்கள் தர்மத்தைச் சொல்லுவார்கள். பிராம்மணர்கள் அவர்களை வழிபடுகிறவர்களும் (அவர்கள் சொல்வதைப்) பிரமாணமென்றெண்ணுகிறவர்களும் கேட்பவர்களும் ஆவார்கள். இவ்வுலகமானது கீழ்மேலாக மாறுபடும். யுகமுடிவில், மனிதர்கள் எலும்புகளால் அடையாளமிடப்பட்ட சுவர்களைப் பூஜிப்பார்கள். தேவதைகளை விலக்குவார்கள். [1] யுகமுடிவில் சூத்திரர்கள் பிராம்மணர்களுக்குப் பணிசெய்யமாட்டார்கள். யுகமுடிவுக்காலத்தில், மஹரிஷிகளுடைய ஆச்ரமங்களிலும் பிராம்மணர்களுடைய வீடுகளிலும் தேவாலயங்களிலும் யாகசாலைகளிலும் நாகங்களுடைய ஆலயங்களிலும் பூமியானது எலும்பை அடையாளமாகக் கொண்டதாகும்; (உண்மையான) தேவாலயங்களால் அலங்கரிக்கப்பட்டதாகாது. அது யுகத்தின் முடிவுக்கு அடையாளம். எப்பொழுது மனிதர்கள் நித்யம் பயங்

---

1 வேறு பாடம்.

காரர்களும் தர்மத்தை விட்டவர்களும் மாம்ஸத்தைப் பக்ஷிப்பவர்களும் அப்படியே கட்குடிப்பவர்களும் ஆவார்களோ அப்பொழுது யுகமானது முடிவை அடையும். அரசனே! மஹாராஜனே! எப்பொழுது புஷ்பத்தில் புஷ்பமும், பழத்தில் பழமும் உண்டாகுமோ அப்பொழுது யுகம் நாசத்தை அடையும். யுகத்தின் முடிவுக் காலத்தில், மேகமானது அகாலத்தில் மழையைப் பொழிவதாகும். அப்பொழுது, மனிதர்களுடைய செய்கைகள் முறை தவறினவைகளாகும். சூத்திரர்கள் பிராம்மணர்களோடு விரோதத்தை அடைவார்கள். பிறகு, அதிசீக்கிரத்தில் பூமியானது மிலேச்சர்களால் நிரம்பினதாகும். பிராம்மணர்கள் அதிகவரிகளால் உண்டான பயத்தால் பத்துத்திசைகளையும் அடைவார்கள். அரசர்கள் அங்பாயத்தில் நிலைபெற்றவர்களாவார்கள். தேசத்து ஜனங்கள் ஒரே ஆசாரமும் வேஷமுமுள்ளவர்களும் அப்படியே கூலிகொடாமல் வேலைவாங்குகின்ற மனிதர்களால் ஹிம்ஸிக்கப்பட்டவர்களுமாகிப் பழங்களையும் கிழங்குகளையும் உண்டுகொண்டு காட்டுக் குடிசைகளை அடைவார்கள். இவ்வண்ணம் உலகமானது குழப்பமடைந்தபொழுது, வரையறை இராது. பிராம்மணர்களும் க்ஷத்திரியர்களும் வைஶ்யர்களும் நல்ல காரியத்தைவிட்டு விடுவார். சிஷ்யர்கள் அப்பிரியமான காரியங்களைச் செய்கின்றவர்களாகிக் குருவின் உபதேசத்தில் கட்டுப்பட்டிருக்கமாட்டார்கள். அதற்குப் பிறகு, தனமில்லாத ஆசார்யன் சிஷ்யனால் பழிக்கப்படுவான். மித்திரர்களும் ஸம்பந்திகளும் பந்துக்களும், பொருள்களின் ஸம்பந்தத்தால் (பொருளுள்ளவர்களிடம்) அன்பு பாராட்டுவார்கள். யுகத்தின் முடிவில், எல்லாப் பிராணிகளுக்கும் நாசமுண்டாகும். திசைகளெல்லாம் நன்கு மூண்டெரியும். நக்ஷத்திரங்கள் ஒளியற்றனவாகும். சோதிமண்டலங்கள் புகையினால் சூழப்பட்டவைகளாகும். அப்படியே, காற்றுக்கள் சுழன்று நிலைதப்பி வீசும். பல உற்கைகள் பெரும்பயம் வரப்போவதைத் தெரிவித்துக்கொண்டு கீழே விழும். ஸூர்யன் மற்ற ஆறு ஸூர்யர்களோடுகூடி உலகத்தை மிகக் காய்வான். இடி முழக்கங்கள் தொடர்ச்சியாகத் தோன்றும். நான்கு பக்கங்களிலும் திசைகளின் எரிச்சல்களும் உண்டாகும். அப்பொழுது, ஸூர்யன் உதயகாலத்திலும் அஸ்தமயகாலத்திலும் ராகுவினால் கவரப்படுவான். பகவானான இந்திரன் அகாலத்தில் மழைபொழிகிறவனாவான். யுகமுடிவுக்காலம் நெருங்கினபோது, பயிர்கள் முளையா. ஸ்திரீகள் அடிக்கடி கடுஞ்

சொற்களைச் சொல்பவர்களும் குரூரர்களும் அழுவதில் பிரியமுள்ளவர்களுமாகிக் கணவர்களுடைய வசனத்தில் கட்டுப்பட்டு நிற்கமாட்டார்கள். யுகமுடிவில், புத்திரர்கள் தாயையும் தந்தையையும் கொல்லுவார்கள். ஸ்திரீகள் புத்திரர்களை ஆதாரவாகக்கொண்டு கணவர்களைக் கொல்லுவார்கள். மஹாராஜனே! பர்வகாலமல்லாத ஸமயத்தில், ராகுவானவன் ஸூர்யனைப் பிடிப்பான். யுகாந்தத்தில், நெருப்பும் எங்கும் பற்றியெரியும். அப்பொழுது, குடிதண்ணீரையும் போஜனத்தையும் தங்குமிடத்தையும் யாசிக்கின்ற வழிப்போக்கர்கள், அவைகளை அடையார். அவர்கள் ஜனங்களால் துரத்தப்பட்டு வழியில் படுப்பார்கள். யுகாந்தம் நெருங்கிவரும் தருணத்தில், நாகங்களும் காக்கைகளும் ராசாளிகளும் மற்ற பறவைகளும் மிருகங்களும் இடிபோலப் பயங்கரமான ஒலிகளை வெளியிடும். யுகாந்தம் கிட்டுகின்ற தருணத்தில், மனிதர்கள் நண்பர்களையும் ஸம்பந்திகளையும் வேலைக்காரர்களையும் கைவிடுவார்கள். யுகாந்தம் நெருங்கும் தருணத்தில், மனிதர்கள் தேசங்களையும் திசைகளையும் பட்டணங்களையும் கடைகளையும் முறையே அழிப்பார்கள். ஜனங்கள், அப்பொழுது, 'ஆ! தந்தையே! ஆ! மைந்தா!' என்று இவ்விதம் மிக்க பயங்கரமான வாக்குக்களை வெளியிட்டு ஒருவரை ஒருவர் அலறி அழைத்துக்கொண்டு பூமியில் எல்லாப்பக்கத்திலும் சுற்றுவார்கள். யுகமுடிவில், அப்படியே புத்திரர்கள் உயர்ந்த வர்ணத்தார்களை, 'அடே!' என்று அழைப்பார்கள். பிராம்மணர்கள் அல்பவஸ்துக்களில் ஆசையுள்ளவர்களும், [1] பாஷண்ட ஜனங்களோடு கலந்தவர்களும் ஆவார்கள்.

பிறகு, யுகமுடிந்ததும், வர்ணாச்ரம தர்மங்கள் முற்றிலும் அழிந்து எல்லாம் ஒன்றாகக் கலந்து போனபோது, பிராம்மணரை முதன்மையாகக் கொண்ட நான்கு ஜாதிகளடங்கின உலகமானது காலவசத்தில் உண்டாகும். பிறகு மறுபடியும் உலகமானது விருத்தியடைதலின் பொருட்டு, ஒவ்வொரு ஸமயத்தில், தெய்வமானது தற்செயலாக அனுகூலமாகும். எப்பொழுது ஸூர்யன், சந்திரன், பிருஹஸ்பதி ஆகிய இம்மூவரும், புஷ்யநக்ஷத்திரத்தை அடைந்து ஒரு ராசியில் சேருவார்களோ அப்பொழுது க்ருதயுகம் உண்டாகும். மேகமானது தக்ககாலத்தில் மழை பெய்யும். நக்ஷத்திரங்கள் மங்களகரமாகும். ஜ்யோ

1 ஆதிபர்வம் 57-ம் பக்கத்திலும் அநுசாஸனபர்வம் 258-ம் பக்கத்திலும் குறிப்பிற் காண்க.

திர்க்ரஹங்கள் பிரதக்ஷிணமாகச் செல்பவைகளும், அனுகூலசாரத்துடன் கூடியவைகளும் ஆகும். அக்காலத்தில் க்ஷேமமும் ஸுபிக்ஷமும் ஆரோக்கியமும் அமைதியும் உண்டாகும். அரசனே! 1 (நாராயணர்) காலத்தால் ஏவப்பட்டு மகாவீர்யமுள்ளவரும் அதிகமான புத்தியும் பராக்கிரமமுமுடையவரும் மஹாத்மாவும் நல்லொழுக்கங்களால் நிறைந்தவரும் பிரஜைகளுக்கு ஹிதத்தைச் செய்பவரும் விஷ்ணுயசஸென்கிற பிராம்மணருமான கல்கிவடிவமாகி ஸம்பலமென்னும் கிராமத்தில் மங்களகரமான பிராம்மணக்ருஹத்தில் அவதரிப்பார். மனத்தினால் நினைத்தவுடன், எல்லா வாஹனங்களும் ஆயுதங்களும் யுத்தவீரர்களும் சஸ்திரங்களும் கவசங்களும் அவரை அடையும். அவர் தர்மவிஜயத்தால் பிரஜைகளை மகிழ்விக்கிற சக்ரவர்த்தியாவார். அவர் குழப்பமுற்றிருக்கிற இந்த உலகத்தைத் தெளிவிக்கப்போகிறார். அவதரித்திருப்பவரும், ஜ்வலிப்பவரும், யுகக்ஷயத்திற்கு முடிவை உண்டுபண்ணுகிறவரும், உதாரபுத்தியுள்ளவரும் பிராம்மண ரூபியுமான கல்கியானவர் எல்லாவற்றையும் ஒழித்துவிட்டு மீண்டும் தர்மயுகமாக மாற்றப் போகிறார். அந்தக் கல்கி என்கிற ப்ராம்மணர் ப்ராம்மணர்களால் சூழப்பட்டவராக அப்பொழுது எல்லாவிடத்திலுமிருக்கிற அயோக்யர்களான எல்லா மிலேச்சர்களுடைய கூட்டங்களையும் அடியோடு அழிக்கப்போகிறார்.

---

1 இங்கே மூலத்திலிருக்கிறபடியே மொழிபெயர்த்திருக்கிறது. ஆயினும், ஸ்ரீ பாகவதம் முதல் ஸ்கந்தம் 3-வது அத்யாயம் 25-வது ஶ்லோகத்தில், 'ஜகத்பதியானவர் விஷ்ணுயசஸென்பவருக்குப் பிள்ளையாகக் கல்கியென்னும் பெயருடன் அவதரிப்பார்' என்றும், 12-வது ஸ்கந்தம் 2 வது அத்யாயம் 18 வது ஶ்லோகத்தில், 'கல்கியானவர் விஷ்ணுயசஸென்பவருடைய வீட்டில் அவதரிப்பார்' என்றும் சொல்லியிருத்தலால், இங்கே, 'விஷ்ணுயசஸென்னும் பிராம்மணர் பிறப்பார். அவருக்கு (நாராயணர்) கல்கிவடிவத்துடன் பிள்ளையாக அவதரிப்பார்' என்று சிலசொற்களை வருவித்துப் பொருள் செய்தல் நேர்; அல்லது, சிலகுடும்பங்களில் தந்தைபெயரே மகனுக்கும் வழங்குவதுபோல வழங்குவதாகக் கொள்ள வேண்டும்.

## நூற்றுத்தொண்ணூற்று நான்காவது அத்யாயம்.

## மார்க்கண்டேயஸமாஸ்யாபர்வம். (தொடர்ச்சி.)

(மார்க்கண்டேயர் க்ருதயுகத்தின் விருத்தாந்தங்களைச் சொல்லி யுதிஷ்டிரரைத் தர்மத்தைச் செய்யும்படி தூண்டியது.)

பிறகு, அவர் திருடர்களுக்கு அழிவைச் செய்து இந்தப் பூமியை அச்வமேதமென்கிற மஹாயாகத்தில் பிராம்மணர்களுக்கு விதிப்படி தானஞ் செய்வார். பிரம்மாவினால் ஏற்படுத்தப்பட்ட மங்களகரமான உலக மரியாதைகளை நிலைநிறுத்திவிட்டு மறுபடியும் முதிர்ச்சியுடன் நல்ல புகழையும் செய்கைகளையும் அடைவார். உலகத்தில் வஸிக்கின்ற மனிதர்கள் அவருடைய நடையை அநுஸரிப்பார்கள். பிராம்மணர்களைக்கொண்டு திருடர்களுக்கு நாசம் செய்யப்பட்ட பிறகு க்ஷேமம் உண்டாகும். பிராம்மணோத்தமரான கல்கியானவர் [1] கிருஷ்ணாஜினங்களையும் சக்திகளையும் திரிசூலாயுதங்களையும் (அம்மால்) ஜயிக்கப்பட்ட தேசங்களில் நிலைபெறச்செய்கின்றவரும் ப்ராம்மணச்ரேஷ்டர்களால் நன்கு துதிக்கப்படுகின்றவரும் பிராம்மணோத்தமர்களைப் பூஜிக்கின்றவரும் துன்பஞ்செய்கிறவர்களைக் கொல்வதில் எப்பொழுதும் பற்றுதலுள்ளவருமாகப் பூமியில் ஸஞ்சரிப்பார். 'ஆ! அம்மா! அப்பா! குழந்தாய்!' என்கிற அந்த மிக்க பயங்கரமான சொற்களை வெளியிட்டு அலறுகின்ற மக்களை மிக்க நாசத்தை அடைவிப்பார். பாரத! பிறகு, அதர்மத்திற்கு அழிவும் தர்மத்திற்கு வளர்ச்சியும் உண்டாகும். க்ருதயுகம் வந்தவுடன், ஜனங்கள் முன்போல அப்படிப்பட்ட கர்மங்களை அநுஷ்டிப்பவர்களாவார்கள். க்ருதயுகத்தில் பூந்தோட்டங்களும் [2] சைத்யங்களும் தடாகங்களும் அப்படிப்பட்ட வீடுகளும் பலவித புஷ்கரிணிகளும் தேவாலயங்களும் பலவித யாககர்மங்களும் உண்டாகும். அப்பொழுது பிராம்மணர்கள் ஸாதுக்களும், முனிவர்கள் சிறந்த தவத்தைச் செய்பவர்களும், ஆச்ரமங்கள் பாஷண்டர்களில்லாதவைகளும், ஜனங்கள் ஸத்தியத்தில் நிலை

1 'பிராம்மண [illegible] நிலைக்கச் செய்து' என்பது கருத்து' என்பர் பழையவுரை.

2 ஆதிபர்வம்-612, ஸபாபர்வம்-48, [illegible]-10-ம் பக்கம் குறிப்புக்களிற் காண்க.

பெற்றவர்களும் ஆவார்கள். [1] எல்லாப் பிராணிகளும், சுத்தியுள் ளவைகளாகவே பிறக்கும். ராஜஸ்ரேஷ்டனே! எல்லா ருதுக்களி லும் எல்லாப்பயிர்களும் உண்டாகும். மனிதர்கள் தானங்களி லும் விரதங்களிலும் நியமங்களிலும் பற்றுள்ளவர்களாக இருப் பார்கள். பிராம்மணர்கள் ஜபயஜ்ஞத்தில் பற்றுள்ளவர்களும் தர்மத்தில் விருப்பமுள்ளவர்களும் மகிழ்ச்சியுள்ளவர்களுமாயிருப் பார்கள். அரசர்கள் இந்தப்பூமியைத் தர்மத்தால் பரிபாலனம் செய்வார்கள். கிருதயுகத்தில் வைஸ்யர்கள் வாணிகத்தில் பற் றுள்ளவர்களாவார்கள். பிராம்மணர்கள் ஆறு தொழில்களில் நிலைபெற்றிருப்பார்கள். க்ஷத்திரியர்கள் காத்தலில் பற்றுள்ள வர்களாக இருப்பார்கள். அப்படியே, சூத்திரர்கள் மூன்று வர் ணத்தார்களுக்கும் பணி செய்வதில் பற்றுள்ளவர்களாக இருப்பார் கள். இந்தத்தர்மமானது, க்ருதயுகத்திலும் த்ரேதாயுகத்திலும் அப் படியே த்வாபரயுகத்திலும் சாஸ்வதமாக இருக்கிறது. கடைசியான கலியுகத்திலுள்ள தர்மம் உனக்கு நன்கு எடுத்துரைக்கப்பட்டது.

பாண்டவ! எல்லா உலகத்தார்களாலும் அறியப்பட்டிருக்கிற யுகங்களின் கால அளவும் நன்கு உரைக்கப்பட்டது. ரிஷிகளால் நன்கு துதிக்கப்பட்டதும் வாயுவினால் சொல்லப்பட்டதுமான புராணத்தைத்தழுவி, சென்றதும் வருவதுமாகிய இவை அனைத் தும் என்னால் உனக்கு உரைக்கப்பட்டன. இவ்வண்ணம் நெடுங் காலம் ஜீவித்திருக்கிற என்னால் ஸம்ஸாரமார்க்கங்கள் அநேகமாகப் பார்க்கப்பட்டும் அனுபவிக்கப்பட்டும் இருக்கின்றன. மீண்டும் எதைக் கேட்க விரும்புகிறாய்? தர்மத்தினின்றும் நழுவாதவனே! தர்மத்திலுள்ள ஸம்சயத்தினின்று விடுபடுதலின்பொருட்டு மீண் டும் வேறான என்னுடைய இந்த வசனத்தையும், ஸஹோதரர்க ளுடன்கூடக் கேட்டுத் தெரிந்துகொள். தார்மிகர்களுள் சிறந்த வனே! இந்த விஷயத்தில் தர்மமானது உன்னால் வேறு விதமாக அறியத்தக்கதன்று. அரசனே! தர்மத்தில் பற்றுள்ள மனிதன் இம்மையிலும் மறுமையிலும் ஸுகத்தை அடைந்து ஆனந்திக் கிறான். தோஷமற்றவனே! எந்த வசனத்தை நான் உரைப்பேனோ மங்களகரமான அந்த வசனத்தை நீ நன்கு அறிந்துகொள். ஒருபொழுதும் நீ பிராம்மணன் விஷயத்தில் அவமானம் செய்ய

1 'வினைப்பயன்கள் செய்யப்படுகின்ற வினைகளால் உறுதியாக வேரூன்றியிருந்தாலும் ஞானபலத்தினால் அழிகின்றன' என்பது வேறு பாடத்தின் பொருள்.

லாகாது. பிராம்மணன் கோபம் கொள்வனாகில் பிரதிஜ்ஞையினால் உலகங்களையும் நாசம் செய்வான்' என்று சொன்னார்.

கௌரவர்களுள் மிகச்சிறந்தவரும் நல்ல புத்தியுள்ளவரும் நிகரற்ற காந்தியுள்ளவருமான யுதிஷ்டிரமஹாராஜர், மார்க்கண்டேயருடைய வசனத்தைக் கேட்டு, அவரை நோக்கி, 'முனிவர்களுள் மிக மேன்மைபெற்றவரே! இதைக்கேட்டதனால், என்னால் எது செய்யத்தக்கதாகும்? ஜயிக்கப்பட்ட இந்த உலகமானது என்னால் எவ்வாறு ரக்ஷிக்கத்தக்கதாகும்? முனிவரே! பிரஜைகளைப் பரிபாலிக்கின்ற நான் எந்தத் தர்மத்தில் நிலைத்துநிற்க வேண்டும்? இந்த நிலைமையில் இருப்பவனான நான் என் தர்மத்தினின்று எவ்வாறு நழுவாமலிருப்பேன்?' என்று வினவ, மார்க்கண்டேயர், 'எல்லா பிராணிகளிடமும் காருண்யமுள்ளவனும் ஹிதத்தைச்செய்பவனும் அன்புள்ளவனும் அஸூயையில்லாதவனும் அன்பினால் குழந்தைகளைப்போலப் பிரஜைகளைப் பாதுகாப்பதில் பற்றுதலுள்ளவனுமாகத் தர்மத்தைச் செய். அதர்மத்தை விட்டுவிடு. தகப்பன் முதலிய முன்னோர்களை அடிக்கடி நினைப்பாயாக. நீ தவறுதலால் செய்துவிட்டதை நல்ல அறிவினால் பரிஹரித்துக்கொள். நீ கர்வத்தை அடையாதே. எப்பொழுதும் இன்சொல்லுள்ளவனாக இரு. பூமி முழுவதையும் ஜயித்து ஸந்தோஷமுள்ளவனாகவும் ஸுகமுள்ளவனாகவுமிருப்பாயாக. சென்றதும் வருவதுமான இந்தத் தர்மத்தை உனக்கு நான் நன்றாக உரைத்தேன். பூமியில் சென்றதும் வருவதுமான எதுவும் உன்னால் அறியப்படாததில்லை. அப்பா! ஆகையால், நீ இந்த வருத்தத்தை மனத்தில் பாராட்டாதே. அப்பா! அறிஞர்கள் காலத்தால் பீடிக்கப்பட்ட ராஜாவானாலும் மதிமயக்கம் அடையார். மிக்க தோள்வலிமையுள்ளவனே! ஸ்வர்க்கத்தில் வசிக்கின்ற எல்லாத் தேவர்களுக்கும் இக்காலமுண்டு. அப்பா! காலத்தால் தூண்டப்பட்டு பிரஜைகள் வேறுபாட்டை அடைகின்றனவல்லவா? பாபமற்றவனே! என்னால் சொல்லப்பட்ட இந்த விஷயத்தில் உனக்கு ஸந்தேகம் வேண்டாம். இந்த வசனத்தில் உனக்கு ஸந்தேகமுண்டாகுமானால் தர்மத்திற்கு அழிவேற்படும். பரதர்களுள் சிறந்தவனே! பிரஸித்தமாய்க் குரு கௌரவர்களுடைய வம்சத்தில் நீ பிறந்திருக்கிறாய். செய்கையினாலும் மனத்தினாலும் வாக்கினாலும் இவை எல்லாவற்றையும் நன்கு அனுஷ்டிப்பாயாக' என்று சொன்னார்.

யுதிஷ்டிரர், 'பிராம்மணோத்தமரே! பிரபுவே! கேட்க இன்பமாக உம்மால் உரைக்கப்பட்ட உம்முடைய கட்டளையை அவ்வாறே முயற்சியுடன் செய்வேன். பிராம்மணோத்தமரே! எனக்குப் பேராசையும் பயமும் மாத்ஸர்யமும் இல்லை. பிரபுவே! என்விஷயத்தில் உம்மால் சொல்லப்பட்ட ஆஜ்ஞையையும் செய்வேன்' என்று சொன்னார். அரசரே! கீர்த்தியுள்ளவரான அந்தப் பாண்டுநந்தனருடைய வசனத்தைக்கேட்டு, கிருஷ்ணனோடு சேர்ந்த பாண்டவர்கள் மிக்க மனக்களிப்பை அடைந்தார்கள். அங்குவந்திருந்த பிராம்மணச்ரேஷ்டர்களனைவரும் சிறந்த புத்தியுடையவரான மார்க்கண்டேயருடைய மங்களகரமான அப்படிப்பட்ட கதையைக்கேட்டுப் புராணகதைகளைச் சொல்லியதனால் ஆச்சர்யமடைந்தவர்களானார்கள்.

## நூற்றுத்தொண்ணூற்றைந்தாவது அத்யாயம்.

## மார்க்கண்டேயஸமாஸ்யாபர்வம். (தொடர்ச்சி.)

(மார்க்கண்டேயர் யுதிஷ்டிரருக்குத் தவளையின் மாஹாத்மியத்தைச் சொல்லத் தொடங்கியதும், பரீக்ஷித்தென்னுமரசன் பிரதிஜ்ஞையைச்செய்து தவளையின் மகளை மணந்ததும், அவன் பிரதிஜ்ஞை தவறவே, அந்தப்பெண் தண்ணீரில் முழுகிப்போனதும், அவளைத்தேடுவதற்காக அவன் தவளைகளைக் கொல்வித்ததும், தவளையரசன் அதனைத்தடுத்து அந்தப்பெண்ணை மறுபடியும் அவனுக்குக் கொடுத்ததும், சலன் தளன் இவர்களின் நடையும், வாமதேவர் மகிமையும்.)

பாண்டுநந்தனரான யுதிஷ்டிரர், மார்க்கண்டேயரை நோக்கி, 'மீண்டுமே பிராம்மணமகிமையைச் சொல்லக்கடவீர்' என்று வினவ, மார்க்கண்டேயர், 'அபூர்வமாயிருக்கிற இந்தப் பிராம்மணர்களுடைய சரித்திரத்தைக் கேள். அயோத்தியில் இக்ஷ்வாகுகுலத்தைத் தாங்குபவனான பரீக்ஷித் என்கிற ஓர் அரசன் இருந்தான். அவன் வேட்டையாடுவதற்குக் கானகம் சென்றான். அவன் தனித்தவனாகக் குதிரையேறி ஒருமிருகத்தைப் பின்தொடர்ந்தான். மிருகமானது அவனை நெடுந்தூரம் இழுத்துவிட்டது.

அவன் வழியில் ச்ரமமடைந்து பசியும் தாகமும் மேலிட்டவனாகி ஓரிடத்தில் கருமைநிறமுள்ளதும் நுழையமுடியாததுமான மரமடர்ந்த ஒரு தோப்பைக் கண்டான். அந்தத் தோப்பினுடைய நடுவில் மிகவும் அழகியதான ஒரு குளத்தைக் கண்டு குதிரையோடு கூடியவனாகவே இறங்கினான். பிறகு, அவன் களைதீர்ந்தவனாகக் குதிரைக்குத் தீனிக்காக எதிரில் தாமரைத்தண்டுகளைப் போட்டுவிட்டுப் புஷ்கரிணியின் கரையில் உட்கார்ந்தான். பிறகு, படுத்துக்கொண்டு இனிமையான ஒரு பாட்டைக் கேட்டான். அவன் அதைக்கேட்டு, 'இந்தக்காட்டில் மனுஷ்ய ஸஞ்சாரத்தை நான் காணவில்லை. இந்தப்பாட்டொலி யாருடையது?' என்று ஆலோசித்தான். பிறகு, சிறந்த அழகினால் காட்சிக்கினியவளும் புஷ்பங்களைப் பறிக்கின்றவளும் பாடுகின்றவளுமான ஒரு கன்னியைக் கண்டான். பிறகு, அவள் அரசனருகில் வந்தாள். அரசன் அவளைப் பார்த்து, 'கல்யாணி! நீ யாருக்குரியவள்? நீ யார்?' என்று கேட்டான். அவள் அரசனைப்பார்த்து, 'நான் கன்னிகை' என்று விடைகூறினாள். அரசன் அவளைப்பார்த்து, 'நான் உன்னை விரும்புகிறேன்' என்று சொன்னான். பிறகு, அந்தக் கன்னிகை அரசனை நோக்கி, 'நான் உம்மால் ஓர் உடன்பாட்டுடன் அடையத்தக்கவள். வேறுவிதத்தால் அடையத்தக்கவளல்லேன்' என்று கூறினாள். அரசன், '[1]உடன்பாடு என்ன?' என்று அவளைக் கேட்டான். கன்னிகை, 'எனக்குத் தண்ணீரைக் காண்பிக்கக்கூடாது' என்று இதனைச் சொன்னாள். அந்த அரசன் அவளைப்பார்த்து, 'அப்படியே ஆகட்டும்' என்று சொல்லிவிட்டு, அவளைச் சேர்ந்து அவளுடன்கூட அந்தக்காட்டில் இருந்தான். பிறகு, அரசன் அந்தக் காட்டிலேயே இருக்கையில் அந்தச்சேனை பின்தொடர்ந்துவந்து; கானகத்தில் தொடர்ச்சியான அடிச்சுவட்டைப் பார்த்துக்கொண்டு வந்து அரசனைச் சூழ்ந்து நின்றது. பிறகு, களைதீர்ந்த அரசன் துக்கமில்லாதவனாக அந்தப்பெண்ணுடன் பல்லக்கில் ஏறித் தன் நகரத்தைக்குறித்துச் சென்றான். தன் நகரை அடைந்து ஏகாந்தத்தில் அவளோடு கூடி மகிழ்ந்துகொண்டு ஒருவரையும் பாராமலிருந்தான்.

பிறகு, பிரதான மந்திரியானவன் அந்த அரசனுடைய அருகில் ஸஞ்சரிக்கிற தாதிகளைப்பார்த்து, 'நீங்கள் இங்கே என்ன செய்கிறீர்கள்?' என்று வினவினான். பிறகு, அந்தத்தாதிகள், 'நாங்கள்

1 வேறு பாடம்.

இந்த விஷயத்தை அபூர்வம்போலக் காண்கிறோம். இவ்விடத்தில்
ஜலமானது கொண்டுவரப்படுகிறதில்லை' என்று சொன்னார்கள்.
பிறகு, மந்திரி ஜலமில்லாததும் அதிகமான மரங்களுள்ளதும்,
ஏராளமான மலர்களும் கனிகளும் கிழங்குகளுமுள்ளதுமான
ஒரு காட்டை உண்டாக்கி, அதன் மத்தியில், பக்கங்களில் முத்து
வலைகளால் மூடப்பட்டதும் அமிர்தம்போன்ற தண்ணீருள்ளதும்
மறைவாயிருப்பதுமான ஒரு தடாகத்தைச் செய்வித்துத் தனிமை
யில் அரசனை அடைந்து, 'அரசனே! இந்த வனமானது நேர்த்தி
யானதும் தண்ணீரில்லாததுமாயிருக்கிறது. இங்கே இந்தப்பெண்
ணுடன்கூட நீ ஸுகமாகச் செல்லலாம்' என்று சொன்னான்.
அந்த அரசன், மந்திரியின் சொல்லால் மஹிஷியான அவளுடன்
கூடவே அந்த வனத்தில் நுழைந்தான். அவன் ஒரு ஸமயம் அழ
கிய அந்தக்காட்டில் அவளுடனே கூடிக் களித்திருந்தான். பிறகு,
பசியினாலும் தாகத்தாலும் களைத்து ஒரு முல்லைக்கொடிப்பந்தரைப்
பார்த்தான். அரசன் தன் காதலியுடன்கூட அதில் சென்று, நன்கு
அமைக்கப்பெற்றதும் பாசற்றதும் ஜலத்தால் நிறைந்திருப்பது
மான ஒரு குளத்தைக்கண்டான். அதைப்பார்த்துக்கொண்டே
அதன் கரையில் அந்தத் தேவியுடன்கூடவே உட்கார்ந்திருந்தான்.
பிறகு, அந்த அரசன் அந்தத் தேவியைப்பார்த்து, 'இந்தக் குளத்து
நீரில் இறங்கு' என்று சொன்னான். அவள் அந்த வார்த்தையைக்
கேட்டுக் குளத்திலிறங்கி முழுகிவிட்டாள்; மீண்டு தண்ணீரிலி
ருந்து எழுந்திருக்கவில்லை. அந்த அரசன் அவளைத்தேடியும் காண
வில்லை. பிறகு, அரசன் குளத்து ஜலத்தை மிச்சமின்றி வடியச்
செய்து ஒரு வளையினுடைய வாயில் ஒரு தவளையைக்கண்டு கோபங்
கொண்டு, 'உலகத்திலுள்ள எல்லாத் தவளைகளையும் கொல்லவேண்
டும். எவன் என்னிடத்தில் காரியத்தைக் கருதுகிறானோ அவன்
மரித்த தவளைகளைக் காணிக்கையாகக் கொண்டு என்னிடம் வர
வேண்டும்' என்று கட்டளையிட்டான். பிறகு, கோரமான மண்டுக
வதமானது செய்யப்படும்போது எல்லாத் திசைகளிலுமுள்ள
தவளைகளையும் பயமடைந்தன. அவைகள் பயந்தவைகளாகி
மண்டுகராஜனிடத்திற்போய் நடந்ததை தெரிவித்தன.

பிறகு, மண்டுகராஜன் தவசிவேடம் தரித்து அரசனிடம்
வந்தது. அது அவனை அணுகி, 'அரசனே! கோபத்துக்கு நீ வசப்
படாதே. அனுக்ரஹம் செய்வாயாக. நிரபராதிகளான தவளைகளை
நீ கொல்லுதல் தகாது. இந்த விஷயத்தில் இரண்டு ச்லோகங்கள்

இருக்கின்றன. (அவற்றின் பொருள்,) 'தவளைகளை நீ கொல்லாதே. தர்மத்தினின்றும் நழுவாதவனே! கோபத்தை நீ நன்கு அடக்கிக் கொள். 1 தர்மாதர்மங்களை அறியாத ஜனங்களுடைய செல்வச் சிறப்பும் தவச்சிறப்பும் அழிந்துபோகின்றன. உறுதிசெய்துகொள். நீ இந்தத் தவளைகளை மரணத்தை அடைவித்தலால் கோபந்தணிய மாட்டாய். அதர்மத்தை நீ செய்யாதே. தவளைகளைக்கொல்லு வதனால் உனக்கு யாதுபயன்?' (என்பது) என்றுசொல்லிற்று. இவ்வாறு சொல்லுகின்ற அந்தமண்டூகராஜனைப் பார்த்து இஷ்ட மான மனைவியை விட்டுப் பிரிந்ததனாலுண்டான சோகம் நிறைந்த மனத்தையுடைய அரசன், 'அதை நான் பொறுக்கமாட்டேன். இந்தத் தவளைகளைக் கொல்வேன். கெட்ட எண்ணமுள்ள இந்தத் தவளைகளால் என் காதலியானவள் பக்ஷிக்கப்பட்டாள். தவளைகளை எல்லாவிதத்தாலுமே நான் கொல்லவேண்டும். கற்றறிந்தவனே! என்னை நீ தடுக்கக் கூடாது' என்று சொன்னான். அந்தத் தவளை யானது அந்தவாக்கியத்தைக் கேட்டறிந்து, பொறிகளும் மனமுங் கலங்கி, அரசனைப்பார்த்து, 'அரசனே! தயைசெய்வாயாக. நான் ஆயுவென்கிற பெயர்பெற்ற மண்டூகராஜன். உனக்கு மனைவியாக இருந்தவள் ஸுசோபனை என்று பெயர்பெற்ற என்னுடைய புதல்வி. இது அவளுடைய கெட்ட நடையினால் ஏற்பட்டது. அவளால் இதற்குமுன் பல அரசர்கள் ஏமாற்றப்பட்டிருக்கிறார்கள்' என்று சொல்லிற்று. அரசன் அதனைப்பார்த்து, 'உன்புத்திரியான அவளை நான் விரும்புகிறேன். எனக்கு அவளை நீ கொடுக்க வேண்டும்' என்று சொன்னான்.

பிறகு, பிதாவான மண்டூகராஜன் அந்தப் பெண்ணை அரச னுக்குக்கொடுத்து, அந்தப்பெண்ணைப்பார்த்து, 'நீ இந்த அரச னுக்குப் பணிவிடைசெய்' என்றும் சொல்லியது. அந்தத் தவளை இவ்வண்ணங் கூறிக் கோபங்கொண்டு அந்தப்பெண் ணைப் பார்த்து, 'உன்னுடைய பொய்யான ஒழுக்கத்தினால் பல அரசர் வஞ்சிக்கப்பட்டார்களாதலால் பிராம்மணர்களுக்குத் தீங்கு செய்கின்ற குழந்தைகள் உனக்கு உண்டாகும்' என்று சாபமிட்டது. அந்த அரசன் அவளிடத்தில் சேர்க்கையின்பத் தால் கட்டுப்பட்ட மனமுள்ளவனாகி மூவுலகங்களுடைய ஆட்சி யையும் அடைந்ததுபோல அவளை அடைந்து ஆனந்தக்கண்ணீ ரால் தடுமாறுகின்ற சொல்லுடன் மண்டூகராஜனை நமஸ்காரம்

1 வேறுபாடம்.

செய்து பூஜித்து, 'நான் அநுக்ரஹிக்கப்பட்டேன்' என்று சொன்னான். அந்த மண்டூகராஜன் பெண்ணினிடம் விடைபெற்று, வந்தபடியே சென்றது.

பிறகு, சிறிதுகாலம் செல்லவே, அந்த அரசனுக்கு அவளிடத்தில் சலன், தலன், பலன் என்கிற மூன்று குமாரர்கள் உண்டானார்கள். பிறகு, தகப்பன், அவர்களுள் மூத்தவனான சலனுக்குத் தக்கதகாலத்தில் ராஜ்யத்தில் பட்டாபிஷேகம் செய்வித்துத் தவத்தில் நிலைநிறுத்தப்பட்ட மனத்துடன் கானகம் சென்றான். பிறகு, ஒருசமயம் சலன் வேட்டையாடும் தருணத்தில் ஒரு மானை அடைந்து ரதத்தால் அதைப் பின் தொடர்ந்து ஓடினான். ஸாரதியைப்பார்த்து, 'நான் மானை அடையும்படி விரைவாக ரதத்தை நடத்து' என்றும் சொன்னான். அவ்வாறு சொல்லப்பட்ட ஸாரதி, அரசனை நோக்கி, 'இந்த மானை நீர் தொடரவேண்டாம். உம்முடைய ரதத்தில் பூட்டப்பட்டிருக்கிற இரண்டு குதிரைகளும் வாமதேவருடைய [1] குதிரைகளாக இருந்தாலும், நீர் இந்த மிருகத்தைப்பிடிப்பது ஸாத்தியப் படாது' என்று கூறினான். பிறகு, அரசன் ஸாரதியைப் பார்த்து, 'வாமதேவருடைய குதிரைகளைப்பற்றி எனக்குச் சொல். உன்னை நான் கேட்கிறேன்' என்று சொன்னான். இவ்வாறு கூறப்பட்ட ஸாரதியானவன், அரசனுக்குப் பயந்தும் வாமதேவருடைய சாபத்துக்குப் பயந்தும், 'அரசரே! வாமதேவருடைய இந்தக் குதிரைகளும் மனோவேகம்போன்ற வேகமுள்ளவைகள்' என்று சொன்னான். பிறகு, அரசன் இப்படிச் சொல்லுகின்ற பாகனைப் பார்த்து, 'வாமதேவாச்ரமத்தைக் குறித்துச் செல்' என்று சொன்னான். அந்த அரசன் வாமதேவாச்ரமத்தை அடைந்து அந்த ரிஷியைப்பார்த்து, 'பகவானே! என்னால் அடிக்கப்பட்ட மான் ஓடுகிறது. உம்முடைய குதிரைகளைக் கொடுத்து என்னைக் கௌரவப்படுத்தக்கடவீர்' என்று சொன்னான். ரிஷியானவர் அந்த அரசனைப்பார்த்து, 'உனக்கு என் இரண்டு குதிரைகளையும் கொடுப்பேன். காரியத்தை முடித்துக்கொண்டு நீ இரண்டு குதிரைகளையும் சீக்கிரமாக எனக்குத் திருப்பிக்கொடுத்துவிட வேண்டும்' என்று கூறினார். அந்த அரசன், அக்குதிரைகளை வாங்கிக்கொண்டு, ரிஷியினிடம் விடைபெற்றுச் சென்றான். குதிரைகள் பூட்டப்பட்ட ரதத்துடன் மானைநோக்கிச் செல்லுகின்ற

1 'வாம்யங்கள்' என்பது மூலம்.

அரசன் ஸூதனைப்பார்த்து, 'ஸூதா! இந்த இரண்டு அஸ்வரத்தினங்களும் நம்மிருவருக்கே தகுந்தவை. இவைகள் வாமதேவருக்குத் திருப்பிக்கொடுக்கத்தக்கவைகளல்ல' என்று சொல்லிவிட்டு, மானை அடைந்து, தன் பட்டணத்திற்குவந்து அந்த இரண்டு குதிரைகளையும் அந்தப்புரத்தில் கட்டச்செய்தான்.

பிறகு, ரிஷியானவர், 'யௌவனமுள்ள ராஜபுத்திரனானவன் மங்களகரமான குதிரைகளை அடைந்து மகிழ்கிறான். என்னுடைய குதிரைகளைத் திருப்பிக் கொடுக்கிறானில்லை. அந்தோ! கஷ்டம்!" என்று ஆலோசித்தார். அவர் மனத்தினால் நன்கு ஆலோசித்து ஒருமாதம் நிறைந்தவுடன், ஒரு சிஷ்யனைப்பார்த்து, 'ஆத்ரேய! போ; 'உன்காரியம் நிறைவேறியிருந்தால் உபாத்தியாயருடையகுதிரைகளிரண்டையும் திருப்பிக்கொடுக்கக்கடவாய்' என்று அரசனிடம் சொல்' என்றார். அந்தச்சிஷ்யன் அந்த அரசனை அடைந்து வாமதேவருடைய வசனத்தை அப்படியே சொன்னான். அரசன் அந்தச் சிஷ்யனைப்பார்த்து, 'இந்தவாகனம் அரசர்களுக்குரியது. பிராம்மணர்கள் இவ்விதமான ரத்னங்களுக்குத் தகுதியற்றவர்கள். பிராம்மணர்களுக்குக் குதிரைகளாலே செய்யத்தக்க காரியம் ஒன்றுமில்லை; நல்லது; போகலாம்' என்று மறுமொழி சொன்னான். அந்தச்சிஷ்யன் போய் இந்தவசனத்தை உபாத்தியாயரிடம் உரைத்தான். அப்ரியமான அந்தச்சொல்லைக்கேட்டு, வாமதேவர் கோபம் நிறைந்த மனத்துடன் தாமே அரசனிடம்போய்க் குதிரைகளைக்கேட்டார். அரசன் கொடுக்கவில்லை. வாமதேவர், 'அரசனே! என் இரண்டு குதிரைகளையும் கொடு. செய்ய முடியாத காரியம் உனக்கு இந்தக்குதிரைகளால் செய்யப்பட்டதன்றோ? பிராம்மணர்களுக்கும் க்ஷத்திரியர்களுக்கும் உரிய முறைமையை மீறிச் செல்லுகிற உன்னை வருணன் கோரமான பாசங்களால் கொல்லவேண்டாம்' என்று சொன்னார். அரசன், 'வாமதேவரே! நன்கு தேர்ந்தெடுக்கப்பட்டவைகளும் நன்றாகப் பழக்கப்பட்டவைகளுமான வண்டியிழுக்கும் காளைகள் இரண்டு இருக்கின்றன. இவை பிராம்மணர்களுக்கு வாகனம். மஹரிஷியே! அந்த இரண்டுகாளைகளால் எவ்விடத்துக்குப் போக விருப்பமோ அவ்விடத்திற்கு நீர் செல்லும். உம்மைப் போன்ற பிராம்மணரை வேதங்கள் நன்கு காக்கின்றன' என்று சொன்னான். வாமதேவர், 'அரசனே! பரலோகத்தில் என்னைப் போன்றவரை வேதங்கள் காக்கின்றன. அரசனே! இவ்வுலகிலோ எனக்கும் என்னைப்போலிருக்கிற மற்றவர்களுக்கும் இந்தக் குதிரை

வாகனம்' என்றுசொன்னார். அரசன், 'உம்மை நாலு கழுதைகள் சுமக்கட்டும்; நாலு கோவேறுகழுதைகள் சுமக்கட்டும். காற்றுப் போலப் பறக்கின்ற நாலு குதிரைகள் சுமக்கட்டும். அவைகளால் நீர் போம். இந்தக் குதிரைகள் க்ஷத்திரியனுக்கே தக்கவை. ஆகையால், இவ்விரண்டு குதிரைகளும் என்னுடையவையே யென்றும் உம்முடையவையல்லவென்றும் தெரிந்துகொள்வீராக' என்று சொன்னான். வாமதேவர், 'அரசனே! நீ இப்பொழுது பிராம்மணனுடையபொருளைக்கொண்டு பிழைக்கிறாய். இதனைத் தீமையை விளைவிக்கிற செய்கையென்று சொல்லுகிறார்கள். இரும்புமயமாக இருப்பவர்களும் கோரமான ரூபமுள்ளவர்களும் பருத்தவர்களும் மிக்கபயங்கரர்களுமான நான்கு ராக்ஷஸர்கள் என்னால் ஏவப்பட்டவர்களும் உன்னுடைய வதத்தை விரும்புகின்றவர்களும் கூர்மையான சூலம் பிடித்தவர்களுமாகி உன்னை நான்கு துண்டாகவெட்டி நான்கு திசைகளிலும் எறியக்கடவர்' என்று சொன்னார். அரசன், 'வாமதேவா! எவர்கள் உன்னை வாக்கினாலும் மனத்தினாலும் செய்கையினாலும் என்னைக்கொல்லமுயன்ற பிராம்மணனென்று அறிகிறார்களோ அவர்கள் என்சொல்லால் ஏவப்பட்டவர்களாகவும் கூர்மையான சூலங்களையும் கத்திகளையும் கையில் கொண்டவர்களாகவும் சிஷ்யர்களோடு கூடின உன்னையே இங்கே அடித்துத்தள்ளக்கடவர்' என்று சொன்னான். வாமதேவர், 'அரசனே! நீ திருப்பிக்கொடுத்துவிடுகிறேனென்று என்னிடத்தில் ஒப்புக்கொண்டு என்னுடைய இரண்டு குதிரைகளையும் வாங்கிக்கொண்டாய். உனக்கு உயிரோடிருக்க விருப்பமிருந்தால் என்னுடைய இரண்டு குதிரைகளையும் விரைவாகக் கொடுத்துவிடு' என்று சொன்னார். அரசன், 'பிராம்மணர்களுக்கு வேட்டையானது ஏற்படுத்தப்படவில்லை. பொய் சொல்லுகிறாயானாலும் உன்னை நான் தண்டிக்கமாட்டேன். பிராம்மணரே! [1] இன்று முதல் உன்னுடைய கட்டளை முழுமையுமே மனத்தில் வைத்து அப்படியே புண்யலோகத்தை அடையக்கடவேன்' என்று சொன்னான். வாமதேவர், 'அரசனே! பிராம்மணர்களுக்கு வாக்கினாலாவது மனத்தினாலாவது செய்கையினாலாவது தண்டனைகள் இல்லை. கற்றறிந்த எவன் இப்படிப்பட்ட பிராம்மண ஜாதியைத் தவத்துடன் அனுஸரித்து ஜீவிக்கிறானோ அவன் அதனால் சிறப்புற்றவனாகிறானன்றோ?' என்று சொன்னார். அரசனே! வாமதேவ

1 அரசன் பிராம்மணனைப் பரிஹஸித்துச் சொல்லியது.

ரால் இவ்வாறு சொல்லப்பட்டவுடன், பயங்கரமான உருவமுள்ள ராக்ஷஸர்கள் தோன்றினார்கள். சூலங்களைக் கையில்கொண்ட அந்த ராக்ஷஸர்களால் கொல்லப்படுகின்ற அந்த அரசன், அப்பொழுது, 'இக்ஷ்வாகு குலத்தில் பிறந்தவர்களும் பூமியில் இன்னும் எனக்கு உட்பட்ட மற்ற அரசர்களும் என்னை விட்டு விட்டாலும் வாமதேவருடைய இரண்டு வாமிக்குதிரைகளையும் நான் கொடுக்க மாட்டேன். இப்படிப்பட்டவர்கள் தார்மிகர்களாகமாட்டார்கள்' என்றுசொன்னான். அந்த அரசன் இவ்வாறு சொல்லிக்கொண்டே ராக்ஷஸர்களால் கொல்லப்பட்டு விரைவில் பூமியில் விழுந்தான்.

பிறகு, இக்ஷ்வாகு குலத்தவர்கள் அரசன் வீழ்த்தப்பட்டதை அறிந்து, தளனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்தார்கள். அச்சமயத்தில் அந்தப் பிராம்மணரான வாமதேவர் அந்த ராஜ்யத்திற்சென்று அரசனான தளனைப் பார்த்து, 'அரசனே! எல்லாத் தர்மங்களிலும் பிராம்மணர்களுக்கு இவ்வாறு தானம் செய்யவேண்டுமென்பது காணப்பட்டிருக்கிறது. அரசனே! நீ அதர்மத்தினின்று பயத்தை அடைகிறாயானால் என்னுடைய இரண்டுகுதிரைகளையும் சீக்ரமாக இப்பொழுதே கொடுத்துவிடு' என்கிற வசனத்தைக் கூறினார். அந்த அரசன், வாமதேவருடைய இந்த வாக்கியத்தைக் கேட்டு, கோபத்தால் ஸாரதியைப் பார்த்து, 'ஸாரதியே! எந்தப் பாணத்தால் வாமதேவன் அடிக்கப்பட்டுத் துன்பமுற்ற உருவமுள்ளவனும் நாய்களால் நன்றாகத் தின்னப்படுகின்றவனுமாகிப் பூமியில் படுப்பானோ அப்படிப்பட்ட சித்ரமான உருவமுள்ளதும் விஷத்தால் பூசப்பட்டதும் நன்றாகத் தீட்டப்பட்டதுமான ஒரு பாணத்தைக் கொண்டுவா' என்று சொன்னான். வாமதேவர், 'அரசனே! உனக்கு என் மனைவியினிடத்தில் ச்யேனஜித் என்கிற புத்திரன் பிறந்து பத்துவயதுள்ளவனாக இருக்கிறானென்பதை நான் அறிவேன். என் வசனத்தால் ஏவப்பட்டவனாகி நீ பிரியமான அந்தப் புத்திரனைக் கோரரூபமுள்ள பாணங்களால் விரைவாகக் கொல்' என்று சொன்னார். அரசனே! வாமதேவரால் இவ்வண்ணம் சொல்லப்பட்டவுடன், தளனால் விடப்பட்டதும் தீவிரமான தேஜஸுள்ளதுமான அந்தப் பாணமானது அந்தப்புரத்தில் பிரவேசித்து ராஜபுத்திரனைக் கொன்றுவிட்டது. அங்கே தளன் அதைக் கேட்டு, 'இக்ஷ்வாகுகுலத்தில் பிறந்தவர்களே! உத்ஸாகத்துடன் உங்களுக்குப்பிரியத்தைச்செய்கிறேன். இப்பொழுது இந்தப்பிராம்மணனை அடித்துக்கொல்லுகிறேன். கூர்மையானதும்

ஒளியுள்ளதுமான வேறொரு பாணம் கொண்டுவர வேண்டும். மன்னவர்களே! இப்பொழுது என் திறமையைப் பாருங்கள்' என்கிற வாக்கியத்தை உரைத்தான். வாமதேவர், 'அரசனே! நீ கோரரூபமுள்ளதும் விஷத்தால் பூசப்பட்டதுமான இந்தப் பாணத்தை என்னைக் கொல்லவேண்டுமென்கிற எண்ணத்தால் வில்லில்பூட்டுகிறாய். நீ இந்த அம்பை இழுத்து என்மீது விடுவதற்காவது நாண்கயிற்றில் பூட்டுவதற்காவது சக்தியுள்ளவனாக மாட்டாய்' என்று சொன்னார். அரசன், 'இக்ஷ்வாகுகுலத்தில் பிறந்தவர்களே! அசைய முடியாமல் செய்யப்பட்ட என்னைப் பாருங்கள். இந்த நான் பாணத்தைப் பிரயோகிப்பதற்குச் சக்தியற்றவனாக இருக்கிறேன்; இவருடைய நாசத்தைச் செய்வதற்கு ஸாமர்த்தியமில்லாதவனாக இருக்கிறேன். வாமதேவரே நீண்ட ஆயுளுடன் வாழட்டும்' என்று சொன்னான். வாமதேவர், 'அரசனே! பாணத்தினால் இந்த ராஜமஹிஷியை அடிப்பாயாக. பிறகு, பிரம்மஹத்தியைச் செய்ய விரும்பியதாலுண்டான பாவத்தினின்று நீ விடுபடுவாய்' என்று சொன்னார். பிறகு, அரசன் அவ்வாறே செய்தான். பிறகு, ராஜபுத்ரியானவள் முனிவரைப் பார்த்து, 'வாமதேவரே! பிராம்மணரே! நான் நல்ல வழியில் மனத்தைச் செலுத்தினவளாகவும் கொடியவனான இந்தக் கணவனுக்கு நாள்தோறும் நல்வார்த்தைகளைச் சொல்லுகின்றவளாகவும். பிராம்மணர்களை ஸேவிக்க விரும்புகிறவளாகவுமிருந்தேனாதலால், புண்யலோகத்தை அடையக்கடவேன்' என்று சொன்னாள். வாமதேவர், 'மங்களகரமான கண்களுள்ளவளே! உன்னால் ராஜகுலம் காக்கப்பட்டது. ஒப்பற்ற வரத்தை என்னிடமிருந்து கேட்டுக்கொள். நான் வரத்தை உனக்குக் கொடுக்கக் கடமைப் பட்டிருக்கிறேன். ராஜபுத்திரியே! இகழத்தகாதவளே! இந்தச் சொந்தஜனங்களையும் மிகப்பெரிதாயிருக்கிற இக்ஷ்வாகு ராஜ்யத்தையும் ஆளக்கடவாய்' என்று சொன்னார். ராஜபுத்திரி, 'பகவானே! இப்பொழுது இந்த என் கணவன் பாவத்தினின்று விடுபடக் கடவன். இவ்வண்ணம் வரத்தை வேண்டுகிறேன். பிராம்மணோத்தமரே! நான் புத்திரர்களோடும் பந்துக்களோடுங்கூட ஸுகமாக ஜீவித்திருக்கவேண்டும். இந்த வரத்தையும் நான் வேண்டுகிறேன்' என்று சொன்னாள். கௌரவர்களுள் சிறந்தவீரனே! அந்த முனிவர் ராஜபுத்திரியினுடைய சொல்லைக்கேட்டு, 'அப்படியே ஆகட்டும்' என்று சொன்னார். பிறகு, அந்த அரசன் ஸந்தோஷ

முள்ளவனானான். நன்றாக வந்தனம்பண்ணி இரண்டுகுதிரைகளையும் அந்த மஹரிஷிக்குக் கொடுத்துவிட்டான்' என்று கூறினர்.

## நூற்றுத்தொண்ணூற்றாறாவது அத்யாயம்.

## மார்க்கண்டேயஸமாஸ்யாபர்வம். (தொடர்ச்சி.)

(மார்க்கண்டேயர் ஸுகத்தையும் துக்கத்தையும் நிரூபிப்பதான பகமுனிவருக்கும் இந்திரனுக்கும் நடந்த ஸம்வாதத்தைக்கூறியது.)

ரிஷிகளும் பிராம்மணர்களும் யுதிஷ்டிரரும் மார்க்கண்டேயரைப்பார்த்து, 'எந்தக்காரணத்தினால் பகனென்கிற ரிஷியானவர் தீர்க்காயுளுள்ளவரானார்?' என்று கேட்டார்கள். அரசரே! மஹாதபஸ்வியான மார்க்கண்டேயரோ அவர்களனைவரையும் பார்த்து, 'பகரிஷியானவர், தீர்க்காயுளுடையவரே. இதில் ஆராய்ச்சி வேண்டாம்' என்று மறுமொழி உரைத்தார். பாரதரே! இந்தவசனத்தைக் கேட்டு, குந்தியின் புதல்வரும் தர்மத்தால் பிரகாசிப்பவருமான யுதிஷ்டிரர் பிராதாக்களோடு மார்க்கண்டேயரைப்பார்த்து, 'மஹரிஷியே! பகர் தால்ப்யர் என்ற அந்த இரண்டு ரிஷிகளும் மஹாத்மாக்களென்றும் சிரஞ்சீவிகளென்றும் தேவராஜனுக்கு மித்திரர்களென்றும் உலகத்திலுள்ள ஜனங்களால் பூஜிக்கப்பட்டவர்களென்றும் கேள்விப்படுகிறோம். பகவானே! ஸுகதுக்கங்களோடு சேர்ந்ததும், தேவரீரால் உண்மையாகப் பார்க்கப்பட்டதுமான பகருக்கும் இந்திரனுக்கும் நேர்ந்த இந்தஸங்கதியை நான் கேட்கவிரும்புகிறேன்' என்று வினவினர்.

மார்க்கண்டேயர், 'அரசனே! மயிர்ச்சிலிர்த்தலை உண்டுபண்ணுகிற தேவாஸுரயுத்தம் முடிந்தவுடனே, இந்திரன் மூவுலகங்களுக்கும் அதிபதியானான். மேகம் நன்குபொழியவே, விளைபொருள்கள் மிகுதியாயின. பிரஜைகள் வியாதியில்லாதவர்களாகவும், நல்ல தர்மத்தில் நிலைபெற்றவர்களாகவும், தர்மத்திலேயே அதிகப்பற்றுள்ளவர்களாகவும் இருந்தார்கள். ஜனங்களெல்லாம் ஸந்தோஷமுள்ளவர்களாகவும், ஸ்வதர்மங்களில் நிலைபெற்றவர்களாகவுமிருந்தார்கள். பிறகு, பலனைக்கொன்றவனான இந்திரன் எல்லாப்ரஜைகளும் ஸந்தோஷத்துடனிருப்பதைக்கண்டு களித்தான். வேந்தே! பிறகு, ஸந்தோஷமுள்ளவனும் தேவராஜனுமான இந்திரன், ஐராவதத்தின்மீது ஏறிக்கொண்டு, ஸந்தோஷமடைந்திருக்

கிற பிரஜைகளையும், பலவிதமான ஆஶ்ரமங்களையும், மங்களகரமான பலவிதநதிகளையும், செல்வம்நிறைந்தபட்டணங்களையும், கிராமங்களையும், தேசங்களையும், பிரஜைகளைப் பாதுகாப்பதில் ஸமர்த்தர்களும் தர்மத்தை அனுஷ்டிக்கிறவர்களுமான அரசர்களையும், கிணறுகளையும், தண்ணீர்ப்பந்தல்களையும், வாவிகளையும், பலவித வைதிகாசாரத்துடன் கூடின பிராம்மணோத்தமர்களாலே அடையப்பட்ட தடாகங்களையும், ஸரஸுகளையும் பார்த்தான். அரசனே! தேவராஜனான இந்திரன் ஐராவதத்தினின்று அழகிய பூமியிலிறங்கி, அனேக மரங்களால் அடர்ந்ததும் அழகியதும் மங்களகரமாயிருப்பதுமான அப்படிப்பட்ட தேசத்தில் அழகியதான கிழக்குத்திசையில் ஸமுத்ரத்திற்கருகில் அழகியதும் மிருகங்களாலும் பக்ஷிகளாலும் அடையப்பட்டதுமான ஆஶ்ரமத்தையும் அழகிய அந்த ஆஶ்ரமத்தில் பகமஹர்ஷியையும் கண்டான். பகரோ தேவேந்திரனைப் பார்த்து மனமகிழ்ச்சி மிகுந்தவரானார். பிறகு, பாதத்தீர்த்தத்தையும் ஆஸனத்துக்குரியதையும் கொடுத்துக் கனிகளாலும் கிழங்குகளாலும் பூஜித்தார்.

பிறகு, ஸுகமாக வீற்றிருப்பவனும் வரங்களைக்கொடுப்பவனும் பலனையழித்தவனும் தேவர்களுக்கு ஈச்வரனுமான இந்திரன் பகரிஷியைப்பார்த்து, 'முனிவரே! தோஷமற்றவரே! தேவரீர் பிறந்து லக்ஷம்வருஷங்கள் சென்றுவிட்டன. பிராம்மணரே! சிரஞ்சீவிகளுக்கு என்ன துக்கம் ஸம்பவிக்கிறது? அதை எனக்குச் சொல்வீராக' என்று வினவ, பகர், 'அன்பில்லாத மனிதர்களோடு வஸிப்பதும் அன்புள்ளவர்களை விட்டுப்பிரிவதும் துஷ்டர்களோடு சேர்க்கையும் சிரஞ்சீவிகளுக்குத் துக்கம். இவ்வுலகத்தில் மக்கள் மனைவியரின் மரணமும் உறவினர் நண்பர்களுடைய மரணமும் பிறருக்கு வசப்பட்டிருத்தலும் துக்கம். அவற்றைக்காட்டிலும் அதிகதுக்கம் என்ன இருக்கிறது? பொருளற்ற மனிதன் பிறரால் மிக அவமதிக்கப்படுகிறான். உலகங்களில் இதைவிட வேறொன்றும் அதிகதுக்கமென்றொன்று எனக்குத் தோன்றுகிறது. சிரஞ்சீவிகள் இழிகுலத்தோர்களுடைய குலத்தில் (பிரஜைகளுடைய) அபிவிருத்தியையும் உயர்குலத்தோர்களுடைய குலத்தில் நாசத்தையும் (மனைவிமக்கள் முதலியோருடன்) சேர்க்கையையும் பிரிவையும் பார்க்கிறார்கள். தேவனே! நூறுயாகங்கள் செய்தவனே! குலத்தால் இழிந்தவர்களும் செல்வத்தால் மட்டும் உயர்ந்தவர்களுமாயிருப்பவர்களுக்கு எப்படி குலத்தால் உயர்வு

ஏற்படுகிறதென்னும் இது உனக்கு நேரில் தெரிந்ததே. தேவர்களும் தானவர்களும் கந்தர்வர்களும் மனிதர்களும் உரகர்களும் ராக்ஷஸர்களும் மாறுதலை அடைகிறார்கள். அதைவிட அதிகதுக்கமென்ன இருக்கிறது? நல்லகுலத்தில் பிறந்தவர்கள் இழிகுலத்தில் பிறந்தவர்களுக்கு வசப்பட்டு அவர்களைப்பின்பற்றித் துன்புறுத்தப்படுகிறார்கள். தனிகர்களால் தரித்திரர்கள் அவமதிக்கப்படுகிறார்கள். அதைவிட அதிகதுக்கம் என்ன இருக்கிறது? உலகத்தில் இந்த மாறுதலானது மிக விஸ்தாரமாகக் காணப்படுகிறது. ஞானமில்லாதவர்கள் ஸந்தோஷிக்கிறார்கள். கற்றறிந்த மேதாவிகள் கிலேசத்தை அனுபவிக்கிறார்கள். இவ்வுலகத்தில் மானிடப்பிறவியானது பல துக்கங்களோடும் கிலேசங்களோடும் கூடியதாகக் காணப்படுகிறது' என்று கூறினர்.

இந்திரன், 'மகாபாக்யமுள்ளவரே! தேவரிஷிகளுடைய கூட்டங்களால் அடையப்பட்டவரே! பிராம்மணரே! சிரஞ்சீவிகளுக்கு ஏது ஸுகம்? மறுபடியுமே அதனை எனக்குச்சொல்வீராக' என்று வினவ, பகர், 'எவன் துஷ்டர்களான மித்ரர்களை அடையாமல் தன் வீட்டில் பகலின் எட்டாவது பாகத்திலாவது பன்னிரண்டாவது பாகத்திலாவது கீரையைமட்டுமாயினும் சமைத்துப் புஜிக்கிறானோ அவனுக்கு அதைவிட அதிக ஸுகம் என்ன இருக்கிறது? இந்திரனே! எந்தமனிதன் விஷயத்தில் நாட்கள் எண்ணப்படுகிறதில்லையோ எவனைப் பெருந்தீனிக்காரனென்று சொல்லுகிறதில்லையோ, தன் வீட்டில் கீரையையாவது பக்குவம் செய்து புஜிக்கிற அவனுக்கே ஸுகம். வேறு ஒருவனை அடுக்காமல் தன் திறமையாலேயே ஸம்பாதிக்கப்பட்ட பழத்தையாவது கீரையையாவது தன் வீட்டில் கௌரவத்துடன் புசிப்பது மிகச்சிறந்தது. அயலானுடைய வீட்டில் புசிப்பவனும் நித்யம் பிறரால் அவமதிக்கப்பட்டவனுமான மனிதனுக்கு ஆகாரமானது சிறந்ததாக இருந்தாலும் மேன்மையுள்ளதாகாது. ஆதலால், எந்தமனிதன் நாய்போலப்பேராசையுள்ளவனாய்ப் பிறருடைய அன்னத்தைப் புஜிக்கவிரும்புகிறானோ, அற்பனும் மந்தேடனுமான அவனுடைய அந்தப்போஜனமானது நிந்திக்கத்தக்கதென்னும் இது பெரியோர்களுடைய எண்ணம். எந்தப்பிராம்மணோத்தமன் அதிதிகளுக்கும் வேலைக்காரர்களுக்கும் பித்ருக்களுக்கும் கொடுத்து மிகுந்த அன்னங்களைப் புஜிக்கிறானோ அவனுக்கு அதைக்காட்டிலும் சிறந்த ஸுகம் என்ன இருக்கிறது? மஹேந்திரனே! எவன் அதிதிகளுக்குத் தினந்தோறும் அன்ன

மிட்டு அந்தமிச்சத்தையே புஜிக்கிறானோ அவனுக்கு அந்த ஆகாரத்தைக்காட்டிலும் மிக்க ருசியுள்ளதும் பரிசுத்தியுள்ளதும் வேறொன்றுமில்லை. (அதிதியான) பிராம்மணன் எத்தனை சோற்றுருண்டைகளைச் சாப்பிடுகிறானோ அத்தனை ஆயிரம் பசுக்களைத் தானம் செய்த பலனை அன்னதாதா அடைகிறான். (அவனால்) யௌவன காலத்தில் செய்யப்பட்ட பாவமனைத்தும் நிச்சயமாக நாசம் அடைகிறது. போஜனம் செய்து தக்ஷிணை பெற்றுக் கொண்ட பிராம்மணனுடைய கையிலுள்ள தீர்த்தத்தால் அன்னமிட்டவன் தன்னைப் புரோக்ஷித்துக்கொண்டால் அவன் ஒரு நொடியினுள் அப்படிப்பட்ட பாவங்களைத் தாண்டுகிறான்' என்றார். தேவேந்திரன் பகரோடுகூட இந்தக் கதைகளையும் மங்களகரமான மற்றும் பல கதைகளையும் பேசிக்கொண்டிருந்துவிட்டு அவரிடம் விடைபெற்றுக்கொண்டு ஸ்வர்க்கலோகம் சென்றான்' என்று கூறினார்.

## நூற்றுத்தொண்ணூற்றேழாவது அத்யாயம்.

## மார்க்கண்டேயஸமாஸ்யாபர்வம். (தொடர்ச்சி.)

(மார்க்கண்டேயர் க்ஷத்திரியனுடைய மஹிமையை வெளிப் படுத்துகிற சிபியினுடைய சரித்திரத்தைக் கூறுவது.)

பிறகு, பாண்டவர்கள் மீண்டும் மார்க்கண்டேயரைப் பார்த்து, 'உம்மால் பிராம்மண மஹிமை கூறப்பட்டது. அரசர்களுடைய மஹிமையை இப்பொழுது நாங்கள் கேட்க விரும்புகிறோம்' என்று வினவினார்கள். மார்க்கண்டேய மஹரிஷியானவர், அவர்களைப்பார்த்து, 'இப்பொழுது அரசர்களுடைய மஹிமையைக் கேளுங்கள். குருவம்சத்தவர்களுள் ஒருவனான ஸுஹோத்திரனென்கிற அரசன் மஹரிஷிகளிடம் சென்று திரும்பிவருகையில், ரதத்தின்மீதிருக்கும் உசீநரதேசாதிபதியான சிபிராஜனைக் கண்டான். அவ்விருவரும் நேரில் ஒருவரோடொருவர் சந்தித்து வயதின் கிரமத்தை அனுஸரித்துப் பூஜையைச்செய்து, குணங்கள் ஸமமாக இருப்பதால் இருவரும் ஒருவரோடொருவர் ஸமமான நிலைமையுடையவர்களென்றறிந்து, ஒருவருக்கொருவர் விலகி வழி விடவில்லை. அவ்விடத்தில் நாரதர் தோன்றினர். 'இதென்ன? நீங்களிருவரும் ஒருவர் மற்றொருவருடைய வழியைத் தடுத்துக்

கொண்டிருக்கிறீர்களே' என்று கேட்டார். அவ்விருவரும் நாரதரைப் பார்த்து, 'பகவானே! (வழிவிடுவதென்னும்) இது கூடாது. கர்மாக்களைச் செய்கிறவர்களும் அனுமதிகொடுப்பவர்களும் சொல்லுகிறவர்களுமான முன்னோர்களால் மேலானவனுக்கும் ஸமர்த்தனுக்கும் வழிவிடவேண்டுமென்று உபதேசிக்கப்படுகிறது. நாங்களிருவரும் ஒருவரோடொருவர் 1 நட்பை அடைந்திருக்கிறோம். அதை ஆலோசித்தால் எங்களிருவருக்கும் ஏற்றத்தாழ்வு இல்லை' என்று சொன்னார்கள்.

இவ்வாறு சொல்லக் கேட்ட நாரதர் மூன்று சுலோகங்களைப் பின்வருமாறு கூறினார். (அவற்றின் பொருள்,) 'குருவம்சத்தில் பிறந்தவனே! கொடுந்தன்மையுள்ளவன் மென்மைத்தன்மையுள்ளவனிடத்திலும் கொடுமையாகவே நடந்துகொள்ளுகிறான். மென்மைத்தன்மையுள்ளவன் கொடியவனிடத்திலும் மென்மையாகவே நடந்துகொள்ளுகிறான். கௌரவ! யோக்யன் அயோக்யனிடத்திலும் யோக்யமாகவே நடந்துகொள்ளுகிறான். அவ்வாறிருக்க, யோக்யன் யோக்யனிடத்தில் எப்படி யோக்யமாக நடவாமற்போவான்? யோக்யனானவன் தனக்குப் பிறர்செய்த உபகாரத்தை நூறுமடங்காகக் கருதுவான். 2 இந்த விஷயத்தில் தேவர்களுள்ளும் நிர்ணயம் உண்டாகவில்லை. உசீநரதேசாதிபதியான சிபியானவன், உன்னைக்காட்டிலும் நல்லொழுக்கமுள்ளவன். உலோபியைத் தானத்தால் ஜயிக்கவேண்டும். பொய்சொல்பவனை மெய்யால் ஜயிக்கவேண்டும். கொடுஞ்செய்கையுடையவனைப் பொறுமையினால் ஜயிக்கவேண்டும். அயோக்யனை யோக்யத்தன்மையினால் ஜயிக்கவேண்டும்' (என்பது.) ஆகலால், நீங்களிருவருமே மேலானவர்கள். இந்த ப்லோகங்களுக்குத் திருஷ்டாந்தமாக உங்களில் ஒருவன் விலகவேண்டும்' என்று சொல்லிவிட்டு, நாரதர் பேசாமலிருந்தார். இதைக்கேட்டு ஸுஹோத்ரன், சிபியைப் பிரதக்ஷிணம்செய்து அவனுக்கு வழிவிட்டுப் பலசெய்கைகளாலே அவனைப்புகழ்ந்து தன்நகரம் சென்றான். நாரதர் அப்படிப்பட்ட இந்த அரசனுடைய மகிமையையும் கூறினார்.

1 'ஸக்யம்' என்பது மூலம்; 'ஒப்புமையை' என்பது இங்கிலிஷ் மொழிபெயர்ப்பு.

2 'இது தேவர்களுள்ளும் ஐயந்திரிபறன்றோ' என்று வினவாக்கு வது இங்கிலிஷ் மொழிபெயர்ப்பு.

## நூற்றுத்தொண்ணூற்றெட்டாவது அத்யாயம்.

## மார்க்கண்டேயஸமாஸ்யாபர்வம். (தொடர்ச்சி.)

(மார்க்கண்டேயர், யயாதி பிராம்மணனுக்குக் கோதானம் செய்த கதையைக் கூறியது.)

இந்த வேறொரு கதையையும் நீங்கள் கேளுங்கள். நகுஷனுடைய புத்திரனான யயாதிமஹாராஜன் ராஜ்யத்திலிருக்கும்போது, (ஒருஸமயம்) பட்டணத்துஜனங்களால் சூழப்பட்டவனாக வீற்றிருந்தான். ஒருபிராம்மணன் குருதக்ஷிணையைவேண்டி யயாதியிடம் வந்து, 'அரசனே! ஓர் உடன்பாட்டை முன்னிட்டுக் குருதக்ஷிணையை உத்தேசித்து நான் உன்னை யாசிக்க வந்திருக்கிறேன்' என்று சொன்னான். அரசன், 'பிராம்மணரே! பகவானான தேவரீர் உடன்பாடு என்னவென்று கூறுவீராக' என்று வினவ, பிராம்மணன், 'அரசனே! ஜீவலோகத்தில் யாசிக்கப்படுகிற மனிதன் யாசிப்பவனிடத்தில் அதிகப்பகையைச் செய்வான். அரசனே! நான் அப்படிப்பட்ட உன்னை எவ்வாறு கேட்பேன்? இப்போது, எனக்கு நீ அன்புடனே கொடுப்பாயாகில் பெற்றுக்கொள்வேன்' என்று கூறினான். அரசன், 'தானம் பெறுதற்குத் தகுந்தவரே! நான் கொடுத்துவிட்டுக் கொடுத்ததாகச் சொல்லேன். யாசிக்கத்தகாத பொருளைக் கேட்டால் ஒருகாலும் கொடுப்பதாகப் பிரதிஜ்ஞை செய்யமாட்டேன். (யாசகர்களால்) அடையத்தக்க பொருளைக் கொடுப்பதாகப் பிரதிஜ்ஞைசெய்தும் அதைக்கொடுத்தும் நல்ல ஸுகமுள்ளவனாகிறேன். உமக்கு நான் ஆயிரம் பசுக்களைக் கொடுக்கிறேன். யாசிக்கிற பிராம்மணன் என்னுடைய அன்புக்குரியவனன்றோ? யாசிக்கிறவனிடத்தில் என்மனம் கோபிக்கிறதில்லை; கொடுக்கப்பட்ட பொருளைப்பற்றி ஒருபொழுதும் நான் துக்கிக்கிறதில்லை' என்று இவ்வாறு கூறிவிட்டு, அரசன் பிராம்மணனுக்கு ஆயிரம் பசுக்களைக் கொடுத்தான். பிராம்மணன் ஆயிரம் பசுக்களைப் பெற்றுக்கொண்டான்' என்று கூறினார்.

---

## நூற்றுத்தொண்ணூற்றேன்பதாவது அத்யாயம்.

## மார்க்கண்டேயஸமாஸ்யாபர்வம். (தொடர்ச்சி.)

(மார்க்கண்டேயர், ஸேதுகன் விருஷதர்ப்பன் ஆகிய இருவருடைய சரித்திரத்தையும் கூறியது.)

யுதிஷ்டிரர், 'மறுபடியுமே, க்ஷத்திரியர்களுடைய மகிமையைச் சொல்லக்கடவீர்' என்று வினவினர். பிறகு, மார்க்கண்டேயர், 'மஹாராஜனே! விருஷதர்ப்பன் ஸேதுகன் என்ற பெயருள்ள இரண்டு அரசர்களும், நீதிமார்க்கத்தில் பற்றுதலுள்ளவர்களாகவும் அஸ்திரங்களிலும் சஸ்திரங்களிலும் ஸமர்த்தர்களாகவும் இருந்தார்கள். விருஷதர்ப்பன் சிறுவனாயிருக்கும்பொழுதே, 'பிராம்மணர்களுக்குப் பொன்னையும் வெள்ளியையும் தவிர மற்றப்பொருள்கள் கொடுக்கத்தக்கனவல்ல' என்று வைத்துக்கொண்டிருந்த ரகஸ்யமான விரதத்தை ஸேதுகன் அறிந்தான். பிறகு, அந்த ஸேதுகனை வேதாத்யயனத்தால் நிறைந்த ஒரு பிராம்மணன் அடைந்து ஆசிர்வாதம்செய்து குருதக்ஷிணையைக்கருதி, 'நீ எனக்கு ஆயிரம்குதிரைகளைக்கொடு' என்று யாசித்தான். ஸேதுகன் அந்தப்ராம்மணனைப் பார்த்து, 'நீ வேண்டுகிற குருதக்ஷிணையைக் கொடுப்பதற்கு இங்கு ஸாத்தியப்படாது. அப்படிப்பட்ட நீ விருஷதர்ப்பனிடம் போ. அந்த அரசன் நிகரற்றகர்மங்களை அறிந்தவன். பிராம்மண! அவனை யாசகம்செய். அவன் உனக்குக் கொடுப்பான். இது அவனுக்கு ரஹஸ்யமான விரதம்' என்று சொன்னான். பிறகு, பிராம்மணன் விருஷதர்ப்பனிடம்போய் ஆயிரம் குதிரைகளை வேண்டினான். அந்த அரசன் அவனைக் குறடாவினால் அடித்தான். அவனைப்பார்த்து, பிராம்மணன், 'நிரபராதியான என்னை ஏன் அடிக்கிறாய்?' என்று வினவினான். இவ்விதச்சொல்லுடன் சாபங்கொடுக்க எண்ணங்கொண்ட அந்தப் பிராம்மணனைப்பார்த்து, அரசன், 'பிராம்மண! தானைவைத்துக் கொள்ளவேண்டியபொருளை உனக்குக் கொடாதவனுக்கு நீ சாபங் கொடுப்பது தகுதியா? அல்லது, பிராம்மணனுக்குக் கொடுக்கத் தக்கபொருளைக் கொடுக்கவிருப்பமில்லாதவனுக்கு நீ சாபங்கொடுப்பது தகுதியா?' என்று வினவினான். பிராம்மணன், 'ராஜாதிராஜனே! ஸேதுகனாலே அனுப்பப்பட்டு யாசிப்பதற்கு உன்னிடம் வந்தேன். அந்தஸேதுகனாலே சொல்லியனுப்பப்பட்ட நான்

உன்னை யாசித்தேன்' என்று சொன்னான். அரசன், 'பிராம்மண! எனக்கு இன்று முற்பகலில் வருகிறவரிப்பணத்தை உனக்குக் கொடுப்பேன். குறடாவினால் அடிக்கப்பட்டவனை எவ்வாறு பயன்தராமல் விலக்குவேன்?' என்றான். இவ்வாறு சொல்லிவிட்டு, பிராம்மணனுக்கு அந்தப்பகலில் வந்த தனம் முழுவதையும் கொடுத்தான். ஆயிரத்துக்கதிகமான குதிரைகளுக்குள்ளாவிலையையே கொடுத்தான்.

## இருநூறுவது அத்யாயம்.

## மார்க்கண்டேயஸமாஸ்யாபர்வம். (தொடர்ச்சி.)

(மார்க்கண்டேயர், சிபி கழுகினிடமிருந்து புறவைக்காப் பாற்றிய கதையைக் கூறியது.)

தேவர்களுள், 'பூமியிற்சென்று உசீனரதேசாதிபதியான சிபிச்சக்ரவர்த்தியைப்பற்றி நன்றாக அறியவிரும்புகிறோம்' என்கிறபேச்சு நடந்தது. அக்னியும் இந்திரனும், 'தேவர்களே! அப்படியே ஆகட்டும்' என்று சொல்லிவிட்டு (சிபியினிடம்) வந்தார்கள். அக்நியானவன் புறாவடிவத்துடன் சிபிக்கெதிரில் ஓடிவந்தான். இந்திரன் கழுகுவடிவத்தோடு புறவின் மாம்ஸத்தின் பொருட்டு அதனைப் பின்தொடர்ந்தான். பிறகு, புறவானது திவ்யஸிம்ஹாஸனத்தில் வீற்றிருக்கின்ற அரசனுடைய மடியில் வந்து விழுந்தது. பிறகு, புரோஹிதர், அரசனைப்பார்த்து, 'உயிரை விரும்பின புறவானது, கழுகினிடம் பயந்து பிராணனைக்காப்பாற்றுதற்காக உன்னைச் சரணமடைகிறது. கடல் சூழ்ந்த பூமியை ஆளுகின்ற அரசன் இதற்குப் பிராயச்சித்தம் செய்துகொள்ளவேண்டும்; பொருளைத் தானம் செய்யவேண்டும். புறவின்விழுதலைத் தீமைக்கு அறிகுறியென்று சொல்லுகிறார்கள்' என்று சொன்னார். பிறகு, புறா, அரசனைப்பார்த்து, 'உயிரைவிரும்புகிற நான் கழுகினிடம் பயந்து பிராணனைப்பாதுகாப்பதற்காக உன்னைச் சரணமடைகிறேன். முனிவனான நான் என் அங்கங்களை விட்டுப் புறவினுடைய அங்கங்களில் பிரவேசித்துப் புறவாகி எனது[1] உயிரான உன்னை உயிரை விரும்பிச் சரணமடைகிறேன். என்னை நீ

[1] தனது உயிரைக்காப்பவனாதலால் அரசனைத் தனது உயிரென்றது.

வேதாத்யயனத்தினால் ச்ரமமடைந்தவனும் தவத்தோடும் அடக்கத்தோடும்கூடியவனும் ஆசாரியரை எதிர்த்துப்பேசாதவனுமான பிரம்மசாரியென்று அறிந்துகொள். இவ்விதமான ஸ்வபாவத்துடன் கூடின என்னைப் பாபமில்லாதவனாக அறி. வேதங்களைச் சொல்லுகிறேன். சந்தஸ்ஸுகளை (புத்தியினால்) ஆராய்ந்துகொண்டிருக்கிறேன். எல்லாவேதங்களும் என்னால் அக்ஷரம் அக்ஷரமாக அத்தியயனம் செய்யப்பட்டிருக்கின்றன. கழுகின்பொருட்டு ச்ரோத்ரியனான என்னைக்கொடுப்பது நல்ல தானமன்று. கழுகுக்கு என்னைக் கொடாதே. நான் புறாவல்லேன்' என்று சொல்லிற்று. பிறகு, கழுகு, அரசனைப்பார்த்து, 'பிராணிகள் பலவகைப்பிறவிகளில் மாறிமாறிப் பிறக்கின்றன. முற்பிறப்பில் இந்தப் புறாவினிடத்தினின்று நீ பிறந்தாய். அரசனே! ஆதலால், நீ இந்தப் புறாவைப் பாதுகாக்க எண்ணி என் ஆஹாரத்தில் இடையூறு செய்பவனாகாதே' என்று சொல்லியது. அரசன், 'பக்ஷியினாலே சொல்லப்படுகின்றதும் திருத்தமானதும் சிறந்ததுமான இப்படிப்பட்ட வாக்கானது எந்தமனிதனால் எப்பொழுது காணப்பட்டிருக்கிறது? புறா எடுத்துச்சொல்லுகிற வசனமும் கழுகு எடுத்துச்சொல்லுகிற வசனமும் ஆகிய இரண்டையும் அறிந்து எப்படிச் செய்தால் நல்லது செய்ததாகும்? எவன், பயந்து சரணமடைந்த பிராணியைப் பகைவனிடத்தில் கொடுக்கிறானோ அவன் ஸமயம் வந்தபோது தனக்குப் பாதுகாவலை விரும்பியும் அதனை அடையமாட்டான். அவனுடைய ராஜ்யத்தில் மாரிக்காலத்தில் மழை பொழியாது. அவனுடைய ராஜ்யத்தில் காலத்தில் விதைக்கப்பட்டவித்துக்களும் முளையா. எவன், பயந்து சரணமடைந்தவனைப் பகைவனிடம் கொடுக்கிறானோ அவனுக்குப் பிறந்த குழந்தைகள் சிறுவயதிருக்கையிலேயே மரிக்கின்றன. அவனுடைய பித்ருக்கள் எப்பொழுதும் அவனிடம் வசிக்கிறதில்லை. தேவர்களும் அவனுடைய ஹவிஸ்ஸுகளை வாங்கிக்கொள்ளுகிறதில்லை. எவன், பயந்து சரணமடைந்தவனைச் சத்ருவினிடத்தில் கொடுக்கிறானோ உதாரகுணமில்லாத அந்த மனிதன் அன்னத்தை வீணாக அடைகிறான். நல்ல கர்மங்களால் ஸ்வர்க்கலோகத்தை அடைந்திருந்தாலும், அந்த ஸ்வர்க்கத்தினின்று விரைவாகவே நழுவிவிழுகிறான். இந்திரனோடுகூடின தேவர்கள் அவனை வஜ்ராயுதத்தால் அடிக்கிறார்கள். கழுகே! எந்த இடத்தில் நீ மிகமகிழ்ந்து வசிக்கிறாயோ அந்த இடத்திற்கு இந்தச் சிபிதேசத்தவர்கள் காளைமாட்டைச்

சமைத்து அன்னத்தோடு அந்த மாம்ஸத்தை இந்தப்புறுவுக்குப் பிரதியாக உனக்குக் கொணர்ந்துகொடுக்கக்கடவர்' என்று சொன்னான். கழுகு, 'அரசனே! காளைகளையும் நான் வேண்டவில்லை; இந்தப்புறுவைக்காட்டிலும் வேறு ஒன்றையும் நான் விரும்பவில்லை. புறுவின் மாம்ஸத்தைவிட அதிகமாம்ஸத்தையும் நான் விரும்பவில்லை. அப்படிப்பட்ட இந்த ஆஹாரமானது எனக்கு இப்பொழுது தேவர்களால் கொடுக்கப்பட்டிருக்கின்றது. இது தனது உயிரை இழப்பதனால் எனக்கு ஆஹாரமாகிறது. ஆகலால், எனக்குக் கொடுத்துவிடு' என்று சொல்லியது. அரசன், 'பயத்தால் பற்றப்பட்ட புறுவுக்குப்பிரதியாக என்னிடமிருந்து என்னுடைய வேலைக்காரர்களே காளையையும் சினையழிந்த பசுவையும் குறைவின்றி உனக்கு ஆஹாரமாகக் கொண்டுபோகட்டும். [1] நீ இந்தப் புறுவைத் துன்பம்செய்யாதே. கழுகே! நான் உயிரை இழப்பேன்; புறுவைக் கொடுக்கவேமாட்டேன். இது காக்கப்படத்தக்கதன்றோ? கழுகே! ஏன் நீ அறிந்துகொள்ளவில்லை? காட்சிக்கினியவனே! இந்த விஷயத்தில் நீ கிலேசப்படாதே. நான் எவ்விதத்தாலும் புறுவைக்கொடுக்கமாட்டேன். கழுகே! எப்படி (என்வம்சத்தவர்களான) சிபிகள் என்செய்கையினால் மகிழ்ந்து என்னை நல்ல வசனங்களால் புகழ்வார்களோ, எப்படி பிரியத்தையே நான் செய்வேனோ அப்படி கட்டளையிடுவாயாக. என்னை நோக்கி எதைச்சொல்லுகிறாயோ அதைச் செய்கிறேன்' என்று சொல்லினன். கழுகானது, 'அரசனே! உனது வலத்தொடையிலிருந்து மாம்ஸத்தை அறுத்து எவ்வளவு மாம்ஸம் புறுவின் நிறைக்குச் சமமாயிருக்குமோ அவ்வளவைக்கொடு. அப்படிச்செய்வதனால் புறுவானது உன்னால் நன்கு பாதுகாக்கப்பட்டதாகிறது. சிபிகளும் உன்னைப் புகழ்வார்கள்; எனக்கும் பிரியம் செய்யப்பட்டதாகும்' என்று சொல்லியது. பிறகு, அவன் வலத்தொடையிலிருந்து தன்னுடைய மாம்ஸத்துண்டை அறுத்துப் புறுவோடு தராசில் தூக்கினான். புறுவானது, மாம்ஸத்தைவிட அதிகக்கனமுள்ளதாகவே இருந்தது. மறுபடியும் மற்றொருதொடையிலிருந்தும் மாம்ஸத்தை அறுத்து நிறுத்தான். அப்பொழுதும் புறுவானது அதிக கனமுள்ளதாகவேயிருந்தது. இவ்வண்ணம் தன் சரீரமுழுவதையும் நன்றாக அறுத்து அந்த மாம்ஸத்தைத் தராசில் வைத்து நிறுத்தான். அப்படி எல்லாமாம்ஸத்தையும் வைத்தும்கூடப் புறு மிக்க

1 பொருந்தாமையால் ஒரு சொல் விடப்பட்டது.

கனமுள்ளதாகவே இருந்தது. பிறகு, அரசன் தானே தராசில் ஏறினன். அது அரசனுக்கு அப்பிரியமாகவில்லை. கழுகு, அரசனுடைய இந்தச்செய்கையைப் பார்த்து, 'புறா பாதுகாக்கப்பட்டது' என்று சொல்லிப் பறந்துபோய்விட்டது.

பிறகு, அரசன் புறாவைப்பார்த்து, 'புறாவே! சிபிகள் உன்னைப் புறா என்று அறிவார்கள். பக்ஷியே! உன்னை நான் கேட்கிறேன். கழுகு யார்? ஈச்வரனல்லாதவன் ஒருகாலும் இப்படிப்பட்ட காரியத்தைச் செய்யமாட்டான். பகவானே! என்னுடைய இந்த வினவுக்கு மறுமொழி உரைப்பாயாக' என்று சொல்ல, புறா, 'நான் புகையைக்கொடியாகக்கொண்டவனும் ஜ்வலிக்கிற ஸ்வபாவமுள்ளவனுமான அக்னி. இந்தக்கழுகானது வஜ்ரபாணியாகிய இந்திரன். ஸுரதையினுடைய புதல்வனே! எங்களிருவரையும் சிறப்புடையவனை உன்னை நன்கு அறியும் விருப்பத்துடன் உன்னருகில் வந்தவர்களென்று அறி. அரசனே! நீ எனக்குப் பிரதியாக இந்த மாம்ஸத்தைக் கத்தியினால் அறுத்துக் கொடுத்தாயாதலால் இந்த அறுத்த இடத்தை உங்களுக்கு மங்களகரமானதும் பொன்னிறமுடையதும் அழகியதும் நறுமணமுள்ளதுமான அடையாளமாக ஏற்படுத்துகிறேன். இந்த விலாவினின்று இந்தப் பிரஜைகளை ரக்ஷிப்பவனும் கீர்த்தியுள்ளவனும் தேவரிஷிகளால் நன்கு ஒப்புக்கொள்ளப்பட்டவனுமான ஒரு மனிதன் உண்டாவான். அவனுக்குக் கபோதரோமா என்று பெயர். அரசனே! உனது தளர்ந்த சரீரத்திலிருந்து விலாவைப் பிளந்துகொண்டு வெளியில் வரும் கபோதரோமா என்கிற புத்ரனை அடைவாய். அவனை ராஜச்ரேஷ்டனுக்குரிய சரீரமுள்ளவனும் கீர்த்தியினால் பிரகாசிப்பவனும் சூரனும் ஸுரதையின்வம்சத்தவர்களுள் சிறந்தவனுமாகக் காண்பாய்' என்று சொல்லியது' என்றார்.

## இருநூற்றோராவது அத்யாயம்.

## மார்க்கண்டேயஸமாஸ்யாபர்வம். (தொடர்ச்சி.)

(மார்க்கண்டேயர் நாரதரால் சொல்லப்பட்ட அஷ்டகன் முதலிய அரசர்களுடைய தாரதம்யத்தைக் கூறித் தானமஹிமையைச் சொல்லியது.)

பாண்டுகுமாரரான யுதிஷ்டிரர், 'மீண்டுமே (அரசர்களுடைய) மகிமையைச் சொல்லக்கடவீர்' என்று மார்க்கண்டேயரை

வினவினார். மார்க்கண்டேயர், 'விஸ்வாமித்திரருடைய குமாரனான அஷ்டகனுடைய அஸ்வமேதத்திற்கு எல்லா அரசர்களும் சென்றார்கள். அந்த அஷ்டகனுடையபிராதாக்களான பிரதர்த்தனனும், வஸுமனஸும் உசீனரதேசாதிபதியானசிபியும் சென்றார்கள். அந்த அஷ்டகன் யாகத்தை நிறைவேற்றினபின் பிராதாக்களோடு கூட ரதத்தின்மீதேறிச் செல்லலானான். அவர்கள் எதிரில் வருகின்ற நாரதரை அபிவாதனம் செய்து, 'தேவரீர் ரதத்திலேறவேண்டும்' என்று சொன்னார்கள். அவர் அவர்களைப் பார்த்து, 'அப்படியே' என்று சொல்லி ரதத்திலேறினார். பிறகு, அவர்களுள் ஒருவன் தேவரிஷியான நாரதரைப்பார்த்து, 'பகவானான தேவரிஷியை அருள் வரச்செய்து ஒரு விஷயத்தைக் கேட்க விரும்புகிறேன்' என்று சொன்னான். அவர் அவனை, 'கேள்' என்று சொன்னார்.

அவன், 'எல்லோரும் தீர்க்காயுளுள்ளவர்கள்; சிறந்த எல்லாக் குணங்களாலும் ஸந்தோஷமடைந்தவர்கள். நெடுங்காலம் அநுபவிக்கத்தக்க ஸ்வர்க்கஸ்தானமானது நால்வரால்மட்டும் செல்லத்தக்கதாயிருந்தால் (நம்முள்) யார் இறங்கவேண்டும்?' என்று கேட்டான். ரிஷியானவர், 'இந்த அஷ்டகன் இறங்கவேண்டும்' என்று சொன்னார். முன்கேட்டவன், 'என்ன காரணம்?' என்று கேட்டான். பிறகு, நாரதர் அவனைப்பார்த்து, 'அஷ்டகனுடைய அரண்மனையில் நான் வஸித்தேன். அவன் என்னைத் தேரின்மீது ஏறும்படி செய்து தேரோடு ஸஞ்சரித்தான். பிறகு, தனித்தனியாக நிறத்துக்குத்தக்கபடி பிரிக்கப்பட்டிருக்கிற ஆயிரக்கணக்கான பசுமாடுகளை நான் பார்த்தேன். நான் அவனைப்பார்த்து, 'இவை யாருடைய பசுக்கள்?' என்று கேட்டேன். அவன், 'இவைகள் என்னால் தானம் செய்யப்பட்டவை' என்று சொல்லிய அதனாலேயே தானே தன்னைப் புகழ்ந்துகொண்டான். (ஆதலால்) இவன் இறங்கவேண்டும்' என்று சொன்னார்.

பிறகு, முன்கேட்டவன், 'மூவரால் மட்டும் செல்லத்தக்கதாயிருந்தால் இப்பொழுது யார் இறங்கவேண்டும்?' என்று கேட்டான். ரிஷியானவர், 'பிரதர்த்தனன் இறங்கவேண்டும்' என்று சொன்னார். கேட்டவன், 'அந்த விஷயத்தில் யாது காரணம்?' என்று கேட்க, நாரதர், 'பிரதர்த்தனனுடைய வீட்டிலும் நான் வாஸம் செய்திருக்கிறேன். அவன் என்னுடன்கூட ரதத்தால் ஸஞ்சரித்தான். பிறகு இந்தப் பிரதர்த்தனனை ஒரு பிராம்மணன், 'எனக்கு நீ ஒருகுதிரையைக் கொடுக்கவேண்டும்' என்றுயாசித்தான். அரசன்

பிராம்மணனை நோக்கி, 'நான் திரும்பிவந்து கொடுப்பேன்' என்று சொன்னான். பிராம்மணன், 'விரைவாகவே கொடுக்கக்கடவாய்' என்று சொன்னான். அவன், 'அப்படியே' என்று சொல்லி வலப் பக்கத்திலுள்ள குதிரையை விரைவாகவே பிராம்மணனுக்குக் கொடுத்தான். பிறகு, மற்றொரு பிராம்மணன் குதிரையை விரும்பி வந்தான். அரசன் பிராம்மணனைப் பார்த்து, 'அப்படியே' என்று சொல்லி இடப்பக்கத்தில் பின்னுள்ள குதிரையை அவனுக்குக் கொடுத்துச் சென்றான். மறுபடியும், வேறொரு பிராம்மணன் குதிரையை விரும்பி அரசனிடம் வந்தான். அரசன் விரைவாக அந்தப் பிராம்மணனுக்கு இடப் பக்கத்திலுள்ள குதிரையை அவிழ்த்துக் கொடுத்துவிட்டுச் சென்றான். பிறகு, திரும்பவும், மற்றொரு பிராம்மணன் குதிரையை விரும்பி வந்தான். அரசன், மிக விரைபவனாகி, 'கொடுப்பேன்' என்று சொல்ல, பிராம்மணன், 'விரைவாகவே எனக்குக் கொடு' என்று சொன்னான். அரசன் அந்தப்பிராம்மணனுக்குக் குதிரையைக் கொடுத்துவிட்டு ரதத்தின் நுகத்தைத் தானே தாங்கிக்கொண்டு, 'பிராம்மணர்களுக்குத் தக்கது தகாதது என்கிற ஆலோசனை சிறிதும் இல்லை' என்று சொன்னான். கொடுத்து விட்டு அஸூயையை அடைகிற இவன் அப்படிப்பட்ட அந்த வசனத்தினால் ரதத்திலிருந்து இறங்கவேண்டும்' என்றார்.

கேட்டவன், பிறகு, 'இருவரால் மட்டும் செல்லத்தக்கதாக இருந்தால் யார் இறங்கவேண்டும்?' என்று வினவ, ரிஷியானவர், 'ஸுமனஸ் இறங்கவேண்டும்' என்று சொன்னார். கேட்டவன், 'யாதுகாரணம்?' என்று வினவ, நாரதர், 'நான் உலகங்களில் ஸஞ்சரித்துக்கொண்டு ஸுமனஸினுடைய வீட்டை அடைந்தேன். அந்த வீட்டில் பிராம்மணர்களுடைய [1] ஸ்வஸ்திவாசனங்கள் நடந்துகொண்டிருந்தன. [2] புஷ்பரதத்தை வேண்டி நான் அவனை அநுஸரித்தேன். பிராமணர்கள் ஸ்வஸ்திவாசனங்கள் சொல்லியபிறகு அவர்களுக்கு ஸுமனஸ் புஷ்பரதத்தைக் காண்பித்தான். அந்த

1 'மங்கள காரியங்களின் தொடக்கத்தில் மந்திரங்களைச் சொல்லி அக்ஷதைகளை வாரியிறைப்பது. அது தர்மகாரியங்களிலும் மங்கள காரியங்களிலும் யுத்தங்களிலும் ஆ[illegible]காரியங்களைக் காப்பதிலும் தொடக்கத்தில் செய்யப்படுவது' என்பது சப்த கல்பத்ருமம்.

2 'காடு மலை கடல்களில் தடைப்படாமல் செல்லும் ரதம்' என்பது பழைய உரை.

ரதத்தை நான் புகழ்ந்தேன். பிறகு, அரசன், 'பகவானால் ரதம் புகழப்பட்டது. இந்த ரதமானது பகவானுடையதே; பகவானுடையதே' என்று சொன்னான். பிறகு, ஒருகால், நான் மீண்டும் வஸுமனஸை அணுகினேன். மறுபடியுமே புஷ்பரதத்தால் எனக்குக் காரியம் ஆகவேண்டியிருந்தது. அரசன், 'சிறப்புடையதான இந்தப் புஷ்பரதமானது பகவானுடையது' என்று இவ்வண்ணம் கூறினான். மீண்டுமே வஸுமனஸினுடைய கிருஹத்தில்நடந்த மூன்றாவதான ஸ்வஸ்திவாசனத்தை நான் அடைந்து சிறப்பித்தேன். பிறகு, அரசன் பிராம்மணர்களுக்கு என்னைக் காண்பித்து, என்னைப்பார்த்து, 'பகவானால் புஷ்பரதத்தினுடைய ஸ்வஸ்திவாசனங்கள் நன்கு சிறப்பிக்கப்பட்டன' என்று சொன்னான். புஷ்பரதத்தைக் கொடாமல் இந்த மோசவார்த்தை சொல்லியதால் இவன் கீழே இறங்கவேண்டும்' என்று சொன்னார்.

கேட்டவன், பிறகு, 'ஒருவரால் மட்டும் செல்லத்தக்கதாக இருந்தால் யார் இறங்கவேண்டும்?' என்று வினவ, மீண்டும் நாரதர், 'சிபி செல்லத்தக்கவன்; நான் இறங்குவேன்' என்று சொன்னார். கேட்டவன், 'இந்த விஷயத்தில் காரணமென்ன?' என்று வினவ, நாரதர், 'இப்படிப்பட்ட நான் சிபியோடு ஒத்தவனல்லேன். ஏனென்றால், பிராம்மணனொருவன் அந்நாள் சிபியைப்பார்த்து, 'சிபியே! நான் அன்னத்தை விரும்புகிறவனாக இருக்கிறேன்' என்று சொன்னான். சிபி, பிராம்மணனை நோக்கி, 'என்ன செய்யவேண்டும்? நீர் கட்டளையிடும்' என்றுசொன்னான். பிறகு, பிராம்மணன் அவனை நோக்கி, 'ப்ருஹத்கர்ப்பனென்கிற உன்னுடைய இந்தப் புத்திரனைக் கொல்லவேண்டும்; அப்படிக்கொல்லப்பட்ட இவனை நன்றாகப் பக்குவம் செய்வதுடன் அன்னத்தையும் ஸித்தம் செய்வாயாக. பிறகு, நான் உன்னால் போஜனத்திற்கு எதிர்பார்க்கத்தக்கவன்' என்று சொன்னான். பிறகு, அரசன் புத்திரனைக்கொன்று பக்குவஞ்செய்து முறைப்படி ஸித்தமானதை ஒரு பாத்திரத்தில்வைத்து அதைத் தலையினால் தூக்கிக்கொண்டு பிராம்மணனைத் தேடினான். இந்த அரசன் பிராம்மணனைத் தேடிக்கொண்டிருக்கும்பொழுதே ஒருவன் அரசனைப்பார்த்து, 'இந்தப் பிராம்மணன் உன் நகரத்தில் நுழைந்து கோபங்கொண்டு உன் அரண்மனையையும் தனசாலையையும் ஆயுதசாலையையும் அந்தப்புரத்தையும் குதிரைச்சாலையையும் யானைச்சாலையையும் எரிக்கிறான்' என்று சொன்னான். பிறகு, சிபி அப்படியே நிறம்மாறாத

முகத்துடன் நகரத்தில் நுழைந்து அந்தப் பிராம்மணனைப் பார்த்து, 'பகவானே! அன்னம் ஸித்தமாயிருக்கிறது' என்று சொன்னான். பிராம்மணன் ஒன்றும் பேசாமல் ஆச்சர்யத்தால் தலைகுனிந்தவனானான். பிறகு, அரசன், 'பகவானே! புஜிக்கலாம்' என்று பிராம்மணனைத் தயைசெய்யும்படி வேண்டினான். பிராம்மணன் ஒரு முகூர்த்தகாலத்திற்குப் பிறகு, சிபியை நிமிர்ந்து பார்த்து, 'நீயே இதனைப் புஜிப்பாயாக' என்று சொன்னான். அப்பொழுது, சிபி, 'அப்படியே ஆகட்டும்' என்று மனத்தில் அருவருப்பில்லாதவனாகப் பிராம்மணனைப் பூஜித்துக் [1] கபாலத்திலிருந்து மாம்ஸத்தை எடுத்துப் புஜிக்கவிரும்பினான். பிறகு, பிராம்மணன் இவனுடைய கையைப் பிடித்துக்கொண்டான். சிபியைப்பார்த்து, 'நீ கோபத்தை ஜயித்தவனாக இருக்கிறாய். பிராம்மணனுக்காக விடத்தகாதது உனக்கு யாதொன்றுமில்லை' என்று சொன்னான். அவன் மஹாபாக்கியசாலியான அந்தச் சிபியை நன்கு கொண்டாடவும் செய்தான். எதிரில் பார்க்கின்ற அந்தச் சிபியானவன் எதிரில் நிற்பவனும் தேவகுமாரன்போன்றவனும் நல்ல மணமுள்ளவனும் அலங்கரிக்கப்பட்டவனுமான புத்திரனைக் கண்டான். பிராம்மணன் அந்தக் காரியம் அனைத்தையும் செய்து மறைந்துவிட்டான். உலகங்களைப் படைப்பவரே அந்த ராஜரிஷியைப்பரீக்ஷிப்பதற்காக அந்த வேஷத்தோடு வந்தார். அந்தப் பிராம்மணன் மறைந்தவுடனே, மந்திரிகள் அரசனை நோக்கி, 'எல்லாவற்றையும் அறிந்தவனான உன்னால் எதை அடையவிரும்பிக்கொண்டு இது இவ்வாறு செய்யப்பட்டது?' என்று வினவினார்கள். சிபி, 'இதை நான் புகழுக்காகவாவது பொருளுக்காகவாவது கொடுக்கவில்லை. போகத்தை அனுபவிப்பதிலுள்ள ஆசையினாலும் கொடுக்கவில்லை. இந்த வழியானது பாவிகளால் அடையப்படாதது' என்று இவ்வாறு இவ்வனைத்தையும் செய்கிறேன். ஸாதுக்களால் எப்பொழுதும் அனுஷ்டிக்கப்பட்டதே சிறந்தது. ஆகையால், என் புத்தியானது சிறந்ததையே பற்றுகிறது' என்று கூறினான். ஆகையால், சிபியினுடைய இந்தச் சிறந்த மஹாபாக்கியத்தை நான் உள்ளபடி அறிகிறேன்' என்று கூறினார்' என்றார்.

1 'கபாலம்' என்பது மூலம்; 'மண்டையோடாகிய பாத்ரம்' என்பது பழையவுரை; 'தலையிலிருந்து மாம்ஸ பாத்ரத்தை இறக்கி' என்பது இங்கிலீஷ் மொழிபெயர்ப்பு.

## இருநூற்றிரண்டாவது அத்யாயம்.

## மார்க்கண்டேயஸமாஸ்யாபர்வம். (தொடர்ச்சி.)

(மார்க்கண்டேயர், புகழ்ச்சியும் இகழ்ச்சியும் முறையே ஸ்வர்க்க வாஸத்திற்கும் நரகவாஸத்திற்கும் காரணமென்பதைக் காட்டுகிற இந்திரத்யும்னனுடைய உபாக்கியானத்தைக் கூறியது.)

பாண்டவர்கள், மார்க்கண்டேய ரிஷியைப் பார்த்து, 'தேவரீரைக்காட்டிலும் நெடுங்காலம் முந்திப் பிறந்திருக்கிற ஒருவன் உண்டா?' என்று வினவினார்கள். அவர், அந்தப் பாண்டவர்களைப் பார்த்து, 'இந்திரத்யும்னனென்கிற ராஜரிஷி இருக்கிறானல்லவா? புண்யங்கள் குறைந்துபோனவுடன், அந்த இந்திரத்யும்னன், 'என்னுடைய கீர்த்தியானது அழிந்துவிட்டது' என்று சொல்லிக்கொண்டே ஸ்வர்க்கத்திலிருந்து நழுவினான். அவன் என்னை வந்தடைந்தான்; பிறகு, 'நீர் என்னை முந்திப்பார்த்தது நினைவிருக்கிறதா?' என்று வினவினான். நான் அவனைப் பார்த்து, 'பிரம்மத்தியானம் செய்கிறவழியில் நிலைபெற்றிருப்பவர்களும் ஒரு கிராமத்தில் ஓரிரவு வஸிப்பவர்களுமான நாங்கள் காரியங்களைச் செய்வதில் கவலையிருப்பதால் உன்னை அறியவில்லை. சொந்தக்காரியங்களைச் செய்வதுகூட எங்களுக்கு நினைவிருப்பதில்லை. சரீரத்தை வாட்டுவதால், காரியங்களைச் செய்வதற்கு நாங்கள் தொடங்குவதில்லை' என்று சொன்னேன். இவ்வண்ணம் கூறப்பட்ட ராஜரிஷியாகிற இந்திரத்யும்னன், மீண்டும் என்னை நோக்கி, 'உம்மைக்காட்டிலும் நெடுங்காலத்திற்குமுன் பிறந்தவன் ஒருவனிருக்கிறானா?' என்று கேட்டான். நான் அவனைப்பார்த்து, 'இமயமலையில் ப்ராவாரகர்ணனென்கிற கோட்டான் இருக்கிறதன்றோ? அது என்னைக்காட்டிலும் நெடுங்காலத்திற்கு முன் பிறந்தது. அது என்னை அறிந்தாலுமறியலாம். நெடுந்தூரமுள்ள வழியில் இமயமலை இருக்கிறது. அந்த மலையில் அந்தக்கோட்டான் வாஸம் செய்கிறது' என்று மீண்டும் மறுமொழி உரைத்தேன். பிறகு, அந்த இந்திரத்யும்னன் தான் குதிரையாகி அந்தக்கோட்டானிருக்குமிடத்திற்கு என்னைச் சுமந்துகொண்டு போனான். பிறகு, அந்த ராஜரிஷியானவன் அந்தக் கோட்டானைப் பார்த்து, 'என்னை உனக்குத் தெரிகிறதா?' என்று கேட்டான். அந்தக்கோட்

டான் ஒருமுகூர்த்தகாலம் ஆலோசித்து அந்த ராஜரிஷியைப் பார்த்து, 'நான் உன்னை அறியேன்' என்று சொல்லியது. இவ்வாறு சொல்லப்பட்ட ராஜரிஷியான இந்திரத்யும்னன், மீண்டும் அந்த உலூகத்தைப்பார்த்து, 'உன்னைக்காட்டிலும் நெடுங்காலம் முன்பிறந்தவனொருவனிருக்கிறனா?' என்றுவினவினன். இவ்வண்ணமுரைக்கக் கேட்ட அந்த உலூகமானது, அவனைப் பார்த்து, 'இந்திரத்யும்னமென்கிற பெரிய தடாகமிருக்கிறதன்றோ? அந்தத்தடாகத்தில் நாளீஜங்கமென்கிற ஒரு கொக்கு வஸிக்கிறதன்றோ? அது நம்மைவிட நெடுங்காலம் முந்திப்பிறந்தது. அதைக் கேட்பாயாக' என்று சொல்லியது. பிறகு, இந்திரத்யும்னன், என்னையும் உலூகத்தையும் தூக்கிக்கொண்டு நாளிஜங்கமென்கிற கொக்கிருக்கும் குளத்தை அடைந்தான். நான் அந்தக் கொக்கைப்பார்த்து, 'நீ இந்த இந்திரத்யும்னராஜனை அறிவாயா?' என்று கேட்டேன். அந்தக் கொக்கானது ஒரு முகூர்த்தகாலம் சிந்தித்து, 'நான் இந்திரத்யும்னனென்கிற அரசனை அறியேன்' என்று சொல்லியது. பிறகு, நாங்கள் அந்தக் கொக்கை, 'உன்னைக்காட்டிலும் நெடுங்காலம் முந்திப்பிறந்த வயதுசென்ற வேறு ப்ராணி இருக்கிறதா?' என்று வினவினோம். அந்தக் கொக்கானது, 'இந்த குளத்தில் அகூபாரமென்கிற ஓர் ஆமை வஸிக்கிறதன்றோ? அது என்னைவிட நெடுங்காலம் முந்திப்பிறந்தது. அந்த ஆமையானது இந்த அரசனை எவ்விதத்தாலாவது அறிந்திருக்கலாம். அந்த அகூபாரத்தைக் கேளுங்கள்' என்று சொல்லியது. பிறகு அந்தக் கொக்கானது அகூபாரமென்கிற அந்த ஆமையைப் பார்த்து, 'நங்களுடைய மனத்திலுள்ள ஒரு நல்ல விஷயத்தைப்பற்றி உன்னைக் கேட்க விருப்பமுள்ளவராக இருக்கின்றோம். இங்கு வரவேண்டும்' என்று தெரிவித்துக் கொண்டது.

ஆமை அதைக்கேட்டு, அக்குளத்திலின்று மேலே எழும்பி, நாங்கள் இருந்த இடத்தை நோக்கி வந்தது. நாங்கள், குளக்கரையில் வந்திருக்கிற அந்த ஆமையைப்பார்த்து, 'நீ இந்திரத்யும்னனென்கிற அரசனை அறிவாயா?' என்று கேட்டோம். அது ஒரு முகூர்த்தகாலம் ஆலோசித்துக் கண்களில் நீர் ததும்ப மிகவும் மனவருத்தத்துடன் நடுங்கிக்கொண்டும் பிரஜ்ஞை தப்பியதுபோலக் கைகளைக் குவித்துக்கொண்டும், 'நான் இவனை ஏன் அறியமாட்டேன்? இவனால் இந்த இடத்தில் முற்காலத்தில் ஆயிரம் தடவை அக்னிசயனங்கள் செய்தபோது யூபஸ்தம்பங்கள் நாட்

டப்பட்டிருக்கின்றன. இந்தக் குளமும், 1 இவனால் தக்ஷிணையுடன் தீர்த்ததாரை வார்த்துக் கொடுக்கப்பட்ட பசுமாடுகள் துள்ளிக் குதித்து ஓடினதனால் உண்டுபண்ணப்பட்டது. இந்தக் குளத்தி லேயே நான் வாஸம்பண்ணிக்கொண்டிருக்கிறேன்' என்று சொல் லியது. பிறகு, ஆமையினால்சொல்லப்பட்ட இவை அனைத்தையும் கேட்டு அதன்பின் தேவலோகத்திலிருந்து தேவரதம் தோன் றியது. இந்திரத்யும்னனைக் குறித்து, 'உனக்கு ஸ்வர்க்கமானது இப்பொழுது அடையத்தக்கதாக இருக்கிறது. உனக்குத் தகுந்த ஸ்தானத்தை அடைவாயாக. நீ சிறந்த கீர்த்தியுள்ளவனாக இருக் கிறாய். நீ கவலையற்றவனாக ஸ்வர்க்கத்திற்குச் செல்வாயாக' என் கிற வாக்குக்களும் கேட்கப்பட்டன.

இந்த விஷயத்தில் ச்லோகங்களிருக்கின்றன. (அவற்றின் பொருள் :) 'புண்ய கர்மானுஷ்டானத்தாலுண்டான புகழ்ச்சியா னது ஸ்வர்க்கத்தையும் பூமியையும் கொடுக்கிறது. எவ்வளவு காலம்வரையில் அந்தச் சப்தமானது இருக்கிறதோ அவ்வளவு காலம்வரையில் ஸ்வர்க்கத்தில் மனிதன் பூஜிக்கப்படுகிறான். எந்த மனிதனுக்கு அபகீர்த்தியானது ஜனங்களால் கூறப்படுகிறதோ அவன், அந்த அபகீர்த்தியானது எவ்வளவுவரையில் சொல்லப்படு மோ அவ்வளவு காலம் வரையில் அதமலோகங்களில் விழுகிறான். ஆகையால், மனிதன் பூமியில் நல்ல நடையுள்ளவனாகவும் கொடை யாளியாகவுமிருக்கவேண்டும். மிக்க பாவமான நடையை விட்டு விட்டுத் தர்மத்தையே நன்கு பின்பற்றவேண்டும்' என்பது. இவ் வாறான இந்த வசனத்தைக்கேட்டு அந்த இந்திரத்யும்னனென்ற அரசன் தேவரதத்தைப்பார்த்து, 'நான் பிராயமுதிர்ந்தவர்களான இவ்விருவரையும் அவர்களிருப்பிடத்தில் கொண்டுபோய்ச் சேர்ப் பிக்கும் வரையில் நில்' என்று சொன்னான். அவன் ஆந்தையும் ப்ராவாரகர்ணனென்கிற உலூகத்தையும் இருந்தவிடமான இடத் தில் கொண்டுபோய்ச் சேர்த்து, அந்தத் தேவயானத்தால் தன் னுடைய புண்யகர்மங்களினால் ஸித்தித்திருக்கிற தனக்குத் தகுந்த ஸ்தானத்தை அடைந்தான். நெடுங்காலமாக ஜீவித்திருக்கின்ற என்னால் இப்படிப்பட்ட அந்த விஷயம் நேரில் அநுபவிக்கப் பட்டது' என்று மார்க்கண்டேயர் பாண்டவர்களுக்குச் சொன்னார். பாண்டவர்கள், அந்த ரிஷியைப்பார்த்து, 'ஸ்வர்க்கலோகத்தினின்று

1 'தக்ஷிணையாகக் கொடுக்கப்பட்டவை,' என்பது வேறு பாடத்தின் பொருள்.

நழுவின இந்திரத்யும்னனென்கிற அரசனை அவனிருந்த ஸ்வர்க்க ஸ்தானத்தில் சேர்த்த உங்களால் நல்ல காரியம் செய்யப்பட்டது' என்றும் சொன்னார்கள். பிறகு, அந்த மார்க்கண்டேயர், அந்தப் பாண்டவர்களைப்பார்த்து, 'பாண்டவர்களே! தேவகியின் புதல்வரான கிருஷ்ணனாலும் நரகத்தில் முழுகுகின்ற ந்ருகன் என்கிற ராஜரிஷியானவன் அந்தக் கஷ்டத்தினின்று நன்கு கரையேற்றப்பட்டு ஸ்வர்க்கத்தை அடைவிக்கப்பட்டான்' என்று கூறினார்.

## இருநூற்றுமூன்றாவது அத்யாயம்.

## மார்க்கண்டேயஸமாஸ்யாபர்வம். (தொடர்ச்சி.)

(மார்க்கண்டேயர் ஸ்வர்க்கத்தை அடைவதற்குக்காரணமான பொதுவான தர்மங்களைக் கூறியது.)

மஹாராஜரே! ராஜரிஷியான அந்தத் தர்மராஜர் அப்பொழுது மகாபாக்கியசாலியான மார்க்கண்டேயரிடமிருந்து இந்திரத்யும்னனுக்குக் கொடுக்கப்பட்ட அந்த ஸ்வர்க்கவாஸத்தைக் கேட்டு மறுபடியும் அந்த மஹரிஷியைப்பார்த்து, 'மஹாமுனிவரே! மனிதன் எப்படிப்பட்ட நிலைமைகளில் தானம் செய்தால் இந்திரலோகத்தை அநுபவிப்பான்? இல்வாழ்க்கையிலிருக்கும்பொழுதா? பால்யத்திலா? யௌவனத்திலா? முதுமையிலா? எப்பொழுது மனிதன் தானபலனை அநுபவிக்கிறானென்பதைத் தேவரீர் எனக்குச் சொல்லவேண்டும்' என்று வினவ, மார்க்கண்டேயர், 'யுதிஷ்டிர! பயனில்லாத ஜன்மங்கள் நான்கு; பயனற்ற தானங்கள் பதினாறு. புத்திரனில்லாதவனுடைய பிறப்புப் பயனற்றது. தர்மத்துக்கு விலக்கானவர்களுடைய பிறப்புப் பயனற்றது. பிறருடைய அன்னத்தைப் புசிக்கிறவர்களுடைய பிறப்பும் பயனற்றது. எவன் (தேவர்முதலியவர்களுக்கல்லாமல்) தனக்கென்று சமைத்து உண்கிறானோ அவனுடைய பிறப்பும் பயனற்றது. [1] எந்தப்பிறப்பில் பசுக்களையும் பிராம்மணர்களையும் காப்பதற்கல்லாமல் பொய்சொல்

1 இதனுடன் ஸூத்ராதிரம். 'வ்ருதாபக்ஷா தஸஸத்யம் ப்ரஸக்தமே' என்பது மூலம்; சில சொற்களை வருவித்து இங்ஙனம் பொருள் செய்வது பழையவுரை; மேலுள்ள சொற்களை விட்டுவிட்டு நான்காகக்கூறுவது இங்கிலீஷ் மொழிபெயர்ப்பு.

லப்படுமோ அந்தப் பிறப்பும் பயனற்றது. [1] ஆரூடபதிதனிடத்தில் செய்யப்படுகிற தானம் வீண். அநீதியினால் தேடப்பட்ட பொருளின் தானமும் வீண். பதிதனிடத்திலும் திருடனான பிராம்மணனிடத்திலும் பொய் சொல்லுவதில் விருப்பமுள்ள ஆசாரியனிடத்திலும் பாபியினிடத்திலும் நன்றிமறந்தவனிடத்திலும் [2] க்ராமயாஜகனிடத்திலும் வேதத்தை விக்ரயம் செய்பவனிடத்திலும் அப்படியே சூத்திரனுக்கு யாகஞ்செய்விப்பவனிடத்திலும் கொடுக்கிற தானம் வீண். (ஒழுக்கமும் வேதாத்யயனமுமில்லாமல் பிறப்பினால்மட்டும் பிராம்மணனாயிருக்கிற) பிரம்மபந்துவினிடத்திலும் பிரௌடையான பெண்ணை மணந்தவனிடத்திலும் கொடுக்கப்படுகிறது வீண். ஸ்திரீகளுக்கு வசப்பட்டவர்களிடத்திலும் அப்படியே பாம்புபிடிப்பவனிடத்திலும் வேலைக்காரர்களிடத்திலும் கொடுக்கப்படுவது பயனற்றது. இவ்விதமாகப் [3] பதினாறுதானங்கள் வீண். அஜ்ஞானத்தால் கவரப்பட்டிருக்கிற எந்த மனிதன், பயத்தாலும் அப்படியே கோபத்தாலும் கொடுப்பனோ அவன் அந்த எல்லாத் தானங்களின் பலனையும், எப்பொழுதும் கர்ப்பத்திலிருக்கையிலேயே அனுபவிக்கிறான். வேறு காரணங்களால் பிராம்மணர்களுக்குத் தானத்தைக் கொடுப்பவன் அந்தத் தானபலனை முதுமையில் அனுபவிக்கிறான். அரசனே! ஆகையால், எல்லா நிலைமைகளிலும், எல்லாத் தானங்களும் ஸ்வர்க்கமார்க்கத்தை ஜயிக்கும் விருப்பத்தால் பிராம்மணர்களுக்குக் கொடுக்கத்தக்கவைகள்' என்று சொன்னார்.

யுதிஷ்டிரர், 'நான்குவர்ணத்தார்களான அவரவரிடத்தினின்றும் தானத்தைப் பெறுவதில் நிலைபெற்றிருக்கிற பிராம்மணர்கள் எந்த விசேஷத்தால் (கொடுத்தவர்களைக்) கரையேற்று

---

[1] 'வாழ்நாள் முழுதும் அனுஷ்டிப்பதாகிய நைஷ்டிகப்ரம்மசர்யம், வானப்ரஸ்தம், ஸந்யாஸம் இவைகளில் நிலைத்திருந்து இல்வாழ்க்கை முதலியவற்றில் விருப்பத்தால் நழுவினவன்' என்பதும், அவனுக்குப் பிராயச்சித்தமில்லையென்பதற்கு ஆதாரமாக ஒருஸ்லோகத்தை எடுத்துக் காட்டுவதும் பழையவுரை.

[2] கிராமத்திலுள்ள ஸகல ஜாதிக்கும் பொதுவாக யாகமுதலியவற்றைச்செய்பவன்.

[3] வீண்தானங்கள் பதினைந்தே ஆகின்றன. 'போலி ஆசாரியனிடத்திலும் பொய்யனிடத்திலும்' என்று இரண்டாகக்கூறிப் பதினாறு ஆக்குவது இங்கிலீஷ் மொழிபெயர்ப்பு.

கிறார்கள்? தாங்களும் கரையேறுகிறார்கள்?' என்று வினவ, மார்க்கண்டேயர், 'பிராம்மணர்கள் ஜபங்களாலும், மந்திரங்களாலும், ஹோமங்களாலும், வேதாத்தியயனத்தாலும் வேதமயமான ஓர் ஓடத்தைச்செய்து (அதனால் அவர்களையும்) கரையேற்றுகிறார்கள்; தாங்களும் கரையேறுகிறார்கள். எவன் பிராம்மணர்களை ஸந்தோஷமடைவிப்பனோ அவனிடத்தில் தேவர்கள் ஸந்தோஷமடைகிறார்கள். மனிதன் பிராம்மணர்களுடைய வசனத்தினாலும் ஸ்வர்க்கலோகத்தை அடைவான். ச்லேஷ்மமுதலியவைகளால் வியாபிக்கப்பட்ட தேகத்துடன் நினைவுமட்டுமிருப்பவனாகி மரணமடைகிற மனிதன் பிதிருக்களையும் தேவர்களையும் பூஜிப்பதனாலும் பிராம்மணர்களை அர்ச்சிப்பதனாலும் அக்ஷயமான புண்ணிய லோகங்களை அடைவான்; ஸந்தேகமில்லை. புண்யமான ஸ்வர்க்கத்தை அடைய விரும்புகிறவன் பிராம்மணர்களையே நன்கு பூஜிக்கவேண்டும். ச்ராத்தகாலத்தில் அருவருக்கப்படத்தக்கவர்களை முயற்சியினால் போஜனம் செய்விக்கவேண்டும். ச்ராத்தகாலத்தில், தேகபலமில்லாதவன், சொத்தை நகங்களுள்ளவன், குஷ்டரோகமுள்ளவன், ஜாலவித்தை செய்பவன், குண்டன், கோளகன், ஆயுதமெடுத்துச் சேவிப்பவன் ஆகிய இவர்களை முயன்று விலக்கவேண்டும். அருவருக்கப்படத் தக்கதாகச் செய்யப்பட்ட ச்ராத்தமானது நெருப்பு விறகை எரிப்பதுபோலக் கர்த்தாவை எரிக்கும். ஊமை, குருடன், செவிடன் முதலியவர்கள் ச்ராத்தத்தில் பூஜிக்கப்படுகிறதில்லையோ அவர்களையும் வேதங்களைக் கரைகண்டவர்களோடு கலந்து ச்ராத்தத்தில் வரிக்கத்தக்கவர்கள்.

யுதிஷ்டிர! தானம் கொடுக்கத்தக்கவனைக் கேள். எல்லாச் சாஸ்திரங்களையும் அறிந்தவன். சக்தியுள்ள எந்தப் பிராம்மணன் தனக்குக் கொடுப்பவனையும் தன்னையும் கரையேற்றுவானோ அவனிடத்தில் தானம் கொடுக்கவேண்டும். எவன் கொடுப்பவனையும் அப்படியே தன்னையும் கரையேற்றுவானோ அவனே சக்தியுள்ளவன். பார்த்த! அக்னிகள் அதிதிகளைப் போஜனம் செய்விப்பதனால் மகிழ்வது போல், ஹவிஸின் ஹோமங்களாலும் புஷ்பங்களாலும் சந்தனங்களாலும் மகிழ்கிறதில்லை. ஆகையால், நீ எல்லாவிதத்தாலும் அதிதிகளைப் போஜனம் செய்விப்பதில் முயல்வாயாக. வேந்தே! எவர்கள் அதிதிகளுக்குக் கால்களை அலம்புவதற்கு ஜலத்தையும், பாதங்களில் பூசுவதற்கு நெய்யையும், தீபத்தையும், அன்னத்தை

யும், இருக்க இடத்தையும் கொடுக்கிறார்களோ அவர்கள் யமனை அணுகுகிறதில்லை. ராஜச்ரேஷ்டனே! தேவதைகள் அணிந்து கொண்டிருந்த மலர்களைக் களைதல், பிராம்மணன் போஜனம் செய்த எச்சில் இலையை எடுத்துச் சுத்திசெய்தல், கந்தம் புஷ்ப முதலியவைகளால் அலங்கரித்து அவனுக்குப் பணிசெய்தல், தேகத்தைப் பிடித்துவிடுதல் இவைகளுள் ஒவ்வொன்றும் கோதானத்தைக்காட்டிலும் மேற்பட்டதாக இருக்கிறது. [1] காராம்பசுவைத் தானம் செய்வதினால் முக்தியடைகிறான். இதில் ஸந்தேகமில்லை. ஆகையால், அலங்காரம் செய்யப்பட்டிருக்கிற காராம் பசுவை வேதாத்தியயனம் செய்தவனும் தரித்திரனும் க்ருஹஸ்தனும் அக்னிஹோத்திரம் செய்பவனும் புத்திரர்களும் மனைவியுமாகிற பாரமுள்ளவனும் அப்படியே (முன்) உபகாரத்தைச் செய்யாதவனுமான பிராம்மணனுக்குக் கொடுக்கவேண்டும். பாரத! இப்படிப்பட்டவர்களுக்கே பசுவைத் தானம் செய்யவேண்டும். செல்வமுள்ளவர்களிடத்தில் பசுவைத் தானம் செய்யலாகாது. பரதச்ரேஷ்டனே! செல்வமுள்ளவர்களிடம் தானம் செய்வதினால் என்ன குணம் உண்டாகும்? ஒரு பசுவை ஒருவனுக்குக் கொடுக்கவேண்டும்; ஒருபொழுதும் பலருக்குக் கொடுக்கலாகாது. அப்படிப் பலருக்குக் கொடுக்கப்பட்ட பசுவானது விக்கிரயம் செய்யப்பட்டால் (கொடுத்தவனுடைய) குலத்தின் மூன்று தலைமுறைகளை அழிக்கும். அந்தப் பசுவானது தன்னைத் தானம்செய்தவனையும் வாங்கின பிராம்மணனையும் ஒருகாலும் கரையேற்றாது; கரையேற்றாது; கரையேற்றாது. ஒருவன் மிக்க தூய்மைவாய்ந்த ஒரு பிராம்மணனுக்கு ஒரு ஸுவர்ணத்தைக் கொடுத்தால் அது நூறு ஸுவர்ணங்களும், அழிவற்றதும் ஆகின்றது. எவன் மிக்கவலிமையுள்ளதும் நுகத்தைச் சுமக்கக்கூடியதுமான வண்டிக்காளையைக் கொடுப்பனோ அவன் ஆபத்துக்களைத் தாண்டுகிறான்; ஸ்வர்க்கலோகத்தையும் அடைகிறான். எவன் கற்றறிந்த பிராம்மணனுக்குப் பூமியைக் கொடுப்பனோ தானம் செய்த அவனை விரும்பப்பட்ட எல்லா அபீஷ்டங்களும் பின்தொடர்கின்றன. வழியில் நடந்து இளைத்த சரீரமுள்ளவர்களும் புழுதிபடிந்தவர்களுமான மனிதர்கள் பூமியில் அன்ன தாதாவைப்பற்றிக் கேட்கிறார்கள்; மனிதர்களும் சொல்லுகிறார்கள். கற்றறிந்த எந்த மனிதன் ச்ரமத்தால் களைத்த அவர்களுக்கே அன்னத்தைப்பற்றிச்

1 'கபிலாயா:' என்பது மூலம்.

சொல்வனோ அவனும் அன்னதானம் செய்தவனுக்கு ஒப்பானவனாகச் சொல்லப்படுகிறான். இதில் ஸந்தேகமில்லை. ஆகையினால், நீ எல்லாத் தானங்களையும்விட்டு அன்னத்தை மிகக்கொடுப்பாயாக. இவ்வுலகில் விசித்திரமான இப்படிப்பட்ட புண்யபலன் கிடையாது. எவன் சக்திக்குத் தக்கபடி நன்றாகப் பக்குவம் செய்யப்பட்ட அன்னத்தைப் பிராம்மணர்களுக்குக் கொடுப்பனோ அவன் அந்தச் செய்கையினால் பிரம்மதேவருடன் 1 ஸாலோக்யத்தை அடைகிறான். அன்னமே மிகச் சிறந்ததன்றோ? அதைக்காட்டிலும் சிறந்ததில்லை. அன்னமானது பிரம்மாவென்று சொல்லப்பட்டிருக்கிறது. அந்தப் பிரம்மதேவர் ஸம்வத்ஸரமென்று எண்ணப்பட்டிருக்கிறார். ஸம்வத்ஸரமோ அப்படிப்பட்ட யஜ்ஞமென்று கருதப்பட்டது. ஆதலால், ஸ்தாவரங்களாகவும் ஜங்கமங்களாகவுமிருக்கிற எல்லாப் பொருள்களும் யஜ்ஞத்தில் நிலைபெற்றிருக்கின்றன. ஆகையால், எல்லா வஸ்துக்களையும் காட்டிலும் அன்னமானது மிக்க மேன்மைபெற்றதென்று கேள்வி. எவர்களுக்கு மிக்க நீருள்ள தடாகங்களும் வாவிகளும் கிணறுகளும் வீடுகளும் அன்னதானமும் இன்சொல்லும் இருக்கின்றனவோ 2 அவர்கள் யமனுடைய சொல்லைக் காதால் கேட்கமாட்டார்கள். எவன் வருந்தித்தேடிய பொருளால் சேர்க்கப்பட்ட தானியத்தை நல்ல ஸ்வபாவமுள்ள பிராம்மணனுக்குக் கொடுக்கிறானோ அவன்விஷயத்தில் பூமியானது தனங்களுடைய தாரையை வெளியிடுகிறதுபோல (இருந்துகொண்டு) மிக்கமகிழ்ச்சியுள்ளதாகும். அன்னதானம் செய்பவர்கள் முதலில் செல்லுகிறார்கள். உண்மையைப் பேசுகிறவனும் கேளாமலே கொடுப்பவனும் அவர்களைப் பின்பற்றிச் செல்லுகிறார்கள். மூவரும் ஸமமாக ஸ்வர்க்கத்தை அடைகிறார்கள்' என்று சொன்னார்.

தம்பியர்களுடன் கூடின யுதிஷ்டிரர் குதூஹலத்துடன், மகாத்மாவான மார்க்கண்டேயரைப் பார்த்து, மறுபடியுமே, 'மகாமுனிவரே! யமலோக மார்க்கமானது எப்படிப்பட்டது? என்ன அளவுள்ளது? மனிதலோகத்திற்கும் யமலோகத்திற்கும் எவ்வளவு தூரம் இருக்கிறது? அது எவ்விதமாக இருக்கிறது? மனிதர்கள் எந்த உபாயத்தால் அந்த வழியைக் கடக்கிறார்கள்? அதை எனக்குச் சொல்வீராக' என்று வினவ,

---

1 ஸமலோக வாஸம்; அதாவது ஒரே லோகத்தில் வஸிப்பது.

2 அவற்றைக் கொடுப்பவர்கள் என்பது.

மார்க்கண்டேயர், 'வேந்தே! தார்மிகர்களுள் சிறந்தவனே! எல்லா ரஹஸ்யங்களையுங்காட்டிலும் மிக்க ரஹஸ்யமாயிருப்பதும், பரிசுத்தமானதும், ரிஷிகளால் நன்கு துதிக்கப்பட்டதுமான தர்மத்தை உன் வினவுக்கு மறுமொழியாக உனக்கு உரைப்பேன். அரசனே! யமலோகத்திற்கும் மனுஷ்யலோகத்திற்கும் மத்தியிலிருக்கிற வழியானது எண்பத்தாறாயிரம் யோஜனைதூரம் உள்ளது. கோரமாயிருப்பதும் காடாகக் காணப்படுகிறதுமான அவ்வழியானது நாற்புறங்களிலும் தண்ணீரில்லாத வெளியாயிருக்கிறது. அந்த வழியில் மரங்களின் நிழல் கிடையாது; தண்ணீருமில்லை; களைப்படைந்தவனும் இளைத்தவனுமான மனிதன் இளைப்பாறத்தக்க வீடுகளுமில்லை. யமனுடைய கட்டளையைச் செய்கின்ற யமதூதர்களால் புருஷர்களும் ஸ்திரீகளும் அப்படியே பூமியில் உயிருள்ள மற்றவைகளும் அந்தவழியினால் பலாத்காரமாகக் கொண்டுபோகப்படுகிறார்கள். அரசனே! எந்தமனிதர்கள் குதிரைமுதலிய வாகனங்களின் பலவிதமான சிறந்ததானங்களைப் பிராமணர்களுக்குக் கொடுக்கிறார்களோ அவர்கள் (அந்த வாகனங்களாலேயே) அந்த வழியில் செல்லுகிறார்கள்; குடைகளைத்தானஞ்செய்பவர்கள் குடையினாலேயே வெய்யிலைத்தடுத்துக்கொண்டு செல்லுகிறார்கள்; அன்னதானம் செய்பவர்கள் அன்னத்தினால் திருப்தியடைந்தவர்களாகச் செல்லுகிறார்கள்; பிறருக்கு அன்னத்தைக் கொடாதவர்கள் பசியினால் துன்பமுற்றவர்களாகச் செல்லுகிறார்கள்; வஸ்திரங்களைக் கொடுப்பவர்கள் வஸ்திரமுள்ளவர்களாகவும் வஸ்திரம் கொடாதவர்கள் வஸ்திரமில்லாதவர்களாகவும் செல்லுகிறார்கள்; பொன்னைக் கொடுக்கிற மனிதர்களோ அலங்கரிக்கப்பட்டவர்களாக ஸுகமாகச் செல்லுகிறார்கள்; பூதானஞ் செய்பவர்கள் விரும்பின எல்லாவற்றாலும் நன்கு திருப்தியை அடைவிக்கப்பட்டவர்களாக ஸுகமாகச் செல்லுகிறார்கள்; தானியங்களைக் கொடுக்கிற மனிதர்கள் கிலேசமில்லாமலே செல்லுகிறார்கள்; வீட்டைத் தானஞ்செய்கிற மனிதர்கள் விமானங்களில் மிக்கஸுகமாகச்செல்லுகிறார்கள்; தீர்த்தத்தைத் தானஞ் செய்கிற மனிதர்கள் தாகமில்லாதவர்களாகவும் மிகமகிழ்ந்த மனமுள்ளவர்களாகவும் செல்லுகிறார்கள்; தீபதானஞ் செய்கிறவர்கள் வழியைப் பிரகாசிக்கச்செய்துகொண்டு இனிது செல்லுகிறார்கள்; கோதானஞ் செய்கிறவர்கள் எல்லாப்பாவங்களாலும் விடுபட்டு ஸுகமாகச் செல்லுகிறார்கள். ஐந்நூறாம் உட

வாஸமிருப்பவர்கள் அன்னங்கள் கட்டின விமானங்களால் செல்லுகிறார்கள்; அப்படியே [1] ஆறுநாளுக்கொருதரம் உபவாஸமிருப்பவர்கள் மயில்கள் பூட்டின விமானங்களால் செல்லுகிறார்கள்; பாண்டவா! எந்த மனிதன் ஒருவேளை சாப்பிட்டுக்கொண்டு மூன்று இரவுகளைக் கழிக்கிறானோ, இடைவேளைகளில் சாப்பிடுகிறதில்லையோ அவனுக்கு அழிவற்ற லோகங்கள் ஏற்படுகின்றன. தீர்த்தத்தின் குணங்கள் அத்புதமானவை. யமலோகத்தில் சௌக்கியத்தை உண்டுபண்ணுகின்றன. அந்தத் தீர்த்தத்தைத் தானஞ்செய்பவர்களுக்கு அங்கே புஷ்போதகை என்கிற நதியானது உண்டுபண்ணப்படுகிறது. அந்நதியில் அவர்கள் அமிருதம்போன்ற குளிர்ந்த ஜலத்தைப் பானஞ்செய்கிறார்கள். பாவிகள் தீவினைகளைச் செய்தவர்களை அவர்களுக்கு (அந்நதியில்) சீழானது குடிப்பதற்கு ஏற்படுத்தப்படுகிறது. மஹாராஜனே! இவ்வண்ணமாக அந்த நதியானது எல்லா அபீஷ்டங்களையும் கொடுக்கிறதன்றோ? ராஜேந்திரனே! ஆகையால், நீயும் இந்தப்பிராம்மணர்களை விதிப்படி பூஜிப்பாயாக. வழிநடையினால் இளைத்த சரீரமுள்ளவனும் வழிநடையினால் புழுதிபடிந்தவனுமாயிருப்பவன், 'அன்னதானஞ் செய்பவன் யார்?' என்று கேட்கிறான்; அவன் ஆசையுடன் வீட்டுக்கு வருகிறான். அவனை நீ முயற்சியுடன் பூஜிப்பாயாக. அவனே அதிதி. அவன் பிராம்மணன். இந்திரனுடன்கூடின எல்லாத் தேவர்களும், செல்லுகின்ற அந்த அதிதியைப் பின்தொடர்ந்து செல்லுகிறார்கள். அவன் நன்றாகப் பூஜிக்கப்பட்டால் தேவர்கள் திருப்தியடைகிறார்கள்; பூஜிக்கப்படாவிட்டால் ஆசையற்றவர்களாகிறார்கள். ராஜேந்திரனே! ஆகையால், நீயும் அவனை விதிப்படி பூஜிப்பாயாக. இக்கவிஷயம் உனக்கு நாற்றுக் கணக்காகச் சொல்லப்பட்டது. மேலும் என்ன கேட்க விரும்புகிறாய்?' என்று சொன்னார்.

யுதிஷ்டிரர், 'கர்மங்களை அறிந்தவரே! பிராம்மணரே! கர்மத்தைப் பற்றிய பலன்களை நீர் சொல்லுகிறதை அதிகமாக நான் கேட்க விரும்புகிறேன்' என்று வினவ, மார்க்கண்டேயர், 'ராஜனே! நீயும் கர்மத்தைப்பற்றி என்னால் சொல்லப்படுகிறதும் எல்லாப்பாவங்களையும் போக்குகிறதுமான கதையை என் வாயிலிருந்து வெளிவரும் மனம்பற்றினவனாகக் கேள். பரத

1 'ஷஷ்டகாலே' என்பது மூலம்; 'ஆறு இரவு உபவாஸமிருப்பவர்கள்' என்பது இங்கிலீஷ் மொழிபெயர்ப்பு.

ப்ரேஷ்டனே! [1] ஜ்யேஷ்ட புஷ்கரத்தில் காராம்பசுவானது கொடுக்கப்பட்டால் என்ன பலனுண்டோ அந்தப்பலனானது பிராம்மணர்களுடைய பாதத்தை அலம்புகிறதனால் ஏற்படுகிறது. பூமியானது எவ்வளவுகாலம்வரையில் பிராம்மணனுடைய பாதத்தை அலம்பின ஜலத்தால் நனைந்திருக்கிறதோ அவ்வளவுகாலம்வரையில் பித்ருக்கள் தாமரை இலையினால் தீர்த்தத்தைப் பானம்பண்ணுகிறார்கள். பிராம்மணனைக் குறித்துக் கூறப்படும் வரவேற்புச்சொல்லால் அக்னிகள் த்ருப்தி அடைகின்றன; ஆஸனம் கொடுப்பதினால் இந்திரன் திருப்தி அடைகிறான்; காலை அலம்புவதனால் பித்ருக்கள் திருப்தி அடைகிறார்கள். அன்னம் முதலியன கொடுத்தலால் பிரம்மதேவர் திருப்தி அடைகிறார். பசுவானது கன்று போடும் தருணத்தில் கன்றினுடைய இரண்டு கால்களும் தலையும் காணப்படும்பொழுது பரிசுத்தமான மனத்துடன் அந்தப் பசுவைத் தானம் செய்யவேண்டும். கன்றானது ஆகாசத்தை அடைந்ததாகப் பசுவின் கடையில் காணப்பட்டுப் பசுவும் கர்ப்பத்தை முழுதும் ஈனுமளவிருக்கும்வரையில் அந்தப்பசு பூமியாக அறியத்தக்கது. யுதிஷ்டிரா! அந்தப்பசுவினுடைய கன்றினுடைய எத்தனை ரோமங்கள் இருக்கின்றனவோ அத்தனை ஆயிரம்யுகங்கள் வரையில் அந்தத்தானம்கொடுப்பவன் ஸ்வர்க்கலோகத்தில் பூஜிக்கப்படுகிறான். பாரத! எந்தமனிதன் ஸ்வர்ணமயமான மூக்குள்ளதும் குளம்புகளுள்ளதும் எல்லா ரத்தினங்களாலும் அலங்கரிக்கப்பட்டதும் எள்ளைவைத்து மூடப்பட்டதுமான காராம்பசுவைச்செய்து தானம்செய்வனோ, எவன் இந்தக் காராம்பசுவைத் தானம்வாங்கி மீண்டும் ஸாதுவினிடத்தில் கொடுப்பனோ அந்தத்தானத்தையும் பிரதிக்ரஹத்தையும் செய்தவர்கள் தானபலன்களுள் சிறந்த பலனை அனுபவிக்கின்றனர். அவர்களால் கடல்களால் சூழப்பட்டதும் மலைகளுடனும் காடுகளுடனும் சோலைகளுடனும் கூடியதும் நாற்புறங்களிலும் ஸமுத்திரங்களை எல்லையாகக்கொண்டதுமான பூமியானது கொடுக்கப்பட்டதாகும். இதில் ஸந்தேகமில்லை. எந்தப் பிராம்மணன் இரண்டு முழங்கால்களின் நடுவில் கைகளை உடையவனாகவும் போஜனபாத்திரத்தைத் தொட்டுக்

[1] பிரம்மாவினால் உண்டுபண்ணப்பட்ட ஒரு தீர்த்தம். அதற்கு ரூபதீர்த்தம் என்றும் முகதர்சனம் என்றும் வேறு பெயர்களுண்டு. அதில், ஜ்யேஷ்ட புஷ்கரம் மத்யம புஷ்கரம் கனிஷ்ட புஷ்கரம் என்று மூன்று மடுக்களுண்டு.

கொண்டவனுகவும் சப்தமில்லாமல் போஜனம் செய்வானே அவன் கரையேற்றுவதற்குத் திறமையுள்ளவன். எவர்கள் [1] குடி தண்ணீரைக் கொடுக்கிறார்களோ, அப்படியே வேறு எந்தப் பிராம்மணர்கள் வேத [2] ஸம்ஹிதையை நன்றாக ஜபம் செய்கிறார்களோ அவர்கள் எப்பொழுதும் கரையேற்றத் திறமையுள்ளவர்கள். ஹவ்யகவ்யங்களனைத்தையும் [3] ச்ரோத்திரியன் அடைவதற்குத் தகுதியுள்ளவன். தார்மிகனான ச்ரோத்திரியனிடத்தில் கொடுக்கப்பட்டதானமானது ஜ்வலிக்கின்ற நெருப்பில் ஹோமம் செய்யப்பட்ட ஹவிஸ்போலப் பயனுள்ளது. பிராம்மணர்கள் கோபத்தை ஆயுதமாகக் கொண்டவர்கள். பிராம்மணர்கள் ஆயுதமெடுத்து யுத்தம் செய்பவர்களல்லர். இந்திரன் அஸுரர்களை வஜ்ராயுதத்தால் கொல்லுவதுபோலப் பிராம்மணர்கள் குற்றம் செய்தவர்களைக் கோபத்தினுல் கொல்லுவார்கள். தோஷமற்றவனே! எந்தக் கதையைக் கேட்டு நைமிசாரண்யத்தில் வஸிக்கின்ற முனிவர்கள் பிரீதியடைந்தார்களோ அப்படிப்பட்ட தர்மத்தை அடுத்த இந்தக் கதையானது உனக்குக் கூறப்பட்டதன்றோ? வேந்தே! இவ்வுலகத்தில் மனிதர்கள் இந்தக் கதையைக் கேட்டுத் துயரத்தையும் பயத்தையும் கோபத்தையும் விட்டவர்களும் அப்படியே பாவம் தொலைந்தவர்களும் ஆகிறார்கள்' என்று கூறினர்.

யுதிஷ்டிரர், 'மகாப்ராஜ்ஞரே! தார்மிகர்களுள் சிறந்தவரே! எதனுல் பிராம்மணன் எப்பொழுதும் சுத்தனுவனே அந்தச் சௌசமென்பது யாது? அதைக் கேட்கவிரும்புகிறேன்' என்று சொல்ல, மார்க்கண்டேயர், 'வாக்சௌசமென்றும், கர்மசௌசமென்றும், ஜலசௌசமென்றும் சௌசம் மூன்றுவிதமானது. எவன் மூன்று சௌசங்களோடுங்கூடியவனே அவன் ஸ்வர்க்கத்தை அடைகிறான். இதில் ஸந்தேகமில்லை. எந்தப் பிராம்மணன் ஸாயங்காலத்திலும் அதிகாலையிலும் பரிசுத்தமானதும் வேதமாதாவுமான காயத்ரிதேவியை நன்றாக ஜபித்துக்கொண்டு ஸந்தியை உபாஸிப்பனே அந்தப் பிராம்மணன் கடல்சூழ்ந்த பூமியைத்

[1] 'மதுபானம் செய்யாதவர்களும் தோஷமுள்ளவர்களென்று சொல்லப்படாதவர்களும்' என்பது வேறுபாடத்தின் பொருள்.

[2] எழுத்துக்களை உச்சரிப்பதில் ஒன்றுக்கொன்று இடையில் இடமாகவிடவேண்டிய அரைமாத்திரைக் காலத்தைக் கடவாமல் தொடர்ந்து சொல்லப்படுவது.

[3] வேத வேதாங்கங்களை ஓதி உணர்ந்தவன்.

தானம்வாங்கினாலும் அந்தக் காயத்ரீதேவியினால் பரிசுத்தம் செய்யப்பட்டவனும் பாவமழிந்தவனுமாகிக் குறைவடைய மாட்டான். இவன் விஷயத்தில் ஆகாயத்தில் ஸூர்யன் முதலிய கிரஹங்களுள், குரூரமாயிருப்பவைகள் சாந்தமானவைகளும் அனு கூலமாயிருப்பவைகள் எப்பொழுதும் மிக்க அநுகூலமாயிருப் பவைகளும் ஆகின்றன. பயங்கரமாயிருப்பவர்களும் கோரரூப முள்ளவர்களும் பருத்த தேகமுள்ளவர்களுமான எல்லா ராக்ஷஸர் களும் காயத்ரீ ஜபத்தில் பற்றுதலுள்ள இந்தப்ராம்மணோத்தமனை ஹிம்ஸிக்கமாட்டார்கள். பிறருக்கு வேதங்களைச் சொல்லிவைப் பதினாலோ பிறருக்கு யாகத்தைச் செய்விப்பதினாலோ அநியாய மான பிரதிக்ரஹத்தினாலோ பிராம்மணர்களுக்குத் தோஷம் கிடையாது. பிராம்மணர்கள் எரிகிற நெருப்பைப்போன்றவர்கள். பிராம்மணர்கள் வேதத்தை அறியாதவர்களானாலும் அறிந்தவர்க ளானாலும் அசக்தர்களானாலும் சக்தர்களானாலும் அவமதிக்கத் தக்கவர்களல்லர். அவர்கள் சாம்பலால் மூடப்பட்ட நெருப்புப் போன்றவர்கள். இடுகாட்டில் எழுந்து ஜ்வலிக்கின்ற நெருப்பா னது தோஷமுள்ளதாகாததுபோல அறிந்தவனானாலும் அறியா தவனானாலும் பிராம்மணன் பரிசுத்தமானவனே. அவன் பெரிய தேவதை. பிராம்மணோத்தமர்களால் விடப்பட்டிருக்கிறபட்டணங் கள் மதில்களாலும் கோட்டைவாசல்களாலும் பலவித மேல் மாடிகளாலும் விளங்குகிறதில்லை. அரசனே! எதில் வேதங்களால் நிறைந்தவர்களும் நல்லொழுக்கமுள்ளவர்களும் சிறந்த ஞான முள்ளவர்களும் தவசிகளுமான பிராம்மணர்கள் இருக்கிறார்களோ அதல்லவோ பட்டணம்? குந்திநந்தனா! இடைச்சேரியிலோ காட் டிலோ எதில் பல சாஸ்திரங்களை அறிந்தவர்கள் இருக்கிறார்களோ அதை நகரமென்று சொல்லுகிறார்கள். அது தீர்த்தமும் ஆகும். மனிதன் பாதுகாக்கிற அரசனையும் தவஞ்செய்கிற பிராம்மணனை யும் அணுகி நேரில் பூஜித்தால் உடனே பாவத்தினின்று விடுபடு கிறான். புண்யதீர்த்தங்களில் ஸ்நானம் செய்தலும் பரிசுத்த வஸ்துக்களைச் சொல்லுதலும் ஸாதுக்களோடு ஸம்பாஷணமும் சிறந்தவையென்று அறிஞர்களால் சொல்லப்படுகின்றன. நல்லோர் கள் எப்பொழுதும் தம்மை ஸாதுக்களுடைய சேர்க்கையினால் பரி சுத்தமான இன்சொல்லாகிற ஜலத்தால் பரிசுத்தம் பண்ணப்பட்ட தாக நினைக்கிறார்கள். மண்ணைப் பாரத்தாலையத்தோனால் த்ரிதண்டங்களைத் தரித்தல், மௌனம், ஜடைகளைத் தரித்தல்,

மொட்டை அடித்துக்கொள்ளுதல், மரவுரியையும் மான்தோலையும் உடுத்தல், விரதானுஷ்டானம், ஸ்நானம், அக்நிஹோத்ரம், வனத்தில்வாஸம், உடம்பை உலர்த்தல் இவை அனைத்தும் பயனற்றனவாகும். கண்முதலிய ஞானேந்திரியங்களாலும் அனுபவிக்கப்படுகிற பொருள்களுக்குச் சாஸ்திரியமான சுத்தியில்லாமற்போனாலும் அந்த இந்திரியங்களுக்கு அனுபவஸுகம் கிடைத்துவிடுகிறது. ஆயினும், பொருள்களுக்குச் சுத்தியில்லாமல் கிடைக்கும் ஸுகம் மோக்ஷ ஸாதனமாகாது. ராஜேந்திரனே! ஏனெனில், விகாரத்துடன்கூடின அவர்களுடைய மனமானது எவ்விதத்தாலும் அடக்க முடியாதது. எவர்கள் மனத்தினாலும் வாக்கினாலும் செய்கையாலும் புத்தியாலும் பாவங்களைச் செய்வதில்லையோ அந்த மகாத்மாக்கள் உடம்பை உலர்த்துகிற தவத்தைச் செய்யமாட்டார்கள். எவனுக்குப் புத்திரன் முதலிய பந்துக்களிடத்தில் கருணையில்லையோ, அவன் [1] சுத்த தேகமுள்ளவனாயிருந்தாலும் பாவமில்லாதவனாகான். (கருணையில்லாமையாகிய) அது அவனுடைய தவத்துக்குத் தீங்காகிறது. உண்ணாமலிருப்பதே தவமென்று கருதப்படவில்லை. எப்பொழுதும் சுத்தனாயிருப்பவனும் அலங்கரிக்கப்படாதவனும் தனது வாழ்நாள் முழுதும் அன்போடு நற்பயனுடனே மனிதனே முனிவன். அவன் வீட்டிலிருந்தாலும் எல்லாப்பாவங்களாலும் விடுபடுகிறான். ஆகாரமின்மை முதலியவைகளால் பாவச்செயல்கள் சுத்தி அடையாவல்லவா? அனசனாரம்பத்தினால் தேகம் மாத்திரம் வாட்டமடைகிறது. சாஸ்திரத்தினால் சொல்லப்பட்டபடி கர்மங்களைச் செய்தல் அவைகளைச் செய்தவனுக்கு நன்மையாக்கின்றன. அதனால் பாவம் போகாது. நல்ல எண்ணமில்லாத மனிதனுடைய கர்மங்களை அக்னியானது எரிக்காது. தவத்தினாலும் மனமொழிமெய்களின் தூய்மையினாலுமே நல்ல உலகங்களை அடைகின்றனர். அனசனாதிவிரதங்களும் (= உண்ணாவிரதங்களும்) சுத்தி உண்டுபண்ணுகின்றன. கிழங்குகளைப் புசிப்பதினாலும், மௌனத்தினாலும், வாயுபக்ஷணத்தினாலும், தலையை மொட்டையடித்துக்கொள்வதினாலும், ஸ்திரமான வீடுகளை விடுவதினாலும், சடைகளைத் தரிப்பதினாலும், [2] மேடைகளில் படுப்பதினாலும், நித்யம் பட்டினியிருப்ப

1 'சுக்ல தேஹ:' என்பது மூலம். 'சுக்கிலமான தொழிலால் ஜீவிப்பவனாயினும்' என்பது பழைய உரை. 2 'ஆகாசமென்கிற மேற்கட்டியின் கீழ்ப்படுப்பது' என்பது இங்கிலீஷ் மொழிபெயர்ப்பு.

தனாலும், அக்னியின் சுச்ரூஷையினாலும், தீர்த்தங்களில் ஸ்நானம் செய்வதினாலும், தரையில் படுப்பதினாலும் மனிதன் உத்தமஸ்தானத்தை அடையமாட்டான். ஞானத்தாலாவது (பயனை விரும்பாத) கர்மத்தாலாவது பிணியும் மூப்பும் சாக்காடும் அற்றுப்போகின்றன; உத்தமமான பதமும் அடையப்படுகிறது. நெருப்பால் எரிக்கப்பட்ட வித்துக்கள் எவ்வாறு மறுபடி முளையாவோ அவ்வாறே ஞானத்தால் எரிக்கப்பட்ட கிலேசங்களோடு மறுபடி ஆத்மா சேர்கிறதில்லை. பெரிய ஸமுத்திரத்தில் நுரைகள்போல ஆத்மாவினால் விடுபட்டவையும், கட்டையும் உள்ளே எலும்புவைத்துக்கட்டின சுவரும் போன்றவையுமான சரீரங்கள் நாசமடைகின்றன. ஸந்தேகமில்லை. எவன் ஒரு ச்லோகத்தினாலாவது, ச்லோகத்தின் பாதியினாலாவது எல்லாப் பிராணிகளுடைய ஹிருதயத்திலும் வஸிக்கின்ற பரமாத்மாவை அடைகிறானோ அவனுக்கு வேண்டுவது ஒன்றுமில்லை. [1] சிலர் மோக்ஷத்திற்கு ஸாதகமான ஞானத்தை அடைந்து இரண்டு அக்ஷரமடங்கின பிரம்ம சப்தத்தினால் தியானிக்கும் ச்லோகமென்கிற பதத்தால் அடையாளமிடப்பட்டிருக்கிற நூறு உபநிஷத்துக்களாலும் ஆயிரம் உபநிஷத்துக்களாலும் பிரம்மத்தை அடைகிறார்கள். ஸம்சயத்தால் கவரப்பட்ட மனமுள்ளவனுக்கு இவ்வுலகமுமில்லை; மறுஉலகமுமில்லை; ஸுகமுமில்லை. ஞானத்தை அடைந்த வ்ருத்தர்கள் [2] ஞானம் மோக்ஷ ஸாதனமென்று கூறுகின்றனர். ஆத்மதத்வங்களை அறிந்தவனோ வேதங்களுடைய உபயோகத்தை நன்றாக அறிகிறான். அந்த மனிதனே காட்டுத்தீயினிடமிருந்து நடுங்குவதுபோல வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிற கர்மங்களினிடமிருந்து நடுங்குகிறான். ஓரக்ஷரமான பிரணவத்தினால் சொல்லப்பட்டிருக்கிற பிரம்மதத்வத்தை ஹேதுக்களால் அறிய விரும்புகிறாயாகில் வெறு யுக்திவாதத்தைவிட்டு வேதத்தையும் ஸ்ம்ருதியையும் பிரமாணமாகக்

---

1 'சிலர் தத்வம் என்கிற இரண்டக்ஷரங்களடங்கின மஹாவாக்யத்தினால் பிரம்மம் நிர்விசேஷமென்று சொல்லுகிற சாஸ்திரக்கருத்தை அறிந்து (ஸத்யம் ஜ்ஞானம் அனந்தம் என்பவை முதலிய) மந்த்ர பதங்களால் அடையாளமிடப்பட்ட பிராம்மணங்களடங்கின நூறு உபநிஷத்துக்களாலும் வேறு ஆயிரம் உபநிஷத்துக்களாலும் பிரம்மத்தை அடைகிறார்கள். 'நான் பிரம்மமாயிருக்கிறேன்' என்கிற தன்னை ஸாக்ஷியாகக் கொண்ட அனுபவமானது மோக்ஷத்தை அறிவிப்பதாகிறது' என்பது பழையவுரை. 2 'ப்ரத்யய:' என்பது மூலம்.

கொள்ளக்கடவாய். (சமதமமுதலியவைவும் வேத சாஸ்திரமுதலியவையுமான) ஸாதனங்களில்லாமையால் (யுக்திவாதியான) அவனுக்குத் தத்வஜ்ஞானம் கைகூடாது. அழிவற்ற பிரம்மதத்வமானது வேதத்தை முன்னிட்டு முயற்சியினால் அறியத்தக்கது. அந்த ப்ரம்மமே வேதம் (=பிரணவம்). வேதமானது அந்தப்ரம்மத்திற்குச் சரீரம். வேதமானது அந்தப்ரம்மதத்வத்தை அறிவதற்குக் காரணமாயிருக்கிறது. அந்த வேதத்துக்கு லயஸ்தானமான ஆத்மதத்வத்தை அறிவிக்கும் விஷயத்தில் ஆத்மாவானது சக்தியற்றதாயிருக்கிறது. ஆதலால், அந்தஆத்மதத்வமானது அறியக் கூடிய புத்திதத்வத்தால் அறியத்தக்கதாயிருக்கிறது. வேதங்களில் கூறப்பட்டஆயுளும் காரியங்களை உத்தேசித்துத் தேவர்கள்கொடுக்கும் பலன்களும் சரீரிகளுடைய காரியத்திறமையும் உலகத்தில் யுகத்தை அநுஸரித்து உண்டாகின்றன. இந்திரியங்களுடைய தெளிவினால் அப்படிப்பட்ட இந்தப்பாவத்தை விலக்கவேண்டும். ஆகையால், மனமுதலிய இந்திரியங்களை அடக்குவதே சிறந்த உண்ணாவிரதமாம். தவத்தினால் ஸ்வர்க்கமானது அடையப்படுகிறது. தானத்தால் ஸுகாநுபவம் உண்டாகிறது. தீர்த்தஸ்நானத்தால் பாவம் நீங்குகிறது; (ஆனால்,) ஞானத்தாலேயே மோக்ஷம் கைகூடுமென்று அறியவேண்டும்' என்று சொன்னார்.

ராஜேந்திரா! இவ்வாறு சொல்லப்பட்டவரும் மிக்க புகழுள்ளவருமான யுதிஷ்டிரர், மார்க்கண்டேயரைப்பார்த்து, 'பகவானே! உத்தமமான தானவிதியைக் கேட்பதற்கு விரும்புகிறேன்' என்று கூறினார். மார்க்கண்டேயர், 'யுதிஷ்டிர! ராஜேந்திரனே! எந்தத் தானதர்மத்தைப்பற்றி நீ வினவுகிறாயோ இந்த விஷயமானது அப்படிப்பட்ட பெருமையுடையதாதலால் எப்பொழுதும் எனக்கு இஷ்டமானது. வேதங்களாலும் தர்மசாஸ்திரங்களாலும் சொல்லப்படுகிற தானரஹஸ்யங்களைக்கேள். யுதிஷ்டிர! [1] கஜச்சாயையில் [2] அபரபக்ஷத்தில் இலைகளால் வீசப்படுகிற (ஜலக்கரையில்) எந்த ப்ராத்தகர்மமானது செய்யப்படுகிறதோ அந்தக் கர்மத்தினால் செய்தவன் ஆயிரம் கல்பகாலங்கள் குறைவடையமாட்டான். கௌந்தேய! ஸ்ரீவினத்தின்பொருட்டுப் பொருளைக்கொடுத்துப் பிராம்மணனை தன்வீட்டில் எவன் வஸிக்கச் செய்வானோ அவன் எல்லா யஜ்ஞங்களாலும் தேவதைகளை

1 அநுசாஸனபர்வம் 480, 663 பக்கம் குறிப்புக்களிற் காண்க.

2 தேறுபாட்டம்.

ஆராதித்தவனாகிறான். நதியின் பிரவாஹமானது தனக்கு எதிர்முகமாக விளங்கிச் செல்லுகிற இடத்தில் தகுந்தவனிடம் தானம் செய்யப்பட்ட சிறந்த குதிரைகள் அக்ஷயபலனைக்கொடுக்கின்றன. அன்னத்திற்காக க்ருஹஸ்தனை அடைகிற அதிதி இந்திரனே. அவனும் அக்ஷயமான ஸ்வர்க்கத்தைக் கொடுப்பான். இப்படி தானம் செய்தவர்கள், பெருங்கடலைக் கப்பலால் தாண்டுவதுபோல மஹாபாதகங்களை எளிதில் தாண்டுகிறார்கள். கிரஹணகாலத்தில் பிராம்மணனுக்குக் கொடுக்கப்படுகிற தயிராடைகள் அக்ஷயமாகின்றன. பர்வகாலங்களில் கொடுக்கப்பட்டதானம் இரண்டு மடங்காகிறது. ருதுக்களில் தானம் பத்து மடங்காகும். 1 அயனத்திலும், 2 விஷுவத்திலும், 3 ஷடசீதி முதலிய புண்ணியகாலங்களிலும், சந்த்ர க்ரஹண ஸூர்ய க்ரஹண காலங்களிலும் தானமானது அக்ஷயமென்று சொல்லப்படுகிறது. ருதுக்களில் கொடுக்கப்பட்டதானத்தைப் பத்துமடங்கு பலனுள்ளதென்று சொல்லுகிறார்கள். ருது அயனம் முதலிய புண்யகாலங்களில் தானமானது நிச்சயமாகவே நூறுமடங்கு பலனுள்ளது. ராகுவினுடைய க்ரஹணகாலத்தில் தானம் ஆயிரம் மடங்காகிறது. விஷுவத்தில் தானம் செய்வதால் அக்ஷய பலனை அடைகிறான். அரசனே! பூமியைக் கொடாதவன் பூமியை அநுபவிக்கமாட்டான். வாகனத்தைக்கொடாதவன் வாகனத்தில் ஏறிச்செல்லமாட்டான். விருப்பமான அந்த அந்த வஸ்துக்களைப் பிராம்மணர்களுக்குக் கொடுக்கிறானோ, அந்த அந்த விருப்பமான வஸ்துக்களை, கொடுத்த மனிதன் மறுஜன்மத்தில் அநுபவிக்கிறான். பொன்னானது அக்னியினுடைய மூத்த குழந்தை. பூமியானது விஷ்ணுவினுடையமனைவி. பசுக்கள் ஸூர்யனுடைய புத்ரிகள். எவன் பொன்னையும் பசுக்களையும் பூமியையும் தானம் செய்கிறானோ அவனால் மூவுலகங்களும் தானம் செய்யப்பட்டவைகளாகின்றன. மூவுலகத்திலும் தானத்தைக்காட்டிலும் சிறந்ததும் பரிசுத்தமுமான வஸ்து முன் இருந்ததுமில்லை; இனியும் இராது. அப்படியிருக்க, கலிகாலத்தில் எப்படி இருக்கும்? ஆகையால், உலகங்களில் சிறந்த புத்தியுள்ளவர்கள் தானத்தையே கொடுப்பதும் புண்ணியமானதாகச் சொல்லுகிறார்கள்' என்று கூறினார்.

1 அதிக பாடமான அர்த்தஸ்லோகம் விடப்பட்டது. அயனம் — ஆடி தை மாதங்களின் பிறப்பு. 2 சித்திரை ஐப்பசி மாதங்களின் பிறப்பு. 3 ஆனி, புரட்டாசி, மார்கழி, பங்குனி மாதப் பிறப்புக்கள்.

அந்தக் குவலாஸ்வராஜன் துந்துமாரனென்று பிரஸித்தியை அடைந்தவிதத்தைக் கேட்பாயாக. அப்பா! பாரத! பிரஸித்திபெற்ற உதங்கரென்கிற ஒரு மஹரிஷி இருந்தார். கௌரவ! அழகிய காட்டில் அவருடைய ஆஸ்ரமமிருந்தது. மகாராஜனே! விபுவான உதங்கரோ, விஷ்ணுவை ஆராதிக்க விருப்பங்கொண்டு பல வருஷகாலம் செய்ய மிகஅரிய தவத்தைச் செய்தார். அவர் விஷயத்தில் பிரீதியடைந்த அந்த விஷ்ணுபகவான் அவருக்கு நேரில் காட்சியளித்தார். மஹரிஷியானஉதங்கர், அந்தப் பகவானை, 'மிக்க காந்தியுள்ளவரே! தேவரே! தேவர்களோடும் அஸுரர்களோடும் மனிதர்களோடும்கூடின எல்லாப் பிரஜைகளும், அப்படியே ஸ்தாவரங்களாகவும் ஜங்கமங்களாகவுமிருக்கிற பிராணிகளும், ப்ரம்மத்தைச் சொல்லுகிற வேதங்களும், அறியத்தக்க வஸ்துவும் உம்மால் உண்டுபண்ணப்பட்டிருக்கின்றன. தேவரே! ஆகாயம் உம்முடைய தலை. சந்திர ஸூர்யர்கள் உம்முடைய கண்கள். அச்சுதரே! காற்று உம்முடைய மூச்சு. நெருப்பு உம்முடைய தேஜஸ். எல்லாத்திசைகளும் உம்முடைய கைகள். மகாஸமுத்திரம் உம்முடைய வயிறு. தேவரே! மலைகள் உம்முடைய தொடைகள். மதுஸூதனரே! ஆகாசம் உம்முடைய நாபி. பூமியானது உம்முடைய கால்கள். அப்படியே, ஓஷதிகள் உரோமங்கள். இந்திரன், சந்திரன், அக்னி, வருணன், தேவர்கள், அஸுரர்கள், மஹோரகர்கள் ஆகிய எல்லாரும் வணக்கமுள்ளவர்களாகப் பலவித ஸ்தோத்திரங்களால் துதித்துக்கொண்டு உம்மைப் பூஜிக்கின்றனர். லோகநாதரே! எல்லாப் பிராணிகளும் உம்மால் வ்யாபிக்கப்பட்டிருக்கின்றன. அதிக சக்தியுள்ளவர்களான யோகிகளும் மஹரிஷிகளும் உம்மைத் துதிக்கிறார்கள். நீர் ஸந்தோஷமடைந்தால் உலகம் சாந்தமாக இருக்கிறது; நீர் கோபித்துக்கொண்டால் மிக்க பயத்தை அடைகிறது. புருஷோத்தமரே! எல்லாப் பிராணிகளுக்கும் ஸுகத்தை உண்டுபண்ணுகிறவரான நீர் ஒருவரே தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் உண்டாகிற பயங்களைப் போக்குகிறீர். தேவரே! உம்மால் மூன்று காலடிகளால் மூன்று உலகங்களும் ஆக்ரமிக்கப்பட்டன. ஐச்வர்யத்தால் நிறைந்தவர்களான அஸுரர்களுடைய விநாசமும் உம்மால் செய்யப்பட்டது. அதிகப் பிரகாசமுள்ளவரே! உம்முடைய அடிவைப்புக்களால் தேவர்கள் சிறந்த ஸுகத்தை அடைந்தார்கள். நீர் கோபங்கொண்டவுடன், தைத்யராஜர்கள் அவமானத்தை அடைந்

தார்கள். நீர் இவ்வுலகில் எல்லாவிதத்தாலும் பிராணிகளைப் படைப்பவராகவும் அழிப்பவராகவும் இருக்கிறீர். தேவர்கள் உம்மை நாள்தோறும் ஆராதித்து ஸுகமாக வ்ருத்தி அடைகிறார்கள்' என்று பலவித ஸ்தோத்திரங்களால் மகிழ்வித்தார். இவ்வாறு மகாத்மாவான உதங்கரால் துதிக்கப்பட்ட ஹ்ருஷீகேசரான விஷ்ணு உதங்கரைப் பார்த்து, 'நான் உன் விஷயத்தில் பிரீதியடைந்தேன். வரத்தைப் பெற்றுக்கொள்' என்று சொல்ல, உதங்கர், 'புருஷனும் சாச்வதனும் தேவரூபமுள்ளவனும் உலகத்தைப் படைப்பவனும் பிரபுவுமான ஹரியை நான் தரிசனம் செய்ததே எனக்குப் போதுமான வரன்' என்று சொன்னார். விஷ்ணு, 'மிகச் சிறந்தவனே! நான் உன்னுடைய உறுதியான பக்தியினால் உன் விஷயத்தில் பிரீதியடைகிறேன். பிராம்மணா! நீ என்னிடமிருந்து அவசியம் வரனைப் பெற்றுக்கொள்ளவேண்டும்' என்று சொன்னார். பரதச்ரேஷ்டனே! அப்பொழுது ஹரியினால் இவ்வண்ணம் (வரங்கொடுப்பதாகச் சொல்லி) மகிழ்விக்கப்படுகிற அந்த உதங்கர் கைகளைக் குவித்துக்கொண்டு, 'பகவானே! தாமரைமலர்போன்ற கண்களுள்ளவரே! என் விஷயத்தில் பிரியமுள்ளவராயிருந்தால் தர்மத்திலும், ஸத்தியத்திலும், இந்திரிய அடக்கத்திலும் எப்பொழுதும் எனக்குப் புத்தியிருக்கவேண்டும். ஈச்வரரே! எனக்கு எப்பொழுதும் உம்மிடத்தில் தொடர்ச்சியான பக்தி இருக்கவேண்டும்' என்கிற வரத்தை வேண்டினார். பகவான், 'பிராம்மணா! என் அனுக்ரஹத்தினால் இவையெல்லாம் உனக்கு உண்டாகும். எந்த யோகத்தோடுகூடியவனாக நீ தேவர்களுக்கும் மூவுலகங்களுக்கும் பெரிய காரியத்தைச் செய்வாயோ அப்படிப்பட்ட யோகமும் உனக்குத் தானே தோற்றும். துந்து என்கிற மகாஸுரன் உலகங்களை அழிப்பதற்காகக் கடுந்தவம் புரிகிறான். அவனைக் கொல்லுபவனைச் சொல்லுவேன்; கேள். அப்பா! இக்ஷ்வாகுகுலத்தில் தோன்றியவனும், பகைவரால் தோல்வி அடைவிக்கப்படாதவனும், சிறந்த சக்தியுள்ளவனும், ப்ருஹதச்வனென்று பிரஸித்திபெற்றவனுமான அரசன் பூமிக்கு அதிபதியாவான். ப்ரம்மரிஷியே! அந்தப் ப்ருஹதச்வனுக்குப் புத்திரனும் சுத்தனும் இந்திரியங்களை அடக்கினவனும் அரசர்களுள் உத்தமனுமான குவலாச்வனென்கிற பிரஸித்தனான அப்படிப்பட்ட அரசன் என்னுடைய யோகபலத்தை அடைந்திருக்கிற உன்னுடைய கட்டளையினால் துந்து என்கிற

அஸுரனைக்கொன்று துந்துமாரனென்கிற பெயருள்ளவனாவான்' என்று சொன்னார். இவ்வண்ணம் உதங்கரைப் பார்த்துச் சொல்லி, விஷ்ணுவானவர் அந்தர்த்தானத்தை அடைந்தார்.

## இருநூற்றைந்தாவது அத்யாயம்.

## மார்க்கண்டேயஸமாஸ்யாபர்வம். (தொடர்ச்சி.)

(உதங்கர், ப்ருகதஸ்வன் ராஜ்யத்தில் தன் புத்திரனுக்கு முடிசூட்டி வனத்துக்குப் புறப்பட்டதைத் தடுத்து, துந்து என்கிற அஸுரனைக் கொல்ல ஏவியது.)

அரசனே! இக்ஷ்வாகுமகாராஜன் லோகாந்தரத்தை அடைந்த பிறகு, பரமதார்மிகனான சசாதன் இந்தப் பூமியை அடைந்து அயோத்தியில் அரசனானான். சிறந்த வல்லமையுடையவனான ககுத்ஸ்தனென்பவன் சசாதனுடைய புத்திரன். ககுத்ஸ்தனுக்கு அனேனஸ் என்று ஒரு புத்திரன் பிறந்தான். அனேனஸுக்குப் ப்ருது என்கிற புத்திரன் உண்டானான். ப்ருதுவினுடைய புத்திரன் விஷ்வகஸ்வன். அவனிடத்தினின்று ஆர்த்ரன் பிறந்தான். ஆர்த்ரனுக்கு யுவனாஸ்வனென்கிற புத்திரன் உண்டானான். அவனுக்கு ஸ்ராவஸ்தனென்கிற புத்திரன் உண்டானான். ஸ்ராவஸ்தன் அரசனானான். அவனால் ஸ்ராவஸ்தி என்கிற நகரியானது ஏற்படுத்தப்பட்டது. ஸ்ராவஸ்தனுக்கு மகாபலசாலியான ப்ருஹதஸ்வனென்கிற புத்திரன் உண்டானான். குவலாஸ்வன் ப்ருஹதஸ்வனுடைய புத்திரனாக உண்டாயிருந்தான். குவலாஸ்வனுக்கு இருபத்தோராயிரம் பிள்ளைகளுண்டானார்கள். எல்லோரும் வித்தைகளில் ஸமர்த்தர்களாகவும் நல்ல பலமுள்ளவர்களாகவும் பகைவரால் அணுகமுடியாதவர்களாகவும் இருந்தார்கள். குவலாஸ்வனும் குணங்களால் பிதாவைக்காட்டிலும் மேற்பட்டவனாக இருந்தான். மகாராஜனே! ப்ருஹதஸ்வன் அப்பொழுது தக்க ஸமயத்தில் சூரனும் சிறந்த தார்மிகனுமான அந்தக் குவலாஸ்வனுக்கு ராஜ்யத்தில் பட்டாபிஷேகம் செய்வித்தான். சிறந்த புத்திமானும் பகைவரைக்கொல்லுபவனுமான ப்ருஹதஸ்வனென்கிற அரசன் அரசச் செல்வத்தைப் புத்திரனிடத்தில் ஒப்பித்துவிட்டுத் தவம்புரிவதற்காகத் தபோவனத்தைக் குறித்துச் செல்லத் தொடங்கி

ஞன். மனிதர்களுக்குத் தலைவனே! வேந்தனே! பிறகு, பிராம் மணோத்தமரான உதங்கர், ப்ருஹதச்வனென்கிற அந்த ராஜரிஷி வனத்திற்குப் புறப்பட்டதைக் கேட்டார். மிக்க தேஜஸுள்ள வரும் அளக்கதற்கரிய ஆற்றலுள்ளவருமான உதங்கர் சிறந்த அந்த ப்ராவஸ்திநகரியை அடைந்து, எல்லா அஸ்திரங்களையும் அறிந் தவர்களுள் சிறந்தவனான அந்த ப்ருஹதச்வனை வனத்திற்குப் போவதினின்று தடுத்து, 'அரசனே! நீ பிரஜாபாலனத்தைச் செய் யத்தக்கவன். அதையே நீ செய்யவேண்டும். அரசனே! நாங்கள் உன்னுடைய தயையினால் பயமற்றவர்களாக வஸிக்கக்கடவோம். அரசனே! பூமியானது மகாத்மாவான உன்னால் காக்கப்படுமாயின் பயமற்றதாகும். நீ அரண்யத்தை அடைதல் கூடாது. இவ்வுலகில் ப்ரஜைகளைப் பாதுகாப்பது பெரிதான தர்மமாகக் காணப்படுகின் றது. அரண்யத்தில் வஸிப்பது அப்படி பெரிய தர்மமாகக் காணப்படவில்லை. உனக்கு இப்படிப்பட்ட புத்தி உண்டாக வேண்டாம். ராஜேந்திரனே! இப்படிப்பட்ட தர்மமானது ஓரிடத்திலும் காணப்படவில்லை. முற்காலத்தில் ராஜரிஷிகளால் பிரஜைகளைப் பரிபாலனம் செய்வதில் முயற்சி செய்யப்பட்டிருக் கிறது. பிரஜைகள் அரசனால் காக்கத்தக்கவைகள். அவைகளை நீ காப்பதற்குத் தகுதியுள்ளவனாக இருக்கிறாய். அரசனே! நான் மனக்கவலையற்றவனாகித் தவத்தைச் செய்வதற்குச் சக்தியற்ற வனாக இருக்கிறேனன்றோ! என்னுடைய ஆச்ரமஸமீபத்தில் ஸமதரையான காடுகளில் மணற்கடல்களால் நிரம்பினதும் பலயோஜனை அகன்றதும் பலயோஜனை நீண்டதுமான [1] உஜ்ஜாலக மென்கிற இடம் இருக்கிறது. அரசனே! அந்த இடத் தில் பயங்கரமானவனும் அதிக வீர்யமும் பராக்ரமமுமுள்ளவ னும் அஸுரர்களுக்குத் தலைவனும் மதுகைடபர்களுக்குப் புத்திரனும் மிகக்கொடியவனும் அளவுகடந்த வல்லமையுள்ள வனுமான துந்து என்கிற அஸுரன் பூமிக்குள் புகுந்து வாஸம் செய்கிறான். மகாராஜனே! அவனைக் கொன்றபின் நீ வனத்தை அடையவேண்டும். அரசனே! தேவர்களையும் உலகங்களையும் நாசம் செய்வதற்காகப் பயங்கரமான தவத்தைச் செய்துகொண்டு உலகங்களை அழிப்பதற்காகப் பூமிக்குள் படுத்திருக்கிறான். அரசனே! அவன் எல்லா உலகங்களுக்கும் பிதாமஹரான ப்ரம்மா வினிடமிருந்து வரத்தைப்பெற்று தேவர்களாலும் அஸுரர்களா

1 இது உஜ்ஜாலகம் என்றும் வழங்குகின்றது.

லும் ராக்ஷஸர்களாலும் நாகர்களாலும் யக்ஷர்களாலும் கந்தர்வர்களாலும் எல்லாவிதத்தாலும் கொல்லத் தகாதவனாக இருக்கிறான். அவனைக் கொல்வாயாக. உனக்கு மங்களம். உன்னுடைய புத்தியானது இவ்விஷயத்தினின்று வேறுவிதமாக வேண்டாம். சாஸ்வதமானதும் குறைவற்றதும் அசைவற்றதுமான பெரிய கீர்த்தியை அடைவாய். குரூரனும் உறங்குகிறவனும் மணலினுள் மறைந்திருப்பவனுமான அவனுடைய மூச்சுக்காற்றானது ஒருவருஷத்தின் முடிவில் வெளிப்படுகிறது. மலைகளோடும் காடுகளோடும் சோலைகளோடும்கூடின பூமியானது அவனுடைய மூச்சுக்காற்றினாலே எப்பொழுது எப்பொழுது அசைகிறதோ அப்பொழுது அப்பொழுது பெரும் புழுதியானது ஆகாயத்தில் சென்றுகொண்டிருக்கிற ஸூர்யனுடைய தேகமை நோக்கி மேலே கிளம்புகிறது. நெருப்புப்பொறிகளோடுகூடியதும் ஜ்வாலைகளோடுகூடியதும் புகையோடுகலந்ததும் மிக்க பயங்கரமுமான பூகம்பமானது ஏழுநாள் அஹோராத்திரம் உண்டாகிறது. அரசனே! அதனால், அந்த என்னுடைய ஆச்ரமத்திலிருப்பதற்குச் சக்தியற்றவனாக இருக்கிறேன். அரசர்களுள் சிறந்தவனே! உலகங்களுக்கு நன்மையைச் செய்யவேண்டுமென்கிற விருப்பத்தால் அவனைக் கொல்வாயாக. அந்த அஸுரன் கொல்லப்பட்டால் உலகங்கள் தம் நிலைமையை அடைந்திருக்கும். பயங்கரமானதும் அஸ்திரசஸ்திரங்களால் நெருங்கியதுமான யுத்தத்தில் பராக்கிரமானவனும் பயங்கரமான சரீரமுள்ளவனுமான துந்து என்று பெயருள்ள அஸுரனைப் பெரிய பாணத்தினால் நாசஞ்செய்வாயாக. நீ அவனை அழிப்பதற்குப் போதுமான திறமையுள்ளவனென்பது என் எண்ணம். விஷ்ணுவானவர் தம் தேஜஸினால் உன் தேஜஸை வ்ருத்தி அடையச்செய்வார். பூமிக்கதிபதியே! விஷ்ணுவினால், 'எந்த அரசன் பயங்கரனான அந்த மகாஸுரனைக் கொல்லுவானோ அவனுடைய தேஜஸில் ஒருவராலும் அறியமுடியாததாக அந்த விஷ்ணு தேஜஸானது பிரவேசிக்கப் போகிறது' என்று முந்தி எனக்கு வரங்கொடுக்கப்பட்டிருக்கிறது. ராஜேந்திரனே! என்னால் கட்டளையிடப்பட்ட நீ பூலோகத்தில் எவ்விதத்தாலும் தாங்கமுடியாத அந்த விஷ்ணுதேஜஸைச் சேர்த்துக்கொண்டு பயங்கரமான பராக்கிரமமுள்ள அந்த அஸுரனை நாசம் செய்வாயாக. பூமியைப் பாதுகாப்பவனே! மிக்க தேஜஸையுடைய துந்துவானவன் நூற்றுக்கணக்கான வருஷங்கள் யுத்தம்

செய்தாலும் சக்தி குறைந்தவனால் எரிப்பதற்கு ஸாத்தியப்படாதவனன்றோ?' என்றார்.

## இருநூற்ருருவது அத்யாயம்.

## மார்க்கண்டேயஸமாஸ்யாபர்வம். (தொடர்ச்சி.)

(பிருஹதச்வன் தன்புதல்வன் துந்துவைக் கொல்வானென்று சொல்லிக் கானகம் சென்றதும், யுதிஷ்டிரர் துந்துவினுடைய உற்பத்தியைக் குறித்து வினவியதும், மார்க்கண்டேயர் அவனுடைய உற்பத்திக்கு ஹேதுவாக மதுகைடபர்களுடைய வரலாற்றைச் சொல்லியதும்.)

கௌரவர்களுள் சிறந்தவனே! உதங்கரால் இவ்வாறு சொல்லப்பட்டவனும் பகைவர்களால் ஜயிக்கமுடியாதவனும் ராஜரிஷியுமான அந்தப் பிருஹதச்வன், உதங்கரைக் குறித்து அஞ்சலி செய்துகொண்டு, 'பிராம்மணரே! என்னுடைய இந்த வனப்பிரயாணமானது வீணாகக்கூடாது. பகவானே! தைரியமுள்ளவனும், காரியங்களை விரைவாகச் செய்பவனும், பூமியில் திறமையினால் நிகரில்லாதவனுமான குவலாச்வனென்கிற புத்திரன் எனக்கு இருக்கிறான். அவன் உம்முடைய இந்த விருப்பத்தையும் செய்வான். ஸந்தேகமில்லை. மிக்க தோள்வலியமைந்த குவலாச்வன் சூரர்களும் பரிகாயுதங்களுள்ளவர்களுமான எல்லாப் புத்திரர்களாலும் சூழப்பட்டு அந்தத் துந்துவென்கிற மகாஸுரனைக் கொல்லுவான். பிராம்மணரே! என்னை விட்டுவிடும். நான் இப்பொழுது ஆயுதங்களை விட்டுவிட்டவனாக இருக்கிறேன்' என்று சொன்னான். அளவுகடந்த தேஜஸுள்ள அந்த முனிவரால், 'அப்படியே ஆகட்டும்' என்று சொல்லப்பட்ட ராஜரிஷியான அவன் அந்தப் புத்திரனை நோக்கி, 'மகாத்மாவான உதங்கருக்கு விருப்பத்தைச் செய்' என்று கட்டளையிட்டு உத்தமமான வனத்தை அடைந்தான்' என்று கூறினார்.

யுதிஷ்டிரர், 'பகவானே! தவத்தைப் பொருளாகக்கொண்டவரே! மிக்கசக்திவாய்ந்தவனான இந்த அஸுரன் யார்? யாருடைய மகன்? யாருடைய பேரன்? இதை அறிவதற்கு விரும்புகிறேன். தபோதனரே! எவனுடைய மூச்சுக்காற்றினால் பர்வதங்களோடுகூடிய பூமி நடுங்கியதோ இப்படிப்பட்ட மிக்க வலி

மையுள்ள அஸுரனை நான் இதற்குமுன் கேட்டதில்லை. பக வானே! மஹா மேதாவியே! தபோதனரே! இவை எல்லாவற்றை யும் விஸ்தாரமாக உள்ளபடி அறிவதற்கு விரும்புகிறேன்' என்று சொன்னார்.

மார்க்கண்டேயர், 'அரசனே! மனிதர்களுக்கதிபதியே! மகா ப்ராஜ்ஞனே! விஸ்தாரமாகவும் உண்மையாகவும் உரைக்கப்படு கின்ற இந்த வரலாறனைத்தையும் நடந்தபடி சொல்லுகிறேன்; கேள். பரதச்ரேஷ்டனே! உலகமானது ஒரே ஸமுத்திரமாகிப் பிரகாசமில்லாமற்போய் ஸ்தாவரங்களும் ஜங்கமங்களும் அழிந்து எல்லாப் பூதங்களும் முழுதும் அழிந்துபோகவே, முனிவர்களா லும் ஸித்தர்களாலும் எல்லா உலகங்களுக்கும் மஹேச்வர ரென்று சொல்லப்பட்டவரும் உலகங்களுக்குக் காரணமானவரும் உலகங்களைப் படைப்பவரும் எங்கும் வியாபித்தவரும் நித்திய மாக இருப்பவரும் குறைவற்றவரும் நான்கு புஜங்களுள்ளவரும் சிறந்த மேனியுள்ளவருமான மகாவிஷ்ணுவைக் கண்டேன். மகா பாக்கியசாலியே! பகவானும், உலகங்களைப் படைத்தவரும், மகி மையுள்ளவரும், பக்தர்களைக் காக்கிற விரதத்தினின்று நழுவாத வரும், எங்கும் வியாபித்திருப்பவருமான ஹரியானவர் அபரிமித மான தேஜஸுள்ள சேஷனென்கிற ஸர்ப்பத்தினுடைய பெரிய தேகத்தைப் படுக்கையாகச் செய்துகொண்டு ஒருவராகவே நித் திரைசெய்துகொண்டிருந்தார். பெரிதான ஸர்ப்பதேகத்தால் இந்தப் பூமியை வியாபித்துக்கொண்டு தூங்குகின்ற அந்த விஷ்ணு வினுடைய நாபியிலிருந்து ஸூர்யனுக்குச் சமமான ஒளியுள்ளதும் திவ்யமாயிருப்பதுமான ஒரு தாமரைமலர் வெளியில்வந்தது. மகிமைபொருந்தியவரும் உலகங்களுக்கெல்லாம் குருவாக இருப் பவரும் பிதாமஹரும் ஸூர்யனுக்கு ஸமமான ஒளிபொருந்திய வரும் நான்கு வேதங்களையும் அறிந்தவரும் நான்கு மூர்த்திக ளுடன்கூடியவரும் நான்கு புருஷார்த்தங்களோடுகூடியவரும் நான்கு முகங்களுள்ளவரும் தம் பிரபாவத்தினால் ஒருவராலும் ஜயிக்கமுடியாதவரும் அதிகமான பலத்துடனும் பராக்கிரமத் துடனுங்கூடியவருமான பிரம்மதேவர் அந்தத் தாமரைமலரில் உண்டானார். அரசனே! பிறகு, ஒரு ஸமயத்தில் சிறந்த வீர்ய முள்ளவர்களான மது, கைடபன் என்கிற இரண்டு அஸுரர்கள் அத்புதமானதும் பல யோஜனைதூரம் விஸ்தாரமுள்ளதும் பல யோஜனைதூரம் நீண்டிருப்பதுமான ஸர்ப்பத்தினுடையசரீரமாகிற படுக்கையில் படுத்திருப்பவரும் பிரபுவும் மிக்க காந்தியுள்ளவரும்

கிரீடத்தையும் கௌஸ்துபமென்கிற ரத்தினத்தையும் தரித்திருப்பவரும் பீதாம்பரத்தைத் தரித்தவரும் ஸ்ரீ தேவியினால் பிரகாசிப்பவரும் தேஜஸினாலும் அப்படியே தேகத்தாலும் ஆயிரம் ஸூர்யர்களுக்கு ஒப்பானவரும் அத்புதமான காட்சியுள்ளவருமான ஹரியைக் கண்டார்கள். அப்பொழுது, அந்த விஷ்ணுவையும் அவருடைய நாபிகமலத்தில் தாமரைமலர்போன்ற கண்களுள்ளவரான பிரம்மதேவரையும் பார்த்து மதுவும் கைடபனுமாகிய இருவருக்கும் மிகப் பெரிதான ஆச்சர்யமுண்டாயிற்று. பிறகு, அவ்விருவரும் அளவுகடந்த தேஜஸுள்ள பிரம்மதேவரைப் பயமுறுத்தினார்கள். அவ்விருவராலும் பலமுறை பயமுறுத்தப்படுகின்றவரும் பெரும்புகழுள்ளவருமான பிரம்மதேவர் தாமிருக்கும் தாமரைமலரின் தண்டை அசைத்தார். அதனால், கேசவர் விழித்துக்கொண்டார். பிறகு, கோவிந்தர் மிக்க வீர்யமுள்ளவர்களான அந்த இரண்டு அஸுரர்களையும் பார்த்தார். தேவரான விஷ்ணுவானவர் அவ்விருவரையும் பார்த்து, 'மகாபலசாலிகளே! உங்களிருவருக்கும் நல்வரவாகுக. உங்களுக்குச் சிறந்த வரத்தைக் கொடுக்கிறேன். எனக்கு உங்கள்மீது ப்ரீதியுண்டாகிறதன்றோ?' என்று சொன்னார். மகாராஜனே! அதிக கொழுப்புள்ளவர்களும் அதிக பலமுள்ளவர்களுமான அவ்விருவரும், ஹ்ருஷீகேசரான விஷ்ணுவைப் பார்த்து உரக்கச்சிரித்து ஒன்றுசேர்ந்து, 'தேவர்களுள் சிறந்தவனே! தேவனே! நீ எங்களிடமிருந்து வரத்தைப் பெற்றுக்கொள்வாயாக. நாங்கள் வரன்களைக் கொடுப்பவர்களாக இருக்கிறோம். ஆகலால், நீ ஆலோசியாமல் சொல்வாயாக. உனக்கு வேண்டியவரத்தை நாங்களிருவரும் கொடுப்பவர்களாக இருக்கிறோம்' என்று மறுமொழி உரைத்தார்கள். பகவான், 'வீரர்களே! நான் வரத்தை உங்களிடமிருந்து பெற்றுக்கொள்ளுகிறேன். நான் வரத்தை விரும்புகிறேன். நீங்கள் ஆற்றலால் நிறைந்தவர்கள். உங்களிருவருக்கும் ஸமமான ஆண்பிள்ளை இல்லை. ஸத்தியமான பராக்கிரமத்துடன்கூடின நீங்களிருவரும் என்னால் கொல்லத்தக்கவர்களாகவேண்டும். உலகங்களுக்கு நன்மை செய்யும்பொருட்டு இந்தப் பிரியமான வரத்தை நான் அடைய விரும்புகிறேன்' என்று சொன்னார். மதுகைடபர்கள், 'புருஷோத்தம! இஷ்டப்படி செய்யும் காரியங்களில்கூட எங்களால் இதற்குமுன் பொய் சொல்லப்பட்டதில்லை. அப்படியிருக்க, இந்த விஷயத்தில் எங்களுடைய சொல்லானது எவ்வாறு வேறு

விதமாக மாறும்? எங்களை ஸத்தியத்திலும் தர்மத்திலும் நிலை பெற்றவர்களென்று அறிவாயாக. பலத்திலும் ரூபத்திலும் சௌர்யத்திலும் சாந்தியிலும் தர்மத்திலும் தவத்திலும் தானத்திலும் நல்லொழுக்கத்திலும் மனோபலத்திலும் இந்திரிய நிக்ரஹத்திலும் எங்களுக்கு ஒப்பானவனில்லை. கேசவ! எங்களுக்குப் பெரிய அனர்த்தமானது நெருங்கிவந்துவிட்டது. நீ சொன்னபடி செய். காலமானது எவ்விதத்தாலும் தாண்ட முடியாததன்றோ? விபுவே! தேவனே! நாங்கள் உன்னால் இது ஒன்றுமாத்திரம் செய்யப்பட விரும்புகிறோம். தேவர்களுள் மிகச் சிறந்தவனே! நீ எங்களிருவரையும் மேல்மறைவில்லாத இடத்தில் கொல்வாயாக. அழகிய கண்களுள்ளவனே! நாங்கள் உனக்குப் புத்திரர்களாகப் பிறக்கக்கடவோம். தேவ! இந்த வரன் எங்களால் வேண்டப்பட்டது. தேவர்களுள் சிறந்தவனே! அதனைத் தெரிந்துகொள். தேவனே! எங்கள் விஷயத்தில் பிரதிஜ்ஞை செய்யப்பட்டது பொய்யாகவேண்டாம்' என்று சொன்னார்கள். பகவான், 'ஆக; அப்படியே எல்லாவற்றையும் செய்வேன். இவை அனைத்தும் நடக்கும்' என்று சொன்னார். பிறகு, மதுஸூதனரான அந்தக் கோவிந்தர் நன்றாக ஆலோசித்துப்பார்த்து அவர்களைக் கொல்வதற்குரிய ஆவரணமில்லாத பிரதேசத்தைப் பூமியிலோ ஆகாயத்திலோ காணவில்லை. அரசனே! தேவர்களுள் சிறந்தவரும் மிக்க புகழுள்ளவருமான மதுஸூதனர் ஆவரணமில்லாத தம் இருதொடைகளையும் பார்த்து மதுகைடபர்களை (அவற்றில் வைத்து) அவர்களுடைய தலைகளை கூர்மையான சக்கரத்தால் அறுத்தார்.

## இருநூற்றேழாவது அத்யாயம்.

## மார்க்கண்டேயஸமாஸ்யாபர்வம். (தொடர்ச்சி.)

(மதுகைடபர்களுக்குப் புத்திரனான துந்துவானவன் தவத்தினால் பிரம்மதேவரிடமிருந்து வரங்களைப் பெற்றுத் தேவர்களை ஹிம்ஸித்ததும், உதங்கரால் ஏவப்பட்ட குவலாஶ்வன் அவனைப் பிரம்மாஸ்திரத்தால் எரித்ததும், தேவர்கள் முதலியவர்கள் குவலாஶ்வனுக்குத் துந்துமாரனென்று பெயரிட்டு வரன்களைக்கொடுத்துச் சென்றதும், மார்க்கண்டேயர் துந்துமாரனுடைய உபாக்கியானத்தைப் புகழ்ந்ததும்.)

மகாராஜனே! அந்த மதுகைடபர்களுக்கு மிக்க காந்தியுள்ள துந்து என்கிற புத்திரன் தோன்றினான். மிக்க சக்தியும் பராக்கிரமமுமுள்ளவனான அவன், தேகம் இளைத்து நரம்புகள் தெரிய ஒருகாலால் நின்றுகொண்டு பெருந்தவம் புரிந்தான். பிரம்மதேவர் ப்ரீதியடைந்து அவனுக்கு வரத்தைக் கொடுக்க வந்தார். அவன் பிரபுவான பிரம்மதேவரைப்பார்த்து, 'நான் தேவர்களாலும் அஸுரர்களாலும் யக்ஷர்களாலும் நாகர்களாலும் கந்தர்வர்களாலும் ராக்ஷஸர்களாலும் கொல்லத்தகாதவனாக இருக்கக்கடவேன்' என்ற வரத்தைக் கேட்டான்; 'இந்த வரம் தான் என்னால் வேண்டப்படுகிறது' என்றும் சொன்னான். பிதாமஹர், அவனைப் பார்த்து, 'இப்படியே ஆகட்டும்; போ' என்று சொன்னார். இவ்வண்ணம் சொல்லப்பட்ட அந்தத் துந்துவானவன் அவருடைய பாதங்களில் முடிபட வணங்கிச் சென்றான். அந்தத் துந்துவோ வரத்தைப் பெற்றுச் சக்தியும் பராக்கிரமமும் அதிகரித்துத் தன் தந்தைகளுடைய வதத்தை நினைத்து விஷ்ணுவினிடம் விரைவாகச் சென்றான். கோபங்கொண்ட அந்தத் துந்துவானவன் கந்தர்வர்களுடன் கூடின தேவர்களை ஜயித்து அடிக்கடி எல்லாத் தேவர்களையும் விஷ்ணுவையும் மிகவும் துன்புறுத்தினான். பரதஶ்ரேஷ்டனே! பிரபுவே! கெட்ட மனமுள்ள அந்தத் துந்துவானவன் மணல் நிரம்பின கடலில் உஜ்ஜானகமென்று சொல்லப்படுகிற அந்த இடத்தை வந்தடைந்து தன் சக்தியினால் அந்த உதங்கருடைய ஆஶ்ரமத்தை அதிகமாகத் துன்பம் செய்தான். அந்த உஜ்ஜானகத்தில், பயங்கரமான

பராக்கிரமமுள்ளவனும் மதுகைடபர்களுக்குப் புத்திரனுமான துந்துவானவன் தவத்தின் பலத்தைப்பற்றியவனும் பூமியினுள் பிரவேசித்தவனும் அப்படியே மணல்களுள் மறைந்தவனுமாகி உலகத்தை அழிப்பதற்காக உதங்கருடைய ஆச்ரமத்தின் ஸமீபத்தில் நெருப்பு ஜ்வாலைகளை மூச்சினால் வெளியிட்டுக்கொண்டு படுத்திருந்தான். இதேஸமயத்தில் பகைவரை அழிப்பவனும் மனிதர்களைக் காப்பவனுமான குவலாச்வராஜன் சேனைகளோடும் வாகனங்களோடும் கூடியவனும் பலசாலிகளான இருபத்தோராயிரம் பிள்ளைகளோடும் உதங்கரோடும்கூடியவனுமாக அந்தத் துந்துவின் வதத்தின்பொருட்டுப் புறப்பட்டான். பிறகு, பகவானும் பிரபுவுமான விஷ்ணு, உதங்கருடைய தூண்டுதலால் உலகங்களுக்கு ஹிதத்தைச் செய்ய விரும்பித் தம் சக்தியினால் அந்தக் குவலாச்வனிடத்தில் பிரவேசித்தார். எவராலும் ஜயிக்கமுடியாத அந்தக் குவலாச்வன் துந்துவின் வதத்திற்காகப் புறப்பட்டவுடனே, ஆகாயத்தில், 'ஸ்ரீமானான இந்த ராஜகுமாரன் துந்துமாரன் (=துந்துவைக்கொல்பவன்) ஆவான்' என்கிற பெரிய ஆரவாரம் உண்டாயிற்று. தேவர்கள் அவன்மீது தேவலோகத்திலுள்ள மலர்களை நாற்புறங்களிலும் இறைத்தார்கள். தேவதுந்துபிகளும், அடிக்கப்படாமல், தாமே ஒலித்தன. புத்திமானான அந்தக் குவலாச்வன் புறப்படும்போது குளிர்ந்தகாற்று வீசியது. தேவராஜன் பூமியைப் புழுதியில்லாமலிருக்கச் செய்தற்காக மழையைப் பொழிந்தான். வனத்திலுண்டான மிருகங்களும் பக்ஷிகளும் அந்தக் குவலாச்வனுக்கு வலமாகச் சென்றன. யுதிஷ்டிர! துந்துவென்கிற மஹாஸுரன் இருந்த இடத்திலேயே ஆகாயத்தில் தேவர்களுடைய விமானங்கள் காணப்பட்டன. குவலாச்வனுக்கும் துந்துவுக்கும் நடக்கப் போகிற யுத்தத்தைப் பார்ப்பதில் விருப்பமுள்ளவர்களான மஹரிஷிகள் தேவர்களோடும் கந்தர்வர்களோடும் சேர்ந்து அந்த யுத்தத்தைப் பார்க்க வந்தார்கள். குருவம்சத்திற் பிறந்தவனே! அந்தக் குவலாச்வமஹாராஜன் அப்பொழுது நாராயணரால் தம் தேஜஸினால் விருத்திபண்ணப்பட்டவனாகி அந்த எல்லாப் புத்திரர்களோடும் துந்து வஸித்துக்கொண்டிருக்கும் திசையைக் குறித்து விரைவாகச் சென்றான். குவலாச்வமஹாராஜன் உதங்கருடைய வசத்திலிருந்துகொண்டு எல்லா உலகங்களுக்கும் நன்மையைச் செய்வதற்காக மணற்கடலைக் கீழு மேலாகத் தோண்டும்படி செய்

தான். குவலாச்வனுடைய குமாரர்களால் எழுதினங்கள் பறிக்கப்பட்ட அந்த மணற்கடலில் மகாபலசாலியான துந்துவானவன் காணப்பட்டான். பரதச்ரேஷ்டனே! மணலினுள் மறைந்திருந்த அந்தத் துந்துவினுடைய பெரிய சரீரமானது, ஒளியினால் ஸூர்யன் போலப் பிரகாசிக்கின்றதும் கோரமுள்ளதுமாக இருந்தது. மகாராஜனே! ராஜச்ரேஷ்டனே! ஊழித் தீப்போன்ற காந்தியுள்ள துந்துவானவன் மேற்குத்திசையை மறைத்துத் தூங்கிக் கொண்டிருந்தான். குவலாச்வனுடைய புத்திரர்களால் நாற்புறங்களிலும் சூழப்பட்டவனும், அவர்களால் எதிர்த்துத்தாக்கப்பட்டவனும், கூர்மையுள்ள பாணங்களாலும் கதாயுதங்களாலும் உலக்கைகளாலும் பட்டஸங்களாலும் ஈட்டிகளாலும் பிராஸங்களாலும் தீட்டப்பட்ட பளபளப்பான கத்திகளாலும் துன்புறுத்தப்படுகின்றவனும், மகாபலசாலியுமான அந்தத் துந்துவானவன் மிக்க கோபங்கொண்டவனாக எழுந்திருந்தான். அப்பொழுது, பிரளயகால நெருப்புப்போன்ற நெருப்பை வாயிலிருந்து கக்குகிறவனும் கோபமுள்ளவனுமான அந்தத் துந்துவானவன் அவர்களுடைய பலவிதமான ஆயுதங்களை விழுங்கினான். ராஜச்ரேஷ்டனே! கோபங்கொண்ட அந்த அஸுரன் வாயிலிருந்து உண்டான நெருப்பினால் உலகங்களைக் கலக்கிறாகப்புரட்டுகிறவன்போலத் தன்னுடைய தேஜஸினால் அந்த ராஜகுமாரர்களனைவரையும், முற்காலத்தில் கோபங்கொண்ட பிரபுவான கபிலர் ஸகரனுடைய குமாரர்களை எரித்ததுபோல, நொடிப்பொழுதில், எரித்து விட்டான். அது ஆச்சர்யமாயிருந்தது. பரதர்களுள் மிகச் சிறந்தவனே! அந்த ராஜகுமாரர்கள் அப்பொழுது கோபாக்னியினால் எரிக்கப்பட்டவுடன், [illegible] கும்பகர்ணனைப்போல விழித்தெழுந்த மகாபலசாலியான துந்துவை அந்தத் தேஜஸ்வியான குவலாச்வ மகாராஜன் எதிர்த்தான். மகாராஜனே! அந்தத் துந்துவினுடைய தேகத்திலிருந்து ஏராளமான தண்ணீர் பெருகியது. அரசனே! பிறகு, [1] யோகசக்தியுள்ள அந்த அரசன் ஜலமயமான அந்தத் தேஜஸை அக்கினியினால் உறிஞ்சி, (அஸுரன்) யோகத்தாலுண்டுபண்ணின நெருப்பையும் தண்ணீரால் அணைத்தான். பரதச்ரேஷ்டனே! பிறகு, அரசன் குரூரமான பராக்கிரமமுள்ள அஸுரனை எல்லா உலகங்களுடைய நன்மையின்பொருட்டும் பிரம்மாஸ்திரத்தால் எரித்தான். பகைவர்களைக் கொல்பவனும்

[1] யோகபலம்.

வேறொரு த்ரிலோகநாதன்போன்றவனும் ராஜரிஷியுமான அந்தக் குவலாச்வன் தேவசத்துருவான மகாஸுரனை அஸ்திரத்தால் எரித்து வெற்றியுடன் விளங்கினான். பெரியமனமுள்ள குவலாச்வராஜன், அப்பொழுது துந்துவினுடைய வதத்தினால் துந்துமாரனென்கிற பெயரால் பிரஸித்தியுள்ளவனானான். அரசனே! பிறகு, ப்ரீதியுள்ளவர்களான எல்லா மகரிஷிகளுடனும் கூடின தேவர்களால், 'வரத்தைப் பெற்றுக் கொள்' என்று சொல்லப்பட்ட அந்தக்குவலாச்வன், அப்பொழுது நன்கு வணங்கினவனும் கைகுவித்துக்கொண்டவனும் மிக்க மனக்களிப்புற்றவனுமாகி, அவர்களைப்பார்த்து, 'சிறந்த பிராமணர்களின்பொருட்டுப் பொருளைக் கொடுக்கக்கடவேன்; பகைவர்களால் எவ்விதத்தாலும் ஜயிக்கமுடியாதவனாகக்கடவேன்; எனக்கு விஷ்ணுவோடு நேசமுண்டாகவேண்டும்; பிராணிகளிடத்தில் துரோகபுத்தி உண்டாகவேண்டாம். தர்மத்தில் எப்பொழுதும் பற்றுதலிருக்க வேண்டும். அப்படியே, அக்ஷயமான ஸ்வர்க்கவாஸம் ஏற்பட வேண்டும்' என்கிற வசனத்தை உரைத்தான். பிறகு, ப்ரீதியடைந்தவர்களான தேவர்களாலும் ரிஷிகளாலும் கந்தர்வர்களாலும் சிறந்த புத்தியுள்ள உதங்காராலும், 'அப்படியே ஆகட்டும்' என்று அந்த அரசன் சொல்லப்பட்டான். பிறகு, தேவர்களும் மஹரிஷிகளும் அந்தஅரசனைப் பலவிதஆசீர்வாதங்களால்வாழ்த்தி விட்டுத் தங்கள் ஸ்தானங்களை அடைந்தார்கள். பரதகுலத்தில் பிறந்தவனே! யுதிஷ்டிரா! அந்தக் குவலாச்வனுக்கு அப்பொழுது த்ருடாச்வன், கபிலாச்வன், பத்ராச்வனென்கிற மூன்று பிள்ளைகள் மிகுந்தவர்களாக இருந்தார்கள். வேந்தே! மகாபாக்கியமுள்ளவனே! மகாத்மாக்களும் அபரிமிதமான பராக்கிரமசாலிகளுமான இக்ஷ்வாகுகுலத்தில்பிறந்த அரசர்களுடைய வம்சபரம்பரையானது அம்மூவர்களிடமிருந்தும் உண்டாகியது. மிகச்சிறந்தவனே! மதுகைடவர்களுக்குப் புத்திரனான துந்துவென்கிற அந்த மகாஸுரன் அந்தக் குவலாச்வனால் இவ்வண்ணம் கொல்லப்பட்டான். அதுமுதற்கொண்டு, அந்தக் குவலாச்வராஜன் காரணப்பெயரால் துந்துமாரனென்று எண்ணப்பட்டவனானான். அவனுடைய செய்கையினால் (இந்த) உபாக்கியானமானது தௌந்துமாரமென்று பிரஸித்தியடைந்ததோ, எந்த உபாக்கியானத்தைப் பற்றி என்னைக் கேட்டாயோ, அவனுடைய இது முழுமையும் என்னால் உனக்கு உரைக்கப்பட்டது. விஷ்ணுவினுடைய கீர்த்தியை

நன்றாக வெளிப்படுத்துகிற புண்யமான இந்த உபாக்யானத்தை எந்த மனிதன் கேட்பனோ அவன் தார்மிகனும் புத்திரர்களுடனும் புத்ரிகளுடனும் கூடியவனும் ஆவான். மனிதன் பர்வகாலங்களில் இந்த உபாக்யானத்தைக் கேட்டால் தீர்க்காயுளுள்ளவனும் ஸம்பத்துள்ளவனும் கவலையற்றவனுமாகி வியாதிபயத்தைச் சிறிதும் அடையான்' என்று கூறினார்.

## இருநூற்றெட்டாவது அத்யாயம்.

## மார்க்கண்டேய ஸமாஸ்யா பர்வம். (தொடர்ச்சி.)

(மார்க்கண்டேயர் பதிவிரதைகளின் மகிமையைச் சொல்லத் தொடங்கியது.)

பரதர்களுள் சிறந்தவரே! பிறகு, அந்த யுதிஷ்டிர ராஜர், மகாதேஜஸ்வியான மார்க்கண்டேயரைப் பார்த்து, 'பகவானே! பிராம்மணரே! உம்மால் சொல்லப்படுவதும் நுட்பமானதும் உள்ளபடி தர்மத்தைவிட்டு விலகாததும் சிறந்ததுமான ஸ்திரீகளுடைய மகிமையைக் கேட்க விரும்புகிறேன்' என்று[1] சொல்லுவதற்கரிதான தர்மரகஸ்யத்தை வினவினார். 'பிரம்மரிஷியே! ஸாதுக்களுள் உத்தமரே! பிருகுநந்தனரே! இவ்வுலகில் ஸூர்யனும் சந்திரனும் வாயுவும் பூமியும் அக்னியும் தந்தையும் தாயும் மகிமை பொருந்திய[2] குருவும் இன்னும் தேவர்களால் படைக்கப்பட்ட மற்றவையும் நேரில் உருவெடுத்து வந்த தேவர்கள்போலக் காணப்படுகின்றனர். எல்லாவற்றையும் நான் குருவைப்போல எண்ணுகிறேன். ஒருவனையே பதியாகக் கொண்ட ஸ்திரீகளையும் அப்படியே எண்ணுகிறேன். பதிவிரதைகளால் கணவனது பணிவிடையானது செய்ய முடியாததென்று எனக்குத் தோன்றுகிறது. பிரபுவே! தோஷமில்லாதவரே! இந்திரியங்களுடைய ஸமூகத்தையும் மனத்தையும் நன்றாக அடக்கி எந்த ஸ்திரீகள் கணவனைத் தெய்வத்தைப்போல நினைத்துக்கொண்டிருக்கிறார்களோ அந்தப் பதிவிரதைகளுடைய பெருமையை எங்களுக்கு நீர் சொல்லவேண்டும். பிரபுவே! பகவானே! பிராம்மணரே! மாதாபிதாக்களின் சுச்ருஷையும் ஸ்திரீ

[1] 'அதிதுர்க்கரிய' என்பது வேறுபாடத்தின் பொருள்.

[2] வேறு பாடம்.

ளுக்குக் கணவனிடம் செய்யத்தக்க சுச்ரூஷையும் செய்வதற் கரியவையென்று எனக்குத் தோன்றுகின்றன. பிராம்மணரே! நல்ல ஆசாரமுள்ளவர்களும் ஸாதுக்களால் புகழப்பட்டவர்களு மான ஸ்திரீகள்[1] எதைச்செய்கிறார்களோ ஸ்திரீகளுடைய மிகவும் கோரமான அந்தத் தர்மத்தைக்காட்டிலும் வேறான செய்யமுடியாத கார்யமொன்றையும் நான் காணவில்லை. தந்தைகளும் தாய்களும் செய்யமுடியாத கார்யத்தையன்றோ செய்கிறார்கள்? ஸ்திரீகள் ஒரு வனையே கணவனாகக்கொண்டிருப்பதையும் உண்மையைப் பேசு வதையும் கர்ப்பத்தை வயிற்றினால் பத்துமாதகாலம் சுமப்பதை யுங்காட்டிலும் மிக்க ஆச்சர்யமான விஷயம் என்ன இருக்கிறது? பிரபுவே! ஸ்திரீகள் அதிகமான பிராண ஸம்சயத்தையும் நிகரில் லாத வேதனையையுமடைந்து அதிக கஷ்டத்தினால் புத்திரர்களைப் பெறுகிறார்கள்; பிராம்மணோத்தமரே! அந்தப்பிள்ளைகளை மிக்க அன்புடன் வளர்த்தலையும் செய்கிறார்கள். பிறகும், 'இந்தப் புத் திரன் எவ்வித நடையுள்ளவனாக இருப்பனோ?' என்று கவலையை அடைகிறார்கள். ஸ்திரீகள் கொடியவர்களான கணவனைச்சார்ந்த எல்லாரிடமுமிருந்துகொண்டு அவர்களால் வெறுக்கப்பட்டும் தாம் செய்யவேண்டிய காரியத்தை எப்பொழுதும் செய்வதும் மிகக் கஷ்டமானதென்று நான் எண்ணுகிறேன். பிராம்மணரே! க்ஷத்திரியர்களின் கடமையைச் செய்வதன் உண்மையை எனக்கு விரித்து உரைப்பீராக. பிராம்மணரே! மகாத்மாக்களுடைய தர்ம மானது குரூரனான மனிதனால் எவ்விதத்தாலும் அடையமுடியா தது. பகவானே! பிரச்னங்களை அறிந்தவர்களுள் சிறந்தவரே! இந்தப் பிரச்னத்தின் உத்தரத்தைக் கேட்க விரும்புகிறேன். பிருகு குலத்தில் பிறந்தவர்களுள் சிறந்தவரே! நல்ல விரதத்தையுடைய வரே! தேவரீருடைய மறுமொழியைக் கேட்க விரும்புகிறேன்' என்று வினவினார்.

மார்க்கண்டேயர், 'பரதர்களுள் சிறந்தவனே! ஒருவராலும் விடைகூற முடியாத இந்த வினாவுக்கு நான் உனக்கு ஸங்க்ஷேபத் துடன் விடைகூறுவேன். உள்ளபடி சொல்லுகிற என்னிட மிருந்து அதனை நீ தெரிந்துகொள்வாயாக. ஐயனே! சிலர் தாயை மேன்மையுடையவளென்று சொல்லுகிறார்கள். சிலர் தந்தைகளை மேம்பாடுடையவர்களென்று எண்ணுகிறார்கள். எந்தத் தாய் குழந்தைகளை வளர்க்கிறாளோ அவள் செய்யமுடியாத காரியத்

[1] வேறுபாடம்.

தைச் செய்கிறாள். தாய் தந்தைகள் தவத்தினாலும், தேவதைகளின் ஆராதனங்களாலும், வந்தனத்தினாலும், ச்ரமங்களைப் பொறுப்பதனாலும், மிகச்சிறந்த உபாயங்களாலும் புத்திரர்களை அடையவிரும்புகிறார்கள். வீரனே! இவ்வண்ணம் மிக்க ச்ரமத்தினால் அடைதற்கு மிக அரிய புத்திரனை அடைந்து, 'இவன் எப்படி இருப்பானோ' என்று எப்பொழுதும் கவலை அடைகிறார்கள். பாரத! தந்தையும் தாயும் புத்திரர்கள்விஷயத்தில் யசஸையும் கீர்த்தியையும் ஐச்வர்யத்தையும் தேஜஸையும் தர்மத்தையும் விரும்புகிறார்கள். ராஜேந்திரனே! எப்பொழுதும் ஹிதத்தையே செய்பவர்களான அந்தத் தாய்தந்தைகளுடைய ஆசையை எவன் ஸபலமாகச் செய்கிறானோ அவனே தர்மங்களை அறிந்தவன். ராஜேந்திரனே! எந்தப் புத்திரன்விஷயத்தில் தினந்தோறும் தந்தை தாய் இருவரும் ஸந்தோஷமடைகிறார்களோ அந்தப் புதல்வனுக்கு இம்மையிலும் மறுமையிலும் சாச்வதமான கீர்த்தியும் தர்மமும் ஏற்படுகின்றன; ஒருவிதமான யாகஞ்செய்தலும் வேண்டாம்; ச்ராத்தமும் உபவாஸமும் வேண்டுவதில்லை. பர்த்தாவிடத்தில் சுச்ரூஷை செய்கிறவள் அந்தச்சுச்ரூஷையினால் ஸ்வர்க்கத்தை அடைகிறாள்; இது நிச்சயம். அரசனே! யுதிஷ்டிர! இந்த ஸந்தர்ப்பத்தை ஒட்டிப் பதிவிரதைகளுடைய தர்ம நியமத்தை நீ ஸாவதானமாகக் கேள்.

## இருநூற்றைன்பதாவது அத்யாயம்.

## மார்க்கண்டேயஸமாஸ்யா பர்வம். (தொடர்ச்சி.)

(மரத்தடியில் தவம்புரிகின்ற கௌசிகன் தன்மீது எச்சமிட்ட கொக்கைப் பார்வையினால் எரித்ததும், பிக்ஷையிடத் தாமதித்ததால் கோபங்கொண்ட அவனைப் பதிவிரதையானவள் கொக்கின் வரலாற்றைக் குறிப்பித்துத் தர்மவ்யாதரிடம் போகச் சொல்லியதும்.)

பாரத! பிராம்மணர்களுள் மிகச்சிறந்தவனும் வேதங்களை அத்தியயனம் செய்தவனும் தவத்தைப் பொருளாகக்கொண்டவனும் சிறந்த தவமுள்ளவனும் தர்மசீலனுமான கௌசிகனென்கிற ஒரு பிராம்மணன் இருந்தான். அந்தப் பிராம்மணோத்தமன் அங்கங்களுடனும் உபநிஷத்துக்களுடனும்கூடின வேதங்களை அத்திய

யனம் செய்தவன். அவன் ஒரு மரத்தினடியில் வேதங்களை உச்சரித்துக்கொண்டு உட்கார்ந்திருந்தான். அந்த மரத்தின்மேல் ஒரு கொக்கு உட்கார்ந்திருந்தது. அப்பொழுது, அந்தக் கொக்குப் பிராம்மணன்மீது எச்சமிட்டுவிட்டது. மகாராஜனே! பிறகு, பிராம்மணன் கோபங்கொண்டவனாக மரத்தினுடைய உச்சியில் உட்கார்ந்துகொண்டிருந்த அந்தக் கொக்கை நன்றாகப்பார்த்து அதற்குத் தீங்கு செய்ய நினைத்தான். கோபம் மிகமேலிட்ட பிராம்மணனால் பார்க்கப்பட்டதும் மனத்தினால் தீங்குநினைக்கப்பட்டதுமான அந்தக் கொக்கானது பூமியில் விழுந்தது. அறிவற்று உயிர்போய் விழுந்திருக்கிற அந்தக் கொக்கைப்பார்த்து, பிராம்மணன், கருணையினால் மிக்க மனவருத்தமடைந்தவனாக, 'நான் விருப்பு வெறுப்புக்களால் வலிமைசெய்யப்பட்டு அகாரியத்தைச் செய்துவிட்டேன்' என்று மிக்க துயரத்தையடைந்தான். கற்றறிந்தவனான அவன் இவ்வண்ணம் பலவாறு கூறிப் பிக்ஷைக்காகக் கிராமத்தை அடைந்தான். பரதஸ்ரேஷ்டனே! அந்தப் பிராம்மணன் கிராமத்தில் சுத்தியுள்ள வீடுகளில் பிக்ஷை எடுத்துக்கொண்டு முன் பிக்ஷை எடுத்த வழக்கமுள்ள ஒரு வீட்டில் நுழைந்தான். பிறகு, 'பிக்ஷை கொடு' என்று யாசிக்கின்ற அவன், ஒரு ஸ்திரீயினால், 'குடும்பினியானவள் பாத்திரங்களைச் சுத்திசெய்துகொண்டு வருகிற வரையில் காத்துக்கொண்டிரும்' என்று சொல்லப்பட்டான். அரசனே! பரதர்களுள் சிறந்தவனே! இந்தச் சமயத்தில் அவளுடைய கணவன் மிகவும் பசியினால் பீடிக்கப்பட்டுத் திடீரென்று வீட்டினுள் நுழைந்தான். அந்தப் பதிவிரதை பர்த்தாவைப்பார்த்து, அந்தப் பிராம்மணனைக் கவனியாமல், பர்த்தாவுக்குக் கால்களை அலம்புவதற்காக ஜலத்தையும் ஆசமன தீர்த்தத்தையும் அப்படியே ஆஸனத்தையும் கொடுத்தாள். கருமையான கண்களுள்ள அவள் வணக்கமுள்ளவளாகப் பர்த்தாவை ஆஹாரங்களாலும் பக்ஷியங்களாலும் அப்படியே மிக்க மதுரமான வார்த்தைகளாலும் உபசரித்தாள். யுதிஷ்டிர! (கணவனால்) கௌரவிக்கப்பட்டவளும் கணவனுடைய மனத்தை அனுஸரிப்பவளுமான அவள் நித்தியம் கணவனுண்ட மிச்சத்தை உண்ணுகிறாள்; பதியைத் தேவதையாகவும் எண்ணினாள். அந்தப் பதியை எல்லாப் பாவனைகளாலும் அடைந்தவளும் பதிபணிவிடையினால் பற்றுதலுள்ளவளுமான அந்த ஸ்திரீ செய்கையினாலும் மனத்தினாலும் வாக்கினாலும் பதியை மீறிப் போஜனமும் செய்யாள்; ஜலபானமும் செய்யாள். நல்ல

ஆசாரமுள்ளவளும் சுத்தியுள்ளவளும் ஸாமர்த்தியமுள்ளவளும் குடும்பத்திற்கும் பர்த்தாவுக்கும் ஹிதத்தைச் செய்வதில் விருப்ப முள்ளவளுமான அவள் எப்பொழுதும் எது ஹிதமோ அதையே அனுஸரித்துவந்தாள். தேவதைகளுக்கும் அதிதிகளுக்கும் வேலைக் காரர்களுக்கும் அப்படியே மாமியார் மாமனார்களுக்கும் தினமும் பணிசெய்வதில் பற்றுள்ளவளும் எப்பொழுதும் இந்திரியங்களை நன்கு அடக்கினவளும் இனியபார்வையுள்ளவளுமான அந்த ஸ்திரீயானவள் பர்த்தாவுக்குப் பணிசெய்யும்பொழுது பிக்ஷையை விரும்பி நிற்கின்ற பிராம்மணனைப்பார்த்துப் பிக்ஷையிட நினைத் தாள். பரதர்களுள் மிகச்சிறந்தவனே! கீர்த்தியுள்ளவளான அந்தப் பதிவிரதை அப்பொழுது வெட்கமுள்ளவளானாள்; பிராம் மணனுக்குப் பிக்ஷையெடுத்துக்கொண்டு வெளியில் வந்தாள். பிராம் மணன், 'உத்தமஸ்திரீயே! அம்மா! இதென்ன? நீ என்னை, 'நில்' என்று சொல்லி என்பிக்ஷாடனத்திற்குத் தடையைச் செய்தாய். என்னை அனுப்பவில்லை' என்று சொன்னான். அரசனே! கோபத் தினால் மிக்கதாபத்தை அடைந்தவனும், தேஜஸினால் ஜ்வலிப்பவன் போலிருக்கிறவனுமான பிராம்மணனைப் பதிவிரதை பார்த்து, இன் சொல்லை முன்னிட்டு, 'பிராம்மணோத்தமரே! பொறுத்துக்கொள் ளும். ஸ்திரீகளுக்குள்ள அறியாமையைப் பொறுத்துக்கொள்ளும். பகவானே! என்விஷயத்தில் அனுக்ரஹம் செய்வீராக. பிராம் மணரே! என்விஷயத்தில் கருணைபுரிவீராக. கற்றறிந்தவரே! என் குற்றத்தை நீர் பொறுக்கவேண்டும். எனக்குப் பர்த்தா பெரிய தேவதை. பசித்துக்களைத்து வந்திருக்கின்ற அந்த என்பர்த்தா வுக்கு நான் பணிவிடை செய்தேன்' என்று சொல்ல, பிராம்மணன், 'உனக்குப் பிராம்மணர்கள் கௌரவமுள்ளவர்களல்லர். உன் கணவனே உன்னால் கௌரவமுள்ளவனாகச் செய்யப்பட்டான். கிருஹஸ்தாச்ரமத்தில் இருக்கிற நீ பிராம்மணர்களை அவமதிக்கிறாய். இந்திரன்கூட இவர்களை நமஸ்கரிக்கிறான். அவ்வாறிருக்க, பூமியில் மனிதன் இவர்களை நமஸ்கரிப்பதில் ஸம்சயமென்ன? கர்வங் கொண்டவளே! நீ அறியவில்லை. நீ ஞானவ்ருத்தர்களுடைய மஹி மையைக் கேட்டதில்லை. அக்னிக்கு ஒப்பாயிருக்கிற பிராம்மணர் கள் அவமதிக்கப்பட்டால் மலைகளோடும் காடுகளோடும் த்வுீப களோடுங்கூடின பூமியைக்கூட விரைவாகவே எரித்து விடுவார்கள்' என்றுசொன்னான். ஸ்திரீ, 'பிராம்மரிஷியே! நான் கொக்கல்லேன். தபோதனரே! கோபத்தைவிட்டுவிடும். கோபமுள்ளவரான நீர்

கோபமுள்ள இந்தப் பார்வையினால் என்னை என்ன செய்துவிடுவீர்? நான் தேவர்களுக்குச்சமானர்களும் பெரிய மனமுள்ளவர்களுமான பிராம்மணர்களை அவமதிக்கிறதில்லை. தோஷமற்றவரே! பிராம்மணரே! நீர் இந்த அபராதத்தைப் பொறுக்கவேண்டும். நான் சிறந்த புத்தியுடையவர்களான பிராம்மணர்களுடைய சக்தியையும் மகிமையையும் அறிவேன். பிராம்மணர்களுடைய கோபத்தினால் ஸமுத்திரமானது உவர்நீருள்ளதும் பானம்செய்வதற்குத் தகாததுமாகச் செய்யப்பட்டதன்றோ? அப்படியே, ஜ்வலிக்கின்ற தவமுள்ளவர்களும் ஆத்மாவைத்தியானிப்பவர்களுமான முனிவர்களுடைய கோபத்தீயானது இன்றுங்கூட ஸமுத்திரத்தினுள் தணியாமலிருக்கிறது. அளவுகடந்த சக்தியுள்ள அந்தப்பிராம்மணர்களை எந்தமூடன்தான் அவமதிப்பான்? மிக்க கெட்டஎண்ணமுள்ளவனும் குரூரனுமான வாதாபி என்கிற மகாஸுரன் பிராம்மணர்களை அவமதித்ததனால் அகஸ்திய ரிஷியை அடைந்து ஜீர்ணமானான். மகாத்மாக்களான பிராம்மணர்களுடைய அநேகப் பெருமைகள் கேட்கப்படுகின்றன. பிராம்மணரே! மகாத்மாக்களுக்குக் கோபமும் மிகவும் அதிகம்; அனுக்ரஹமும் அதிகம். பிராம்மணரே! தோஷமற்றவரே! இந்தக்குற்றத்தை நீர் பொறுக்கக்கடவீர். பிராம்மணரே! பர்த்தாவினுடைய சுச்ரூஷையினால் உண்டாகும் தர்மமே எனக்கு ருசிக்கிறது. எல்லாத்தேவதைகளுள்ளும் எனக்குக் கணவனே பரதேவதை. பிராம்மணோத்தமரே! தேவதைகளோடு பேதமின்றி அந்தப் பர்த்தாவுக்கு நான் என்கடமையைச் செய்வேன். பிராம்மணரே! பர்த்ருசுச்ரூஷைக்குப் பலன் எவ்விதமென்பதைப் பாரும். கொக்கானது உம்மால் கோபத்தால் எரிக்கப்பட்டதன்றோ? அது என்னால் அறியப்பட்டது. பிராம்மணோத்தமரே! மனிதர்களுக்குக் கோபமானது உடலிலுள்ள பகைவன். நீர் கோபித்துக்கொள்ளவேண்டாம். பதிவிரதையான நான் கொக்குப்போலக் கொல்லப்படத்தக்கவளாகமாட்டேன். எவன் கோபத்தையும் மோகத்தையும் விடுகிறானோ அவனைத் தேவர்கள் பிராம்மணனாக அறிகிறார்கள். எவன் இவ்வுலகத்தில் ஸத்தியவாக்கியங்களை உரைப்பவனோ, ஆசார்யனை ஸந்தோஷப்படுத்துபவனோ, பிறனால் தான் துன்பம் செய்யப்பட்டாலும் பிறனைத் துன்பம் செய்யாதவிருப்பமுள்ளவனோ அவனைத் தேவர்கள் பிராம்மணனாக அறிகிறார்கள். எவன் இந்திரியங்களை ஜயித்தவனாகவும் தர்மத்தில் முக்கிய நோக்கமுள்ளவனாகவும் வேதாத்தியயனத்தில் பற்றுதலுள்ளவனாகவும்

சுத்தனாகவுமிருப்பானோ, காமம் கோபமிரண்டும் எவனுக்கு வசப்பட்டிருக்குமோ அவனைத் தேவர்கள் பிராம்மணனாக அறிகிறார்கள். தர்மங்களை அறிந்தவனும் சிறந்த மனமுடையவனும் எல்லாத் தர்மங்களையும் செய்பவனுமான எந்த மனிதனால் உலகம் தனக்குச் சமமாக எண்ணப்படுகிறதோ அவனைத் தேவர்கள் பிராம்மணனாக அறிகிறார்கள். எவன் வேதங்களை அத்தியயனம் செய்விப்பனோ, தானும் அத்தியயனம் செய்வனோ, எவன் யாகம் செய்வனோ, பிறர்களுக்கும் யாகத்தைச் செய்விப்பனோ, சக்திக்குத் தக்கபடி தானம் செய்வனோ, அவனைத் தேவர்கள் பிராம்மணனாக அறிகிறார்கள். பிரம்மசர்யத்தையுடையவனும் [1] சொல்வன்மையுள்ளவனும் மதமில்லாதவனும் சிறந்த வேதங்களை ஓதினவனும் வேதங்களை அத்யயனம் செய்துகொண்டே இருப்பவனுமான பிராம்மணோத்தமனைத் தேவர்கள் பிராம்மணனாக அறிகிறார்கள். பிராம்மணர்களுக்கு எது மகிமையோ அதை இவர்களுக்கு இருப்பதாகச் சொல்லவேண்டும். அப்படி ஸத்தியத்தைப் பேசுகிறவர்களுக்குப் பொய்யில் மனமானது ஸந்தோஷமடையாது. பிராம்மணோத்தமரே! பிராம்மணனுக்கு வேதத்தையும் மனத்தின் அடக்கத்தையும் மனம், வாக்கு, காயம் என்னும் மூன்றினுடைய ஒற்றுமையையும் இந்திரிய நிக்ரஹத்தையும் சாஸ்வதமான பொருளாகச் சொல்லுகிறார்கள். தர்மத்தை அறிந்த ஜனங்கள் ஸத்தியத்தையும் மனோவாக்குக்காயங்களுடைய ஒற்றுமையையும் சிறந்த தர்மமாகச் சொல்லுகிறார்கள். சாஸ்வதமான தர்மமானது விளக்கத்தால் அறிய முடியாதது. அந்தத் தர்மமானது ஸத்தியத்தில் நிலைபெற்றிருக்கிறது. தர்மமானது ச்ருதியைப் பிரமாணமாகக் கொண்டிருக்கிறதென்று பெரியோர்களுடைய உபதேசம். பிராம்மணோத்தமரே! ஸூக்ஷ்மமான தர்மமே பலவாறாகக் காணப்படுகிறது. பகவானே! நீவிர் தர்மத்தை அறிந்தவர்; வேதாத்யயனத்தில் பற்றுள்ளவர்; சுத்தர். பகவானே! தர்மத்தை நீர் உள்ளபடி அறியவில்லை என்பது என்னுடைய எண்ணம். பிராம்மணரே! உண்மைத் தர்மத்தை நீர் அறியாமலிருந்தால் மிதிலாபுரிக்குப் போய்த் தர்மவ்யாதனைக் கேளும். தாய்தந்தைகளுக்குச் சுச்ரூஷை செய்கிறவரும் உண்மையைப் பேசுகிறவரும் ஜிதேந்திரியருமான வியாதர் மிதிலையில் வசிக்கிறார். அவர் உமக்குத் தர்மங்

[1] 'வதாந்ய:' என்பது மூலம்; 'ஈகையுள்ளவன்' என்றும் கொள்ளலாம்.

களைச் சொல்லுவார். பிராம்மணோத்தமரே! உமதிஷ்டப்படி அவ்விடம் செல்லுவீராக. உமக்கு மங்களம். பரமதார்மிகரான அந்த வியாதர் உம்முடைய ஸம்சயத்தைப் போக்குவார். இகழப் படாதவரே! அதிகமாகச் சொல்லப்பட்டிருந்தாலும் என்னுடைய (அபசாரங்கள்) எல்லாவற்றையும் பொறுக்கக்கடவீர். எவர்கள் தர்மத்தை அறிகிறார்களோ அவர்களனைவருக்கும் ஸ்திரீகள் வதம் செய்யத்தகாதவர்களல்லவோ?' என்று சொன்னாள். பிராம்மணன், 'நான் பிரீதியுள்ளவனாக இருக்கிறேன். உனக்கு மங்களம். கல் யாணி! கோபம் போய்விட்டது. உன்னால் சொல்லப்பட்ட நிந்தை யானது எனக்குச் சிறந்த நன்மையே ஆயிற்று. உனக்கு க்ஷேம முண்டாகட்டும். கல்யாணி! நான் மிதிலைக்குச் செல்வேன். என் காரியத்தை நிறைவேற்றிக்கொள்வேன். கல்யாணி! இப்படிப் பட்ட நடையுள்ள நீ பாக்கியவதியாக இருக்கிறாய்' என்று சொன் னான். அவளால் சொல்லி அனுப்பப்பட்ட பிராம்மணோத்தமனான அந்தக் கௌசிகன் அவ்விடம் விட்டுப் புறப்பட்டுத் தன்னை நிந்தித் துக்கொண்டு தன் வீட்டையே அடைந்தான்.

## இருநூற்றுப்பத்தாவது அத்யாயம்.

## மார்க்கண்டேயஸமாஸ்யா பர்வம். (தொடர்ச்சி.)

(கௌசிகன் பதிவிரதையின் சொல்லால் தர்மவியாதரிடம் சென்றதும், தர்மவியாதர் அவனுக்கு எல்லாத் தர்மங் களையும் உபதேசித்ததும்.)

அந்தப் பிராம்மணன் ஸ்திரீயினால் சொல்லப்பட்ட அந்த ஆச்சரியத்தை முழுமையும் நினைத்துத் தன்னை அதிகமாக நிந்தித் துக்கொண்டு குற்றம்செய்தவன்போலக் [1] காணப்பட்டான். பிறகு, அவன் தர்மத்தினுடைய ஸூக்ஷ்மவிதியைச் சிந்திக்கின்றவனாக, 'நான் ச்ரத்தையுள்ளவனாக வேண்டும்; மிதிலைக்குச் செல்லு கிறேன். சுத்தமான மனமுள்ளவரும் தர்மத்தை அறிந்தவரு மான வியாதர் அந்த மிதிலையில் வஸிக்கிறாரன்றோ? அந்தத் தபோதனரிடம் தர்மத்தைக் கேட்பதன்பொருட்டு நான் இப்பொ ழுதே செல்லுகிறேன்' என்று சொன்னான். அவன் மனத்தால் இவ்வாறு நன்கு ஆலோசித்து, ஸ்திரீயினுடைய வசனத்தில்

1 'கூரேஹன்' என்பது மூலம்.

நம்பிக்கையுள்ளவனாகவும், கொக்கின் செய்தியைக்கேட்டு உண்டான நம்பிக்கையினாலும் தர்மத்தைவிட்டு விலகாத மங்களகரமான அவளுடைய வசனங்களாலும் ஆவலுடன்கூடியவனாகவும் மிதிலையை நோக்கிப் புறப்பட்டான். பிறகு, அவன் காடுகளையும் கிராமங்களையும் நகரங்களையும் தாண்டி ஜனகனால் நன்கு காப்பாற்றப்பட்டதும், தர்மமாகிற அணையினால் சூழப்பட்டதும், யாகங்களும் உத்ஸவங்களுமுள்ளதும், மங்களகரமானதும், கோபுரங்களும் அட்டாலகங்களுமுள்ளதும், உப்பரிகைகளாலும் மதில்களாலும் அழகியதுமான மிதிலையை அடைந்தான். அந்தப்பிராம்மணன் அழகியதும், அநேக [1] விமானங்களோடுகூடியதும், அநேகமான வாணிகப் பொருள்களுள்ளதும், நன்றாக வகுக்கப்பட்ட ராஜமார்க்கங்களுள்ளதும், குதிரைகளோடும் ரதங்களோடும் அப்படியே யானைகளோடும் அநேக யுத்தவீரர்களோடும் கூடியதும், ஸந்தோஷமுள்ளவர்களும் புஷ்டியுள்ளவர்களுமான ஜனங்கள் எங்கும் நிரம்பியதும், எப்பொழுதும் உத்ஸவங்கள் நிறைந்ததுமான மிதிலையில் நுழைந்து சென்றுகொண்டே அநேகவ்ருத்தாந்தங்களுடன் கூடின அந்த மிதிலையைப் பார்த்தான்; தர்மவ்யாதனைப்பற்றிக் கேட்கவும் கேட்டான். அந்தத்தர்மவியாதனும் பிராம்மணர்களால் இவனுக்குச் சொல்லப்பட்டார். அவ்விடம் சென்று, மிருகங்களைக் கொல்லுமிடத்து நடுவில் இருப்பவரும் மானிறைச்சிகளையும் எருமையிறைச்சிகளையும் விற்பவரும் தவஸியுமான அந்தத் தர்மவ்யாதனைக் கண்டான். இறைச்சிவாங்குகிறவர்கள் நெருங்கி ஸஞ்சரிப்பதனால் பிராம்மணன் ஏகாந்தமான இடத்தில் உட்கார்ந்துகொண்டிருந்தான். அவரோ, பிராம்மணன் வந்திருக்கிறதையறிந்து, உடனே, பரபரப்புடன் எழுந்திருந்து பிராம்மணன் ஏகாந்தமாக ஆஸனத்தில் வீற்றிருந்த இடம் வந்தார். வியாதர், 'பகவானே! உம்மை அபிவாதனம் செய்கிறேன். பிராம்மணோத்தமரே! உமக்கு நல்வரவா? நான் சேவகனல்லேனோ? உமக்கு மங்களம். நான் என்ன செய்யவேண்டும்? எனக்குக் கட்டளை இடும். நீர் மிதிலைக்குப் போவென்று பதிவிரதையினால் சொல்லப்பட்டதும் நீர் இந்த இடத்திற்கு வந்த காரியமும் ஆகிய அனைத்தையும் நான் அறிவேன்' என்றார். அவருடைய அந்த வாக்கியத்தைக் கேட்டு அந்தப் பிராம்மணன் மிக வியந்து, 'இது இரண்டாவது ஆச்சரியம்'

1 'ஏழுமாடியுள்ள வீடு' என்பது பழையவுரை.

என்று எண்ணினன். பிறகு, வியாதர் பிராம்மணனைப் பார்த்து, 'பகவானே! தோஷமற்றவரே! இந்த இடத்திலிருப்பது உமக்குத் தக்கதன்று. உமக்கு விருப்பமிருந்தால், வீட்டுக்குச் செல்வோம்' என்று சொன்னார். பிராம்மணன் ஸந்தோஷமடைந்து அவரைப் பார்த்து, 'ஆக' என்றே சொன்னான். அந்த வியாதர் பிராம்மணனை முன்னிட்டுக்கொண்டு வீட்டைக்குறித்துச் சென்றார். அழகிய வீட்டில் நுழைந்து, அந்த வியாதரால் அந்தப் பிராம்மணோத்தமன் அர்க்கியத்தாலும் ஆஸனத்தாலும் நன்றாகப் பூஜிக்கப்பட்டான். பிராம்மணோத்தமன் பாத தீர்த்தத்தையும் ஆசமனீயத்தையும் பெற்றுக்கொண்டான்.

பிறகு, ஸுகமாக வீற்றிருக்கிற பிராம்மணன், அந்தவியாதரைப் பார்த்து, 'இந்தத் தொழிலானது உமக்குத் தகுந்ததன்றென்று எனக்குத் தோன்றுகிறது. ஐயா! கோரமான உம்முடைய இத்தொழிலால் நான் மிகவும் பரிதாபத்தை அடைகிறேன்' என்கிற வசனத்தைச் சொன்னான். வியாதர், 'தகப்பன் பாட்டன் பரம்பரையாகச் செய்யப்பட்டுவருவதும் சிறந்ததுமான இந்தத் தொழிலானது என் குலத்திற்குத்தக்கது. பிராம்மணரே! ஸ்வதர்மத்திலிருக்கின்ற என்னைப்பற்றி நீர் துக்கப்படவேண்டாம். பிராம்மணோத்தமரே! உலகத்தைப் படைத்தவனால் ஏற்படுத்தப்பட்ட பழமையான சொந்தத்தொழிலைத் தொடர்ந்து காப்பாற்றிக்கொண்டு நான் வயதுசென்றவர்களான தாய்தந்தைகளுக்கு முயற்சியுடன் பணிவிடை செய்கிறேன்; உண்மை பேசுகிறேன்; அஸூயைப்படுகிறதில்லை; சக்திக்குத்தக்கபடி கொடுக்கிறேன்; தேவதைகளுக்கும் அதிதிகளுக்கும் வேலைக்காரர்களுக்கும் கொடுத்து மிகுதியிருக்கும் வஸ்துக்களால் ஜீவனம் செய்கிறேன். நான் ஒன்றையும் இகழ்கிறதில்லை. அதிக பலமுள்ளவனை நிந்திக்கிறதில்லை. பிராம்மணோத்தமரே! முற்காலத்தில் செய்த வினையானது செய்தவனைப் பின்தொடர்கிறது. பயிரிடுதல், பசுக்களைக் காப்பாற்றுதல், வியாபாரம் செய்தல் இவைகள் இவ்வுலகில் ஜனங்களுக்கு ஜீவன உபாயங்கள். தண்டநீதியினாலும் மூன்று வேதங்களாலும் பரலோகம் ஸித்திக்கிறது. சூத்திரனிடத்தில் வேலையும், வைஸ்யனிடத்தில் பயிரிடுதலும், க்ஷத்திரியனிடத்தில் யுத்தமும், பிராம்மணனிடத்தில் எப்பொழுதும் பிரம்மசர்யமும் தவமும் மந்திரமும் ஸத்தியமும் அறிஞர்களால் எண்ணப்பட்டிருக்கின்றன. அரசன், தமக்குரிய தொழிலில் பற்றுதலுள்ள

பிரஜைகளைத் தர்மத்தால் பரிபாலனம் செய்கிறான். எவர்கள் வேறு தொழில்களில் செல்லுகிறார்களோ, அவர்களைத் தங்களுக்குரிய தொழில்களில் அரசன் சேர்ப்பிக்கிறான். பிரஜைகள், அரசர்களிடமிருந்து எப்பொழுதும் பயப்படவேண்டும். அரசர்கள் பிரஜைகளுக்கு அதிபதிகளல்லரோ? வேடர்கள் பாணங்களால் மிருகங்களைக் கொல்லுவதுபோல அரசர்கள் விபரீத கர்மங்களில் நிலைபெற்றிருக்கிற மனிதர்களைக் கொல்லுகிறார்கள். பிரம்மரிஷியே! ஜனகனுடைய இந்த மிதிலாநகரில் ஒருவனாவது தனக்கு விதிக்கப்படாத தொழில்களில் நிலைபெற்றவனாக இருக்கவில்லை. பிராம்மணோத்தமரே! நான்குவர்ணத்தார்களும் தமக்குரிய தொழில்களில் பற்றுள்ளவர்களாக இருக்கிறார்கள். அப்படிப்பட்ட இந்த ஜனகராஜன், தன் புத்திரனாக இருந்தாலும், கெட்ட நடையுள்ளவனும் தண்டிக்கப்படத்தக்கவனுமாயிருப்பவனைத் தண்டிக்கிறான்; நன்னடையுள்ளவனைத் துன்புறுத்துவதில்லை. சாரர்களை நன்கு ஏவுகிற அரசன், எல்லாவற்றையும் தர்மத்தால் பார்க்கிறான். பிராம்மணோத்தமரே! க்ஷத்திரியர்களுக்கு ஸம்பத்தும் ராஜ்யமும் தண்டமும் முக்யமானவை. அரசர்கள் ஸ்வதர்மத்தினால் ஏராளமான ஸம்பத்தை விரும்புகிறார்கள். அரசன் எல்லாவர்ணங்களுக்கும் ரக்ஷகனாக இருக்கிறான். நிச்சயம். பிரம்மரிஷியே! நான் மற்றவனால் கொல்லப்படுகிற பன்றிகள் எருமைகள் ஆகியவற்றின் மாம்ஸங்களை எப்பொழுதும் விற்கிறேன். நான் கொல்லுவதில்லை. நான் எப்பொழுதும் மாம்ஸங்களை விற்கிறேன்; நான் பக்ஷிக்கிறதில்லை. அப்படியே, நான் ருதுகாலங்களில் பத்னியை அடைகிறேன். பிராம்மணரே! அப்படியே, எப்பொழுதும் (பகலில்) உபவாஸமிருக்கிறேன். எப்பொழுதுமே நான் இராக்காலத்தில் புசிக்கிறேன். மனிதன் நன்னடையில்லாதவனாயிருந்தாலும் ஒரு காலத்தில் நன்னடையுள்ளவனாகிறான். தார்மிகன் கூடப் பிராணிகளைக் கொல்லுவதில் விருப்பமுள்ளவனாகிறான். அரசர்களுடைய தவறுகளால் பெரிய தர்மமானது அதர்மத்தோடு கலக்கப்படுகிறது. அதர்மமும் நிலைபெறுகிறது. அதனால், மனிதர்கள் கலந்துபோகிறார்கள்; பயங்கரமான உருவமுள்ளவர்களும் குள்ளர்களும் கூனர்களும் அப்படியே பருத்த தலையுள்ளவர்களும் நபும்ஸகர்களும் குருடர்களும் செவிடர்களும் மிகமேலேறின கண்களுள்ளவர்களுமாகப் பிறக்கிறார்கள். அரசர்களுடைய அதர்மத்தினால் எப்பொழுதும் பிரஜைகளுக்குத் தீங்கு

விளைகிறது. அப்படிப்பட்ட இந்த ஜனகராஜன் பிரஜைகளைத் தர்மத்தால் பாதுகாக்கிறான். பிராம்மணோத்தமரே! இந்த ஜனகராஜன் எப்பொழுதும் ஸ்வதர்மத்தில் பற்றுதலுள்ள எல்லாப் பிரஜைகளையும் அனுக்ரஹித்துக்கொண்டு தகப்பன்போலப் பாதுகாக்கிறான். என்னைப் புகழ்கிறவர்களும் இகழ்கிறவர்களுமாகிய அனைவரையும் நான் நல்லசெய்கையினால் ஸந்தோஷமடையச் செய்கிறேன். இந்திரியங்களை அடக்கினவர்களும் முன்னேற்றத்தில் நோக்கமுள்ளவர்களும் தம்தொழிலால் ஜீவிக்கிறவர்களும் சேனையை நன்கு சேர்க்கிறவர்களும் ஒன்றையும் அண்டிப்பிழையாதவர்களுமாயிருப்பவர்களே அரசர்கள். எப்பொழுதும் சக்திக்குத்தக்கபடி அன்னமளித்தலும் பொறுமையும் எப்பொழுதும் தர்மத்திலேயே நிலைபெற்றிருத்தலும் தக்கபடி பெரியோர்களைப் பூஜித்தலும் எல்லாப் பிராணிகளிடமும் தயையும் மனிதர்களுக்கு அவச்யமிருக்கவேண்டும். மனிதர்களுக்கு ஸத்பாத்திரத்தில் பொருளைக் கொடுத்தலைக்காட்டிலும் வேறுகுணங்கள் வேண்டுவதில்லை. பொய் சொல்வதைவிட்டுவிடவேண்டும். கேட்கப்படாமலே பிரியத்தைச் செய்யவேண்டும். காமத்தாலும் பயத்தாலும் த்வேஷத்தாலும் தர்மத்தைவிடக் கூடாது. பிரியம் நேர்ந்தபோது எல்லைமீறிய சந்தோஷமடையக் கூடாது. துக்கம் வரும்போது மனவருத்தமடையக்கூடாது. கஷ்டமான காரியங்கள் நேர்ந்தபோது மதிமயங்கக்கூடாது. தர்மத்தை விடக்கூடாது. தான் செய்யத்தக்க ஒரு கர்மமிருக்கும் போது அதைவிட்டு வேறு ஒரு கர்மத்தைச் செய்யக்கூடாது. எந்தக்கர்மத்தை நல்லதென்று எண்ணுகிறானோ அதிலேயே மனத்தைச் செலுத்தவேண்டும். தீமை செய்தவனுக்கும் தீங்கு செய்யக் கூடாது. எப்பொழுதும் தர்மசிந்தையுள்ளவனாகவே இருக்க வேண்டும். பாவத்தைச்செய்ய விரும்புகிற பாவி தன்னாலே கெடுக்கப்படுகிறான். இது வ்யஸனமுள்ளவர்களான துஷ்டர்களுடைய கெட்ட செய்கை. தர்மமில்லையென்று எண்ணிக்கொண்டு சுத்தர்களைப் பரிகஸிக்கிறவர்களான தர்மத்தில் நம்பிக்கையற்றவர்கள் நாசமடைகிறார்கள்; ஸம்சயமில்லை. பாவியானவன் பெரிய துருத்திபோல எப்பொழுதும் மாம்ஸத்தினால் பருத்த தேகமுள்ளவனாக இருக்கிறான். பிராம்மணோத்தமரே! எல்லாரிடத்திலும், ஸத்புருஷன் வணக்கமுள்ளவனாகவே இருப்பான். கர்வங்கொண்டவர்களான மூடர்களுடைய பேச்சானது ஸாரமற்றதாக இருக்கும். ஸூர்யன் பகலில் பொருள்களின் உருவத்தைக் காண்

பிப்பதுபோல மூடர்கள் மனத்திலிருக்கிற எண்ணத்தை வெளியில் காண்பிக்கிறார்கள். மூர்க்கன் உலகத்தில் தற்புகழ்ச்சியினாலேயே பிரகாசியாமற் போகிறான். கல்வியில்தேர்ந்தவன் அழுக்கடைந்திருந்தாலும் பிறனுடைய நிந்தையைச் சொல்லாமலும் தன்னுடைய புகழை விரித்துக்கூறாமலுமிருப்பதனால் இவ்வுலகில் பிரகாசிக்கிறான். குணங்களால் நிறைந்த ஒரு மனிதனாவது பூமியில் [1] பிரகாசமாகக் காணப்படுகிறதில்லை. பாவத்தைச் செய்து அனுதாபமடைகிறவன் முன்செய்த பாவத்தினின்று விடப்படுகிறான். 'முன்செய்த கொடிய காரியத்தை மீண்டும் நான் செய்யேன்' என்று எண்ணுகிறவன், இனிச் செய்யப்படும் பாவத்தினின்று விடப்படுகிறான். பிராம்மணோத்தமரே! பாவத்தைச்செய்தவன் பிராயச்சித்தரூபமான வ்ரதாவதாரரூ கர்மத்தினால் பாவத்தினின்று விடப்படுகிறான். பிராம்மணரே! தர்மங்களில் ஸ்வதர்மத்தை அனுஷ்டிப்பதையே ஸ்வபாவமாகக் கொண்ட மனிதன் இவ்வுலகில் முன்செய்த பாவங்களை நினைத்துப் பிற்காலத்தில் அவைகளை நாசம் செய்கிறான். பிராம்மணரே! தவறுதலால் இவ்வுலகில் பிராம்மணர்கள் எந்தப் பாவத்தைச் செய்கிறார்களோ பிராம்மணர்களுடைய அந்தப் பாவத்தைத் தர்மம் போக்குகிறது. மனிதன் பாவத்தைச்செய்து, 'நான் பாவம் செய்யவில்லை' என்று எண்ணுவானாகில் அவனைத் தேவர்கள் ஸாக்ஷியாகப் பார்த்துக் கொண்டிருக்கிறார்களன்றோ? அவன் உள்ளத்திலேயே வஸிக்கின்ற பரமாத்மாவும் அவன்செய்கைக்கு ஸாக்ஷியாக இருக்கிறது. மனிதன் ச்ரத்தையுள்ளவனாகவும் அஸூயையில்லாதவனாகவும் மங்களத்தையே செய்ய விரும்பவேண்டும். எந்தப் பாவியானவன் தன்னிடமுள்ள தோஷங்களைப் பாராமல் வஸ்திரத்திலுள்ள ஓட்டைகளைப்போல ஸாதுக்களுடைய தோஷங்களை வெளியிடுகிறானோ அவன் மறுமையில் நாசமடைகிறான். மனிதன் அறிவின்மையினால் பாவத்தைச் செய்து மங்களகரமான பிராயச்சித்தத்தைச் செய்வனாகில் அவன் பெரிய மேகத்தினின்று சந்திரன் விடுபடுவதுபோல எல்லாப்பாவங்களினின்றும் விடப்படுகிறான். உதிக்கிற ஸூர்யன் இருளனைத்தையும் போக்குவதுபோல நல்வினைகளைச் செய்பவன் எல்லாப்பாவங்களையும் போக்குகிறான். பிராம்மணோத்தமரே! லோபம் மோஹம் இரண்டையும் பாவங்களுக்கு இருப்பிடமாக அறியக்கடவீர். பிராம்மணரே!

[1] அடக்கமாயிருப்பனென்பஃது.

ஆதலால், பண்டிதன் அவ்விரண்டையும் முக்யமாக விலக்க வேண்டும். அதிகமாகச் சாஸ்திரார்த்தங்களைக் கேட்டறியாத வர்களும் அதர்மத்தைவிட்டு விலகாதவர்களும் பேராசையுள்ள வர்களுமான மனிதர்கள், புற்களால் மூடப்பட்டிருக்கிற ஆழ்ந்த கிணறுகள்போலத் தர்மவேஷத்தால் மறைக்கப்பட்டவர் களாகப் பாவத்தைச்செய்ய முயல்கின்றார்கள். அவர்களிடத்தில் இந்திரியங்களினடக்கமும் சுத்தியும் தர்மத்தைச்சார்ந்த பேச்சுக் களும் ஆகிய எல்லாமிருந்தாலும் சிஷ்டாசாரமானது கிடைப்பது மிக அரிதன்றோ?' என்று கூறினர்.

## இருநூற்றுப்பதினோராவது அத்யாயம்.

## மார்க்கண்டேயஸமாஸ்யாபர்வம். (தொடர்ச்சி.)

(தர்மவியாதர், சிஷ்டர்களுடைய லக்ஷணமுதலியவற்றைக் கௌசிகனுக்குச் சொல்லியது.)

பேரறிவாளனே! அந்தப் பிராம்மணன் தர்மவியாதரைப் பார்த்து, 'புருஷோத்தமரே! நான் எப்படி சிஷ்டாசாரத்தைத் தெரிந்துகொள்வேன்? எப்பொழுதும் சிஷ்டாசாரங்களிலுள்ள ஐந்து பவித்திரங்கள் எவை? தார்மிகர்களுள் சிறந்தவரே! மகா புத்தியுள்ள வ்யாதரே! உமக்கு மங்களம். உம்மிடமிருந்து அதைக் கேட்கவிரும்புகிறேன். அதனை உள்ளபடி உரைப்பீராக' என்று வினவ, வ்யாதர், 'பிராம்மணோத்தமரே! சிஷ்டாசாரங்களில் எப் பொழுதும் யஜ்ஞம், தானம், தவம், வேதங்கள், ஸத்தியம் என இவைகள் ஐந்து பவித்திரங்கள். எவர்கள் காமக்ரோதங்களையும் டம்பத்தையும் பேராசையையும் மனோவாக்குக் காயங்களுடைய ஒற்றுமையின்மையையும் வசப்படுத்திக்கொண்டு, செய்யவேண்டிய கடமையென்கிற கர்மங்களைச் செய்து சந்தோஷமடைகிறார் களோ அவர்கள் சிஷ்டர்களென்று சிஷ்டர்களால் ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கிறார்கள். யஜ்ஞானுஷ்டானத்தையும் வேதாத் தியயனத்தையும் இயற்கையாகக் கொண்ட அந்தச் சிஷ்டர் களுடைய நடை வேறுபடாது. ஆசாரங்களைப் பாதுகாப் பதும் இரண்டாவதான சிஷ்ட லக்ஷணம். பிராம்மணரே! எப்பொழுதும் சிஷ்டாசாரங்களில் குருசுச்ரூஷை, ஸத்தியம்

கோபமின்மை, தானம் இவை நான்கும் நிலைபெற்றிருக்கின்றன. சிஷ்டாசாரத்தில் மனத்தைச் செலுத்தி எல்லாவிதங்களாலும் அதில் ஊன்றும்படி செய்து மனிதன் எந்த ஸந்தோஷத்தை அடைகிறானோ அந்த ஸந்தோஷமானது இவை நான்குமில்லாமல் வேறுவிதத்தால் அடையமுடியாது. வேதத்திற்கு ஸாரம் ஸத்தியம். ஸத்தியத்திற்கு ஸாரம் ஐம்பொறியடக்கல். ஐம்பொறியடக்கலுக்கு ஸாரம் போகங்களை விடுதல். இவைகள் எப்பொழுதும் சிஷ்டாசாரங்களில் நிலைபெற்றிருக்கின்றன. புத்தி மோகத்துடன் கூடின எந்த மனிதர்கள் தர்மங்களை வெறுக்கிறார்களோ கெட்டவழியினால் செல்லுகின்ற அவர்களை அனுஸரிப்பவனும் பீடிக்கப்படுகிறான். இந்திரியங்களை நன்கு அடக்கினவர்களும், வேதத்தையும் விஷயானுபவங்களை விடுவதையும் பிரதானமாகக்கொண்டவர்களும், தர்மமார்க்கத்தை அடைந்திருப்பவர்களும், ஸத்தியத்திலும் தர்மத்திலும் பற்றுதலுள்ளவர்களும், ஆசாரியருக்கு ஸம்மதமான விஷயத்தில் மனத்தைச் செலுத்தினவர்களும், [1] சாஸ்திரமுறையினால் அறம்பொருள்களை அறிபவர்களுமான சிஷ்டஜனங்களே சாஸ்திரத்தில் கூறிய ஆசாரமுள்ளவர்கள். ஞானத்தை அடைந்தும் தார்மிகர்களை அடுத்தும், நாஸ்திகர்களும் தர்மத்தின் எல்லையைக்கடந்துசெல்லுகிறவர்களும் குரூரர்களும் பாபபுத்தியில் நிலைபெற்றிருப்பவர்களுமான அப்படிப்பட்ட துஷ்டர்களை விடுவீராக. காமமும் லோபமுமாகிற முதலைகளால் வியாபிக்கப்பட்டதும் ஐந்து இந்திரியங்களாகிற ஜலத்தோடு கூடியதுமான நதியில் தைரியமாகிற ஓடத்தை ஏற்படுத்திக்கொண்டு பிறவித் துன்பங்களைத் தாண்டுவீராக. நாளடைவில் சேர்க்கப்பட்டிருக்கிற பெரிதான புத்தியோக ரூபமான தர்மமானது, வெளுப்புநிறமுள்ள ஆடையில் சாயம் பிடிப்பதுபோலச் சிஷ்டாசாரத்தில் நன்கு பற்றுதலுள்ளதாகும். கொல்லாமை, மெய்ம்மை எல்லாப் பிராணிகளுக்கும் ஹிதம்செய்தல் ஆகிய இம்மூன்றும் சிறந்தவை. இவற்றுள் அஹிம்ஸை என்பது நிகரில்லாத தர்மம். அது ஸத்தியத்தில் நிலைபெற்றிருக்கிறது. ஸத்தியத்தை ஆதாரமாகக்கொண்டு பிரவிருத்திகள் ஏற்படுகின்றன. சிஷ்டாசாரத்தால்

[1] 'ஸ்திதா தர்மார்த்ததர்சிந:' என்பது மூலம். 'ஸ்திதா' என்பதற்கு, 'பொறுமையோடும் ஊக்கத்தையுமுடையவர்' என்பதும், 'தர்மார்த்ததர்சிந:' என்பதற்கு, 'சாஸ்திரக் கருத்துக்களைச் சிந்திப்பவர்கள்' என்பதும் இவற்றின் மொழிபெயர்ப்பு.

நன்றாக அடையப்பட்டிருக்கிற ஸத்தியமே மிகவும் பெரியது. ஆசாரமென்பது ஸாதுக்களுடைய தர்மம். ஸத்புருஷர்கள் ஆசாரத்தை லக்ஷணமாக உடையவர்கள். எந்தப் பிராணியானது எவ்வித ஸ்வபாவமுள்ளதோ அது தன்னுடைய அவ்வித ஸ்வபாவத்தையே அடைகிறது. சிறந்த சித்தவ்ருத்தியில்லாதவனும் பாவச்செயலில் புத்தியைச் செலுத்தினவனுமான மனிதன் ஆசை கோபமுதலிய தோஷங்களை அடைகிறன். நியாயத்தோடுகூடிய காரியம் தர்மமென்றும் அநியாயத்தோடுகூடியது அதர்மமென்றும் எண்ணப்படுகின்றன. இது சிஷ்டர்களுடைய உபதேசம். எவர்கள் கோபமில்லாதவர்களாகவும் அஸூயையில்லாதவர்களாகவும் அஹங்காரத்தையும் மாத்ஸர்யத்தையும் விட்டவர்களாகவும் கபடமில்லாதவர்களாகவும் சாந்தியினால் நிறைந்தவர்களாகவுமிருக்கிறார்களோ அவர்கள் சாஸ்திரத்தில் கூறப்பட்ட ஆசாரமுள்ளவர்களாகிறார்கள். மூன்று வேதங்களாலும் கூறப்பட்ட யாகமுதலியவற்றைச் செய்பவர்களும் சுத்தர்களும் நன்னடையுள்ளவர்களும் மனத்தை அடக்கினவர்களும் குருசுச்ரூஷைசெய்பவர்களும் இந்திரியங்களை அடக்கினவர்களும் சாஸ்திரங்களால் சொல்லப்பட்ட ஆசாரமுள்ளவர்களாகிறார்கள். மனவுறுதியுள்ளவர்களும் அனுஷ்டிப்பதற்கரிய நடையும் செயலுமுள்ளவர்களும் தமக்குரிய தொழில்களால் கௌரவிக்கப்பட்டவர்களுமான மனிதர்களுக்கு ஹிம்ஸைமுதலிய தோஷங்கள் நாசமடைகின்றன. கற்றறிந்தவர்கள் ஆச்சரியமானதும் பழமையானதும் சாஸ்வதமானதும் நித்யமானதும் தர்மத்தை விட்டகலாததுமான அந்த ஸதாசாரத்தைத் தர்மத்தால் பார்த்துக்கொண்டு ஸ்வர்க்கத்தை அடைகிறார்கள். ஆஸ்திகர்களும் அஹங்காரத்தை விட்டவர்களும் பிராம்மணர்களைப் பூஜிக்கிறவர்களும் சாஸ்திரஞானத்தோடும் நன்னடையோடும் கூடியவர்களுமான அப்படிப்பட்ட ஸத்புருஷர்கள் ஸ்வர்க்கத்தை அடைகிறார்கள். வேதங்களால் சொல்லப்பட்டிருப்பது முதன்மையான தர்மம். தர்மசாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருப்பது மற்றொரு தர்மம். சிஷ்டர்களால் அனுஷ்டிக்கப்பட்டுவருவது வேறொரு தர்மம். இவ்விதமாகச் சிஷ்டர்களுடைய தர்மலக்ஷணம் மூன்று விதமாயுள்ளது. வேதங்களை அத்யயனம் செய்து மறவாமல் உள்ளத்தில் தரித்தலும் தீர்த்தங்களில் ஸ்நானம் செய்தலும் பொறுமையும் ஸத்தியமும் கபடமின்மையும் தூய்மையும்

தானஞ்செய்தல், எப்பொழுதும் உண்மைபேசுதல் இம்மூன்றையே ஸாதுக்களுக்குச் சிறந்த லக்ஷணங்களென ஸாதுக்கள் கூறுகின்றனர். எல்லாவற்றிலும் மன இரக்கமுள்ளவர்களும் கருணையுள்ளவர்களும் அறியுந்தன்மையுள்ளவர்களுமான ஸத்புருஷர்கள், இவ்வுலகில் மிகுந்த திருப்தியுள்ளவர்களாகத் தர்மத்தை விட்டு விலகாததும் ஒப்பற்றதுமான வழியை அடைகிறார்கள். எவர்களுக்கு நன்றாக நிச்சயிக்கப்பட்ட தர்மமும் அஸூயையில்லாமையும் பொறுமையும் சாந்தியும் ஸந்தோஷமும் இன்சொல்லுடைமையும் காமக்ரோதங்களை விடுதலும் சிஷ்டாசாரங்களை அனுஷ்டித்தலும் இருக்கின்றனவோ அவர்கள் சிஷ்டாசாரத்துடன்கூடின மகாத்மாக்கள். எப்பொழுதும் தர்மத்தை அனுஸரிக்கின்றவர்கள் சாஸ்திரங்களால் விதிக்கப்பட்டிருக்கிற கர்மாவையும் நிகரில்லாத ஸாதுக்களுடைய வழியையும் சிஷ்டாசாரத்தையும் அனுஷ்டிக்கிறார்கள். சிறந்த பிராம்மணர்களுள் உத்தமரே! பிராம்மணோத்தமர்கள் சிறந்தஞானமாகிற உப்பரிகையின் மீதேறிப் புத்திமயக்கமுற்றிருக்கிற மஹாஜனங்களையும் பற்பல விதமான உலகநடைகளையும் மிகப் பரிசுத்தமான அப்படிப்பட்ட தானங்களையும் பார்க்கிறார்கள். பிராம்மணரே! பிராம்மணோத்தமரே! சிஷ்டாசாரங்களையும் குணங்களையும் முன்னிட்டு என் அறிவுக்கும் சாஸ்திரஞானத்துக்கும் தக்கபடி இவை அனைத்தும் உமக்கு உரைக்கப்பட்டன' என்று கூறினர்.

## இருநூற்றுப்பன்னிரண்டாவது அத்யாயம்.

## மார்க்கண்டேயஸமாஸ்யாபர்வம். (தொடர்ச்சி.)

(தர்மவ்யாதர் ஹிம்ஸையானது எவ்விதத்தாலும் விடமுடியாததென்பதை நிரூபித்து, எல்லா வர்ணத்தார்களுக்கும் தத்தம் தர்மங்களை அநுஷ்டிப்பதே நன்மையாதுமென்பது முதலிய விஷயங்களைக் கௌசிகனுக்குக் கூறியது.)

யுதிஷ்டிரா! அந்தத் தர்மவ்யாதர், பிறகு பிராம்மணனைப் பார்த்து, 'நான் செய்கிற தொழில் கொடியது. ஸந்தேகமில்லை. பிராம்மணரே! விதியானது மிக்க வலிமையுள்ளது. முற்பிறப்பில் செய்தவினை எவ்விதத்தாலும் தாண்டமுடியாததன்றோ? இது முன்

செய்த பாவச்செயலினுடைய தோஷமாக இருக்கிறது. பிராம்மணரே! இந்தத் தோஷத்தைப் போக்குவதில் நான் முயற்சியுள்ளவனாக இருக்கிறேன். ஒரு பிராணியானது முந்தித் தெய்வத்தால் கொல்லப்பட்டுவிடுகிறது. பிறகு, அதைக் கொல்பவன் அந்த வதத்தில் நிமித்தமட்டும் ஆகிறான். பிராம்மணோத்தமரே! நாங்கள் இந்தக்கர்மத்திற்கு நிமித்தமாத்திரமாக இருக்கிறோமல்லவா? பிராம்மணரே! கொல்லப்பட்ட எந்தப் பிராணிகளுடைய மாம்ஸங்களை நாங்கள் விற்கிறோமோ, (அந்த மாம்ஸங்களைப்) பக்ஷிப்பதனாலும் தேவதைகள், அதிதிகள், வேலைக்காரர்கள், பித்ருக்கள் இவர்களுக்கு உபயோகித்துப் பூஜிப்பதனாலும் அந்தப்பிராணிகளுக்கும் தர்மமுண்டாகும். 'ஓஷதிகளும் கொடிகளும் பசுக்களும் மிருகங்களும் பக்ஷிகளும் உலகத்திலுள்ள ஜனங்களுக்கு அன்னமுதலியவைகளாக இருக்கின்றன' என்கிற ஸ்ருதி வசனம் கேட்கப்படுகிறது. பிராம்மணோத்தமரே! பொறுமையுள்ளவனும் உசீனரதேசாதிபதியுமான சிபிராஜன் தன் மாம்ஸத்தைக் கொடுத்ததனால் அடைவதற்கு அரிதான ஸ்வர்க்கத்தை அடைந்தான். பிராம்மணரே! முற்காலத்தில் ரந்திதேவராஜனுடைய மடைப்பள்ளியில் நாள்தோறும் இரண்டாயிரம் (கோக்களல்லாத.) பிராணிகள் பக்குவம் செய்யப்பட்டன; அப்படியே, நாள்தோறும் இரண்டாயிரம் கோக்களும் பக்குவம் செய்யப்பட்டன. பிராம்மணோத்தமரே! பக்ஷிக்கத்தக்க மாம்ஸத்தை அதிதிகளுக்கு ஒருமாதம் தினந்தோறும் கொடுத்துவந்த ரந்திதேவராஜனுக்கு நிகரில்லாத கீர்த்தி உண்டாகியது. 'சாதுர்மாஸ்யத்தில் நித்தியமாகப் பசுக்கள் கொல்லப்படுகின்றன' என்றும், 'அக்னிகள் மாம்ஸத்தில் விருப்பமுள்ளவைகள்' என்றும் ஸ்ருதி கேட்கப்படுகிறது. பிராம்மணரே! யஜ்ஞங்களில் பசுக்கள் பிராம்மணர்களால் எப்பொழுதும் கொல்லப்படுகின்றன. மந்திரங்களால் ஸம்ஸ்கரிக்கப்பட்ட அந்தப்பசுக்களும் ஸ்வர்க்கத்தை அடைகின்றனவாம். பிராம்மணோத்தமரே! முற்காலத்தில் அக்னிகள் மாம்ஸத்தில் விருப்பமுள்ளவைகளாகாமல் போயிருந்தால், ஒருவருக்காவது மாம்ஸம் பக்ஷிக்கத்தக்கதாக ஏற்பட்டிராது. இந்த மாம்ஸபக்ஷணத்திலும், முனிவர்களால், 'எவன் எப்பொழுதும் (மாம்ஸத்தைத்) தேவதைகளுக்கும் பித்ருக்களுக்கும் சாஸ்திரவிதிப்படியும் ஸ்ரத்தையுடனும் கொடுத்துவிட்டுச் சாப்பிடுவானோ அவன் அதனை உண்பதனால் தோஷமுள்ளவனாகான்' என்கிற

விதியானது கூறப்பட்டிருக்கிறது. 'இவ்விதம் (உண்பவன்) மாமிஸத்தைப் பக்ஷிப்பவனாகான்' என்றும் ஸ்ருதி கேட்கப்படுகிறது. ருதுகாலத்தில்மட்டும் பார்யையை அடைகிற பிராம்மணன் பிரம்மசாரியாகிறான். இந்த விஷயத்திலும் ஸத்தியத்தையும் அஸத்யத்தையும் (அதாவது உசிதத்தையும் அநுசிதத்தையும்) நிச்சயித்து விதி கூறப்படுகிறது. பிராம்மணரே! சாபத்தால் மிக ஆக்ரமிக்கப்பட்ட அரசனான ஸௌதாஸனால் அக்காலத்தில் மனிதர்கள் பக்ஷிக்கப்பட்டார்கள். இந்த விஷயத்தில் உமக்கு என்ன தோன்றுகிறது? பிராம்மணோத்தமரே! ஸ்வதர்மமென்று எண்ணி இதை நான் விடவில்லை. முற்பிறப்பில் செய்த வினை என்று அறிந்து இந்தத் தொழிலால் நான் ஜீவிக்கிறேன். பிராம்மணரே! உலகில் தன்தொழிலை விடுகிறவனுக்கு அதர்மம் காணப்படுகிறது. தன் தொழிலில் நிலைபெற்றிருப்பவனுக்கு அது தர்மமென்பது நிச்சயம். ஜாதிகளுக்குத் தொழில்கள் விதிக்கப்பட்டிருக்கின்றனவல்லவா? தேகமெடுத்தவன் அவற்றைவிடலாகாது. பலவாறான தொழில்களை நிர்ணயிக்கும் விஷயத்தில் பிரம்மதேவரால் இந்த விதியானது விதிக்கப்பட்டிருக்கிறது. பிராம்மணரே! தொழிலை நிச்சயிக்கும் விஷயத்தில், 'நான் எவ்வாறு நல்ல தொழிலைச் செய்வேன்? எவ்வாறு அவமானத்தினின்று விடுபடுவேன்?' என்று தர்மத்தை ஆராயவேண்டும். அந்தக் கெட்ட கர்மமானது [1]பலவிதத்தால் பரிஹாரம் பண்ணப்படலாம். நான் தானத்திலும் ஸத்யவாக்கியத்திலும் அப்படியே பெற்றோர் பணிவிடையிலும் பிராம்மண பூஜையிலும் தர்மத்திலும் எப்பொழுதும் பற்றுதலுள்ளவன். பிராம்மணோத்தமரே! கர்வத்தினின்றும் அதிகப்பேச்சினின்றும் நான் விலகியிருக்கிறேன். பயிர்த்தொழில் செய்வது நல்லதென்று எண்ணுகிறார்கள். அதில் அதிக ஹிம்ஸை காணப்பட்டிருக்கிறது. கலப்பைகளால் பூமியை உழுகின்றவர்கள் பூமிக்குள்ளிருக்கிற அநேக ஜீவன்களையும் மற்ற அநேக ஜந்துக்களையும் நாசம் செய்கிறார்கள். அந்த விஷயத்தில் உமக்கென்ன தோன்றுகிறது? பிராம்மணோத்தமரே! நெல் முதலிய வகைகளைத் தான்ய வித்துக்களென்று சொல்லுகிறார்களே இவைகளனைத்தும் ஜீவன்களல்லவா? இந்த விஷயத்தில் உமக்கு என்ன தோன்றுகிறது? பிராம்மணரே! மனிதர்கள் பசுக்களைக் கூடவலியப்பிடித்துக் கொல்லுகிறார்கள்; பக்ஷிக்கவும் பக்ஷிக்கிறார்

---

[1] வேறுபாடம்.

கள்; அப்படியே மரங்களையும் ஓஷதிகளையும் வெட்டுகிறார்கள். பிராம்மணரே! மரங்களிலும் பழங்களிலும் நீரிலும் பலபல ஜீவன்களிருக்கின்றனவல்லவா? அந்த விஷயத்தில் உமக்கு என்ன தோன்றுகிறது? பிராம்மணரே! இவ்வுலகமுழுதும் பிராணிகளைத்தின்று ஜீவிக்கின்ற பிராணிகளால் வியாபிக்கப்பட்டிருக்கின்றது. மீன்கள் மீன்களை விழுங்குகின்றன. அதில் உமக்கு என்ன தோன்றுகிறது? பிராம்மணோத்தமரே! பெரும்பான்மையாகப் பிராணிகளால் பிராணிகள் ஜீவிக்கின்றன. பிராணிகள் ஒன்றை மற்றொன்று பக்ஷிக்கின்றன. அதில் உமக்கு என்ன தோன்றுகிறது? பிராம்மணரே! நடக்கின்ற மனிதர்கள் பூமியை அடைந்திருக்கின்ற அநேக ஜீவன்களைக் கால்களால் கொல்லுகிறார்கள். அதில் உமக்கு என்ன தோன்றுகிறது? உட்கார்ந்திருப்பவர்களும் படுத்திருப்பவர்களும் அறிந்தோ அறியாமலோ அநேக ஜீவன்களைக் கொல்லுகிறார்கள். அந்த விஷயத்தில் உமக்கு என்ன தோன்றுகிறது? இந்த ஆகாசமுழுமையும் அப்படியே பூமியும் ஜீவன்களால் வியாபிக்கப்பட்டிருக்கின்றன. அறியாமையால் மனிதர்கள் அந்த ஜீவன்களைக் கொல்லுகிறார்கள். அதில் உமக்கு என்ன தோன்றுகிறது? பிராம்மணோத்தமரே! முற்காலத்தில் முன்னோர்களால் கொல்லாமையானது அறியாமையால் விதிக்கப்பட்டது. இந்த உலகத்தில் எவர்கள் ஹிம்ஸை செய்யாமலிருக்கிறார்கள்? அநேகவிஷயங்களை நன்றாக ஆலோசித்துப்பார்க்குங்கால், இவ்வுலகத்தில் ஹிம்ஸை செய்யாதவன் ஒருவனாவது இல்லை. பிராம்மணோத்தமரே! ஸந்யாஸிகள் அஹிம்ஸையில் நிலைபெற்றிருப்பவர்கள். அவர்களும் ஹிம்ஸையைச் செய்யவே செய்கிறார்கள். அந்த ஹிம்ஸையானது (அவர்களுடைய) முயற்சியால் மிகவும் குறைக்கப்படும். நற்குலத்திற்பிறந்தவர்களும் சிறந்தகுணங்களுள்ளவர்களான மனிதர்கள் சிலரே காணப்படுவர். மித்திரர்கள் தோழமித்திரர்களைப்பற்றியோ விரோதிகள் வேறு விரோதிகளைப்பற்றியோ மகாகோரமான கர்மங்களைச்செய்து வெட்குகிறதில்லை. நல்லகாரியங்களில் பிரவிருத்தித்திருக்கின்ற மனிதர்களை மனிதர்கள் நன்மையாகப்பார்க்கிறதில்லை. பந்துக்கள் செல்வமுள்ள பந்துக்களாலும் ஸந்தோஷமடைகிறதில்லை. அதிக கர்வங்கொண்டவர்களான மூடர்கள் குருக்களையும் அதிகமாக நிந்திக்கிறார்கள். பிராம்மணோத்தமரே! உலகத்தில் பல மாறுபட்டிருப்பனவாகக் காணப்படுகின்றன. தர்மத்தோடு சேர்ந்ததும் அதர்மமாகக்

காணப்படுகிறது. அந்தவிஷயத்தில் உமக்கு என்னதோன்றுகிறது? தர்மமாகவும் அதர்மமாகவுமிருக்கிற கர்மங்களின் விஷயத்தில் பலவிதம் சொல்லமுடியும். எவன் தன்னுடைய கர்மங்களில் நிலை பெற்றிருப்பனோ அவன் பெரும்புகழை அடைவான்' என்று கூறினர்.

## இருநூற்றுப்பதின்மூன்றுவது அத்யாயம்.

## மார்க்கண்டேயஸமாஸ்யாபர்வம். (தொடர்ச்சி.)

(தர்மவ்யாதர் முயற்சியை நிந்தித்துத் தெய்வத்தைப்புகழ்ந்து புண்ய பாபங்கள் ஸுகதுக்கங்களுக்குக் காரணமென்பதைக் கூறியது.)

யுதிஷ்டிர! தர்மவான்களெல்லாருள்ளும் சிறந்தவனே! தர்மவியாதரோ மீண்டுமே பிராம்மணோத்தமரைப் பார்த்து, 'பிராம்மணரே! இந்தத்தர்மமானது வேதத்தைப் பிரமாணமாகக்கொண்டதென்பது ஞானத்தால்முதிர்ந்தவர்களுடைய உபதேசம். தர்மத்தினுடைய ஸூக்ஷ்மகதியானது அநேக பிரிவுகளுள்ளதாகவும், முடிவில்லாததாகவும் இருக்கிறதன்றோ? பிராணனுக்கு அபாயம் நேருந்தருணத்திலும் விவாஹத்திலும் பொய் சொல்லத்தக்கதாகலாம். பொய்யினால் ஸத்தியம் நிலைபெறும். ஸத்தியத்தினால் பொய் ஸம்பவிக்கும். எது பிராணிகளுக்கு மிகவும் ஹிதமாக இருக்குமோ அது ஸத்தியமென்பது நிச்சயம். மாறிச்செய்யப்பட்டால் அதர்மம். தர்மத்தினுடைய நுட்பத்தைப் பாரும். ஸாதுக்களுள் மிகச்சிறந்தவரே! மனிதன் நல்லதையோ கெட்டதையோ எந்தக்காரியத்தைச் செய்கிறானோ அதனுடைய பலனை அவச்யம் அடைகிறான்; இதில் ஸம்சயமில்லை. மனிதன் கெட்ட நிலைமையை அடைந்தவனானால் தேவர்களை மிகவும் நிந்திக்கிறான். பிராம்மணோத்தமரே! கற்றறியாதவனும் மூடனும் வஞ்சகனும் [1] சபலனுமான மனிதன் அந்த ஆபத்தைத் தன்னுடைய கர்மதோஷத்தால் ஏற்பட்டதென்று அறிகிறதில்லை. நிச்சயமில்லாதனோ நிச்சயமுள்ள மனிதனை நல்ல கர்மமானது கட்டுப்படுத்தாது.

[1] மனவுறுதியில்லாதவன்; அல்லது, அலைகிறமனமுள்ளவன். உத்யோக பர்வம் 174-ம் பக்கத்திலும் சாந்திபர்வம் 375-ம் பக்கத்திலும் குறிப்புக்களிற் காண்க.

ஸுகதுக்கங்களுடைய மாறுபட்டமானது எப்பொழுது ஏற்படு கிறதோ அப்பொழுது இவனைக் கல்வியறிவாவது குருசிக்ஷையா வது மனிதமுயற்சியாவது காக்கிறதில்லை. கார்யத்தினுடைய பயனா னது மனிதமுயற்சிக்கு வசப்பட்டிருக்குமேயாகில், எந்தமனிதன் எந்த எந்த விருப்பத்தை எப்படி எப்படி விரும்புவனே அந்த அந்த விருப்பத்தை அப்படியப்படி அவன் அடைவான். இந்திரி யங்களை நன்றாக அடக்கினவர்களும் ஸமர்த்தர்களும் நல்ல புத்தி யுள்ளவர்களுமான நல்ல மனிதர்கள் எல்லாக்கர்மங்களையும் செய்து ச்ரமமடைந்தவர்களாக இருந்தாலும் பயனில்லாதவர்களாகக் காணப்படுகிறார்கள். மற்றொருவன் பிராணிகளை ஹிம்ஸிப்பதி லும் உலகத்தை வஞ்சிப்பதிலும் எப்பொழுதும் முயற்சியுள்ளவ னாக இருந்தும் ஸுகத்தோடேயே சேர்கிறான். லக்ஷ்மியானவள் ஒருகார்யத்தையும் செய்யாமல் உட்கார்ந்திருக்கிற ஒரு மனிதனைத் தானாக அடைகிறாள். கர்மங்களைச் செய்கின்ற ஒருவன் பயனை அடைகிறதில்லையன்றோ? புத்திரனை அடைவதில் விருப்பமுள்ள வர்களும் இரக்கப்படத்தக்கவர்களுமான தாய் தந்தைகளால் தேவர்களைக் குறித்து யாகம் செய்தும் தவம்புரிந்தும் பத்துமாத காலங்கள் வயிற்றினால் தாங்கப்பட்ட குழந்தைகள் வம்சத்தைக் கெடுப்பவர்களாகப் பிறக்கிறார்கள். சிலர் அந்த நற்கருமங் களாலேயே அடையப்பட்டவர்களாகப் பிதாவினால் சேர்த்து வைக்கப்பட்ட மிகுதியான தனதான்யங்களோடும் போகங்க ளோடும் பிறக்கிறார்கள். பிராம்மணோத்தமரே! மனிதர் களுக்கு வியாதிகள் சீரத்தினால் உண்டாகிறதில்லை. மனிதர் களுக்கு வியாதிகள் வினைகளால் உண்டாகின்றன; இதில் ஸம்சய மில்லை. கொடியமிருகங்களால் அற்பமிருகங்கள் ஹிம்ஸிக்கப் படுவதுபோல ரோகங்களாலும் மனோவியாதியாலும் மனிதர் கள் துன்புறுத்தப்படுகிறார்கள். பிராம்மணரே! வேடர்களால் மிருகங்கள் போக்கப்படுவதுபோல அந்த வியாதிகள் சிகித்ஸை செய்வதில் ஸமர்த்தர்களும், ஆயுர்வேதத்தில் தேர்ச்சியுள்ளவர் களும், ஔஷதங்களை நன்கு சேர்த்து வைத்திருப்பவர்களுமான வைத்தியர்களால் போக்கப்படுகின்றன. [1] தர்மவான்களுள் சிறந்தவரே! எவர்களுக்கு அனுபவிக்கத்தக்கபொருள் இருக் கிறதோ அவர்கள் [2] கிரஹணீரோகத்தால் பீடிக்கப்பட்டவர்களாக அனுபவிப்பதற்குச் சக்தியுள்ளவர்களாவதில்லை; பாரும். பிராம்ம

[1] வேறுபாடம். [2] அடங்காத வயிற்றுப் போக்கு.

ஷோத்தமரே! சிறந்த புஜபலமுள்ள மற்ற அநேக ஜனங்கள் கிலேசத்தை அடைகிறார்கள்; கஷ்டத்தினால் போஜனத்தை அடைகிறார்கள். இவ்வாறு உலகமானது ஸஹாயமற்றதாகவும், [1] அறியாமையும் துயரமும் மேலிட்டதாகவும் மிக்க பலமுள்ள வினைப் பெருக்கினால் அடிக்கடி தள்ளி இழுத்துக்கொண்டுபோகப் படுகிறது. தெய்வமொன்று இல்லாமற்போனால் ஜனங்கள் இறக்கமாட்டார்கள்; மூப்படையமாட்டார்கள். எல்லோரும் விரும்பின எல்லாவற்றையும் அடைகின்றவராவார்கள்; அப்பிரியத்தையும் பார்க்கமாட்டார்கள். எல்லோரும் மற்றவரைக் காட்டிலும் (தாம் தாம்) மேல் மேலாகச் செல்வதற்கு விரும்புகிறார்கள்; சக்தியுள்ளவரையிலும் முயற்சியும் செய்கின்றார்கள். ஆனால், அது அப்படி ஏற்படுகிறதில்லை. அநேகம்பேர்கள் துல்யமான நக்ஷத்திரத்துடனும் மங்களத்துடனும் காணப்படுகிறார்கள். கார்யஸித்திகளில் அவர்களுக்குப் பயனில் வேறுபாடானது பெரிதாகக் காணப்படுகிறது. ஸாதுக்களுள் மிகச்சிறந்தவரே! பிராம்மணரே! சிலர் தம் பொருளுக்கும் தாம் அதிகாரிகளாவதில்லை. முன்ஜன்மத்தில் செய்யப்பட்ட வினைகளின்பயன் இந்த ஜன்மத்தில் காணப்படுகிறது. பிராம்மணரே! 'உலகில் ஜீவன் சாச்வதமாக இருப்பவன்; எல்லாப் பிராணிகளுக்கும் சரீரம் நித்யமன்று. சரீரமானது கொல்லப்படுமாகில் அந்தச் சரீரத்துக்குமாத்திரம் நாசமுண்டாகிறது. கர்மபந்தத்தைக் காரணமாகக்கொண்டு ஜீவன் வேறு தேகத்தில் பிரவேசிக்கிறான்' என்கிற அர்த்தமுள்ள இந்த ச்ருதியானது இருக்கிறது' என்று சொன்னார்.

பிராம்மணன், 'கர்மத்தை அறிந்தவர்களுள் மேன்மைபெற்றவரே! ஜீவன் எவ்வாறு சாச்வதனாகிறான்? பேசுகிறவர்களுள் சிறந்தவரே! இதை நான் உள்ளபடி அறிய விரும்புகிறேன்' என்று வினவ, வியாதர், 'தேகமானது அழிந்துபோகும் தருணத்தில் ஜீவனுக்கு நாசமில்லையன்றோ? அறிவீனர்கள், ஜீவன் இறக்கிறானென்று சொல்லுகிறார்கள். இது பொய். ஜீவனே வேறுதேகத்தால் மறைக்கப்பட்டு வேறிடத்தில் செல்லுகிறான். இந்த ஜீவனுக்கு வேறு சரீரத்தை அடைவதே மரணம். மானிடவுலகத்தில் ஒரு மனிதன் செய்த வினையின் பயனை மற்றொரு மனிதன் அனுபவிக்கிறதில்லை. அந்த மனிதனால் செய்யப்பட்ட வினையின்

[1] வேறுபாடம்.

பிராம்மணோத்தமரே! அவனே தீவினைக்கட்டிலிருந்து விடுபட்டால் நல்வினைகளால் மிக்க சுத்தியுள்ளவனாகித் தவத்திலும் யோகத்திலும் தொடக்கத்தைச் செய்கிறான். மனிதன் பல நல்வினைகளால் நல்லுலகங்களை அனுபவிக்கிறான். எந்த உலகத்தில் சென்று சோகத்தை அடையமாட்டானோ அப்படிப்பட்ட நல்ல உலகங்களை அடைகிறான். பாவநடையுடையவன் பாவத்தைச் செய்கின்றவனாகிப் பாவத்தினுடைய [1] முடிவை அடைகிறதில்லை. புண்யநடையுள்ளவன் புண்யத்தைச் செய்கின்றவனாகிப் புண்யத்தினுடைய முடிவை அடைகிறதில்லை. ஆதலால், புண்யத்தைச் செய்வதற்கு முயலவேண்டும்; பாவத்தை விட்டுவிடவேண்டும். அஸூயையில்லாதவனும் நன்றி அறிவுள்ளவனுமான மனிதன் நல்வினைகளையே செய்கிறான்; அதனால், ஸுகங்களையும் தர்மத்தையும் அர்த்தத்தையும் ஸ்வர்க்கத்தையும் அடைகிறான். நன்றாக [2] ஸம்ஸ்கரிக்கப்பட்டவனும் இந்திரியங்களை அடக்கினவனும் சுத்தியுள்ளவனும் மனத்தைக் கட்டுப்படுத்தினவனுமான அறிஞனுக்கு இம்மையிலும் மறுமையிலும் ஸுகானுபவம் எளிதில் ஏற்படுகிறது. பிராம்மணன் ஸாதுக்களுடைய தர்மத்தினால் நிலைபெற்றிருக்கவேண்டும்; சிஷ்டர்களைப்போலக் கிரியைகளைச் செய்யவேண்டும். உலகத்தாருக்குத் துன்பத்தைக் கொடாமல் ஜீவனத்தை அடைய விரும்பவேண்டும். தர்மசாஸ்திரங்களில் விசேஷமான அறிவுள்ளவர்களும் மற்றச் சாஸ்திரங்களிலும் ஸமர்த்தர்களுமான சிஷ்டர்கள் இருக்கிறார்கள். உலகத்தில் தமக்குரிய ஆசாரத்துடன் கிரியைகளைச் செய்கிற அவர்கள் தர்மஸாங்கர்யத்தை உண்டுபண்ணாதவர்கள். கற்றறிந்தவன் தர்மத்தினால் ஸுகத்தை அனுபவிக்கிறான்; தர்மத்தையே அண்டிப் பிழைக்கிறான். பிராம்மணோத்தமரே! அந்தத் தர்மத்தால் அடையப்பட்ட பொருளால் எந்தத் தர்மத்தில் குணங்களைக் காண்கிறானோ அந்தத் தர்மத்தின் அடிவேரை நனைக்கிறான். தர்மாத்மாவானவன் இப்படியன்றோ இருக்கிறான்? இவனுடைய மனமும் தெளிவடைகிறது. அவன் இவ்வுலகில் மித்திரஜனங்களுடன் மகிழ்கிறான்; பரலோகத்தை அடைந்தும் ஆனந்திக்கிறான். ஸாதுக்களுள் சிறந்தவரே! தார்மிகன் சப்தத்தையும் ஸ்பர்சத்தையும் ரூபத்தையும் இஷ்டமான கந்தங்களையும்

[1] இருவரும் மேலும் மேலும் அதனை அதனையே செய்வரென்றபடி.

[2] ஸம்ஸ்காரங்கள் கர்ப்பாதான முதலியன; அவை பத்தென்றும் பன்னிரண்டென்றும் பதினாறென்றும் கூறுவர்.

பிரபுத்தன்மையையும் அடைகிறான். இதனைப் பெரியோர்கள் தர்மத்தினுடைய பயனாக அறிகிறார்கள். மஹாப்ராம்மணரே! தர்மத்தின்பலனை அடைந்து தார்மிகன் களிப்படைகிறதில்லை. ப்ரீதி அடையாத அந்த மனிதன் ஞானத்ருஷ்டியினால் வைராக்கியத்தை ஏற்றுக்கொள்ளுகிறான். ஞானத்ருஷ்டியுள்ள மனிதன் இவ்வுலகில் விருப்பு வெறுப்பு முதலியவைகளுக்கு வசப்பட்டவனாகிறதில்லை; விரக்தி அடைகிறான்; தன்னிஷ்டத்துக்காகத் தர்மத்தை விடமாட்டான்; உலகத்தைக் கர்மஸ்வரூபமாகக்கண்டு கர்மபலத்தின் தியாகத்தில் முயல்கிறான்; பிறகு, உபாயமல்லாததை விட்டு உபாயத்தினால் மோக்ஷத்தில் முயல்கிறான்; இவ்வாறு, வைராக்கியத்தை அடைகிறான்; பாபகர்மங்களை விடுகிறான்; தார்மிகனுமாகிறான்; சிறந்த மோக்ஷத்தையும் அடைகிறான். மனிதனுக்குத் தவமானது மோக்ஷத்துக்கு ஸாதனமாயிருக்கிறது. அதற்கு மூலம் சமதமங்கள். அவற்றால் எந்த எந்த விருப்பங்களை மனத்தினால் விரும்புகிறானோ அவைகளனைத்தையும் அடைகிறான். பிராம்மணர்களுள் மிக்க மேன்மைபெற்றவரே! மனிதன் இந்திரியங்களை அடக்குவதினாலும் ஸத்தியத்தாலும் மனத்தை அடக்குவதாலும் சிறந்ததான பிரம்மத்தினுடைய ஸ்தானத்தை அடைகிறான்' என்று சொன்னார். பிராம்மணன், 'சிறந்த விரதத்தையுடையவரே! இந்திரியங்களென்று சொல்லப்படுகின்றவை எவை? இந்திரியங்களுடைய அடக்கமானது எவ்வண்ணம் செய்யத்தக்கது? அடக்குவதற்கு யாதுபயன்? தார்மிகர்களுள் சிறந்தவரே! அவைகளுடைய பயனை எவ்வண்ணம் அடைகிறான்? நல்ல தார்மிகரே! இந்தத் தர்மத்தை உள்ளபடி அறிவதற்கு விரும்புகிறேன்' என்று வினவினான்.

---

இருநூற்றுப்பதினொன்காவது அத்யாயம்.

## மார்க்கண்டேயஸமாஸ்யாபர்வம். (தொடர்ச்சி.)

(தர்மவியாதர் பிராணிகளால் செய்யப்படுகிற நல்வினை தீவினைகளின் இயற்கை முதலியவற்றையும் பிராம்மணமகிமை முதலியவற்றையும் கௌசிகனுக்குச் சொல்லியது.)

யுதிஷ்டிர! மகாராஜனே! பிராம்மணனால் இவ்வாறு உரைக்கப்பட்ட தர்மவ்யாதர் சொல்லிய மறுமொழியைக் கேள். வியா

தார், 'பிராம்மணோத்தமரே! மனிதர்களுடைய மனமானது அறிவதற்காக முதலில் விஷயங்களில்செல்லுகிறது. மனிதன் அவற்றை அடைந்து காமத்தையும் கோபத்தையும் அடைகிறான்; பிறகு, அந்த விஷயானுபவத்துக்காக முயல்கிறான்; பெரிய கார்யத்தையும் செய்யத்தொடங்குகிறான்; விருப்பமான ரூபங்களிலும் கந்தங்களிலும் அப்யாஸத்தையும் செய்துவருகிறான். அந்த அப்யாஸத்தால் விருப்பு உண்டாகிறது. அதற்குப் பிறகு, வெறுப்பு உண்டாகிறது. பிறகு, லோபமுண்டாகிறது. அதற்குப் பிறகு, மோஹமுண்டாகிறது. லோபகுணத்தால் கவரப்பட்டவனும், விருப்பு வெறுப்புக்களால் நிரம்பியிருப்பவனுமான அந்த மனிதனுக்குப் புத்தியானது தர்மத்தில் செல்லுகிறதில்லை. கபடத்தால் தர்மத்தைச் செய்கிறான். கபடத்தால் தர்மத்தைச் செய்வதுடன் கபடத்தால் பொருளையும் அடையவிரும்புகிறான். பிராம்மணோத்தமரே! கபடத்தினால் பொருள்கள் கிடைத்தபோது அந்தப்பொருள்களிலேயே புத்தியானது மகிழ்கிறது. பிராம்மணோத்தமரே! அதனால், நண்பர்களாலும் பண்டிதர்களாலும் தடுக்கப்பட்டும் பாவத்தைச் செய்ய விரும்புகிறான். வேதத்திலில்லாததை வேதத்தில் நன்கு கூறப்பட்டிருப்பதாக மறுமொழி கூறுகிறான். அவனுக்கு விருப்பு வெறுப்புக்களாலுண்டாகிற அதர்மம் மூன்றுவிதமாக ஏற்படுகிறது. பாவத்தைச் சிந்தித்துக்கொண்டிருக்கிறான்; சொல்லவும் சொல்லுகிறான்; செய்யவும் செய்கிறான். அதர்மத்தில் முயல்கின்ற அந்த மனிதனுக்கு நற்குணங்கள் நாசமடைகின்றன. பாவங்களைச் செய்பவனுக்கு அவனை ஒத்திருக்கிற பாவச்செயலுள்ளவர்கள் நேசராவார்கள். அவன் அந்தப் பாவிகளுடைய சேர்க்கையால் இவ்வுலகில் துக்கமடைகிறான். லோகாந்தரத்திலும் ஆபத்தை அடைகிறான். பாவகுணமுள்ளவன் இவ்வண்ணமிருக்கிறான். என்னிடமிருந்து தர்மலாபத்தைக் கேட்பீராக. எவன் இந்தத் தோஷங்களைப் புத்தியினால் முந்தியே பார்க்கிறானோ, சாஸ்த்ரங்களில் ஸமர்த்தனாக இருந்துகொண்டு ஸாதுக்களையும் அடைந்து பூஜிப்பனோ அவனுடைய நல்லகார்யங்களின் தொடர்ச்சியால் புத்தியானது தர்மங்களில் பிரகாசிக்கிறது' என்று கூறினார்.

பிராம்மணன், 'வியாதரே! எவராலும் சொல்லுதற்கரிதாயும் பிரியமாயும் ஸத்தியமாயுமுள்ள தர்மத்தைச் சொல்லுகிறீர். திவ்யமான பிரபாவமுள்ள நீர், மிக்க மஹிமையுள்ள ரிஷியென்றே என்னால் எண்ணப்பட்டிருக்கிறீர்' என்று சொல்ல, வியாதர், 'மகா

பாக்யசாலிகளான பிராம்மணர்கள் எப்பொழுதும் முதலில் பூஜிக்கின்ற பித்ருக்கள். உலகத்தில் கற்றறிந்தவன் எல்லாவிதத்தாலும் அவர்களுக்குப் பிரியத்தைச் செய்யவேண்டும். பிராம்மணோத்தமரே! பிராம்மணர்களுக்கு நமஸ்காரம் செய்து அவர்களுக்கு எது பிரியமோ அதை உமக்குச் சொல்லுவேன். பிராம்மணர்களுக்குப் பொருளான வித்தையை என்னிடமிருந்து தெரிந்துகொள்ளும். பிராம்மணரே! ஜங்கமஸ்தாவரங்களான இவ்வுலகமனைத்தும் ஐந்துமகாபூதங்களுடைய ஸ்வரூபமாக இருக்கின்றன. இவற்றைக்காட்டிலும் சிறந்த வேறுவஸ்து ஒன்றுமில்லை. ஆகாயம், காற்று, தீ, ஜலம், பூமி ஆகிய இந்த ஐந்தும் மகாபூதங்கள். சப்தமும் ஸ்பர்சமும் ரூபமும் ரஸமும் கந்தமும் அவைகளின் குணங்கள். அந்தப்பூதங்களுடைய குணங்களுக்கும் அதிகமாதல் குறைதல் முதலிய குணங்களிருக்கின்றன. பஞ்சபூதங்களாலாகிய காணப்படுகின்ற எல்லாப்பொருள்களும் ஒன்றின் குணம் மற்றொன்றில் தோற்றுகிறவையாயிருக்கின்றன. முந்தி முந்தியிருக்கிற பொருள்களுடைய எல்லாக்குணங்களும் முறையே குணிகளான [1] முன்றில் காணப்படுகின்றன. ஆறாவதான சேதனை என்பது மனமென்று சொல்லப்படுகிறது. புத்தியானது ஏழாவதாக இருக்கும். அதற்குமேற்பட்டது அஹங்காரம். ஐந்து இந்திரியங்கள், ஜீவாத்மா, ரஜோகுணம், ஸத்வ குணம், தமோகுணம் இவ்வாறாகப் பதினேழு அவயவங்களோடுகூடின இந்தக் கூட்டமானது அவ்யக்தமென்கிற பெயருள்ளது. வெளிப்படையாகவும் மறைவாகவுமிருப்பவைகளும் அறியமுடியாதவைகளுமான இந்திரியங்களாலறியப்படுகிற விஷயங்களுள்ளதும் வெளிப்படையும் மறைவுமான இந்த ஜடப்பொருள்களின் [2] கூட்டமானது இவ்வண்ணம் [3] இருபத்துநான்கு தத்துவங்கள் அடங்கியது. இவைமுழுமையும் உமக்கு உரைக்கப்பட்டது. பின்னும் எதைக் கேட்க விரும்புகிறீர்?’ என்று வினவினார்.

[1] இந்த, பகுதியும் வேறுவிதமாக இருக்கிறது; பிரமத்தின் குணங்கள் உலகத்திலும் உலகத்தின் குணங்கள் பிரமத்திலும் அத்யாஸத்தால் காணப்படுகின்றன என்பது கருத்து.

[2] வேறு பாடம்.

[3] சாந்தி பர்வம் 1220-ம் பக்கத்திலும் அநுசாஸன பர்வம் 99-ம் பக்கத்திலும் குறிப்புக்களிற் காண்க.

## இருநூற்றுப்பதினைந்தாவது அத்யாயம்.

## மார்க்கண்டேயஸமாஸ்யாபர்வம். (தொடர்ச்சி.)

(தர்மவ்யாதர் ஐந்து பூதங்களுடைய குணங்களைச் சொல்லி இந்திரியங்களை அடக்குதலும் அடக்காமையும் ஸுகதுக்கங்களுக்கு முறையே முக்யமான காரணங்களென்பதைக் கூறியது.)

பாரத! இவ்வண்ணம் தர்ம வ்யாதரால் சொல்லப்பட்ட அந்தப் பிராம்மணன், மனத்திற்குப் பிரியத்தைப் பெருக்குகிற சொல்லை மீண்டும் சொன்னான். பிராம்மணன், 'தர்மத்தை அறிந்தவர்களுள் சிறந்தவரே! எவைகளை ஐந்து மகாபூதங்களென்று சொல்லுகிறார்களோ அந்த ஐந்து பூதங்களுள்ளும் ஒவ்வொன்றினுடைய குணங்களையும் எனக்கு நன்கு உரைப்பீராக' என்று வினவ; வ்யாதர், 'பூமி, ஜலம், அக்னி, வாயு, ஆகாசம் ஆகிய எல்லாம் குணங்களால் மேலிட்டவைகள். அவைகளுடைய குணங்களை உமக்குக் கூறுவேன். பூமியானது ஐந்து குணங்களுள்ளது. பிராம்மணரே! ஜலமானது நான்கு குணங்களுள்ளது. அக்னியில் மூன்று குணங்களிருக்கின்றன. காற்றிலும், ஆகாசத்திலும், முறையே இரண்டுகுணங்களும் ஒருகுணமும் இருக்கின்றன. சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், ஐந்தாவதான கந்தம்ஆகிய எல்லாவற்றிலும்சிறந்த இந்த ஐந்தும் பூமியின் குணங்கள். பிராம்மணோத்தமரே! நல்ல விரதமுள்ளவரே! பிராம்மணரே! சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம் ஆகிய இவைகள் ஜலத்தினுடைய குணங்களென்று உமக்குச் சொல்லப்பட்டன. சப்தம், ஸ்பர்சம், ரூபம் இம்மூன்று குணங்களும் தேஜஸைச் சார்ந்திருக்கின்றன. சப்தம், ஸ்பர்சம் இரண்டும் வாயுவிலிருக்கின்றன. சப்தம் ஒன்றே ஆகாசத்தில் இருக்கிறது. பிராம்மணரே! எந்த ஐந்து பூதங்களில் உலகங்கள் நிலைபெற்றிருக்கின்றனவோ அந்த எல்லாப் பூதங்களிலும் இந்தப் பதினைந்து குணங்களிருக்கின்றன. பிராம்மணரே! இந்தப் பூதங்கள் ஒன்றை ஒன்று விட்டுப் பிரியாமல் சேர்ந்திருப்பதனால் பிரகாசிக்கின்றன. எப்பொழுது ஜீவர்கள் தம் தேகத்தைக்காட்டிலும் விலக்ஷணமான வேறு தேகத்தை நினைக்கிறார்களோ அப்பொழுது முன் தேகத்தை விட்டு வேறு தேகத்தை அடைகிறார்கள். அவர்கள் (ஸங்கல்பத்தால்)

முறையே மறைகிறார்கள்; முறையே தோன்றவும் தோன்று கிறார்கள். ஸ்தாவரங்களாலும் ஜங்கமங்களாலும் நிறைந்திருக்கிற இவ்வுலகமனைத்தையும் வியாபித்திருக்கிற [1] தாதுக்கள் ஐந்துபூதங் களைச் சேர்ந்தவைகளாகவே ஆங்காங்குக் காணப்படுகின்றன வன்றோ? இந்திரியங்களால் அறியப்படுவனவெல்லாம் வ்யக்த மென்று எண்ணப்படுகின்றன. இந்திரியங்களுக்குப் புலப்படாத தும் அநுமானங்களால் அறியத்தக்கதுமாயிருப்பது அவ்யக்த மென்று அறியத்தக்கது. சப்தம் முதலிய இந்தக் குணங்களை இந்த இந்திரியங்கள் தத்தமக்கு உரியபடி கிரஹிக்கின்றன. தேகத் துடன் கூடின ஜீவன் அப்படிப்பட்ட இந்திரியங்களைத் தரித்துக் கொண்டு இந்த ஜனன மரணச்சுழலில் தாபத்தை அடைகிறான். உயர்வுதாழ்வான தத்வங்களை அறிந்தவன், ஆத்மா உலகத்தில் பரவி யிருப்பதையும் உலகம் ஆத்மாவினிடத்திலிருப்பதையும் பார்க்கி றான். அவனே விஷயங்களில் பற்றுதலுள்ளவனுனல் (உலகத்தில்) பஞ்சபூதங்களைக் காண்கிறான். எப்பொழுதும் எல்லா நிலைமைகளி லும் எல்லாப்பூதங்களையும் பார்க்கிறவனும் ப்ரம்மமாகியிருக்கிற வனுமான மனிதனுக்கு இருவினைப்பயன்களோடு சேர்க்கை உண்டா கிறதில்லை. அஜ்ஞான முதலிய கிலேசத்தைத் தாண்டியிருக்கிற யோகிக்கு ஒப்பற்ற உறுதிப்பொருளான மோக்ஷமானது இவ் வுலகில் வாஸம் பயனற்றதென்பதைக் காட்டுகிற ஞானத்தினுல் அடையப்படுகிறது. சிறந்த புத்தியுள்ளவரான பகவான் பிரம் மத்தை ஆதிஅந்தமில்லாததென்றும் தனக்குத் தன்னையே காரண மாகக்கொண்டதென்றும் எப்பொழுதும் குறைவற்றதென்றும் தனக்கு நிகரில்லாததென்றும் உருவமில்லாததென்றும் சொல்லு கிறார். பிராம்மணரே! நீர் என்னைக் கேட்பது முழுமையும் தவத் தையே மூலமாகக்கொண்டது. மனிதன் எதை எதை விரும்பு கிறானே அதை அதைத் தவத்தினுல் அடைகிறானன்றோ? இந்திரி யங்களை நன்றாக அடக்கிக்கொண்டு கர்மங்களை அநுஷ்டிப்பவ னுக்குத் தவம் நிலைபெறுகிறது. வேறுவிதத்தால் தவம் கைகூடாது. ஸ்வர்க்கம் நரகமென்னும் இரண்டும் முழுமையும் இந்திரியங்களையே சார்ந்திருக்கின்றன. அவைகள் அடக்கப்பட் டால் ஸ்வர்க்கத்திற்கு ஸாதகமாகும்; வெளியில் விடப்பட்டால் நரகத்திற்கு ஸாதகமாகும். எல்லா இந்திரியங்களையும் அடக்கி

[1] பீஷ்மபர்வம் 19, 363, சாந்திபர்வம் 629 பக்கம் குறிப்புக்களிற் காண்க.

நிலைநிறுத்துதலே ஸம்பூர்ணமான யோகவிதி. இது தவத்துக்கும் ஸ்வர்க்கத்துக்கும் நரகத்துக்கும் மூலமன்றோ? இந்திரியங்கள் விஷயங்களில் ஸஞ்சரிப்பதினால் மனிதன் ஸம்சயமின்றித் தோஷத்தை அடைகிறான். அவைகளையே நன்றாக அடக்கினால் அதனால் ஸித்தியை அடைவான். எவன் ஆத்மாவினிடத்தில் சேர்ப்பிக்கத்தக்க ஆறு இந்திரியங்களையும் அடக்கவல்லவனாகிறானோ ஜிதேந்திரியனான அந்தமனிதன் பாவங்களோடு சேர்க்கை அடையமாட்டான்; அவ்வாறிருக்க, அனர்த்தங்களோடு எவ்வாறு சேர்க்கை அடைவான்? சரீரமானது ஜீவனுக்கு ரதமாகக் காணப்பட்டிருக்கிறது; ஜீவாத்மா அந்த ரதத்திலிருக்கிற ஸாரதி; இந்திரியங்களைக் குதிரைகளாகச் சொல்லுகிறார்கள். இந்திரியங்களை அடக்கினவனும் தீரனும் அஜாக்கிரதையில்லாதவனுமான மனிதன் அந்த நல்ல குதிரைகளால் க்ஷேமத்துடன்கூடினவனாக ரதிகன்போல் ஸுகமாகச்செல்லுகிறான். தீரனான எந்த மனிதன் சரீரமாகிற ரதத்தில் பூட்டப்பட்டவையும் அபாயத்தை விளைவிப்பதிலே நோக்கமுள்ளவையுமான ஆறு இந்திரியங்களாகிற குதிரைகளுடைய கடிவாளங்களை இழுத்துப் பிடிப்பனோ அவன் உத்தம ஸாரதியாவான். வழிகளில் விரைவாகச் செல்லுகிற குதிரைகள் போல விஷயங்களில் விரைவாகச் செல்லுகிற இந்திரியங்களை இழுத்துப்பிடித்து ஸாரத்தியம் செய்வதில் மனிதன் தைர்யத்தைக் கைக்கொள்ளவேண்டும். தைர்யத்தினால் அவைகளை நிச்சயமாக ஜயிப்பான். விஷயங்களில் ஸஞ்சரிக்கின்ற இந்திரியங்களை அனுஸரித்து மனமானது தடையின்றி விடப்படுமானால் அந்த மனமானது இவனுடைய புத்தியை, காற்று ஜலத்தில் ஓடத்தை இழுப்பதுபோல இழுக்கிறது. ஸங்கல்பம் சேர்ந்த சப்தம் முதலிய எந்த ஆறு விஷயங்களில் அந்த விஷயங்களின் அநுபவத்தாலுண்டாகிற ஸுகத்தை விஷயப்பற்றுள்ளவர்கள் மதிமயக்கத்தால் ஸுகமென்று கொள்ளுகிறார்களோ அந்த விஷயங்களில் விஷயப் பற்றற்றவன் அவை நிலையற்றவையென்றெண்ணிப் பிரம்மத்தியானத்தாலுண்டாகிற பலனைப் பெறுகிறான்' என்று சொன்னார்.

---

## இருநூற்றுப்பதினொருவது அத்யாயம்.

## மார்க்கண்டேயஸமாஸ்யாபர்வம். (தொடர்ச்சி.)

(தர்மவியாதர் ஸத்வம் முதலிய மூன்று குணங்களையும் அத்யாத்ம ஸ்வரூபத்தையும் கௌசிகனுக்குச் சொல்லியது.)

பரதவம்சத்திலுதித்தவனே! தர்மவியாதரால் இவ்வண்ணம் ஸூக்ஷ்மமானது சொல்லப்பட்டவுடனே, அந்தப் பிராம்மணனே, மனத்தை ஒருவழிப்படுத்திக்கொண்டு, 'ஸத்வம், ரஜஸ், தமஸ் இவற்றின் குணங்களை உள்ளபடி கேட்கின்ற எனக்கு இப்பொழுது உள்ளபடி உரைப்பீராக' என்று மறுபடியும் ஸூக்ஷ்மத்தை வினவினன். வியாதர், 'நீர் என்னைக் கேட்டதனால் உமக்கு அதை ஸந்தோஷத்தோடு சொல்லுவேன். சொல்லுகின்ற என்னிடமிருந்து அந்தக் குணங்களைத் தனித்தனி தெரிந்துகொள்வீராக. அந்தக்குணங்களுள் தமோகுணமானது விபரீத ஞான மயமாயுள்ளது. இவைகளுள், ரஜஸானது பிரவ்ருத்தியை உண்டு பண்ணுகிறது. இவைகளுள், பிரகாசம் மேலிட்டிருப்பதால் ஸத்வ குணமானது சிறந்ததென்று சொல்லப்படுகிறது. தமோகுண முள்ளவன் அறியாமை மேலிட்டவனாகவும் மூடனாகவும் உறக்கத்தை ஸ்வபாவமாகக் கொண்டவனாகவும் புத்தித்தெளிவில்லாதவனாகவும் கெட்ட இந்திரியங்களுள்ளவனாகவும் அஜ்ஞானத்தால் கெடுக்கப்பட்டவனாகவும் கோபமுள்ளவனாகவும் சோம்பேறியாகவுமிருப்பான். பிரம்மரிஷியே! எவன் நன்னடையும் இன்சொல்லுமுள்ளவனும் ஆலோசிப்பவனும் மனிதர்களுள் சிறந்தவனும் அஸூயையில்லாதவனும் லாபத்தை அடைவதில் விருப்பமுள்ளவனும் இறுமாப்புள்ளவனும் அகங்காரமுள்ளவனுமாயிருப்பனோ அவன் ரஜோகுணமுள்ளவனென்று அறியத்தக்கவன். எந்த மனிதன் அதிகப்பிரகாசமுள்ளவனும் தீரனும் லாபத்தை அடைவதில் விருப்பமில்லாதவனும் அஸூயையில்லாதவனும் கோபமில்லாதவனும் சிறந்தபுத்தியுள்ளவனும் ஜிதேந்திரியனுமாயிருக்கிறானோ அவன் ஸாத்விகனென்று அறியத்தக்கவன். நல்ல அறிவுள்ளவனான ஸாத்விகனே உலகத்தாருடைய நடைகளோடு ஸம்பந்தப்படமாட்டான்; அறியத்தக்கதை அறிந்துகொள்வான். உலக நடையை அருவருப்பான். (அவனுக்கு) வைராக்கியத்தினுடைய ரூபமோ முந்தியே தொடங்குகிறது. அஹங்காரமானது

தணிவடைகிறது. மனம் தெளிகிறது. மூன்று கரணங்களிலும் ஒற்றுமை உண்டாகிறது. பிறகு, இந்த விரக்தனுக்கு (ஸுகம் துக்கம், லாபம் அலாபம் முதலிய) எல்லா த்வந்துவங்களும் பரஸ்பரம் விரோதியாமல் தணிந்துவிடுகின்றன. இப்படிப்பட்ட விரக்தனுக்கு ஒரு விஷயத்திலும் [1] ஒரு ஸம்சயமும் உண்டாகிற தில்லை. பிராம்மணரே! சூத்திரஜாதியில்பிறந்து நல்ல குணங்களையே அடைந்திருப்பவனுக்கு வைஶ்யத்தன்மையும் அப்படியே க்ஷத்திரியத்தன்மையும் உண்டாகின்றன. மனத்திலும் வாக்கிலும் செய்கையிலும் கபடமில்லாமல் உள்ளும்புறமும் ஒத்திருப்பவனுக்கு ப்ராம்மண்யம் உண்டாகிறது. உமக்கு எல்லாக்குணங்களும் கூறப்பட்டன. மறுபடியும் எதைக் கேட்க விரும்புகிறீர்?' என்று சொன்னார்.

பிராம்மணன், 'சரீரத்திலுள்ள அக்னியானது பிருதிவிஸம்பந்தமுள்ள தாதுவை அடைந்து எப்படி இருக்கும்? காற்றானது ஸ்தானவிசேஷங்களை அடைவதனால் எவ்வாறு பிராணிகளை இருக்கச் செய்கிறது?' என்று வினவினன். யுதிஷ்டிர! பிராம்மணனால் வினவப்பட்ட இந்த வினவைக்கேட்டு, வ்யாதர், மகாத்மாவான பிராம்மணனுக்குச் சொல்லலானார். 'சரீரத்தைப் பரிபாலனம் செய்துகொண்டு அக்னியானது சிரஸை அடைந்திருக்கிறது. பிராணவாயுவானது தலையிலும் அக்னியிலுமிருந்துகொண்டு பலவிதமாக ஸஞ்சரிக்கின்றது. சென்றது, இருக்கிறது, வருவது ஆகிய எல்லாம் பிராணனில் நிலைபெற்றிருக்கின்றன. அதுவே பூதங்களுள் சிறந்தது. அதை ஒளிவடிவமான பிரம்மமாக உபாஸிக்கிறோம். அது [2] ஸமஷ்டிஜீவன். எல்லாப்ராணிகளுக்கும் அது அந்தராத்மா. அது சாஶ்வதமான புருஷன். அது மஹத்தத்வம்; புத்தி; அஹங்காரம்; பூதங்களுக்குஅதுதான் விஷயமாக இருக்கிறது. அதுஅவ்யக்தம்; ஸத்வமென்கிறபெயருள்ளது. அது ஜீவன். அதுவே காலம். பிராம்மணோத்தமரே! பிரக்ருதியும் புருஷனும் பிராணனே. அது ஸ்வப்னஸமயத்தில் விழித்துக்கொண்டிருக்கிறது. ஸுஷுப்தியில் அது உறங்கவும்உறங்குகிறது. விழித்துக்கொண்டிருக்கிற பிராணிகளிடம் வலிமையை உண்டுபண்ணுகிறது. வேலைசெய்கிற பிராணிகளிடம் இயங்கும்படியும் செய்கிறது.

1 வேறு பாடம்.

2 'சித்து, விஜ்ஞானம், பிராணன் இவற்றின் சேர்க்கை' என்பது பழையவுரை.

பிராம்மணோத்தமரே! அந்தப் பிராணவாயுவானது தடுக்கப்பட்டு விட்டால் (மனிதன்) மரித்தவனென்று சொல்லப்படுகிறான். பூதங்களின் சேர்க்கையான சரீரத்தைத் தரிக்கிறஜீவன் சரீரத்தை விட்டு மறுபடியும் வேறு சரீரத்தை அடைகிறான். சரீரத்தினுடைய மத்தியில் நாபிமண்டலம் நிலைபெற்றிருக்கும். நாபியில் அக்னியானது நிலைபெற்றிருக்கிறது. [1] இவ்வாறு சரீரத்தினுள்ளிருக்கிற விஜ்ஞானரூபியானஜீவனும் வெளியிலுள்ள சரீரம் இந்திரிய முதலியனவும் பிராணவாயுவினால் பாதுகாக்கப்படுகின்றன. அந்த விஜ்ஞானம் உபாதியின் ஸம்பந்தத்தினால் ஜீவனென்னும் பெயரை அடைந்தபிறகு, ஸமானவாயுத் தன்மையை அடைந்து (ஜாடராக்னியை அடுத்து உண்டபொருள்களை ஜீரணப்படுத்தி அபானவாயுவாகி அவற்றின் ஸாராஸாரங்களைத்) தத்தம் இடங்களில் சேர்ப்பிக்கிறது. அபானவாயுவானது [2] வஸ்தியினடியிலும் குதத்திலும் அக்னியை அடைந்து மூத்ரத்தையும் மலத்தையும் கழித்துக்கொண்டு சுற்றிவருகிறது. ஒன்றாக இருந்துகொண்டு பிரயத்னம், செய்கை, வன்மைமூன்றிலுமிருக்கிற வாயுவை அத்யாத்ம ஸ்வரூபத்தை அறிந்த மனிதர்கள் உதானமென்றுசொல்லுகிறார்கள். அப்படியே, மனிதர்களுடைய சரீரங்கள் முழுமையிலும் ஸந்திதோறும் நன்கு நிலைபெற்றிருக்கிற வாயுவானது வ்யானமென்று உபதேசிக்கப்படுகிறது. அந்த அக்னியோ, சரீரதாதுக்களில் பரவியதாகவும் வாயுவினால் நன்றாகத் தூண்டப்பட்டதாகவும் இருந்துகொண்டும் ரஸங்களையும் சரீரதாதுக்களையும் வாதபித்தஸ்லேஷ்மங்களையும் நடைபெறச் செய்துகொண்டும், எல்லாப்பக்கங்களிலும் ஓடுகிறது. பிராணன் முதலிய வாயுக்கள் சேர்வதால் ஒன்றோடொன்று உரைதல் உண்டாகிறது. அதனால் உண்டாகிற சூடே பிராணிகளுடைய அன்னத்தைப் பக்குவம்செய்கிற அக்னியென்று அறியத்தக்கது. அபானத்துக்கும் உதானத்துக்கும் இடையில் பிராணனும் வ்யானனும் நன்கு நிலைநிறுத்தப்பட்டிருக்கின்றன. அக்னியோ, அதிஷ்டானத்தை நன்கு அடைந்ததாக அன்னத்தை நன்றாகப் பக்வம்செய்கிறது. இந்த நெருப்புக்கு (மலத்தைக்கழிக்கிற இந்திரியமான) பாயுவானது கடைசி எல்லையாகும். அது குதமென்று பேருள்ளதாகும். மனிதர்களுடைய பிராணவாயுமுதலிய ஐந்து வாயுக்களுள்ளும் அந்த அபானவாயுவிலிருந்து நாடிமார்க்கங்கள் உண்டா

[1] வேறுபாடம். [2] நாபியின் கீழ்ப்பாகம்.

கின்றன. அக்னியின் வேகத்தையுடைய பிராணவாயுவானது குதத்தினுடைய கடைசியில் திருப்பி அடிக்கப்படுகிறது. அப்படி திருப்பி அடிக்கப்பட்ட பிராணவாயுவானது மேலே வந்து மீண்டும் அக்னியை நன்றாக மேலே எழுப்புகிறது. பக்வாசயமோ நாபிக்குக் கீழாகஇருக்கிறது; ஆமாசயமானது மேலேயிருக்கிறது. சரீரத்தினுடைய நாபியின் மத்தியிலுள்ள ஜாடராக்னியில் எல்லா இந்திரியங்களும் நிலைபெற்றிருக்கின்றன. பிராணவாயுமுதலான பத்து வாயுக்களால் ஏவப்பட்ட எல்லா நாடிகளும் ஹ்ருதயத்தினின்று குறுக்காகவும் மேலாகவும் அவ்வாறே கீழாகவும் சென்று அன்னரஸத்தைத் தேகத்தில் பரவச் செய்கின்றன. எந்த வழியினால் அந்தப் பரமாத்மஸ்வரூபத்தை அடைகிறார்களோ அப்படிப்பட்ட இந்தமார்க்கம் யோகிகளுக்கு உரியது. சிரமத்தை ஜயித்தவர்களும் ஸமபுத்தியுள்ளவர்களுமான தீரர்கள் ஸுஷும்நா நாடியுடன் ஸஹஸ்ராரமென்னும் இடத்தை அடைந்து அந்த நாடியின்வழியாகப் பரமாத்ம ஸ்வரூபத்தைச் சிரத்தில் தியானம் செய்வதற்காக நிலைநிறுத்துகிறார்கள். இவ்வண்ணம் எல்லாப்பிராணிகளிடமும் ப்ராணாபான வாயுக்கள் பரவியிருக்கின்றன. அவ்விரண்டையும் அக்னியுடன்கூடியவைகளென்றும் பிராணவாயுவை ஆத்மாவில் நிலைபெற்றதென்றும் அறிந்துகொள்ளும். ஜீவாத்மா [1] பதினொரு விகாரங்களுடன் கூடின லிங்கசரீரத்தோடு ஐக்யத்தை அடைந்தவனாகவும் [2] பதினாறு கலைகளின் கூட்டத்தினால் நிறைக்கப்பட்டவனாகவும் இருக்கிறான். யோகத்தால் ஜயிக்கப்பட்ட புத்தியுள்ள நித்யனான அந்த ஆத்மாவை ஸூக்ஷ்மமாயும் ஸ்தூலமாயுமிருக்கிற தேகத்துடன் கூடியவனென்று அறிவீராக. அந்தக் கலைகளின் கூட்டத்தில் பாத்திரத்தில் நெருப்புப்போல எவன் எப்பொழுதும் வைக்கப்பட்டிருக்கிறானோ யோகத்தால் சித்தத்தை அடக்கிய அந்த ஜீவாத்மாவை நித்யனென்று அறிவீராக. தாமரை

[1] 'ஞானேந்திரியம் 5, கர்மேந்திரியம் 5, பிராணன் 5, மனம், புத்தி ஆகிய 17-ம் கூடியது லிங்கசரீரம் என்பர் வேதாந்திகள்; இவற்றில், பிராணன்களை 10 இந்திரியங்களிலும் புத்தியை மனத்திலும் அடக்கி 11 ஆகக்கூறும் ஸாங்கியர்களுடைய கொள்கைப்படி இங்குக்கூறப்பட்டது' என்பது பழையவுரை.

[2] பிராணன், ஶ்ரத்தை, ஆகாயம், வாயு, ஜோதி, அப்பு, பிருதிவி, இந்திரியம், மனம், அன்னம், வீரியம், தவம், மந்திரம், கர்மா, லோகம், காமம் ஆகப்பதினாறு' என்பது பழையவுரை.

இலையில் நீர்த்துளிபோல அந்தக் கலைகளின் கூட்டத்தில் எவன் நன்கு நிலைபெற்றிருக்கிறானோ நித்யம் கர்மபலத்யாகத்தால் அடக்கப்பட்ட மனமுள்ள அவனை க்ஷேத்ரஜ்ஞனென்று அறிவீராக. ரஜஸையும் ஸத்வத்தையும் தமஸையும் உபாதியுடன்கூடின ஜீவன்களோடு ஸம்பந்தம்பெற்றவைகளென்று அறிவீராக. ஜீவாத்மாவைப் பரமாத்மாவுக்கு வேலைக்காரனைப் போலப் பராதீனனென்று அறிவீராக. அப்படியே, பரமாத்மாவைச் சிறந்தகுணங்கள் நிறைந்தவரென்று அறிவீராக. சைதன்யமில்லாத சரீரத்தைச் சைதன்யமுள்ளதென்றும் ஜீவனுக்குப் போக்யமென்றும் சொல்லுகிறார்கள். அந்த ஜீவன் ஸ்வதந்திரனாகக் கிரியைகளைச் செய்கிறான்; எல்லாவற்றையும் அசைவுறச் செய்கிறான். எவன் ஏழு உலகங்களையும் படைத்தானோ அந்த ஆத்மாவை க்ஷேத்திரத்தை அறிந்தவர்கள் பரமாத்மாவென்று சொல்லுகிறார்கள். பிராணிகளிடம் அந்தர்யாமியாக இருக்கிற இந்தப் பரமாத்மா எல்லாப்பூதங்களிலும் பிரகாசிக்கிறதில்லை; ப்ரம்மஜ்ஞானத்தைச் சாஸ்திரங்களால் அடைந்திருக்கிற மகான்களாலே ஸூக்ஷ்மமும் சிறந்ததுமான புத்தியினால் காணப்படுகிறான். அந்தக்கரணத்தின் தெளிவினால் மனிதன் நல்லகர்மங்களையும் பாபகர்மங்களையும் நாசம் செய்கிறான். தெளிந்தமனமுள்ளவன் ஆத்மாவிடம் நிலைபெற்று முடிவற்றஸுகத்தைப்பெறுகிறான். மனம்தெளிந்ததற்கு அடையாளம் யாதெனில், மனிதன் திருப்திஅடைந்து ஸுகமாகத் தூங்குவான். ஸுகம் துக்கம் இரண்டையும்விட்டு, (புண்யம் பாபம், பிறப்பு இறப்பு, முதலிய) இரட்டைகளையும் விட்டு, எல்லா வஸ்துக்களிலும் தன்னுடையதென்கிற அபிமானத்தையும்விட்டு, க்ஷேமத்தினால் மேன்மேல் பிரகாசத்தை அடைவிக்கப்பட்டவனாகக் காற்றில்லாத இடத்தில் விளக்குப்போல (அசைவற்று) ஜ்வலிப்பான். எப்பொழுதும் இராவின் முன்பாகத்திலும் பின்பாகத்திலும் மனத்தை யோகத்தில் செலுத்துகிறவனும் சொற்ப ஆகாரத்தை உட்கொள்பவனும் மாசற்ற மனமுள்ளவனுமான யோகியானவன் தன் உள்ளத்தில் பரமாத்மாவைப் பார்க்கிறான். மனிதன் நன்றாக ப்ரகாசிக்கின்ற தீபத்தினால் பொருள்களைப் பார்ப்பதுபோல மனோமயமான தீபத்தினால் பரமாத்மாவை ஸாக்ஷாத்கரிக்கிறான். பிராம்மணரே! அவன் [1] வடிவமில்லாத ஆத்மாவைக்கண்டு

---

[1] 'நிராத்மானம்' என்பது மூலம்; 'நிர்க்குணமான' என்பது பழைய உரை.

பந்தத்தினின்று விடப்படுகிறான். எல்லா உபாயங்களாலும் லோபத்தையும் கோபத்தையும் விலக்கவேண்டும். எது ஞானமோ அது பவித்ரம். தவமானது ஸம்ஸாரமாகிற கடலைக் கடப்பதற்கு ஒரு வாராவதியாக எண்ணப்பட்டிருக்கிறது. எப்பொழுதும் தவத்தைக் கோபத்தினின்று பாதுகாக்கவேண்டும். [1] ஸம்பத்தை மாத்ஸர்யத்தினின்று பாதுகாக்கவேண்டும். வித்தையை மானாவமானங்களிலிருந்து காக்கவேண்டும். ஆத்மாவை (உண்மை ஞானத்திலிருந்து) தவறுதலினின்று பாதுகாக்கவேண்டும். அண்டினவர்களைப் பாதுகாப்பது சிறந்த தர்மம். பொறுமையானது நிகரில்லாத பலம். ஆத்மஜ்ஞானமானது சிறந்த ஞானம். ஸத்தியவிரதமானது எல்லா விரதங்களையுங்காட்டிலும் சிறந்த விரதம். ஸத்தியத்தைச் சொல்லுவது சிறந்தது. ஸத்திய ஜ்ஞானமானது ஹிதமாகும். எது பிராணிகளுக்கு மிகவும் ஹிதமாயிருக்குமோ அது சிறந்த ஸத்யமென்று எண்ணப்பட்டிருக்கிறது. எவனுடைய எல்லாக் கார்யங்களும் எப்பொழுதுமே பயனில் விருப்பமில்லாதவைகளாக இருக்குமோ, எவனுடைய ஹோமம் முதலிய எல்லாக் கிரியைகளும் பலத்யாகத்தில் நோக்குள்ளவையாக இருக்குமோ அவன் தியாகி; அவன் சிறந்த புத்தியுள்ளவன். குருவாக இருந்தாலும் இந்த ப்ரம்மயோகத்தைப் பிறருக்கு இவ்விதமென்று சொல்லமுடியாததலால் அந்த லக்ஷணையினாலேயே தெரிவிக்கவேண்டும். சித்தவியோக ரூபமான இந்த ப்ரம்மயோகத்தை விருத்தலக்ஷணையினால் யோகமென்கிற பெயருள்ளதாக அறியவேண்டும். பிராணிகளில் ஒன்றையும் துன்பம் செய்யலாகாது. ஸ்நேஹத்தன்மையாகிற வழியை அடைந்தவனாக நடக்கவேண்டும். இந்த மனித ஜன்மத்தை அடைந்து ஒருவனோடாவது வைரத்தைப் பாராட்டக்கூடாது. 'எனக்கு யாதொன்றுமில்லை' என்கிற எண்ணம், நல்ல ஸந்தோஷம், ஆசை இல்லாமை, சாபல்யமில்லாமை ஆகிய இவையே சிறந்த ஞானம். நல்ல ஆத்மஜ்ஞானம் உத்தமமானது. மனிதன் பற்றைவிட்டு இம்மையிலும் மறுமையிலும் சோகமில்லாததும் அசைவற்றதுமான வைராக்கியத்தைக் கைக்கொண்டு புத்தியினால் பரிசுத்த விரதமுள்ளவனாயிருக்கவேண்டும். அடைதற்கரிய மோக்ஷத்தை அடையவிரும்புகிற மனிதன் தவத்தில் எப்பொழுதும் நிலைபெற்றவனும் இந்திரியங்களை அடக்கினவனும் பிரம்மஸ்வரூபத்தை மனனம்செய்பவ

[1] 'தர்மத்தை' என்பது வேறுபாடம்.

னும் மனத்தை நன்கு அடக்கினவனும் விஷயங்களில் பற்றுதலில்லாதவனுமாக இருக்கவேண்டும். அறிஞர்கள் இந்தப் பிரம்ம ஸுகானுபவஸ்தானமான மோக்ஷத்தை, குணங்களாக எண்ணப்படுகின்றவை குணமல்லாதவையாகுமிடமென்றும், ஸ்திரீ முதலிய வஸ்துக்களின் ஸம்பந்தமில்லாததென்றும், ஜீவாத்மா ஒன்றாலேயே ஸாதிக்கத்தக்கதென்றும், அஜ்ஞானம் விலகினவுடன் அடையத்தக்கதென்றும், முந்தியே ஸித்தமாக இருக்கிறதென்றும், ஒன்றென்றே அறியத்தக்கதென்றும் சொல்லுகிறார்கள். எந்த மனிதன் துக்கம் ஸுகம் இரண்டையும் விடுகிறானே அவன் அழிவில்லாத பிரம்மத்தை அடைகிறான். மற்ற ஒரு வஸ்துவினிடத்திலும் பற்றுதலை அடைகிறானில்லை. பிராம்மணோத்தமரே! பெரியோர்களிடமிருந்து கேட்டவண்ணம் என்னால் இவை எல்லாம் சுருக்கமாக உமக்கு உரைக்கப்பட்டன. மீண்டும் எதைக் கேட்க விரும்புகிறீர்?' என்று கூறினார்.

---

## இருநூற்றுப்பதினேழாவது அத்யாயம்.

## மார்க்கண்டேயஸமாஸ்யா பர்வம். (தொடர்ச்சி.)

(தர்மவ்யாதர் கௌசிகனைத் தம் வீட்டினுள் அழைத்துப்போய் முதியவர்களான தம் தாய்தந்தையரைக் காண்பித்து அவர்களுக்குத் தாம் பணிசெய்யும் முறையைத் தெரிவித்தது.)

யுதிஷ்டிர! இவ்விதம் மோக்ஷதர்மம் முழுமையும் சொல்லப்பட்டவுடன், பிராம்மணன் திடமான பிரீதியுள்ள மனத்துடன் தர்மவ்யாதரைப் பார்த்து, 'உம்மால் நியாயத்துடன்கூடின இவை அனைத்தும் நன்கு கூறப்பட்டன. உம்மால் தர்மங்களில் அறியப்படாதது ஒன்றும் காணப்படவில்லை' என்று சொல்ல, வியாதர், '[1] பிராம்மணோத்தமரே! என்னால் இந்த ஸித்தியானது எதனால் அடையப்பட்டதோ, எது என்னுடைய தர்மமோ, அதை நீர் நேரில் பார்ப்பீராக. பகவானே! எழுந்திரும். தர்மங்களை அறிந்தவரே! விரைவாக என் வீட்டினுள் நுழைந்து என்னுடைய தாய்தந்தைகளைப் பார்க்கக்கடவீர்' என்று சொன்னார். இவ்வண்ணம் சொல்லப்பட்ட அந்தப்ராம்மணன் வீட்டினுள் நுழைந்து, நன்றாக அர்ச்சிக்கப்பட்டதும் மனத்திற்கு ஸந்தோஷத்தை

[1] பொருள் இரட்டித்தலால் ஒரு விளி விடப்பட்டது.

உண்டுபண்ணுகிறதும் மிக்க ரம்மியமாயிருக்கிறதும் நான்கு அறைகளுள்ளதும் தேவாலயத்திற்கொப்பானதும் தேவதைகளால் நன்றாகப் பூஜிக்கப்பட்டதும் படுக்கைகளாலும் ஆஸனங்களாலும் நெருங்கியதும் நிகரில்லாத வாஸனையுள்ள வஸ்துக்களோடு கூடியதுமான உப்பரிகையைக் கண்டான். பிராம்மணன், அந்த மாளிகையில் வெள்ளைவஸ்திரங்களைத் தரித்தவர்களும் பூஜிக்கப் பட்டவர்களும் போஜனம் செய்தவர்களும் ஸந்தோஷமுள்ளவர்களும் உத்தமமான ஆஸனத்தில் வீற்றிருப்பவர்களுமான அந்த வ்யாதருடைய தாய்தந்தைகளைக் கண்டான். தர்மவியாதரோ அந்தத் தாய்தந்தைகளைப் பார்த்து முடியினால் கால்களில் தண்டனிட்டார். தாய்தந்தைகள், 'தர்மங்களை அறிந்தவனே! எழுந்திரு; எழுந்திரு. தர்மம் உன்னை நாற்புறங்களிலும் பாதுகாக்கட்டும். நாங்கள் உன்னுடைய சுத்தியினால் பிரீதியுள்ளவர்களாகிறோம். நீண்ட ஆயுளை அடைவாயாக. நீ இஷ்டமான கதியையும் தவத்தையும் ஞானத்தையும் சிறந்த மேதையையும் அடைந்திருக்கிறாய். புத்திரா! ஸத்புத்திரனான உன்னால் நித்யம் காலத்தில் நன்கு பூஜிக்கப்பட்டுத் தேவலோகத்தை அடைந்தவர்கள்போல இந்த இடத்தில் ஸுகமாகவே வஸிக்கிறோம். உனக்கு எங்களைத்தவிர வேறு தெய்வமானது தேவர்களுள் கூட இல்லை. பரிசுத்தனாக இருப்பதுடன், பிராம்மணர்களுக்குரிய இந்திரியநிக்ரஹமுள்ளவனாகவும் இருக்கிறாய். புத்திரா! எவர்கள் பிதாவுக்குப் பிதாமஹர்களோ, அப்படியே பிரபிதாமஹர்களோ அவர்கள் உன்னுடைய இந்திரிய நிக்ரஹத்தாலும் எங்களுக்குச்செய்கிற பூஜையினாலும் பிரீதியடைந்தார்கள். மனத்தினாலும் செய்கையினாலும் வாக்கினாலும் செய்யப்படுகிற பணிவிடை குறைவடைகிறதேயில்லை. உனக்கு இப்பொழுது எங்களுக்குப் பணி செய்வதைத்தவிர வேறு எண்ணம் இருப்பதாகக் காணப்படவில்லை. அருமைக்குழந்தாய்! ஜமதக்னியின் குமாரரான பரசுராமரால் வயது முதிர்ந்த தாய் தந்தைகள் எவ்வண்ணம் நன்றாகப் பூஜிக்கப்பட்டார்களோ, அவ்வாறாகவும், அதைவிட மேலாகவும் உன்னால் எங்கள் விஷயத்தில் எல்லாம் செய்யப்பட்டன' என்று சொன்னார்கள். பிறகு, தர்மவ்யாதர் அவ்விருவருக்கும் அந்தப் பிராம்மணனை அறிவித்தார். அவ்விருவரும் அப்பொழுது அந்த ப்ராம்மணனை நல்வரவு கூறி அர்ச்சித்தார்கள். பிராம்மணன் அந்தப் பூஜையைப் பெற்றுக்கொண்டு அவ்விருவரையும்

பார்த்து, 'நீங்கள் புத்திரருடனும் வேலைக்காரர்களுடனும் வீட்டில் க்ஷேமமாயிருக்கிறீர்களா? நீங்கள் நோயற்றிருக்கிறீர்களா? இந்த (முதுமையில்) உங்கள் சரீரங்கள் ஸௌக்கியமாயிருக்கின்றனவா?' என்று வினவினான். முதியோர்கள், 'பிராம்மணரே! எங்களுக்கு வீட்டிலும் வேலைக்காரர்வகையிலும் எல்லாவிதத்தாலும் க்ஷேமம். பகவானே! நீரும் இடையூறில்லாமல் வந்தீரா'? என்று சொன்னார்கள். பிராம்மணன், ஸந்தோஷத்துடன் அவ்விருவரையும் பார்த்து, 'ஆம்' என்றே மறுமொழி கூறினான். தர்மவ்யாதரோ, அந்த ப்ராம்மணனைப் பார்த்து, 'பகவானே! இந்த மாதாபிதாக்கள் எனக்குப் பரதேவதை. தேவதைகளை உத்தேசித்து எது செய்யத்தக்கதோ அதை நான் இவர்களுக்குச் செய்கிறேன். எப்படி எல்லா உலகத்தாருக்கும் இந்திரனைத் தலைவனாகக் கொண்ட முப்பத்துமுக்கோடி தேவர்களும் நன்றாகப் பூஜிக்கத்தக்கவர்களோ அப்படியே பிராயம் முதிர்ந்தவர்களான இந்தத் தாய்தந்தைகள் எனக்குப் பூஜிக்கத் தக்கவர்கள். எப்படி பிராம்மணர்கள் பூஜைக்குரிய பொருள்களைக் கொண்டுவந்து தேவர்களைப் பூஜிக்கிறார்களோ அப்படியே நான் ஆலஸ்யமில்லாதவனாக இந்தத் தாய்தந்தைகளிருவரையும் பூஜிக்கிறேன். பிராம்மணரே! இந்தத் தந்தை தாயிருவரும் எனக்குச் சிறந்த தெய்வம். பிராம்மணரே! எப்பொழுதும் நான் இவர்களைப் புஷ்பங்களாலும் பழங்களாலும் அன்னங்களாலும் ஸந்தோஷமடையச் செய்கிறேன். கற்றறிந்தவர்கள் எவைகளை அக்னிகளென்று சொல்லுகிறார்களோ, அந்த அக்னிகள் எனக்கு இவர்களே. பிராம்மணரே! யஜ்ஞங்களும் நான்கு வேதங்களும் மற்ற எல்லாமும் எனக்கு இவர்களே. இவர்களுடைய பணிவிடைக்காக என்னுடைய உயிர், மனைவி, புத்திரன், நண்பர்கள் எல்லாருமிருக்கிறார்கள். நான் புத்திரனோடும் மனைவியோடும் நாள்தோறுமே பணிவிடையைச் செய்கிறேன். பிராம்மணோத்தமரே! நானே இவர்களை நீராட்டுகிறேன். அப்படியே இவர்களுடைய கால்களை நன்றாக அலம்புகிறேன். நானே ஆஹாரத்தையும் கொடுக்கிறேன். அனுகூலமான வார்த்தைகளைச் சொல்லுகிறேன். அப்ரியமான சொற்களை விலக்குகிறேன். நான், அதர்மத்தோடு சேர்ந்ததாயினும் இவர்களுக்குப் பிரியத்தைச் செய்கிறேன். பிராம்மணோத்தமரே! பிராம்மணரே! தர்மத்தையே பெரிதாக எண்ணிச் சோம்பலில்லாதவனாக எப்

பொழுதும் இவர்களுக்கு நானே நேரில் பணிவிடையைச் செய்கிறேன். பிராம்மணோத்தமரே! உலகத்தில் சிறப்படைய விருப்பமுள்ள மனிதனுக்கு, பிதாவும் மாதாவும் அக்னியும் ஆத்மாவும் ஆசாரியனுமாகிய ஐவரே குருக்கள். பிராம்மணோத்தமரே! இவர்களிடம் எவன் நன்றாகவே நடந்துகொள்ளுகிறானோ அவனாலே அக்னிகள் நாள்தோறும் பணி செய்யப்பட்டவைகளாகும். இல்லறத்திலிருப்பவனுக்கு இது சாஸ்வத தர்மம்' என்று கூறினார்.

## இருநூற்றுப்பதினெட்டாவது அத்யாயம்.

## மார்க்கண்டேயஸமாஸ்யாபர்வம். (தொடர்ச்சி.)

**(தர்மவ்யாதர் கௌசிகனைத் தாய்தந்தையருக்குப் பணிசெய்ய ஏவி, தாம் சூத்திரஜாதியில் பிறந்ததற்குக் காரணத்தைக் கூறியது.)**

தர்மாத்மாவான அந்த வ்யாதர், குருக்களான அந்த மாதா பிதாக்களிருவரையும் பிராம்மணனுக்குத் தெரிவித்து, மீண்டும் பிராம்மணனை நோக்கி, 'பிராம்மணரே! நீர் மிதிலாநகரத்திற்குச் செல்லும். மிதிலையில் வஸிக்கின்ற அந்த வியாதன் உமக்குத் தர்மங்களைச் சொல்லுவான்' என்று பர்த்தாவினுடைய சுஸ்ரூஷையை ப்ரதானமாகக்கொண்டவளும் இந்திரியங்களை அடக்கினவளும் ஸத்தியத்தையே சீலமாகக்கொண்டவளுமான அந்தப் பதிவ்ரதையினால் நீர் சொல்லப்பட்டவிஷயத்தில் நான் திவ்ய த்ருஷ்டியுள்ளவனாக இருக்கிறேன். தாய்தந்தையருடைய பணிவிடை ரூபமான தவத்தின் வன்மையை நன்கு பார்ப்பீராக' என்று சொன்னார். பிராம்மணன், 'பரிசுத்த விரதமுள்ளவரே! தர்மங்களை அறிந்தவரே! மெய்பேசுகிறவளும் நல்ல ஸ்வபாவத்தாலும் நன்னடைகளாலும் நிறைந்தவளுமான பதிவ்ரதையினுடைய வாக்கியத்தை நன்றாக நினைத்து, 'நீர் சிறந்த குணமுள்ளவரென்று என்னால் எண்ணப்பட்டிருக்கிறீர்' என்று சொன்னான். வியாதர், 'பிராம்மணோத்தமரே! பிரபுவே! நீர் அவளால் எதைப்பற்றி என்னைக்குறித்து ஏவப்பட்டீரோ அந்த விஷயம் அந்தப் பதிவிரதையினால் நன்கு அறியப்பட்டதே. ஸம்சயமில்லை. பிராம்மணரே! உம்மை அனுக்கிரஹிக்கவேண்டுமென்ற எண்ணத்தால் என்னால் இது காண்பிக்கப்பட்டது. ஐயா! பிராம்மணரே! நான் உமக்குச் சொல்லப்போகிற ஹிதவாக்கியத்தை என்னிடமி

ருந்து கேளும். பிராம்மணோத்தமரே! உம்மால் தாயும் தந்தையும் பூஜிக்கப்படவில்லை. இகழப்படாதவரே! அவ்விருவராலும் அனுமதி கொடுக்கப்படாமலே வேதங்களை அத்யயனம் செய்வதற்காக வீட்டிலிருந்து வெளிப்பட்டீர். அப்படிப்பட்ட தகாத காரியம் உம்மால் செய்யப்பட்டது. இரக்கப்படத்தக்கவர்களும் வயது சென்றவர்களுமான அவ்விருவர்களும் உம்முடைய சோகத்தால் குருடர்களானார்கள். அவர்களை மனங்குளிரும்படி செய்வதற்கு விரைவாகச் செல்லும். உம்மை இந்தத் தர்மமானது தாண்டிச் செல்லவேண்டாம். நீர் சிறந்த தவமுள்ளவர்; மஹாத்மா; எப்பொழுதும் தர்மத்தில் பற்றுதலுள்ளவர். இவை அனைத்தும் பயனற்றவை. அந்த மாதாபிதாக்களை விரைவாக அடைந்து ஸந்தோஷமடையும்படி செய்வீராக. பிராம்மணோத்தமரே! அவர்களை ஸந்தோஷமடையும்படி செய்தால் நன்மையை அடைவீர். பிராம்மணரே! என் சொல்லில் நம்பிக்கை வைக்கக்கடவீர். நீர் வேறுவிதமாக நடப்பது தகாது. பிரம்மரிஷியே! இப்பொழுதே போகலாம்; நான் உமக்கு நன்மையைச் சொல்லுகிறேன்' என்று சொன்னார்.

பிராம்மணன், 'நீர் சொல்லியதெல்லாம் உண்மையே. ஸந்தேகமில்லை. தர்மத்தோடும் ஆசாரத்தோடும் குணங்களோடும்கூடியவரே! உமக்கு மங்களம். உம் விஷயத்தில் பிரீதியுள்ளவனாக இருக்கிறேன்' என்று சொல்ல, வ்யாதர், 'பழமையானதும் சாச்வதமானதும் திவ்யமானதும் சாஸ்திர ஜ்ஞானமில்லாதவர்களால் அடையமுடியாததுமான தர்மத்தை நீர் அனுஷ்டிக்கிறீர். நீர் தேவதைபோன்றவரன்றோ? பிராம்மணோத்தமரே! நீர் தாய் தந்தைகளிடம் சென்று சோம்பலில்லாதவராக அவர்களுக்குப் பூஜையை விரைவாகச் செய்யும். வேறு ஒரு தர்மத்தையும் இதைக் காட்டிலும் சிறந்ததாக நான் காணவில்லை' என்று சொன்னார். பிராம்மணன், 'நான் பாக்கியவிசேஷத்தால் இவ்விடத்திற்கு வந்தேன். எனக்குப் பாக்கியவிசேஷத்தால் உம்முடன் நட்பு ஏற்பட்டது. உலகத்தில் தர்மத்தைக் காட்டுகின்ற இப்படிப்பட்ட மனிதர்கள் கிடைப்பது அரிது. பல்லாயிரம் மனிதர்களுள் ஒரு தர்மவான் இருப்பானோ இரானோ. புருஷச்ரேஷ்டரே! உமக்கு மங்களம். உம்முடைய ஸத்தியத்தினால் பிரீதியுள்ளவனாக இருக்கிறேன். நரகத்தில் விழுகின்ற நான் இப்பொழுது உம்மால் நன்கு கரையேற்றப்பட்டேன். தோஷமற்றவரே! நான் உம்மை இப்படி பார்த்தது என் அத்ருஷ்டம். புருஷச்ரேஷ்டரே! ஸ்வர்க்கத்தி

னின்று கீழே விழுகின்ற யயாதிராஜன் தர்மவான்களான தௌஹித்திரர்களால் எவ்வாறு கரையேற்றப்பட்டானே அவ்வாறே நான் உம்மால் இப்பொழுது கரையேற்றப்பட்டேன். உம்முடைய வசனத்தினால் தாய் தந்தைகளுக்குச் சுச்ரூஷை செய்யப்போகிறேன். சாஸ்திர ஜ்ஞானமில்லாதவன் தர்மாதர்மநிச்சயத்தைப் பிறருக்குத் தெரிவிக்கச் சக்தியுள்ளவனாகான். சூத்திரஜாதியில் இருக்கிறவனால் சாச்வதமான தர்மமானது அறியமுடியாதது. நான் உம்மைச் சூத்திரராக எண்ணவில்லை. தக்க காரணமிருக்க வேண்டுமன்றோ? நீர் இந்தச் சூத்திரத்தன்மையை அடைந்ததற்குரிய உம்முடைய வினையை உள்ளபடி அறியவிரும்புகிறேன். விருப்பமுள்ள எனக்குப் பரிசுத்தாத்மாவான நீர் எல்லாவற்றையும் கூறுவீராக' என்று வினவ, வ்யாதர், 'பிராம்மணோத்தமரே! என்னால் பிராம்மணர்கள் மீறி நடக்கத் தகாதவர்கள். தோஷமில்லாதவரே! முந்தின தேகத்தில் நடந்த இந்த எல்லா விருத்தாந்தத்தையும் கேட்பீராக. நான் பூர்வஜன்மத்தில் உத்தமரான ஒரு பிராம்மணருக்குப் புத்திரனும் வேதங்களை அத்தியயனம் செய்தவனும் அவைகளில் நல்ல ஸாமர்த்தியமுள்ளவனும் வேதாங்கங்களுடைய கரையையடைந்தவனுமான ஒரு பிராம்மணனாக இருந்தேன். பிராம்மணரே! என்னால் செய்யப்பட்ட தீச்செயல்களால் இந்த நிலைமையை அடைந்தேன். முன் ஜன்மத்தில் தனுர்வேதத்தில் பற்றுதலுள்ளவனான ஓரரசன் எனக்குத் தோழனாக இருந்தான். பிராம்மணரே! அவனது சேர்க்கையினால் நான் தனுர்வித்தையில் மிகச் சிறந்தவனானேன். இதே ஸமயத்தில் அரசன் சிறந்த போர் வீரர்களோடுகூடியவனும் மந்திரிகளால் நன்கு சூழப்பட்டவனுமாக வேட்டைக்காகப் புறப்பட்டான். பிறகு, அங்கே ஓர் ஆச்ரமத்தின் அருகில் பல மிருகங்களைக் கொன்றான். பிராம்மணோத்தமரே! பிறகு, என்னாலும் கோரமான ஒரு பாணம் விடப்பட்டது. வளைந்த கணுக்களுள்ள அந்த அம்பினால் ஒரு ரிஷி அடிக்கப்பட்டார். பிராம்மணரே! அடிக்கப்பட்டுப் பூமியில் விழுகின்ற அந்த ரிஷியானவர், 'நான் ஒரு குற்றமும் செய்யவில்லை. எவனால் இந்தத் தீங்கு செய்யப்பட்டது?' என்று எதிரொலி இடும்படி உரத்த சப்தத்துடன் சொன்னார். நான் அந்த முனிவரை மிருகமென்று எண்ணிக்கொண்டு அவரிடம் விரைவாகச் சென்றேன். வளைந்த கணுக்களோடுகூடின அம்பினால் அடிக்கப்பட்டவரும் பூமியில் விழுந்து அலறுகின்றவரும் கடுந்தவமுள்ளவருமான அந்தப் பிராம்ம

ரிஷியைப் பார்த்தேன். அகார்யத்தைச் செய்ததினால் என் மன மானது மிக்க துன்பமடைந்தது. பிறகு, நான், அறியாமையி னால் இதனைச் செய்தேன்' என்று சொன்னேன். 'என்னுடைய குற்றமனைத்தையும் நீர் பொறுக்கக்கடவீர்' என்றும் அந்த மஹரிஷியை நான் வேண்டினேன். பிராம்மணரே! பிறகு, கோப மூண்டவரான அந்த ரிஷியானவர் என்னைப் பார்த்து, 'கொடிய வனே! நீ சூத்திரஜாதியில் வியாதனாகப் பிறப்பாய்' என்கிற வாக் கியத்தை எனக்கு மறுமொழியாகக் கூறினார்.

---

## இருநூற்றுப்பத்தோன்பதாவது அத்யாயம்.

## மார்க்கண்டேயஸமாஸ்யாபர்வம். (தொடர்ச்சி.)

(தர்மவியாதரால் பற்பல தர்மங்களை அறிவிக்கப்பட்ட கௌசிகன் தன் வீடு சென்று தன் பெற்றோர்களுக்குப் பணி செய்ததும், மார்க்கண்டேயர் பதிவ்ரதையின் மகிமை முதலிய வற்றைச்சொல்லிக் கதையை முடித்ததும்.)

பிராம்மணஶ்ரேஷ்டர்களுள் உத்தமரே! இவ்வாறு ரிஷியினால் அப்பொழுது சபிக்கப்பட்ட நான் வாக்கியத்தை உரைப்பதில் ஸமர்த்தரான அந்த மஹரிஷியைப் பார்த்து, 'முனிவரே! அறியா தவனான என்னால் இப்பொழுது இந்த அகாரியம் செய்யப்பட்டது. பகவானே! அவையனைத்தையும் பொறுக்கக்கடவீர். அருள் புரிவீ ராக' என்கிற சொல்லால் கோபந்தணியும்படி ரிஷியை வேண்டி னேன். ரிஷி, 'இந்தச் சாபமானது இவ்விதமே; வேறுவிதமாகாது; ஸம்சயமில்லை. நான் கருணையினால் இப்பொழுது உன் விஷயத் தில் சிறிது அனுக்கிரஹம் செய்வேன். சூத்திரஜாதியில் நீ பிறந் திருந்தாலும் தர்மங்களை அறிந்தவனாவாய்; தாய்தந்தைகளுக்குச் சுஶ்ரூஷை செய்வாய்; ஸம்சயமில்லை; அவர்களுடைய சுஶ்ரூஷை யினால் மகாஸித்தியை அடைவாய்; முன்பிறப்புக்களை அறிபவனு மாவாய்; ஸ்வர்க்கத்தையும் அடைவாய். நீ தார்மிகனான வேட னாகப் பிறந்து மாதாபிதாக்களுடைய சுஶ்ரூஷையில் பற்றுத லுள்ளவனாகவுமிருந்து, சாபத்திற்கு அழிவு வந்தவுடன், மீண்டும் பிராம்மணனாகப் பிறப்பாய்' என்று அனுக்கிரஹித்தார். மனித ருட்சிறந்தவரே! உக்கிர தேஜஸுள்ள அந்த ரிஷியினால் இவ்வண் ணம் நான் முற்காலத்தில் சபிக்கப்பட்டேன். அவரால் எனக்கே

அனுக்கிரஹமும் செய்யப்பட்டது. பிராம்மணோத்தமரே! அந்த ரிஷியின் தேகத்தில் பாய்ந்திருந்த அம்பையும் பிடுங்கி எடுத்தேன். அந்த ரிஷியானவர் என்னால் ஆஶ்ரமத்திற்குக் கொண்டுபோகப் பட்டார். அவர் உயிர் துறக்கவில்லை. பிராம்மணோத்தமரே! எனக்கு முன்ஜன்மத்தில் நேர்ந்ததையும் ஸமீபகாலத்தில் எப்படி ஸ்வர்க்கம் செல்வேனென்பதும் ஆகிய அனைத்தும் உமக்கு உரைக்கப்பட்டன' என்று கூறினார். பிராம்மணன், 'மகாபுத்தியுள்ளவரே! இவ்வண்ணம் மனிதர்கள் இந்தத் துக்கங்களையும் ஸுகங்களையும் அடைகிறார்கள். நீர் இதுவிஷயத்தில் கவலை அடையவேண்டாம். உம்முடைய ஜாதியை அறிந்துகொண்டிருக்கிற உம்மால் செய்ய முடியாத கார்யம் செய்யப்படுகிறதன்றோ? உலகங்களுடைய விருத்தாந்தங்களின் உண்மையை அறிந்தவரே! எப்பொழுதும் தர்மத்தில் பற்றுதலுள்ளவரே! கற்றறிந்தவரே! கர்மதோஷத்தாலும் உமது ஜாதியைச் சார்ந்த தொழிலினாலும் சிறிதுகாலம் பொறுக்கக்கடவீர்; பிறகு, பிராம்மணராவீர். இப்பொழுதே என்னால் பிராம்மணராக எண்ணப்பட்டிருக்கிறீர். இதில் ஸம்சயமில்லை. பதிதனாவதற்குக் காரணமான கெட்ட காரியங்களில் இருப்பவனும் டம்பமுள்ளவனும் கெட்ட கார்யங்களை அதிகமாகச் செய்பவனுமான பிராம்மணன் சூத்திரனுக்கு ஸமானனாவான். எந்தச் சூத்திரன் ஐம்பொறியடக்கலிலும் ஸத்தியத்திலும் தர்மத்திலும் எப்பொழுதும் முயற்சியுள்ளவனாக இருப்பனோ அவனை நான் பிராம்மணனாக எண்ணுகிறேன். நடையினால் அவன் பிராம்மணனன்றோ? கர்மதோஷத்தினால் உக்கிரமான தகாத நிலைமையை நீர் அடைந்திருக்கிறீரன்றோ? மனிதர்களுள் சிறந்தவரே! நான் உம்மை விரைவில் தோஷங்கள் நீங்கினவரென்றெண்ணுகிறேன். நீர் கவலைப்பட வேண்டாம். உலகங்களுடைய விருத்தாந்தங்களின் உண்மையை அறிந்தவர்களும் நித்யம் தர்மத்தில் பற்றுள்ளவர்களுமான உம்மைப்போன்ற மனிதர்கள் வியஸனப்படமாட்டார்களன்றோ?' என்று சொல்ல, வ்யாதர், 'மனிதன் ஞானத்தினால் மனோதுக்கத்தைப் போக்கவேண்டும்; மருந்துகளால் சரீரத்திலுள்ள வியாதியைப் போக்கிக்கொள்ளவேண்டும். இது பேரறிவின் சிறப்பு. மனிதன் பாலர்களோடு ஒப்புமையை அடையக்கூடாது. அற்ப புத்தியுள்ள மனிதர்கள், விரும்பாதவற்றின் சேர்க்கையாலும் விரும்பியவற்றின் பிரிவினாலும் மனோதுக்கங்களை அடைகிறார்கள். எல்லாப்பிராணிகளும் குணகார்யங்களான ஸுகதுக்கமோஹங்க

ளோடு சேர்கின்றன; அப்படியே பிரிவடைகின்றன. இது ஒருவனுக்குச் சோகத்துக்குக் காரணமாகக் கூடாதன்றோ? அனிஷ்டத்தின் சேர்க்கையைப் பார்ப்பவன் அப்படி விரைவில் விரக்தி அடைகிறான். பிறகு, மனிதர்கள், அனிஷ்டம் தொடங்குவதைப் பார்ப்பார்களேயானால் பரிஹாரத்தைச் செய்கிறார்கள். துக்கப்படுகிறவனுக்கு ஒன்றும் உண்டாகாது. அவன் பரிதாபத்திற்குமாத்திரம் ஆளாவான். எந்தமனிதர்கள் ஸுகத்தையோ துக்கத்தையோ இரண்டையுமோ விடுகிறார்களோ ஞானத்தினால் த்ருப்தியுள்ளவர்களான அந்த அறிஞர்களே ஸுகமாக விருத்தி அடைகிறார்கள். மூடர்கள் அதிருப்தியை ப்ரதானமாகக்கொண்டிருப்பார்கள். பண்டிதர்கள் திருப்தியை அடைகிறார்கள். அதிருப்திக்கு முடிவு கிடையாது. திருப்தியோ சிறந்த ஸுகம். ஞானமார்க்கத்தை அடைந்தவர்கள் சிறந்த கதியைப் பார்ப்பவர்களாகிச் சோகத்தை அடையமாட்டார்கள். துக்கத்தில் மனத்தைச் செலுத்தலாகாது. வ்யஸனமென்பது கொடிய விஷம். வ்யஸனமானது விவேகமில்லாதவனைக் கோபங்கொண்ட ஸர்ப்பமானது பாலனைக் கொல்லுவது போலக் கொல்லுகிறது. ஆபத்து நேர்ந்திருக்கும் தருணத்தில் வ்யஸனமானது எந்த மனிதனைக் கவருகிறதோ பௌருஷத்தினால் விடுபட்ட அந்த மனிதனுக்குப் புருஷார்த்தம் கிடையாது. செய்யப்படுகிற வினையின் பயன் அவஶ்யம் காணப்படுகிறது. மனிதன் கார்யங்களில் ஒழிவை அடைந்தால் ஒருவிதமான மங்களத்தையும் அடையமாட்டான். அப்படி இருந்தாலும் துக்கத்தைவிட்டு விலகுவதில் உபாயத்தைக் கண்டறிய விரும்புவனானால் சோகத்திற்கு உடன்படாதவனாக நல்ல கார்யத்தை ஆரம்பிக்கவே வேண்டும். நல்லகார்யங்களில் முயற்சியுள்ளவனாகவும் வியஸனமில்லாதவனாகவும் இருக்கவேண்டும். பிராணிகளிடங்களில் அழிவுண்டாவதை நன்கு ஆலோசித்து எவர்கள் தத்துவ ஜ்ஞானத்தால் பரப்ரம்மத்தை அடைய முயலுகிறார்களோ தேர்ந்த ஞானமுள்ள அவர்கள் உத்தமகதியைப் பார்ப்பவர்களாகிச் சோகத்தை அடைகிறதில்லை. கற்றறிந்தவரே! நான் துக்கப்படுகிறதில்லை; ஸந்தோஷிக்கிறேன். நான் காலத்தை விரும்பிக்கொண்டிருக்கிறேன். பிராம்மணரே! ஸாதுக்களுள் சிறந்தவரே! இந்த நிதர்சனங்களால் நான் மனங்களராமலிருக்கிறேன்' என்று கூறினர்.

பிராம்மணன், 'நீர் தேர்ந்த அறிவுள்ளவராக இருக்கிறீர். நீர் நல்ல மேதையுள்ளவர். உமது புத்தி விசாலமானது. பாபத்தினின்று

எப்பொழுதுமே திரும்பினவராக இருக்கிறீர். நீர் ஞானத்தால் முதிர்ந்தவராகவும் தர்மங்களை அறிந்தவராகவும் இருக்கிறீர். உம்மிடம் நான் விடைபெற்றுக்கொள்ளுகிறேன். உமக்கு க்ஷேமம் உண்டாகட்டும். தர்மமானது உம்மைப் பாதுகாக்கட்டும். தார்மிகர்களுள் சிறந்தவரே! நீர் தர்மத்தில் தவறாமையைச் செய்வீராக' என்று கூறினன். வியாதர், அஞ்சலி செய்துகொண்டு அவனைப்பார்த்து 'ஆகுக' என்றே சொன்னர். பிறகு, பிராம்மணோத்தமன் அவரைப் பிரதக்ஷிணம்செய்து புறப்பட்டான். அந்தப் பிராம்மணன் தன் வீட்டை அடைந்து நல்ல நியமத்துடன்கூடியவனுகக் குருடர்களாயிருக்கிற தாய் தந்தையருக்கு அப்பொழுது நியாயப்படி பணிவிடைகளையெல்லாம் செய்தான். யுதிஷ்டிரா! தார்மிகர்களுள் சிறந்தவனே! ஐயா! எந்தத் தர்மத்தைப்பற்றி என்னை வினவினையோ அவை அனைத்தும் மிச்சமின்றி உனக்கு உரைக்கப்பட்டன. ஸாதுக்களுள் சிறந்தவனே! பதிவ்ரதை பிராம்மணன் இவர்களின் மகிமையும் தர்மவ்யாதரால் சொல்லப்பட்ட தாய்தந்தையர்களுடைய சுச்ரூஷையும் உனக்குச் சொல்லப்பட்டன' என்று சொன்னர். யுதிஷ்டிரர், 'பிராம்மணரே! எல்லாத்தர்மங்களையும் அறிந்தவர்களுள் சிறந்தவரே! முனிவர்களுள் மிகுந்த மேன்மைவாய்ந்தவரே! மிகவும் ஆச்சர்யமானதும் இதனினும் சிறந்ததில்லாததுமான இந்தத் தர்ம கதையானது தேவரீரால் உரைக்கப்பட்டது. கற்றறிந்தவரே! கேட்பதற்கு இன்பமாயிருப்பதனல் நீண்ட நேரமானது ஒரு க்ஷணம்போல எனக்குச் சென்றுவிட்டது. பகவானே! உத்தம தர்மத்தைக் கேட்கின்ற நான் (போதுமென்ற) திருப்தியை அடையவில்லை' என்று கூறினர்.

## இருநூற்றிருபதாவது அத்யாயம்.

## மார்க்கண்டேயஸமாஸ்யாபர்வம். (தொடர்ச்சி.)

(மார்க்கண்டேயர் ஆங்கிரஸருடைய உபாக்கியானத்தைச் சொல்லத் தொடங்கியதும், அங்கிரஸினுடைய புத்திரரான பிருஹஸ்பதியைத் தேவர்கள் அங்கிரஸினுடைய வசனத்தினல் குருவாக ஏற்றுக்கொண்டதும்.)

தர்மராஜர் தர்மங்களோடு கூடிய மங்களகரமான இந்தக் கதையைக்கேட்டு, அப்பொழுது, அந்த மார்க்கண்டேய மஹரிஷி

யைப் பார்த்து, 'முனிவரே! அக்னியானவன் எவ்வாறு கானகம் சென்றான். முற்காலத்தில், மஹா தேஜஸ்வியான அங்கிரஸானவர் அக்னி ஒளிந்துபோனபோது தாம் அக்னியாக இருந்து எவ்வாறு ஹவிஸுகளை (ஏற்றுத் தேவர்களிடம்) சேர்ப்பித்தார்? பகவானே! அக்னி ஒருவனே. அப்படியிருக்க, இந்த அக்னிக்குக் கர்மங்களில் பலவாயிருத்தல் காணப்படுகிறதே. இவை அனைத்தையும் அறிவதற்கு விரும்புகிறேன். எப்படி ஸுப்ரமண்யர் பிறந்தார்? எப்படி அவர் அக்னிக்குப் புத்திரரானார்? எப்படி அவர் ருத்திரரிடமிருந்து உண்டானார்? எப்படி கங்காதேவியினிடத்திலும் க்ருத்திகாதேவிகளிடத்திலும் தோன்றினார்? ப்ருகுகுலத்தில் பிறந்தவர்களுள் உத்தமரே! மஹாமுனிவரே! அவாநிரம்பின நான் இதனை உம்மிடமிருந்து உள்ளபடி கேட்க விரும்புகிறேன்' என்று மறுபடியும் வினவினார்.

மார்க்கண்டேயர், 'அக்னி கோபங்கொண்டு தவம்புரிவதற்காக வனத்தை அடைந்ததும், மஹிமை பொருந்தியவரான அங்கிரஸானவர் தாமே அக்னியானதுமாகிய இந்தவிஷயத்தில் அறிஞர்கள் பழமையான இந்த இதிஹாஸத்தை எடுத்துக் கூறுகின்றார்கள். மிக்க புஜபலமுள்ளவனே! முற்காலத்தில் மகாமகிமைபொருந்தின அங்கிரஸானவர் ஆஸ்ரமத்திலிருப்பவரும் தம் ஒளியினால் அக்னியைக் கீழ்ப்படுத்துகின்றவரும் ஜகத்தைத் தாபமடையும்படி செய்கின்றவரும் இருட்குவியலை நாசம் செய்கின்றவருமாகி உத்தமமான தவத்தைச் செய்தார். அவர் அப்பொழுது தாம் அக்னியாகி உலகமனைத்தையும் பிரகாசிக்கச் செய்தார். தவம்புரிகின்ற தேஜஸ்வியான அக்னியானவன் அவருடைய தேஜஸினால் மிக எரிக்கப்பட்டு மிக்க வாட்டமுற்று ஒன்றையும் அறியவில்லை. பிறகு, அக்னிபகவான், 'உலகங்களுக்கு ப்ரம்மாவினால் படைக்கப்பட்ட வேறு அக்னிபோல் அங்கிரஸ் பிரகாசிக்கிறார்' என்று நன்கு சிந்திக்கலானான். அந்த அக்னிபகவான், 'தவம் புரிந்துகொண்டிருக்கிற என்னுடைய அக்னித்தன்மையானது முழுதும் அழிந்துவிட்டதே. மீண்டு நான் எவ்வாறு அக்னியாவேன்?' என்று ஆலோசித்து, அக்னிபோல உலகங்களைத் தேஜஸால் எரிக்கிற மகாமுனிவரைப் பார்த்தான். அவன் அங்கிரஸைப் பார்த்தவுடன் பயந்து மெள்ள விலகினான். அப்பொழுது, அங்கிரஸானவர், அவனைப்பார்த்து, 'அக்னியே! உலகங்களைப் பாதுகாக்கிற தன்மையுள்ளவனான நீ விரைவாகவே அக்னியாகக்கடவாய்.

மூவுலகங்களிலும் ஸ்தாவரங்களிலும் ஜங்கமங்களிலும் இருப்பவனாக நீ அறியப்பட்டிருக்கிறாய். நீ முதலில் பிரம்மதேவரால் இருளைப் போக்குகிறவனாகப் படைக்கப்பட்டாய். உன் ஸ்தானத்தை அடைந்து சீக்கிரமாகவே இருளைப் போக்குவாயாக' என்று சொன்னார். அக்னி, 'நான் உலகத்தில் புகழ் அழிந்தவனாகிவிட்டேன். நீர் அக்னியாகிவிட்டீர். ஜனங்கள் உம்மைத்தான் அக்னியாக அறிவார்கள்; என்னை அறியமாட்டார்கள். நான் என்னிடமுள்ள அக்னித்தன்மையை உம்மிடத்தில் வைத்துவிடுகிறேன். நீர் முதலக்னியாக இரும். நான் இரண்டாவதான ப்ராஜாபத்யாக்னியாகவே இருப்பேன்' என்று சொன்னான். அங்கிரஸ், அக்னியைப்பார்த்து, 'அக்னிதேவனே! ப்ரஜைகளுக்கு ஸ்வர்க்கத்தை அடைவதற்கு ஸாதனமாயிருக்கிற புண்யத்தைச் செய். நீ இருட்டை விலக்குகிற அக்னியாகக்கடவாய். என்னையும் முதலில் உன்னுடைய மூத்தபிள்ளையாகச் செய்துகொள்' என்று சொன்னார். அங்கிரஸினுடைய அந்த வாக்கியத்தைக் கேட்டு, அக்னிபகவான் அப்படியே செய்தான். அரசனே! ப்ருஹஸ்பதி என்பவர் அந்த அங்கிரஸினுடைய புதல்வர். பாரத! தேவர்கள், அந்த அங்கிரஸ் அக்னிபகவானுக்கு மூத்தபிள்ளையாகிவிட்டாரென்பதை அறிந்து, அங்கிரஸை அடைந்து அந்தவிஷயத்தில் காரணத்தை வினவினார்கள். தேவர்களால் வினவப்பட்ட அந்த அங்கிரஸோ அந்தவிஷயத்தில் காரணத்தை உரைத்தார். அப்பொழுது, 'என் குமாரனை ப்ருஹஸ்பதியை நீங்கள் குருவாக அங்கீகரிக்கவேண்டும்' என்கிற அங்கிரஸினுடைய அந்த வசனத்தைத் தேவர்கள் ஏற்றுக்கொண்டார்கள். பலவிதமாயிருப்பவைகளும் மிக்க ஒளிபொருந்தியவைகளும் பல கர்மங்களால் பிரஸித்திபெற்றவைகளும் பிராம்மணங்களில் பற்பல பிரயோஜனங்களுடன் கூடியவைகளுமான அக்னிகளை இப்பொழுது உனக்கு உரைப்பேன்.

## இருநூற்றிருபத்தோராவது அத்யாயம்.

## மார்க்கண்டேயஸமாஸ்யாபர்வம். (தொடர்ச்சி.)

(மார்க்கண்டேயர் அக்னிகளுடைய உற்பத்தி முதலியவைகளைக் கூறியது.)

குருவம்சத்தைத் தாங்குபவனே! பிரம்மதேவருக்கு மூன்றாவது புத்திரரான அங்கிரஸுக்கு [1] ஸுபை என்கிற மனைவி இருந்தாள். அவளிடத்தில் உண்டான பிரஜைகளை என்னிடமிருந்து கேட்பாயாக. அரசனே! அந்த அங்கிரஸுக்கு ப்ருஹத்கீர்த்தி, ப்ருஹஜ் ஜ்யோதி, ப்ருஹத்ப்ரம்மா, ப்ருஹந்மனஸ், ப்ருஹந்மந்த்ரன், ப்ருஹத்பாஸன், ப்ருஹஸ்பதி என்று ஏழு புத்திரர்கள் உண்டானார்கள். [2] அவருடைய எல்லா மக்களுள்ளும், ரூபத்தினால் ஒப்பற்றவளான பானுமதிதேவியென்பவள் அங்கிரஸினுடைய மூத்த புதல்வியாக இருந்தாள். எல்லாப் பிராணிகளுக்குமே எவளிடத்தில் அப்பொழுது ராகம் (= அன்பு) உண்டாயிற்றோ, ராகமுண்டானதினால் எவளை ராகையென்று சொல்லுகிறார்களோ அந்தப்பெண் அங்கிரஸின் இரண்டாவது புதல்வி. எவளை ஜனங்கள் [3] ருத்ரருடைய புத்ரியென்றும், ஸூக்ஷ்மமாயிருப்பதால் பார்க்கத்தக்கவளும் பார்க்கத்தகாதவளுமாயிருப்பவளென்றும் சொல்லுகிறார்களோ அந்த ஸினீவாலி என்பவள் அங்கிரஸின் மூன்றாவது பெண். மகிமைபொருந்தியவளான எவளைக்கண்டு ஜனங்கள் ஆனந்தத்தால், 'குஹூ, குஹூ' என்ற சப்தத்தை வெளியிடுகிறார்களோ, எவளை ஒருத்தியென்றும் பலராயிருப்பவளென்றும் சொல்லுகிறார்களோ அந்தக்குஹூ என்பவள் அங்கிரஸின் நான்காவது பெண். ஹவிஸுகளால் ஜ்வாலையுடன்கூடியவளான ஹவிஷ்மதியென்பவள் அங்கிரஸினுடைய ஐந்தாவது பெண். பரிசுத்தையான அங்கிரஸினுடைய ஆறாவது பெண்ணை மஹிஷ்மதியென்று சொல்லுகிறார்கள். சிறந்த காந்தியுடன் கூடின மகாயாகங்களில் மகிமையுடன் ஜ்வலிப்பவளான மகாமதி என்று பிரஸித்திபெற்ற பெண்ணானவள் அங்கிரஸினுடைய ஏழாவது புத்திரி என்று சொல்லப்படுகிறாள். பிருஹஸ்பதிக்குப் பார்யையான சிறந்த கீர்த்தியுள்ள சாந்த்ரமஸீ என்பவள் பரிசுத்தமான ஆறு

---

1 'ஶ்ரத்தை' என்பதும் பாடம். 2 'தாஸு' என்பது மூலம்.

3 'காணப்பட்டும் காணப்படாமலுமிருத்தலால் ருத்ரருடைய புதல்வி போலிருப்பவளும்' என்பது பழையவுரை.

அக்னிகளையும் ஒரு பெண்ணையும் ஈன்றாள். பிரதானஹோமங்களிலும் தர்சபூர்ணமாஸத்திலும் எந்த அக்னிக்கு முதன்மையான ஹவிஸானது விதிக்கப்படுகிறதோ நான்கு மாதங்களில் செய்யத்தக்க (வைஸ்வதேவம், வருணப்ரகாஸம், ஸாகமேதம், சுநாஸீரீயம் என்கிற) நான்கு பர்வங்களிலும் அப்படியே அஸ்வமேதத்திலும் எந்த அக்னிக்கு இஷ்டிஸமீபத்தில் முதற்பசு இருக்கிறதோ அனேக காந்திகளுடன்கூடின ஜ்வாலைகளால் பிரகாசிக்கின்றவனும் ஒருவனாயிருப்பவனும் சிறந்த வீர்யமுள்ளவனும் அதிக ஒளிபொருந்தியவனுமான அந்த அக்னியானவன் சம்யு என்கிற பெயருள்ளவன். அவன் பிருஹஸ்பதியின் புதல்வன். சம்யுவுக்கு நிகரில்லாதவளும் ஸத்யஸ்வரூபியும் தர்மருக்குப் புதல்வியுமான ஸத்யை என்பவள் மனைவியானாள். அவனுக்கு நல்லகாந்தியுள்ளவனான அக்னியென்னும் ஒருபுத்திரனும் நல்ல வ்ரதமுள்ள மூன்று கன்னிகைகளும் உண்டானார்கள். எந்த அக்னியானவன் யாகத்தில் முதன்மைவாய்ந்த ஆஜ்யபாகத்தால் பூஜிக்கப்படுகிறானோ அந்த அக்னிக்குப் பரத்வாஜன் என்கிற அக்னியானவன் மூத்தபுத்திரனாகச் சொல்லப்படுகிறான். எந்த அக்னிக்கு எல்லாப் பௌர்ணமாஸங்களிலும் [1] ஸ்ருவத்தால் எடுக்கப்பட்ட ஆஜ்யரூபமான ஹவிஸானது கொடுக்கப்படுகிறதோ பரதன் என்கிற பெயர்கொண்ட அந்த அக்னியானவன் சம்யுவினுடைய இரண்டாவது குமாரன். எவர்களுக்கு அந்தப் பரதன் பர்த்தாவோ அப்படிப்பட்ட வேறு மூன்று கன்னிகைகளும் உண்டானார்கள். அந்தப் பரதனென்கிற அக்னிக்குப் பாரதனென்கிற ஒரு புத்திரனும் பாரதி என்கிற ஒரு புத்திரியும் உண்டானார்கள். பரதர்களுள் சிறந்தவனே! பாரதனென்கிற அக்னிக்குப் பெருமையுள்ளவனும் அப்படியே மிகவும் பூஜிக்கப்பட்டவனுமான பாவகனென்கிற புத்திரன் பிறந்தான். பரத்வாஜனென்கிற அக்னியினுடைய மனைவியான வீரையானவள் வீரனென்கிற அக்னியைப் பெற்றாள். பிராம்மணர்கள் சந்திரனுக்குச் செய்வதுபோல அந்த அக்னிக்கு ஆஜ்யத்தினால் ஹோமத்தை [2] உபாம்சுஸ்வரத்தோடு மந்திரங்களை உச்சரித்துச் செய்யவேண்டுமென்று சொல்லுகிறார்கள். எந்த அக்னியானவன் ஸோமனோடு கூட இரண்டாவது ஹவிஸினால் சேர்க்கப்படுகிறானோ அந்த வீரனென்கிற அக்னியானவன் ரதப்ரபு என்றும், ரதத்வானனென்றும், கும்பரேதஸென்றும் சொல்லப்படுகிறான். அந்த வீரனென்கிற

---

[1] வேறுபாடம். [2] பிறர் காதுகேளாமல் உச்சரிக்கப்படுவது.

அக்னியானவன் ஸரயு என்கிற பார்யையினிடத்தில் ஸித்தி என்கிற புத்திரனை உண்டுபண்ணினான். அவன் ஒளிகளாலே ஸூர்யனை நன்றாக மறைத்தான். [1] அக்னியைத் தேவதையாகக்கொண்ட யாகத்தைச் சிறப்பிக்கிற இந்த அக்னியானவன் நித்யம் அக்னியை அழைக்கிற மந்திரத்தில் நன்றாகக் கீர்த்தனம் செய்யப் படுகிறான். எந்த அக்னியானவன் எப்பொழுதும் கீர்த்தியினின்றும் வர்ச்சஸினின்றும் சோபையினின்றும் நழுவாமலிருக்கிறானோ அவன் அதனால் நிச்சயவனனென்று பிரஸித்திபெற்றான். இந்த அக்னி ப்ருஹஸ்பதிக்கு இரண்டாவது புத்திரன். வாக்குக்கு அபிமானி தேவதாரூபமான அந்த அக்னியானவன் பூமியை மாத்திரம் துதிக்கிறான். [2] அந்த நிச்சயவனக்னிக்குப் [3] பாப மில்லாதவனும் தோஷங்களால் விடுபட்டவனும் மிக்க பரிசுத்தி புள்ளவனும் ஜ்வாலையினால் ஜ்வலிப்பவனும் வாசகங்களுக்கு அர்த்தங் களோடு ஸம்பந்தத்தை உண்டுபண்ணுகிறவனுமான நிஷ்க்ருதி என்கிற வேறு பெயருள்ள ஸத்யனென்கிற அக்னியானவன் புத்திரனாக உண்டாயினான். தன்னை நிந்திக்காத பிராணிகளுக்கு எந்த அக்னியானவன் பாவத்திற்குப் பரிஹாரத்தைச் செய்கிறானோ அந்த அக்னியானவன் நிஷ்க்ருதி என்ற பெயருள்ளவன். அவன் [4] வீடு தோட்டம் முதலியவற்றில் சோபையை உண்டுபண்ணு கிறான். இவ்வுலகத்தில் வேதனையினால் பீடிக்கப்பட்ட ஜனங்கள் தாங்களே எந்த அக்னியினால் வேதனை பொறுக்காமல் அலறுகிறார் களோ அதிக வேதனையை உண்டுபண்ணுகிற அந்த ஸ்வனனென் கிற அக்னியானவன் அந்த நிஷ்க்ருதிக்குப் புதல்வன். எந்த அக்னியானவன் எல்லா உலகத்தாருடைய புத்தியையும் ஆக்ரமித் துக்கொண்டு நிற்கிறானோ அந்த அக்னியை அத்யாத்மஸ்வ ரூபத்தை அறிந்தவர்கள் விச்வஜித் என்கிற அக்னியாகச் சொல்லு கிறார்கள். பாரத! எல்லா உலகங்களிலும் பிராணிகளுடைய வயிற்றினுட்சென்று எந்த அக்னி புஜிக்கப்பட்ட அன்னத்தைப் பக்குவம் செய்கிறானோ அவன் யஜ்ஞத்தில் விச்வபுக் என்கிற பெய ருள்ளவனாக எண்ணப்பட்டிருக்கிறான். இந்த அக்னியானவன் பிரம்மசர்யத்துடன் கூடியவனும் மனத்தை அடக்கியவனும் எப் பொழுதும் அதிக ஒளியுள்ளவனுமாயிருக்கிறான். இந்த அக்னியைப்

[1] வேறுபாடம். [2] வேறுபாடம்.

[3] பொருள் இரட்டித்தலால் ஒருசொல் விடப்பட்டது.

[4] வேறுபாடம்.

பிராம்மணர்கள் [1] பாகயஜ்ஞங்களில் பூஜிக்கிறார்கள். பரிசுத்தமான [2] கோமதி என்கிற நதியை மனைவியாக உடைய விச்வபுக் என்கிற அக்னியில் தர்மத்தை அனுஷ்டிப்பவர்களால் (இல்லறத்தாருக்குரிய) எல்லாக் கருமங்களும் செய்யப்படுகின்றன. அதிக உக்கிரமானவனும் ஜலத்தை எப்பொழுதும்குடிக்கிறவனுமான அந்தப்படபாக்கினியானவன் மேல்நோக்கின கதியுடன்கூடி உதானமென்கிற பெயரைப்பெற்று ஊர்த்வபாக் என்கிற பிராம்மணனாக இருக்கிறான். அவன் பிராண வாயுவுக்கு அபிமானியாக இருக்கிறான். எந்த அக்னிக்கு வீட்டில் நாள்தோறும் ஹவிஸின் வடபாதியிலிருந்து ஹவிஸானது எடுத்துக்கொடுக்கப்படுகிறதோ அந்த அக்னிக்குக் கொடுக்கும் அதனால் பிரம்மதேவர் திருப்தியடைகிறார். ஸ்விஷ்டக்ருத்தானது அந்த அக்னி ஸம்பந்தத்தால் ஸர்வோத்தமமென்று எண்ணப்படுகிறது. பிருகஸ்பதியென்ற அக்னியானவன் பொறுமையில்லாத பிராணிகளிடம் கோபரூபமாகத் தோன்றுகிறான். [3] அப்பொழுது கோபங்கொண்டவனுடைய தேகத்தில் உண்டாகிற வேர்வையை அந்த அக்னிக்குப் புத்ரிகையாக எண்ணுகிறேன். அவள் ஸ்வாஹையென்று பயங்கரியாகவும் குரூரையாகவும் எல்லாப் பிராணிகளிடமும் நிலைபெற்றிருக்கிறாள். ஸ்வர்க்கத்தில் ரூபத்தால் எந்த அக்னிக்கு ஸமனாக ஒருவனும் இல்லையோ நிகரில்லாமையால் இந்த அக்னியானவன் தேவர்களால் காமனென்று பெயரிடப்பட்டான். எந்த அக்னியானவன் உத்ஸாஹத்தினால் கோபத்தை அடக்கிக்கொண்டவனும் வில்லுள்ளவனும் மாலை அணிந்தவனும் தேரில் வீற்றிருப்பவனுமாகி யுத்தத்தில் பகைவர்களை நாசம் செய்கிறானோ அந்த அக்னியானவன் அமோகனென்று பெயருள்ளவன். [4] மகாபாக்யமுள்ளவனே! எந்த அக்னியை வேதத்தைப்ரவசனம்செய்கிற ஆசாரியர்கள் மோக்ஷவிஷயத்தில் ஹேதுவாக அறிகிறார்களோ மூன்று உக்தங்களாலே துதிக்கப்படுகிற உக்த்யனென்கிற அந்த அக்னியானவன் பரையென்கிற பெயருள்ள நான்காவது ப்ரம்மகலையை உண்டுபண்ணினான்.

---

[1] ஐந்து மஹாயஜ்ஞங்களில் பிரம்மயஜ்ஞம் நீங்கலான பித்ருயஜ்ஞம், தேவயஜ்ஞம், பூதயஜ்ஞம், மனுஷ்யயஜ்ஞம் ஆகிய நான்கு.

[2], [3], [4] வேறுபாடம்.

## [1] இருநூற்றிருபத்திரண்டாவது அத்யாயம்.

## மார்க்கண்டேயஸமாஸ்யாபர்வம். (தொடர்ச்சி.)

(மார்க்கண்டேயர் அக்னிகளின் உற்பத்திகளைக்கூறியது. தொடர்ச்சி.)

அந்த உக்தனென்கிற அக்னியானவன், 'கீர்த்தியினால் பிரம்மதேவருக்கு ஒப்பான தார்மிகனான புத்திரனை நான் அடையக்கடவேன்' என்கிற எண்ணத்துடன் புத்திரனுக்காக அனேக வருஷகாலம் கடுமையான தவம் செய்தனன். அவன் காச்யபனென்றும் வாஸிஷ்டனென்றும் பிராணனுக்குப் புத்திரனாக இருக்கிற பிராணனென்றும் அங்கிரஸினுடைய புத்திரனான ச்யவனனென்றும் த்ரிஷுவர்ச்சகனென்றும் சொல்லப்படுகிறான். அந்த உக்தாக்னியானவன் அப்படிப்பட்ட ஐந்து [2] மஹாவ்யாஹ்ருதிகளால் அப்பொழுது தியானம் செய்யப்பட்டு அதிக ஜ்வாலையுடன் கூடின அக்னிபோல் ஐந்துவர்ணமுள்ள [3] ப்ரபாவனன் என்கிற தேஜோமயமான புத்திரனைத் தோன்றினன். அந்த அக்னிக்கு நன்றாக ஜ்வலிக்கின்ற அக்னியானவன் சிரஸாக இருந்தனன். அப்படியே அந்த அக்னியினுடைய இரண்டு கைகளும் ஸூர்யனுக்கு ஒப்பாயிருந்தன. பாரத! தோலும் கண்களும் ஸ்வர்ணத்தின் காந்திபோன்ற காந்தி உடையவைகளாக இருந்தன. இரண்டு கணைக்கால்களும் கருமைநிறமுள்ளவைகளாக இருந்தன. ஐந்து நிறமுள்ளவனும் தவத்தினால் உண்டுபண்ணப்பட்டவனுமான அந்த அக்னியானவன் ஐந்து ஜனங்களால் உண்டுபண்ணப்பட்டிருப்பதால் பாஞ்சஜன்யனென்ற பெயருள்ளவனென்று கேள்வி. பிரகாசிக்கின்ற அந்த அக்னியானவன் ஐந்து வம்சங்களை உண்டுபண்ணுகிறவனானான். மிக்க தவத்தையுடைய அந்தப் பாஞ்சஜன்யாக்னியானவன் பதினாயிரம் வருஷம் தவஞ்செய்து கோரமான தக்ஷிணாக்னியை உண்டுபண்ணினான். அந்த அக்னியானவன் பித்ருக்களுக்குப் பிரஜைகளை உண்டுபண்ணினான். அவன் வேகத்தோடு ஆயுள்

[1] இந்த 222-வது அத்யாயம் தொடங்கி மூன்று அத்யாயங்கள் மிகக்கடினமாக இருப்பதாலும் கும்பகோணம் ஆசாரியர் பதிப்பில் வியாக்கியானமில்லாமையால் எவ்விதம் ஆலோசித்தும் திருப்திகரமாகப் பொருள்படாமையாலும் நீலகண்ட வ்யாக்கியான புத்தகபாடமே கொள்ளப்பட்டது.

[2] ஸோம், ஸாவம், ஸாவம், ஹோம், ஜநம் என்பன.

[3] ஜகத்தை ஸ்ருஷ்டி செய்கிறவன்.

முதலியவற்றை அபகரிக்கின்ற பகலிரவுகளுக்கு அபிமானிதேவதைகளான பிருகத்தையும் ரதந்தரத்தையும் முறையே தலையிலும் வாயிலுமிருந்தும், ருத்ரரை நாபியிலிருந்தும், இந்திரனைப் பலத்திலிருந்தும், [1] வாயுவையும் அக்னியையும் பிராணனிலிருந்தும் உண்டு பண்ணினன். இரண்டு கைகளால் [2] ப்ராக்ருதாநுதாத்தத்தையும் வைக்ருதாநுதாத்தத்தையும் மனத்தோடுகூடின இந்திரியாதிஷ்டான தேவதைகளையும் ஐந்து பூதங்களையும் இவ்வுலகில் உண்டு பண்ணினன்; இவைகளைப் படைத்த பிறகு, பித்ருக்களுக்கு ஐந்து புத்திரர்களையும் படைத்தான். ப்ருஹத்ரதனுக்கு ப்ரணிதியும் காஸ்யபனுக்கு மஹத்தரனும் அங்கிரஸென்கிற ச்யவனக்னிக்குப் பானுவும் ஸுவர்ச்சகனுக்குத் தீரனை ஸௌபரனென்கிற அக்னியும் பிராணனுக்கு அனுதாத்தனும் புதல்வர்களாக ஏற்பட்டார்கள். இவ்வாறாக இருபத்தைந்து அக்னிகள் விவரித்து உரைக்கப்பட்டனர். காந்தியுள்ளவர்களும் யஜ்ஞத்தில் கொடுக்கிற ஹவிஸை அபஹரிக்கிறவர்களும் முதன்மை வாய்ந்தவர்களுமான வேறு பதினைந்து [3] அஸுரர்களையும் ஸ்ருஷ்டித்தான். பாஞ்சஜன்யனென்று வேறு பெயருள்ள தபஸென்கிற அக்னியானவன் தேவர்களுடைய யஜ்ஞபாகத்தை அபஹரிக்கின்ற ஸுபீமன், அதிபீமன், பீமன், பீமபலன், அபலன் என்கிற இந்த ஐந்து அஸுரர்களையும் ஸ்ருஷ்டிசெய்தான். அந்தத்தபஸென்கிற அக்னியானவன் ஸுமித்ரன், மித்ரவந்தன், மித்ரஜ்ஞன், மித்ரவர்த்தனன், மித்ரதர்மா என்கிற இந்த அஸுரர்களையும் ஸ்ருஷ்டிசெய்தான். அந்தத் தப

---

[1] 'பிராணனைப் படைத்தபிறகு, வாயுவையும் அக்னியையும் படைத்தது' என்பது பழையவுரை.

[2] வேதங்களை உச்சரித்தற்குரிய ஸ்வரங்கள் உதாத்தம், அநுதாத்தம், ஸ்வரிதம், ப்ரசயம் என நான்கு; உதாத்தம் = எழுத்துக்களை உச்சரித்தற்குரிய கண்டம் தாலு முதலிய பதினோர் இடங்களில் மேற்பாகத்தால் உச்சரிக்கப்படுகிற உயிரெழுத்தினொலி. அநுதாத்தம் = அவற்றிலேயே கீழ்ப்பாகத்தாலுச்சரிக்கப்படும் உயிரெழுத்தினொலி. ஸ்வரிதம் = உதாத்தத்வம் அநுதாத்தத்வம் என்கிற இரண்டு வர்ண தர்மங்களும் கலந்து உச்சரிக்கப்படுகிற உயிரெழுத்தினொலி. ப்ரசயம் = மேலுமில்லாமல் கீழுமில்லாமல் நடுத்தரமாக உச்சரிக்கப்படுகிற உயிரெழுத்தினொலி. மந்திரத்தில் வருவது பிராகிருதானுதாத்தம். யஜுர்வேதத்தைச் சார்ந்த சதபதப்ராம்மணத்தில் வருவது வைக்ருதானுதாத்தம்.

[3] 'தேவாந்' என்பது மூலம்.

ஸென்ற அக்னியானவன் ஸுரப்ரவீரன், வீரன், ஸுரேசன், ஸுவர்ச்சஸ், ஸுரஹந்தா என்கிற இந்த ஐந்து அஸுரர்களை யும் உண்டுபண்ணினன். மூன்று விதமாக தனித்தனியாக இருக் கின்ற இந்த ஐந்து ஐந்து அஸுரர்களும் ஸ்வர்க்கத்தில் நிலைபெற்ற வர்களாக இருந்துகொண்டு யாகத்தால் தேவர்களை ஆராதிக்கிற வர்களுடைய யாகத்தைக் கவருகிறார்கள். இவர்கள் மஹிமை வாய்ந்த ஹவிஸையும் நாசம் செய்கிறார்கள். அக்னிகளோடு வைரத் தினல் இந்த அஸுரர்கள் ஹவிஸை நாசம்செய்கிறார்கள்; கவர்ந் தும் கொள்ளுகிறார்கள். ஸமர்த்தர்களால் பஹிர்வேதியில் அவர் கள் பெற்றுக்கொள்ளவேண்டிய ஹவிர்ப்பாகமானது நன்கு அமைக்கப்பட்டிருந்தது. எந்த யாகசாலையில் அந்தர்வேதியில் அக்னியானது நிலைபெற்றிருந்ததோ அந்த இடத்தில் இந்த அஸு ரர்கள் கிட்ட நெருங்குகிறதில்லை. இரண்டு சிறகுகள்போன்ற இரண்டு மண்டலாகாரமான வேதிகளோடுகூடின அந்தச்சயனமா னது நடந்துவரும் தருணத்தில் இவர்கள் சயனம்செய்கின்ற யஜ மானனுடைய ஆஜ்யத்தையும் ஹவிஸையும் அபகரிக்க முயன்றார் கள். பிறகு, ராக்ஷஸர்களை ஹிம்ஸிக்கின்ற மந்திரங்களால் தணிக்கப்பட்டவர்களான இந்த அஸுரர்கள், யஜ்ஞ ஸம்பந்த மான ஹவிஸை அபகரிக்கவில்லை. தபனென்ற அக்னியினுடைய புத்திரனான ப்ருஹதுக்தன் பூமியை அடைந்தான். அந்த ப்ருஹதுக்தன் பூமியில் ஸாதுக்களால் அக்னிஹோத்திரஹோமம் செய்யும் தருணத்தில் பூஜிக்கப்படுகிறான். தபனென்ற அக்னிக்கு ரதந்தரனென்கிற அக்னியானவன் புத்திரனாகச் சொல்லப்படுகிறான். மித்ரவிந்தனென்கிற இந்த ரதந்தராக்னியின் பொருட்டு அத் வர்யுக்கள் ஹவிஸைக் கொடுக்கத்தக்கதென்று அறிகிறார்கள். மிக்க கீர்த்திமானான தபாக்னியானவன் புத்திரர்களோடுகூட நிகரற்ற ப்ரீதியுள்ளவனாகி ஸந்தோஷமடைந்தான்.

---

## இருநூற்றிருபத்துமூன்றாவது அத்யாயம்.

## மார்க்கண்டேயஸமாஸ்யாபர்வம்.* (தொடர்ச்சி.)

(மார்க்கண்டேயர் அக்னிகளின் வம்சத்தை விஸ்தாரமாகக் கூறியது.)

பெரிய நியமங்களால் பிறந்தவனும் பரிசுத்தனும் புஷ்டி மதி என்கிற பெயருள்ளவனுமான பரதனென்கிற அக்னியான

வன் ஸந்தோஷமுள்ளவனுகிப் புஷ்டியைக் கொடுக்கிறான். இவன் எல்லா ப்ரஜைகளையும் பரிப்பதனால் (=போஷிப்பதனால்) பரத னென்று சொல்லப்படுகிறான். தபாக்னியின் மூன்றாவது புதல்வ வனான நிர்விகல்பஸமாதிரூபமான சிச்சக்திபூஜையில் பற்றாத லுள்ள சிவாக்னியானவன் துக்கத்தால் ஹிம்ஸிக்கப்பட்ட எல்லா ருக்கும் எப்பொழுதும் மங்களத்தை உண்டுபண்ணுகிறான். தப ஸென்கிற அக்னிக்கு விருத்தியடைந்திருக்கிற பெருந்தவத்தையும் ஐச்வர்யத்தையும் கண்டு அந்த ஐச்வர்யத்தை அடைவதற்குப் புத்திமானான புரந்தரன் என்கிற புத்திரன் உண்டானான். தபாக்னி யினிடத்தினின்று ஊஷ்மா என்கிற அக்னி உண்டானான். அந்த அக்னியானவன் பூதங்களில் உஷ்ணத்திற்காக அனைவர்களா லும் காணப்படுகிறான். மனு என்கிற அக்னியும் ப்ராஜாபத் யத்தை உண்டுபண்ணினான். பிறகு, வேதங்களின் கரைகடந்த வர்களான பிராம்மணர்கள் சம்பு என்கிற அக்னியைத் தபாக்னி யினுடைய நான்காவது புத்திரனாகச் சொல்லுகிறார்கள். பிராம் மணர்கள் ஜ்வலிப்பவனும் அதிக காந்தியுள்ளவனுமான ஆவஸத்தி யனைத் தபாக்னியினுடைய ஐந்தாவது புதல்வனாகச் சொல்லு கிறார்கள். மகாபாக்கியசாலியே! அஸ்தமனகாலத்தில் களைத்த வனான ஸூர்யன் எந்த அக்னியாகிறானோ, எவன் கோரர்களான அஸுரர்களையும் பலவகை மனிதர்களையும் உண்டுபண்ணினானோ அந்தத் தபாக்னியானவன், பிறகு, இவ்வுலகில் பலத்தை உண்டு பண்ணுகிறவர்களும் ஸ்வர்ணத்திற்கு ஒப்பான ஒளியுள்ளவர்களும் ரஸத்தை அடையத்தக்கவர்களுமான ஐந்து அக்னிகளை உண்டு பண்ணினான். ப்ராஜாபத்யமானது தபாக்னியினிடத்தினின்று மனு என்கிற புத்திரனை உண்டுபண்ணியது. அங்கிரஸானவன் பானுவை உண்டுபண்ணினான். வேதங்களின் கரை அடைந்தவர் களான ப்ராம்மணர்கள் அந்தப் பானுவை ப்ருஹத்பானுவென்று சொல்லுகிறார்கள். ஸூர்யனிடமிருந்து உண்டானவளும் நல்ல ப்ரஜைகளுடன்கூடியவளுமான ப்ருஹத்பாஸை என்பவள் பானு வினுடைய மனைவி. அவ்விருவர்களும் ஆறு புத்திரர்களை உண்டு பண்ணினார்கள். அவர்களுடைய ப்ரஜாவிதியைக் கேட்பாயாக. எந்த அக்னியானவன் பலஹீனர்களான பிராணிகளுக்கு உயிரைக் கொடுக்கிறானோ, பலதன் என்கிற அந்த அக்னியைப் பானுவினு டைய முதற் புத்திரனாகச் சொல்லுகிறார்கள். எந்த அக்னி யானவன் சாந்தியில்லாத பிராணிகளிடம் பயங்கரமான கோப

மாகிருனே அந்த மன்யுமான் என்கிற அக்னியானவன் பானுவினுடைய இரண்டாவது புத்திரன். தர்சத்திலும் பௌர்ணமாஸத்திலும் இவ்வுலகில் எந்த அக்னிக்கு ஹவிஸானது சொல்லப்படுகிறதோ அவன் விஷ்ணுவென்று பெயருள்ளவன். விஷ்ணு என்கிற பெயருள்ள அக்னியானவன் த்ருதிமானென்கிற அங்கிரஸாகச் சொல்லப்படுகிறான். எந்த அக்னிக்கு இந்திரனோடு சேர்ந்து ஆக்ரயண ஹவிஸானது விதிக்கப்பட்டிருக்கிறதோ அந்த ஆக்ரயணனென்கிற அக்னியானவன் பானுவினுடைய வம்சத்திலேயே பிறந்தவன். சாதுர்மாஸ்யங்களில் நித்தியமாக இருக்கிற ஆக்நேய முதலிய ஹவிஸுகளுக்கு எவன் உத்பத்திஸ்தானமோ அந்த அக்னியானவன் அக்ரஹன் என்று பெயருள்ளவன். நான்கு புத்திரர்களோடுகூடின ஸ்துபனென்கிற அக்னியானவன் பானுவினுடைய வம்சத்திலேயே தோன்றினன். பானுவென்கிற வேறு பெயர் கொண்ட மனுவினுடைய மூன்றாவது மனைவியான நிசை என்கிறவள் ரோஹிணியென்ற பெண்ணையும் அக்னி ஸோமன் இருவரையும் மற்ற ஐந்து அக்னிகளையும் உண்டுபண்ணினள். சாதுர்மாஸ்யங்களில் சிறந்த ஹவிஸினால் எந்த அக்னி பூஜிக்கப்படுகிறானே பர்ஜன்யனுடன்கூடியவனும் காந்தியுள்ளவனுமான அந்த அக்னியானவன் வைஸ்வானரன் என்று பெயருள்ளவன். இந்த உலகத்திலுள்ள எல்லாப் பிராணிகளுடைய ஆஹாரங்களும் எவனால் பக்குவம் செய்யப்படுகின்றனவோ அந்த அக்னியானவன் விஸ்வபதி யென்று பெயர்பெற்ற மனுவினுடைய இரண்டாவது புதல்வன். எந்த அக்னியில் ஹோமஞ்செய்யப்பட்ட ஆஜ்யமானது பயனுள்ளதாகிறதோ சிறந்த ரோஹிணியென்கிற அவள் ஸ்விஷ்டக்ருத் என்று பெயருள்ள மனுவின் புத்திரி. கன்னிகையான அந்த ரோஹிணி யென்பவள் ஹிரண்யகசிபுவின் புதல்வியாயிருந்து தன் கர்மதோஷத்தால் அவனுக்கே பார்யையானள். அவள்தான் அந்த அக்னி. அவள் அந்த ப்ரஜாபதி. பிராணிகளுடைய தேகத்தை அடைந்து எந்த அக்னியானவன் பிராணன் முதலிய வாயுக்களை நடைபெறச் செய்கிறானே, சப்த ஸ்வரூபத்தை க்ரஹிப்பதற்கு ஸாதனமாயுமிருக்கிறானே அந்த அக்னியானவன் ஸன்னிஹிதன் என்று பெயருள்ளவன். அர்ச்சிராதிமார்க்கத்தையும் தூமாதிமார்க்கத்தையும் அடையச்செய்கிறவனும் பிரகாசிப்பவனும் அக்னியைத் தாங்குகிறவனும் பாவமற்றவனும் காம்ய கர்மங்களைச் செய்பவனும் கோபத்தை அடைந்திருப்பவனுமான அந்த அக்னியானவன் கபிலனென்று

வும் முதன்மைவாய்ந்ததுமான அந்த ஸஹாக்னியானது தேவர்களால் நித்யம் தேடப்படுகிறது. அந்த ஸஹாக்னியானது வருகின்ற தனக்குப் பௌத்திரனன நியதனென்கிற சவாக்னியைக் கண்டு தன்னைத் தொட்டுவிடுமென்கிற பயத்தினல் ஸமுத்திரத்தில் பிரவேசித்தது. தேவர்கள் அந்த அக்னியைத் திசைகளில் தேடிக்கொண்டு அந்த ஸமுத்திரத்திலும் சென்றார்கள். பிறகு, ஸஹாக்னியானது, தீவ்ரமான தவத்தைச் செய்துகொண்டிருக்கிற அதர்வாவைப்பார்த்து, 'தேவர்களுக்கு ஹவிஸை நீ கொண்டுபோ. வீரனே! நான் மிக்க பலமற்றவனுக இருக்கிறேன். இதற்குமேல் நீ மஞ்சள்நிறமான கண்களுள்ள அக்னியின் தன்மையை அடைவாயாக. இந்தப்ரியத்தை எனக்குச்செய்' என்ற சொல்லைச் சொல்லியது. ஆபமென்கிற ஸஹாக்னியானது அதர்வாவை நோக்கி இவ்வண்ணம் கட்டளையிட்டு அவ்விடத்தினின்று வேறிடத்தை அடைந்தது. மீன்கள் அந்த ஸஹாக்னி ஒளிந்த இடத்தை உரைத்தன. கோபங்கொண்ட ஸஹாக்னியானது, அந்த மீன்களைப் பார்த்து, 'நீங்கள் பிராணிகளுக்குப்பலபலவழிகளாலே உணவாவீர்கள்' என்று சொல்லியது. அப்படியிருந்தும், அந்த ஸஹாக்னியானது, அதர்வாவைப் பார்த்து, 'நீ தேவர்களுக்கு ஹவிஸைக்கொண்டுபோ' என்று உரைத்தது. ஹிதமான தேவர்களுடைய வாக்யத்தினல் அந்த அதர்வா மிகவும் நல்ல வசனங்களால் வேண்டப்பட்டும், ஹவிஸைக் கொண்டுபோவதற்கும் சரீரத்தைத் தாங்குவதற்கும் விரும்பவில்லை. அது சரீரத்தையும் விட்டுவிட்டது. அது அந்தச் சரீரத்தை விட்டு அப்பொழுது பூமியில் பிரவேசித்தது. [1] பூமியைத் தொட்டுத் தனித்தனியாகத் தாதுப் பொருள்களையும் மிகுதியாகப் படைத்தது. சீயிலிருந்து கந்தத்தையும் தேஜஸையும் எலும்புகளிலிருந்து தேவதாருவையும் கபத்திலிருந்து ஸ்படிகங்களையும் அப்படியே அதனுடைய பித்தத்தினின்று மரகதங்களையும் சரீரத்தினுள்ளிருக்கிற ஈரலிலிருந்து உருக்கையும் உண்டுபண்ணியது. அதனல் உண்டுபண்ணப்பட்ட காஷ்டங்களாலும் பாஷாணங்களாலும் உலோகங்களாலுமே பிரஜைகள் பிரகாசித்தன. அதனுடைய நகங்கள் மேகஸமூகமாயின. நரம்புக்கூட்டங்கள் பவளங்களாயின. அரசனே! இதனுடைய சரீரத்தினின்று பற்பலவிதமான ரஸம், பொன், வெள்ளி முதலிய மற்றத்

[1] பூமியுடன் கலந்து.

தாதுக்களும் உண்டாயின. இவ்வண்ணம் சரீரத்தைவிட்டு அதர்வா ஒப்பற்றதான தவத்தில் நிலைபெற்றிருந்தான். அப்பொழுது, ப்ருகு அங்கிரஸ் முதலியவர்களால் மீண்டும் ஸாமர்த்தியத்தினால் ஸமாதியிலிருந்து நழுவும்படி செய்யப்பட்ட அந்த அதர்வாவான வன், தவத்தினால் விருத்தியடையும்படி செய்யப்பட்டவனும் அதிக தேஜஸுள்ளவனுமாகி மிகவும் ஜ்வலித்தான். அதர்வா ரிஷிகளைப்பார்த்துப் பயத்தினால் மஹாஸமுத்திரத்தில் பிரவேசித் தான். அந்த அக்னி ஒளித்துப்போனவுடன், உலகமானது பயந்து அந்த அதர்வரிஷியை அடைந்தது. தேவர்கள் முதலியவர்கள் அந்த அதர்வரிஷியையே பூஜித்தார்கள். அதர்வரிஷியானவர், எல்லாப் பிராணிகளும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே, ஸமுத்திரத்தை [1] நன்றாகக்கடைந்தார்; அதனால், அக்னியைப் பார்த்துத் தாமே உலகங்களைப் படைத்தார். முந்தி ஓடி ஒளிந்த அதர்வாக்னியானது, பகவானை அதர்வரிஷியினால் அழைக் கப்பட்டதாக எல்லாப் பிராணிகளாலும் கொடுக்கப்படுகிற ஹவிஸை எப்பொழுதும் கொண்டுபோகிறது. அந்தக்கடலில் வஸிப்பவனும் பற்பல தேசங்களில் ஸஞ்சரிக்கின்றவனுமான அதர்வாக்னியானவன் இவ்வண்ணம் வேதங்களில் சொல்லப்பட்ட பல அக்னிகளை உண்டுபண்ணினான். ஸிந்துநதம், ஐந்து நதிகள், தேவிகை, ஸரஸ்வதி, கங்கை, சதகும்பை, ஸரயு, கண்டகி, சர்மண் வதி, மஹி, மேத்யை, மேதாதிதி, தாம்ராவதி, வேத்திரவதி, கௌசிகி, மூன்று நதிகள், தமஸை, நர்மதை, கோதாவரி, வேணை, உபவேணை, பீமை, வடவை, பாரதி, ஸுப்ரயோகை, காவேரி, முர்முரை, துங்கவேணை, கிருஷ்ணவேணை, கபிலை, சோணம் ஆகிய இந்த நதிகள் முற்கூறப்பட்டுள்ள அக்னிகளுக்கு மாதாக்கள். அத்புதாக்னிக்கு ப்ரியை என்கிற மனைவி இருந்தாள். அந்த அத்புதாக்னிக்கு [2] விபூரஸி என்கிற புத்திரனுண்டானான். எத் தனை அக்னிகள் கூறப்பட்டிருக்கின்றனவோ ஸோமயாகங்கள் அத்தனையென்றே யாஜ்ஞிகர்களிடம் பிரஸித்தி பெற்றிருக்கின் றன. அத்ரியினுடைய வம்சத்தில் பிரம்மதேவனுடைய மனத்தி னின்று ப்ரஜைகள் உண்டாயின. புத்திரர்களை ஸ்ருஷ்டிக்க எண் ணங்கொண்ட அத்ரியானவர் அந்த அக்னிகளையே மனத்தில் தரித்தார். அந்த அத்ரி என்கிற பிராம்மணனுடைய தேகத்தி

---

[1] வேறுபாடம். [2] 'விபு' என்பது இங்கிலிஷ் மொழிபெயர்ப்பு.

னின்று அக்னிகள் வெளிப்புறப்பட்டன. மனத்தினால் இவ்விதமென்று நினைக்கமுடியாதவைகளும் காந்தியுள்ளவைகளும் இருளைப் போக்குகின்றவைகளும் மஹாத்மாக்களுமான அப்படிப்பட்ட இந்த அக்னிகள் உண்டானவிதம் இவ்வாறு என்னால் உனக்கு உரைக்கப்பட்டது. அத்புதாக்கினியினுடைய மகிமையானது எப்படி வேதங்களில் சொல்லப்பட்டிருக்கிறதோ அப்படிப்பட்ட மகிமையை எல்லா அக்னிகளுக்குமிருப்பதாக நீ தெரிந்துகொள். இந்த அக்னிகளுள் ஹோமம் செய்யப்பட்ட ஹவிஸைப் புஜிப்பதும் பகவானுமான இந்த அங்கிரஸ் என்ற ஓர் அக்கினியே அக்னிகளுள் முதன்மைவாய்ந்ததென்று அறியவேண்டும். எப்படி ஜ்யோதிஷ்டோமமானது உத்பித் முதலிய பல யாகங்களாக வெளியில் வந்ததோ அப்படியே பிரம்மாவின் புத்திரனை அங்கிரஸினிடத்தினின்று அக்னியானது பலவித அக்னிகளாக வெளிப்பட்டது. பற்பல மந்திரங்களால் அர்ச்சிக்கப்பட்டதாக மனிதர்களால் ஹோமம் பண்ணப்பட்ட ஹவிஸுகளை வஹிக்கிற மிக்க பெரிதான இந்த அக்னிகளுடைய வம்சமானது என்னால் உரைக்கப்பட்டது.

---

## இருநூற்றிருபத்தைந்தாவது அத்யாயம்.

## மார்க்கண்டேயஸமாஸ்யாபர்வம். (தொடர்ச்சி.)

**(மார்க்கண்டேயர் ஸுப்ரம்மண்யருடைய உத்பத்தியைச் சொல்லத் தொடங்கியதும், தேவஸேனைகளுக்கு நாயகன் அமைப்பதற்காகக் கவலையுற்ற இந்திரன் மானஸபர்வதத்தில் ஒரு கன்னிகையைப் பார்த்ததும், அவளுடைய குலம் விருப்பம் முதலியவற்றை வினவியதும்.)**

தோஷமற்றவனே! அக்னிகளுடைய பற்பலவிதமான வம்சங்கள் உனக்கு உரைக்கப்பட்டன. குருவம்சத்தில் பிறந்தவனே! சிறந்த புத்தியுள்ளவரான ஸுப்ரம்மண்யருடைய உத்பத்தியையும் கேட்பாயாக். அளவுகடந்த சௌர்யமுள்ளவரும் ஸப்தரிஷிகளின் மனைவிகளாலே உண்டுபண்ணப்பட்டவரும் பிராம்மணர்களுக்கும் வேதத்திற்கும் ஹிதத்தைச் செய்பவரும் புகழைப் பெருக்குகிறவரும் அத்புதமென்ற அக்னியினுடைய அத்புதமான புத்ரருமான ஸுப்ரம்மண்யரைப்பற்றிச் சொல்லுவேன். முற்காலத்தில், தேவாஸுரர்கள், ஒரு

வரோடொருவர் அடித்துக்கொண்டு போர் புரிந்தார்கள். அந்த யுத்தத்தில் பயங்கரமான ரூபமுள்ள அஸுரர்கள் எப்பொழுதுமே தேவர்களை ஜயித்தார்கள். சத்ருபட்டணங்களை அழிப்பவனும் மகாபலசாலியுமான அந்த இந்திரன் அந்த அஸுரர்களால் தன் சேனை பெரும்பாலும் கொல்லப்படுகின்றதைக் கண்டு, ஸைனிகர்களுக்கு நாயகன் வேண்டுமென்று, 'மகாபலசாலியான எவன் அஸுரர்களால் தேவஸேனை முறிய அடிக்கப்பட்டதைக் கண்டு வீரியத்தைக் கைக்கொண்டு (தேவஸேனையைப்) பாதுகாப்பனே அந்த ஆண் பிள்ளை என்னால் அறியத்தக்கவன்' என்று ஆலோசித்தான். இந்த விஷயத்தை அதிகமாகச் சிந்திக்கின்ற அந்த இந்திரன், மானஸமென்கிற மலையை அடைந்து, அப்பொழுது, 'என்னை நோக்கி ஒருவன் நேரில் ஓடிவரட்டும்; ஒரு புருஷன் என்னைக் காக்கட்டும்; எனக்குக் கணவனைக் கொடுக்கட்டும்; அல்லது, எனக்குத் தானே பர்த்தாவாகட்டும்' என்று ஒரு ஸ்திரீயினால் வெளியிடப்பட்ட கோரமான தீனஸ்வரத்தையும் கேட்டான். புரந்தரனே அந்தக் கன்னிகையைப் பார்த்து, 'நீ பயப்படாதே. உனக்குப் பயமில்லை' என்று இவ்வண்ணம் சொல்லி, பிறகு, அந்தக் கன்னிகையைக் கையில் பிடித்துக்கொண்டு, எதிரில் நிற்கிறவனும் கிரீடமுள்ளவனும் கதாயுதத்தைக் கையிலேந்தியவனும் உலோகங்களுடன்கூடின மலைபோன்றவனுமான கேசியைப் பார்த்தான். பிறகு, இந்திரன், அவனைப் பார்த்து, 'கெட்ட செய்கையுள்ளவனே! யாது காரணத்தால் இந்தக் கன்னிகையை அபஹரிக்க விரும்புகிறாய்? என்னை வஜ்ரபாணியான இந்திரனென்று தெரிந்துகொள். இந்தப் பெண்ணைத் துன்பம்செய்வதினின்று ஒழிந்துவிடுவாயாக' என்று சொன்னான். கேசி, 'இந்திரனே! பாகனென்னும் அஸுரனைக் கொன்றவனே! நீ உயிரோடு உன் பட்டணத்தைக்குறித்துச் செல்லவிரும்பினால் இந்தப் பெண்ணை நீயே விட்டுவிடு. இவள் என்னால் வேண்டப்பட்டிருக்கிறாள்' என்று சொன்னான். கேசியானவன் இவ்வண்ணம் உரைத்து இந்திரனைக் கொல்வதற்காகக் கதாயுதத்தை எறிந்தான். இந்திரன், வருகின்ற அந்தக் கதாயுதத்தை வஜ்ரத்தால் நடுவில் வெட்டி எறிந்தான். பிறகு, கோபங்கொண்ட கேசியானவன், பெரிய மேகத்திற்கொப்பானதும் ஜ்வாலைகளுடன்கூடின நெருப்பினால் சூழப்பட்டதுமான மலையின் சிகரத்தை இந்திரன்மீது எறிந்தான். அரசனே! மஹேந்திரன், அப்பொழுது, தன்னை

நோக்கி வருகின்ற மலையின் சிகரத்தை நன்றாகப்பார்த்து வஜ்ரா யுதத்தால் பிளந்தான். அது பூமியில் விழுந்தது. கீழே விழு கின்ற அந்த மலையின் சிகரத்தால் அப்பொழுது கேசி அடிக்கப் பட்டான். மிக்க துன்பமடையும்படி செய்யப்பட்ட கேசியான வன் மகாபாக்கியவதியான அந்தக் கன்னிகையை விட்டுவிட்டு ஓடி விட்டான். அந்த அஸுரன் ஓடிப்போன பிறகு, இந்திரன் அக் கன்னிகையைப் பார்த்து, 'மங்களகரமான முகமுள்ளவளே! நீ யார்? யாருடைய பெண்? இந்த இடத்தில் என்ன செய்கிறாய்?' என்று கேட்டான்.

---

## இருநூற்றிருபத்தாறுவது அத்யாயம்.

## மார்க்கண்டேயஸமாஸ்யாபர்வம். (தொடர்ச்சி.)

(கன்னிகை தன்னையும் தன் விருப்பத்தையும் தெரிவித்ததும், இந்திரன் கன்னிகைக்குத் தகுந்த கணவனைப்பற்றி வேண்ட, பிரம்மதேவர் மறுமொழி கூறியதும், அக்னி ஸப்தரிஷிக ளுடைய மனைவிகளை விரும்பி அவர்கள் கிடை யாமையால் வனஞ்சென்றதும், ஸ்வாஹாதேவி அக்னியை வசப்படுத்த நிச்சயித்ததும்.)

கன்னிகை, 'நான் கச்யபரென்னும் ஸ்ருஷ்டி கர்த்தரின் புதல்வி; தேவஸேனையென்று பிரஸித்திபெற்றவள். தைத்யஸேனை என்பவள் என் ஸகோதரி. அவள் முந்திக் கேசியினால் அபஹரிக்கப் பட்டாள். ஸகோதரிகளான நாங்களிருவரும் ஸ்ருஷ்டிகர்த்தரிடம் அனுமதி பெற்றுக்கொண்டு விளையாடுவதற்காகத் தோழிகளுடன் மானஸபர்வதத்திற்கு வந்துகொண்டிருந்தோம். பாகாஸுரனைக் கொன்றவனே! கேசி என்கிற மகாஸுரன் எங்களிருவரையும் அப ஹரிப்பதற்கு எப்பொழுதும் விருப்பங்கொண்டிருந்தான். தைத்ய ஸேனை இவனை விரும்பினாள்; நான் விரும்பவில்லை. பகவானே! அவள் இவனால் கொண்டுபோகப்பட்டாள். உன்பலத்தால் நான் விடுவிக்கப்பட்டேன். தேவேந்திரனே! ஒருவராலும் ஜயிக்க முடியாதவனும் உன்னால் குறிப்பிடப்பட்டவனுமான பர்த்தாவை விரும்புகிறேன்' என்று சொன்னாள். இந்திரன், 'நீ எனக்குச் சிறிய தாயார் பெண். என் தாய் தக்ஷரின் மகள். நான் உன்னால் கூறப் படுகின்ற உன் பலத்தைக் கேட்க விரும்புகிறேன்' என்று சொல்ல,

கன்னிகை, 'மிக்க தோள்வலியமைந்தவனே! நான் பலமில்லாதவள். பிதாவினுடைய வரத்தினால் தேவர்களாலும் அஸுரர்களாலும் நமஸ்கரிக்கப்பட்ட சிறந்த பலமுள்ள 'பதியானவன் எனக்கு இனி உண்டாகப்போகிறான்' என்று சொல்ல, இந்திரன், 'தேவி! உன் கணவனுக்கு எவ்விதமான பலமுண்டாகும்? இகழப்படாதவளே! நான் உன்னுடைய இந்த வாக்கியத்தைக் கேட்க விரும்புகிறேன்' என்று சொல்ல, கன்னி, 'எவன் தேவர்களையும் அஸுரர்களையும் யக்ஷர்களையும் கிந்நரர்களையும் உரகர்களையும் ராக்ஷஸர்களையும் துஷ்டர்களான தைத்யர்களையும் ஜயிப்பவனோ, எவன் மகாவீர்யமுள்ளவனோ, எவன் மகாபலசாலியோ, எவன் உன்னுடன் சேர்ந்த எல்லாப் பிராணிகளையும் ஜயிப்பவனோ அப்படிப்பட்டவனும் பிராம்மணர்களுக்கு ஹிதத்தைச் செய்பவனும் கீர்த்தியைவளர்க்கிறவனுமான புருஷன் எனக்குப் பர்த்தாவாக உண்டாவான்' என்று சொன்னாள்.

இந்திரன் அவளுடைய வசனத்தைக் கேட்டு, மிகவும் துக்கமுள்ளவனாக, 'எப்படிப்பட்ட பதியைப்பற்றி இவள் பேசுகிறாளோ, அப்படிப்பட்ட பதியானவன் இந்தத் தேவிக்கு (இப்பொழுது) இல்லை' என்று நன்கு ஆலோசித்தான். பிறகு, ஸூர்யனுடைய காந்தி போன்ற காந்தியுள்ள அந்த மகேந்திரன் உதயபர்வதத்தில் உதிக்கின்ற ஸூர்யனையும் ஸூர்யனிடம் பிரவேசிக்கின்ற மகாபாக்கியசாலியான சந்திரனையும் அமாவாஸ்யை நேர்ந்திருக்கும் தருணத்தில் [1]ரௌத்திரமுகூர்த்தத்திலேயே தேவாஸுர யுத்தத்தையும் பார்த்தான். நூறு யாகங்களைச் செய்தவனான மகேந்திரன், சிவந்த மேகங்களோடுகூடின காலை ஸந்தியையும் ரக்த ஜலத்துடன் கூடின ஸமுத்திரத்தையும் கண்டான். ப்ருகுபுத்திரர்களால் அக்னிகளின்பொருட்டுத் தனித்தனியான மந்திரங்களால் ஹோமம் செய்யப்பட்ட ஹவ்யங்களைப் பெற்றுக்கொண்டு ஸூர்யனிடத்தில் பிரவேசிக்கின்ற அக்னியையும் பார்த்தான். இந்திரன் அப்பொழுது ஸூர்யனை வந்து அணுகியிருக்கின்ற இருபத்துநான்காவது பர்வத்தையும் 'அப்படியே அக்னியை அடைந்திருக்கிற ஸூர்யனையும் ஸூர்யனை அடைந்திருக்கிற அந்தச் சந்திரனையும் சந்திரனுக்கும் ஸூர்யனுக்கும் ஏற்பட்டிருக்கிற ஐக்யத்தையும் கண்டான். இந்திரன் பயங்கரமான அந்தச்சேர்க்கையைக் கண்டு, 'ஸூர்யனுக்கும் சந்திரனுக்கும் கோரமும்

[1] ருத்திரருக்கு உரிய காலம்.

வட்டமுமான ரேகை காணப்படுகிறது. இந்தப் பரிவேஷமானது இந்த இரவின் முடிவிலேயே பெரிய யுத்தத்தைச் சொல்லுகிறது. இந்த ஸிந்துநதியும், மிக்க இரத்தவெள்ளத்துடன் எதிர்த்துச் செல்லுகிறது. நரியானது வாயில் அக்னியுடன் ஸூர்யனுக்கு எதிராக ஊளை இடுகிறது. இந்தப் பயங்கரமான சேர்க்கையா னது பெரிதாயும் தேஜஸ்ஸோடு கூடியதாயும் இருக்கிறது. சந்திர னுக்கு அக்னியுடனும் ஸூர்யனுடனும் ஏற்பட்ட இந்தச்சேர்க்கை யானது ஆச்சர்யமாயிருக்கிறது. சந்திரன் எந்தப்புத்திரனை உண்டு பண்ணுவனே அவன் இந்தத் தேவிக்குப் பதியாகலாம். அக்னி அநேக குணங்களையுடையவன். அக்னியே எல்லாத்தேவர்களும். இந்த அக்னியானவன் ஒரு குழந்தையை உண்டுபண்ணுவனே யானல் அவன் இந்தத் தேவிக்குப் பதியாகலாம்' என்று ஆலோ சித்தான். பகவானன இந்திரன் இவ்வண்ணம் ஆலோசித்து அப் பொழுது அந்தத் தேவஸேனையை அழைத்துக்கொண்டு பிரம்ம லோகம் சென்று பிரம்மதேவரை வணங்கினன். அவரைப் பார்த்து, 'இந்தத் தேவிக்கு நீர் நல்ல சூரனன பதியைக் கொடுப்பீராக' என்று சொன்னன்.

பிரம்மா 'அஸுரர்களை அழிப்பவனே! உன்னல் இந்தக்கார் யம் எண்ணப்பட்டபடியே சிறந்த பலமுள்ளவனும் மிக்க வல்லமை யுள்ளவனுமான அப்படிப்பட்ட குழந்தை உண்டாவான். இந்திர! சிறந்த வீர்யமுள்ளவனன அந்தக் குழந்தை உன்னேடு சேர்ந்து சேனபதியாவான். இந்தத் தேவிக்குப் பதியுமாவான்' என்று சொன்னர். அந்தத் தேவேந்திரன் இந்த வசனத்தைக் கேட்டு, கன்னிகையுடன்கூட அவரை நமஸ்காரஞ்செய்து, முதன்மை வாய்ந்தவர்களும் பிராம்மணர்களுள் சிறந்தவர்களும் மிக அதிக மான ஒளியுள்ளவர்களும் வஸிஷ்டரைத் தலைவராகக்கொண்டவர் களுமான ஸப்தரிஷிகள் இருக்கிற அவ்விடத்திற்குச் சென்றான். இந்திரனைத் தலைவனகக்கொண்ட தேவர்கள் அந்த ஸப்தரிஷிக ளுடைய அப்படிப்பட்ட யாகத்தில் தவத்தினல் பாகமாக அடையப் பட்டிருக்கிற ஸோமரஸத்தைப் பானஞ்செய்ய எண்ணிச் சென்றார் கள். மகாத்மாக்களான அந்த ஸப்தரிஷிகள் நியாயப்படி இஷ்டியைச் செய்து நன்கு மூட்டப்பட்ட அக்னியில் எல்லாத்தேவர்களையும் உத்தேசித்து ஹவ்யத்தை ஹோமம் செய்தார்கள். நன்றாக அழைக்கப்பட்டவனும் ப்ரபுவுமான அந்த அக்னியானவன் ஸூர்யமண்டலத்தினின்று வெளியில் புறப்பட்டு விதிப்படி அருகிற்

சென்றான். பரதர்களுள் சிறந்தவனே! அந்த அக்னியானவன் ஆஹவனீயத்தை வந்து அடைந்து, அந்தப் பிராம்மணர்களாலே மந்திரங்களோடு ஹோமம் செய்யப்பட்ட பற்பலவிதமான ஹவ்யங்களை அந்த யாகத்தில் ரிஷிகளிடமிருந்து பெற்றுக் கொண்டு தேவர்களுக்குக் கொடுத்தான். வெளியில் செல்லுகின்ற அந்த அக்னியானவன், தங்கள் தங்கள் ஆஸனங்களில் வீற்றிருப்பவர்களும், ஸுகமுண்டாகும்படி ஸ்நானம் செய்தவர்களும், பொன்னாலாகிய யாகமேடைபோன்றவர்களும், சந்திரகலைகள் போல மாசற்றவர்களும், அக்னிஜ்வாலைக்கு ஒப்பானவர்களும், நக்ஷத்திரங்கள்போல ஆச்சரியமாயிருப்பவர்களுமான மகாத்மாக்களான அந்த ரிஷிகளுடைய பத்தினிகளைப் பார்த்தான். அந்த அக்னியானவன் அந்த இடத்தில் பிராம்மணோத்தமர்களுடைய பத்தினிகளைக்கண்டு அவர்களிடத்துச் சென்ற மனத்தோடு பொறிகள் கலங்கினவனானன். அவன் காமவசத்தை அடைந்தான். அந்த அக்னியானவன், 'நான் மனங்கலங்கினவனாகி விட்டேன். இது நியாயமன்று. என்னிடத்தில் விருப்பமில்லாதவர்களும் பதிவிரதைகளுமான பிராம்மணோத்தமர்களுடைய பத்தினிகளை நான் விரும்புகிறேன். இந்த ஸ்திரீகள் காரணமின்றி என்னால் பார்ப்பதற்கோ, தொடுவதற்கோ ஸாத்தியப்படாதவர்கள். ஆகையால், கார்ஹபத்யாக்னியில் நன்கு பிரவேசித்து இந்த ஸ்திரீகளை அடிக்கடி பார்க்கிறேன்' என்று மீண்டும் எண்ணினான். அத்புதாக்னியானவன் கார்ஹபத்யத்தை அடைந்து பொன் போன்ற ஒளியுள்ள அந்த எல்லா ரிஷிபத்தினிகளையும் ஜ்வாலைகளால் நன்றாகத்தொடுகிறவன்போலிருந்துகொண்டு அவர்களைப் பார்த்து மகிழ்ச்சி அடைந்தான். அந்த அக்னியானவன் அந்த யாகத்தில் இவ்வண்ணம் நெடுங்காலம் வாஸம் பண்ணிவிட்டு அந்த ஸ்திரீகளிடம் மனத்தை வைத்து அந்த உத்தம ஸ்திரீகளை விரும்பினவனாகவே காட்டுக்குச் சென்றான். பிராம்மணஸ்திரீகள் கிடையாமற்போகவே, காமனாலே எரிக்கப்பட்டமனமுள்ளவனும் தேகத்தை விடுவதில் நிச்சயங்கொண்டவனுமான அந்த அக்னியானவன் காட்டிற்குச் சென்றான். அப்பொழுது தக்ஷனுடைய மூத்த பெண்ணாகிய ஸ்வாஹை என்பவள் அந்த அக்னியின் மீது ஆசை வைத்தாள். அந்தப் பெண் நெடுநாளாகவே அந்த அக்னியை அடைவதற்குத் தக்க ஸமயத்தை விரும்பிக்கொண்டிருந்தாள். சிறந்த ஸௌந்தர்யமுள்ள ஸ்வாஹை நல்லொழுக்

கத்தினின்று தவறாமலிருக்கிற அக்னிதேவனை அடைவதற்குத் தக்கஸமயத்தைக் காணவில்லை. அந்தப்பெண், அக்னியானவன் உண்மையாகவே காமனால் வாட்டப்பட்டுக் கானகம் சென்றதை உள்ளபடி அறிந்து, 'நான் ஸப்தரிஷிபத்னிகளுடைய ரூபங்களை எடுத்துக்கொண்டு காமனால் பீடிக்கப்பட்டவனும் அந்த ஸ்திரீகளுடைய ரூபத்தால் மோஹித்தவனுமான அக்னியை என்மீது காதலுள்ளவனாகச் செய்வேன். இப்படிச் செய்தால் இந்த அக்னிக்கும் பிரீதி உண்டாகும். என்னுடைய விருப்பமும் நிறைவேறினதாகும்' என்று எண்ணினாள்.

---

## இருநூற்றிருபத்தேழாவது அத்யாயம்.

## மார்க்கண்டேயஸமாஸ்யாபர்வம். (தொடர்ச்சி.)

(ஸ்வாஹா தேவியானவள், ஸப்தரிஷி பத்தினிகளில் அருந்ததியைத்தவிர மற்றவர்களுடைய உருவங்களை எடுத்து அக்னியுடன் சேர்ந்ததும், அவள் அக்னியினுடைய வீர்யங்களை ஶ்வேதபர்வதத்திலுள்ள ஸ்வர்ணகுண்டத்தில் சேர்த்ததும், அதினின்று ஷண்முகனுண்டானதும், அவன் பாணங்களால் கிரௌஞ்சகிரியைப் பிளந்ததும், வேலாயுதத்தினால் ஶ்வேதகிரியின் சிகரத்தைப் பிளந்ததும்.)

அங்கிரஸ் மஹரிஷிக்கு நல்ல நடையோடும் ரூபத்தோடும் குணங்களோடுங்கூடின சிவை என்கிற பார்யை இருந்தாள். ஜனங்களுக்கு அதிபதியே! சிறந்த அங்கங்களுடன்கூடின ஸ்வாஹாதேவியானவள்முதலில் அந்தச் சிவையின் ரூபத்தை எடுத்துக்கொண்டு அக்னியினருகிற்சென்று அவனைப்பார்த்து, 'அக்னியே! காமனாலேநன்றாக எரிக்கப்பட்டிருக்கிற என்னை நீ காதலிக்கக்கடவாய். இப்படி நீ செய்யாமல் போவாயாகில், என்னை மரித்தவளாக நிச்சயம்செய்துகொள். அக்னியே! உனக்கும் மிகப்பெரிதான அதர்மமுண்டாகும். அக்னியே! நான் சிவை என்கிற அங்கிரஸினுடைய மனைவி. தோழிகளுடன்கூடி ஆலோசித்துக்கொண்டு நல்ல நிச்சயத்துடன் உன் அருகில் வந்தேன்' என்று சொன்னாள். அக்னி, 'பெண்ணே! நீ என்னைக் காமனால் பீடிக்கப்பட்டவனென்று எவ்வாறு அறிகிறாய்? எவர்கள் உன்னால் சொல்லப்

பட்டார்களோ அந்த ஸப்தரிஷிகளுடைய மனைவிகளான எல்லா ஸ்திரீகளும் எவ்வண்ணம் என்னை அறிகிறார்கள்?' என்று வினவ, சிவை, 'அக்னியே! நீ எப்பொழுதும் எங்களுக்குப் பிரியமானவன். நாங்கள் உன்னிடமிருந்து பயப்படுகிறோம்; இங்கிதங்களால் உன்னுடைய உள்ளத்தை அறிந்துகொண்டு உன்னிடம் நான் அனுப்பப்பட்டிருக்கிறேன். நான் காமத்தினால் உன்னுடன் சேர்க்கைக்காக விரைவாக உன்னை அடைந்தேன். மகாவீர்யமுள்ளவனே! நீ முந்தி என்னை மணந்துகொள். அக்னியே! என் சுற்றத்தாரான ஸ்திரீகள் என்னை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். நான் செல்வேன்' என்று கூறினாள். பிறகு, அக்னியானவன், பிரீதியோடும் ஸந்தோஷத்துடனும்கூடியவனாக அந்தச் சிவையை விவாகம் செய்துகொண்டான். பிரீதியினால் நன்றாக அக்னியுடன் சேர்ந்தவளான தேவியானவள் அக்னியினுடைய வீர்யத்தைக் கையினால் ஏந்தினாள். அவள், 'என்னுடைய இந்த ரூபத்தைக் காட்டில் எவர்கள் பார்ப்பார்களோ அவர்கள் அக்னியைக் காரணமாகக்கொண்டு பிராம்மணஸ்திரீகளின்மீது வீணான தோஷத்தைச் சொல்லுவார்கள். ஆகையால், நான் இந்த வீர்யத்தைக் காப்பாற்றுகின்ற பெண்கருடபக்ஷியாகிறேன். வனத்தினின்று புறப்படுவதும் எனக்கு ஸுகமாக இருக்கும்' என்று ஆலோசித்தாள். அப்பொழுது, அந்த ஸ்வாஹையானவள் பெண்கருடனாகிப் பெரிய காட்டினின்று வெளிப்பட்டாள். பிறகு, அவள் நாணற்கொத்துக்களால் நன்றாக மூடப்பட்டிருப்பதும், கண்களில் விஷமுள்ளவைகளும் ஏழுதலைகளுள்ளவைகளுமான அத்புதமான ஸர்ப்பங்களால் பாதுகாக்கப்பட்டதும், ராக்ஷஸர்களாலும் பிசாசங்களாலும் அப்படியே பயங்கரமான பூதகணங்களாலும் ராக்ஷஸிகளாலும் பல மிருகங்களாலும் பறவைகளாலும் நிறைந்திருக்கிறதும், நதிகளோடும் மலையருவிகளோடும்கூடியதும், பற்பல மரங்களாலும் கொடிகளாலும் நிறைக்கப்பட்டிருப்பதுமான ச்வேதபர்வதத்தைக் கண்டாள். மங்களத்தைச் செய்பவளான அந்த ஸ்வாஹாதேவி அந்த இடத்தில் பிரவேசிக்கமுடியாமல் மலையின் மேற்பக்கத்தை விரைவாக அடைந்து அந்த அக்னியின் வீர்யத்தை ஸ்வர்ணகுண்டத்தில் விரைவுடன் போட்டாள். அந்த ஸ்வாஹாதேவியானவள் மீதியிருக்கிற மகாத்மாக்களான ஸப்தரிஷிகளுடைய பத்னிகளின் ரூபங்கள்போன்ற ரூபங்களை எடுத்துக்கொண்டு அக்னியை ரமிக்கச்செய்தாள். அந்த ஸ்வாஹாதேவி

யினால், அருந்ததியினுடைய தவத்தின் மகிமையினாலும் பர்த்தாவுக்குச் செய்யும் பணிவிடையினாலும், அவளுடைய திவ்யரூபமானது எடுத்துக்கொள்ளமுடியாமற் போயிற்று. கௌரவர்களுள் உத்தமனே! அப்பொழுது காமமுள்ளவளான ஸ்வாஹையினால் அந்த ஸ்வர்ணகுண்டமென்னும் தடாகத்தில் பிரதமாதிதியில் அக்னியினுடைய வீர்யமானது ஆறு தடவை போடப்பட்டது. அந்தக்குண்டத்தில் ஸ்கந்நமான (=நழுவிவிழுந்த) அந்த வீர்யமானது, தேஜஸினால் சூழப்பட்ட ஒரு புத்திரனை உண்டுபண்ணியது. பிறகு, ரிஷிகளால் பூஜிக்கப்பட்ட அந்த வீர்யமானது ஸ்கந்தனாயிற்று. அந்தவீர்யத்தில் ஆறுதலைகளுள்ளவரும், பன்னிரண்டு காதுகளும் கண்களும் கைகளும் பாதங்களுமுள்ளவரும், ஒருகழுத்தோடும் ஒருதேகத்தோடும் கூடியவருமான குமாரர் தோன்றினார். த்விதீயையில் அந்தக் குழந்தை தெரிந்தது. த்ருதீயையில் சிசுவாக விளங்கியது. சதுர்த்திதியில் அங்கங்களோடும் அவற்றின் அவயவங்களோடும் சேர்ந்த குஹனாயிற்று. அந்தக்குஹன் மிகப்பெரிதான சிவந்தமேகமண்டலத்தில் மின்னலோடுகூடின பெரிய சிவந்தமேகத்தால் மூடப்பட்டவனாக உதித்த ஸூர்யன்போலப் பிரகாசித்தான். த்ரிபுரத்தை ஸம்ஹரித்த ஈச்வரரால் எந்த வில்லானது வைக்கப்பட்டிருந்ததோ, தேவசத்ருக்களை நாசம் செய்கிறதும் மயிர் பொடிக்கச்செய்வதும் பெரிதுமான அந்த வில்லானது அந்தக் குஹரால் பிடிக்கப்பட்டது. பலசாலியான குஹர், அப்பொழுது விற்களுள் சிறந்த அந்த வில்லை எடுத்து, ஜங்கமங்களோடும் ஸ்தாவரங்களோடும்கூடின மூவுலகங்களையும் நன்றாக மயங்கச்செய்து கொண்டு சிங்கநாதம் செய்தார். பெரியமேகங்களுடைய கூட்டத்தின் இடிமுழக்கம்போன்ற குஹருடைய அந்தச் சிங்கநாதத்தைக் கேட்டு, சித்ரன், ஐராவதனென்கிற இரண்டு மகாஸர்ப்பங்கள் எழுந்து துள்ளி எதிர்த்துவந்தன. ஸூர்யனுக்கு ஸமனான ஒளி பொருந்தியவரும் அக்னிகுமாரருமான அந்தப்பாலர், எதிர்த்து வருகின்ற அந்த இரண்டு மகாநாகங்களையும் நன்றாகப்பார்த்து, இருகைகளால் பிடித்துக்கொண்டும், மற்றொரு கையினால் சக்தியைப் பிடித்துக்கொண்டும், வேறொரு கையினால் பருத்த சரீரமுள்ளதும் பக்கத்தில் வந்திருப்பதும் பலசாலிகளுள் சிறந்ததும் சிவந்த கொண்டையுள்ளதுமான கோழியைப் பிடித்துக்கொண்டும் பயங்கரமாகக் கர்ஜித்தார். மகாபுஜபல

முள்ள குஹர் விளையாடவும் விளையாடினார். பலசாலியான குஹர், சிறந்த பலமுள்ளபிராணிகளையும் பயமடையும்படி செய்கின்ற உத்தமமான சங்கத்தை இருகைகளால் பிடித்து ஊக்க ஊதினார். இரண்டு கைகளால் ஆகாயத்தைப் பலமுறை அடித்தார். அந்த மஹாஸேனர் மூவுலகங்களையும் வாய்களால் விழுங்குகிறவர் போலவும் அளத்தற்கரிய உருவமுள்ளவராகவும் உதயபர்வதத்தில் ஸூர்யன்போல ச்வேதபர்வதத்தின் சிகரத்தில் விளையாடிக்கொண்டு விளங்கினார். அத்புதமான விக்கிரமமுள்ளவரும் மலையினுடைய உச்சியில் வீற்றிருப்பவரும் இந்திரியங்களால் அறியமுடியாத ஸ்வரூபமுள்ளவருமான அந்தக்குஹர் பலவித முகங்களால் திசைகளைப் பார்த்தார். அவர் பற்பல வஸ்துக்களைப் பார்த்துக்கொண்டு மீண்டும் சிங்கநாதம்செய்தார். அவருடைய அந்தச்சப்தத்தைக்கேட்டு ஜனங்கள் பலவாறு கீழேவிழுந்தார்கள். பயந்தவர்களும் மனநிலை தப்பினவர்களுமான ஜனங்கள் அவரையே சரணமடைந்தார்கள். பற்பல ஜாதி பேதங்களுடன் கூடின எந்த ஜனங்கள் அப்பொழுது அந்தத்தேவரை அடுத்தார்களோ மிக்கநல்ல பலமுள்ளவர்களான அந்த ஜனங்களையும் பிராம்மணர்கள் பாரிஷதர்களாகச் சொல்லுகிறார்கள். மகாபாகுபலமுள்ள அந்த ஸ்கந்தர் எழுந்திருந்து அந்த ஜனங்களை இன்சொற்களால் ஆனந்தமடையும்படி செய்து வில்லின் நாண்கயிற்றை இழுத்துப் பெரிதான ச்வேதகிரியில் பாணங்களைப் பிரயோகித்தார். அந்த ஸ்கந்தர் ஹிமவானுடைய புத்திரனான க்ரௌஞ்சபர்வதத்தை அம்புகளால் தொளைத்தார். அந்த த்வாரத்தினால் அன்னங்களும் கழுகுகளும் மேருபர்வதத்தை நோக்கிச் செல்லுகின்றன. அந்த மலையானது அதிகமாகத் தீனஸ்வரங்களை வெளியிட்டுக்கொண்டு சிதறுண்டு கீழே விழுந்தது. அம்மலை விழுந்தவுடன், மற்ற மலைகள் பயத்தினால் மிகவும் அலறின. க்ரௌஞ்சகிரி பிளக்கப்பட்டதைக் கண்டு மற்ற மலைகள் கோரமான தீனஸ்வரத்தைச் செய்தன. பலசாலிகளுள் சிறந்தவரும் அளத்தற்கரிய ஆற்றலுள்ளவருமான அந்த ஷண்முகர் மிக்க துன்பமடைந்திருக்கிற மலைகளுடைய நாதத்தைச் செவியுற்றுங்கூட மனவருத்தமடைந்தாரில்லை. சக்தியை எடுத்துக்கொண்டும், சிங்கநாதம் செய்தார். மகாத்மாவான அந்த ஷண்முகரால் பிரயோகிக்கப்பட்ட அந்த நிர்மலமான சக்தியானது அப்பொழுது ச்வேதகிரியினுடைய கோரமான சிகரத்தை விரைவாகப் பிளந்தது. அந்த

ஷண்முகரால் அடித்து உடைக்கப்பட்டிருக்கிற அந்த ஸ்வேதகிரியானது மகாத்மாவான அந்த ஷண்முகரிடமிருந்து பயந்து பூமியை விட்டு மற்ற மலைகளோடுகூட ஓடியது. பிறகு, மிக்க மனவருத்தமடைந்த பூமியானது நாற்புறங்களிலும் சிதறியது. துன்பமடைந்திருக்கின்ற பூமியானது ஸ்கந்தரை அடைந்து மீண்டும் வலிமையுள்ளதாக விளங்கிற்று. மலைகளும் அவரையே நமஸ்கரித்துப் பூமியை அடைந்தன. பிறகு, உலகமானது இந்த ஸ்கந்தரைச் சுக்லபக்ஷ பஞ்சமி திதியில் சரணடைந்தது.

## இருநூற்றிருபத்தேட்டாவது அத்யாயம்.

## மார்க்கண்டேயஸமாஸ்யா பர்வம். (தொடர்ச்சி.)

(ஆறு ரிஷிகள் லோகாபவாத பயத்தினால் தத்தம் மனைவிகளைத் தள்ளியதும், விஸ்வாமித்திரர் ஸ்கந்தருக்கு ஜாதகர்ம முதலியன செய்ததும், இந்திரன் ஸ்கந்தரோடு போர்புரிந்ததும், வஜ்ராயுதத்தினால் அடிக்கப்பட்ட ஸ்கந்தருடைய வல விலாவிலிருந்து விசாகனும் குமாரர்களும் கன்னிகளுமுண்டானதும், இந்திரன் பயந்து ஸ்கந்தரோடு நட்புக் கொண்டதும்.)

அதிக ஆண்மையுள்ளவரும் அதிக பலமுள்ளவருமான அந்த மகாஸேனர் பிறந்தவுடனே, கோரரூபமுள்ள பலவிதமான பெரிய உத்பாதங்கள் மிகத்தோன்றின; ஆண்பெண்களிருவருக்கும் வைரமானது ஏற்பட்டது; அப்படியே அதிசீதம் அத்யுஷ்ணம் முதலியவைகள் உண்டாயின; ஜ்யோதிர்க்ரஹங்களும் திசைகளும் ஆகாயமும் ஜ்வலித்தன; பூமியானது மிகவும் ஒலித்தது. உலகத்தை ரக்ஷிப்பவர்களான ரிஷிகளும், மகாகோரமான உத்பாதங்களை எல்லாப் பக்கங்களிலும் பார்த்து, அதிக பயமுள்ளவர்களாக உலகங்களுக்குச் சாந்தியைச் செய்தார்கள். அந்தச் சைத்ரரதமென்கிற வனத்தில் வஸித்த ஜனங்கள், 'ஸப்தரிஷிகளுடைய ஆறு பத்னிகளோடு சேர்ந்து அக்னியினால் இந்தப் பெரிய அனர்த்தமானது கொண்டுவரப்பட்டது' என்று சொன்னார்கள். அப்பொழுது அந்த ஸ்வாஹாதேவியானவள் அந்தக் [1] கருடியினு

[1] பெண் கருட பக்ஷி.

டைய ரூபத்தோடு செல்லுகையில் பார்த்த மற்றவர்கள், 'அந்தக் கருடியினால் இந்த அனர்த்தம் கொண்டுவரப்பட்டது' என்று கருடியைப்பற்றிச் சொன்னார்கள். அந்தக் கார்யமானது ஸ்வாஹையினால் பண்ணப்பட்டதென்று ஜனங்கள் அறியவில்லை. கருடியானவள் அந்த வசனத்தைக் கேட்டு, 'இவன் என்னுடைய புத்திரன்' என்று (எண்ணி) ஸ்கந்தரை அணுகி மெதுவாக, 'நான் உன்னுடைய தாய்' என்று சொன்னாள். பிறகு, ஸப்தரிஷிகள் மகாபராக்கிரம சாலியான புத்திரன் பிறந்தானென்பதைக் கேட்டு அப்பொழுது அருந்ததிதேவியைத் தவிர மற்ற ஆறு பத்தினிகளையும் தள்ளிவிட்டார்கள். அந்தக்காட்டில் வஸிக்கின்ற ஜனங்கள் அப்பொழுது, '(அவர்) ஆறு ரிஷிபத்னிகளாலேயே உண்டுபண்ணப்பட்டார்' என்று சொன்னார்கள். அரசனே! ஸ்வாஹாதேவியானவள் ஸப்த ரிஷிகளைப் பார்த்து, 'இவன் நிச்சயமாக என்னுடைய புத்திரன். நான் இவனுக்குக் காரணம். இந்த வனவாஸிகள் சொல்லுகிறபடி இல்லை' என்று மீண்டும் மீண்டும் உரைத்தாள். விஸ்வாமித்திர மஹரிஷியோ ஸப்தரிஷிகளுடைய யாகத்தைச் செய்துவிட்டு அக்னியினால் காணப்படாதவராகக் காமத்தால் மிகத் தவிக்கப்பட்டிருக்கிற அக்னியைப் பின்புறத்தில் தொடர்ந்து சென்றார். விஸ்வாமித்திரரோ அந்த அக்னியினால் அது எல்லாவற்றையும் உள்ளபடி முழுமையும் அறிந்து குமாரரை முதல் முதலில் சரணமடைந்தார். அந்த மகாமுனிவர் மஹாஸேனரைக் குறித்துத் திவ்ய ஸ்தோத்திரங்களையும், பாலனுக்குச் செய்யவேண்டிய [1] பதின்மூன்று மங்களகர்மங்களையும் முழுமையும் நன்கு செய்தார். விஸ்வாமித்திர மகாமுனிவர் அந்த மஹாஸேனருக்கு ஜாதகர்மம் முதலிய வைதிகக்ரியைகளைச் செய்தார். விஸ்வாமித்திரர், உலகங்களுடைய நன்மையின்பொருட்டு ஷண்முகருக்கு மகிமையையும், கோழியைக் கொடியாக வைத்துக்கொள்ளுதல் தேவஸம்பந்தம் பெற்ற சக்தியைக் கையில் பிடித்தல் பாரிஷிதர்களைப் பரிவாரங்களாக ஏற்றுக்கொள்ளுதல் ஆகிய இந்தக் காரியங்களையும் செய்தார். அதனால், விஸ்வாமித்திரரிஷியானவர் குமாரருக்குப் பிரியரானார். விஸ்வாமித்திரமகாமுனிவர், ஸ்வாஹையானவள் தன் ரூபத்தைவிட்டு ரிஷிபத்தினிகளின் வடிவத்தை எடுத்து அக்னியோடு ரமித்தாளென்பதைத் தெரிந்துகொண்டார். அவர் ஸப்த

---

[1] 'ஜாதகர்மமுதல் விவாகத்துக்கு முந்தின வரையில் செய்யப்படும் பதின்மூன்று கர்மாக்கள்' என்பது பழையவுரை.

ரிஷிகளனைவரையும் அணுகி, 'உங்களுடைய ஸ்திரீகள் அபராதிகளல்லர்' என்றும் சொன்னார். அந்த ரிஷிகள் அந்த விஸ்வாமித்திரரிடமிருந்து உண்மையைக் கேட்டுங்கூட (லோகாப்வாதபயத்தினால்) எல்லோரும் பத்னிகளைத் தள்ளிவிட்டார்கள். அப்பொழுது, தேவர்கள் ஸ்கந்தருடைய வல்லமையைக்கேட்டு ஒன்று சேர்ந்தவர்களாக இந்திரனை நாடி, 'இந்திர! ஸஹிக்கமுடியாத பலத்துடன்கூடின ஸ்கந்தனை விரைவாக நாசம் செய்வாயாக. விளம்பம் செய்யக்கூடாது. மகாபலசாலியான இந்திரனே! இப்பொழுது இவனைக் கொல்லாமற்போவாயாகில் மூவுலகங்களையும், எங்களையும், உன்னையும் அடக்கிக்கொண்டு இப்பொழுதே இவன் இந்திரனாகிவிடுவான்' என்று சொன்னார்கள். அந்த இந்திரன் மனவருத்தமுள்ளவனாக 'மிக்க வலிமையுள்ள இந்தச்சிறுவன் உலகங்களைப் படைக்கிற பிரம்மாவையும் யுத்தத்தில் எதிர்த்துப் போர்புரிந்து நாசம் செய்வான். பாலனைக் கொல்லுவதற்கு நான் சக்தியுள்ளவனல்லேன்' என்று தேவர்களைப் பார்த்துச் சொன்னான். அவர்கள், 'இவ்வாறு பேசுகிறாயாதலால் உனக்குச் சக்தியில்லை' என்று சொன்னார்கள். பிறகு, 'இப்பொழுது, லோகமாதாக்களனைவரும் ஸ்கந்தனை நோக்கிச் செல்லட்டும். நிறைந்த வீர்யமுள்ள லோகமாதாக்கள் அந்த ஸ்கந்தனைக் கொல்லட்டும்' என்று சொன்னார்கள். அந்த லோகமாதாக்கள், 'அப்படியே' என்று சொல்லிவிட்டு ஸ்கந்தரிடம் சென்றார்கள். அவர்கள், நிகரற்ற பலமுள்ளவராகிய அந்த ஸ்கந்தரைப் பார்த்து, 'இவன் நம்மால் கொல்லத்தகாதவன்' என்று நன்கு எண்ணி, விசனத்தால் வாடியமுகத்துடன், அவரையே சரணமடைந்தார்கள். அவர்கள், ஸ்கந்தரைப் பார்த்து, 'எங்களால் உலகமானது தரிக்கப்பட்டிருக்கிறது. நீ எங்களுக்குப் புத்திரன்' என்று சொன்னார்கள். பிறகு, பிரபுவான ஸ்கந்தர், ஸ்நேகத்தினால் கனிந்த மனத்துடன் கூடியவர்களும் பால் பெருகுகின்றவர்களுமான அந்த எல்லா மாதாக்களையும் அங்கீகரித்து, அவர்களுடைய அந்த வசனத்தைக் கேட்டு, அவர்களுடைய ஸ்தன்யபானம் பண்ணவிரும்பினார். பலசாலிகளுள் பலசாலியான அந்த மஹாஸேனர் அவர்களை நன்றாகப் பூஜித்து அவர்களுடைய விருப்பங்களைக்கொடுத்து, நேரில் வருகின்ற பிதாவான அக்னியைக் கண்டார். அந்தக் கந்தரால் நன்கு பூஜிக்கப்பட்ட மங்களகரனான அந்த அக்னியானவன் அந்த மாத்ருகணத்தோடுகூட மஹாஸேனரான அவரைச் சூழ்ந்து

கொண்டு ரக்ஷகனாக இருந்தான். எல்லா மாதாக்களுள்ளும் க்ரோதஸமுத்பவை என்கிற ஸ்திரீ, சூலத்தைக் கையிலேந்தி, தாய் தன் புத்திரனை ரக்ஷிப்பதுபோல ஸ்கந்தரை ரக்ஷித்தாள். லோஹிதமென்கிற ஸமுத்திரத்தினுடைய புதல்வியும் இரத்தத்தைப் பானம்செய்பவளுமான க்ரூரை என்பவள் மஹாஸேனரைக் கட்டிக்கொண்டு புத்திரனைப்போலப் பாதுகாத்தாள். அக்னியானவன் நைகமேயன், சாகவக்த்ரன், பஹுப்ரஜன் என்கிற குமாரர்களாகி அவர்களால் மரப்பாவைகளால் குழந்தையை ஆனந்தப்படுத்துவதுபோல் ச்வேதகிரியிலிருக்கிற ஸ்கந்தரை ஆனந்தமடையச் செய்தான். க்ரஹங்களும், உபக்ரஹங்களும், ரிஷிகளும், மாதாக்களும், அக்னியை முதன்மையாகக்கொண்டவைகளும் அஹங்காரமுள்ளவைகளுமான பாரிஷிதர்களுடைய கூட்டங்களும் ஆகிய இவர்களும் கோரரூபிகளும் ஸ்வர்க்கத்தில் வஸிப்பவர்களுமான இன்னும் மற்ற அநேகர்களும், மாத்ருகணங்களோடுகூட மஹாஸேனரைச் சூழ்ந்துகொண்டு நின்றார்கள். தேவராஜன் வெற்றியுண்டாவது ஸந்தேகமென்றெண்ணி, வெற்றியை அடைய விருப்பமுள்ளவனாக, ஐராவதத்தின் பிடரியின் மீதேறித் தேவதைகளோடு கூடப் புறப்பட்டான். சிறந்த பலமுள்ளவனான இந்திரன் தேவகணங்களால் சூழப்பட்டவனாக வஜ்ராயுதத்தை எடுத்து மஹாஸேனரைக் கொல்லவேண்டுமென்கிற எண்ணமுள்ளவனாக மிக விரைவாகச் சென்றான். அரசனே! இந்திரன் அந்த ஸ்கந்தருடைய மகாவேகமுள்ள அத்புதமான பராக்கிரமத்தைக் கண்டு, ஆச்சர்யமுள்ளவனானான்; உக்கிரமான உருவமுள்ளதும், பெரிய அட்டஹாஸத்துடன்கூடியதும், அதிக ஒளிபொருந்தியதும், விசித்திரமான கொடிகளுடனும் கவசங்களுடனும்கூடியதும் பற்பல வாஹனங்களுடனும் விற்களுடனும்கூடியதுமான தேவஸேனையை ஸ்கந்தரோடு போர்புரிவதற்காக ஏவினான். குமாரர் சிறந்த வஸ்திரங்களை உடுத்தவனும் காந்தியையுடையவனும் அலங்கரிக்கப்பட்டவனும் கொல்ல எண்ணங்கொண்டு நேரில் வருகிறவனுமான அந்த இந்திரனை எதிர்த்தார். மிக்க பலசாலியும் ஸ்வர்க்கத்திற்குப் பதியுமான அந்த இந்திரனே தேவஸேனையை நன்கு மகிழ்வித்துக்கொண்டு அக்னிகுமாரரான ஸ்கந்தரைக் கொல்ல எண்ணி விரைவாக வந்தான். இந்திரன் தேவர்களாலும் நிகரற்ற ரிஷிகளாலும் நன்றாகப் பூஜிக்கப்படுகின்ற

வணங்கி, அக்னிபுத்திருடைய ஸமீபத்தை வந்தடைந்தான். பிறகு, தேவராஜன் ஒன்றுசேர்ந்திருக்கிற தேவர்களோடு ஸிம்மநாதத்தைச் செய்தான். குஹரும், அந்தச் சப்தத்தைக்கேட்டுக் கடல் போல உரக்கக் கர்ஜித்தார். பெரிதான அந்தச் சப்தத்தினால் நன்றாக எழுந்து கொந்தளிக்கின்ற ஸமுத்திரம்போலப் பிரகாசிக்கின்ற தேவ ஸேனையானது ப்ரஜ்ஞையை இழந்து ஆங்காங்கு சுழன்றது. அந்த அக்னிபுத்ரர் தம்மைக் கொல்லக்கருதி அருகில் வந்திருக்கின்ற தேவர்களைப் பார்த்துக் கோபங்கொண்டு வாயிலிருந்து மூண்டெரிகின்ற நெருப்பு ஜ்வாலைகளை வெளியில் விட்டார். அந்த ஸ்கந்தர் பூமியில் நடுங்குகின்ற தேவஸைன்யங்களை எரித்தார். அந்தத்தேவர்கள் நன்றாகப் பற்றி எரிகின்ற தலைகளுடனும் தேகங்களுடனும்கூடியவர்களாகவும், நன்றாக எரிகின்ற ஆயுதங்களுடனும் வாஹனங்களுடனும்கூடியவர்களாகவும், உடனே பூமியில்நழுவிவிழுந்திருக்கிற விசித்திரமான நக்ஷத்திரக்கூட்டங்கள்போலப் பிரகாசித்தார்கள். எரிக்கப்படுகின்ற அந்தத்தேவர்கள் வஜ்ரபாணியான இந்திரனைவிட்டு, அக்னி குமாரரான ஸ்கந்தரைச் சரணமடைந்தார்கள். அதனால், தேவர்கள் துக்கசாந்தியை அடைந்தார்கள்.

பிறகு, தேவர்களால் விடப்பட்ட இந்திரன் ஸ்கந்தர்மீது வஜ்ராயுதத்தைப் பிரயோகித்தான். இந்திரனால் விடப்பட்ட அந்த வஜ்ராயுதமானது ஸ்கந்தருடைய வலவிலாவை விரைவாக அடித்தது. மகாராஜனே! வஜ்ராயுதமானது மகாத்மாவான அந்தக் குஹருடைய விலாவைப் பிளக்கவும் பிளந்தது. வஜ்ராயுதத்தால் அடிக்கப்பட்ட ஸ்கந்தருடைய காயத்தினின்று யௌவனமுள்ளவனும் பொற்கவசம் பூண்டவனும் சக்தியைத் தரித்தவனும் திவ்ய குண்டலங்களுள்ளவனுமான வேறு ஒரு புருஷன் தோன்றினான். அவன் வஜ்ராயுதத்தால் உண்டுபண்ணப்பட்ட விசனத்தினின்று (= வஜ்ராயுதம் புகுந்ததினின்று) உண்டானதினால் விசாகனென்கிற பெயருள்ளவனானான். ஊழித்தீப்போன்ற காந்தியோடு தோன்றின அந்த வேறு புருஷனைப்பார்த்து இந்திரன் பயத்தினால் கரங்குவித்துக்கொண்டு அந்த ஸ்கந்தரைச் சரணமடைந்தான். ஸாதுக்களுள் உத்தமனே! ஸ்கந்தர் சேனைகளுடன்கூடின அந்த இந்திரனுக்கு அபயம் கொடுத்தார். பிறகு, மிக்க மனக்களிப்படைந்த தேவர்கள் நான்குவித வாத்தியங்களை முழக்கினார்கள். அத்புதமானதோற்றமுள்ளவர்களும் கோரமாயிருப்பவர்களுமான

ஸ்கந்தருடைய பாரிஷதர்களைக் கேள். பயங்கரர்களான எவர்கள் பிறந்த குழந்தைகளையும் கர்ப்பத்திலிருக்கிற குழந்தைகளையும் உயிர்துறக்கச் செய்கிறார்களோ அப்படிப்பட்ட குமாரகர்கள், அச்சமயத்தில், ஸ்கந்தருடைய தேகத்தில் வஜ்ரத்தால் உண்டுபண்ணப்பட்ட காயத்தினின்று தோன்றினார்கள். இந்த ஸ்கந்தருடைய வஜ்ராயுதக் காயத்தினின்று மகாபலசாலிகளான கன்னியரும் உண்டானார்கள். அந்த ஸ்கந்தர் தம் தேககாயத்தினின்றுண்டான குமாரர்களையும் விசாகனையும் புத்திரர்களாக ஏற்படுத்திக்கொண்டார். அந்த அக்னிபகவான் அப்பொழுது [1] சாக முகனாகி, கன்யா கணங்களும் தன்னுடைய புத்திரர்களுமான எல்லாராலும் சூழப்பட்டு மாதாக்கள் [2] பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே யுத்தத்தில் ஸ்கந்தரைப் பாதுகாத்தான். [3] ஸமர்த்தனான பத்ரசாகனும் ஸ்கந்தரை ரக்ஷித்தான். அதனால், ஜனங்கள் பூலோகத்தில் ஸ்கந்தரைக் [4] குமாரர்களுக்குப் பிதா என்று சொல்லுகிறார்கள். புத்திரர்களை அடைவதில் விருப்பமுள்ளவர்களும் புத்திரர்களுள்ளவர்களுமான ஜனங்கள் பல ஸ்தலங்களில் மஹாபலசாலியான ருத்திரரையும் அக்னியை முகமாகக் கொண்ட ஸ்வாஹையையும் எப்பொழுதும் பூஜிக்கிறார்கள். தபமென்ற அக்னியானது எவர்களை உண்டுபண்ணியதோ அந்தக் கன்னியர்கள் ஸ்கந்தரை வந்தடைந்தார்கள். அவர், 'நான் என்ன செய்யவேண்டும்?' என்று வினவ, அவர்கள், 'உம்முடைய அருளால் நாங்கள் எல்லா உலகங்களுக்கும் உத்தமமான மாதாக்களும் பூஜிக்கத்தக்கவர்களும் ஆகக்கடவோம். எங்களுடைய இந்தப் பிரியத்தை நீர் செய்யவேண்டும்' என்று சொன்னார்கள். உதார புத்தியுள்ளவரான அந்த ஸ்கந்தர் அந்த மாதாக்களைப் பார்த்து, 'ஆக; நீங்கள் தனித்தனி மாதிரியுள்ளவர்களும் மங்களமூர்த்திகளும் அமங்களமூர்த்திகளும் ஆவீர்கள்' என்று மீண்டும் மீண்டும் சொன்னார். பிறகு, அநேக ப்ரஜைகளுடன்கூடின அக்னியானவன் சாகமுகனாகி மாப்பாவைகளால் குழந்தையை ஆனந்தப்படுத்துவதுபோல ச்வேதகிரியிலிருக்கிற அந்த ஸ்கந்தனை ஆனந்தமடையச் செய்தான்.

[1] சாகம் - வெள்ளாடு. [2] வேறுபாடம்.
[3] வேறுபாடம். [4] வேறுபாடம்

## இருநூற்றிருபத்தோன்பதாவது அத்யாயம்.

## மார்க்கண்டேயஸமாஸ்யாபர்வம். (தொடர்ச்சி.)

(மார்க்கண்டேயர் ஸ்கந்தருடைய சரித்திரத்தைச் சொல்லியதும், இந்திரன் ஸ்கந்தருக்குத் தேவஸேனுபதி ஸ்தானத்தில் முடி சூட்டியதும், ஸ்கந்தர் இந்திரனுடைய பிரார்த்தனையினால் தேவஸேனையை மணந்ததும்.)

பிறகு, மாத்ருகணமானது ஸ்கந்தரைப் புத்திரராக ஏற்படுத்திக்கொண்டு தங்களிருப்பிடத்தை நோக்கிச் சென்றது. காகி, ஹலிமா, மாதா, ஹலீ, ஆர்யா, பாலா, தாத்ரீ இவ்வெழுவரும் சிசு என்கிற புத்திரனுக்கு மாதாக்கள். இந்த மாதாக்களுக்கு வீர்யமுள்ளவனும் அதிபயங்கரனும் சிவந்த கண்களுள்ளவனும் பார்ப்பவர்களுக்குப் பயத்தை உண்டுபண்ணுகிறவனுமான சிசு என்கிற புத்திரன் ஸ்கந்தருடைய அருளால் உண்டானான். ஸ்கந்தருடைய மாத்ருகணத்தினிடம் உண்டான இக்குழந்தையானவன் எட்டாவது வீரன் என்று சொல்லப்படுகிறான். அவன் சாகமுகமுள்ளவனானபொழுது ஒன்பதாமவனென்று சொல்லப்படுகிறான். ஸ்கந்தருடைய அந்த ஆறுவது முகத்தைச் சாகமுகம் போலிருந்ததென்று அறிவாயாக. அரசனே! பத்ரசாகன் எந்தத் தலையினால் தெய்வத்தன்மை பொருந்திய வேலாயுதத்தை உண்டுபண்ணினானோ, எப்பொழுதும் மாத்ருகணங்களால் பூஜிக்கப்பட்டதும் அந்த ஸ்கந்தருடைய ஆறு தலைகளுள்ளும் மிகச் சிறந்ததுமான இந்தத் தலையானது அந்த ஆறினுள் நடுவில் அமைந்திருப்பதென்று இவ்வுலகில் சொல்லப்படுகிறது. இப்படிப்பட்ட இந்தப் பற்பலவிதமான ஸ்கந்தருடைய சரித்திரமானது சுக்லபக்ஷ பஞ்சமியில் நடைபெற்றது. ஜனங்களுக்குத்தலைவனே! அந்தச் சுக்லபக்ஷ ஷஷ்டியில் மகாகோரமான யுத்தம் நடைபெற்றது. பிறகு, ஆஸனத்தில் வீற்றிருப்பவரும், கவசத்தையும் மாலையையும் அணிந்தவரும், ஸ்வர்ணமயமான கிரீடந்தரித்தவரும், ஹிதமாயும் ரமணீயமாயுமிருக்கிற கண்களுள்ளவரும், அதிக காந்தியுள்ளவரும், சிவந்த வஸ்திரத்தை உடுத்தவரும், கூர்மையான தெற்றிப்பற்களுள்ளவரும், மனத்துக்கினியவரும், எல்லா லக்ஷணங்களும் பொருந்தியவரும், மூவுலகங்களுக்கும் மிக்க பிரியமா

யிருப்பவரும், வரங்களைக் கொடுப்பவரும், சூரரும், யௌவன முள்ளவரும், மெருகிட்ட குண்டலங்களையணிந்தவருமான அந்த ஸ்கந்தரைத் தாமரைமலர் நிறமுள்ளவளான லக்ஷ்மியானவள் உருவெடுத்தவளாகத் தானே வந்தடைந்தாள். லக்ஷ்மியினால் அடையப் பட்டவரும் பெரும் புகழுள்ளவரும் சிறந்தவரும் வீற்றிருப்பவருமான அந்தக் குமாரர், பிராணிகளால், பௌர்ணமாஸியில் சந்திரன் காணப்படுவதுபோலக் காணப்பட்டார். மகாத்மாக்களான பிராம்மணர்கள் மகாபலசாலியான அந்த ஸ்கந்தரைப் பூஜித்தார்கள். அப்பொழுது, மஹரிஷிகள் அவ்விடத்தில் ஸ்கந்தரைப் பார்த்து, 'பொன்னிறமுள்ளவரே! உமக்கு மங்களம். உலகங்களுக்கு மங்களத்தை உண்டுபண்ணுகிறவராகக்கடவீர். பிறந்து ஆறு நாட்களான உம்மால் எல்லா உலகங்களும் வசப்படுத்தப் பட்டன. தேவஸ்ரேஷ்டரே! உம்மால் இவர்களுக்கு மீண்டு அபயமும் கொடுக்கப்பட்டது. ஆகையால், தேவரீர் மூவுலகங்களுக்கும் அபயம் கொடுக்கிற இந்திரனாகக்கடவீர்' என்று சொன்னார்கள்.

ஸ்கந்தர், 'தபோதனர்களே! இப்பொழுது இந்திரன் எல்லா உலகங்களுக்கும் எதைச் செய்கிறான்? தேவராஜன் நித்யம் தேவகணங்களை எவ்வாறு பாதுகாக்கிறான்?' என்று வினவினார். ரிஷிகள், 'இந்திரன், பிராணிகளுக்குப் பலத்தையும் தேஜஸ்ஸையும் பிரஜைகளையும் ஸுகத்தையும் பெருக்குகிறான். தேவராஜன் ஸந்தோஷமுள்ளவனாக, விரும்பிய எல்லாவற்றையும் அப்படியே கொடுக்கிறான்; கெட்ட நடையுள்ளவர்களை ஸம்ஹரிக்கிறான்; நல்லொழுக்கத்தில் நிற்பவர்களுக்கு விரும்பியவைகளைக் கொடுக்கிறான். வலிமையுள்ள அஸுரரை அழிக்கவல்லவனான இந்திரன் பிராணிகளைக் காரியங்களில் கட்டளையிடுகிறான். ஸூர்யனில்லாத ஸமயத்தில் ஸூர்யனாவான்; அப்படியே சந்திரனில்லாத தருணத்தில் சந்திரனாவான்; அக்னியும் வாயுவும் பூமியும் ஜலமும் ஆகாயமும் ஆகிறான். இதனை இந்திரன் செய்யவேண்டும். இந்திரனிடத்தில் மிக்க பலமிருக்கிறதன்றோ? வீரரே! நீர் பலசாலிகளுள் மேன்மை பெற்றவர். ஆகையால், தேவரீர் எங்களுக்கு இந்திரனாகக் கடவீர்' என்று சொன்னார்கள். இந்திரன், 'மிக்க புஜபலமுள்ளவரே! எங்களெல்லாருக்கும் ஸுகத்தைக் கொடுக்கிற இந்திரனாகக் கடவீர். சிறந்தவரே! இப்பொழுது தேவராஜ்யத்தில் பட்டாபிஷேகம் செய்துகொள்ளும். தேவராஜனாக இருக்கத்தக்க ரூபத்தை அடைந்தவராக இருக்கிறீர்' என்று சொன்னான்.

ஸ்கந்தர், 'இந்திர! நீயே கவலையற்று வெற்றியில் பற்றுதலுடன் மூவுலகங்களையும் ஆள்வாயாக. நான் உன்னுடைய வேலைக்காரன். என்னால் இந்திரபட்டமானது விரும்பப்படவில்லை' என்று சொன்னார். இந்திரன், 'வீரரே! உம்முடைய பலம் அத்புதமானது. நீர் தேவர்களுடைய சத்ருக்களை நாசம் செய்வீராக. உம்முடைய வீர்யத்தால் ஆச்சர்யமடைந்த உலகத்தார்கள் என்னை அவமதிப்பார்கள். வீரரே! தேவர்களுள் சிறந்தவரே! வலிமைகுறைந்தவனும் உம்முடைய தேஜஸினால் தோற்க அடிக்கப்பட்டவனும் இந்திரபட்டத்தில் இருப்பவனுமான என்னை உலகத்துஜனங்கள் அவமதிப்பார்கள். ஆலஸ்யமில்லாதவர்களான ஜனங்கள் நம்மிருவருக்கும் அன்யோன்யம் விரோதத்தை உண்டுபண்ணுவதில் முயல்வார்கள். பிரபுவே! தேவரீர் விரோதியாகிவிடுவீராயின் உலகம் இரண்டுபடும். மிக்கவலிமையுள்ளவரே! உலகங்கள் தீர்மானத்துடன் இரண்டுபட்டுப் போகுமாகில், நம்மிருவருக்கும் ஜனங்களுடைய வேறுபாட்டினால் முன்போல யுத்தமுண்டாகும். ஐயா! அந்த யுத்தத்தில் தேவரீர் என்னை நிச்சயமாக வெல்வீர். ஆகையால் தேவரீரே இந்திரனாக இருக்கக்கடவீர். ஆலோசிக்க வேண்டாம்' என்று சொன்னான். ஸ்கந்தர், 'இந்திர! உனக்கு மங்களம். மூவுலகங்களுக்கும் எனக்கும் நீயே அரசன். உன் கட்டளையினால் நான் உனக்கு என்ன செய்யக்கடவேன்? எனக்குச் சொல்' என்று சொன்னார். இந்திரன், 'மிக்கபலசாலியே! இந்த வாக்கியம் உண்மையாக இருக்குமாகில், உம்மால் நிச்சயித்துச் சொல்லப்பட்டிருக்குமாகில், உம்முடைய சொல்லால் நான் இந்திரனாக இருப்பேன். ஸ்கந்தரே! என்னுடைய கட்டளையை நீர் செய்வதற்கு விரும்புவீராகில் கேளும். மிக்க வலிமைவாய்ந்தவரே! தேவர்களுக்கு ஸேனாபதிஸ்தானத்தில் அபிஷேகம் செய்துகொள்ளும்' என்று சொன்னான். ஸ்கந்தர், 'அஸுரர்களுடைய வினாசத்திற்காகவும் தேவர்களுடைய கார்யஸித்திக்காகவும் பசுக்களுக்கும் பிராம்மணர்களுக்கும் நன்மைக்காகவும் என்னை ஸேனாபதிஸ்தானத்தில் அபிஷேகம் செய்வாயாக' என்று சொன்னார்.

எல்லாத்தேவகணங்களோடுகூட இந்திரனால் அபிஷேகம் செய்யப்பட்ட அந்த ஸ்கந்தர் அச்சமயத்தில் மஹரிஷிகளால் பூஜிக்கப்படுகின்றவராகி மிகவும் விளங்கினார். அப்பொழுது, தூக்கிப் பிடிக்கப்பட்ட பொற்குடையானது நன்றாக மூட்டப்பட்ட அக்னி மண்டலம்போலப் பிரகாசித்தது. விச்வகர்மாவினால் பண்ணப்

பட்ட திவ்யமான பொன்மாலையானது கீர்த்தியுள்ளவரான சங்கரரால் தம்மாலேயே ஸ்கந்தருக்குச் சூட்டப்பட்டது. புருஷ ஶ்ரேஷ்டனே! பகைவர்களை வாட்டுபவனே! பகவானான விருஷபத்வஜர் மிக்கப்ரீதியுள்ளவராக உமையவளோடுகூட வந்து ஸ்கந்தரைப் பெருமைப்படுத்தினார். பிராம்மணர்கள் அக்னியை ருத்திரராகச் சொல்லுகிறார்கள். ஆதலால், மகாதேஜஸ்வியும் அத்புதமான காட்சியுள்ளவருமான அந்த ஸ்கந்தர் ருத்திரருடைய புத்திரராகச் சொல்லப்படுகிறார். ருத்திரரால் விடப்பட்ட அந்த வீர்யமானது ஶ்வேதபர்வதமாகியது. அக்னியினுடைய இந்திரியமானது ஶ்வேதகிரியில் க்ருத்திகைகளால் சேர்க்கப்பட்டது. பிறகு, எல்லாத்தேவர்களும், ருத்திரரால் பூஜிக்கப்படுகின்றவரும் குணசாலிகளுள் சிறந்தவருமான குஹனைப்பார்த்து அவரை ருத்திர புத்திரராகச் சொன்னார்கள். ருத்திரரால் அக்னியினிடத்தில் கலந்து பிரவேசித்து இந்தக்குமாரர் உண்டுபண்ணப்பட்டார். அங்கே அவரிடமிருந்து பிறந்தார். அதனால், ஸ்கந்தர் ருத்ரபுத்ரரானார். ருத்திரர், அக்னி, ஸ்வாஹை, ஆறுகிருத்திகாஸ்திரீகள் ஆகிய இவர்களுடைய தேஜஸினால் ஸ்கந்தர் உண்டானார்.' அதனால், தேவஶ்ரேஷ்டரான ஸ்கந்தர் ருத்திரபுத்திரரானார். மாசற்ற சிவப்பு நிறமுள்ள இரண்டு வஸ்திரங்களை உடுத்தவரும் ஜ்வலிக்கின்ற திருமேனியுள்ளவரும் நல்ல ஒளி பொருந்தியவருமான அக்னியின் குமாரர் சிவந்த இரண்டு மேகங்களால் சூழப்பட்டிருக்கிற ஸூர்யன்போலப் பிரகாசித்தார். அக்னியினால் கொடுக்கப்பட்ட கோழியானது அவருடைய கொடியை அலங்கரித்தது. ரதத்தில் தூக்கி நிறுத்தப்பட்ட அந்தக் கோழிக் கொடியானது சிவந்த ஊழித்தீப்போல விளங்கியது. எல்லாப் பிராணிகளுடைய செய்கையும் ஒளியும் சக்தியும் பலமுமானதும் தேவர்களுக்கு ஜயத்தை விருத்திபண்ணுகின்றதுமான சக்தியாயுதமானது அந்த ஸ்கந்தருக்கு எதிரில் வந்தது. அப்படியே, கூடவே தோன்றின கவசமும் அவருடைய சரீரத்தில் அமர்ந்திருந்தது. அந்த ஸ்கந்ததேவருக்கு யுத்தஞ் செய்யும்பொழுதெல்லாம் அது சரீரத்தில் தோன்றுகிறது. ஜனங்களுக்கு அதிபனே! சக்தி, தர்மம், பலம், தேஜஸ், காந்தி, ஸத்யம், மேன்மை, பிராம்மணர்களுக்கு ஹிதமாயிருத்தல், மதிமயக்கமில்லாமை, பக்தர்களைப் பாதுகாத்தல், பகைவர்களை அழித்தல், உலகங்களைக் காத்தல் இவைகளெல்லாம் ஸ்கந்தரோடுகூடவே தோன்றின. இவ்வண்

ணம் எல்லாத் தேவகணங்களாலும் அபிஷேகஞ் செய்யப்பட்டவரும் நன்கு அலங்கரிக்கப்பட்டவரும் பிரஸித்திபெற்றவரும் நல்ல மனமுள்ளவருமான அந்த ஸ்கந்தர் பூர்ணசந்திரன்போன்ற தோற்றத்துடன் இஷ்டமான வேத கோஷங்களோடும் தேவர்களுடைய சிறந்த தூர்யவாத்தியங்களோடும் தேவ கந்தர்வர்களுடைய கானங்களோடும் எல்லா அப்ஸரஸ்ஸுக்களுடைய கூட்டங்களோடும் பிரகாசித்தார். ஸந்தோஷமுள்ளவர்களும் ஆனந்தமுள்ளவர்களுமான மற்ற அநேகம் தேவர்களாலும் நன்றாக அலங்கரிக்கப்பட்டவரும் பிசாசங்களுடைய கணங்களாலும் அப்படியே தேவகணங்களாலும் நன்றாகச் சூழப்பட்டவருமான அந்த அக்னிகுமாரர் அப்பொழுது தேவர்களால் அபிஷேகம் பண்ணப்பட்டவராக விளையாடிக்கொண்டு பிரகாசித்தார். தேவர்கள், அபிஷேகம் செய்யப்பட்ட மகாஸேனரை இருளை நாசஞ் செய்துகொண்டு உதித்திருக்கின்ற ஸூர்யனைப்போலக் கண்டார்கள். பிறகு, எல்லாத் தேவஸேனைகளும், 'எங்களுக்கு நீர் அதிபதி' என்று சொல்லிக்கொண்டு எல்லாத் திக்குக்களினின்றும் ஆயிரமாயிரமாக அந்த ஸ்கந்தரை வந்தடைந்தன. எல்லாப் பூதகணங்களாலும் சூழப்பட்டிருக்கிற ஸ்கந்தபகவான் அந்தத் தேவசேனைகளை அடைந்து (அவைகளால்) அர்ச்சிக்கப்பட்டவராகவும் துதிக்கப்பட்டவராகவுமிருந்துகொண்டு, அந்தச் சேனைகளையும் இன்சொற்களால் ஸந்தோஷமடையச் செய்தார். இந்திரனும் அப்பொழுது ஸ்கந்தரை ஸேனாபதிஸ்தானத்தில் அபிஷேகம் செய்து அந்த இந்திரனால் எந்த ஸ்திரீ கேசியினிடமிருந்து விடுவிக்கப்பட்டாளோ அந்தத் தேவஸேனையை நினைத்தான். அந்த இந்திரன் பிரம்மதேவர் அவளுக்கு நிச்சயமாக இவரைப் பதியாகத் தானே ஏற்படுத்தியிருக்கிறாரென்று நன்றாக எண்ணி, அலங்கரிக்கப்பட்டிருக்கிற தேவஸேனையை அழைத்துவரச் செய்தான். இந்திரன் ஸ்கந்தரைப் பார்த்து, 'தேவதைகளுள் உத்தமரே! இந்தப் பெண் நீர் பிறவாதிருக்கும்பொழுதே பிரம்மதேவரால் உமக்குப் பத்னியாக ஏற்படுத்தப்பட்டுவிட்டாள். ஆகையால், நீர் இந்தத் தேவியினுடைய வலக்கையைத் தாமரைமலர்போல விளங்குகின்ற உம்முடைய கையினால் விதிப்படி மந்திரத்தை முன்னிட்டுப் பிடித்துக்கொள்ளும்' என்று சொன்னான். இவ்வண்ணம் சொல்லப்பட்ட அந்த ஸ்கந்தர் அவளை விதிப்படி பாணிக்ரஹணம் செய்தார். மந்திரங்களை அறிந்த ப்ருஹஸ்பதியோ மந்திரங்களை ஜபித்தார்; ஹோமங்

களையும் செய்தார். பிராம்மணர்கள் எவளை ஷஷ்டியென்றும் இந்த ப்ரஜைகளுக்கெல்லாம் ஸுகத்தைக் கொடுக்கிற லக்ஷ்மியென்றும் சொல்லுகிறார்களோ அப்படிப்பட்ட தேவஸேனையை ஜனங்கள் இவ்வண்ணம் ஸ்கந்தருக்கு மஹிஷியாகச் சொல்லுகிறார்கள். அந்தத் தேவஸேனையானவள் ஸினீவாலி, குஹூ, ஸத்வ்ருத்தி, அபராஜிதை என்னும் இவை முதலிய நாமங்களால் சொல்லப்படுகிறாள். எப்பொழுது ஸ்கந்தர் தேவஸேனையினால் சாச்வதமான பதியாக அடையப்பட்டாரோ அப்பொழுது லக்ஷ்மீதேவியானவள் சரீரத்துடன்கூடியவளாகத் தானே அவரை அடைந்தாள். பஞ்சமியிலுண்டான ஸ்கந்தர் லக்ஷ்மியினால் அடையப்பட்டார். அதனால், லக்ஷ்மியானவள் பஞ்சமியென்று எண்ணப்பட்டிருக்கிறாள். ஸ்கந்தர் ஷஷ்டியில் ஜயம் பெற்றவரானார். அதனால், ஷஷ்டியானது மஹிமை பொருந்திய திதியாயிற்று.

## இருநூற்றுமுப்பதாவது அத்யாயம்.

## மார்க்கண்டேயஸமாஸ்யாபர்வம். (தொடர்ச்சி.)

(மார்க்கண்டேயர் ஸ்கந்தருடைய சரித்திரத்தைக் கூறியது.)

ரிஷிபத்னிகளான ஆறு தேவிகள் மிக்க பாக்யம் பெற்றவரும் தேவஸேனைகளுக்குப் பதியாகச் செய்யப்பட்டவருமான மஹாஸேனரிடம் வந்தார்கள். ரிஷிகளாலே விட்டுவிடப்பட்டவர்களும், தர்மத்தோடு சேர்ந்தவர்களும், பெரிய வ்ரதங்களை அனுஷ்டிப்பவர்களுமான அந்த ரிஷிபத்னிகள் பிரபுவான தேவஸேனாபதியை விரைவாக வந்தடைந்து, 'புத்ர! தேவர்களுக் கொப்பான அந்தப் பர்த்தாக்களாலே கோபத்தினால் காரணமின்றி நாங்கள் விடப்பட்டோம். நீ எங்களால் உண்டுபண்ணப்பட்டாயென்று யாரோ சொல்லினராம். அதனை உண்மையென்று நம்பி அவர்களால் நாங்கள் புண்யஸ்தானத்திலிருந்து நழுவும்படி செய்யப்பட்டோம். அந்த அபவாதத்தினின்று நீ எங்களைப் பாதுகாக்கவேண்டும். பிரபுவே! எங்களுக்கு உன்னுடைய அருளால் அழிவற்றதான ஸ்வர்க்கமுண்டாகவேண்டும். நாங்கள் உன்னைப் புத்திரனாக அடைய விரும்புகிறோம். இதைச் செய்து கடனைத் தீர்த்தவனாவாயாக' என்று சொன்னார்கள். ஸ்கந்தர், அவர்

களைப் பார்த்து, 'நீங்கள் எனக்குத் தாய்மார்களன்றோ? இகழப் படாதவர்களே! உங்களுக்கு நான் புத்திரன். நீங்கள் விரும்புகிற அனைத்தும் உங்களுக்கு அப்படியே உண்டாகும்' என்று சொன்னார். பிறகு, அந்த ஸ்கந்தர், 'அபிஜித் என்கிற நக்ஷத்திரம் கீழே விழுந்துவிட்டதனால் நக்ஷத்திரங்களின் எண்ணிக்கையானது எவ்வாறு ஸமமாகும்?' என்பதைக் கேட்க விரும்பின இந்திரனைப் பார்த்து, 'உனக்கு எது செய்யவேண்டும்?' என்று கேட்டார். ஸ்கந்தரால், 'சொல்' என்று கூறப்பட்ட அந்த இந்திரன், பிறகு, ஸ்கந்தரைப் பார்த்து, 'ரோஹிணியோடு விரோதமுள்ளவளும் ரோஹிணிக்கு மிக இளைய ஸஹோதரியுமான அபிஜித் தேவியானவள் ரோஹிணிக்கு மூத்தவளாக இருக்கலை விரும்பித் தவம் புரிவதற்காகக் கானகம் சென்றாள். அந்த விஷயத்தில் நான் மதிமயங்கினவனாக இருக்கிறேன். உமக்கு மங்களம். அபிஜித் என்கிற நக்ஷத்திரமானது ஆகாயத்தினின்று நழுவி விழுந்துவிட்டது. ஸ்கந்தரே! பிந்தியதான இந்தக் காலத்தைப்பற்றிப் பிரம்மதேவரோடுகூடி ஆலோசனை செய்யும். அபிஜித்தானது கீழே விழுந்த காலத்தில் காலமானது அவிட்டத்தை ஆதியாகக் கொண்டதாகப் பிரம்மதேவரால் ஏற்படுத்தப்பட்டது. எந்த நக்ஷத்ரத்தின் தொடக்கத்தில் சந்திரனுக்கும் ஸூர்யனுக்கும் குருவுக்கும் சேர்க்கை ஏற்படுமோ அந்த நக்ஷத்ரம் யுகாதிநக்ஷத்ரம் என்னப்படும். அது முந்தி ரோகிணியாயிருந்தது; அபிஜித் நக்ஷத்ரம் விழுந்த காலத்திலோ ஒன்று குறைந்த இரவு பகல்களோடு நக்ஷத்ர கணங்கள் அமைந்திருந்ததனால் அவிட்டம் யுகாதி நக்ஷத்ரமாயிருந்தது. இவ்வாறு நக்ஷத்ரங்களின் எண் குறைவுபடினும் நாட்களின் எண் ஸமமாயிற்று' என்று சொன்னான். 'க்ருத்திகைகளால் நக்ஷத்திரங்களுடைய எண்ணிக்கையின் பூர்த்தியைச் செய்யும்' என்கிற அபிப்ராயத்தைக் குறிப்பித்து இந்திரனால் இவ்வண்ணம் சொல்லப்பட்டவுடன், (ஸ்கந்தருடைய கட்டளையினால்) க்ருத்திகைகள் ஆகாயத்தை அடைந்தன. அக்னியைத் தேவதையாகக் கொண்ட அந்த க்ருத்திகா நக்ஷத்திரமானது ஏழுதலையுள்ளதுபோலப் பிரகாசிக்கிறது. வினதையானவள் ஸ்கந்தரைப் பார்த்து, 'எனக்கு நீ பிண்டங்களைக் கொடுக்கிற புதல்வன். புத்திர! நான் நித்தியமாகவே உன்னோடுகூட இருக்க விரும்புகிறேன்' என்று சொன்னாள். ஸ்கந்தர், 'அவ்வாறே ஆகுக. உனக்கு நமஸ்காரம். புத்திரனிடத்திலுள்ள நேசத்தால் நீ என்னைக் கட்டளையிடக்கடவாய். தேவியே!

மருமகளால் பூஜிக்கப்படுகின்றவளாகி என்றும் (என்னிடம்) வஸிப்பாயாக' என்று சொன்னார். பிறகு, வினதை முதலிய எல்லா மாதாக்களுடைய கூட்டமும் ஸ்கந்தரைப்பார்த்து, 'நாங்கள் எல்லா உலகங்களுக்கும் மாதாக்களென்று கவிகளால் துதிக்கப்பட்டிருக்கிறோம். உனக்கும் மாதாக்களாக விரும்புகிறோம். எங்களை நீ பூஜிப்பாயாக' என்று சொன்னார்கள். ஸ்கந்தர், அவர்களுடைய வசனத்தைக் கேட்டு, 'நீங்கள் எனக்கு மாதாக்களன்றோ? நான் உங்களுக்குப் புத்திரன். உங்களுக்கு என்னால் எது செய்யத்தக்கது? உங்களுடைய விருப்பத்தைச் சொல்லுங்கள்' என்று சொன்னார். மாதாக்கள் ஸ்கந்தரைப்பார்த்து, 'பிராம்மி மாஹேச்வரி முதலிய எந்த மாதாக்கள் முற்காலத்தில் இந்த உலகத்திற்கு மாதாக்களாக ஏற்படுத்தப்பட்டிருந்தார்களோ, அவர்களுடைய ஸ்தானமானது எங்களுக்குக் கிடைக்கவேண்டும். அவர்களுக்கு அந்த ஸ்தானம் இருக்கக்கூடாது. தேவச்ரேஷ்டனே! உலகத்தாரால் நாங்கள் பூஜிக்கத்தக்கவர்களாகவேண்டும். அவர்கள் பூஜிக்கத்தக்கவர்களல்லர். உனக்காக எங்களுடைய பர்த்தாக்களைக் கோபிக்கும்படி செய்தவர்களான அந்த ப்ராம்மி முதலிய மாதாக்களாலே எங்களுடைய [1] ப்ரஜைகள் அபஹரிக்கப்பட்டன. அந்த ப்ரஜைகளை (ப் பர்த்தாக்களுடைய சேர்க்கையினால்) எங்களுக்குக் கொடுப்பாயாக' என்று சொன்னார்கள். ஸ்கந்தர், 'என்னால் கொடுக்கப்பட்டாலும் அந்தப்ரஜைகளை நீங்கள் அடைவது ஸாத்தியப்படாது. எந்த ப்ரஜையை மனத்தினால் விரும்புகிறீர்களோ, அப்படிப்பட்ட வேறு அந்தப்ரஜையை நான் கொடுக்கக்கடவேன்?' என்று வினவ, மாதாக்கள், 'நாங்கள் அந்தப்ராம்மீ முதலான மாதாக்களுடைய பிரஜைகளையும் அவற்றின் போஷகர்களையும் உன்னுடன் தனித்திருந்துகொண்டு புசிக்க விரும்புகிறோம். எங்களுக்கு அவைகளைக்கொடு' என்று சொல்ல, ஸ்கந்தர், 'உங்களுக்கு ப்ரஜைகளைக்கொடுக்கிறேன். உங்களால் கஷ்டமன்றோ கூறப்பட்டது? உங்களுக்கு மங்களம். என்னால் நமஸ்கரிக்கப்பட்டிருக்கிற நீங்கள் (நான் முதலிய) எல்லா ப்ரஜைகளையும் பாதுகாப்பவர்களாக' என்று சொல்ல, மாதாக்கள், 'ஸ்கந்த! உனக்கு மங்களம். நீ எப்படி விரும்புகிறாயோ அப்படியே பிரஜைகளைப் பாதுகாக்கக்கடமைப்பட்டிருக்கிறோம். ஸ்கந்த! பிரபுவே! எங்களுக்கு எப்பொழுதும் உன்னோடுகூட வஸிக்க விருப்பமிருக்கிறது' என்று சொல்ல,

[1] எங்களுக்கு அந்தக் குழந்தைகள் இல்லாமற் போயின என்பது.

கோபத்தைத் தணிப்பதற்காக ஸ்நானம் வாஸனைதூபம் அஞ்சனம் இவை அனைத்தையும் செய்யவேண்டும். பலிகர்மங்களோடும் உபஹாரங்களோடும் கூடின ஆராதனங்கள் ஸ்கந்தருக்கு விசேஷித்துச் செய்யத்தக்கவை. ராஜேந்திரனே! எல்லா க்ரஹங்களும் நன்றாகப் பூஜைகளுடன்கூடி நமஸ்கரிக்கவும் இவ்வண்ணம் அர்ச்சிக்கவும்பட்டால் மனிதர்களுக்கு மங்களத்தையும் நீண்ட ஆயுளையும் கொடுக்கின்றன. பதினாறுவருஷங்களுக்கு மேல் எந்த க்ரஹங்கள் மனிதர்களை ஆக்ரமிக்கின்றனவோ அந்த க்ரஹங்களை நான் மஹேஶ்வரரை வந்தனம்பண்ணி நன்கு உரைப்பேன்.

எந்த மனிதன் விழித்துக்கொண்டிருக்கும்பொழுதோ, உறங்கும்பொழுதோ தேவர்களைப் பார்ப்பனோ அந்த மனிதன் விரைவாகச் சித்தப்ரமத்தை அடைகிறான். அதற்குக் காரணமான க்ரஹத்தைத் தேவ க்ரஹமென்று சொல்லுகிறார்கள். எந்த மனிதன் உட்கார்ந்து கொண்டோ, படுத்துக்கொண்டோ பித்ருக்களைப்பார்ப்பனோ அவன் விரைவாகச் சித்தப்ரமத்தை அடைகிறான். அதற்குக்காரணமாயிருக்கிற க்ரஹமானது பித்ரு க்ரஹமென்று அறியத்தக்கது. எவன் ஸித்தர்களை அவமதிக்கிறானோ, கோபமுள்ளவர்களான அந்த ஸித்தர்கள் எவனைச் சபிக்கிறார்களோ அந்த மனிதன் சீக்கிரமாக உன்மாதத்தை அடைவான். அதற்குக் காரணமான க்ரஹமானது ஸித்தக்ரஹமென்று அறியத்தக்கது. எவன் பலவிதமான கந்தங்களை முகர்கிறானோ, ரஸங்களையும் சுவைக்கிறானோ அவன் விரைவாக உன்மாதத்தை அடைகிறான். அதற்குக் காரணமாக இருக்கிற க்ரஹமானது ராக்ஷஸ க்ரஹமென்று அறியத்தக்கது. பூமியில் எந்த மனிதனைத் தேவ கந்தர்வர்கள் பற்றுகிறார்களோ, அந்த மனிதன் சீக்கிரமாக உன்மாதத்தை அடைகிறான். அதற்குக் காரணமான க்ரஹமானது காந்தர்வக்ரஹமே. எந்த மனிதன்மீது பிசாசங்கள் ஏறுகின்றனவோ அந்த மனிதன் சீக்கிரமாகச் சித்தப்ரமத்தை அடைகிறான். அதற்குக் காரணமாக இருக்கிற அந்த க்ரஹம் பைசாசமே. எந்த மனிதனிடம் காலக்ரமத்தில் யக்ஷர்கள் பிரவேசிக்கிறார்களோ அந்த மனிதன் விரைவாக உன்மாதத்தை அடைகிறான். அதற்குக் காரணமான அந்த க்ரஹமானது யக்ஷக்ரஹமென்று அறியத்தக்கது. எந்த மனிதனுடைய சித்தமானது தோஷங்களாலே நிலைதவறி மயங்குகிறதோ அந்த மனிதன் விரைவாக உன்மாதத்தை அடைகிறான்.

அதற்குச் சாஸ்திரத்தினால் சாந்தியைச் செய்யவேண்டும். எவன் அதைரியத்தாலும் பயத்தாலும் கோரமான வஸ்துக்களைப் பார்ப்பதாலும் விரைவாக உன்மாதத்தை அடைகிறானோ அந்த உன்மாதத்திற்கு இன்சொற்களால் அவனைத் தேற்றுதல் பரிகாரமாகும். ஒரு க்ரஹம் விளையாட்டில் விருப்பமுள்ளது. அப்படியே, மற்றொரு க்ரஹம் புஜிப்பதில் விருப்பமுள்ளது. அப்படியே, மற்றொரு க்ரஹமானது காமவெறியுள்ளது. இவ்வாறு, க்ரஹம் மூன்று விதமாகும். மனிதர்களுக்கு எழுபதுபிராயம்வரையில் இந்த க்ரஹதோஷங்களிருக்கின்றன. அதற்குமேல் மனிதர்களுக்கு க்ரஹங்களுக்கு ஒப்பான [1] ஜ்வரம் உண்டாகிவிடும். க்ரஹங்கள் பொறிகளையடக்கினவனையும், மனத்தை அடக்கினவனையும், சுத்தனையும், எப்பொழுதும் ஆலஸ்யமில்லாதவனையும், தெய்வத்திலும் சாஸ்திரத்திலும் நம்பிக்கையுள்ளவனையும், ச்ரத்தையுள்ளவனையும் விட்டு விலகுகின்றன. இவ்வண்ணம் மனிதர்களுக்கு ஸம்பவிக்கக்கூடிய இந்த க்ரஹதோஷமானது உனக்கு நன்றாக உரைக்கப்பட்டது. க்ரஹங்கள் மஹேச்வரனுக்குப் பக்தர்களான மனிதர்களைத் தொடுகிறதில்லை.

## இருநூற்றுமுப்பத்தோராவது அத்யாயம்.

## மார்க்கண்டேயஸமாஸ்யாபர்வம். (தொடர்ச்சி.)

(ஸ்கந்தர் ஸ்வாஹாதேவிக்கு விரும்பியவற்றைக் கொடுத்ததும், பிரம்மதேவர் ஸ்கந்தர் ஈச்வரருக்குப் புத்திரராதல் முதலிய வற்றை அவருக்குக் காரணத்துடன் தெரிவித்ததும்.)

ஸ்கந்தரால் பிராம்மி வினதை முதலிய மாதாக்களுக்கு இவ்வண்ணம் இந்த ப்ரியம் செய்யப்பட்டபொழுது, ஸ்வாஹையானவள், அவரைப் பார்த்து, 'நீ என் வயிற்றில் பிறந்தபிள்ளை. நான் உன்னால் கொடுக்கப்பட்டதும் சாச்வதமும் அடைய முடியாததுமான ப்ரீதியை விரும்புகிறேன்' என்று சொன்னாள். பிறகு, ஸ்கந்தர், அவளைப் பார்த்து, 'எவ்விதமான ப்ரீதியை விரும்புகிறாய்?' என்று கேட்க, ஸ்வாஹை, 'நீண்டகைகளுள்ளவனே! நான் தக்ஷருக்குப் பிரியமான கன்னிகை; ஸ்வாஹையென்று பிரஸித்திபெற்றவள். நான் பால்யம்தொடங்கியே எப்பொழுதும்

[1] வேறுபாடம்.

அக்னியிடத்தில் காதலுள்ளவளாக இருந்தேன். புத்திரனே! அந்த அக்னியானவன் என்னைத் தன்னிடத்தில் காமமுள்ளவளென்று நன்கு அறியவில்லை. புத்திர! அக்னியோடு சாஸ்வதமாகச் சேர்ந்துவஸிப்பதற்கு நான் விரும்புகிறேன்' என்று சொன்னாள். ஸ்கந்தர், 'தேவியே! நன்னடையுள்ளவர்களும் நல்வழியில் நிலைபெற்றிருப்பவர்களுமான பிராம்மணர்கள் மந்திரங்களாலே நன்றாகத் துதிக்கப்பட்டிருக்கிற ஹவ்யமோ கவ்யமோ எதையும் நன்றாக எடுத்து இன்றுமுதல் எப்பொழுதுமே 'ஸ்வாஹா' என்கிற மந்திரத்தைச் சொல்லி அக்னியில் ஹோமம் செய்து (தாம் உத்தேசித்த தேவர்களுக்குக்) கொடுப்பார்கள். கல்யாணி! அக்னிபகவான் இவ்வண்ணம் உன்னோடுகூட எப்பொழுதும் வாஸம் செய்வான்' என்று சொன்னார். இவ்வண்ணம் சொல்லப்பட்டவளும் ஸ்கந்தரால் பூஜிக்கப்பட்டவளுமான ஸ்வாஹாதேவியானவள், பிறகு, பர்த்தாவான அக்னியோடுசேர்ந்து ஸ்கந்தரைக் கொண்டாடினாள். பிறகு, ப்ரஜைகளை ஸ்ருஷ்டித்தவரான பிரம்மதேவர், மஹாஸேனரைப்பார்த்து, 'முப்புரங்களை எரித்தவரும் உனக்குப் பிதாவுமான மஹாதேவரை அடைவாயாக. ருத்ரர் அக்னியில் பிரவேசித்தும் உமையவள் ஸ்வாஹையினிடத்தில் பிரவேசித்தும் எல்லா உலகங்களின் நன்மைக்குமாகப் பகைவரால் ஜயிக்கப்படாத நீ உண்டுபண்ணப்பட்டாய். மஹாத்மாவான ருத்திரரால் [1] உமையவளிடத்தில் வீர்யம் விடப்பட்டது. மஹாபாக்யசாலியே! ருத்ரரிடத்திலிருந்துண்டான அது மிஞ்சிகை மிஞ்சிகனென்கிற பெண்ணும் ஆணுமாகி இந்த மலையில் விழுந்தது. வெளிப்பட்ட வீர்யத்தில் மிகுதியுள்ள ஒரு சிறிது லோஹித ஸமுத்திரத்தில் விழுந்தது; ஒரு சிறிது சூரியனுடைய கிரணங்களில் விழுந்தது; ஒரு சிறிது பூமியில் விழுந்தது; ஒருசிறிது மரங்களில் விழுந்தது. இவ்வண்ணம் அந்தவீர்யமானது ஐந்து பிரிவாக விழுந்தது. அந்த இடங்களில் விழுந்த அந்த வீர்யபிந்துக்கள் பலவிதவடிவங்களுள்ள கணங்களும், மாம்ஸங்களைப் பக்ஷிக்கின்றவர்களும் கோரரூபிகளுமான உன்னுடைய இந்தப் பாரிஷதர்களும் ஆயினவென்று அறிஞர்கள் அறியவேண்டும்' என்று சொன்னார். அளத்தற்கரிய ஆற்றலுள்ளவரும் பிதாவினிடம் அன்புள்ளவருமான மஹாஸேனர், 'இப்படியே ஆகட்டும்' என்று சொல்லிவிட்டுப் பிதாவான மஹேஸ்வரரைப் பூஜித்தார். அந்த ஐந்து கணங்களை, பொருளை

[1] மூலத்தில் வேறு விதமாயிருக்கிறது.

விரும்புகிறவர்கள் எருக்கம்பூக்களால் பூஜிக்கவேண்டும். வியாதியின் தணிதலை உத்தேசித்து அந்தக் கணங்களுக்குப் பூஜையைச் செய்யவேண்டும். ருத்திரரிடத்திலுண்டான மிஞ்சிகா மிஞ்சிகனென்கிற மிதுனமானது பாலர்களுக்கு நன்மையைவிரும்புகிறவர்களால் இவ்வுலகில் எப்பொழுதும் நமஸ்கரிக்கத்தக்கது. மனுஷ்யர்களுடைய மாம்ஸங்களைப் பக்ஷிக்கின்ற வ்ருக்ஷகைகள் என்கிற பெயர்கொண்ட ஸ்திரீகள் மரங்களில் உண்டானார்கள். அந்த வ்ருக்ஷகாதேவிகள் ஸந்தானத்தை விரும்புகிறவர்களால் நமஸ்கரிக்கத்தக்கவர்கள். இந்தப் பிசாசங்களுடைய கூட்டங்கள் எண்ணமுடியாதவைகளென்று கருதப்பட்டிருக்கின்றன.

அரசனே! கொடியுடன்கூடின மணியினுடைய உத்பத்தியை என்னிடமிருந்து கேள். இந்திரனுக்கு வாஹனமான ஐராவதமென்கிற யானையினுடைய இரண்டுமணிகளும் வைஜயந்தியென்று பிரஸித்தியுள்ளவைகள். புத்திசாலியான இந்திரனால் தானே முறையுடன் கொண்டுவந்து அந்த இரண்டுமணிகளும் குஹருக்குக் கொடுக்கப்பட்டன. அவ்விரண்டினுள் ஒன்று விசாகனுக்கும் மற்றொன்று ஸ்கந்தருக்கும் கொடுக்கப்பட்டன. கார்த்திகேயருக்கும் விசாகனுக்கும் கொடி சிவப்புநிறமுள்ளது. அப்பொழுது எந்த வஸ்துக்கள் மஹாபலசாலியான ஸ்கந்ததேவருக்கு விளையாடுவதற்காகத் தேவர்களால் கொடுக்கப்பட்டனவோ அந்த வஸ்துக்களாலேயே அவர் விளையாடுகிறார். பிசாசங்களுடைய கூட்டங்களாலும் அப்படியே தேவகணங்களாலும் சூழப்பட்டவரும் ஸ்ரீயினால் அடையப்பட்டவருமான அந்த ஸ்கந்தர் ஒளியுடன் கூடியவராகப் பொன்மலையில் பிரகாசித்தார். அந்தவீரராலே, அழகிய குகைகளுள்ள மந்தரபர்வதமானது கிரணங்களுள்ள ஸூர்யனால் விளங்குவதுபோல மங்களகரமான காடுகளுள்ள அந்த மலையானது, விளங்கியது. ச்வேதபர்வதமானது மலர்ந்திருக்கின்ற ஸந்தானக வனங்களாலும் கரவீரவனங்களாலும் பாரிஜாதவனங்களாலும் அப்படியே [1] செவ்வரத்தைக் காடுகளாலும் அசோகவனங்களாலும் கடம்பமரங்களடர்ந்த சோலைகளாலும் திவ்யமான மிருகக்கூட்டங்களாலும் திவ்யமான பக்ஷிக்கூட்டங்களாலும் பிரகாசித்தது. அந்தமலையில் எல்லாத் தேவகணங்களும் அப்படியே எல்லாத் தேவரிஷிகளும் வந்து சேர்ந்தார்கள். கடையப்படுகிற கடல்போல முழங்குகின்றவைகளும் மேகத்தின் இடிமுழக்கம்

---

[1] 'ஜபா' என்பது மூலம்.

போன்ற ஒளியுள்ளவைகளுமான தூர்யவாத்தியகோஷங்களும் தோன்றின. அந்தமலையில் தேவர்களும் கந்தர்வர்களும் கானம் செய்தார்கள்; அப்படியே, அப்ஸரஸ்திரீகள், நர்த்தனம்செய்தார்கள். அந்தமலையில் ஸந்தோஷமடைந்திருக்கின்ற பிராணிகளுடைய பெரிய சப்தமானது கேட்டது. இவ்வண்ணம் இந்திரனோடு கூடிய உலகமனைத்தும் ஸ்வேதபர்வதத்திலிருப்பவரும் மிக்கமனக் களிப்படைந்தவருமான ஸ்கந்தரைத் தர்சனம்செய்தது. அவரைப் பார்ப்பதினின்று ஒரு பிராணியும் போதுமென்கிற த்ருப்தியை அடையவில்லை.

## இருநூற்றுமுப்பத்திரண்டாவது அத்யாயம்.

## மார்க்கண்டேயஸமாஸ்யா பர்வம். (தொடர்ச்சி.)

(ஸ்கந்தர் ஸேனாபதியானபின் மஹாதேவரும் பார்வதியும் இந்திரன் முதலியவர்களும் பத்ரவடஞ்சென்றதும், ஈச்வரர் ஸ்கந்தரைத் தேவஸேனைத் தலைவன் செய்யவேண்டிய காரியத்தில் கட்டளையிட்டதும், தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் யுத்தமும், ஸ்கந்தர் மகிஷாஸுரனைக் கொன்றதும்.)

ஸ்கந்தபகவான் தேவஸேனாபதி ஸ்தானத்தில் புகுத்தப்பட்டபொழுது சிறந்த தேஜஸுடன் கூடினவரும் ஸந்தோஷமுள்ளவரும் பார்வதியோடிருப்பவரும் பிரபுவுமான பரமசிவன், இந்திரனைத் தலைவனாகக்கொண்ட எல்லாத்தேவர்களாலும் பின்தொடரப்பட்டவராக ஸூர்யன்போலப் பிரகாசிக்கின்ற ரதத்தினால் பத்திரவடத்தைக் குறித்துப் புறப்பட்டார். அவருடைய அந்தச் சிறந்த ரதத்தில் பூட்டப்பட்டிருக்கிற வெள்ளிமயமான ஆயிரம் சிங்கங்கள் காலனுலே ஓட்டப்பட்டவைகளாக ஆகாயத்தை நோக்கி மேலே எழும்பின. அந்தச் சிங்கங்கள் ஆகாயத்தைப் பானம் செய்கின்றவைபோல, சராசரங்களைப் பயமடையும்படி செய்பவைகளாகவும் கர்ஜிக்கின்றவைகளாகவும் அழகிய பிடரி மயிர்களுள்ளவைகளாகவும் ஆகாயத்தில் சென்றன. அந்த ரதத்தில் உமையவளோடுகூட வீற்றிருக்கிற பசுபதியானவர் இந்திரனுடைய வில்லோடுகூடின மேகத்தில் மின்னலோடு கூடின ஸூர்யன்போலப் பிரகாசித்தார். தனங்களுக்கு அதிபதியும்

பகவானுமான குபேரன் அழகிய புஷ்பகவிமானத்தின்மீதேறிக் கொண்டு யக்ஷர்களோடுகூட அவருக்கு முன் சென்றான். இந்திரனும், தேவர்களோடுகூட ஐராவதத்தின் மீதேறிக்கொண்டு, பக்தர்களுக்கு வரங்களைக் கொடுப்பவரும் செல்பவரும் காளையைக் கொடியாகக்கொண்டவருமான பரமசிவனைப் பின்புறத்தில் தொடர்ந்து சென்றான். நன்றாக அலங்கரிக்கப்பட்டிருக்கிற அமோகனென்கிற மகாயக்ஷன், மாலைகளை அணிந்துகொண்டிருக்கிற ஜ்ரும்பகக்ரஹங்களோடும் யக்ஷர்களோடும் ராக்ஷஸர்களோடும் வலப்பக்கத்தை அடுத்துச் சென்றான். விசித்திரமாக யுத்தஞ்செய்கின்ற அநேக தேவர்கள் வஸுக்களோடும் ருத்திரர்களோடும் சேர்ந்து அவருடைய வலப்பக்கத்தில் சென்றார்கள். அப்படியே, கோரமான ரூபத்தையும் சரீரத்தையுமுடைய யமன் ம்ருத்யுவோடுகூடிக் கோரமான அநேகவியாதிகளால் நாற்புறங்களிலும் சூழப்பட்டவனாகச் சென்றான். பயங்கரமான உருவமுள்ளதும் மூன்று முனைகளையுடையதும் கூர்மையுள்ளதும் நன்கு அலங்கரிக்கப்பட்டதுமான விஜயமென்கிற ருத்திரருடைய சூலமானது யமனுக்குப் பின் சென்றது. உக்கிரமான பாசாயுதத்தையுடையவனும் ஜலத்திற்கு அதிதேவதையுமான வருணபகவான் பலவித ஜலஜந்துக்களால் சூழப்பட்டவனாக ருத்திரரை நாற்புறங்களிலும் சூழ்ந்துகொண்டு மெதுவாகச் சென்றான். ருத்திரருடைய பட்டஸமானது, கதை உலக்கை சக்தி முதலிய உத்தமமான ஆயுதங்களால் சூழப்பட்டதாக, விஜயமென்கிற சூலத்தைப் பின்தொடர்ந்து சென்றது. அர்ஜுனா! அதிக ஒளியோடுகூடின ருத்திரருடைய குடையானது பட்டஸமென்கிற ஆயுதத்தைப் பின்தொடர்ந்து சென்றது. மஹரிஷிகளுடைய கணங்களால் அடையப்பட்ட கமண்டலுவானது அந்தக் குடையைப் பின்தொடர்ந்து சென்றது. ஸ்ரீயினால் வரிக்கப்பட்ட தண்டமானது, ப்ருகுக்களோடும் அங்கிரஸுகளோடும் கூடியதாகவும் தேவர்களால் பூஜிக்கப்பட்டதாகவும், அந்தக்கமண்டலுவுக்கு வலப்புறத்தில் பிரகாசித்தது. இவைகளுக்குப் பின்புறத்தில், ருத்திரர் பாரதமென்கிற ரதத்தில் வீற்றிருந்து எல்லாத் தேவர்களையும் தேஜஸினால் நன்றாக ஸந்தோஷிக்கும்படி செய்துகொண்டு சென்றார். ரிஷிகளும் தேவர்களும் கந்தர்வர்களும் உரகர்களும் நதிகளும் மடுக்களும் ஸமுத்திரங்களும் அப்ஸரஸுகளுடைய கூட்டங்களும் நக்ஷத்திரங்களும் க்ரஹங்களும் தேவர்களுடைய சிசுக்களும் பற்பலவிதமான வடிவமுள்ள

ஸ்திரீகளும் பூமாரிபொழிகின்ற அழகிய ரூபமுள்ள உத்தமஸ்திரீகளும் ருத்திரருடைய பின்புறத்தில் சென்றார்கள். பர்ஜன்யன் பிஞ்கபாணியான ருத்திரரை நமஸ்கரித்து அவரைப் பின்தொடர்ந்து சென்றான். சந்திரன் அவருடைய தலையில் வெண்குடையைப் பிடித்தான். வாயுவும் அக்னியும் சாமரங்களைக் கையிலெடுத்து வீசிக்கொண்டு இருபுறத்திலும் சென்றார்கள். அரசனே! இந்திரனும் காந்தியினால் சூழப்பட்டவனாக எல்லா ராஜரிஷிகளோடுங்கூட விருஷபத்வஜரைத் துதித்துக்கொண்டு அவருக்குப் பின்புறத்தில் சென்றான். கௌரி, வித்தை, காந்தாரி, கேசினி, மித்திரை ஆகிய எல்லோரும் ஸாவித்ரியோடு கூடப் பார்வதிக்குப் பின்புறத்தில் சென்றார்கள். கவிகளாலே எவைகள் கணங்களாக எண்ணப்பட்டனவோ அந்த எல்லா வித்யாகணங்களும் இந்திரனோடுகூடின எல்லாத் தேவர்களும், அந்த ஸேனாமுகத்தில் அந்த ருத்ரருடைய கட்டளையைச் செய்தார்கள். ராக்ஷஸ க்ரஹமானது, கொடி பிடித்துக்கொண்டு, சிவனுக்கு முந்திச்சென்றது. இடுகாட்டில் நித்யவாஸம் பண்ணுகிறவனும் ருத்ரருக்கு நண்பனும் உலகங்களுக்கு ஆனந்தத்தைக் கொடுப்பவனுமான பிங்களனென்கிற யக்ஷேந்திரனும் இவர்களோடு சேர்ந்து அவ்விடத்தில் சேனைகளுக்கு முந்தியும் பிந்தியும் உத்ஸாகத்துடன் ஸுகமாகச் சென்றான். அவனுடைய கதியானது ஸ்திரமாக இல்லையன்றோ? எவரைச் சிவனென்றும் ஈசரென்றும் ருத்ரனென்றும் பிநாகியென்றும் சொல்லுகிறார்களோ அந்த ருத்ரதேவதையை மனிதர்கள் இவ்வுலகில் நல்ல கர்மங்களால் பூஜிக்கிறார்கள். இவ்வண்ணம் எல்லாத் தேவகணங்களும் அப்பொழுது பிரீதியுள்ள மனத்துடன்கூடியவைகளாகப் பற்பல கருத்துக்களுடன் மஹேஶ்வரரைப் பூஜிக்கின்றன. பிராம்மணர்களுக்கு நன்மையைச் செய்பவரும் தேவஸேனைக்குப் பதியும் கிருத்திகாதேவிகளுக்குப் புதல்வருமான ஸ்கந்தர் இவ்வாறு தேவஸேனைகளால் சூழப்பட்டவராகத் தேவர்களுக்குப் பிரபுவான ருத்திரரைப் பின்தொடர்ந்து சென்றார். பிறகு, மஹாதேவர், மஹாஸேனரைப் பார்த்து, 'நீ நித்யம் ஆலஸ்யமில்லாதவனாகத் தேவஸேனைகளுடைய ஏழாவது ஸ்கந்தத்தை ரக்ஷிப்பாயாக' என்கிற பெரிய வசனத்தை உரைத்தார். ஸ்கந்தர், 'பிரபுவே! நான் தேவஸேனையின் ஏழாவது வகுப்பைப் பாதுகாப்பேன். தேவரே! செய்யத்தக்க மற்றதையும் விளம்பமின்றிச் சொல்வீராக'

என்று சொன்னார். ருத்ரர், 'புத்திர! கார்யங்களில் நீ என்னை எப்பொழுதுமே பார்க்கக்கடவாய். என் தர்சனத்தினாலும் பக்தியினாலும் சிறந்த நன்மையை அடைவாய்' என்று சொன்னார். மஹேஸ்வரர், இவ்வாறு சொல்லிவிட்டு, உமையவளோடுகூட ப்ரீதியுள்ளவராகத் தேஜஸினால் ஜ்வலிப்பவர்போலிருக்கிற அந்த ஸ்கந்தரைத் தழுவிக்கொண்டு அனுப்பினார்.

மகாராஜனே! ஸ்கந்தர் அனுப்பப்பட்டவுடன், எல்லாத் தேவர்களையும் நன்றாக மதிமயங்கச்செய்கின்ற பெரிதான உத்பாதமானது தோன்றியது; பிரபுவே! நக்ஷத்திரங்களுடன்கூடின ஆகாயம் ஜ்வலித்தது. உலகமானது மிக்க மதிமயக்கத்தை அடைந்தது. பூமி அசைந்தது; விசேஷமாக ஒலியும் செய்தது. உலகமே இருளடர்ந்ததாயிற்று. மகாபாக்யமுள்ளவனே! பிறகு அந்தக் க்ரூரமான உத்பாதத்தைக்கண்டு அப்பொழுது சங்கரரும் உமையவளும் தேவர்களும் மஹரிஷிகளும் கலக்கத்தை அடைந்தார்கள். பிறகு, அவர்கள் மிக மயக்கமடைந்திருக்கும் தருணத்தில், மலைகளுக்கும் மேகங்களுக்கும் ஒப்பானதும் பலவித ஆயுதங்களோடுகூடினதும் கோரமாயிருப்பதுமான பெருஞ்சேனை காணப்பட்டது. கோரமானதும் எண்ணமுடியாததுமான அந்தச் சேனையானது, கர்ஜனம் செய்துகொண்டும், பற்பலவிதமான சொற்களை வெளியிட்டுக்கொண்டும், யுத்தத்தில் தேவர்களைக்குறித்தும் பகவானான சங்கரரைக்குறித்தும் எதிர்த்துவந்தது. அவர்களால் தேவசேனைகளின்மீது அநேகமான அம்புக்கூட்டங்களும் மலைகளும் சதக்னிகளும் பிராஸங்களும் கத்திகளும் ஈட்டிகளும் கதாயுதங்களும் பிரயோகிக்கப்பட்டன. மேலே விழுகின்ற கோரமான அந்தப் பெரிய ஆயுதங்களாலே தேவஸேனை முழுவதும் ஒரு க்ஷணத்திலுள் ஓடியது; புறங்காட்டியதாகவும் காணப்பட்டது. போர்வீரர்களும் யானைகளும் குதிரைகளும் ஆயுதங்களும் மகாரதங்களும் அறுக்கப்பட்ட தேவர்களுடைய சேனையானது, அஸுரர்களால் அடிக்கப்பட்டுப் புறங்காட்டி ஓடியது. அஸுரர்களால் வதம் செய்யப்படுகின்ற அந்தத்தேவசேனையானது நெருப்புக்களால் பெரும்பான்மையாக எரிக்கப்பட்டிருக்கிற பெரிய மரங்களடர்ந்த காடுபோலக் கீழேவிழுந்தது. மகாயுத்தத்தில் கொல்லப்படுகிறவர்களும், தலைகளும் உடல்களும் வெட்டப்பட்டவர்களும், விரைவாக ஓடுகின்றவர்களுமான தேவர்கள் நாதனை அடையவில்லை. பிறகு, பலனென்கிற அஸுரனை நாசம் செய்தவனும்

பகைவர்களுடைய பட்டணங்களை அழிப்பவனுமான தேவ ராஜன், அஸுரர்களால் அடிக்கப்பட்டு ஓடுகின்ற அந்தத் தேவசேனையைப் பார்த்துத் தேற்றிக்கொண்டு, 'சூரர்களே! பயத்தை விட்டுவிடுங்கள். உங்களுக்கு மங்களம். ஆயுதங்களை எடுங்கள். பராக்கிரமத்தில் புத்தியைச் செலுத்துங்கள். உங்களுக்கு ஒருவிதமான மனவருத்தமும் உண்டாகவேண்டாம். மிக்க கெட்ட நடையுள்ளவர்களும் கோரமான தோற்றமுள்ளவர்களுமான இந்தத் தானவர்களைத் தோல்வியடையச்செய்யுங்கள். உங்களுக்கு மங்களம். என்னோடுகூடப் பெரிய அஸுரர்களை எதிர்த்துச் செல்லுங்கள்' என்று சொன்னான். இந்திரனுடைய வசனத்தைக் கேட்டுத் தேறுதலடைந்தவர்களான தேவர்கள் இந்திரனை ஆதாரமாகக்கொண்டு தானவர்களை எதிர்த்துப் போர்புரிந்தார்கள். பிறகு, அந்த எல்லாத்தேவர்களும் அதிக பலசாலிகளான மருத்துக்களும் மகாபாக்யசாலிகளான ஸாத்தியர்களும் வஸுக்களோடுகூடி அஸுரர்களை எதிர்த்துச் சென்றார்கள். கோபங்கொண்டிருக்கிற அந்தத் தேவர்களாலே யுத்தத்தில் அஸுரப்படைகளில் பிரயோகிக்கப்பட்ட சஸ்திரங்களும் பாணங்களும் அஸுரர்களுடைய தேகங்களில் ரத்தத்தை மிகுதியாகக் குடித்தன. அந்த அஸுரர்களுடைய தேகங்களைப் பிளந்துகொண்டு, அப்பொழுது, வெளியில் போய்விழுகின்ற கூர்மையான அந்த அம்புகள் மலைகளிலிருந்து வெளிக்கிளம்புகின்ற ஸர்ப்பங்கள்போலக் காணப்பட்டன. வேந்தே! பாணங்களால் பிளக்கப்பட்ட அந்த அஸுரர்களுடைய சரீரங்கள் நாற்புறங்களிலும் துண்டு துண்டாகச் செய்யப்பட்ட மேகங்கள்போலப் பூமியில் விழுந்தன. பிறகு, யுத்தத்தில் எல்லாத் தேவகணங்களாலும் பலவித அம்புகளால் பயமடையும்படி செய்யப்பட்ட அந்த அஸுரசேனையானது புறங்காட்டி ஓடும்படி செய்யப்பட்டது. பிறகு, ஸந்தோஷமுள்ளவர்களும் ஆயுதங்களை ஓங்கினவர்களுமான எல்லாத் தேவர்களாலும் அப்பொழுது உரத்த சிங்கநாதம் செய்யப்பட்டது. ஒன்றுசேர்ந்திருக்கின்ற தூர்யவாத்தியங்கள் பலவாறு நன்கு வாசிக்கப்பட்டன. இவ்வண்ணம் ஒன்றை ஒன்று எதிர்த்ததும் மிக்க பயங்கரமானதும் மாம்ஸங்களாலும் ரக்தங்களாலும் சேறுள்ளதுமான யுத்தமானது தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் நடந்தது. தேவலோகத்துக்கு அனர்த்தமானது உடனே நேரில் காணப்பட்டது. கோரர்களான

அஸுரர்கள் தேவர்களை மிக நாசம் செய்தார்கள். பிறகு, தூர்ய வாத்திய கோஷங்களும் பேரீவாத்தியங்களுடைய பெருமுழக்கங்களும் தானவேந்திரர்களுடைய பயங்கரமான ஸிங்கநாதங்களும் உண்டாயின. பிறகு, கோரமான அஸுரப்படையிலிருந்து மிக்க பலசாலியான மஹிஷனென்கிற அஸுரன் பெரிய மலையைக் கையிலெடுத்துக்கொண்டு வெளிப்புறப்பட்டு வந்தான். அரசனே! மேகங்களாலே நன்றாக நாற்புறங்களிலும் சூழப்பட்டிருக்கிற ஸூர்யனைப்போலக் கையில் மலையைத் தூக்கிக்கொண்டிருக்கிற அந்த மஹிஷாஸுரனைக்கண்டு அந்தத் தேவர்கள் வேகமாக ஓடத் தொடங்கினார்கள். மகாராஜனே! பிறகு, மஹிஷன் தேவர்களை எதிர்த்து ஓடிவந்து ஜலத்தோடுகூடின மேகம்போன்றதும் பருத்த உருவமுள்ளதுமான அந்த மலையைத் தேவர்களின்மீது எறிந்தான். அரசனே! தேவஸைன்யத்தின்மீது விழுகின்றதும் பயங்கரமான உருவமுள்ளதுமான அந்த மலையினால் தேவஸேனையில் பதினாயிரவர் கொல்லப்பட்டுப் பூமியில் விழுந்தார்கள். பிறகு, மஹிஷன் தேவர்களைப் பயமடையச் செய்துகொண்டு அந்தத் தானவர்களோடு ஸிங்கமானது அல்பமிருகங்களை நோக்கி ஓடிவருகிறதுபோல விரைவாக யுத்தத்தில் எதிர்த்து ஓடிவந்தான். எதிர்த்துவருகின்ற அந்த மஹிஷனைக்கண்டு, இந்திரனோடு கூடின தேவர்கள், யுத்தத்தில் பயந்தவர்களாகவும் ஆயுதங்களும் த்வஜங்களும் சிதறினவர்களாகவும் ஓடினார்கள். பிறகு, அந்த மஹிஷன் கோபங்கொண்டு ருத்ரருடைய தேரைக்குறித்து விரைவாகச் சென்றான்; ரதத்தை எதிர்த்து ஓடி ருத்திரருடைய ரதத்தின் ஏர்க்காலைப் பிடித்துக்கொண்டான். கோபங்கொண்ட மஹிஷாஸுரன் ருத்திரருடைய ரதத்தை விரைவாக எதிர்த்தபொழுது, ஆகாயமும் பூமியும் அலறின. மஹரிஷிகள் மிக்க மதிமயக்கத்தை அடைந்தார்கள். பருத்த தேகமுள்ளவர்களும் மேகம்போன்றவர்களுமான தைத்யர்கள் வீரவாதம் செய்தார்கள். 'நாம் ஜயித்துவிட்டோம்' என்று அவர்களுக்கு நிச்சயமுண்டாயிற்று. அப்படியிருக்கையில், ருத்ரபகவான், புத்ரரான குஹரை அழைத்து, 'புத்ர! நீ துராத்மாவான அஸுரனுடைய துஷ்டத்தனத்தைப் பார். கெட்டநடையுள்ளவனான மஹிஷனை விரைவாகக் கொல். உன்பலத்தைப் பார்க்கவிரும்புகிறேன்' என்று சொன்னார். பகவானான மஹேஶ்வரர் 'இவ்வண்ணம் சொல்லி

விட்டு ஸ்கந்தரைப் புகழ்ந்து ஆயுள்கழிந்தவனான மஹிஷனைக் கொல்லுவதற்காக ஏவினார்; அப்பொழுது ஸ்கந்தரைத் துராத்மாவான அந்த மஹிஷனுக்கு யமனாக நினைத்தார். மஹிஷனும், ருத்திரருடைய ரதத்தைக்கண்டு, தேவர்களைப் பயப்படும்படி செய்துகொண்டும் அஸுரர்களை ஸந்தோஷிக்கச் செய்துகொண்டும் பயங்கரமாகச் சிங்கநாதம் செய்தான்.

பிறகு, தேவர்களுக்கு அப்படிப்பட்ட கோரமான பயம் நேர்ந்திருக்கையில் பிரபுவும் கோபத்தினால் ஸூர்யன்போல ஜ்வலிக்கின்றவரும் சிவப்புவஸ்திரத்தை உடுத்தவரும் சிவந்தமாலையுடனும் ஆபரணங்களுடன்கூடியவரும் சிவந்த குதிரைகளுள்ளவரும் மிக்க புஜபலமுள்ளவரும் பொற்கவசத்தை அணிந்தவருமான மஹாஸேனர், ஸூர்யனுக்கு ஒப்பானதும் ஸ்வர்ணத்தினால் ஒளிபொருந்தியதுமான ரதத்தின்மீதேறி மஹிஷனை எதிர்த்து வந்தார். அவரைக்கண்டு அந்த அஸுரசேனையானது யுத்தத்தில் விரைவாக ஓடியது. ராஜேந்திரனே! மகாபலசாலியான அந்த மஹாஸேனரும், நன்றாக ஜ்வலிக்கின்றதும் மஹிஷனைப் பிளக்கக்கூடியதுமான அப்படிப்பட்ட சக்தியைப் பிரயோகித்தார். விடப்பட்ட அந்தச் சக்தியானது அந்த மஹிஷனுடைய பெரிதான தலையைக் கொய்தது. தலை அறுக்கப்பட்டவுடன், மஹிஷன் உயிரிழந்து கீழே விழுந்தான். விழுகின்றதும் மலைபோல விளங்குவதுமான அந்தத் தலையினால் பதினாறு யோஜனைதூரம் வழியானது மறைக்கப்பட்டது. அப்பொழுது, அந்த வழியானது நடந்துசெல்லத்தகாததாகியது. இப்பொழுது, அந்த வழியினால் உத்தரகுருதேசத்து ஜனங்கள் ஸுகமாகச் செல்லுகிறார்கள். சுழற்றி எறியப்பட்ட அந்தச் சக்தியானது ஆயிரமாயிரமாகப் பகைவர்களைக் கொன்று ஸ்கந்தருடைய கையை அடைந்ததைத் தேவர்களும் அஸுரர்களும் கண்டார்கள். சிறந்த புத்தியுள்ள மஹாஸேனராலே பெரும்பான்மையாக அம்புகளால் அடிக்கப்பட்டவைகளும் கோரமானவைகளும் மாண்டவை போக மீதியிருப்பவைகளுமான அஸுரக் கூட்டங்கள் பயந்தன. கிட்ட அணுகமுடியாதவர்களான ஸ்கந்தருடைய பாரிஷதர்களால் பயந்த அஸுரர்கள் ஆயிரமாயிரமாகக் கொன்று தின்னப்பட்டார்கள். மிகக்களித்தவர்களும் தானவர்களைத் தின்பவர்களும் இரத்தத்தைக் குடிப்பவர்களுமான அந்த ஸ்கந்தருடைய பாரிஷதர்கள் ஒரு க்ஷணத்தில் அந்த எல்லா யுத்தகளங்களையும் அஸுரர்களில்லாமல் செய்தனர். சிறந்த கீர்த்திபுள்ளவரான ஸ்கந்தர், ஸூர்யன்

இருள்களைப் போக்குவதுபோலவும், அக்னி மரங்களை எரிப்பது போலவும், காற்று மேகங்களைச் சிதறச் செய்வதுபோலவும், தம் வீர்யத்தால் பகைவர்களை அழித்தார். தேவர்களாலே நன்கு பூஜிக்கப்படுகிறவரும் க்ருத்திகாதேவிகளின் புத்திரருமான ஸ்கந்தர் மஹேஸ்வரரை வந்தனம் செய்து, கிரணங்கள் பரவுகின்ற ஸூர்யன் போலப் பிரகாசித்தார். பகைவர்களை அழித்தவரான ஸ்கந்தர், மஹேஸ்வரரை அடைந்தபொழுது, இந்திரன் (அந்த) மஹாஸேன ரைக்கட்டிக்கொண்டு, 'ஸ்கந்தரே! யுத்தத்தில் தேவர்களால் ஜயிக்க முடியாதவனும் பிரம்மாவினுல் வரங்கொடுக்கப்பட்டவனும் மிக்க பலசாலியுமான அப்படிப்பட்ட இந்த மஹிஷாஸுரன் உம்மால் கொல்லப்பட்டான். ஜயிப்பவர்களுள் சிறந்தவரே! மகாபாகுபல முள்ளவரே! தேவர்கள் எவனுக்குத் துரும்பு போலானர்களோ அப்படிப்பட்ட இந்தத் தேவ சத்ருவான மஹிஷன் உம்மால் ஒழிக்கப்பட்டான். யுத்தத்தில் எவர்களால் நாங்கள் முன்பு தவிக் கும்படி செய்யப்பட்டோமோ அப்படிப்பட்ட மஹிஷனுக்கு ஒப் பானவர்களும் தேவசத்ருக்களுமான அநேக தானவர்கள் உம்மால் கொல்லப்பட்டார்கள். மற்றத்தானவர்கள் நூறு நூருகவும் கூட்டங்கூட்டமாகவும் உம்மைச் சேர்ந்தவர்களால் தின்னப் பட்டார்கள். பிரபுவான உமாபதிபோல நீர் யுத்தத்தில் பகைவர் களால் வெல்லப்படத்தகாதவர். தேவரே! இந்தக் காரியமானது, உம்முடைய முதலாவது வெற்றியென்று பிரஸித்தியடையும். மூவுலகங்களிலும் உம்முடைய புகழும் அழிவற்றதாகும். மிக்க வலிய தோள்களுள்ளவரே! தேவர்கள் உமக்கு வசப்பட்டவர்களா வார்கள்' என்று சொன்னன். சசீபதியான இந்திரன் இவ்வண்ணம் மஹாஸேனரைப் பார்த்து உரைத்துவிட்டு, பகவானை முக் கண்ணரால் அனுமதி கொடுக்கப்பெற்று, தேவர்களோடு திரும்பி னன். ருத்திரர் பத்ரவடத்தைக் குறித்துச் சென்ருர். தேவர் களும் திரும்பினர்கள். ருத்ரர், தேவர்களை நோக்கி, 'ஸ்கந்தனை என்னைப்போலப் பாருங்கள்' என்று சொன்னர். அக்னிபுத்திரரான அந்த ஸ்கந்தர் தானவகணங்களைக் கொன்று மஹரிஷிகளால் பூஜிக்கப்படுகின்றவராகி, மூவுலகங்களை முழுமையும் ஒரு பகலில் ஜயித்தார்.

எந்தப் பிராம்மணன் மனத்தை அடக்கி இந்த ஸ்கந்த ருடைய உத்பத்தியைச் சொல்லுகிற உபாக்கியானத்தைப் படிப் பனே, அல்லது, பிராம்மணனிடமிருந்து கேட்பனே, எவன் அறியாதவனைக் கேட்கும்படி செய்வனே அந்த ப்ராம்மணன் தனங்

களையும் ஆயுளையும் கீர்த்தியையும் காந்தியையும் புத்திரர்களையும் சத்துரு ஜயத்தையும் புஷ்டியையும் இவ்வுலகில் நன்றாக அடைந்து மறுமையில் ஸ்கந்தருடைய ஸாலோக்யத்தை அடைவான்' என்று கூறினர்.

## இருநூற்றுமுப்பத்துமூன்றுவது அத்யாயம்.

## மார்க்கண்டேயஸமாஸ்யாபர்வம். (தொடர்ச்சி.)

(மார்க்கண்டேயர் ஸ்கந்தருடைய நாமங்களைக் கூறியது.)

யுதிஷ்டிரர், 'பகவானே! பிராம்மணோத்தமரே! மகாத்மாவான இந்த ஸ்கந்தருடைய மூவுலகங்களிலும் பிரஸித்திபெற்ற நாமங்களைக் கேட்க விரும்புகிறேன்' என்று வினவினர். பாண்டு புத்திரரான யுதிஷ்டிரரால் இவ்வாறு சொல்லப்பட்டவரும் மகாத்மாவும் மிக்க தவமுள்ளவருமான மார்க்கண்டேய பகவான், அப்பொழுது அவரைப் பார்த்து, 'எந்த மனிதன் கார்த்திகேயருடைய ஆக்னேயன், ஸ்கந்தன், தீப்தகீர்த்தி, அனுமயன், மயூரகேது, தர்மாத்மா, பூதேசன், மஹிஷார்த்தனன், காமஜித், காமதன், காந்தன், ஸத்தியவாக், புவனேஶ்வரன், சிசு, சீக்கிரன், சுசி, சண்டன், தீப்தவர்ணன், சுபானனன், அமோகன், அநகன், ரௌத்திரன், ப்ரியன், சந்திரானனன், தீப்தசக்தி, ப்ரசாந்தாத்மா, பத்ரகுக்குடமோஹனன், ஷஷ்டீப்ரியன், தர்மாத்மா, பவித்ரன், மாத்ருவத்ஸலன், கன்யாபர்த்தா, விபக்தன், ஸ்வாஹேயன், ரேவதீஸுதன், ப்ரபு, நேதா, விசாகன், நைகமேயன், ஸுதுஶ்சரன், ஸுவ்ரதன், லலிதன், பாலக்கிரீடநகப்பிரியன், கசாரி, ப்ரம்மசாரி, சூரன், சரவணோத்பவன், விஶ்வாமித்ரப்ரியன், தேவஸேனாப்ரியன், வாஸுதேவப்ரியன், ப்ரியன், ப்ரியக்ருத் என்கிற திவ்ய நாமங்களைப் படிப்பனோ அவன் ஸ்வர்க்கத்தையும் கீர்த்தியையும் பொருளையும் அடைவான். இதில் ஸம்சயமில்லை. கௌரவர்களுள் சிறந்த வீரனே! தேவர்களாலும் ரிஷிகளாலும் அன்புடன் அடையப்பட்டவரும் சக்தியுடன் கூடியவரும் அளத்தற்கரியவரும் ஆறுமுகங்களுள்ளவரும் சிறந்த வீரருமான குஹரை நான் துதிசெய்யப்போகிறேன். இந்தக் குஹருடைய நாமதேயங்களை நீ அறிந்துகொள்வாயாக. (அந்தத்துதி,) 'ஸ்கந்தரே! நீர் பிராம்மணர்களுக்கு ஹிதத்தைச் செய்பவர்;

பிரம்மத்தினிடமிருந்து உண்டானவர்; பிரம்மத்தை அறிந்தவர்; (கர்ம) பிரம்மத்தினிடத்தில் படுத்திருப்பவர்; வேதமுள்ளவர்களுள் மிகச்சிறந்தவர். நீர் பிராம்மணப்ரியர்; பிராம்மணர்களுக்கு எல்லாவிதத்தாலும் மந்திரியாக இருப்பவர். நீர் வேதங்களுக்கும் பிராம்மணர்களுக்கும் தலைவர். நீர் ஸ்வாஹையாகவும் ஸ்வதையாகவும் ஒப்பற்ற பரிசுத்த வஸ்துவாகவுமிருக்கிறீர். நீர் மந்திரங்களால் துதிக்கப்படுகிறீர். நீர் ஆறு நாக்களுள்ளவரென்று பிரஸித்திபெற்றிருக்கிறீர். நீர் ஸம்வத்ஸரம்; ஆறு ருதுக்கள். நீரே மாதங்கள்; பக்ஷங்கள்; பகல்; திசைகள். நீர் தாமரைக்கண்ணர். நீர் தாமரைமலர்போன்ற முகங்களுள்ளவர்; ஆயிரம் கண்ணுள்ளவர்; ஆயிரம் கைகளுள்ளவர். நீர் லோகபாலர்; சிறந்த ஹவிஸ். நீர் தேவாஸுரர்களனைவரையும் போஷிப்பவர். நீரே ஸேனாதிபதி; ப்ரசண்டர்; ப்ரபு; விபு. நீர் இந்திரனை ஜயித்தவர். நீர் ஆயிரம் கால்களுடன் கூடியவர். நீரே தரணி; ஸஹஸ்ர துஷ்டி; ஸஹஸ்ரபுக்; ஆயிரம் தலைகளுள்ளவர்; அநந்தரூபர், நீர் ஸஹஸ்ரபாத். நீர் பத்துச் சக்திகளைத் தரித்திருப்பவர். நீர் உமதிஷ்டத்தினால் கங்கைக்குப் புத்திரரானவர். அப்படியே, ஸ்வாஹைக்கும் பூமிக்கும் க்ருத்திகைகளுக்கும் புத்திரர். ஷண்முகரே! இஷ்டப்படி பற்பலவிதமான ரூபங்களைத் தரித்துக்கொண்டு நீர் கோழியோடு விளையாடுகிறீர். தேவரீர் தீக்ஷையாகவும் ஸோமனாகவும் மருத்துக்களாகவும் எப்பொழுதும் தர்மமாகவும் வாயுவாகவும் பர்வதராஜனாகவும் இந்திரனாகவும் இருக்கிறீர். நீர் ஸனாதன வஸ்துக்களுள்ளும் ஸனாதன வஸ்துவாக இருப்பவர்; பிரபுக்களுக்கும் பிரபுவாக இருக்கிறீர்; உக்கிரமான வில்லுள்ளவர்; பிரபஞ்சத்தை உண்டுபண்ணுகிறவர்; அஸுரர்களை அழித்தவர்; சத்துருக்களை ஜயிப்பவர்; தேவர்களுள் சிறந்தவர். நீரே அப்படிப்பட்ட ஸூக்ஷ்மமான ஒப்பற்ற தவமாக இருக்கிறீர்; பராபரவஸ்துக்களை அறிந்தவராக இருக்கிறீர்; நீர் பராபர வஸ்து. மகாத்மாவே! தர்மத்துக்கும் காமத்துக்கும் சிறந்த மற்ற வஸ்துக்களுக்கும் (தேவரீரே ஆதாரமாக இருக்கிறீர்.) இவ்வுலகமனைத்தும் உம்முடைய தேஜஸால் விளங்குகிறது. எல்லாத் தேவர்களுள்ளும் சிறந்த வீரரே! என்னால் துதிக்கப்பட்டவரே! லோகநாதரே! உலகமனைத்தும் உமது சக்தியினால் வியாபிக்கப்பட்டிருக்கிறது. பன்னிரண்டு கண்களையும் கைகளையுமுடையவரே! உமக்கு வந்தனம். இதற்கு மேற்

பட்ட உம்முடைய கதியை நான் அறியேன்' என்பது. எந்தப் பிராம்மணன் மன அடக்கமுள்ளவனாக இந்த ஸ்கந்தருடைய ஜனனத்தைப் படிப்பனோ, எவன் பிராம்மணர்களைக் கேட்கும்படி செய்வனோ, எவன் பிராம்மணர்களால் சொல்லப்பட்ட ஸ்கந்தருடைய ஜனனத்தைக் கேட்பனோ அவன் தனத்தையும் ஆயுளையும் கீர்த்தியையும் ஒளியையும் புத்திரர்களையும் அப்படியே சத்துரு ஜயத்தையும் புஷ்டியையும் துஷ்டியையும் நன்றாக அடைந்து ஸ்கந்தருடைய ஸாலோக்யத்தை அடைவான்' என்று கூறினார்.

மார்க்கண்டேயஸமாஸ்யாபர்வம் முற்றிற்று.

## இருநூற்றுமுப்பத்துநான்காவது அத்யாயம்.

## த்ரௌபதீஸத்யபாமாஸம்வாதபர்வம்.

(ஸத்யபாமை பர்த்தாவை வசப்படுத்துகிற உபாயத்தை வினவியதும், திரௌபதி அதற்கு விடை கூறுமுகத்தால் பதிவ்ரதைகளுடைய தர்மத்தைக் கூறியதும்.)

பாரதரே! பாண்டவர்களும் பிராம்மணர்களும் உட்கார்ந்த பிறகு, த்ரௌபதியும் ஸத்யபாமையும் அப்பொழுது அந்த ஆச்ரமத்தில் ஓரிடத்தில் ப்ரவேசித்தார்கள். உத்தமஸ்திரீகளான அவ்விருவரும், புண்யாச்ரமத்தில் பிரவேசித்து, ஒருவரைவிட ஒருவர் சிரிப்புமேலிட்டவர்களாகவும் அன்புமிக்கவர்களாகவும் அந்த ஆச்ரமத்தில் ஸுகமாக வீற்றிருந்தார்கள். ராஜேந்திரரே! ஒருவரோடொருவர் பிரியவசனங்களைச் சொல்பவர்களான அவ்விருவரும், நெடுங்காலத்திற்குப் பிறகு பார்த்ததனால், கௌரவர்களுக்கும் யாதவர்களுக்கும் தகுந்த விசித்திரமான கதைகளைப் பேசிக்கொண்டார்கள். பிறகு, கிருஷ்ணனுடைய ப்ரிய மஹிஷியும் ஸத்ராஜித்தினுடைய குமாரியும் அழகிய இடையுள்ளவளுமான ஸத்யபாமையானவள், ஏகாந்தத்தில் யஜ்ஞஸேனனுடைய குமாரியான த்ரௌபதியைப்பார்த்து, 'த்ரௌபதி! லோகபாலர்களுக்கு நிகரானவர்களும் வீரர்களும் நிச்சயமாக (எல்லாராலும்) நன்கு ஒப்புக்கொள்ளப்பட்டவர்களுமான பாண்டவர்களை எந்தநடையினால் நீ ஆள்கிறாய்? கல்யாணீ! எவ்வாறு உனக்குப் பாண்டவர்கள் வசப்பட்டிருக்கிறார்கள்? உன் விஷயத்தில் அவர்

கள் எப்படி கோபிக்காமலிருக்கிறார்கள்? ப்ரியமான காட்சியுள்ளவளே! பாண்டவர்கள் உனக்கு எப்பொழுதும் வசப்பட்டிருக்கிறார்களல்லவோ? அழகிய இடையையுடையவளே! அவர்கள் எவ்வாறு ஒருவரிடத்தொருவர் அஸூயைப்படாமலிருக்கிறார்கள்? விரதானுஷ்டானமா? அல்லது, தவமா? ஸ்நானமா? மந்திரமா? ஔஷதங்களா? வித்தையினுடைய சக்தியா? தளராத யௌவனமுதலியவற்றின் சக்தியா? ஜபமா? ஹோமமா? அப்படியே, (மை முதலிய) மருந்துகளா? எதனால் அந்தப் பாண்டவர்களெல்லாரும் உன்முகத்தைப் பார்ப்பவர்களாக இருக்கிறார்கள்? இந்த உண்மையை எனக்குச் சொல்லுவாயாக. கிருஷ்ணையே! பாஞ்சாலி! எதனால் எனக்குக் கிருஷ்ணன் எப்பொழுதும் வசப்பட்டிருப்பனோ அப்படிப்பட்ட கீர்த்தியை உண்டுபண்ணக்கூடியதும் [1] ஸௌபாக்கியத்தை வ்ருத்தி அடையச் செய்கின்றதுமான ஸௌரவ்ரதமுதலியவற்றை எனக்குச் சொல்வாயாக' என்று வினவினாள். உத்தம கீர்த்தியையுடையவளான ஸத்யபாமை இவ்விதம் கூறிவிட்டுப் பேசாமலிருந்தாள்.

மகாபாக்கியமுள்ள பதிவ்ரதையான திரௌபதி அந்த ஸத்யபாமையைப்பார்த்து, 'ஸத்யா! கெட்ட ஸ்திரீகளுடைய நடையைப் பற்றி என்னைக்கேட்கிறாய். துஷ்டர்களாலே நடக்கப்பட்டிருக்கிற வழியில் எவ்வாறு (என்னால்) விடைகூற முடியும்? இந்த வினாவாவது ஸம்சயமாவது உன்னிடத்தில் பொருந்தாது. கிருஷ்ணனுடைய ப்ரியமஹிஷியான நீ எவ்விதம் இந்தப் புத்தியோடுகூடியவளாக இருக்கிறாய்? கணவன் மந்திரங்களாலாவது மூலிகைகளாலாவது தன்னை வசப்படுத்த முயல்கிறாளென்று மனைவியை அறிவனேயானால் அப்பொழுதே குடியிருக்கிற வீட்டை அடைந்திருக்கிற ஸர்ப்பத்தினிடம் நடுங்குவதுபோல அந்த ஸ்திரீயினிடமிருந்து நடுங்குவான். பயந்த புருஷனுக்கு மனவமைதி ஏது? அமைதியில்லாதவனுக்கு ஸுகமேது? கணவன் ஒருபொழுதும் மந்திரத்தினால் மனைவிக்கு வசப்படமாட்டான். பகைவர்கள் பயங்கரமான வியாதிகளை உண்டுபண்ணுகிறார்கள். கொல்ல எண்ணங்கொண்டவர்கள் மூலிகாப்ரயோகங்களால் விஷத்தைக் கொடுக்கிறார்களல்லவோ? புருஷன் எவைகளை நாக்கினாலோ தோலினாலோ அனுபவிக்கிறானோ அவைகளில் போடப்பட்ட சூர்ணங்கள் அவனை விரைவாகக் கொன்றுவிடும். ஸம்சயமில்லை. ஸ்திரீ

---

[1] வேறுபாடம்.

களால் புருஷர்கள் உதர ரோகத்துடன் கூடியவர்களாகவும், குஷ்டரோகமுள்ளவர்களாகவும், அப்படியே நரையுள்ளவர்களாக வும், ஆண்மைத்தனமில்லாதவர்களாகவும், ஞானமில்லாதவர் களாகவும், குருடர்களாகவும், செவிடர்களாகவும் செய்யப்படுகிறார் கள். பாப ஸ்திரீகளை அனுஸரிக்கின்ற அந்தப் பாபஸ்திரீகள் பர்த்தாக்களைத் தோஷங்களோடு சேரும்படி செய்கிறார்கள். ஸ்திரீ யினால் பர்த்தாவுக்கு ஒருபொழுதும் எவ்விதத்தினாலும் அப்ரிய மான கார்யம் செய்யத்தக்கதன்று. கீர்த்தியுள்ள ஸத்தியபாமையே! நான் மகாத்மாக்களான பாண்டவர்களிடம் எந்த நடையுடனிருக் கிறேனோ உண்மையான அந்த நடைமுழுமையும் என்னிட மிருந்து கேட்பாயாக.

நான், அஹங்காரத்தையும் காமக்ரோதங்களையும் எப்பொழுதும் விட்டுப் பரிசுத்தையாக இருந்துகொண்டு நித்யம் மனைவிகளுடன் கூடின பாண்டவர்களை உபசரிக்கிறேன். பொறாமையை விட்டுச் சித்தத்தை என்னிடத்தில் நன்கு நிலைபெறச்செய்து அபிமானத்தை விட்டவளாகப் பதிகளுடைய சித்தத்தைப் பாதுகாத்துக்கொண்டு அவர்களுக்குப் பணிவிடை செய்கிறேன். கெட்ட சொல்லினின்றும், கெட்ட இடத்தில் நிற்பதினின்றும், கெட்டவர்களைப் பார்ப்பதினின் றும், கெட்டஇடத்தில் உட்கார்வதினின்றும், கெட்டவர்களோடு செல்வதினின்றும், இங்கிதத்துடன் கூடின பார்வையினின்றும் அச்சமுள்ளவளாக, ஸூர்யனுக்கும் அக்னிக்கும் சந்திர னுக்கும் ஒப்பானவர்களும், மஹாரதர்களும் பார்த்த மாத்ரத் தினாலேயே பகைவர்களைக் கொல்பவர்களும், உக்கிரமான வீர்யமும் பிரதாபமுமுள்ளவர்களுமான பார்த்தர்களை அடைந்து சுச்ரூஷை செய்கிறேன். தேவனோ மனுஷ்யனோ கந்தர்வனோ யௌவனமுள்ளவனோ நன்றாக அலங்கரிக்கப்பட்டவனோ திரவிய முள்ளவனோ அழகுள்ளவனோ எப்படிப்பட்டவனாக இருந்தாலும், அன்ய புருஷன் என்னால் நினைக்கப்படமாட்டான். பர்த்தா போஜனம் செய்யாமலும் ஸ்நானம் செய்யாமலும் படுக்காமலு மிருக்கும் தருணத்தில், [1] வீட்டு வேலைகளை நான் செய்துகொண்டே இருப்பேன்; படுக்கவும் மாட்டேன்; புஜிக்கவும் மாட்டேன்; ஸ்நானம் செய்யவும் மாட்டேன். விளைநிலத்தினின்றோ வனத்தி னின்றோ கிராமத்தினின்றோ வீட்டிற்கு வந்திருக்கிற பர்த்தாவை,

[1] 'எங்கள் வேலைக்காரர்கள் நீராடி உண்டு உறங்கு முன்னும்' என் பது வேறு பாடத்தின் பொருள்.

விரைந்து எழுந்திருந்து, ஆஸனத்தாலும் தீர்த்தத்தாலும் நான் உப சரித்து ஆநந்தமடையச் செய்கிறேன். பாத்திரங்களை நன்றாகச் சுத்தி செய்பவளும், ருசியுள்ள அன்னங்களைப் பக்குவம் செய்ப வளும், காலத்தில் போஜனங்களைக் கொடுப்பவளும், நல்ல அடக்க முள்ளவளும், தான்யங்களைப் பாதுகாப்பவளும், வீட்டை நன்கு மெழுகிப் பெருக்கிச் சுத்திசெய்பவளும், அவமதியாத பேச்சுள்ள வளும், கெட்ட ஸ்திரீகளை அநுஸரியாதவளும், எப்பொழுதும் ஆலஸ்யமில்லாதவளும், என்றும் அநுகூல காரியத்தைச் செய்ப வளுமாயிருக்கிறேன்; பரிஹாஸமில்லாத சிரிப்பையும், அடிக்கடி தலைவாசலிலிருப்பதையும், வீட்டைச்சேர்ந்த பூந்தோட்டங்களில் நெடுங்காலமிருப்பதையும் விலக்குகிறேன்; அளவுமீறின பேச்சை யும், மகிழ்ச்சியில்லாமையையும், அன்ய மனிதர்களுடைய செய் கைகளைப்பற்றின கதைகளையும், அதிகச் சிரிப்பையும், அதிக கோபத்தையும், கோபத்திற்குக் காரணத்தையும் விலக்குகிறேன். நான், எப்பொழுதும், ஸத்தியத்திலும் பாபங்களை விலக்குவதி லும் பற்றுதலுள்ளவளாக இருக்கிறேன். பர்த்தாவுக்கு எது ஹிதமில்லாததோ அது எனக்கு எவ்விதத்தாலும் ஒருபொழுதும் இஷ்டமாக இராது. பர்த்தா ஏதாவது ஒரு குடும்ப கார்யத்தை உத்தேசித்துத் தேசாந்தரம் போவாரேயாகில் நான் புஷ்பங்களை அணியாதவளாகவும் (சந்தனம் முதலியவைகளைப்) பூசிக்கொள் ளாதவளாகவும் வ்ரதத்தை அநுஷ்டிப்பவளாகவுமிருக்கிறேன். எதை என் பர்த்தா பானம் செய்யமாட்டாரோ, எதை என் பர்த்தா அநுபவிக்கமாட்டாரோ, எதை என் பர்த்தா புஜிக்கமாட்டாரோ அவையெல்லாவற்றையும் நான் விலக்குகிறேன். உத்தமஸ்திரீயே! பெரியோர்களுடைய உபதேசப்படி நியமத்துடன்கூடி இருப்பவ ளாகவும் நன்றாக அலங்கரிக்கப்பட்டவளாகவும் நல்ல பரிசுத்தி யுள்ளவளாகவும் பர்த்தாவினுடைய பிரியத்திலும் ஹிதத்திலும் பற்றுதலுள்ளவளாகவுமிருக்கிறேன். ஸத்யையே! முற்காலத்தில் என் மாமியாரால் குடும்பங்களில் எந்தத் தர்மங்கள் சொல்லப் பட்டனவோ அவைகளை எப்பொழுதும் ஆலஸ்யமில்லாதவளாக அநுஷ்டிக்கிறேன். பர்வகாலங்களில் பிக்ஷையிடுதல், பலியிடுதல், ஶ்ராத்த கார்யங்கள், ஸ்தாலீபாகங்கள், பூஜ்யர்களுக்கு மரியாதை யுடன் கூடின பூஜைகள் ஆகிய இவைகளும் இன்னும் மற்ற என் னால் அறியப்பட்டவைகளுமாகிய எல்லாவற்றையும் சோம்பலில் லாதவளாகப் பகலிலும் இரவிலும் அநுஸரிக்கிறேன். வினயங்களை

யும் நியமங்களையும் எப்பொழுதும் எல்லாவிதத்தாலும் அடைந் திருக்கிறேன். மெதுவாக இருப்பவர்களும் ஸத்தியத்தையே ஸ்வபாவமாகக் கொண்டவர்களும் ஸத்யத்தையும் தர்மங்களையும் பரிபாலனம் செய்பவர்களும் பல்லில் விஷமுள்ள ஸர்ப்பங்களைப் போலக் கோபிக்கிறவர்களுமான பதிகளை நான் உபசரிக்கிறேன். ஸ்திரீகளுக்குப் பதியை அண்டியிருத்தலென்கிற தர்மமே ஸநாதன தர்மமென்று என்னால் எண்ணப்பட்டிருக்கிறது. ஸ்திரீகளுக்கு அந்தப் பதிதான் தேவதை. அவன்தான் கதி. எவள் அந்தக் கணவனுக்கு அப்ரியத்தைச் செய்வாள்? எப்பொழுதும் கட்டுப் பட்டவளான நான் கணவர்களை மீறமாட்டேன்; அவர்களை மீறிப் புஜிக்கமாட்டேன்; அவர்களை மீறி அலங்கரித்துக்கொள்ளமாட் டேன்; மாமியாரை ஒருபொழுதும் நிந்திக்கமாட்டேன். ஸௌ பாக்யவதீ! அவதானத்தாலும் நித்யமான சுறுசுறுப்பினாலும் பெரியோருக்குச் செய்யும் பணியினாலும் பர்த்தாக்கள் எனக்கு வசப்பட்டிருக்கிறார்கள். வீரர்களைப்பெற்றவளும் ஸத்தியத்தைப் பேசுபவளும் பூஜிக்கத்தக்கவளுமான இந்தக் குந்திக்குப் பானங்க ளாலும் வஸ்திரங்களாலும் போஜனங்களாலும் நானே பணிசெய் கிறேன். ஒருபொழுதும் இந்தக் குந்தியை வஸ்திரங்களாலும் பூஷணங்களாலும் போஜனங்களாலும் மீறினவளாக இருக்க மாட்டேன். பூமிக்கு ஒப்பானவளான அந்தக் குந்தியை மிதமிஞ் சின சொற்களால் நான் பேசமாட்டேன். யுதிஷ்டிரருடைய அரண்மனையில் நித்தியம் முதலில் எண்ணாயிரம் பிராம்மணர்கள் ஸ்வர்ணபாத்திரங்களில் புஜிப்பார்கள். எண்பத்தெண்ணாயிரம் ஸ்நாதகர்களும் க்ருஹஸ்தர்களும் புஜிப்பார்கள். யுதிஷ்டிரர் எவர்களை அன்னபானங்களால் போஷிக்கிறாரோ அந்த மனிதர்க ளுள் ஒவ்வொருவரும் முப்பது முப்பது வேலைக்காரிகளையுடையவர். „ஊர்த்வரேதஸுகளான எந்த யதிகளுக்கு நன்றாகப் பக்குவம் செய்யப்பட்ட அன்னமானது பொற்பாத்திரங்களால் பரிமாறப் படுகிறதோ அப்படிப்பட்ட யதிகள் பதினாயிரவர்கள் புஜிப்பார் கள். வேதவாதிகளான அந்த எல்லாப் பிராம்மணர்களையும் வைச்வதேவமானவுடன் முதலில் கொடுக்கிற அன்னத்தினாலும் பானங்களாலும் வஸ்திரங்களாலும் போஜனங்களாலும் தகுதிப் படி பூஜித்தேன். மகாத்மாவான குந்தீபுத்ரருக்கு லக்ஷம் வேலைக் காரிகள். அந்த ஸ்திரீகள் சங்கினால் செய்யப்பட்ட தோள்வளை களை அணிந்தவர்களும் பொன்மாலைகளைக் கழுத்தில் பூண்டவர்

களும் நன்றாக அலங்கரிக்கப்பட்டவர்களும் மிகச்சிறந்த மாலைகளை யும் ஆபரணங்களையும் அணிந்தவர்களும் நல்ல நிறமுள்ளவர்களும் சந்தனங்களால் பூசப்பட்ட மேனியை உடையவர்களும் மணிகளை யும் பொன்னையும் தரித்தவர்களும் ஆடலிலும் பாடலிலும் வல்ல வர்களுமாயிருந்தார்கள். அந்த எல்லா ஸ்திரீகளுடைய பெயரை யும் ரூபத்தையும் போஜனங்களையும் வஸ்திரங்களையும் செய்யப் பட்ட கார்யங்களையும் செய்யப்படாத கார்யங்களையும் நான் அறி வேன். சிறந்த புத்தியுள்ளவரான குந்தீபுத்திரருடைய லக்ஷம் வேலைக்காரிகள் பாத்திரங்களைக் கையில் எடுத்துப் பகலிலும் இர விலும் அதிதிகளைப் போஜனம் செய்விப்பார்கள். இந்திரப்ரஸ்தத் தில் வஸிக்கின்ற யுதிஷ்டிரருடைய ஒவ்வொரு பிரயாணத்திலும் லக்ஷம் குதிரைகளும் லக்ஷம்யானைகளும் கூடவேசென்றன. யுதிஷ் டிரமகாராஜர் பூமியைப் பரிபாலனம் செய்துகொண்டிருக்கையில், இது இவ்வாறாக இருந்தது. அந்தப்புரஸ்திரீகளும் வேலைக்காரர் களுமாகிய எல்லாருடைய எண்ணிக்கையையும் அவர்கள் நடந்து கொள்ளவேண்டிய முறையையும் நானே ஏற்படுத்துகிறேன்; (அவர்களுடைய குறைகளைக்) கேட்கவும் கேட்கிறேன். மாட் டிடையர் ஆட்டிடையர் வரையில் (எல்லாருடைய) செய்யப் பட்டதும் செய்யப்படாததுமாகிய அனைத்தையும் நான் அறி வேன். கல்யாணியே! கீர்த்தியோடு கூடியவளே! பாண்டவர்களுள் நான் ஒருத்தியே அரசருடைய வரவையும் செலவையும் சொத்து முழுமையையும் அறிவேன். சிறந்த முகமுள்ளவளே! பரத ஶ்ரேஷ்டர்களனைவரும் என்னிடத்தில் குடும்ப முழுமையையும் ஒப்பித்துத் [1] தேவதோபாஸனத்தில் பற்றுதலுள்ளவர்களாகக் கவலையற்றிருக்கிறார்கள். என்னிடத்தில்வைக்கப்பட்டதும் கெட்ட எண்ணமுள்ளவர்களால் நிர்வகிக்க முடியாததுமான அப்படிப் பட்ட பொறுப்பை நான் எல்லாஸுகத்தையும் விட்டு இரவு பகலாக நிர்வஹிக்கிறேன். நிதிகளால் நிறைந்திருக்கின்றதும் குறைக்கமுடியாததுமான வருணனுடைய ஸமுத்திரம்போன்ற தும் தர்மத்தை அனுஷ்டிப்பவர்களான பதிகளுடையதுமான குறைவற்ற பொக்கசத்தை நான் ஒருத்தியே அறிகிறேன். குரு குலத்தில் தோன்றினவர்களான பர்த்தாக்களைப் பகலிலும் இரவி லும் பசிதாகங்களைப்பாராமல் ஆராதிக்கின்ற எனக்கு இரவும் பக

[1] 'ப்ரியத்தை அடைய முயலுகிறார்கள்' என்பது இங்கிலிஷ் மொழி பெயர்ப்பு.

லும் ஸமமாக இருக்கின்றன. ஸத்யையே! நான் நித்யம் பர்த்தாக்களுக்குமுன் விழித்துக்கொள்ளுகிறேன். அவர்கள் படுத்துக்கொண்டபிறகு படுத்துக்கொள்ளுகிறேன். இது பர்த்தாக்களை வசப்படுத்துகிற என்னுடைய உபாயம். நான் பர்த்தாக்களை வசப்படுத்துகிற இந்தப் பெரிதான உபாயத்தைச் செய்வதற்குத் தெரிந்துகொண்டிருக்கிறேன். கெட்ட ஸ்திரீகளுடைய செய்கையை நான் செய்ய மாட்டேன்; விரும்பவும் மாட்டேன்' என்று சொன்னாள். திரௌபதியினால் அப்பொழுது சொல்லப்பட்ட தர்மத்துடன் கூடின அந்த வசனத்தைக்கேட்டு, ஸத்யையானவள், தர்மத்தைச் செய்பவளான பாஞ்சாலியைக் கௌரவித்து, 'பாஞ்சாலீ! நான் உன்னை வேண்டிக்கொள்ளுகிறேன். யஜ்ஞஸேனனுடைய புத்திரியே! என்னுடைய குற்றத்தைப் பொறுக்கக்கடவாய். ஸகிகளுக்குப் பரிஹாஸத்துடன்கூடின ஸல்லாபமானது இஷ்டப்படி நடக்கிறதன்றோ?' என்று சொன்னாள்.

## இருநூற்றுமுப்பத்தைந்தாவது அத்யாயம்.

## த்ரௌபதீஸத்யபாமாஸம்வாதபர்வம். (தொடர்ச்சி.)

**(த்ரௌபதியானவள் கணவனை வசப்படுத்துகிற உபாயத்தை உபதேசிக்கும் முகத்தால் பதிவ்ரதா தர்மங்களைக் கூறியது; தொடர்ச்சி.)**

திரௌபதி, 'தோஷமில்லாத இந்தவழியைப் பர்த்தாவினுடைய சித்தத்தைக் கவருதற்காக உனக்குச் சொல்லுவேன். தோழியே! இந்தவழியில் உள்ளபடி நிலைபெற்றிருந்து சக்களத்திகளிடமிருந்து பர்த்தாவை வலிந்து வசப்படுத்திக்கொள்வாய். தேவர்களோடு கூடின எல்லா உலகங்களிலும் கணவன் போன்ற இப்படிப்பட்ட தேவதை ஒன்றும் இல்லை. அந்தப்பர்த்தாவினுடைய அருளிருந்தால் ஸ்திரீகளுக்கு விரும்பியவையெல்லாம் அடையப்பட்டவைகளாகும். அவன் கோபித்துக்கொண்டால் கெடுத்துவிடுவான். அந்தப் பர்த்தாவிடமிருந்து ஸ்திரீகளுக்குக் குழந்தைகளும் பலவிதபோகங்களும் அத்புதமானகாட்சியுள்ள சயனங்களும் ஆஸனங்களும் வஸ்திரங்களும் புஷ்பங்களும் கந்தங்களும் ஸ்வர்க்கலோகமும் பெரும்புகழும் உண்டாகின்றன.

இவ்வுலகத்தில் ஒருகாலும் ஸுகத்தால் ஸுகம் அடையத்தக்க தாகாது. பதிவ்ரதையானவள் கஷ்டத்தால் ஸுகங்களை அடைகிறாள். அப்படிப்பட்ட நீ, நட்பினாலும் அன்பினாலும் காயக் கிலேசத்தாலும் ஸ்நானங்களாலும் ஆஸனங்களாலும் அழகிய சிறந்த புஷ்பங்களாலும் ஸாமர்த்தியமான உபாயங்களாலும் பலவிதகந்தங்களாலும், 'இவளுக்கு நான் ப்ரியனாக இருக்கிறேன்' என்று கிருஷ்ணன் உன்னை அறிந்துகொண்டு முழுமனத்தோடும் உன்னையே வந்து அடையும்படி அவரை நீ பூஜிப்பாயாக. வாயிலில் வந்திருக்கிற பர்த்தாவினுடைய குரலைக் கேட்டவுடன், எழுந்திருந்து வீட்டின் மத்தியில் நிற்பாயாக; கணவர் உள்ளே வந்ததைக்கண்டு விரைவுடன் ஆஸனத்தாலும் பாத தீர்த்தத்தாலும் அவரைப் பூஜிப்பாயாக. வேலைக்காரிகள் தத்தம் இருப்பிடங்களுக்கு அனுப்பப்பட்டிருப்பார்களாகில் எழுந்திருந்து எல்லாக் கார்யங்களையும் நீயே செய்யவேண்டும். ஸத்யையே! 'எல்லாவிதத்தாலும் இவள் என்னை அடைந்திருக்கிறாள்' என்று இந்த உன்னுடைய மனோதர்மத்தைக் கிருஷ்ணன் அறியட்டும். உன்னிடம் உன் கணவர் சொல்வது ரஹஸ்யமில்லாததாயினும் அதனை நீ வெளியிடாமல் நன்கு பாதுகாக்கவேண்டும். ஏனெனில், உன்னுடைய யாராவது ஒரு சக்களத்தியானவள், வாஸுதேவரிடம் அதனைச் சொல்லக்கூடும். அதனால், அவர் உன்னிடத்தில் பிரியமில்லாதவராவார். உன்பர்த்தாவுக்கு நண்பர்களையும் அவரால் [1] அன்புபாராட்டப்படுகிறவர்களையும் அவருடைய நன்மையை நாடுகிறவர்களையும் பலவித உபாயங்களால் போஷிப்பாயாக. அந்தக் கிருஷ்ணனுக்கு எவர்கள் பகைவர்களோ எவர்கள் உபேக்ஷிக்கத்தக்கவர்களோ எவர்கள் அஹிதர்களோ அவர்களோடும் வஞ்சகர்களோடும் கர்வமுள்ளவர்களோடும் விலகியே இருப்பாயாக. புருஷர்களிடம் மதத்தையும் அஜாக்கிரதையையும் விட்டு [2] மௌனத்தைக் கைக்கொண்டு உன் உள்ளக்கருத்தை வெளியிடாமலிருப்பாயாக. உனக்குப் புத்திரர்களாக இருந்தாலும் பிரத்யும்னனும் ஸாம்பனும் ஏகாந்தத்தில் ஒருபொழுதும் நெருங்கத்தக்கவர்களல்லர். பெரியகுலத்தில் பிறந்தவர்களும் பாவஸம்பந்தமில்லாதவர்களுமான பதிவ்ரதாஸ்திரீகளோடு உனக்கு நேசமிருக்க

---

[1] 'ரம்யாம்' என்பது மூலம்; 'அவரிடம் பற்றுள்ளவர்கள்' என்பது இங்கிலீஷ் மொழிபெயர்ப்பு. [2] வேறு பாடம்.

வேண்டும். குரூரர்களும் பிறரை அவமதிப்பதில் ஸாமர்த்திய முள்ளவர்களும் பெருந்தீனிக்காரர்களும் திருட்டுத்தனமுள்ளவர் களும் பகைமுதலியன மேலிட்டவர்களும் [1] சாபல்யமுள்ளவர் களும் விலக்கத்தக்கவர்கள். இது கீர்த்தியை உண்டுபண்ணக் கூடியது; பாக்கியத்தை உண்டுபண்ணக்கூடியது; எப்பொழுதும் உனக்குப் பயனைத் தருவது; பகைவர்களை நாசம்பண்ணக்கூடியது. சிறந்த புஷ்பங்களுடனும் ஆபரணங்களுடனும் சந்தனம் கஸ்தூரி முதலிய வாஸனைப் பொருள்களுடனும்கூடியவளாக நல்ல வாஸனைப் பொருள்களால் பர்த்தாவை ஆராதிப்பாயாக' என்று கூறினாள்.

## இருநூற்றுமுப்பத்தாறுவது அத்யாயம்.

## த்ரௌபதீஸத்யபாமாஸம்வாதபர்வம். (தொடர்ச்சி.)

**(ஸத்யபாமை திரௌபதிக்கு இன்சொற்கூறியதும், கிருஷ்ணன் ஸத்யபாமையுடன் தன் நகரம் சென்றதும்.)**

ஜனார்த்தனர், மார்க்கண்டேயர் முதலிய பிராம்மணர்களோ டும் மகாத்மாக்களான பாண்டவர்களோடுங்கூடி அனுகூலமான கதைகளைச் சொல்லிக்கொண்டிருந்தார். பாரதரே! மதுஸூதனர், பிறகு, அவர்களோடு உள்ளபடி ஸம்பாஷணம் செய்துவிட்டு, தேரிலேறக்கருதி ஸத்யபாமையை அழைத்தார். பிறகு, ஸத்ய பாமை, அந்தச்சமயத்தில், த்ருபதராஜகுமாரியைத் தழுவிக் கொண்டு, 'க்ருஷ்ணையே! உனக்கு மனக்கவலை வேண்டாம்; வருத்தம் வேண்டாம்; உறக்கமின்மை வேண்டாம். தேவர்களுக் கொப்பான பர்த்தாக்களால் ஜயிக்கப்பட்ட பூமியை நீ அடை வாய். கருமையான கண்களுள்ளவளே! இம்மாதிரியான ஒழுக்கத் தோடும் சிறந்த லக்ஷணங்களோடும்கூடிய உன்னைப்போன்ற ஸ்திரீகள் நெடுங்காலம் துன்பத்தை அடையமாட்டார்கள். பகைவரை அழிக்கப்பெற்றதும் விரோதியில்லாததுமான இந்தப் பூமியை நீ பர்த்தாக்களோடுகூடி அவஸ்யம் அனுபவிப்பாய் என்று நான் கேட்டிருக்கிறேன். த்ருபதராஜகுமாரியே! த்ருதராஷ்டிரகுமாரர்களை வதம் செய்து பகைகளைத் தீர்த்துக்

[1] உத்யோகபர்வம் 174-ம் பக்கம், சாந்திபர்வம் 375-ம் பக்கம் குறிப்புக்களிற் காண்க.

கொண்டு, யுதிஷ்டிரரிடத்தில் பூமி நிலைபெற்றிருப்பதைப் பார்ப்பாய். எந்த ஸ்திரீகள், கானகம் செல்லுகின்ற உன்னைப் பார்த்து, கொழுப்பினால் மதிமயக்கமுள்ளவர்களாகி, உரக்கச் சிரித்தார்களோ அந்தக் கௌரவ ஸ்திரீகள் எண்ணம் குலைக்கப் பட்டதை நீ விரைவில் பார்ப்பாய். க்ருஷ்ணையே! துக்கத் தோடுகூடியவளான உனக்கு எவர்களால் அப்ரியமான கார்யம் செய்யப்பட்டதோ அவர்களனைவரையும் யமலோகத்திற்குப் புறப் பட்டவர்களாக அறிந்துகொள். உன்னுடைய குமாரனான ப்ரதி விந்தியன், அப்படிப்பட்ட ஸுதஸோமன், அர்ஜுனனுடைய புதல்வனான ச்ருதகர்மா, நகுலனுடைய குமாரனான சதாநீகன், ஸஹதேவனிடத்தினின்று உனக்குப் பிறந்த ச்ருதஸேனன் ஆகிய உன் குமாரர்களனைவரும், க்ஷேமமுள்ளவர்களாகவும் வீரர்களாக வும் அஸ்திரங்களில் தேர்ச்சி அடைந்தவர்களாகவும் இருக்கி றார்கள். இவர்கள் அபிமன்யுவைப்போல ப்ரீதியுள்ளவர்களாகவும் த்வாரகையில் அதிகப் பற்றுதலுள்ளவர்களாகவுமிருக்கிறார் கள். இந்தப் புத்திரர்களிடம் உன்னைப்போல ஸுபத்ராதேவி யானவள் எல்லாவிதத்தாலும் அன்புள்ளவளாக இருக்கிறாள். எதிரில்லாத ஸுபத்ரையானவள் உன் விஷயத்தில் ப்ரீதியுடைய வளாக இருக்கிறாள்; அந்த உன்னுடைய புத்திரர்கள்விஷயத்தி லும் மனவருத்தமில்லாதவளாக இருக்கிறாள்; அந்த உன் புத்திரர் களுடைய துக்கத்தால் துக்கமுள்ளவளாகவும், அப்படியே ஸுகத்தால் ஸுகமுள்ளவளாகவும் எல்லாவிதத்தாலும் உன் குமாரர்களைப் ப்ரீதியுடன் பாதுகாக்கிறாள். அப்படியே, ப்ரத்யும்ன னுடைய தாயாரான ருக்மிணியும் நடந்துகொள்ளுகிறாள். கேசவர், பானு முதலிய புத்திரர்களுடன் இவர்களை முக்யமாகப் பாதுகாக்கிறார். இந்தப் பிள்ளைகளுக்குப் போஜனவிஷயத்திலும் வஸ்திரவிஷயத்திலும் நித்யம் என் மாமனார் ஊக்கமுள்ளவராக இருக்கிறார். பலராமனை முதன்மையாகக்கொண்ட அந்தகர்களும் வ்ருஷ்ணிகளுமாகிய அனைவரும் உன் குமாரர்களை அன்புடன் அடைகிறார்கள். பெண்மணே! அவர்களுக்கும் ப்ரத்யும்னனுக்கும் (உன் பிள்ளைகளிடம்) நேசமானது ஸமானமாக இருக்கிறதன்றோ?" என்றாள்; இவ்வண்ணம் பிரியமாயும் ஸத்தியமாயும் மனத்துக் கினியதாயும் உள்ளக்கருத்தைப் பின்பற்றியதாயுமுள்ள வசனத்தை உரைத்து வாஸுதேவருடைய ரதத்தை நோக்கிப் பிரயாணத் தில் மனம் வைத்தாள். கிருஷ்ணனுடைய மஹிஷியான ஸத்ய

பாமையானவள் அந்த த்ரௌபதியைப் பிரதக்ஷிணம் செய்தாள். பிறகு, அழகிய ஸத்யபாமை சௌரியின் தேரிலேறினாள். பகைவர் களைத் தவிக்கச்செய்பவரும் யாதவர்களுள் மிகச்சிறந்தவருமான கிருஷ்ணன் புன்னகை செய்து த்ரௌபதியை இன்சொற்களால் ஸமாதானம் செய்து அவ்விடமிருந்து திரும்பி வேகமுள்ள குதிரைகளால் த்வாரகைக்குப் பிரயாணமானார்" என்று கூறினார்.

த்ரௌபதீஸத்யபாமாஸம்வாதபர்வம் முற்றிற்று.

---

## இருநூற்றுமுப்பத்தேழாவது அத்யாயம்.

## [1]கோஷயாத்ராபர்வம்.

(ஒரு பிராம்மணனிடத்தினின்று பாண்டவர்களுடைய வரலாற்றைக் கேட்ட திருதராஷ்டிரன் அவர்களைப்பற்றித் துக்கப்பட்டதும், அவர்களுடைய பராக்கிரமத்தை நினைத்துத் தன் புத்திரர் களுக்கு வதம் நிச்சயமென்றெண்ணி அவர்களைப் பற்றித் துக்கித்ததும்.)

ஜனமேஜயர், "இவ்வாறு வனத்திலிருப்பவர்களும், புருஷ ஸ்ரேஷ்டர்களும், குளிராலும் வெப்பத்தினாலும் காற்றினாலும் வெய்யிலாலும் துன்புறுத்தப்பட்ட அங்கங்களையுடையவர்களு மான பார்த்தர்கள் அந்த த்வைதவனத்திலுள்ள குளத்தையும் புண்யமான காட்டையும் அடைந்து அதற்குமேல் என்ன செய் தார்கள்?" என்று வினவினார்.

வைசம்பாயனர், "பிறகு, பாண்டுபுத்திரர்கள் அந்தக் குளத்தை அடைந்து ஜனக்கூட்டத்தை விட்டுவிட்டு இஷ்டமான கார்யங்களைச் செய்துகொண்டு அப்பொழுது அழகிய காடுகளி லும் மலைகளிலும் நதிதீரங்களிலும் ஸஞ்சரித்தார்கள். அப்படி வனத்தில் வஸிப்பவர்களான அந்தச் சிறந்த வீரர்களை வேதாத் தியயனம் செய்தவர்களும் தவத்தைப் பொருளாகக்கொண்டவர் களும் பழமையாக இருப்பவர்களுமான வேதார்த்தங்களை நன்கு அறிந்தவர்கள் வந்தடைந்தார்கள். பிறகு, புருஷஸ்ரேஷ்டர்களான பாண்டவர்கள் அவர்களைப் பூஜித்தார்கள். பிறகு, ஒரு ஸமயத் தில், உலகத்தில் கதைகளில் ஸமர்த்தனான ஒரு பிராம்மணன்,

[1] அரசன் பசுமந்தைகளைக் காணச் செல்லுதல்.

பூமியில் குருவம்சத்தில் பிறந்தவர்களான பாண்டவர்களை அடைந்தான். அவன், அவர்களோடு சேர்ந்திருந்துவிட்டுத் தற்செயலாக விசித்திரவீர்யனுடைய குமாரனை திருதராஷ்டிரமகாராஜனை அடைந்தான். பிறகு, உட்கார்ந்திருப்பவனும் மரியாதை செய்யப்பட்டவனுமான பிராம்மணன், கௌரவர்களுள் மிகச்சிறந்தவனும் வயதுசென்றவனுமான திருதராஷ்டிரமகாராஜனால் ஏவப்பட்டவனாகி, தர்மன் வாயு இந்திரன் இவர்களுடைய புத்திரர்களான யுதிஷ்டிரரும் பீமஸேனனும் அர்ஜுனனும் நகுல ஸஹதேவர்களும், காற்றினாலும் வெய்யிலாலும் வருத்தப்பட்ட அங்கங்களுடன் மெலிந்து உக்கிரமான துக்கத்தினுடைய வாயில் விழுந்திருப்பதாகவும், வீரர்களை நாதர்களாகக்கொண்ட திரௌபதி நாதனற்றவள்போலிருந்துகொண்டு பலவித கிலேசங்களை அனுபவிப்பதாகவும் சொன்னான். பிறகு, திருதராஷ்டிரமகாராஜன், அவனுடைய சொற்களைக்கேட்டு, இரக்கத்தினால் தாபமடைந்தவனும், அப்படிப்பட்ட ராஜபுத்திரர்களும் ராஜபௌத்திரர்களும் காட்டில் அவ்விதமான துக்கநதியை அடைந்திருக்கிறார்களென்பதை எண்ணி மனத்தில் தைன்யம் மேலிட்டவனும், அப்பொழுது உஷ்ணமான பெருமூச்சுக் காற்றினால் தாக்கப்பட்டவனுமாகி, மனத்தில் தைர்யத்தை அரிதில் அடைந்து, அவை அனைத்துக்கும் தானே காரணமென்றெண்ணிப் பின்வருமாறு புலம்பலானான்.

'உண்மைபேசுகிறவனும் சுத்தனும் புகழத்தக்க நடையுள்ளவனும் என்னுடைய புத்திரர்களுள் மிகச்சிறந்தவனும் அஜாதசத்ருவும் முற்காலத்தில் ஹம்ஸதூளிகாசயனத்தில் படுத்துறங்கினவனுமான தர்மராஜன் எவ்வாறு தரையில் படுக்கிறானோ? இந்திரனுக்கொப்பானவனும் உறங்குகின்றவனுமான எந்தத் தர்மராஜன் அதிகாலையில் துதிக்கின்ற மாகதர்களாலும் ஸூதபுத்திரர்களாலும் நித்யம் எழுப்பப்படுவனோ அவன் இப்பொழுது நிச்சயமாகத் தரையில்படுத்திருந்து விடியற்காலத்தில் பக்ஷிகளுடைய கூட்டங்களால் எழுப்பப்படுகிறான். காற்றினாலும் வெய்யிலாலும் சரீரம் இளைத்தவனும், கோபத்தினால் நிரம்பிய சித்தமுள்ளவனும், அப்படிப்பட்ட கஷ்டங்களில் பழக்கமில்லாத மேனியுடையவனுமான பீமஸேனன் த்ரௌபதிக்கெதிரில் [1] எவ்விதம் தரையில் படுக்கிறானோ? அப்படியே மென்மைத்

[1] பொருள் இரட்டித்தலால் ஒரு சொல் விடப்பட்டது.

தன்மையுள்ளவனும் நல்லமனமுள்ளவனும் அரசனான தர்மநந்தன னுடைய வசத்திலிருப்பவனும் மிக்க துன்பத்தை அடைந்தவை போன்ற எல்லா அங்கங்களையுமுடையவனுமான அர்ஜுனன் கௌரவர்கள்மீது உள்ள கோபத்தினால் இராக்காலங்களில் நிச்சய மாகப் படுத்துறங்கமாட்டான். உக்கிரமான தேஜஸுள்ள அர்ஜு னன், ஸுகத்தால்விடுபட்டிருக்கிற நகுலஸஹதேவர்களையும் த்ரௌ பதியையும் யுதிஷ்டிரரையும் பீமனையும் பார்த்து, ஸர்ப்பம்போலப் பெருமூச்சு விட்டுக்கொண்டு கோபத்தினால் நிச்சயமாக இராக் காலங்களில் படுத்து உறங்கமாட்டான். அப்படியே, ஸுகத்துக்கே தகுந்தவர்களும், ஸுகத்தை இழந்தவர்களும், அழகு நிரம் பினவர்களும், தேவலோகத்திலுள்ள தேவர்கள்போன்றவர்களும், விழித்துக்கொண்டேயிருப்பவர்களும், மனத்திற்கு ஆறுதலில்லா தவர்களும், கோபத்தாலும் ஸத்தியத்தாலும் தடுக்கப்படுகின் றவர்களுமான நகுல ஸஹதேவர்களைப்பார்த்து நிச்சயமாகப் படுத் துறங்கமாட்டான். பலத்தினால் வாயுவைப்போன்றவனும் சிறந்த பலமுள்ளவனுமான வாயுகுமாரனான பீமன், ஜ்யேஷ்ட னான யுதிஷ்டிரனால் தர்ம பாசத்தால் கட்டப்பட்டவனாகப் பெரு மூச்சு விட்டுக்கொண்டு நிச்சயமாகக் கௌரவர்கள்மீதுள்ள கோபத்தை அடக்கிக்கொண்டிருப்பான். யுத்தத்தில் மற்றவர் களைக்காட்டிலும் வீர்யத்தினால் மேற்பட்டவனான அந்தப் பீம ஸேனனும், பூமியில் புரளுகின்றவனும் என் பிள்ளைகளுடையவதத் தை விரும்புகின்றவனும் ஸத்தியத்தாலும் தர்மத்தாலும் தடுக் கப்படுகின்றவனுமாகிக் காலத்தை எதிர்பார்த்திருக்கிறான். அஜாதசத்துருவானவன் கபடமான சூதாட்டத்தால் ஜயிக்கப் பட்டபோது துச்சாஸனன் சொல்லிய கடுஞ்சொற்கள் விருகோ தானுடைய அங்கத்தில் பிரவேசித்துக் காட்டுத்தீயானது விறகு களை எரிப்பதுபோல் எரிக்கின்றன. தர்மபுத்திரன் தீங்கு நினைக்க மாட்டான். தனஞ்சயனும் அவனை அனுசரிப்பான். பீமனுடைய கோபமானது காற்றினால் நெருப்பு மூள்வதுபோல அரண்ய வாஸத்தினால் மூள்கிறது. வீரனான அந்தப் பீமன் அந்தக் கோபத்தி னால் பிளக்கப்படுகின்றவனாகிக் கையினால் கையை முறுக்கிப் பிசை ந்துகொண்டு என் புத்திரனுடைய இந்தச் சேனையை எரிக்கிறவன் போல உஷ்ணமாகவும் மிக்க கோரமாகவும் பெருமூச்சு விட்டுக் கொண்டிருக்கிறான். கோபமுள்ளவர்களும் அந்தகனுக்கும் காலனுக்கும் ஒப்பானவர்களுமான அர்ஜுனனும், பீமனும், வஜ்

ராயுதம்போலப் பிரகாசிக்கின்ற அம்புகளை இறைத்துக்கொண்டு யுத்தத்தில் பகைவர்களுடைய படையை மிச்சம் வைக்கமாட்டார்கள். துர்யோதனனும் சகுனியும் கர்ணனும் மிக்க மந்தபுத்தியுள்ளவனான துச்சாஸனனும் கொம்புநுனியிலிருக்கின்ற தேனைப்பார்க்கிறார்கள்; கீழே பீமஸேனன் தனஞ்சயனென்கிற படுகுழியிருப்பதைப் பார்க்கவில்லை. மனிதன் நல்ல கார்யத்தையோ கெட்ட கார்யத்தையோ செய்து பரிபாககாலத்தில் பயனை எதிர்பார்ப்பனேயாகில், அவன் தன்வசமில்லாமலே அந்தப்பயனோடு சேர்க்கப்படுகிறான்; மனிதனுக்கு அந்தப் பயனிலிருந்து எப்படி விடுதலுண்டாகும்? நிலமானது நன்றாக உழப்பட்டும் விதைவிதைக்கப்பட்டும் பர்வ காலத்தில் தக்கபடி மழை பொழிந்துமிருக்க, பயிரிட்டவனுக்குப் பலனானது கைகூடாமல் போமாகில் தெய்வத்தைத் தவிர வேறு யாது காரணமிருக்கிறது? கெட்டகாரியத்தைச் செய்தவனும் சூதாட்டத்தில் வல்லவனுமான சகுனியினாலும், நல்ல கார்யங்களில் சென்றவனான தர்மபுத்திரனாலும், கெட்ட பிள்ளைகளுக்கு வசப்பட்டு அவர்களை அனுஸரித்த என்னாலும் கௌரவர்களுக்கு இது நாசகாலமாக ஏற்படுத்தப்பட்டது. அக்கினியானது தூண்டப்படாமலிருந்தும் நிச்சயமாகத் தானாகவே எரிந்து தணிகிறது. கர்ப்பிணியானவள் நிச்சயம் பிரஸவிப்பாள். பகலின் தொடக்கத்தில் நிச்சயமாக இரவானது அழிந்துவிடுகிறது. அப்படியே, இரவின் தொடக்கத்திலும் பகல் நாசமடைகிறது. [1] (மனிதர்களுக்கு விவேகமிருக்குமானால்) நம்போன்றவர்கள் எதற்காக அநீதியினாலாவது பொருளைத் தேடுகிறார்கள்? மற்ற அரசர்களும் எதற்காகப் பொருளைத் தேடுகிறார்கள்? தேடிய பொருளை மனிதர்கள் (ஸாதுக்களாயிருந்தாலும்) எவ்விதத்தாலும் அறம் இன்பம் முதலியவைகளுக்காக ஏன் செலவிடுவதில்லை? ஆதலால், மனிதர்களுக்குப் பொருளைத் தேடுவதிலும் பாதுகாப்பதிலும் விலக்கமுடியாதபடி இயற்கையாகவே புத்தி அமைந்திருக்கிறது. 'பொருளைத் தேடாவிட்டால் அதனால் ஸாதிக்கத்தக்க விவாகமுதலியவற்றுக்குரிய காலத்தையடைந்தால், தனமில்லாதவனான எனக்குப் பொருளால் ஸாதிக்கத்தக்க கலியாணம் முதலியன எப்படி நடக்கும்? அந்தப் பொருளானது எந்த உபாயத்தால் கிடைக்கும்?' என்கிற வியாகுலமானது மனத்தில் உண்டாகும். மனிதனால், பொருளானது, 'எவ்வாறு பிரிவுபடாமலிருக்

[1] வேறு பாடம்.

கும்? எவ்வாறு அழியாமலிருக்கும்? எவ்வாறு சிறிது சிறிதாகச் செலவாகாமலிருக்கும்?' என்று பாதுகாக்கப்படவேண்டும்; பாதுகாக்கப்படாமற்போனால் நூறு துண்டாகச் சிதறிப்போய்விடும். உலகத்தில் செய்தவினையானது பயன் கொடாமல் அழிவதில்லை; நிச்சயம். தனஞ்சயன் காட்டிலிருந்தும் இந்திரலோகம் சென்றான்; நான்குவிதமான திவ்யாஸ்திரங்களையும் அறிந்து மீண்டும் இவ்வுலகத்தை அடைந்துவிட்டான். இவனுடைய வீர்யத்தைப் பாருங்கள், காலத்தால் அடிக்கப்பட்டவர்களும் மரிக்கப்போகிறவர்களுமான கௌரவர்களைப் பார்க்கிற (அர்ஜுனனைத்தவிர) வேறு எந்தமனிதன் சரீரத்தோடுகூடவே ஸ்வர்க்கத்தை அடைந்து மறுபடியும் திரும்பி வருவதற்கு விரும்புவான்? விற்பிடித்தவனோ இருகைகளாலும் அம்பெய்பவனாகிய அர்ஜுனன்; வில்லோ பயங்கரமான வேகத்துடன்கூடின அப்படிப்பட்ட காண்டீவம்; அஸ்திரங்களோ அப்படிப்பட்ட மஹிமையுள்ள திவ்யாஸ்திரங்கள். அந்த மூன்றினுடைய தேஜஸையும் இவ்வுலகில் எவன் தாங்குவான்?' என்று சொன்னான். அரசனுடைய அந்த வசனத்தைக் கேட்டு, பிறகு, சகுனி ஏகாந்தத்தில் துர்யோதனனுக்குத் தெரிவித்ததுடன் கர்ணனையும் அடைந்து அவை அனைத்தையும் தெரிவித்தான். அல்பபுத்தியுள்ள அந்தக் கர்ணனும் ஸந்தோஷமில்லாதவனானான்.

---

இருநூற்றுமுப்பத்தெட்டாவது அத்யாயம்.

## கோஷயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(தன் செல்வத்தைக் காட்டிப் பாண்டவர்களுக்கு மனவருத்தத்தை உண்டுபண்ணுவதற்காக த்வைத வனத்திற்குப்போகும்படி கர்ணனும் சகுனியும் துர்யோதனனை ஏவியது.)

திருதராஷ்டிரனுடைய அந்த வாக்கியத்தைக் கேட்டு, சகுனி, அப்பொழுது கர்ணனோடுகூடியவனாகித் தக்கஸமயத்தில் துரியோதனனைப் பார்த்து, 'பரதகுலத்திற்பிறந்தவனே! உன் வீர்யத்தினால் வீரர்களான பாண்டவர்களைக் காட்டிற்கு ஓட்டிவிட்டமையால், ஸ்வர்க்கத்தை இந்திரன் அனுபவிப்பதுபோல, நீ ஒருவனாக இந்தப் பூமியை அனுபவிப்பாயாக. அரசனே! ஸமுத்திரங்களால் சூழப்பட்டதும் மலைகளும் காடுகளுமுள்ளதும் ஸ்தாவரங்

களோடும் ஜங்கமங்களோடும்கூடியதுமான பூமியானது இப்பொழுது உனக்கு முழுமையும் வசப்பட்டதாயிற்று. அரசனே! கீழ்நாட்டிலும் தென்னாட்டிலும் மேல்நாட்டிலும் வடநாட்டிலுமுள்ள எல்லா அரசர்களும் உனக்குக் கப்பங் கொடுப்பவர்களாகச் செய்யப்பட்டார்கள். அரசனே! முற்காலத்தில் எந்த லக்ஷ்மியானவள் பிரகாசிப்பவள்போலப் பாண்டவர்களை அடைந்திருந்தாளோ அந்த லக்ஷ்மியானவள் இப்பொழுது உன்னால் பிராதாக்களோடு அடையப்பட்டாள். அரசனே! மிக்க தோள்வலியமைந்தவனே! இந்திரப்ரஸ்தத்தை அடைந்த யுதிஷ்டிரனிடத்தில் பிரகாசித்துக்கொண்டிருந்த எந்த லக்ஷ்மியை நாம் நெடுங்காலம் துக்கத்தால் வாடினவர்களாகிப் பார்த்தோமோ அப்படிப்பட்ட இந்த லக்ஷ்மியானவள், உன்னால் புத்திபலத்தினால் அப்படிப்பட்ட அரசனிடமிருந்து கவரப்பட்டு, ஜ்வலிக்கிறவள்போலக் காணப்படுகிறாள். ராஜேந்திரனே! பகைவீரர்களைக்கொல்பவனே! அப்படியே, அரசர்கள் அனைவரும், 'நாங்கள் எதைச் செய்யக்கடவோம்?' என்று சொல்லிக்கொண்டு உன் கட்டளையில் நிலைபெற்றிருக்கிறார்கள். அரசனே! அப்படிப்பட்ட நாங்களும் உனக்கு வசப்பட்டிருக்கிறோம். கடலால் சூழப்பட்டதும், மலைகளோடும் வனங்களோடுங்கூடியதும், கிராமங்களும் நகரங்களுமுள்ளதும், சுரங்கங்களோடுகூடியதும், பலவித வனப்ரதேசங்களுள்ளதும், பட்டணங்களால் விளங்குகின்றதும், [1] பிரகாசிக்கின்றதுமான இந்தப் பூமியும் உன் கட்டளையில் நிலைபெற்றிருக்கின்றது. அரசனே! நக்ஷத்திரங்களுக்கு அரசனான சந்திரன்போலப் பிராம்மணர்களால் மகிழ்விக்கப்படுகின்றவனாகிப் பிரகாசிக்கிறாய். ஸ்வர்க்கத்தில் தேவர்களுள் ஸூர்யன் பிரகாசிப்பதுபோலப் பராக்ரமத்தால் நீ பிரகாசிக்கிறாய். அரசனே! ருத்ரர்களாலே சூழப்பட்ட யமன்போலவும், [2] மருத்துக்களால் சூழப்பட்ட இந்திரன்போலவும், கௌரவர்களால் சூழப்பட்ட நீ நக்ஷத்திரங்களினிடையில் சந்திரன்போலப் பிரகாசிக்கிறாய். எவர்களால் உன்னுடைய ஆணையானது ஏற்றுக்கொள்ளப்படவில்லையோ, எவர்கள் உன்னுடைய ஆணையில் கட்டுப்பட்டிருக்கவில்லையோ அந்தப்பாண்டவர்களை ஸம்பத்தை இழந்தவர்களாகவும் வனவாஸிகளாகவும் பார்க்கிறோம். மஹாராஜனே! பாண்டவர்கள் வனவாஸிகளான பிராம்மணர்களோடுகூட த்வைதவனத்திலுள்ள

[1] அதிகபாடமான அரைஸ்லோகம் விடப்பட்டது.

[2] 'மருத்பி:' என்பது மூலம்; 'தேவர்களால்' என்றும் கொள்ளலாம்.

தடாகத்தினருகில் வஸித்துக்கொண்டிருக்கிறார்களென்பது கேட்கப் படுகிறதன்றோ? மகாராஜனே! அப்படிப்பட்ட நீ சிறந்த ஸம்பத்தோடுகூடியவனாகத் தேஜஸினால் ஸூர்யன்போலப் பாண்டு புத்திரர்களை ஸந்தாபத்தை அடையும்படி செய்துகொண்டு த்வைத வனம் போவாயாக. அரசனே! இராஜ்யத்தில் நிலைபெற்றவனும் செழிப்புள்ளவனும் பரிபூர்ணமான தனங்களோடுகூடினவனுமான நீ, ராஜ்யத்தினின்று நழுவினவர்களும் செழிப்பில்லாதவர்களும் ஸம்பத்தில்லாதவர்களுமான பாண்டுபுத்திரர்களைப் பார்ப்பாயாக. பாண்டவர்கள் மகிமைதங்கிய வம்சத்திலுதித்தவனும் பெரிதான மங்களத்தில் நிலைபெற்றிருப்பவனுமான உன்னை நகுஷனுடைய புதல்வனான யயாதியைப்போலப் பார்க்கட்டும். பிரஜைகளுக்கு அதிபதியே! பௌருஷங்களால் பிரகாசிக்கின்ற எந்த ஸம்பத்தை நண்பர்களும் பகைவர்களும் பார்க்கிறார்களோ அந்த ஸம்பத்தே சிறப்புள்ளதாகிறது. மலையின்மீதிருப்பவன் தரையிலிருப்பவர்களைப் பார்ப்பதுபோல நல்ல நிலைமையிலிருக்கிற எந்த மனிதன் கெட்ட நிலைமையிலிருக்கிற பகைவர்களைப் பார்க்கிறானோ அவனுக்கு அதைக்காட்டிலும் சிறந்த ஸுகமேது? அரசர்களுள் சிறந்தவனே! மனிதன் பகைவர்களுடைய கஷ்டத்தைப் பார்ப்பதனால் எந்த ப்ரீதியை அடைகிறானோ அந்த ப்ரீதியைப் புத்திரலாபத்தாலும் தனலாபத்தாலும் ராஜ்யலாபத்தாலும் அடைகிறானில்லை. கார்யஸித்தியைப் பெற்றிருக்கிற எந்த மனிதன் மரவுரியையும் மான்தோலையுமுடுத்தவனும் ஆச்ரமத்திலிருப்பவனுமான தனஞ்சயனைப் பார்ப்பனோ அவனுக்கு என்ன ஸுகம் உண்டாகாது? நல்ல வஸ்திரங்களைத் தரித்தவர்களான உன்னுடைய பார்யைகள், மரவுரியையும் மான்தோலையுமுடுத்தவளும் துக்கமுள்ளவளுமான கிருஷ்ணையைப் பார்க்கட்டும். அவளும் (உயிரில்) வெறுப்பை அடையட்டும். ஜனங்களுக்கு அதிபனே! இப்பொழுது, உன் மனைவிகளுடைய ஜ்வலிக்கின்ற செல்வத்தைப் பார்த்து அப்படியே தன்னையும் செல்வத்தினின்று நழுவியிருக்கிற ஜீவனத்தையும் விசேஷமாக நிந்தித்துக்கொள்ளட்டும். நன்றாக அலங்கரிக்கப்பட்டிருக்கிற உன்னுடைய பார்யைகளைப் பார்த்து எப்படிப்பட்ட மனவருத்தமுண்டாகுமோ அப்படிப்பட்ட மனவருத்தமானது அவளுக்கு ஸபைநடுவில் துகிலுரிந்தபொழுதும் உண்டாயிராது' என்று சொன்னான். ஜனமேஜயரே! கர்ணனும் சகுனியும் அரசனான துர்யோதனனைப் பார்த்து

இவ்வண்ணமுரைத்துப் பேச்சு முடிந்தபின் இருவரும் பேசாமலிருந்தார்கள்.

## இருநூற்றுமுப்பத்தோன்பதாவது அத்யாயம்.

## கோஷயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(கர்ணன், சகுனி முதலியவர்கள் த்வைதவனஞ் செல்லும் விஷயத்தில் கோஷயாத்ரையை உபாயமாக நிச்சயித்தது.)

கர்ணனுடைய வசனத்தைக் கேட்டு அரசனான துரியோதனன் ஸந்தோஷமுள்ளவனாகி மீண்டும் தைன்யமுள்ளவனாக ராதாபுத்திரனான கர்ணனைப் பார்த்து, 'கர்ண! நீ சொல்லுகிறதெல்லாம் என் மனத்திலிருக்கிறது. ஆனால், எவ்விடத்தில் பாண்டவர்கள் வஸிக்கிறார்களோ அவ்விடம் போவதற்குப் பிதாவினுடைய அனுமதி எனக்குக் கிடைக்காது. அரசரான திருதராஷ்டிரர் அந்த வீரர்களைப்பற்றிப் புலம்புகிறார்; அவர்களைத் தவத்தினால் நம்மைவிட மேற்பட்டவர்களென்றும் நினைக்கிறார். அல்லது, அரசர் நம்முடைய விருப்பத்தை அறிந்திருக்கக்கூடும். வருங்காலத்தில் நேரக்கூடிய இந்த அனர்த்தத்தை விலக்க எண்ணி எனக்கு அனுமதி கொடுக்கக் கூடாதவராயிருக்கிறார். வனத்திலிருக்கின்ற பகைவர்களான அந்தப் பாண்டவர்களுக்குத் துன்பத்தை உண்டுபண்ணுவதைத் தவிர வேறு ஒரு பிரயோஜனமும் த்வைதவனத்திலில்லையன்றோ? சூதாடுகிற சமயம் வந்தவுடன், விதுரர் என்னையும் உன்னையும் சகுனியையும் பார்த்து அப்பொழுது சொல்லிய வசனத்தை நீ அறிந்திருக்கிறாயன்றோ? அந்த எல்லா வாக்கியங்களையும் வேறான புலம்பலையும் நன்றாக ஆலோசித்தும் த்வைதவனத்தைக் குறித்துச் செல்வதற்கோ செல்லாமலிருப்பதற்கோ நிச்சயத்தை [1] நான் அடையவில்லை. அரண்யத்தில் துன்பப்படுகிறவர்களும் திரௌபதியுடனிருப்பவர்களுமான பீமார்ஜுனர்களை நான் பார்ப்பேனென்பதில் எனக்கும் அதிகமான ஸந்தோஷமுண்டு. மரவுரியையும் தோலையும் உடுத்துக்கொண்டிருக்கிற பாண்டுபுத்திரர்களைப் பார்த்தால் எவ்விதமான ப்ரீதியுண்டாகுமோ அவ்விதமான ப்ரீதியை இந்தப் பூமியை அடைந்து

[1] வேறுபாடம்.

கூட நான் அடையமாட்டேன். கர்ண! வனத்தில் காஷாயத்தை உடுத்தவளும் த்ருபதனுடைய குமாரியுமான த்ரௌபதியை நான் பார்ப்பேனென்பதைக் காட்டிலும் மேலானது என்ன இருக்கிறது? தர்மராஜனும், பாண்டுநந்தனனான பீமஸேனனும், நிகரற்ற ராஜ்ய லக்ஷ்மியோடு சேர்ந்திருக்கின்ற என்னைப் பார்ப்பார்களாகில் அப்பொழுதுதான் எனக்கு உயிர் உண்டாகும். நாம் அந்த வனத்திற்குச் செல்லக்கூடியதும் நான் வனத்திற்குச் செல்லும்படி அரசர் எனக்கு அனுமதி கொடுக்கக்கூடியதுமான உபாயத்தை நான் காணவில்லை. எந்த உபாயத்தால் அந்த வனத்திற்குச் செல்லுவோமோ அந்த உபாயத்தைச் சகுனியோடும் அப்படியே துச்சாஸனனோடும் கூடி ஸாமர்த்தியமாக ஆராயக்கடவாய். நானும் பிரயாணத்துக்கோ இங்கேயே இருப்பதற்கோ உன்னை அனுஸரிக்கிறேன். அரசரான திருதராஷ்டிரரிடம் அதிகாலையிலேயே செல்வேன். நானும் கௌரவர்களுள் சிறந்தவரான பீஷ்மரும் அந்த ராஜஸபையில் இருக்கும் பொழுது உன்னால் காணப்பட்ட உபாயத்தைச் சகுனியோடு சேர்ந்து சொல்வாயாக. அதற்குமேல், நான், பீஷ்மர் திருதராஷ்டிரர் இவர்களுடைய அபிப்ராயத்தைக் கேட்டுப் பிதாமஹரான பீஷ்மரை நயமாக வேண்டிக்கொண்டு வனப்பிரயாணத்தைக் குறித்து முயற்சியைச் செய்வேன்' என்று சொன்னான். 'அப்படியே ஆகட்டும்' என்று சொல்லிவிட்டு அவர்களெல்லாரும் தத்தம் வீடுகளைக்குறித்துச் சென்றார்கள்.

இரவு விடிந்தவுடன், கர்ணன் துர்யோதனராஜனை வந்தடைந்தான். பிறகு, கர்ணன், துரியோதனனைப் பார்த்து உரக்கச் சிரித்துக் கொண்டு, 'அரசனே! இந்த உபாயம் நன்கு கண்டறியப்பட்டது. அதை நீ தெரிந்துகொள். வேந்தே! த்வைதவனத்தில் எல்லா இடைச்சேரிகளும் உன்னை எதிர்பார்த்துக்கொண்டிருக்கின்றன. கோஷயாத்திரை என்கிற வியாஜத்தினால் த்வைதவனத்திற்குச் செல்வோம். ஸம்சயமில்லை. பிரஜைகளுக்கு நாதனே! எப்பொழுதுமே அரசர்களுக்குக் கோஷயாத்திரை செல்வது தகுதியன்றோ? அரசனே! இவ்வண்ணம் நீ சொல்வாயாகில் பிதா உனக்கு த்வைதவனம் செல்வதற்கு அனுமதி கொடுப்பார்' என்று சொன்னான். அவ்வாறு கோஷயாத்திரை விஷயமாக நிச்சயத்தை இருவரும் பேசிக்கொண்டிருக்கையில், காந்தாரதேசாதிபதியான சகுனி, சிரித்துக்கொண்டு, 'துரியோதன! த்வைதவனப்

பிரயாணத்தின்பொருட்டு இந்த உபாயத்தைக் குற்றமற்றதென்று நான் காண்கிறேன். அரசர் நமக்கு அனுமதி கொடுப்பார். மேலும், அவரே நம்மைப் போகும்படி ஏவுவார். அரசனே! த்வைதவனத்தில் எல்லாப் பசுக்கூட்டங்களையும் பாதுகாக்கின்ற இடையர்களனைவரும் உன்னை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். கோஷயாத்திரை என்கிற வியாஜத்தினால் த்வைதவனத்திலுள்ள தடாகத்தினருகில் செல்வோம்' என்று சொன்னான். பிறகு, அவர்களனைவரும் உரக்கச் சிரித்துக்கொண்டு ஒருவருக்கொருவர் கைகொடுத்துக்கொண்டார்கள். அதையே தக்கதென்று நிச்சயித்து எல்லாரும் ஒன்றுசேர்ந்து திருதராஷ்டிரனைக் கண்டார்கள்.

## இருநூற்றுநாற்பதாவது அத்யாயம்.

## கோஷயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(துரியோதனன் கோஷயாத்திரை என்கிற வியாஜத்தினால் தம்பிமார் முதலியவர்களோடு த்வைதவனத்துக்குச் சென்றது.)

ஜனமேஜயரே! பிறகு, எல்லோரும் திருதராஷ்டிரனைக் கண்டார்கள். பாரதரே! பிறகு, [1] அரசனுடைய ஸுகத்தைக்கேட்டு அரசனாலும் ஸௌக்கியத்தை வினவப்பட்டார்கள். 'பிறகு, அவர்களால் முன் ஏவப்பட்டிருக்கிற [2] ஸங்கவன் என்கிற இடையன் அப்பொழுது த்ருதராஷ்டிரனிடத்தில் பசுக்கள் ஸமீபத்தில் வந்திருப்பதாகத் தெரிவித்தான். அரசரே! பிறகு, கர்ணனும் சகுனியும், அரசர்களுள் சிறந்தவனும் ஜனங்களுக்கு அதிபதியுமான த்ருதராஷ்டிரனைப் பார்த்து, 'கௌரவரே! அழகிய இடங்களில் இப்பொழுது பசுக்கூட்டங்கள் (வந்து) இருக்கின்றன. பசுக்களுடைய எண்ணிக்கையை முன்னிட்டு வயது, நிறம், ஜாதி, பெயர் இவைகளை எழுதுவதற்கும் கன்றுகளை அடையாளமிடுவதற்கும் ஸமயம் நேர்ந்திருக்கிறது. அரசரே! இந்த ஸமயத்தில் உம்முடைய புத்திரனுக்கு வேட்டை உசிதமானது. நீர் துர்யோதனனுடைய பிரயாணத்தைப்பற்றி அனுமதி கொடுக்கக்கடவீர்' என்று சொன்னார்கள். திருதராஷ்டிரன், 'ஐயா! வேட்டை நல்லது. பசுக்களை நன்றாகப் பரிசீலனம் செய்வதும் சிறந்ததே. இடையர்களிடத்தில்

---

[1] வேறுபாடம். [2] 'ஸமங்கன்' என்பது வேறுபாடம்.

நம்பிக்கை வைக்கலாகாதென்று நான் நினைக்கிறேன். புருஷ ஸ்ரேஷ்டர்களான அந்தப் பாண்டவர்கள் அந்த வனத்தில் ஸமீபத்திலிருக்கிறார்களென்று நாம் கேட்டிருக்கிறோம். ஆகையால், அவ்விடத்தில் நீங்கள் செல்வதற்கு நான் அனுமதி கொடுக்கமாட்டேன். கர்ண! திறமையுள்ளவர்களும் மஹாரதர்களுமான அந்தப் பாண்டவர்கள், கபடத்தால் ஜயிக்கப்பட்டவர்களும் பெரியகாட்டில் துன்பத்திற்கு உட்படுத்தப்பட்டவர்களும் எப்பொழுதும் தவத்தில் நிலைபெற்றவர்களுமாக இருக்கிறார்கள். தர்மராஜன் கோபித்துக்கொள்ளமாட்டான். பீமஸேனனோ மிகுந்த கோபமுள்ளவன். துருபதனுடைய குமாரியானவள் தனித்த தேஜஸாகவே இருக்கிறாள். கொழுப்பும் அறியாமையுமுடையவர்களான நீங்கள் குற்றம்செய்வீர்கள். பிறகு, தவமுள்ளவர்களான அந்தப் பாண்டவர்கள் உங்களை எரித்துவிடுவார்கள். அன்றியும், ஆயுதங்களையுடையவர்களும் கோபம் மிகமேலிட்டவர்களும் ஒன்று சேர்ந்தவர்களும் கத்தி கட்டிக்கொண்டவர்களுமான அந்த வீரர்கள் சஸ்திரங்களுடைய தேஜஸினால் எரிப்பார்கள். [1] பிறகு, நீங்கள் அனேகர்களாக இருப்பதனால் எவ்விதத்தாலாவது அவர்களை எதிர்த்து யுத்தம் செய்யப்போவீர்கள். அப்படி பாண்டவர்களை எதிர்த்துச் சண்டை செய்யப்போவது மிகவும் இகழத்தக்கதாகும். அதுவும் முடியாததென்பது எனதெண்ணம். மிக்க தோள்வலிமையுள்ள தனஞ்சயன் இந்திரலோகத்தில் வாஸம் செய்தானன்றோ? திவ்யாஸ்திரங்களைப்பெற்று அந்த ஸ்வர்க்கத்தினின்று காட்டிற்குத் திரும்பிவந்திருக்கிறான். முற்காலத்தில், அஸ்திரங்களில் விசேஷப் பயிற்சியில்லாதபொழுதே அர்ஜுனனால் பூமி ஜயிக்கப்பட்டது. அவன் இப்பொழுது அஸ்திரங்களில் விசேஷமாகத் தேர்ச்சி அடைந்திருக்கையில் சொல்லவேண்டுமா? மஹாரதனான அர்ஜுனன் உங்களைக் கொல்லமாட்டானோ? என் வசனத்தைக்கேட்டு நீங்கள் ஜாக்கிரதையாயிருப்பீர்களானாலும், வனவாஸத்தினால் மிக்க மனவருத்தமடைந்திருக்கிற பாண்டவர்களிடம் நம்பிக்கை வைத்து அங்கு வஸிப்பதனால் உங்களுக்குத் துன்பம் நேரும். அல்லாமலும், சில போர்வீரர்கள் யுதிஷ்டிரனிடத்தில் அபகாரத்தைச் செய்வார்கள். அறிவீனத்தால் செய்யப்பட்ட அந்தச் செய்கையானது, உங்களுக்குத் தோஷத்தை உண்டுபண்ணும். ஆதலால், நம்பிக்கையுள்ள வேறு மனிதர்கள் பசுக்களை எண்ணுவதற்

---

[1] வேறுபாடம்.

காகப் போகட்டும். பாரத! துர்யோதனன் தானே நேரில் அந்த வனத்திற்குப்போவது எனக்கு ருசிக்கவில்லை' என்று சொன்னான்.

சகுனி, 'பாரதரே! பாண்டவர்களுள் மூத்தவனான யுதிஷ்டிரன் தர்மத்தை அறிந்தவன். அவன், ஸபையில், பன்னிரண்டு வருஷ காலம் காட்டில் வஸிப்பதாகப் பிரதிஜ்ஞை செய்திருக்கிறான். தர்மசாரிகளான எல்லாப் பாண்டவர்களும் அவனை அனுஸரித்திருக்கிறார்கள். குந்திபுத்திரனான யுதிஷ்டிரனோ, நம் விஷயத்தில் கோபத்தைப் பாராட்டமாட்டான். எங்களுக்கோ வேட்டையைக் குறித்துச் செல்வதற்கு விருப்பம் பெருகுகிறது. நாங்கள் பசுக்களுடைய எண்ணிக்கையைச் செய்ய விரும்புகிறோம்; பாண்டவர்களைப் பார்க்க விரும்பவில்லை. அந்த இடத்தில் கெட்ட செய்கை ஒன்றும் நடைபெறாது. எந்த இடத்தில் அவர்களுக்கு வாஸமோ அந்த இடம் நாங்கள் செல்லமாட்டோம்' என்றுசொன்னான். சகுனியினால் இவ்வாறுசொல்லக்கேட்ட திருதராஷ்டிரமகாராஜன், மந்திரியுடன் கூடின துர்யோதனனுக்கு, 'இஷ்டப்படி போகலாம்' என்று அனுமதி கொடுத்தான்; ஆனால், முழுமனத்தோடு கொடுக்கவில்லை. அப்பொழுது, கர்ணனோடுகூடின சகுனி அனுமதிகொடுக்கப்பட்டான். பரதஸ்ரேஷ்டனான துர்யோதனனும், பெரிய சேனையினாலும் சிறந்த புத்தியுள்ள சகுனியினாலும் துச்சாஸனனாலும் மற்றத் தம்பிமார்களாலும் ஆயிரக்கணக்கான ஸ்திரீகளாலும் சூழப்பட்டவனாகப் புறப்பட்டான். த்வைதவனமென்கிற ஸரஸையும் அந்தக் காட்டையும் பார்ப்பதற்குப் புறப்பட்டவனும் மஹாபாகுபலமுள்ளவனுமான அந்தத்துர்யோதனனை நகரவாஸிகளனைவரும் மனைவிகளோடு கூடியவர்களாகப் பின்தொடர்ந்தார்கள். எண்ணாயிரம் ரதங்களும் முப்பதினாயிரம் யானைகளும் பல்லாயிரம் காலாட்களும் ஒன்பதினாயிரம் குதிரைகளும் வண்டிகளும் கடைகளும் தாதிகளும் வியாபாரிகளும் துதிபாடகர்களும் வேட்டையாடுவதையே தொழிலாகக்கொண்ட மனிதர்களும் நூறுநூறாகவும் ஆயிரமாயிரமாகவும் துர்யோதனனைப் பின்தொடர்ந்தார்கள். அரசரே! பிறகு, துர்யோதனராஜனுடைய பிரயாணத்தில் மழைக்காலத்தில் எழும்பின பெருங்காற்றினுடைய ஒலிபோல மிகப் பெரிதான ஆரவாரமுண்டாயிற்று. பிறகு, துர்யோதனராஜன் எல்லா வாகனங்களோடும் த்வைதவனமென்னும் தடாகத்தை அணுகி ஒரு [1] கவ்யூதி தூரத்தில் வஸித்தான்.

---

[1] இரண்டு க்ரோசம்; அதாவது, நான்குமைல்.

## இருநூற்றுநாற்பத்தோராவது அத்யாயம்.

## கோஷயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(துரியோதனன் த்வைதவனஸரஸுக்கருகில் விளையாட்டிடங்களை அமைக்க ஏவியதும், கந்தர்வர்கள் துர்யோதனனுடையவேலைக் காரர்களைத் தடுத்ததும், துர்யோதனன் அவர்களைத் துரத்தும்படி தன் சேனையை அனுப்பியதும், கந்தர் வர்கள் அவர்களைப் பயமுறுத்த அவர்கள் துர்யோதனனிடம் தெரிவித்ததும்.)

பிறகு, துர்யோதனராஜன், வனத்தில் ஆங்காங்கு வசித்துக் கொண்டு மாட்டுமந்தைகளை அடைந்தான்; அங்கே, நாற்புறங் களிலும் சேனையை இறக்கினன். வேலைக்காரர்கள், அழகியதும் நன்றாக அறியப்பட்டிருப்பதும் ஜலமுள்ளதும் மரங்களோடும் எல்லாக் குணங்களோடும் கூடியதுமான இடத்தில் விடுதிகளை ஏற் படுத்தினார்கள். அப்படியே கர்ணனுக்கும் சகுனிக்கும் துர்யோ தனனுடைய எல்லாத் தம்பிமார்களுக்கும் அவைகளுக்குஸமீபத்தி லிருப்பவைகளாகத் தனித்தனியான பலவிடுதிகளையும் ஏற்படுத்தி னார்கள். அப்பொழுது, அவர்கள் நூறுநூறாகவும் ஆயிரமாயிர மாகவும் பசுக்களைப் பார்வையிட்டார்கள். அரசன், அந்த எல் லாப் பசுக்களையும் அடையாளங்களிட்டுக் கணக்கிட்டான்; இளங் கன்றுகளையும் அப்படியே நுகத்தடியைத்துப்பழக்கக்கூடியகாளைக் கன்றுகளையும் அடையாளமிட்டான்; இளங்கன்றுகளுள்ள பசுக் களையும் எண்ணினன். குருகுலத்தில் பிறந்த அவன் பசுக்களை எண்ணிவிட்டு, பிறகு, மூன்றுவயதுசென்றகன்றுகளை அடையாள மிட்டு, ஆமேய்ப்பவர்களால் சூழப்பட்டவனாகவும் ப்ரீதியுள்ளவனா கவும் களித்திருந்தான். அந்தப் பட்டணத்து ஜனங்களனைவரும் ஆயிரக்கணக்கான படைவீரர்களும் அக்காட்டில் தேவர்கள்போல இனிது விளையாடினார்கள். பிறகு, வழிநடையினால் களைப்படைந்த துர்யோதனனை ஸமர்த்தர்களான இடையர்களும் நன்றாக அலங் கரிக்கப்பட்ட கன்னிகைகளும் நர்த்தனங்களாலும் வாத்தியங் களாலும் ஆனந்தமடையச் செய்தார்கள். அந்தப்புரஸ்திரீ களின் கூட்டத்தால் சூழப்பட்ட அந்த அரசன் மிக்க ஸந்தோஷ முள்ளவனாக அவர்களுக்குத் தக்கபடி தனத்தையும் பற்பல வித மான அன்னபானங்களையும் கொடுத்தான். பிறகு, அவர்களெல்

லாரும் ஒருங்குசேர்ந்து சிறுத்தைகளையும் எருமைகளையும் மான்களையும் கவய மிருகங்களையும் கரடிகளையும் பன்றிகளையும் நாற்புறங்களிலும் வளைத்துக்கொண்டார்கள். அந்தத் துர்யோதனன், காட்டில் அநேகமான அந்த மிருகங்களையும் யானைகளையும் அம்புகளால் பிளந்து, அழகான இடங்களில் மிருகங்களைப் பிடிப்பித்தான். பாரதரே! வஜ்ரத்தைக் கையில்தாங்கின மஹேந்திரன்போலச் சிறந்த செல்வத்துடன் கூடின துர்யோதனராஜன், பால் தயிர் நெய்களையும் அநுபவிக்கத்தக்க ருசியுள்ள வஸ்துக்களையும் அநுபவித்துக்கொண்டும், மதங்கொண்ட வண்டுகளால் அடையப்பட்டும் மயில்களால் ஒலியுள்ளதாகச் செய்யப்பட்டுமிருக்கிற அழகிய காடுகளையும் பூந்தோட்டங்களையும் பார்த்துக்கொண்டும், மதங்கொண்ட வண்டுகளால் வரிசையாக நன்கு சூழப்பட்டிருப்பதும் மயில்களுடைய ஒலிகளால் நிரப்பப்பட்டதும் ஏழிலைம்பாலைமரங்களால் சூழப்பட்டதும் புன்னைமரங்களோடும் மகிழமரங்களோடும் கூடியதும் புண்யமானதுமான த்வைதவன தடாகத்தை அடைந்தான். அரசரே! கௌரவர்களுள் சிறந்தவரே! அந்த இடத்திலிருப்பவரும் சிறந்த புத்தியுள்ளவரும் தர்மநந்தனருமான யுதிஷ்டிரர், கற்றறிந்தவர்களும் வனத்தில் வஸிப்பவர்களுமான பிராம்மணர்களோடுகூடித் திவ்யமும் வனத்தில் வஸிப்பவர்களுக்குத்தக்க முறையோடு கூடியதும் ஒரு பகலால் முடிக்கத்தக்கதுமான ராஜரிஷிகள் செய்யத்தக்க யஜ்ஞத்தினால் தற்செயலாக (த்தேவதைகளை) ஆராதித்தார். கௌரவரே! சிறந்த புத்தியுடையவரான தர்மராஜர் தர்மபத்னியான திரௌபதியுடன்கூட அந்தத் தடாகத்தினருகில் வீட்டை ஏற்படுத்திக்கொண்டிருந்தார். பிறகு, இளைய ஸஹோதரர்களோடு கூடின துர்யோதனன், வேலைக்காரர்களைப் பார்த்து, 'இந்தத் தடாகத்திற்கருகில் உத்யானவனங்களையும் விடுதிகளையும் விரைவாக ஏற்படுத்துங்கள்' என்று கட்டளையிட்டான். குற்றேவல்செய்கிறவர்களான அவர்கள், 'அப்படியே' என்று துர்யோதனனைப்பார்த்துச் சொல்லிவிட்டு, அப்பொழுது உத்யானங்களையும் விடுதிகளையும் ஏற்படுத்துவதற்காக த்வைதவனஸரஸை அடைந்தார்கள். வந்துகொண்டிருப்பவர்களும் த்வைதவன ஸரஸில் பிரவேசிக்கின்றவர்களுமான துர்யோதனனுடைய சிறந்த சேனைத்தலைவர்களை த்வைதவனத்தின் வாயிலில் கந்தர்வர்கள் தடுத்தார்கள். அரசரே! அவ்விடத்தில் பரி

வாரங்களால் சூழப்பட்டிருக்கிற கந்தர்வராஜன் குபேரனுடைய அரண்மனையிலிருந்து முந்தியே வந்திருந்தான். அந்தக் கந்தர்வ ராஜனால் அப்ஸரஸுகளுடைய கூட்டங்களோடும் அப்படியே விளையாட்டையே இயற்கையாகக்கொண்ட தேவகுமாரர்களோடும் கூடி விளையாடுவதற்காக அந்த ஸரஸானது நன்றாகச் சூழப்பட்டிருந்தது. அரசரே! அந்தக் கந்தர்வராஜனால் அந்தக்குளம் சூழப்பட்டதைக்கண்டு அந்த ராஜபரிசாரகர்கள் துர்யோதனமகாராஜனிருக்கிற இடத்திற்குத் திரும்பிப்போனார்கள். குருகுலத்தில் பிறந்தவரே! அந்தத் துர்யோதனனோ, அவர்களுடைய வசனத்தைக் கேட்டு, யுத்தத்தில் கெட்ட மதங்கொண்டவர்களான படைவீரர்களைப்பார்த்து, 'அந்தக் கந்தர்வர்களை ஓட்டிவிடுங்கள்' என்று கட்டளையிட்டு அனுப்பினான். சேனையின் முந்திச் செல்பவர்களான வீரர்கள் அந்த அரசனுடைய அந்த வசனத்தைக்கேட்டு த்வைதவன ஸரஸை அடைந்து கந்தர்வர்களைப்பார்த்து, 'திருதராஷ்டிரருடைய குமாரரும் மிகுந்தபலசாலியும் துர்யோதனரென்று பிரஸித்திபெற்றவருமான அரசர் விளையாடவிரும்பி இவ்விடம் வருகிறார். அதற்காக நீங்கள் விலகிச் செல்லுங்கள்' என்று சொன்னார்கள். அரசரே! இவ்வாறு சொல்லப்பட்ட கந்தர்வர்கள், உரக்கச் சிரித்துக்கொண்டு அந்த ஆட்களைப்பார்த்து, 'தேவலோகவாஸிகளான எங்களைத் தனக்கு அடங்கினவர்களைப்போல எண்ணி இவ்வாறு கட்டளையிடுகிற உங்களுடைய அரசனான துரியோதனன் மந்தபுத்தியுள்ளவன்; விஷயங்களை அறிவதில்லை. புத்தியற்று அவனுடைய வசனத்தினால் இவ்வண்ணம் எங்களைப்பார்த்துச் சொல்லுகிறவர்களும் மரிக்க எண்ணங்கொண்டவர்களுமான நீங்களும் மந்தபுத்தியுள்ளவர்கள்; ஸம்சயமில்லை. அந்தக் கௌரவராஜனிருக்கிறவிடத்திற்கு நீங்கள் விரைவாக ஓடுங்கள். இல்லாவிடில், இப்பொழுதே யமனுடைய வீட்டிற்குப் போகவேண்டும்' என்ற கடுமையான சொல்லை மறுமொழியாக உரைத்தார்கள். கந்தர்வர்களாலே இவ்வாறு சொல்லப்பட்ட அரசனுடைய சேனைத்தலைவர்கள் திருதராஷ்டிரகுமாரனான துர்யோதனராஜனிருக்கிறவிடத்திற்கு விரைவாக ஓடினார்கள்.

---

## இருநூற்றுநாற்பத்திரண்டாவது அத்யாயம்.

## கோஷயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(கௌரவர்களுக்கும் கந்தர்வர்களுக்கும் யுத்தமும், சித்திரஸேனன் முதலியவர்களால் கர்ணன் ரதத்தை இழந்து யுத்தரங்கத்தை விட்டு ஓடியதும்.)

மகாராஜரே! பிறகு, அவர்களெல்லாரும் ஒன்றுகூடித் துர்யோதனனருகில் ஓடிவந்தார்கள்; (கந்தர்வர்கள்) துர்யோதனனைப்பற்றிச் சொல்லியதையும் கூறினார்கள். பாரதரே! கந்தர்வர்களால் தன்னுடைய படை தடுக்கப்பட்டவுடன், சிறந்த பிரதாபமுள்ள துர்யோதனன், கோபம் மூண்டவனாக ஸைன்யங்களைப் பார்த்து, 'இந்திராணியின் பர்த்தாவான இந்திரன் எல்லாத்தேவர்களோடுங்கூட விளையாடுபவனாயிருந்தாலும், எனக்கு அப்ரியத்தைச் செய்கின்றவர்களும் தர்மங்களை அறியாதவர்களுமான இவர்களைச் சிக்ஷைசெய்யுங்கள். நாம் இந்த இடத்தில் ப்ரீதியுள்ளவர்களாகத் தடையற்று விளையாடுவோம்' என்று மறுமொழி கூறினான். துர்யோதனனுடைய வசனத்தைக் கேட்டு, மகாபலசாலிகளான திருதராஷ்டிரகுமாரர்களும் ஆயிரக்கணக்கான எல்லாயுத்தவீரர்களும் யுத்தஸன்னத்தர்களானார்கள். பிறகு, அவர்கள் அந்தக் கந்தர்வர்களனைவரையும் மிக அடித்துப் பெரிய சிங்கநாதத்தினால் பத்துத்திசைகளையும் நிரப்பிக்கொண்டு பலாத்காரத்தினால் அந்தக் காட்டில் நுழைந்தார்கள். பிரபுவே! பிறகு, அந்த இடத்தில் பராக்ரமத்தை வெளிப்படுத்துகிற கௌரவசேனைவீரர்கள் சில கந்தர்வர்களால், 'ஸாஹஸம் செய்யாதீர்கள்' என்று நல்வார்த்தையினாலேயே தடுக்கப்பட்டார்கள். பூமிக்கிறைவனே! கந்தர்வர்களால் நல்வார்த்தையினாலேயே தடுக்கப்படுகின்ற அந்தக் கௌரவஸேனாவீரர்கள் அந்தக் கந்தர்வர்களை அலக்ஷியம் செய்துவிட்டு அந்தப் பெரியகாட்டில் நுழைந்தார்கள். அரசனோடு கூடின திருதராஷ்டிரபுத்திரர்கள் சொல்லால் நில்லாமற்போனபொழுது, ஆகாயத்தில் ஸஞ்சரிப்பவர்களான எல்லாக் கந்தர்வர்களும் சித்திரஸேனனிடத்தில் தெரிவித்தார்கள். கந்தர்வராஜனான சித்திரஸேனன் கோபம் மூண்டு அவர்களனைவரையும் பார்த்து, 'துஷ்டர்களான இந்தக் கௌரவர்களை நன்றாகச் சிக்ஷியுங்கள்' என்று சொன்னான். பாரதரே! சித்திரஸேனனால் அனுமதிகொடுக்கப்பட்ட கந்தர்

வர்களெல்லாரும், ஆயுதங்களை எடுத்துக்கொண்டு திருதராஷ்டிர புத்ரர்களை எதிர்த்து விரைவாகச் சென்றார்கள். ஆயுதங்களெடுத்துக்கொண்டு விரைவாகவருகின்ற அந்தக் கந்தர்வர்களைப்பார்த்து, அந்தக் கௌரவஸைனிகர்களனைவரும், துர்யோதனன் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே திசைகளில் ஓடினார்கள். புறங்காட்டி ஓடுகின்ற அந்த எல்லாத் தார்த்தராஷ்டிரர்களையும் பார்த்தும் அப்பொழுது வீரனான கர்ணன் அந்த யுத்தத்தில் புறங்காட்டினவனாகவில்லை. நேரில் வருகின்ற கந்தர்வர்களுடைய பெரிய சேனையைக்கண்டு, கர்ணன் பெரிய அம்பு மழையினால் அவர்களைத் தடுத்தான். ஸூதபுத்திரனும் மஹாரதனுமான கர்ணன் க்ஷுரப்ரங்களாலும் அம்புகளாலும் அர்த்தசந்திரபாணங்களாலும் உருக்குமயமான வத்ஸதந்தங்களாலும் லாகவத்தால் நூறு நூறாகக் கந்தர்வர்களை அடித்துக்கொண்டும் அவர்களுடைய தலைகளைத் தள்ளிக்கொண்டும் சித்திரஸேனனுடைய ஸைன்யமனைத்தையும் ஒரு க்ஷணத்தினுள் ஊதிவிட்டான். சிறந்த புத்தியுள்ளவனான கர்ணனால் அடிக்கப்படுகின்ற அந்தக் கந்தர்வர்கள் நூறுநூறாகவும் ஆயிரமாயிரமாகவும் மீண்டுமே எதிர்த்து வந்தார்கள். எதிர்த்து வருகின்றவர்களும் மிக்க வேகமுள்ளவர்களுமான சித்திரஸேனனுடைய சேனைவீரர்களால் பூமியானது ஒருக்ஷணத்தினுள் கந்தர்வமயமாகியது. பிறகு, துர்யோதனராஜனும் துச்சாஸனனும் விகர்ணனும் இன்னும் திருதராஷ்டிரனுடைய மற்றப் புத்திரர்களும் ஸுபலனுடைய புத்திரனான சகுனியும் கருடன்போலச் சப்திக்கின்ற ரதங்களோடுகூடியவர்களாக அப்பொழுது கந்தர்வஸேனையை மிக அடித்தார்கள். அரசரே! யுத்தத்தில் எதிர்த்துப் போர்புரிகின்ற கந்தர்வஸைன்யத்தைக் கண்டு கர்ணன் பொறுக்கவில்லை. கந்தர்வர்கள் ஸூர்யகுமாரனைப் பிடிக்க எண்ணிப் பெரிய தேர்க்கூட்டத்தாலும் ரதங்களுடைய கதி விசேஷங்களாலும் நாற்புறங்களிலும் சூழ்ந்துகொண்டார்கள். பிறகு, கந்தர்வர்களனைவரும் துர்யோதனனை நோக்கி நன்றாக எதிர்த்தார்கள். அப்பொழுது மயிர் சிலிர்த்தலை உண்டுபண்ணுகிற மிக்க கைகலந்த போர் நடந்தது. பிறகு, பாணங்களால் அடிக்கப்பட்ட அந்தக் கந்தர்வர்கள் மெதுவானார்கள். கௌரவர்கள், அடிக்கப்பட்டிருக்கிற கந்தர்வர்களைப் பார்த்துப் பெருங்கூச்சலிட்டார்கள். கௌரவர்களால் பயமடைவிக்கப்பட்ட கந்தர்வர்களைப் பார்த்துப் பொறாதவனான சித்திரஸேனன் கோபங்கொண்டு அந்தக் கௌர

வர்களுடைய வதத்தில் மனத்தைச் செலுத்தினவனாக ஆஸனத்தி லிருந்து எழுந்திருந்தான்.

பிறகு, விசித்திரமான யுத்தமார்க்கங்களை அறிந்தவனான சித்திரஸேனன் மாயாஸ்திரங்களைப் பிரயோகித்துப் போர் புரிய லானான்; அந்த மாயாஸ்திரங்களால் ஆகாயத்தை நன்றாக மூடினான். அந்த இடத்தில் காற்று வீசவில்லை. பரதகுலத் தில் பிறந்தவரே! யானையின்மீது ஏறியிருந்த [1] மகாமாத்ரர்கள் கொல்லப்பட்டு யானைகளோடு கீழே விழுந்தார்கள். அப்பொழுது, குதிரைவீரர்கள் குதிரைகளோடு விழுந்தார்கள். ரதிகர்கள் ரதங்களோடு விழுந்தார்கள். அப்படியே, காலாட்களும் அம்பு மழைகளால் கொல்லப்பட்டுக் கீழே விழுந்தார்கள். கௌரவர் கள் சித்திரஸேனனுடைய அந்த மாயையினால் மயக்கத்தை அடைந்தார்கள். பாரதரே! அப்பொழுது துர்யோதனனுடைய ஒவ்வொரு போர்வீரனும் யுத்தகளத்தில் பத்துப் பத்துக் கந்தர் வர்களால் சூழ்ந்துகொள்ளப்பட்டார்கள். பிறகு, பெரிய கந்தர்வ ஸேனையினால் யுத்தத்தில் நன்றாக அடிக்கப்படுகின்ற அந்தக் கௌரவவீரர்கள் அப்பொழுது பயந்து யுதிஷ்டிரரிருக்கிற இடத் துக்கு ஓடினார்கள். அரசரே! துர்யோதனனுடைய படைகள் நாற்புறங்களிலும் அடித்து நாசம் செய்யப்படும் தருணத்தில், சூரியகுமாரனான கர்ணன் மலைபோல அசைவற்று நின்றான். யுத்தத்தில் மிகவும் காயப்படுத்தப்பட்டவர்களான கர்ணனும் தேஜஸ்வியான துர்யோதனனும் ஸுபலனுடைய புத்திரனான சகுனியும் கந்தர்வர்களை எதிர்த்துப் போர்புரிந்தார்கள். எல்லாக் கந்தர்வர்களுமே கோபமுள்ளவர்களாகவும் கொல்ல எண்ணங் கொண்டவர்களாகவும் நூறு நூறாகவும் ஆயிரமாயிரமாகவும் யுத் தத்தில் கர்ணனை எதிர்த்தோடி வந்தார்கள். மகாபலசாலிகளான கந்தர்வர்கள் கத்திகளாலும் பட்டஸங்களாலும் சூலங்களாலும் கதைகளாலும் ஸூதபுத்திரனைக் கொல்ல எண்ணி எல்லாப்பக்கத் திலும் சூழ்ந்துகொண்டார்கள். சிலர் அந்தக்கர்ணனுடைய ரதத்தி லுள்ள நுகத்தடியை வெட்டினார்கள். சிலர் த்வஜத்தை அறுத் துத் தள்ளினார்கள். சிலர் ஏர்க்காலையும், சிலர் குதிரைகளையும், சிலர் ஸாரதியையும் அடித்துத் தள்ளினார்கள். சிலர் குடையை யும் சிலர் பொருத்துக்களையும் ரதகுப்தியையும் அடித்துத் தள்ளி னார்கள். பல்லாயிரக் கணக்கான கந்தர்வர்கள் கர்ணனுடைய

[1] யானைப்பாகர்கள்.

ரதத்தை எள்ளளவெள்ளளவாகப் பொடிசெய்தார்கள். பிறகு, தோள்களில் தொங்குகின்ற வில்லுடன் கூடியவனும் ஓடுகின்றவனும் மகாபலசாலியும் ஸூதபுத்திரனுமான கர்ணன், கத்தியையும் கேடகத்தையும் எடுத்துக்கொண்டு ரதத்தினின்று துள்ளிக் குதித்து விகர்ணனுடைய ரதத்தை அடைந்து கந்தர்வர்களிடத்தினின்று தன்னை விடுவித்துக்கொள்வதற்காகக் குதிரைகளை விரைவாக ஓட்டினான்.

---

## இருநூற்றுநாற்பத்துமூன்றாவது அத்யாயம்.

## கோஷயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(சித்திரஸேனன் துர்யோதனனை வென்று கட்டித் தேரில் ஏற்றியதும், மற்றக் கந்தர்வர்கள் துர்யோதனனுடைய பிராதாக்களையும் அவர்களுடைய மனைவிகளையும் கட்டியதும், துர்யோதனனுடைய மந்திரிமுதலியவர்கள் யுதிஷ்டிரரிடம் அதனைத் தெரிவித்ததும், பீமன் அதனைக் கொண்டாடியதும்.)

மகாராஜரே! கந்தர்வர்களால் மகாரதனான கர்ணன் முறிய அடிக்கப்படவே, துர்யோதனன் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே, சேனை எல்லாம் ஓடியது. புறங்காட்டி ஓடுகின்ற அந்தத் திருதராஷ்டிரகுமாரர்களனைவரையும் பார்த்தும் துர்யோதனமஹாராஜன் அந்த யுத்தரங்கத்தில் புறங்காட்டி ஓடவில்லை. சத்துருக்களை அடக்குகிறவனான அந்தத் துர்யோதனன், எதிர்த்து வருகின்ற கந்தர்வர்களுடைய அந்தப் பெருஞ் சேனையை நன்றாகப் பார்த்துப் பெரிய அம்புமழையினால் அடித்தான். கந்தர்வர்கள் அம்புமழையைப் பொருட்டாக எண்ணாமல் துர்யோதனனைக் கொல்ல எண்ணி அவனுடைய அந்தத் தேரை எல்லாப்பக்கங்களிலும் சூழ்ந்துகொண்டார்கள். கந்தர்வர்கள் பாணங்களால் துர்யோதனனுடைய ரதத்தின் நுகத்தையும் ஏர்க்காலையும் ரதகுப்தியையும் கொடியையும் ஸாரதியையும் குதிரைகளையும் த்ரிவேணுவையும் அச்சையும் எள்ளளவெள்ளளவாகப் பொடி பண்ணினார்கள். மிக்க தோள்வலிமையுள்ள சித்திரஸேனன், ரதத்தை இழந்து பூமியில் நிற்கிற துர்யோதனனை எதிர்த்தோடி வந்து அவனை உயிரோடு பிடித்தான். மிக்க புஜபலமுள்ள அந்தச் சித்திரஸேனன் துர்யோதனனுடைய இருகைகளையும் கயிற்றினால்

கட்டி அவனைத் தன்னுடைய பெரிய ரதத்தில் ஏறும்படி செய்து சிங்கநாதம் செய்தான். ராஜேந்திரரே! அவன் பிடிபட்டவுடன், ரதத்திலிருக்கிற துச்சாஸனனைக் கந்தர்வர்கள் எல்லாப் பக்கங்களிலும் சூழ்ந்து பிடித்தார்கள். சிலர் விவிம்சதியைப் பிடித்துக் கொண்டு சித்திரஸேனனிடம் அதிக வேகத்துடன் ஓடினார்கள். சிலர் விந்தானுவிந்தர்களையும் ராஜமஹிஷிகளனைவரையும் பிடித்தார்கள். கந்தர்வர்களால் நன்றாக எதிர்த்துத் துரத்தப்பட்டவர்களான துர்யோதனனுடைய சேனைவீரர்கள், அப்பொழுது, முன்பே முறிய அடிக்கப்பட்டிருக்கிறவர்களோடுகூடிப் பாண்டவர்களிடம் ஓடி வந்தார்கள். அரசன் பிடிபடவே, வண்டிகளும் கடைகளும் தாதிகளும் வாகனங்களும் வண்டிக்காளைகளும் வண்டிக்குதிரைகளும் பாண்டவர்களைச் சரணமடைந்தன.

ஸைனிகர்கள், 'பார்த்தர்களே! இனிய தோற்றமுள்ளவனும் மகாபாகுபலமுள்ளவனும் மகாபலசாலியுமான துர்யோதனராஜனைக் கந்தர்வர்கள் கொண்டுபோகின்றனர். அந்தச் சித்திரஸேனனைப் பின்தொடர்ந்து ஓடுங்கள். கந்தர்வர்கள் துச்சாஸனனையும் துர்விஷஹனையும் துர்முகனையும் அப்படியே துர்ஜயனையும் ராஜபத்னிகள் எல்லாரையும் கட்டிக் கொண்டுபோகிறார்கள்' என்று சொன்னார்கள். துரியோதனராஜனிடம் அதிக அன்புள்ளவர்களான அவனுடைய மந்திரிகளனைவரும், இவ்வாறு அலறுகின்றவர்களும் மனவருத்தமுள்ளவர்களும் எளிமையை அடைந்தவர்களுமாக, யுதிஷ்டிரரருகில் வந்தார்கள். அப்படி துன்பத்தை அடைவிக்கப்பட்டவர்களும் தீனர்களும் யுதிஷ்டிரரை ராஜபிக்ஷை கேட்பவர்களும் பிராயமுதிர்ந்தவர்களுமான துரியோதனனுடைய மந்திரிகளைப் பார்த்துப் பீமஸேனன், 'பெரியபிரயத்தனத்தால் யானைகளோடும் குதிரைகளோடும் (யுத்தத்திற்காக) ஸன்னத்தைச் செய்து வேறு எண்ணத்துடன் இங்குவந்த கௌரவர்களுக்கு இந்தக் காரியம் மற்றொரு விதமாக ஏற்பட்டுவிட்டது. நாம் செய்யவேண்டியதைக் கந்தர்வர்கள் செய்தார்கள். இது முழுமையும், தீனர்களான நம்மைப் பார்க்க விருப்பமுள்ளவனும் கெட்ட எண்ணமுள்ளவனும் கெட்ட சூதாட்டத்தை விளையாட்டாகக் கொண்டவனுமான துர்யோதனராஜனுடைய துராலோசனை. 'சக்தியற்றவனைப் பகைக்கிறவனைப் பிறர் கொல்வார்கள்' என்று நாம் கேட்டிருக்கிறோம். மனிதர்களால் செய்வதற்கரிய இந்தக் காரியம் கந்தர்வர்களால் நமக்கெதிரில் செய்யப்பட்டது. சும்மா இருக்கின்ற

வர்களான நம்முடைய காரியப் பொறுப்பானது எந்த ஆண் பிள்ளையால் ஸுகமாக வாங்கிக்கொள்ளப்பட்டதோ நம்முடைய பிரியத்தில் நிலைபெற்றிருக்கிற அப்படிப்பட்ட ஒருவன் தெய்வாதீனமாக இவ்வுலகத்திலிருக்கிறான். கெட்ட புத்தியுள்ளவனான துர்யோதனன் நல்ல நிலைமையிலிருந்துகொண்டு, குளிரையும் காற்றையும் வெய்யிலையும் பொறுத்துக்கொண்டிருப்பவர்களும் தவத்தினால் இளைத்தவர்களும் துர்த்தசையிலிருப்பவர்களுமான எங்களைப் பார்க்க விரும்புகிறானன்றோ? அநியாயவழியில் நடப்பவனும் மதிகெட்டவனுமான துர்யோதனனுடைய நடையை எவர்கள் அநுஸரிக்கிறார்களோ அவர்கள் அவமானத்தை அடைகிறார்கள். எவனால் இந்தச் செய்கையானது (துர்யோதனனுக்குச்) சொல்லப்பட்டதோ அவனால் அதர்மமானது செய்யப்பட்டிருக்கிறதன்றோ? குந்திநந்தனர்களோ கருணையுள்ளவர்களென்று உங்களுக்குநேரில் சொல்லுகிறேன்' என்று சொன்னான். இவ்வாறு சொல்லுகிறவனும் கோபத்தால் குரல்மாறினவனுமான பீமஸேனனை நோக்கி யுதிஷ்டிரராஜர், 'கடுஞ்சொல்லுக்கு இது காலமன்று' என்று சொல்லலானார்.

---

## இருநூற்றுநாற்பத்துநான்காவது அத்யாயம்.

## கோஷயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(பீமன் துர்யோதனனுடைய அனியாயங்களை நினைவூட்டி அவனை விடுவிப்பது தகாதென்றுசொல்ல, யுதிஷ்டிரர் மறுபடியும் துர்யோதனனை விடுவிக்கும்படி ஏவியதும், அர்ஜுனன் தான் செய்வதாகப் பிரதிஜ்ஞை செய்ததும்.)

யுதிஷ்டிரர், 'ஐயா! நம்மைநோக்கி வந்திருப்பவர்களும் பயத்தினால் பீடிக்கப்பட்டவர்களும் ரக்ஷணத்தைவிரும்புகின்றவர்களும் கெட்ட நிலையை அடைந்திருப்பவர்களுமான கௌரவர்களைப் பார்த்து நீ இப்படிப்பட்டவசனத்தை எவ்வாறு சொல்லலாம்? விருகோதர! ஜ்ஞாதிகளுள் வேறுபாடுகளும் கலகங்களும் இருக்கின்றன; பகைகளும் திடமாக ஏற்படுகின்றன. ஆனாலும், ஜ்ஞாதிதர்மமானது அழிகிறதில்லை. ஜ்ஞாதியல்லாத அயலான் ஒருவன் குலத்தைக்கெடுக்க விரும்புவானாகில், அன்னியனால் ஏற்படக்கூடிய

அந்த அவமானத்தை ஸாதுக்கள் பொறுக்கமாட்டார்கள். கெட்ட புத்தியுள்ள இவன் நாம் இவ்விடத்தில் நெடுநாளாகவஸிப்பதை அறிந்திருக்கிறானன்றோ? இவன் நம்மை இவ்வண்ணம் அவமதித்து இந்த அப்ரியத்தைச் செய்தான். யுத்தத்தில் கந்தர்வன் பலாத்காரத்தால் துர்யோதனனைப்பிடித்ததனாலும் ராஜஸ்திரீகளை ஜ்ஞாதிகளல்லாத அன்னியர்கள் தொடுவதாலும் நம்முடைய குலமானது கெடுக்கப்பட்டதாகிறது. புருஷஶ்ரேஷ்டர்களே! சரணமடைந்தவர்களையும் குலத்தையும் காப்பதற்காகக் கிளம்புங்கள். தாமதியாமல் ஸன்னத்தர்களாகக்கடவீர். பீம! புருஷப்புலிகளே! அர்ஜுனனும் நகுலஸஹதேவர்களும் சத்துருக்களால் ஜயிக்க முடியாதவனான நீயும், கொண்டுபோகப்படுகிற துர்யோதனனை விடுவியுங்கள். புருஷஶ்ரேஷ்டர்களே! எல்லாச் சஸ்திரங்களோடும்கூடியவைகளும் பிரகாசமுள்ளவைகளும் பொன்மயமான கொடிகளுள்ளவைகளுமான திருதராஷ்டிரபுத்திரர்களுடைய தேர்கள் இதோ இருக்கின்றன. சஸ்திரங்களில் நல்ல தேர்ச்சியுள்ளவர்களான இந்திரஸேனன் முதலிய ஸூதர்களால் இருந்து நடத்தப்பட்டவைகளும் சப்தத்துடன் கூடியவைகளும் எப்பொழுதும் யுத்தஸன்னத்தமாக இருப்பவைகளுமான இந்தத் தேர்களில் ஏறுங்கள். இந்த ரதங்களில் ஏறிக்கொண்டு யுத்தரங்கத்தில் கந்தர்வர்களை எதிர்த்துப் போர் புரிவதற்கு முயற்சியுள்ளவர்களாகவும் ஆலஸ்யமில்லாதவர்களாகவும் துர்யோதனனை விடுவிப்பதில் முயலுங்கள். அன்னியர்களால் அவமானமானது வரும்போது நாம் நூற்றைந்துபேர்கள் ஒன்றுபட்டவர்கள். நமக்குள் அன்யோன்யம் விரோதமேற்படும்போது நாம் ஐந்துபேர்களே; அவர்கள் நூறுபேர்கள். பீமஸேன! ஸாமான்ய க்ஷத்ரியன் கூடச் சரணமடைந்தவனைத் தனது முழுவல்லமையினாலும் காப்பாற்றுவான். அவ்வாறிருக்க, நீ காப்பாற்றுவாயென்பதில் ஸந்தேகமென்ன?" என்று சொன்னார். இவ்வாறு சொல்லக்கேட்ட பீமஸேனன், கோபத்தால் கண்கள் சிவந்து முந்தின வைரத்தை நினைத்துக்கொண்டு மீண்டும் யுதிஷ்டிரரைப்பார்த்து, 'யுதிஷ்டிரரே! வீரரே! முற்காலத்தில் நம்மை அரக்குமாளிகையில் எரிப்பதற்கு இவன் கெட்டஎண்ணம் கொண்டானன்றோ! அப்பொழுது தெய்வத்தால் காப்பாற்றப்பட்டோம். பரதவம்சத்திலுதித்தவரே! பிரபுவே! என்னுடைய உணவில் கடுமையான காலகூடவிஷத்தைப்போட்டுப்

புஜிக்கச்செய்து கொடிகளால் கட்டிக் கங்கையில் போட்டான். ராஜேந்திரரே! அப்பொழுது நான் பாதாளத்தை அடைந்து அந்தஇடத்தில் வாஸுகியைப்பார்த்து அவ்விடத்தினின்று மீண்டும் விரைவாகப் பூலோகத்தை அடைந்தேன். குந்தீநந்தனரே! சூதாடுகிறகாலத்திலும் பாவச்செயல்கள் செய்யப்பட்டன. ஸபையின்நடுவில் திரௌபதியைத்தொடுதலும் மயிர்பிடித்தலும் துகிலுரிதலும் செய்யப்பட்டன. ராஜேந்திரரே! நம்முடைய ராஜ்யத்தையும் பிடுங்கிக்கொண்டு கடுஞ்சொற்களையும் சொன்னான். துரியோதனன் முற்காலத்தில் செய்தபாவங்களின் பயனை அனுபவிக்கிறான். நாமே துர்யோதனனுடைய சிக்ஷையைச் செய்ய வேண்டும். நம்முடைய நேசத்தை விரும்புகின்ற வேறொருவனால் அந்தச் சிக்ஷை செய்யப்பட்டது. அரசரே! கந்தர்வன் நமக்கு உபகாரியன்றோ? அவன்விஷயத்தில் நீர் மனவருத்தமடைய வேண்டாம்' என்று சொன்னான்.

அரசரே! இந்தஸமயத்தில் சித்திரஸேனனால் துரியோதனன் கொண்டுபோகப்பட்டான். கொண்டுபோகப்படுகின்ற ஸுயோதனன் அதிக துக்கத்தால் மனவருத்தமுள்ளவனாக, 'யுதிஷ்டிர! மிக்க புஜபலமுள்ளவனே! தர்மவான்களனைவருள்ளும் சிறந்தவனே! கௌரவர்கள் புத்திரர்களோடும் மனைவிகளோடும் கந்தர்வர்களால் வலிந்து கொண்டு போகப்படுகின்றதைப் பார். பாண்டுநந்தன! மகாபாகுபலமுள்ளவனே! கௌரவர்களுக்குக் கீர்த்தியை உண்டுபண்ணுகிறவனே! தர்மவான்களனைவருள்ளும் சிறந்தவனே! கந்தர்வனால் பலாத்கரித்துக் கொண்டுபோகப்படுகிற என்னைப் பாதுகாப்பாயாக. புருஷஶ்ரேஷ்டனே! யுதிஷ்டிர! மகாகீர்த்தியுள்ளவனே! மிக்கதோள்வலியமைந்தவனே! இந்தக்கந்தர்வன் உன்னுடைய பிராதாவான என்னைக் கட்டிக்கொண்டுபோகிறான். கந்தர்வர்கள் துச்சாஸனனையும் துர்விஷஹனையும் துர்முகனையும் துர்ஜயனையும் எம்மையும் மனைவிகளனைவர்களையும் கட்டிக்கொண்டுபோகிறார்கள். புருஷஶ்ரேஷ்டர்களே! சீக்கிரமாகப் பின்தொடர்ந்து ஓடிவாருங்கள். என்னைக் காப்பாற்றுங்கள். என்னை ரக்ஷிப்பதற்காக நகுல ஸஹதேவர்களிருவரும் ஆயுதங்களுடன் கூடினவர்களாக என்னைப் பின்தொடர்ந்து ஓடிவரக்கடவர். பாண்டவர்களே! வீர்யத்தினால் கந்தர்வர்களை ஜயித்துக் குருவம்சத்திற்கு நேர்ந்திருக்கிற இப்படிப்பட்ட மிகப்பெரிதான அபகீர்த்தியைப் போக்குங்கள்' என்று புலம்பினான்.

துன்பக்குரலுடன் இவ்வாறு புலம்புகின்ற துர்யோதனனுடைய புலம்பலைக்கேட்டு, யுதிஷ்டிரர், பரபரப்புள்ளவராகவும் கருணைமேலிட்டவராகவும் மீண்டும் பீமஸேனனைப் பார்த்து, 'ஸுயோதனனை விடுவிப்பதற்காக ஆலஸ்யமில்லாமல் நன்கு முயலுங்கள். 'என்னைப் பாதுகாப்பதற்காக ஓடிவா' என்று அழைக்கப்பட்டவனும் உத்தமனுமான எந்தமனிதன், சத்துருவாக இருந்தாலும், கைகளைக்குவித்துக்கொண்டு சரணமடைந்திருப்பவனைப்பார்த்துத் தன் பிராணனில் தயைபாராட்டுவான்? பாண்டவர்களே! வரன்களைப் பெறுதல் அரசாட்சி புத்திரஜனனம் இம்மூன்றும், ஆபத்தினின்று சத்துருவை விடுவிப்பதோடான்றும் ஒப்பானவை. இது நிச்சயம். ஸுயோதனன் ஆபத்தை அடைந்தவனாகி உன் புஜபலத்தை அடுத்து உயிரைத்தேடுகிறானென்பதைவிடப் பெரியது என்ன இருக்கிறது? விருகோதர! வீர! விஸ்தாரமாக அனுஷ்டிக்கப்படுகிற இந்த யாகமில்லாமலிருக்குமானால் நானே ஓடுவேன். எனக்கு இந்த விஷயத்தில் ஆலோசனை இல்லையன்றோ? பீம! குருநந்தன! எப்படியும் துரியோதனனை ஸாமோபாயத்தினாலேயே விடுவிப்பதற்கு முயல்வாயாக. அந்தக் கந்தர்வராஜன் ஸாமோபாயத்தினால் ஸம்மதிக்காமற்போனால் மெதுவான பராக்கிரமத்தால் துர்யோதனனை விடுவிப்பாயாக. பீம! அப்படியின்றி, அவன் இலேசான யுத்தத்தினால் கௌரவர்களை விடாமற்போனால் எல்லா உபாயங்களாலும் பகைவர்களை அடக்கி அந்தக் கௌரவர்களை விடுவிக்கவேண்டும். விருகோதர! பாரத! விஸ்தாரமான யாககாரியம் நடந்துகொண்டிருக்கும்பொழுது, இவ்வளவுதான் என்னால் சொல்லியனுப்ப முடியும். யாசகனுக்கு வேண்டியவைகளைக் கொடுப்பது மிகப் பெரியதென்று சொல்லப்பட்டிருக்கிறது' என்று கூறினார். அஜாதசத்துருவினுடைய அந்த வசனத்தைக்கேட்டு, அர்ஜுனன், 'கந்தர்வர்கள் ஸமாதானத்தால் திருதராஷ்டிரபுத்திரர்களை விடாமல் போவார்களாகில், இப்பொழுது, கந்தர்வராஜனுடைய இரத்தத்தைப் பூமியானது குடிக்கப்போகிறது' என்று, தமையனுடைய சொற்படி, கந்தர்வர்களிடமிருந்து கௌரவர்களை மீட்பதைப் பிரதிஜ்ஞைசெய்தான். அரசரே! ஸத்தியவாதியான அர்ஜுனனுடைய அந்த ப்ரதிஜ்ஞையைக்கேட்டு, அப்பொழுது கௌரவர்களுடைய மனமானது மீண்டு திரும்பிவந்ததாகியது.

---

## இருநூற்றுநாற்பத்தைந்தாவது அத்யாயம்.

## கோஷயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

### (பீமன் முதலிய நால்வருக்கும் சித்திரஸேனன் முதலியவர்களுக்கும் யுத்தம்.)

யுதிஷ்டிரருடைய வசனத்தைக் கேட்டுப் பீமஸேனனை முதன்மையாகக்கொண்ட புருஷஶ்ரேஷ்டர்களனைவரும் மிக்க மனக்களிப்புடனும் முகமலர்ச்சியுடனும் கிளம்பினார்கள். பாரதரே! பிறகு, மகாரதர்களான பாண்டவர்களனைவரும் உடைக்கமுடியாதவைகளும் பொன்னால் அலங்கரிக்கப்பட்டவைகளுமான கவசங்களைப் பூண்டுகொண்டார்கள்; பற்பலவிதமான திவ்யாயுதங்களையும் எடுத்துக்கொண்டார்கள். கவசம்பூண்டவர்களும் த்வஜமுள்ளவர்களும் விற்பிடித்தவர்களுமான அந்தப் பாண்டவர்களனைவரும் ரதங்களிலேறி ஜ்வலிக்கின்ற அக்னிகள் போலக் காணப்பட்டார்கள். ரதிகர்களுள் சிறந்த பாண்டவர்கள் ஆயுதங்களால் நன்கு நிறைக்கப்பட்டவையும் வேகமுள்ள குதிரைகள் பூட்டினவையுமான அந்த ரதங்களிலேறிக்கொண்டு அங்கிருந்து விரைவாகவே சென்றார்கள். பிறகு, ஒன்றுசேர்ந்தவர்களும் யுத்தத்திற்காகப் புறப்பட்டவர்களும் மகாரதர்களுமான பாண்டுபுத்திரர்களைப் பார்த்து, கௌரவ ஸைனிகர்களுடைய பெரிய ஆரவாரம் தோன்றியது. ஜயத்தால் பிரகாசிப்பவர்களும் ஆகாயத்தில் ஸஞ்சரிப்பவர்களும் மஹாரதர்களுமான கந்தர்வர்கள் விரைவுள்ளவர்களாகப் பயமில்லாதவர்கள்போல ஒருக்ஷணத்தில் அந்த வனத்தில் போர்புரிவதற்காக வந்தார்கள். பிறகு, வெற்றியோடு விளங்குபவர்களான கந்தர்வர்களனைவரும் போர்புரிவதற்காக ரதத்திலேறியிருக்கிற நான்கு பாண்டவவீரர்களைக்கண்டு திரும்பினார்கள். லோகபாலர்கள்போல முயற்சியுள்ளவர்களும் மிக விளங்குபவர்களுமான அந்தப் பாண்டவர்களைக் கண்டு கந்தமாதனத்தில் வஸிப்பவர்கள் அணிவகுத்துக்கொண்டு யுத்தஸன்னத்தர்களாக இருந்தார்கள். பாரதரே! சிறந்த புத்தியுள்ள அரசரான தர்மபுத்திரருடைய வசனத்தைக் கேட்டு மெதுவான முறையோடு யுத்தம் தொடங்கப்பட்டது. மந்தபுத்தியுள்ளவர்களான கந்தர்வராஜனுடைய போர்வீரர்கள் அப்பொழுது மெதுவான யுத்தத்தினால் நன்மையை அடைவிக்கப்படக்கூடியவர்களாயில்லை. பிறகு, பகைவர்களைத்

தவிக்கச் செய்கிற ஸவ்யஸாசியானவன், யுத்தத்தில் எளிதில் ஜயிக்கமுடியாதவர்களான அந்தக் கந்தர்வர்களைப் பார்த்து ஸமாதானத்தை முன்னிட்டு, 'அருவருக்கப்பட்ட இந்தக் கார்யமானது கந்தர்வராஜனுக்குத் தகுந்ததன்று. பரதாரங்களைத் தொடுவதும் மனிதர்களோடு எதிர்ப்பதும் தகுந்தவையல்ல. தர்மராஜருடைய கட்டளையினால் சிறந்த வீரர்களான இந்தத் திருதராஷ்டிரருடைய புத்திரர்களையும் இவர்களுடைய மனைவிகளையும் விட்டுவிடுங்கள்' என்கிற வாக்கியத்தை உரைத்தான். புகழ்பெற்ற பாண்டவனால் இவ்வண்ணமுரைக்கப்பட்ட கந்தர்வர்கள், அப்பொழுது மிகச் சிரித்துக்கொண்டு பார்த்தனைப் பார்த்து, 'ஐயா! நாங்கள் பூமியில் ஒருவனுடையவசனத்தையே செய்யக்கடவோம். பாரத! எவனுடைய கட்டளையை அறிந்து அனுஷ்டித்துக் கவலையற்றவர்களாக ஸஞ்சரிக்கிறோமோ அவனொருவனுடைய கட்டளைப்படி இருக்கிறோம். அந்தத் தேவராஜனைக்காட்டிலும் வேறொருவன் எங்களுக்கு அதிகாரியல்லன்' என்கிற வசனத்தை உரைத்தார்கள். கந்தர்வர்கள் இவ்வாறு கூறக்கேட்ட அந்தக் குந்தீபுத்திரனான தனஞ்சயன், மீண்டுமே அந்தக் கந்தர்வர்களைப் பார்த்து, 'கந்தர்வர்களே! நல்வசனத்தினால் திருதராஷ்டிரருடைய குமாரர்களை விடாமற்போவீர்களாகில் நானே பராக்கிரமத்தை வெளிப்படுத்தித் துர்யோதனனை விடுவிப்பேன்' என்று மறுமொழி கூறினான். பிறகு, குந்தீபுத்திரனும் ஸவ்யஸாசியுமான தனஞ்சயன் இவ்வாறு கூறி ஆகாயத்தில் ஸஞ்சரிப்பவர்களான கந்தர்வர்களின்மீது கூர்மையுள்ள அம்புகளை எய்தான். பலத்தினால் மேற்பட்டவர்களான அந்தக் கந்தர்வர்களும் அப்படியே அம்புமழையினால் பாண்டவர்களை நான்குபக்கங்களிலும் அடித்தார்கள். பாண்டவர்களும் கந்தர்வர்களை அடித்தார்கள். பாரதரே! பிறகு, பலசாலிகளான கந்தர்வர்களுக்கும் பயங்கரமான வேகமுள்ள பாண்டவர்களுக்கும் மிகவும் நெருங்கின யுத்தம் நடந்தது.

---

## இருநூற்றுநாற்பத்தாறுவது அத்யாயம்.

## கோஷயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(மாயையினால் மறைந்து யுத்தம்செய்கின்ற சித்திரஸேனன்மீது அர்ஜுனன் அஸ்திரம்தொடுத்ததும், சித்திரஸேனன் அர்ஜுனனிடம் தன்னை அவனுக்குத் தோழனென்று சொல்லியதும், அர்ஜுனன் அஸ்திரங்களைத் திருப்பியழைக்கவே பீமன்முதலியவர்கள் யுத்தத்தை நிறுத்திவிட்டு அவனோடு ஸல்லாபம் செய்ததும்.)

பிறகு, திவ்யாஸ்திரங்களோடுகூடினவர்களும் பொன் மாலைகளை அணிந்தவர்களுமான கந்தர்வர்கள் பிரகாசிக்கின்ற பாணங்களைப் பிரயோகித்துக்கொண்டு, பாண்டவர்களை நாற்புறங்களிலும் சூழ்ந்துகொண்டார்கள். அரசரே! வீரர்களான நான்கு பாண்டவர்களை ஆயிரக்கணக்கான கந்தர்வர்கள் யுத்தத்தில் நன்றாக எதிர்த்துப் போர்புரிந்தார்கள். அது ஆச்சரியமாயிருந்தது. கர்ணன் துர்யோதனன் இருவருடைய ரதங்களும் கந்தர்வர்களால் நூறுதுண்டுக்குக்களாக வெட்டி எறியப்பட்டதுபோலவே அந்தக் கந்தர்வர்களுடைய ரதங்களும் பாண்டவர்களால் துண்டாடப்பட்டன. வேந்தரே! புருஷஸ்ரேஷ்டர்களான பார்த்தர்கள், யுத்தத்தில் நூறுநூறாக எதிர்த்து வருகின்ற அந்தக் கந்தர்வர்களைப் பலவாறாகச் சரமாரிகளால் எதிர்த்து அடித்தார்கள். பாணவர்ஷங்களால் நாற்புறங்களிலும் சிதற அடிக்கப்படுகின்ற அந்தக் கந்தர்வர்கள் பாண்டுபுத்திரர்களினருகில் திரும்புவதற்குச் சக்தியுள்ளவர்களாகவில்லை. அப்பொழுது கோபங்கொண்ட அர்ஜுனன், கோபங்கொண்ட கந்தர்வர்களைக் குறிவைத்துத் திவ்யமான மகாஸ்திரங்களைப் பிரயோகிக்கத் தொடங்கினான். பலத்தினால் மேற்பட்டவனான அர்ஜுனன் யுத்தத்தில் ஜயிக்கமுடியாதவர்களான கந்தர்வர்களை ஆயிரமாயிரமாக யமலோகத்திற்கு அனுப்பினான். அரசரே! நெடுந்தூரத்திலிருந்தே லக்ஷ்யங்களில் அம்புகளை எய்யும் திறமையுள்ளவனும் பலசாலிகளுள் சிறந்தவனுமான பீமன், யுத்தத்தில் கூர்மையான பாணங்களால் கந்தர்வர்களை நூறுநூறாக வதம் செய்தான். வேந்தரே! அப்படியே, பலத்தால் அதிகரித்தவர்களும்

யுத்தம்செய்பவர்களுமான மாத்ரீபுத்திரர்களும் யுத்தமுனையில் பகைவர்களை எதிர்த்து நூறுநூறாகக் கொன்றார்கள். மகாரதர்களால் திவ்யாஸ்திரங்களால் கொல்லப்படுகின்ற அந்தக் கந்தர்வர்கள் அங்கிருந்து திருதராஷ்டிரபுத்திரர்களை எடுத்துக்கொண்டு ஆகாயத்தில் எழும்பினார்கள். குந்தியின் புத்திரனான அந்தத் தனஞ்சயன், ஆகாயத்தில் எழும்பின அந்தக் கந்தர்வர்களைக்கண்டு, பெரிய அம்புமழையினால் எல்லாப் பக்கங்களிலும் சூழ்ந்துகொண்டான். கூட்டில் கிளிகள்போல அம்புக்கூட்டத்தால் கட்டுப்படுத்தப்பட்ட அந்தக் கந்தர்வர்கள், கோபத்தால், அர்ஜுனன்மீது கதைகளையும் சக்திகளையும் ரிஷ்டிகளின் மழையையும் பொழிந்தார்கள். சிறந்த அஸ்திரங்களை அறிந்தவனான தனஞ்சயன் அந்தக் கதைகள் சக்திகள் ரிஷ்டிகளாகிய இவைகளுடைய மழைகளை அடித்து நாசம்செய்து அர்த்தசந்திரபாணங்களால் கந்தர்வர்களுடைய சரீரங்களை அடித்தான். தலைகளும் கால்களும் அப்படியே கைகளும் விழுவது கல்மாரிபோல விளங்கியது. பகைவர்களுக்குப் பயமுண்டாயிற்று. மிக்க தைரியமுள்ளவனான பாண்டவனால் வதம் செய்யப்படுகின்ற அந்தக் கந்தர்வர்கள் ஆகாயத்திலிருந்துகொண்டு பூமியிலிருக்கிற அர்ஜுனன்மீது அம்புமழைகளைப் பொழிந்தார்கள். பகைவர்களைத் தவிக்கச்செய்பவனும் தேஜஸ்வியுமான ஸவ்யஸாசியானவன், கந்தர்வர்களுடைய பாணவர்ஷங்களை அஸ்திரங்களால் தடுத்து அவர்களைத் திருப்பியடித்தான். குருநந்தனனான அர்ஜுனன் ஸ்தூணாகர்ணத்தையும் இந்திரஜாலத்தையும் அப்படியே ஸௌராஸ்திரத்தையும் ஆக்நேயாஸ்திரத்தையும் ஸௌம்யாஸ்திரத்தையும் பிரயோகம்செய்தான். இந்திரனால் எரிக்கப்படுகின்ற அஸுரர்கள்போலக் குந்தீபுத்திரனுடைய அம்புகளாலெரிக்கப்படுகின்ற அந்தக் கந்தர்வர்கள் அதிகத் துயரத்தை அடைந்தார்கள். மேலே எழும்புகின்ற கந்தர்வர்கள் ஸவ்யஸாசியினால் பாணஸமூகத்தால் தடுக்கப்பட்டார்கள்; ஓடுகின்றவர்கள் அர்த்தசந்திரபாணங்களால் தடுக்கப்பட்டார்கள். பாரதரே! குந்தீபுத்திரனால் பயமடையும்படி செய்யப்பட்ட கந்தர்வர்களைக்கண்டு, சித்திரஸேனன் கதையை எடுத்துக்கொண்டு ஸவ்யஸாசியை நோக்கி எதிர்த்து ஓடிவந்தான். யுத்தத்தில் விரைவாக எதிர்த்து வருகின்றவனும் கதையைக் கையில் பிடித்தவனுமான அந்தச்சித்திரஸேனனுடைய முற்றிலும் உருக்குமயமான கதையைப் பார்த்தன் அம்புகளால் ஏழாகத் துண்டாடினான். அந்தச்

சித்திரஸேனன் பலசாலியான அர்ஜுனனால் பாணங்களால் கதையானது பலவாறு அறுக்கப்பட்டதைக்கண்டு [1] திரஸ்கரிணீவித்தையினால் தன்னைமறைத்துக்கொண்டு பாண்டவனோடு போர்புரிந்தான். வீரனான அர்ஜுனன் சித்திரஸேனனால் நன்குபிரயோகிக்கப்பட்ட எல்லாத் திவ்யாஸ்திரங்களையும் அப்பொழுது திவ்யாஸ்திரங்களால் தடுத்தான். மிக்க வலிமையுள்ள அர்ஜுனனால் அந்த அஸ்திரங்களால் தடுக்கப்படுகின்றவனும் சிறந்த பலமுள்ளவனுமான அந்தக் கந்தர்வராஜன் மாயையினால் அப்பொழுது மறைந்தான். பிறகு, அர்ஜுனன் மறைந்துகொண்டு அடிக்கின்ற அந்தக் கந்தர்வராஜனைக் குறிவைத்துத் திவ்யாஸ்திரமந்திரங்களால் அபிமந்திரணம் செய்யப்பட்டு ஆகாயத்தில் ஸஞ்சரிக்கின்ற பாணங்களால் அடித்தான். அப்பொழுது, கோபங்கொண்டவனும் அநேக ரூபங்களுள்ளவனும் தனஞ்சயனென்கிற பிரஸித்தியைப்பெற்றவனுமான அர்ஜுனன், சப்தவேதமென்கிற அஸ்திரத்தை எடுத்து, மறைந்திருக்கிற அந்தக் கந்தர்வராஜனுடைய வதத்தைச் செய்யத் தொடங்கினான். மகாத்மாவான அர்ஜுனனால் அந்த அஸ்திரங்களால் வதம் செய்யப்படுகின்ற இனிய நண்பனான அந்தச் சித்திரஸேனன் அப்பொழுது தன்ஸ்வரூபத்தை அர்ஜுனனுக்குக் காண்பித்தான். பிறகு, சித்திரஸேனன், யுத்தத்தில் அர்ஜுனனைப் பார்த்து, 'என்னை [2] நண்பனென்று நீ அறிவாயாக' என்று சொன்னான். அர்ஜுனனும் சித்திரஸேனனைக்கண்டு, 'இவன் தோழன்' என்று ஆச்சரியமடைந்தான். பாண்டவச்ரேஷ்டனான அர்ஜுனன், பிறகு, பிரயோகிக்கப்பட்டிருக்கிற அந்த அஸ்திரத்தைத் திருப்பியழைத்தான். பாண்டவர்களனைவரும், தனஞ்சயன் அஸ்திரத்தைத் திருப்பியழைத்ததைப்பார்த்து, யுத்தகளத்தில் வேகமாகச் செல்லுகின்ற குதிரைகளையும் பாண வேகங்களையும் விற்களையும் ஓயச்செய்தார்கள். சித்திரஸேனனும் பீமனும் ஸவ்யஸாசியும் நகுலஸஹதேவர்களும் ஒருவரை ஒருவர் குசல ப்ரச்னம் செய்துகொண்டு ரதங்களிலேயே இருந்தார்கள்.

[1] மறைப்பது. [2] 166-ம் பக்கம் பார்க்க.

## இருநூற்றுநாற்பத்தேழாவது அத்யாயம்.

## கோஷயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(சித்திரஸேனன் துர்யோதனனைக் கட்டினதற்குக் காரணத்தைக் கூறி யுதிஷ்டிரரிடம் போனதும், யுதிஷ்டிரர் துர்யோதனன் முதலியவர்களைக் கட்டிலிருந்து விடுவித்ததும், துர்யோதனன் தன் நகரம் சென்றதும்.)

பிறகு, பெரியவில்லைக் கையிற்பிடித்தவனும் அதிக காந்தியுள்ளவனுமான அர்ஜுனன் சிரித்துக்கொண்டு கந்தர்வ சேனை வீரர்களின் நடுவில் சித்திரஸேனனைப் பார்த்து, 'வீர! கௌரவர்களைத் தண்டிக்கும் விஷயத்தில் உன்னுடைய அபிப்பிராயம் என்ன? எதற்காக இந்தத் துரியோதனன் மனைவிகளுடன்கூடக் கட்டப்பட்டான்?' என்று வினவ, சித்திரஸேனன், 'தனஞ்சய! இந்திரன், கர்ணனோடுசேர்ந்தவனும் கெட்ட எண்ணமுள்ளவனுமான துர்யோதனன், வனவாஸத்துக்குத் தகுதியற்றவர்களும் வனத்தில் வஸிப்பவர்களுமான நீங்கள் துன்பப்படுவதை அறிந்து, 'நல்ல நிலைமையிலிருக்கிற நான் கெட்ட நிலைமையிலிருக்கிற அந்தப் பாண்டவர்களைப் பார்ப்பேன்' என்றெண்ணின இந்த அபிப்பிராயத்தை ஸ்வர்க்கத்திலிருந்தே அறிந்தான். 'நிலை தப்பினவர்களான இந்தப் பாண்டவர்களையும், கீர்த்திபுள்ளவளான திரௌபதியையும் பரிஹஸிப்பதாக இவர்கள் வந்திருக்கிறார்கள்' என்கிற இவர்களுடைய கருத்தை அறிந்து தேவராஜன் என்னைப்பார்த்து, 'போ; துரியோதனனை மந்திரிகளுடன் கட்டிக்கொண்டுவா. யுத்தத்தில் தனஞ்சயனை ப்ராதாக்களோடுகூட நீ காக்கவேண்டும். அந்தப் பாண்டவன் உனக்கு ப்ரியனான தோழன். உனக்குச் சிஷ்யனாகவுமிருக்கிறான்' என்று சொன்னான். தேவராஜனுடைய வசனத்தினால் நான் ஸ்வர்க்கத்தினின்று விரைவாக இங்கு வந்தேன். இந்தத் துராத்மாவான துர்யோதனன் கட்டப்பட்டான். தேவலோகத்திற்குச் செல்லுவேன். பாகசாஸனனுடைய கட்டளையினால் இந்தத் துராத்மாவைக் கொண்டுபோவேன்' என்று சொன்னான். அர்ஜுனன், 'சித்திரஸேன! எனக்குப் பிரியத்தை நீ விரும்புகிறாயாகில் தர்மராஜருடைய கட்டளையினால் நம்முடைய ப்ராதாவான ஸுயோதனனை அவிழ்த்துவிடவேண்டும்' என்று சொல்ல, சித்திரஸேனன், 'தனஞ்சய! தர்மராஜன் விஷயத்தி

லும் துர்ப்ராளபத்வஷயத்திலும் வஞ்சகனும் ஸாதுக்களுடைய துயரத்தினால் நித்தியம் ஸந்தோஷப்படுகிறவனுமான இந்தப்பாவி யான்வன் விடுதலை அடைவதற்குத் தகுதியுள்ளவனல்லன். தர்மத் தால் பிரகாசிப்பவனும் குந்தியின் புத்திரனுமான யுதிஷ்டிரன், அவனுடைய இந்தக் கெட்ட எண்ணத்தை அறியான். இந்த விஷயத் தைக் கேட்டு நீ விரும்புகிறதைச் செய்வாயாக' என்று சொன்னான்.

அவர்களனைவருமே யுதிஷ்டிரராஜரை அடைந்தார்கள். அவரை அணுகி அந்தத் துர்யோதனனுடைய செய்கையனைத்தை யும் சொன்னார்கள். அஜாத சத்துருவானவர் கந்தர்வனுடைய அந்த வசனத்தை அப்பொழுது கேட்டுத் துரியோதனன் முதலியவர்களைக் கட்டிலிருந்து அவிழ்த்துவிடும்படி செய்தார்; அந்த எல்லாக் கந்தர்வர்களையும் புகழ்ந்தார். சித்திரஸேனன், அப்பொழுது, கந்தர்வர்களைப்பார்த்து, கம்பீரமான சொல்லால், 'இளைய ஸஹோதரர்களுடனும் மந்திரிகளுடனும் மனைவிகளுட னும்கூடத் துர்யோதனனை விட்டுவிடுங்கள்' என்கிற வாக்கி யத்தை உரைத்தான். கந்தர்வர்களோ சித்திரஸேனனுடைய அந்த வசனத்தைக்கேட்டு இருப்புச்சங்கிலிகளால் கட்டப்பட் டிருக்கிற துர்யோதனராஜனை மனைவிகளுடனும் பரிஜனங்களுட னும் மந்திரிகளுடனும் விரைவாக அவிழ்த்துவிட்டார்கள். மற்றும் எவர்கள் சணல் வலைகளால் கட்டப்பட்டிருந்தார்களோ அவர்களனைவரும் அப்பொழுது யுதிஷ்டிரருக்கருகில் கீழே விழுந்து தரையில்புரண்டு வெட்கத்துடன் தலைகுனிந்து நின்றார்கள். யுதிஷ்டிரரும், அந்த நிலைமையை அடைந்திருக்கிற அந்தக் கௌரவர்களைத் தயையுடன் பார்த்து, கந்தர்வர்களை நோக்கி, 'பாக்கியவிசேஷத்தால் பலசாலிகளும் வல்லமை யுள்ளவர்களுமான உங்களனைவராலும் கெட்ட நடையுள்ளவனும் மந்திரிகளோடும் ஞாதிகளோடும் பந்துக்களோடும் கூடினவனு மான இந்தத் துரியோதனன் கொல்லப்படவில்லை. அப்பா! கந்தர்வ! எனக்கு இந்தப் பெரிய உபகாரம் உன்னால் செய்யப் பட்டது. துராத்மாவான இந்தத் துரியோதனனை விட்டதனால் என்னுடைய குலமானது அவமதிக்கப்படாததாயிற்று. உங்களைப் பார்த்ததனால் ப்ரீதியுள்ளவனான என்னை நோக்கி உங்களுடைய இஷ்டங்களைப்பற்றிக் கட்டளை இடுங்கள். எல்லா அபீஷ்டங் களையும் பெற்றுக்கொண்டு, பிறகு, விளம்பமின்றிச் செல்லுங்கள்' என்று சொன்னார்.

புத்திமானுன பாண்டுபுத்திரரால் அனுமதிகொடுக்கப்பட்ட சித்திரஸேனன் முதலிய கந்தர்வர்கள் அதிக சந்தோஷமுள்ளவர்களாக அப்ஸரஸுகளோடுகூட ஸ்வர்க்கலோகத்தை நோக்கிச் சென்றூர்கள். பிறகு, சித்திரஸேனன் கந்தர்வர்களோடுசேர்ந்து அப்பொழுது தேவலோகத்தை அடைந்து இந்திரனிடத்தில் அவை அனைத்தையும் தெரிவித்தான். தேவராஜனும், எவர்கள் கௌரவர்களால் யுத்தத்தில் கொல்லப்பட்டார்களோ மரித்த அந்த எல்லாக் கந்தர்வர்களையும் திவ்யமான அமிருத வர்ஷத்தினுல் பிழைக்கச்செய்தான். பாண்டவர்கள் அந்த ஜ்ஞாதிகளையும் எல்லா ராஜஸ்திரீகளையும் விடுவித்து ஒருவராலும் செய்யமுடியாத காரியத்தைச் செய்து மகிழ்ச்சியடைந்தார்கள். ஸ்திரீகளுடனும் குமாரர்களுடனுங்கூடின கௌரவர்களால் பூஜிக்கப்படுகின்றவர்களும் மஹாத்மாக்களும் மகாரதர்களுமான பாண்டவர்கள் யாகசாலையின்மத்தியில் அக்னிகள்போலப் பிரகாசித்தார்கள். பிறகு, கட்டவிழ்த்துவிடப்பட்ட துர்யோதனனைப்பார்த்து, யுதிஷ்டிரர், பிராதாக்களோடு கூடினவராக அப்பொழுது அன்பினுல், ‘அப்பா! மீண்டும் இப்படிப்பட்ட ஸாஹஸத்தை ஓரிடத்திலும் ஒருபொழுதும் செய்யாதே. பாரத! ஸாஹஸகார்யத்தைச் செய்பவர்கள் ஸுகமாக விருத்தியடைகிறதில்லையன்றோ? குருவம்சத்தை ஆனந்தமடையச் செய்பவனே! எல்லாப்ராதாக்களோடும்கூடி க்ஷேமமாக இஷ்டப்படி வீட்டுக்குச் செல்வாயாக. மனவருத்தத்தைப் பாராட்டாதே’ என்று சொன்னர். யுதிஷ்டிரரால் அனுமதி கொடுக்கப்பட்ட துர்யோதனராஜன் அப்பொழுது தர்மபுத்திரரைத் தண்டனிட்டு வியாதிபுள்ளவன்போல இந்திரிய சக்தியை இழந்தவனுகவும் (துக்கத்தால்) பிளக்கப்படுகின்றவனுகவும் வெட்கமுள்ளவனுகவும் நகரத்தைக்குறித்துச் சென்றூன். கௌரவனுன அந்தத் துரியோதனன் சென்றபிறகு, குந்திபுத்திரரும் வீரருமான யுதிஷ்டிரர், பிராதாக்களோடுகூடியவராகவும், பிராம்மணர்களால் பூஜிக்கப்படுகின்றவராகவும், தேவர்களால் இந்திரன் சூழப்பட்டதுபோல அப்படிப்பட்ட எல்லாத் தவசிகளாலும் சூழப்பட்டவராகவும், ஸந்தோஷமுள்ளவராகவும் அந்த த்வைதவனத்தில் அவ்வாறு மகிழ்ந்திருந்தார்" என்று கூறினர்.

---

## இருநூற்றுநாற்பத்தெட்டாவது அத்யாயம்.

## கோஷயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

**( துர்யோதனன் நடுவழியில் தங்கியதும், கர்ணன் வந்து, கந்தர்வர்கள் கட்டியதையும் விட்டதையும் அறியாமல் துரியோதனன் வெற்றி பெற்றதாக எண்ணி அவனைப் புகழ்ந்ததும்.)**

ஜனமேஜயர், "பகைவர்களால் வெல்லப்பட்டுக் கட்டப் பட்டவனும், பிறகு, மகாத்மாக்களான பாண்டவர்களால் யுத்தத் தால் விடுவிக்கப்பட்டவனும், அகங்காரமுள்ளவனும், மிகக் கெட்ட எண்ணமுள்ளவனும், தற்புகழ்ச்சி செய்பவனும், கொழுப்புள்ள வனும், எப்பொழுதுமே கர்வமுள்ளவனும், எப்பொழுதும் ஆண்மை களாலும் ஔதார்யங்களாலும் பாண்டவர்களை அவமதிக் கின்றவனும், பாவியும், நித்தியம் அகங்காரத்துடன் பேசுபவனு மான துர்யோதனனுக்கு ஹஸ்தினபட்டணத்தில் பிரவேசமானது செய்ய முடியாதென்று எனக்குத் தோன்றுகிறது. வைசம்பா யனரே! வெட்கத்துடன்கூடியவனும் சோகத்தால் மனம் கலங் கினவனுமான அந்தத் துர்யோதனனுடைய நகரப்ரவேசத்தை எனக்கு நீர் விஸ்தாரமாக உரைக்கக்கடவீர்" என்று வினவினர்.

வைசம்பாயனர், "தர்மராஜரால் விடுவிக்கப்பட்ட திருதராஷ் டிரபுத்திரனான ஸுயோதனன் வெட்கத்தால் தலைகுனிந்தவனாக வும் வாட்டமுற்றவனாகவும் மிக்க துக்கமுள்ளவனாகவும் நகரத் திற்குச் செல்லலானான். சதுரங்கசேனையினால் பின்தொடரப் பட்ட துர்யோதனராஜன் சோகத்தாலடிக்கப்பட்ட புத்தியினால் அவமானத்தை நினைத்துக்கொண்டு தன் பட்டணத்திற்குச் சென்றான். வழியில் நல்லபுல்லுகளும் தண்ணீருமுள்ள ஓரிடத்தில் வாகனங்களை விட்டுவிட்டு, மங்களகரமானதும் அழகியது மான பூமியில் தன்னிஷ்டப்படி உட்கார்ந்தான்; யானைகளையும் குதிரைகளையும் ரதங்களையும் காலாட்களையும் இருக்க வேண்டிய இடங்களில் அமர்ந்திருக்கச் செய்தான். பிறகு, அக்னி போல் ஜ்வலிக்கின்ற கட்டிலில் வீற்றிருப்பவனும் விடியற் காலத்தில் ராகுவினால் விழுங்கப்பட்ட சந்திரன்போன்றவனு மான துரியோதனனை அணுகிக் கர்ணன் அப்பொழுது, 'காந்தாரீநந்தன! பாக்கியவிசேஷத்தால் பிழைத்திருக்கிறாய். பாக்கியவிசேஷத்தால் நமக்கு மீண்டும் சேர்க்கை ஏற்பட்

டது. காமரூபிகளான கந்தர்வர்கள் தெய்வாதீனமாக உன்னால் ஜயிக்கப்பட்டார்கள். குருநந்தன! ரணகளத்தில் சத்துருஜயத்தில் விருப்பமுள்ளவர்களும் தக்க முயற்சியுள்ளவர்களும் மஹாரதர்களுமான உன்னுடைய பிராதாக்களனைவரையும் பாக்கிய விசேஷத்தால் சத்துருக்களை ஜயித்தவர்களாகக் காண்கிறேன். நானோ நீ பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே எல்லாக் கந்தர்வர்களாலும் எதிர்த்துத் தாக்கப்பட்டவனாகிப் பிளக்கப்படுகிற சேனையை நிலைநிறுத்துவதற்குச் சக்தியுள்ளவனாகவில்லை. பாணங்களால் உடம்பு காயப்படுத்தப்பட்டவனும் எதிர்த்து அடிக்கப்பட்டவனுமாகி யுத்தத்தைவிட்டு ஓடிவிட்டேன். பாரத! இந்த இடத்தில் உங்களை நான் பார்ப்பதை அதிக ஆச்சர்யமாக நினைக்கிறேன். உங்களை க்ஷேமமுள்ளவர்களாகவும் ஆயுதக்காயமில்லாதவர்களாகவும் தாரங்களோடும் ஸைன்யங்களோடும் வாகனங்களோடுங்கூடினவர்களாகவும் அந்த அமானுஷமான யுத்தத்திலிருந்து விடுபட்டவர்களாகவும் பார்க்கிறேன். பாரதனே! மகாராஜனே! யுத்தத்தில் ப்ராதாக்களோடு கூடின உன்னால் செய்யப்பட்ட இதனைச் செய்கிற மனிதன் இவ்வுலகத்தில் இல்லை' என்று சொன்னான். அரசனே! கர்ணனால் இவ்வண்ணம் உரைக்கப்பட்ட அரசனான துரியோதனன், அப்பொழுது தலை குனிந்துகொண்டு கண்ணீரால் தடுமாற்றமுள்ள குரலுடன் பின்வருமாறு உரைக்கலானான்.

## இருநூற்றுநாற்பத்தோன்பதாவது அத்யாயம்.

## கோஷயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(துர்யோதனன் யுத்தத்தில் தம்பிமார்களுடன் கூடத் தான் கந்தர்வர்களால் கட்டப்பட்டதையும் யுதிஷ்டிரனுடைய கட்டளையினால் பீமன்முதலியவர்கள் யுத்தத்தில் கந்தர்வர்களைத் தோல்வியடையச் செய்ததையும் சொல்லியது.)

துர்யோதனன், 'கர்ண! அறியாதவனாகயிருக்கிற உன்னுடைய வசனத்தைப்பற்றி நான் அஸூயைப்படவில்லை. நீ என்னால் சௌர்யத்தினால் பகைவர்களான கந்தர்வர்கள் ஜயிக்கப்பட்டார்களென்று நினைக்கிறாய். நெடுநேரம் என்னோடுகூட என்னுடைய தம்பிமார்கள் கந்தர்வர்களுடன் போர்புரிந்தார்கள்.

மிக்க புஜபலமுள்ளவனே! இருதிறத்திலும் நாசம் உண்டுபண்ணப் பட்டது. மாயை மிகுந்தவர்களான கந்தர்வ சூரர்கள் ஆகாசத்தை அடைந்து போர்புரிந்தபொழுது எங்களுக்கு ஆகாயத்தில் ஸஞ்சரிப்பவர்களோடு ஸமமான் யுத்தம் ஏற்படவில்லை. யுத்தத்தில் தோல்வியை அடைந்தோம்; கட்டவும் பட்டோம். அதிக துக்கத்தை அடைந்தவர்களான நாங்கள் வேலைக்காரர்களோடும் மந்திரிகளோடும் புத்திரர்களோடும்கூடியவர்களாகவும் தாரங்களோடும் சேனைகளோடும் வாகனங்களோடும்கூடினவர்களாகவும் கந்தர்வர்களால் ஆகாயமார்க்கத்தால் மேலே கொண்டுபோகப்பட்டோம். பிறகு, நம்முடைய சில ஸைனிகர்களும் மந்திரிகளும் மகாரதர்களும் தீனர்களாக, அபயம் கொடுப்பவர்களான பாண்டவர்களை அணுகி, 'திருதராஷ்டிரகுமாரனான இந்தத் துர்யோதனராஜன் தம்பிமார்களோடுகூடியவனாகவும் அமாத்தியர்களோடும் தாரங்களுடனும்கூடியவனாகவும் தேவலோகவாஸிகளான கந்தர்வர்களால் கொண்டுபோகப்படுகிறான். மனைவிகளுடன் கூடின அந்த அரசனை விடுவியுங்கள். உங்களுக்கு மங்களம். குருகுலத்தில் பிறந்த அரசர்களுடைய தாரங்களனைவரையும் அன்யபுருஷர்கள் தொடாமலிருக்கட்டும்' என்று சொன்னார்கள். யுத்தத்தினின்று விடுபட்டவர்கள் தர்மராஜனை அணுகி இவ்வண்ணம் கூறினார்கள்.

இவ்வண்ணம் சொல்லப்பட்டவுடன், தர்மாத்மாவும் பாண்டுவின் மூத்த குமாரனுமான யுதிஷ்டிரன், அப்பொழுது, நல்ல வசனங்களால் ஸந்தோஷத்தை அடையச் செய்து, தம்பிமாரெல்லாரையும் கௌரவர்களை விடுவிக்கும் விஷயத்தில் கட்டளையிட்டான். பிறகு, புருஷச்ரேஷ்டர்களும் சக்தியுள்ளவர்களும் தார்மிகர்களும் மகாரதர்களுமான பாண்டவர்கள் அந்த இடத்தை வந்தடைந்து நல்வார்த்தையை முன்னிட்டுக்கொண்டு எங்களை விட்டுவிடவேண்டுமென்று கந்தர்வர்களை வேண்டினார்கள். ஆகாசத்தில் ஸஞ்சரிப்பவர்களும் வீரர்களும் மேகங்கள்போலக் கர்ஜிப்பவர்களுமான கந்தர்வர்கள் இன்சொற்களால் வேண்டப்பட்டும் எங்களை விடாமற்போனபொழுது அர்ஜுனனும் பீமனும் பலம் மிகுந்த நகுல ஸஹதேவர்களும் கந்தர்வர்களின் மீது அனேகமான சரமாரிகளை விடுத்தார்கள். பிறகு, எல்லாக்கந்தர்வர்களும் மனக்களிப்புடன் யுத்தத்தை விட்டுவிட்டுத் தீனர்களான எங்களை இழுத்துக்கொண்டே ஸ்வர்க்கத்தை நோக்கிச் செல்லலானார்கள். பிறகு, எல்லாப் பக்கங்களிலும் அம்புவலையால் சூழப்பட்டவனும்

அமானுஷமான அஸ்திரங்களைப் பிரயோகிப்பவனுமான தனஞ்சயனைக் கண்டோம். பாண்டுநந்தனனால் கூர்மையான அம்புகளால் திசைகள் நன்றாக மூடப்பட்டதைக்கண்டு அப்பொழுது தனஞ்சயனுக்குத் தோழனான சித்திரஸேனன் தன் ஸ்வரூபத்தைக் காண்பித்தான். சித்திரஸேனனும் அர்ஜுனனும் ஒருவரையொருவர் தழுவிக் குசலப்ரச்னம் செய்தார்கள். மற்றப் பாண்டவர்களாலும் சித்ரஸேனன் க்ஷேமம் விசாரிக்கப்பட்டான். அந்த வீரர்களான கந்தர்வர்கள் அப்படி ஒன்று சேர்ந்து யுத்தஸன்னாகங்களை முழுதும் விட்டுப் பிறகு பாண்டவர்களோடு அந்யோந்யம் ஒன்று சேர்ந்தார்கள். சித்திரஸேனனும் தனஞ்சயனுமாகிய இருவரும் ஒருவரோடொருவர் சேர்ந்து அதிக ப்ரீதியுள்ளவர்களாக ஒருவரையொருவர் பூஜித்தார்கள்.

## இருநூற்றைம்பதாவது அத்யாயம்.

## கோஷயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(துர்யோதனன் தான் கட்டுண்ட விஷயத்தில் சித்திரஸேனனும் அர்ஜுனனும் பேசிக்கொண்டதையும் யுதிஷ்டிரர் தன்னை விடுவித்ததையும் கூறிப் பிராயோபவேசஞ் செய்ய நிச்சயித்துத் துச்சாஸனனிடத்தில் ராஜ்யத்தை ஒப்பித்ததும், கர்ணன் துர்யோதனனைத் திருப்புவதற்காக அவனுக்கு இன்சொல் கூறியதும்.)

பகைவீரர்களைக் கொல்பவனான அர்ஜுனன், அப்பொழுது சித்திரஸேனனுடன் சேர்ந்து சிரித்துக்கொண்டு, 'கந்தர்வச்ரேஷ்டனே! வீர! என்னுடைய பிராதாக்களை நீ விடவேண்டும். பாண்டவர்கள் உயிரோடிருக்கும்பொழுது இவர்கள் பகைவர்களால் அவமதிக்கப்படத் தக்கவர்களல்லரன்றோ?' என்கிற இப்படிப்பட்ட கம்பீரமான வசனத்தை உரைத்தான். கர்ண! மஹாத்மாவான பாண்டவனால் இவ்வண்ணம் சொல்லப்பட்ட கந்தர்வன், 'ராஜ்யத்திலிருப்பவனும் ஸ்ரீயினால் வரிக்கப்பட்டவனுமான நான் ராஜ்யத்தினின்று நழுவினவர்களும் ஸ்ரீயினால் கைவிடப்பட்டவர்களும் ஸுகத்தை இழந்தவர்களும் வீரர்களும் மனைவியுடன்கூடினவர்களுமான பாண்டவர்களைப் பார்ப்பேன்' என்று எந்த விஷயத்தை நாம் ஆலோசித்துக்கொண்டு நகரத்திலிருந்து புறப்பட்டோமோ

அந்த விஷயத்தைச் சொன்னான். கந்தர்வனால் அந்தவிஷயமானது அவ்வாறு சொல்லப்படும் ஸமயத்தில் வெட்கத்துடன்கூடியவனாகப் பூமியிலுள்ள ஒரு வளையில் நுழைய விருப்பங்கொண்டேன். பிறகு, கந்தர்வர்கள் பாண்டவர்களோடுகூட யுதிஷ்டிரனை அணுகி அவனுக்கு நம்முடைய துராலோசனையையும் நாம் கட்டப்பட்டதையும் தெரிவித்தார்கள். கட்டப்பட்டவனும் சத்துருவின் வசத்தை அடைந்தவனும் தீனனுமான நான் ஸ்திரீகளுக்கு எதிரில் யுதிஷ்டிரனுக்குக் காணிக்கையாகக் கந்தர்வர்களால் கொடுக்கப்பட்டேன். இதைவிடப் பெரிதான துக்கமென்ன இருக்கிறது? எவர்கள் என்னால் எப்பொழுதும் நிராகரிக்கப்பட்டார்களோ, எவர்களுக்கு நான் எப்பொழுதும் பகைவனோ அவர்களால், துர்ப்புத்தியுள்ளவனான நான் விடுவிக்கப்பட்டேன். அவர்களாலேயே உயிர் எனக்குக் கொடுக்கப்பட்டது. வீர! அந்த மகாயுத்தத்தில் நான் வதத்தை அடைந்திருந்தால் அந்த வதமானது எனக்கு நன்மையாக இருக்கும். இப்படி அவமதிக்கப்பட்டிருக்கிற எனக்கு உயிர் சிறந்ததாகாது. கந்தர்வர்களிடத்திலிருந்து ஏற்படும் வதத்தால் எனக்குப் பூமியில் புகழ் பரவினதாகும். இந்திரலோகத்தில் என்னால் அக்ஷயமான புண்யலோகங்கள் அடையப்படுவைகளாகும். புருஷஸ்ரேஷ்டர்களே! இப்பொழுது என்னுடைய முயற்சியைக் கேளுங்கள். இந்த இடத்தில் நான் பிராயோபவேசம் செய்வேன். நீங்கள் வீட்டுக்குச் செல்லுங்கள். என்னுடைய பிராதாக்கள் அனைவரும் இப்பொழுது தங்கள் பட்டணத்துக்குச் செல்லக்கடவர். கர்ணன்முதலிய நண்பர்களும் உறவினர்களும் துச்சாஸனனை முன்னிட்டுக்கொண்டு இப்பொழுது பட்டணத்தை நோக்கிச் செல்லக்கடவர். நண்பர்களுக்குக் கௌரவத்தை உண்டுபண்ணுகிறவனாகவும் பகைவர்களுடைய கௌரவத்தை அழிப்பவனாகவுமிருந்து, இப்பொழுது பகைவர்களால் நிராகரிக்கப்பட்ட நான் பட்டணத்தைநோக்கிச் செல்லமாட்டேன். இப்பொழுது நான் யுத்தமுனையில் பகைவர்களால் இவ்விடப்படி அவமதிக்கப்பட்டேன். அப்படிப்பட்ட நான் நண்பர்களுக்குத் துயரத்தைக் கொடுப்பவனும் பகைவர்களுக்கு மகிழ்ச்சியை வளர்க்கிறவனுமாகிவிட்டேன். ஹஸ்தினபுரத்தை அடைந்து அரசரான திருதராஷ்டிரரை அணுகி என்ன சொல்லுவேன்? பீஷ்மரும் துரோணரும் கிருபரும் அஸ்வத்தாமாவும் விதுரரும் ஸஞ்சயனும் பாஹ்லீகரும் பூரிஸ்ரவஸும் பெரியோர்

களால் ஒப்புக்கொள்ளப்பட்ட மற்றவீரர்களும் பிராம்மணர்களும் சில்பிக்கூட்டத்தலைவர்களும் ஸ்வதந்திரஜீவனமுள்ளவர்களும் என்னைப்பார்த்து என்ன சொல்லுவார்கள்? நான் அவர்களைப்பார்த்து என்ன மறுமொழிசொல்லுவேன்? பகைவர்களுடைய தலையில்நின்று அப்படி அவர்கள்மார்பில் பராக்கிரமத்தைக் காட்டி உயர்ந்த நிலைமையிலிருந்து என்குற்றத்தால் நழுவிக் கீழே விழுந்திருக்கின்ற நான் அரசர் முதலானவர்களுக்கு என்ன சொல்லுவேன்? துஷ்டர்கள் ஸ்ரீயையும் வித்தையையும் ஸம்பத்தையுமடைந்தால், மதத்தினால் கர்வங்கொண்டவனான என்னைப்போல நெடுங்காலம் நல்ல பதத்திலிருக்கமாட்டார்கள். எதனால் பிராணஸம்சயத்தை அடைந்தவனானேனோ அப்படிப்பட்ட இந்தக் கஷ்டமான கெட்டகார்யமானது கெடுமதியுள்ளவனான என்னால் அறியாமையால் செய்யப்பட்டது. அந்தோ! கஷ்டம்! ஆகையால், பிராயோபவேசம் செய்வேன். உயிரோடு இருப்பதற்கு நான் சக்தியுள்ளவனல்லேன். ஆபத்தினின்று பகைவர்களால் கரையேற்றிவிடப்பட்ட அறிவுள்ள எந்த மனிதன் உயிரோடிருப்பான்? கர்வமுள்ளவனான நான் பகைவர்களாலும் நகைக்கப்பட்டேன்; ஆண்மையினாலும் விடப்பட்டேன். வலிமைமிக்கவர்களான பாண்டவர்களாலும் அவமதிப்போடு பார்க்கப்பட்டேன்' என்று சொன்னான்.

இவ்வண்ணம் சிந்தையினால் கவரப்பட்டவனான துரியோதனன், பிறகு, துச்சாஸனனைப்பார்த்து, 'பாரத! துச்சாஸன! என்னுடைய இந்த வசனத்தைத் தெரிந்துகொள்வாயாக. நீ என்னால் கொடுக்கப்படுகிற இந்த ராஜ்யபட்டாபிஷேகத்தைப் பெற்றுக்கொள். ராஜாவாக இரு. கர்ணனாலும் சகுனியினாலும் பாதுகாக்கப்பட்டதும் ஸம்பத்தால் நிறைந்ததுமான பூமியைஆள்வாயாக. இந்திரன் தேவர்களை ரக்ஷிப்பதுபோலத் தம்பிமார்களை அன்புடன் பரிபாலனம்செய்வாயாக. தேவர்கள் இந்திரனை அண்டிப் பிழைப்பதுபோலப் பந்துக்கள் உன்னை அண்டிப் பிழைக்கட்டும். அஜாக்கிரதையில்லாமல் எப்பொழுதும் பிராம்மணர்களுக்கு ஜீவனத்தை ஏற்படுத்துவாயாக. உறவினர்களுக்கும் நண்பர்களுக்கும் நீ எப்பொழுதும் கதியாக இரு. விஷ்ணுவானவர் தேவகணங்களைப் பார்த்துக்கொள்வதுபோல ஞாதிகளையும் பார்த்துக்கொள்வாயாக. நீ பெரியோர்களைப் பரிபாலனம் செய்யவேண்டும்; போ. நண்பர்களை ஆனந்தமடையச் செய்துகொண்டும் பகைவர்களை

வரையும் வெருட்டிக்கொண்டும் பூமியைப் பரிபாலனம் செய்வாயாக' என்றுசொல்லி அவனைக் கழுத்தில் தழுவிக்கொண்டு, 'போகலாம்' என்றும் சொன்னான்.

அவனுடைய அந்தவசனத்தைக்கேட்டுத் துச்சாஸனன் மனந் தளர்ந்தவனும் கண்ணீரால் குரல் தடைப்பட்டவனும் மிக்க துக்கத் தால் பீடிக்கப்பட்டவனுமாகிக் கைகளைக் குவித்துக்கொண்டு தண்டனிட்டுக் கூறலானான். துச்சாஸனன், 'கருணைபுரிவாயாக' என்று தமையனைநோக்கிப் பரிதாபமுள்ள மனத்துடனும் தடுமாற்ற முள்ள குரலுடனும் ஒருவாக்கியத்தைச் சொல்லிக்கொண்டு பூமியில் விழுந்தான். புருஷஶ்ரேஷ்டனான துச்சாஸனன் துக்கத்துடன் அந்தத் துர்யோதனனுடைய கால்களில் கண்ணீரை வடிக்கின்ற வனாகி, 'இது இப்படி நேரக்கூடாது. பூமியானது முழுமையும் வெடித்துப்போகலாம். ஆகாசமும் துண்டுதுண்டாகப்போகலாம்; சூரியனும் தன்னுடைய ஒளியை இழக்கலாம்; சந்திரன் குளிர்ந்த கிரணங்களுடனிருத்தலை இழக்கலாம்; வாயுவும் விரைவாகச் செல்லும் தன்மையை விட்டுவிடலாம்; இமயமலையும் குளிர்ச்சியை இழக்கலாம்; ஸமுத்திரங்களில் ஜலமும் வறண்டுபோகலாம்; நெருப் பானது வெம்மையை விட்டுவிடலாம்; அரசனே! நீ இல்லாமல் நான் பூமியைப் பரிபாலனம்செய்யமாட்டேன். வேந்தனே! நீயே பகைவர்களுக்குச் சோகத்தை உண்டுபண்ணிக்கொண்டும் நண்பர்களுக்குச் சோகத்தைப் போக்கிக்கொண்டும் நம்முடைய குலத்தில் நூறுவருஷகாலம் அரசனாகஇருப்பாய். கிருபைசெய்வா யாக' என்கிற இந்தவாக்கியத்தை மீண்டும் மீண்டும் உரைத்தான்.

பாரதரே! அந்தத் துச்சாஸனன் துர்யோதனராஜனைப் பார்த்து இவ்வண்ணமுரைத்துப் பூஜைக்குத் தகுதியுள்ள தமைய னுடைய பாதங்களை நன்றாகப் பிடித்துக்கொண்டு இனியகுரலாக அழுதான். அவ்வாறு துக்கமடைந்திருக்கின்ற அந்தத் துச்சாஸ னனையும் துர்யோதனனையும் பார்த்துக் கர்ணன் மனவருத்தமுள்ள வனாக அவர்களை அணுகி, 'குருகுலத்தில் பிறந்தவர்களே! மூர்க்க ஸ்வபாவத்தால் அல்பமனிதர்கள்போல ஏன் விசனப்படுகிறீர்கள்? துக்கப்படுகின்ற மனிதனுடைய சோகமானது ஒருபொழுதும் அவனைவிட்டு விலகாது. சோகமானது சோகத்திற்கு உடன் பட்டிருக்கிற மனிதனுடைய விசனத்தைப் போக்குகிறதில்லை. ஆதலால், சோகத்தை அநுபவிக்கின்ற நீங்கள் சோகத்தில் என்ன பயனைக் காண்கிறீர்கள்? தைரியத்தை அடையுங்கள். சோகத்திற்கு

உடன்பட்டவர்களாக இருந்துகொண்டு பகைவர்களை ஆனந்த மடையும்படி செய்யாதீர்கள். அரசனே! பாண்டவர்களால் உனக்குச் செய்யத்தக்கதாகஇருக்கிற விடுவித்தலன்றோ செய்யப் பட்டது? அரசனுக்குத் தேசத்தில்வஸிப்பவர்கள் எப்பொழுது மே பிரியத்தைச் செய்யவேண்டும். அவர்கள் உன்னால் பரிபாலனம் செய்யப்பட்டன்றோ கவலையற்றவர்களாக வஸிக்கிறார்கள்? இது இவ்வாறிருக்க, ஸாமான்யமனிதன்போல நீ சோகத்தைப் பாராட்டுதல் தகாது. நீ பிராயோபவேசம்செய்வதில் உன்னுடைய ஸஹோதரர்கள் துயரத்தை அடைகிறார்கள். அரசனே! ஆகையால், பிராயோபவேசம் போதும். துக்கத்தில் முழுகியிருக்கிற இவர்க ளனைவரையும் கரையேற்றுவதற்காக எழுந்திரு; புறப்படு. உனக்கு மங்களம். ஸஹோதரர்களைத் தேறுதலடையச் செய்வாயாக.

## இருநூற்றைம்பத்தோராவது அத்யாயம்.

## கோஷயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

### (கர்ணன் பலவாறு வேண்டியதும், துரியோதனன் பிராயோப வேசத்தை விடாமலிருந்ததும்.)

வேந்தனே! இப்பொழுது உனக்கே மனத்தளர்ச்சியையும் அப்படியே அல்பபுத்தியையும் காரியங்களில் விவேகமில்லாமை யையும் அறிகிறேன். தர்மங்களை அறிந்தவனே! பகைவர்களைக் கொல்பவனே! இப்பொழுது பகைவர்களின் வசத்தை அடைந்த நீ, பாண்டவர்களால் விடுவிக்கப்பட்டவனாகிறாயென்பதில் என்ன ஆச்சர்யம்? குருநந்தனத்திலுதித்தவனே! அறியப்படாதவர்களானு லும் அறியப்பட்டவர்களானாலும் சேனையிற்சேர்ந்து பிழைப்பவர் களும் அப்படியே தேசத்தில் வஸிப்பவர்களும் அரசனுக்கு விருப்பத்தைச் செய்யவேண்டும். தலைவர்களான மனிதர்கள் பகைவர்களுடையபடையைப் பெரும்பாலும் கலக்கி யுத்தங்களில் பிடிக்கப்படுகிறார்கள்; தம்படைவீரர்களால் விடுவிக்கவும்படுகிறார் கள். அரசர்களுடைய தேசத்தில் சேனையில்சேர்ந்து பிழைக்கிற மனிதர்கள்எல்லாரும் ஒன்றுசேர்ந்து உள்ளபடி ராஜகாரியத்திற்காக முயலவேண்டும். அரசனே! இப்படியிருக்க, உன்னுடையதேசத்தில் வஸிப்பவர்களான பாண்டவர்களால் தற்செயலாகச் சத்துருக் களிடத்தினின்று விடுவிக்கப்பட்டவனாக இருக்கிறாய். அந்தவிஷயத்

தில் புலம்புவான் ஏன்? அரசனே! உன்சேனையோடு யுத்தத்திற்காகச்செல்லுகின்ற ராஜஸ்ரேஷ்டனான உன்னைப் பாண்டவர்கள் பின்புறத்தில் தொடர்ந்துவராமலிருந்தது ஸரியன்று. சூரர்களும் பலசாலிகளும் யுத்தங்களில் புறங்காட்டிஓடாதவர்களுமான அந்தப் பாண்டவர்கள் முந்தியே ஸபையில் உனக்கு அடிமையாகிவிட்டார்கள். அவர்களுடைய சிறந்தபொருள்களை நீ இப்பொழுதும் அனுபவிக்கிறாய். (ஆயினும்) பாண்டவர்கள் உயிரோடிருக்கிறார்கள்; பார். அவர்கள் பிராயோபவேசம் செய்யவில்லை. மிக்க புஜபலமுள்ளவனே! ஆகையால், நீ இப்படிப்பட்ட துக்கத்தைப் பாராட்டலாகாது. வேந்தனே! எழுந்திரு. உனக்கு மங்களம். நீ கவலையடையத்தக்கவனல்லை. அரசே! தேசவாசிகள் அரசனுக்கு அவசியம் பிரியத்தைச்செய்யவேண்டும். அந்தவிஷயத்தில் புலம்புவதேன்? பகைவர்களை நாசம்செய்பவனே! ராஜேந்திரனே! என்னுடைய இந்தவாக்கியத்தை நீ இவ்வண்ணம் செய்யாமற்போவாயாகில், உன்னுடைய பாதங்களுக்குப் பணிவிடைசெய்துகொண்டு இவ்விடத்திலிருப்பேன். உன்னைப்பிரிந்து நான் உயிரோடிருக்கவிரும்பவில்லை. புருஷஸ்ரேஷ்டனான நீ அப்படி ப்ராயோபவேசம் செய்வாயாகில் அரசர்களுக்குப் பரிஹஸிக்கத்தக்கவனாவாய்' என்று சொன்னான். கர்ணனால் இவ்வாறு சொல்லப்பட்ட துரியோதனராஜன் அப்பொழுது ஸ்வர்க்கத்தை அடைவதில் நிச்சயமுள்ளவனாகி எழுந்திருப்பதற்கு மனத்தைச் செலுத்தவேயில்லை.

## இருநூற்றைம்பத்திரண்டாவது அத்யாயம்.

## கோஷயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(சகுனிமுதலியவர்களால் பலவாறு தேற்றப்பட்டும் துரியோதனன் பிராயோபவேச நிச்சயத்தினின்று திரும்பாமலிருக்கையில் பாதாளத்தில்வஸிக்கின்ற தைத்யர்களும் தானவர்களும் அவனை அழைத்துவருவதற்காக ஒரு பிசாசத்தை உண்டுபண்ணியதும், அது துரியோதனனைப் பாதாளத்திற்கு அழைத்துக்கொண்டுபோனதும்.)

அரசரே! பிராயோபவேசத்திலிருப்பவனும் (அவமானத்தைப்) பொறுதவனுமான துர்யோதனராஜனை அப்பொழுது

ஸுபலனுடைய குமாரனான சகுனியானவன், இன்சொற்கூறிக்கொண்டு, 'கௌரவ! கர்ணனால் நன்றாக உரைக்கப்பட்டதன்றோ? அதனை நீ கேட்டாயா? என்னால் (பாண்டவர்களிடத்திலிருந்து) பறிக்கப்பட்ட அப்படிப்பட்ட பெருஞ்செல்வத்தை மதிமயக்கத்தால் ஏன் இழக்கிறாய்? ராஜஸ்ரேஷ்டனே! நீ புத்திக்குறைவினால் பிராணனைவிடவிரும்புகிறாய். அறிவுமுதிர்ந்தவர்களை நீ அடுக்கவில்லையென்பதை இப்பொழுதுதான் அறிகிறேன். எவன் மிக அதிகப்படுகின்ற ஸந்தோஷத்தையோ துக்கத்தையோ அடக்கவில்லையோ அவன் ஐஸ்வர்யத்தைப்பெற்றால் ஜலத்தில்போடப்பட்ட சுடாத மண்பாண்டம்போல அழிந்துபோகிறான். மிக்கபயமுள்ளவனும் மென்மைத்தன்மையுள்ளவனும் சக்தியற்றவனும் கார்யங்களைத் தாமதமாகச்செய்பவனும் அவதானமில்லாதவனும் சூது குடி வேட்டைமுதலிய விசனங்கள்காரணமாக ஸ்திரீமுதலியவிஷயங்களால் கவரப்பட்டவனுமான அரசனுக்கு அடுத்தவர்கள் அன்புடன் ஊழியஞ்செய்யார். நன்மை செய்யப்பெற்ற உனக்கு எப்படி விபரீதமாகச் சோகமுண்டாகலாம்? பார்த்தர்களால் செய்யப்பட்ட நல்லகாரியத்தை நீ சோகத்தைஅடைந்து கெடுத்துவிடாதே. ராஜேந்திரனே! எந்தவிஷயத்தில் உன்னால் ஸந்தோஷம் பாராட்டப்படத்தக்கதோ பாண்டவர்களும் பூஜிக்கப்படத்தக்கவர்களோ அந்தவிஷயத்தில் சோகத்தைப் பாராட்டுகிறாய். உன்னுடைய இந்தக்காரியம் விபரீதமாக இருக்கிறது. தயைசெய்வாயாக. உயிரை இழக்காதே. ஸந்தோஷமுள்ளவனாக நன்றியை நினைப்பாயாக். பார்த்தர்களுக்கு ராஜ்யத்தைக்கொடு. கீர்த்தியையும் தர்மத்தையும் அடைவாயாக. இந்தக்காரியத்தை நீ நன்றாக அறிந்தால் நன்றிமறந்தவனாகமாட்டாய். பாண்டவர்களோடு ஸஹோதர ஸ்நேகத்தைச்செய்துகொண்டு அவர்களை நல்லநிலைமையிலிருக்கும்படிசெய்து அவர்களுக்குத் தங்கள்பிதாவைச்சேர்ந்ததான ராஜ்யத்தைக் கொடுத்துவிடு. பிறகு, ஸுகத்தை அடைவாய்' என்று கூறினான்.

துரியோதனன், சகுனியினுடைய வசனத்தைக்கேட்டு, கால்களில் விழுந்திருப்பவனும் வீரனும் தமையனிடத்திலுள்ள அன்பினால் வாட்டமுள்ளவனுமான துச்சாஸனனைப்பார்த்து, பகைவர்களை நாசஞ்செய்பவனான அவனை நன்கு திரண்டிருக்கிறஇருகைகளாலும் எடுத்துநிறுத்தி அன்புடன் நன்றாகத்தழுவிக்கொண்டு உச்சியில் முகர்ந்தான். அந்தத்துர்யோதன

ராஜன், கர்ணனும் சகுனியுமாகிய இவர்களின் வசனங்களை நன்குகேட்டு அப்பொழுது (ஜீவித்திருப்பதில்) மிக்கவைராக்கியத்தை அடைந்து லஜ்ஜையினால் சூழப்பட்ட மனமுள்ளவனாக ராஜ்யலாபத்தில் அதிகமான [1] நைராச்யத்தை அடைந்தான். துர்யோதனன், நண்பர்களுடைய அந்தவசனத்தைக் கேட்டுத் தீனத்தன்மையுள்ளவனாக, 'தர்மத்தினாலும் தனத்தினாலும் சௌக்கியத்தினாலும் ஐச்வர்யத்தினாலும் ஆஜ்ஞையினாலும் போகங்களாலும் எனக்குச் செய்யவேண்டுவது ஒன்றுமே இல்லை. என்னுடைய ஸங்கல்பத்தைக் கெடுக்காதீர்கள். போங்கள். பிராயோபவேசத்தில் என்னுடைய இந்தப்புத்தியானது நிச்சயமுள்ளதாயிருக்கிறது. எனக்குப் பூஜ்யர்களும் குருக்களுமாயிருக்கிற நீங்கள் எல்லாரும் நகரத்திற்குச் செல்லுங்கள்' என்று சொன்னான். இவ்வண்ணம் உரைக்கப்பட்டவர்களான அந்தச் சகுனி கர்ணன்முதலியவர்கள், பகைவர்களைவருத்துபவனான துர்யோதனனைப்பார்த்து, 'ராஜேந்திரனே! பாரத! உனக்கு எந்தக் கதியோ அது எங்களுக்குமுண்டாகட்டும். உன்னை இழந்தவர்களாக நாங்கள் எவ்வண்ணம் பட்டணத்தில் நுழைவோம்?' என்று மறுமொழிகூறினார்கள். நண்பர்களாலும் அமைச்சர்களாலும் பிராதாக்களாலும் உறவினர்களாலும் பலவிதமாகச் சொல்லப்பட்டும், துரியோதனன் பிராயோபவேசநிச்சயத்திலிருந்து அசைக்கப்படவில்லை. திருதராஷ்டிரனுடையகுமாரனும் அரசர்களுள்சிறந்தவனுமான துரியோதனன் நிச்சயத்தினால் தர்ப்பங்களைப்பரப்பித் தீர்த்தத்தைஆசமனம்செய்து பரிசுத்தனாகிப் பூமியில் நன்கு உட்கார்ந்தவனும் தர்ப்பங்களாலும் மரவுரிகளாலும் செய்தவஸ்திரத்தை உடுத்தவனும் சிறந்தநியமத்தைக் கைக்கொண்டவனும் மௌனவிரதத்துடன் கூடியவனுமாகி ஸ்வர்க்கத்தை அடையவேண்டுமென்கிற விருப்பத்தினால் ஸமீபத்தில் (தன் தேகத்தை எரிப்பதற்காகக்) காஷ்டங்களுடைய ஸமூகத்தை [2] மனத்தினால் ஸங்கல்பித்து ஸ்நானபானாதிகளை

[1] ஆசையின்மை.

[2] 'உபவாஸவிதிம் க்ருத்வா' என்பது மூலம்; இங்ஙனம் பொருள்செய்து, 'அவசியம் மரிக்கவே வேண்டுமென்று நிச்சயித்து என்பது கருத்து' என்பது பழையவுரை. 'உபவாஸவிதிம்' என்று பாடங்கொண்டு, 'மௌனவிகமாக ஜபிக்கவும் பூஜிக்கவும் தொடங்கினான்' என்பது இங்கிலிஷ் மொழிபெயர்ப்பு.

விலக்கி ப்ராயோபவேசத்தில் மிக்க உறுதியுள்ள புத்தியை ஏற்படுத்திக்கொண்டு இருந்தான்.

பிறகு, அவனுடைய அந்த நிச்சயத்தை அறிந்து பாதாளத்தில் வஸிக்கிறவர்களும் பயங்கரமான உருவமுள்ளவர்களும் முற்காலத்தில் தேவர்களால் ஜயிக்கப்பட்டிருப்பவர்களுமான அந்தத் தைத்யர்களும் தானவர்களும் தங்களுடைய பக்ஷத்திற்கு நாசமுண்டாகுமென்று அறிந்து துர்யோதனனை அழைப்பதற்காக அப்பொழுது [1] பலஅக்னிகளால் செய்வனவான [2] நவகுண்டீ முதலிய கிரியைகளைச் செய்தார்கள். மந்திரங்களில் தேர்ந்தவர்கள் [3] உபநிஷத்துக்களால் சொல்லப்பட்டவையும் மந்திர ஜபங்களோடுகூடினவையுமான அந்த எல்லாக் கிரியைகளையும் பிருஹஸ்பதியினாலும் சுக்கிராசார்யராலும் சொல்லப்பட்டவையும் அதர்வணவேதத்தில் சொல்லப்பட்டவையுமான மந்திரங்களால் அப்பொழுது செய்தார்கள். வேதவேதாங்கங்களில் கரைகண்டவர்களும் மிகவுறுதியான விரதமுள்ளவர்களுமான பிராம்மணர்கள் மனத்தை நன்குஅடக்கி, அக்நியில் பால்ரூபமான ஹவிஸை மந்திரத்துடன் ஹோமஞ்செய்தார்கள். பிறகு, தானவர்களுடைய அத்வர்யுக்கள் கிரியைகளை நடைபெறச்செய்தனர். அரசனே! அந்தயாகத்தில் கர்மாவின்முடிவில் மிக்க ஆச்சர்யகரமானதும் கொட்டாவிவிடுகின்றதுமான ஒருபெண்பேய் தோன்றியது; 'நான் என்ன செய்யக்கடவேன்?' என்றும் சொல்லியது. தைத்யர்கள் மிகமகிழ்ந்த மனத்தோடு அந்த [4] க்ருத்யையைப் பார்த்து, 'பிராயோபவேசம் செய்திருக்கிற திருதராஷ்டிரபுத்திரனை துரியோதனராஜனை இங்கே கொண்டுவா' என்று சொன்னார்கள்; அந்தக்ருத்யையானது, 'அப்படியே' என்று

---

[1] 'ஜுஹ்வதே வைதாந ஸாஹஸம்' என்பது மூலம்; 'பல அக்கினிகளால் செய்யத்தக்க நவகுண்டீ முதலியவற்றைச்செய்தல்; அவை அதர்வணவேதமந்திரங்களால் செய்யப்படுவன; மற்ற மூன்று வேதங்களால் செய்யப்படுவனவல்ல' என்பது பழையவுரை.

[2] ஒன்பது அக்னிகுண்டங்களமைத்துச் செய்யும் ஒருவித யாகம்.

[3] ஆரண்யகத்தில் சொல்லப்பட்டவையும், 'ஸஹஸ்ரம் வ்ருஷ்ட்ய ஹ்ருதயம் வ்ருஷ்ட்ய ஶிரோஹிவ் ஜ யதீஃ வ்ருவ்ருஜ' என்பது முதலிய மந்திரங்களால் தெரிவிக்கப்பட்டவையும் பகைவரைக் கொல்லுதற்கானவையும் இந்த மந்திரங்களின் ஜபம் ஹோமம் முதலியவையுமான கிரியைகள்' என்பது பழையவுரை.

[4] 'ஏவினதைச்செய்யும் தேவதை' என்பது பழையவுரை.

களுமாகி ஜனங்களுக்கு அழிவை உண்டுபண்ணுவார்கள். மகாத்மாக்களான அந்த ஐந்துபாண்டவர்களும் எதிர்த்துப் போர்புரிவார்கள். தெய்வபலத்தையுடையவர்களும் மகாபலசாலிகளுமான அவர்கள் இவர்களை வதஞ்செய்வார்கள். அரசனே! அஸுர ராக்ஷஸர்களுடைய கூட்டத்தினர்கள் க்ஷத்திரியஜாதிகளில் தோன்றி யுத்தத்தில் பராக்ரமஞ்செய்து உன்னுடைய பகைவர்களோடு போர்புரிவார்கள். மகாபலசாலிகளான அந்த வீரர்கள் உன்னுடைய பகைவர்களைக் கதாயுதங்களாலும் உலக்கைகளாலும் சூலங்களாலும் பற்பல சஸ்திரங்களாலும் அடிப்பார்கள். வீரனே! அர்ஜுனனிடத்திலிருந்து உண்டான எந்தப்பயம் உன்னுடைய மனத்தினுள் இருக்கிறதோ அந்தப் பயவிஷயத்திலும் எம்மால் அர்ஜுனனுடைய வதோபாயமானது ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. கொல்லப்பட்ட நரகாஸுரனுடைய ஆத்மாவானது கர்ணனுடைய மூர்த்தியை அடைந்திருக்கிறது. வீரனே! அந்த வைரத்தை நினைத்துக்கொண்டவனாகக் கேசவனோடும் அர்ஜுனனோடும் கர்ணவடிவங்கொண்ட நரகன் போர்புரிவான். அடிப்பவர்களுள் சிறந்தவனும் மகாரதனும் பகைவரை வெல்வதில் வல்லவனுமான அந்தக் கர்ணன் யுத்தத்தில் அர்ஜுனனையும் உன்னுடைய சத்துருக்களனைவரையும் ஜயிப்பான். வஜ்ரபாணியான இந்திரன், இதை அறிந்து அர்ஜுனனைக் காப்பதற்காகக் கபடத்தால் கர்ணனுடைய குண்டலங்களையும் கவசத்தையும் அபஹரிப்பான். ஆகையால், எங்களாலும் இந்த விஷயத்தில் லக்ஷக்கணக்கான அஸுரர்களும் ராக்ஷஸர்களும் ஏவப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் [1] ஸம்சப்தகர்களென்று பிரஸித்திபெற்றிருக்கிறார்கள். பிரஸித்தர்களான அவர்கள் வீரனான அர்ஜுனனை யுத்தத்தில் கொல்லுவார்கள். நீ விசனப்படாதே. அரசனே! பகைவர்களில்லாத இந்தப் பூமியானது உன்னால் அனுபவிக்கத்தக்கதன்றோ? ஆகையால், நீ வியஸனமடையாதே. இந்தத் துக்கம் உனக்குத் தகாது. கௌரவ! நீ அழிந்தால் எங்களுடைய பக்ஷமும் குறைவடைந்துவிடும். வீரனே! நீ போ. எவ்விதத்தாலும் நீ வேறு எண்ணத்தைச் செய்யலாகாது. நீ எங்களுக்கு எப்பொழுதும் கதியாக இருக்கிறாய். தேவதைகளுக்குப் பாண்டவர்கள் கதி' என்று சொன்னார்கள். பாரதரே! தானவர்

[1] வெல்வது அல்லது இறப்பது என்று சபதம்செய்து போர்புரியும் வீரர்கள். துரோணபர்வம் 62-ம் பக்கம் குறிப்பிற்காண்க.

களுள் சிறந்தவர்களான அஸுரர்கள் இவ்வாறு சொல்லி ராஜ ச்ரேஷ்டனான அந்தத் துரியோதனனைத் தழுவிக்கொண்டு (எவ ராலும்) வெல்லமுடியாதவனான அவனைப் புத்திரனைத்தேற்றுவது போலத் தேற்றி அவனுடைய புத்தியை நிலைபெறச்செய்து பிரிய வசனங்களையும் சொல்லி, 'போகலாம்' என்று அனுமதி கொடுத்து, 'ஜயத்தை அடைவாயாக' என்றும் சொன்னார்கள். அவர்களால் அனுப்பப்பட்ட மிக்க புஜபலமுள்ள துர்யோதனனை அதே க்ருத்யையானது அப்பொழுது அவன் பிராயோபவேசம் செய்துகொண்டிருந்த இடத்திலேயே கொண்டுவந்து சேர்த்தது. அந்தக்ருத்யையானது அந்த வீரனை அந்த இடத்தில் கொண்டு வந்துவிட்டு அவனைப்பூஜித்து அரசனான அவனால் அனுமதி கொடுக்கப்பட்டு அந்த இடத்திலேயே மறைந்துபோயிற்று.

பாரதரே! அது மறைந்துபோனபிறகு, துர்யோதனராஜன் இந்த விருத்தாந்தங்களனைத்தையும் ஸ்வப்னம்கண்டதுபோல எண்ணினான். தானவர்களால் சொல்லப்பட்ட அந்த வாக்கியங் களை நன்றாக ஆலோசித்து, 'யுத்தத்தில் பாண்டவர்களை ஜயிப் பேன்' என்று துஷ்டபுத்தியுள்ள துர்யோதனனுக்கு எண்ண முண்டாயிற்று. அவன் கர்ணனையும் ஸம்சப்தகர்களையும் பகை வர்களைக்கொல்பவனான அர்ஜுனனுடைய வதத்தில் நோக்குள்ள வர்களென்றும் வல்லமையுள்ளவர்களென்றும் எண்ணினான். பரதச்ரேஷ்டரே! கெட்டபுத்தியுள்ளவனான அந்தத் துர்யோதன னுக்குப் பாண்டவர்களை ஜயிக்கும் விஷயத்தில் இவ்விதம் திடமான ஆசை உண்டாயிற்று. நரகனுடைய அந்தராத்மாவினால் பிரவே சிக்கப்பட்ட மனமுள்ள கர்ணனும் அப்பொழுது அர்ஜுனனைக் கொல்வதில் க்ரூரமானபுத்தியைச் செலுத்தினான். வீரர்களான அந்த ஸம்சப்தகர்களும், ராக்ஷஸர்களால் பிரவேசிக்கப்பட்ட சித்த முள்ளவர்களும் ரஜோகுணத்தாலும் தமோகுணத்தாலும் ஆக்கிர மிக்கப்பட்டவர்களுமாகிப் பல்குனனுடைய வதத்தைச்செய்ய விருப்பமுற்றார்கள். அப்பொழுது, பீஷ்மர் துரோணர் க்ருபர் முதலிய வீரர்களும் தானவர்களால் ஆக்கிரமிக்கப்பட்ட மனத் துடன்கூடினவர்களாகப் பாண்டுவின் புத்திரர்களிடம் முன்போல் அப்படி அன்புள்ளவர்களாக இருக்கவில்லை. க்ருத்யையினால் அழைத்துக்கொண்டுபோய் இராக்காலத்தில் தானவர்களால் இந்தத் துரியோதனராஜனுக்கு எந்தவிஷயம் சொல்லப்பட்டதோ அதை இவன் ஒருவனுக்கும் சொல்லவில்லை. ஸூர்யகுமாரனும்

மிக்க தோள்வலிமையுடையவனுமான அந்தக் கர்ணன் விடியற் காலத்தில் அரசனான துர்யோதனனை அடைந்து புன்சிரிப்புடன் இருகரங்களையும் குவித்துக்கொண்டு, 'மரித்த மனிதன் பகைவர்களை ஜயிக்கிறதில்லை. உயிரோடிருப்பவன் நன்மைகளைப் பார்க்கிறான். கௌரவ! மரித்தவனுக்கு நன்மைகள் எங்கிருந்து உண்டாகும்? வெற்றி எங்கிருந்து உண்டாகும்? துயரத்திற்கோ பயத்திற்கோ மரணத்திற்கோ இது ஸமயமன்று' என்று சொல்லி, இருகைகளாலும் அவனைக்கட்டிக்கொண்டு, 'வேந்தே! எழுந்திரு. ஏன் படுத்திருக்கிறாய்? பகைவரைக் கொல்பவனே! யாது காரணத்தால் சோகத்தை அடைகிறாய்? வல்லமையால் சத்துருக்களை மிகவாட்டி வெற்றிபெற்றவனான நீ எவ்வாறு மரிப்பதற்குத் தகுதியுள்ளவன்? அல்லது, அர்ஜுனனுடைய பராக்கிரமத்தைப்பார்த்து உனக்குப் பயமுண்டாயிருக்கலாம். நான் உண்மையாக ப்ரதிஜ்ஞை செய்கிறேன். பதின்மூன்றுவர்ஷம் சென்றபிறகு, நான் யுத்தத்தில் அர்ஜுனனைக் கொல்வேன். இது ஸத்யம். ஆயுதத்தைத்தொட்டு ஆணை இடுகிறேன். ஜனங்களுக்கு அதிபதியே! நான் பார்த்தர்களை உனக்கு வசப்பட்டவர்களாகச் செய்வேன்' என்று சொன்னான்.

கர்ணனால் இவ்விதம் உரைக்கப்பட்ட துர்யோதனன், தைத்யர்களுடைய அப்படிப்பட்ட வசனத்தினாலும் துச்சாஸனன் முதலியவர்களுடைய வந்தனத்தாலும் பிராயோபவேசத்திலிருந்து எழுந்திருந்தான். புருஷஶ்ரேஷ்டனான துர்யோதனன் தைத்யர்களுடைய அந்த வசனத்தைக்கேட்டு, மனத்தில் உறுதிசெய்துகொண்டு, பிறகு, ரதங்களாலும் யானைகளாலும் குதிரைகளாலும் காலாட்களாலும் நெருங்கிய சேனையை நகரத்தைக் குறித்துச் செல்வதற்காக வரிசைப்படுத்தினான். அவனுடைய பிரயாணத்தில் சேனையானது கங்கையின் வெள்ளத்துக்கு ஒப்பாக விளங்கியது. வெள்ளைக்குடைகளாலும் கொடிகளாலும் மிக்க வெண்ணிறமுள்ள சாமரங்களாலும் ரதங்களாலும் யானைகளாலும் காலாட்களாலும் நெருங்கிய சேனையானது, நெருங்கிய மேகங்களில்லாதகாலத்தில் அன்னப்பறவைகளின் வரிசைகளால் நாற்புறங்களிலும் வியாபிக்கப்பட்டதும் வட்டமிடுகின்ற ஸாரஸபட்சிகளால் பிரகாசிக்கிறதுமான சரத்காலத்தைச்சார்ந்த ஆகாயம்போல அதிகமாகப் பிரகாசித்தது. ராஜேந்திரரே! திருதராஷ்டிரனுடைய புத்திரனும் ஜனங்களுக்கு அதிபதியுமான அந்தத் துரியோதனன்

பிராம்மணோத்தமர்களால், 'ஜய, ஜய' என்னும் ஆசீர்வசனங்களால் சக்ரவர்த்திபோலத் துதிக்கப்படுகின்றவனும் ஜனங்களுடைய அஞ்சலி வரிசைகளை ஏற்றுக்கொள்ளுகின்றவனும் நிகரில்லாத காந்தியினால் ஜ்வலிக்கின்றவனுமாகக் கர்ணனோடும் சூதாடியான சகுனியோடும் முந்திச் சென்றான். குருஸ்ரேஷ்டர்களான துச்சாஸனன் முதலிய எல்லாத் தம்பிமார்களும் பூரிஸ்ரவஸும் ஸோமதத்தனும் மகாராஜனான பாஹ்லீகனும் சென்றுகொண்டிருக்கின்ற அந்த ராஜஸ்ரேஷ்டனை ரதங்களோடும் பலவிதமான வடிவங்களுள்ள குதிரைகளோடும் சிறந்த யானைகளோடும் பின்தொடர்ந்து சென்றார்கள். ராஜேந்திரரே! துர்யோதனனை முந்திச்செல்பவனாகக் கொண்ட எல்லாக்கௌரவர்களும் அப்பொழுது மிக்க மனக்களிப்புள்ளவர்களாகச் சிறிது காலத்தில் தங்களுடைய பட்டணத்தில் பிரவேசித்தார்கள்" என்று கூறினார்.

---

## இருநூற்றைம்பத்துநான்காவது அத்யாயம்.

## கோஷயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(பீஷ்மர் துர்யோதனனிடம் பாண்டவர்களைப் புகழ்ந்து அவர்களோடு நட்பைச் செய்விக்க முயன்றதும், கர்ணனை நிந்தித்ததும், துரியோதனனுடைய அநுமதியினால் கர்ணன் திக்குவிஜயந் திற்காகப் புறப்பட்டதும்.)

ஜனமேஜயர், "மகாத்மாக்களான அந்தப் பாண்டவர்கள் அந்த வனத்தில் இவ்வண்ணமிருக்கும்பொழுது, பெரியவில்லைக் கையில் தாங்கியவர்களும் மிகச் சிறந்தவர்களுமான திருதராஷ்டிரபுத்திரர்களும் ஸூர்யகுமாரனான கர்ணனும் மிக்க பலசாலியான சகுனியும் பீஷ்மரும் துரோணரும் கிருபரும் யாதுசெய்தனர்? அதனை எனக்குச் சொல்லக்கடவீர்" என்று வினவ, வைசம்பாயனர் சொல்லலானார்.

"பார்த்தர்கள் இவ்வாறு சென்றபின், அவர்களால் விடுவித்து அனுப்பப்பட்ட துர்யோதனன் ஹஸ்தினாபட்டணத்திற்கு வந்தவுடன், பீஷ்மர் துர்யோதனனைப் பார்த்து, 'மகாராஜனே! ஐயா! முன்பு, தபோவனத்தைக்குறித்துப் புறப்படும்பொழுது உனக்கு என்னால் கூறப்பட்டது. என்னுடைய அந்த

வசனமானது உன் மனத்துக்குப் பிடிக்கவில்லை. (அதனால்) நீ அதனைச்செய்யவில்லை. வீரனே! அதனால், நீ பகைவர்களால் வலிந்து பிடிக்கப்பட்டாய். தர்மங்களை அறிந்த பாண்டவர்களால் விடுவிக்கப்பட்டவனாக இருக்கிறாய். உனக்கு வெட்கமில்லையா? பிரஜைகளுக்கு ரக்ஷகனே! காந்தாரீநந்தன! அப்பொழுது, கர்ணன், போர்வீரர்களுடன்கூடின நீ பார்த்துக்கொண்டிருக்கையிலேயே, கந்தர்வர்களிடம் பயந்தவனாக யுத்தத்திலிருந்து ஓடினான். ராஜ ஸ்ரேஷ்டனே! ஸைனிகர்களுடன்கூடின நீ அலறி அழைக்கும் பொழுது, பின்புறத்தில் அடிக்கடி திரும்பிப்பார்த்துக்கொண்டு அந்தயுத்தத்தினின்று கர்ணன் ஓடினான். மிக்கதோள்வலியுள்ள வனே! உன்னால் மகாத்மாக்களான பாண்டவர்களுடையவல்ல மையும் துர்ப்புத்தியுள்ளவனும் ஸூதபுத்திரனுமான கர்ண னுடையவல்லமையும் பார்க்கப்பட்டன. தர்மத்தில் அதிகவிருப்ப முள்ளவனே! தனுர்வேதத்திலும் சௌர்யத்திலும் தர்மத்திலும் கர்ணன் மகாத்மாக்களானபாண்டவர்களுடைய நாலில் ஒருபாகத் துக்கும் ஒப்பாகான். ஸந்தியை அறிந்தவர்களுள் சிறந்தவனே! ஆகையால், இந்தக்குலத்தின் அபிவிருத்தியின்பொருட்டு மகாத் மாக்களான அந்தப்பாண்டவர்களோடு நட்பை நான் தக்கதென்று நினைக்கிறேன்' என்று சொன்னார்.

அரசரே! பீஷ்மரால் இவ்வண்ணமுரைக்கப்பட்ட துரியோதன ராஜன், உரக்கச்சிரித்துவிட்டு, உடனே சகுனியுடன் கூடி அந்த இடத்தைவிட்டுப் புறப்பட்டுவிட்டான். அந்தத் துரியோதனன் புறப் பட்டதைத் தெரிந்துகொண்டு கர்ணன் துச்சாஸனன் முதலிய சிறந்த வில்லாளிகள் மகாபலசாலியான அவனைப் பின்தொடர்ந்தார்கள். வேந் தரே! கௌரவர்களுக்குப்பிதாமஹரான பீஷ்மர், அவர்கள் அந்த இடத்தைவிட்டுப் புறப்பட்டதைக்கண்டு லஜ்ஜையினால் மனவருத்த மடைந்து தம்மாளிகைக்குச்சென்றார். மகாராஜரே! பாரதரே! பீஷ்மர் போனபிறகு, ஜனங்களுக்குத் தலைவனான துரியோதனன் மீண்டு அந்தஇடத்திற்குவந்து மந்திரிகளோடுசேர்ந்து, 'நமக்கு எது நன்மை யைப்பயக்கக்கூடியதாக இருக்கும்? செய்யவேண்டியது எது மிச்ச மிருக்கிறது? எவ்வாறு அந்தக்காரியம் நம்மால் நன்றாகச்செய்யப் பட்டதாகும்?' என்று ஆலோசனைசெய்தான். கர்ணன், 'துரி யோதன! குருவம்சத்தில் பிறந்தவனே! நான் சொல்வதைத் தெரிந்துகொள்வாயாக. பீஷ்மர் எப்பொழுதும் நம்மை இகழ் கிறார்; பாண்டவர்களைப் புகழ்கிறார்; மிக்க தோள்வலிமையுள்ள

வனே! உன்னிடத்திலிருக்கின்ற பகைமையால் என்னையும் பகைப்பவராகிறார். அரசனே! உன்னிடம் நாள்தோறும் என்னை நிந்திக்கிறார். பாரத! பகைவர்களை அழிப்பவனே! அரசனே! பாண்டவர்களுடையபுகழ்ச்சியைப்பற்றியும் உன்னுடைய இகழ்ச்சியைப்பற்றியும் பீஷ்மரால் உன்எதிரில் சொல்லப்பட்ட அவருடைய அந்த வசனத்தை அப்படிப்பட்ட நான் பொறுக்கவில்லை. அரசனே! வேலைக்காரர்களோடும் படைகளோடும் வாகனங்களோடும்சேர்ந்து யுத்தத்திற்குப்புறப்பட எண்ணங்கொண்டிருக்கிற எனக்கு அனுமதிகொடுப்பாயாக. அரசனே! மலைகளோடும் வனங்களோடும் பெருங்காடுகளோடும்கூடின பூமியை ஜயிப்பேன். மஹாபலசாலிகளான நான்குபாண்டவர்களால் பூமியானது ஜயிக்கப்பட்டது. அந்தப்பூமியை உனக்காக நான் ஒருவனே ஜயிப்பேன்; ஸந்தேகமில்லை. குருவம்சத்தில்பிறந்தவர்களுள் அதமரும் மிக்கதுர்ப்புத்தியுள்ளவருமான பீஷ்மர் நன்றாகப்பார்க்கட்டும். எவர் இகழத்தகாதவனானஎன்னை இகழ்கிறாரோ, புகழத்தகாதவனான அர்ஜுனனைப் புகழ்கிறாரோ அவர் என்னுடையபலத்தை இப்பொழுது பார்க்கட்டும்; தம்மைநிந்தித்துக்கொள்ளட்டும். அரசனே! எனக்கு அனுமதிகொடுப்பாயாக. உனக்கு ஜயமானது நிச்சயமன்றோ? அரசனே! உன்னிடத்தில் ஸத்தியமாக ப்ரதிஜ்ஞைபண்ணுகிறேன். ஆயுதத்தைத் தொடுகிறேன்' என்றுசொன்னான்.

வேந்தரே! பரதர்களுள்சிறந்தவரே! கர்ணனுடைய அந்த வசனத்தைக்கேட்டு, அரசனான துரியோதனன், அதிகப்ரீதியுடன் கர்ணனைப்பார்த்து, 'மிக்க பலசாலியான நீ என்னுடைய ஹிதங்களில் எப்பொழுதும் ஸன்னத்தனாக இருத்தலால், நான் பாக்கியவானாக இருக்கிறேன்; அனுக்ரஹிக்கப்பட்டவனாக இருக்கிறேன். என்னுடைய பிறப்பு இப்பொழுது பயனுள்ளதாயிற்று. வீரனே! நீ எல்லாச்சத்ருக்களுடைய நாசத்தையும் எண்ணுகிறாயாதலால் புறப்படுவாயாக. உனக்கு மங்களம். என்னை நோக்கி (வேண்டியவற்றைக்) கட்டளையிடுவாயாக' என்று சொன்னான். பகைவர்களை அழிப்பவரே! சிறந்தபுத்தியுள்ளவனான துரியோதனனால்இவ்வண்ணம் உரைக்கப்பட்ட கர்ணன் அப்பொழுது பிரயாணத்துக்கு உரிய (வண்டிகள் கடைவீதிகள்முதலிய) எல்லாவற்றையும் கட்டளையிட்டான். பெரிய வில்லைக் கையில் தாங்கியவனானகர்ணன் நல்லதிதியில் நல்லமுகூர்த்தத்தில் சுபமான தேவதையுடன்கூடின நக்ஷத்திரத்தில் பிராம்மணர்களால்பூஜிக்கப்படுகிறவனாகவும் மங்களகரமான பரிசுத்தவஸ்

துக்களால் ஸ்நானம்செய்தவனாகவும் வாக்குக்களாலும் நன்கு துதிக்கப்பட்டவனாகவும் தேரின் ஒலியினால் சராசரங்களுடன் கூடின மூவுலகங்களையும் ஒலியிடும்படிசெய்துகொண்டு திக்குவிஜயத்திற்காகப் புறப்பட்டான்.

---

## இருநூற்றைம்பத்தைந்தாவது அத்யாயம்.

## கோஷயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(திக்கு விஜயத்திற்குப் புறப்பட்ட கர்ணன் எல்லா அரசர்களையும் வசப்படுத்தி மீண்டும் ஹஸ்தினபட்டணத்திற்கு வந்தது.)

பரதர்களுள்சிறந்தவரே! பிறகு, பெரிதானவில்லைக்கையில் தாங்கின கர்ணன், பெரியசேனையினால் சூழப்பட்டவனாக, த்ருபதனுடைய அழகியநகரத்தை முற்றுகைபோட்டான். ராஜ ஶ்ரேஷ்டரே! வீரனான இந்தத்ருபதனைப் பெரியயுத்தத்தினால் தனக்குவசப்படும்படிசெய்தான்; ஸ்வர்ணங்களையும் வெள்ளிகளையும் பற்பல ரத்தினங்களையும் கப்பமாகக்கொடுக்கும்படியும் செய்தான். ராஜேந்திரனே! அந்தத்ருபதனைஜயித்து அவனை அனுசரித்துவந்தவர்களனைவரையும் தனக்கு வசப்பட்டவர்களாகச் செய்தான்; அவர்களைத் தனக்குக் கப்பம் கொடுக்கும்படியும் செய்தான். பிறகு, வடதிசையை அடைந்து அரசர்களைத் தன் வசப்படுத்தினான். பகைவர்களோடுபோர்புரிகின்ற ராஜபுத்திரனான கர்ணன் பகதத்தனைஜயித்து மலைகளுள்சிறந்த இமய மலையின்மீது ஏறினான். அங்கே அவன் எல்லாத்திசைகளிலும் சென்று எல்லா அரசர்களையும் வசமாக்கிக்கொண்டான். அவன் இமயமலையில் வஸிப்பவர்களனைவரையும் ஜயித்துக் கப்பத்தைக் கொடுக்கும்படி செய்தான்; நேபாளதேசத்திலிருந்த அரசர்களையும் வென்றான். பிறகு, அந்த இமயமலையிலிருந்து கீழே இறங்கிக் கீழ்த்திசையில் விரைவாகச் சென்றான். அவன் அங்கதேசத்தையும் வங்கதேசத்தையும் கலிங்கதேசத்தையும் சுண்டிகதேசத்தையும் மிதிலாதேசத்தையும் மகததேசத்தையும் கர்க்ககண்டத்தையும் ஜயித்து வசப்படுத்திக்கொண்டு ஆவசீரதேசத்தையும் யோத்யதேசத்தையும் அஹிக்ஷத்ரதேசத்தையும் ஜயித்தான். கீழ்த்திசையை நன்றாக ஜயித்து அப்படியே வத்ஸதேசத்தை அடைந்தான். வத்ஸதேசத்தை ஜயித்துக் கேவலையையும் ம்ருத்

திகாவதியையும் மோஹன பட்டணத்தையும் த்ரிபுரியையும் கோஸலையையும் ஜயித்தான்." ஸூதபுத்ரனான கர்ணன் இந்தத் தேசங்களனைத்தையும் ஜயித்து எல்லாத் தேசத்தரசர்களிடமிருந்தும் கப்பத்தைப் பெற்றுக்கொண்டு தென்திசையை அடைந்து மஹாரதர்களை ஜயித்துத் தென்னாட்டிலுள்ள வீரர்களுள் ருக்மியோடு போர்புரிந்தான். அந்த ருக்மியானவன் ஸங்குலயுத்தத்தைச் செய்து ஸூதபுத்திரனைப் பார்த்து, 'ராஜேந்திர! உன்னுடைய விக்கிரமத்தாலும் பலத்தாலும் ப்ரீதியுள்ளவனாக இருக்கிறேன். உனக்கு இடையூற்றை நான் செய்யமாட்டேன். க்ஷத்திரியதர்மத்தைப் பாதுகாத்தேன். எவ்வளவு ஸ்வர்ணத்தை நீ விரும்புகிறாயோ அவ்வளவை நான் அன்புடன் கொடுக்கிறேன்' என்று சொன்னான். அந்தக் கர்ணன் ருக்மியுடன்சேர்ந்து பாண்டியநாட்டையும் ஸ்ரீசைலத்தையும் அடைந்தான். அந்தக் கர்ணன் யுத்தத்தில் தனித்திருக்கிற நீலனென்கிற அரசனையும் வேணுதாரியின் புத்திரனையும் மற்றுமுள்ள சிறந்த அரசர்களையும் ஜயித்தான். தென்திசையிலுள்ள அரசர்களனைவரையும் கப்பங்களைக் கொடுக்கும்படி செய்தான். மகாபலசாலியான ஸூதபுத்திரன், பிறகு, சிசுபாலனுடைய புத்திரனை அடைந்து அவனை ஜயித்தான். அவனுக்குப் பக்கத்துணையாக வந்த அரசர்களையும் தன் வசத்திலிருக்கச் செய்தான். பரதர்களுள் சிறந்தவரே! ஸாமோபாயத்தால் அவந்திதேசத்தரசர்களையும் தன்வசத்திலிருக்கச்செய்து வ்ருஷ்ணிகளுடன்சேர்ந்து மேல்திசையையும் ஜயித்தான். வருணனை அதிபதியாகக்கொண்ட மேல்திசையை நாடி மேற்குத்தேசத்திலிருப்பவர்களான யவனராஜர்களையும் பர்ப்பர மன்னர்களையும் ஜயித்துக் கப்பம்கொடுக்கும்படி செய்தான். வீரனும் நீதியைச்செலுத்துகிறவனும் ஸூதநந்தனனுமான கர்ணன், கீழ்நாடுகளுடனும் மேல்நாடுகளுடனும் தென்னாடுகளுடனும் கூடின பூமிமுழுமையையும் ஜயித்துச் சிரிக்கிறவன்போலிருந்துகொண்டு அனாயாஸமாகவே மிலேச்ச அரசர்களையும் காட்டரசர்களையும் மலையில்வஸிப்பவர்களையும் பத்ரர்களையும் ரோஹிதகர்களையும் ஆக்நேயர்களையும் மாளவர்களையும் எல்லாக் கூட்டங்களையும் ஜயித்து மகாரதர்களான நக்னஜித்முதலிய வீரர்களுடைய கணங்களையும்ஜயித்துச் சசகர்களையும் யவனர்களையும் ஜயித்தான். மஹாரதனும் புருஷச்ரேஷ்டனுமான அந்தக்கர்ணன் இவ்வண்ணம் பூமிமுழுமையையும் ஜயித்துத் 'தன்வசத்திலிருக்கும்படி

செய்துகொண்டு ஹஸ்தினபட்டணத்திற்கு வந்தான்.

மகாராஜரே! ஜனங்களுக்கு அதிபதியான துரியோதனன், யுத்தத்தில் விஜயத்தினால் பிரகாசிப்பவனும் வந்திருக்கின்ற மகாவீரனுமான அந்தக் கர்ணனைப் பிராதாக்களோடும் பிதாவோடும் உறவினர்களோடும் எதிர்கொண்டுபோய் விதிப்படி அர்ச்சித்தான். ஜனங்களுக்கு ஈசுவரனான துரியோதனன் பிரீதியுள்ளவனாக அவனுடைய ஜயத்தை (நகரில்) பறையறைவித்தான். அவன், 'பீஷ்மரிடமிருந்தும் துரோணரிடமிருந்தும் க்ருபரிடமிருந்தும் பாஹ்லீகரிடமிருந்தும் எதனை நான் அடையவில்லையோ அதனை அடைந்தவனாகிறேன். உனக்கு மங்களம். அது உன்னிடத்திலிருந்தன்றோ என்னால் அடையப்பட்டது? கர்ண! அதிகமாகப்பேசுவதனால் யாது பயன்? என்னுடைய வசனத்தைக்கேட்பாயாக. மிக்கபுஜபலமுள்ளவனே! மிக்கசிறப்புவாய்ந்தவனே! நாதனான உன்னால் நாதனுள்ளவனாக இருக்கிறேன். புருஷச்ரேஷ்டனே! அப்படிப்பட்ட பாண்டவர்களனைவரும் மேலும் மேலும் விருத்தியடைந்துவருகிற மற்ற அரசர்களும் உன்னுடைய ஸாமர்த்தியத்தில் பதினாறில் ஒரு பாகத்துக்கும் ஈடாகார். கர்ண! பெரியவில்லைக் கையில்தாங்கியவனே! அப்படிப்பட்ட நீ இந்திரன் அதிதியைப் பார்ப்பதுபோல அந்தத் திருதராஷ்டிரரையும் புகழ்பெற்றவளான காந்தாரியையும் பார்' என்றான். பிரஜைகளுக்கு அதிபதியே! பிறகு, ஹஸ்தினபட்டணத்தில் கலகல என்னும் ஒலியும், ஆ! ஆ! என்னும் ஒலியும் பலவாகத்தோன்றின. ஜனங்களுக்கு அதிபதியே! அந்த நகரத்தில் இந்தக்கர்ணனைச் சிலர் புகழ்ந்தார்கள்; சிலர் இகழ்ந்தார்கள். சில அரசர்கள் பேசாமலிருந்தார்கள். ராஜேந்திரரே! பூபதியே! சஸ்திரங்களைத் தரித்தவர்களுள் சிறந்தவனான கர்ணன், பர்வதங்களோடும் வனப்ரதேசங்களோடும்கூடியதும் ஸமுத்திரங்களுள்ளதும் வீடுகளைச்சார்ந்த பூந்தோட்டங்களுடன் கூடியதும் பற்பல தேசங்களாலும் பட்டணங்களாலும் நகரங்களாலும் நிறைந்ததும் நீர்ப்பாங்கான தரைகளால் நிறைந்திருக்கின்ற தீவுகளால் நிரம்பியதுமான பூமியை இவ்வண்ணம் ஜயித்துச் சிறிது காலத்தினுள் அரசர்களைத் தன் வசத்திலிருக்கச்செய்து குறைவற்ற பொருள்களை எடுத்துக்கொண்டு துரியோதனராஜனை வந்தடைந்தான். மன்னரே! பகைவர்களை அடக்கும் திறமையுள்ளவரே! வீரனான அந்தக்கர்ணன் அரண்மனையில் உள்ளே பிரவேசித்துக் காந்தாரியுடன் சேர்ந்திருக்கிற திருதராஷ்டிரனைக் கண்டான்.

புருஷச்ரேஷ்டரே! தர்மங்களை அறிந்த கர்ணன், புத்திரன்போல அவனுடைய இருகால்களையும் பிடித்து வணங்கினான். திருதராஷ்டிரனும் அன்புடன் தழுவிக்கொண்டு விடப்பட்டான். பாரதரே! அந்த ஸமயம் தொடங்கி, துரியோதனராஜனும் ஸுபலனுடைய புத்திரனான சகுனியும், யுத்தத்தில் கர்ணனால் பார்த்தர்களை ஜயிக்கப்பட்டவர்களாக எண்ணினார்கள்.

---

## இருநூற்றைம்பத்தாறாவது அத்யாயம்.

## கோஷயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(துர்யோதனன் ராஜஸூய யாகத்தைச் செய்விக்கும்படி பிராம்மணர்களை வேண்டியதும், அவர்கள் காரணங்களைச் சொல்லி ராஜஸூயயாகம் செய்வதை மறுத்து அவனை வேறு யாகத்தைச் செய்ய ஏவியதும்.)

அரசரே! ஜனங்களுக்குத் தலைவரே! பகைவீரர்களை நாசம் செய்பவனும் ஸூதபுத்திரனுமான கர்ணன், பூமியை ஜயித்துத் துர்யோதனனைப்பார்த்து, 'துர்யோதன! கௌரவ! நான் உனக்குச்சொல்லும் வசனத்தைத் தெரிந்துகொள். பகைவர்களை அடக்குபவனே! என் சொல்லைக்கேட்டு அப்படியே எல்லாவற்றையும் நீ செய்யவேண்டும். வீர! அரசர்களில் சிறந்தவனே! இப்பொழுது உன்னுடைய பூமியானது பகைவர்களில்லாததாக இருக்கிறது. பகைவரையழித்தவனும் பெரிய மனமுள்ளவனுமான நீ இந்திரன்போல இந்தப்பூமியைப் பரிபாலனம் செய்வாயாக' என்கிற வசனத்தை உரைத்தான். கர்ணனால் இவ்வாறு உரைக்கப்பட்ட துர்யோதனராஜன், மீண்டும் கர்ணனைப்பார்த்து, 'புருஷச்ரேஷ்டனே! எவனுக்கு நீ உதவிபுரிபவனாகவும் அன்புள்ளவனாகவுமிருக்கிறாயோ அவனுக்குக் கிடைக்க அரியது ஒன்றுமில்லை. நீ என்னுடைய க்ஷேமத்திற்காகவே நல்ல முயற்சியுள்ளவனாக இருக்கிறாய். ஆனால், எனக்கு ஓர் அபிப்பிராயமிருக்கிறது. அதனை உள்ளபடி கேட்பாயாக. ஸூதநந்தன! அப்பொழுது பாண்டவனுடைய யாகங்களுள் சிறந்த ராஜஸூயத்தைக்கண்டு எனக்கு ஆவலுண்டாயிற்று. அந்த ஆவலை நீ நிறைவேற்றி வைப்பாயாக' என்று சொன்னான். இவ்வண்ணமுரைக்கப்பட்ட கர்ணன், பிறகு, அரசனை நோக்கி, 'அரசர்களுள் உத்தமனே! அரசர்

களனைவரும் இப்பொழுது உனக்கு வசப்பட்டிருக்கிறார்கள். குருஸ்ரேஷ்டனே! பிராம்மணோத்தமர்களை அழைக்கலாம். சாஸ்திரவிதிப்படி ஸம்பாரங்களையும் யாகத்திற்குவேண்டிய உபகரணங்களையும் சேகரிப்பாயாக. அரசனே! பகைவர்களை அடக்குகிறவனே! சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறபடி வேதங்களின் கரைகண்டவர்களும் நன்கு அழைக்கப்பட்டவர்களுமான ரித்விக்குக்களும் சாஸ்திரப்படி உனக்கு யஜ்ஞத்தைச் செய்விக்கக்கடவர். பரதஸ்ரேஷ்டனே! மிகுதியான அன்னபானங்களுடன் கூடியதும் மிக நிரம்பின குணங்களோடுகூடியதுமாக உன்னுடைய மஹாயாகமும் தொடங்கப்படலாம்' என்றுசொன்னான்.

பிரஜைகளுக்குப்பதியே! கர்ணனால் இவ்வண்ணமுரைக்கப்பட்ட துரியோதனன் புரோஹிதரை அழைத்து, 'நிரம்பின சிறந்த தக்ஷிணைகளையுடைய ராஜஸூயமென்கிற சிறந்த யாகத்தைச் சாஸ்திரப்படியும் நியாயப்படியும் முறைப்படியும் செய்வீராக' என்று சொன்னான். அரசரே! இவ்வாறுசொல்லப்பட்ட அந்தப்ராம்மணோத்தமர் அந்தச்சமயத்தில் அங்குவந்திருந்த பிராம்மணர்களோடு கூடி அரசனைப்பார்த்து, 'ராஜஸ்ரேஷ்டனே! கௌரவஸ்ரேஷ்டனே! யுதிஷ்டிரர் உயிரோடிருக்கும்பொழுது உன்னுடைய குலத்தில் அந்தராஜஸூயமென்கிற சிறந்தயாகமானது செய்வதற்கு ஸாத்தியப்படாதது. வேந்தே! உன்னுடையபிதாவான திருதராஷ்டிரரும் நீண்ட ஆயுளுள்ளவராக ஜீவித்திருக்கிறார். அரசர்களுள்உத்தமனே! அதனாலும், இந்தயாகமானது உனக்கு விலக்கானது. பிரபுவே! ராஜஸூயத்திற்குஸமமாகப் பெரியதான வேறு ஒருயாகமிருக்கிறது. ராஜேந்திரனே! நீ அதனால் தேவதைகளைப் பூஜிப்பாயாக. என்னுடைய இந்தவசனத்தைக் கேள். அரசனே! உனக்குக் கப்பம்கொடுக்கிற இந்த அரசர்கள் உனக்கு ஸுவர்ணத்தையும் சிற்பிகளால்செய்யப்பட்டிருக்கிற (அலங்கார முதலிய) வஸ்துக்களையும் சிற்பவேலைசெய்யப்பட்டிராதவஸ்துக்களையும் கப்பங்களாகக் கொடுக்கட்டும். ராஜஸ்ரேஷ்டனே! ஆதலால், இப்பொழுது உனக்குக் கலப்பை செய்யப்படலாம். பாரத! அதனால் உன்னுடைய யாகசாலை அமைத்தற்குரியபூமியானது உழப்படலாம். மன்னவர்களுள் மிக்கமேன்மைவாய்ந்தவனே! அந்த இடத்தில் ஏராளமான அன்னங்களுள்ளதும் (மந்திரங்களால்) நன்கு பரிசுத்திசெய்யப்பட்டதும் எல்லாப்பக்கங்களிலும் தடையற்றதுமான யாகமானது நியாயப்படி நடக்கலாம்.

உன்னால் செய்யப்படப்போகிற வைஷ்ணவமென்று பிரஸித்திபெற்ற இந்தயாகமானது ஸத்புருஷர்களுக்குத் தகுந்தது. புராணபுருஷரான விஷ்ணுவைத்தவிர வேறுஒருவரும் இந்தயாகத்தால் தேவதைகளைப் பூஜித்ததில்லை. இந்தமகாயாகமானது யாகங்களுள் சிறந்த ராஜஸூயத்திற்குச் [1] சமமானது. பாரத! எங்களுக்கு இந்த யாகம் ருசிக்கிறது; உனக்கும் நன்மையானது. இது இடையூறின்றி நடைபெறும். உன்னுடைய ஆசையும் ஸபலமாகும். மிக்க பாகுபலமுள்ளவனே! ஆகையால், உன்னுடைய இந்தயாகம் தொடங்கப்படலாம்' என்று கூறினர். அந்த ப்ராம்மணர்களால் இவ்வாறுசொல்லக்கேட்ட அரசனான துர்யோதனன், கர்ணனையும் சகுனியையும் பிராதாக்களையும்பார்த்து, 'பிராம்மணர்களுடைய இந்தவசனம் முழுமையும் எனக்கு ருசிக்கிறது; ஸம்சயமில்லை. உங்களுக்கு ருசிக்குமாகில் தாமதியாமல் சொல்லுங்கள்' என்கிற இந்தவசனத்தை உரைத்தான். இவ்வாறுசொல்லக்கேட்ட அவர்கள் எல்லோரும், அரசனைப்பார்த்து, 'அப்படியே' என்றுசொன்னார்கள். பிறகு, அரசன் சிற்பிகளைக் கிரமப்படி கட்டளையிட்டான். கலப்பையைச் செய்வதிலும் எல்லாச்சிற்பிகளும் கட்டளையிடப்பட்டார்கள். ராஜஶ்ரேஷ்டனே! எல்லாம் சொல்லியபடி கிரமமாகச் செய்யப்பட்டன.

---

## இருநூற்றைம்பத்தேழாவது அத்யாயம்.

## கோஷயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(துர்யோதனன் யாகத்தை முடித்தபிறகு யாகத்துக்கு வந்திருந்த பிராம்மணர்களையும் அரசர்களையும் மரியாதை செய்து அனுப்பிவிட்டுத் தன் நகரத்தில் பிரவேசித்தது.)

பிறகு, சிற்பிகள், அரசனைப்பார்த்து, 'எல்லாம் செய்யப்பட்டுவிட்டன' என்று சொன்னார்கள். அரசரே! பாரதரே! அறிவிற்சிறந்தவரான விதுரரும் திருதராஷ்டிரனிடத்தில் க்ரதுக்களுள் சிறந்ததான வைஷ்ணவயாகத்தைச் செய்வதற்குத் தக்க ஸமயம் வாய்த்திருப்பதாகவும் ஸன்னத்தமாக இருப்பதாகவும் அதிகவிலைமதிப்புள்ள பொன்மயமான கலப்பையும் முழுதும் செய்து முடிக்கப்பட்டதாகவும் தெரிவித்தார். பிரஜைகளுக்குப் பதியே! அரசர்களுள் சிறந்த திருதராஷ்டிரமகாராஜன், இந்த

---

[1] 'ஸ்பர்த்ததி' என்பது மூலம்.

வசனத்தைக்கேட்டு, ஸர்வோத்தமமான யாகத்தைச் செய்யக் கட்டளையிட்டான். பிறகு, அளவில்லாத தனங்களுடன் கூடியதும் நன்முக ஸம்ஸ்கரிக்கப்பட்டிருப்பதுமான யாகமானது நடக்கத் தொடங்கியது. காந்தாரீபுத்திரனான துரியோதனன் சாஸ்திரப்படியும் கிரமப்படியும் தீக்ஷிதனானான். திருதராஷ்டிரனும் பெரும் புகழுள்ளவரான விதுரரும் பீஷ்மரும் துரோணரும் க்ருபரும் கர்ணனும் கீர்த்தியுள்ளவளான காந்தாரியும் மிக்க மனக்களிப்புற்றவர்களானார்கள். ராஜேந்திரரே ! (துரியோதனன்) அரசர்களையும் அப்படியே பிராம்மணர்களையும் அழைப்பதற்காக விரைவாகச் செல்பவர்களான தூதர்களையும் அனுப்பினான். அந்தத் தூதர்கள், கட்டளையிடப்பட்டவண்ணம், விரைவாகச் செல்லும் வாகனங்களுடன் புறப்பட்டார்கள். அந்தத் தூதர்களுள் புறப்படுகின்ற ஒரு தூதனைப்பார்த்து, துச்சாஸனன், அப்பொழுது, 'தூத ! விரைவாக த்வைதவனத்திற்குப் போ. பாபபுருஷர்களான பாண்டவர்களையும் அந்த வனத்தில் வஸிக்கின்ற பிராம்மணர்களையும் நியாயப்படி அழைப்பாயாக' என்று சொன்னான். அந்தத்தூதன், த்வைதவனம் சென்று எல்லாப் பாண்டவர்களையும் அடைந்து நமஸ்கரித்து, 'மஹாராஜரே ! கௌரவர்களுள் மிக்கமேன்மைவாய்ந்தவனும் அரசர்களுள் சிறந்தவனுமான துரியோதனன் தனதுதிறமையால் தேடப்பட்ட பொருட்குவியலைப்பெற்று யாகஞ்செய்கிறான். அந்தயாகத்திற்காக அரசர்களும் பிராம்மணர்களும் அந்த அந்த இடங்களிலிருந்து செல்லுகின்றார்கள். அரசரே ! நானோ மகாத்மாவான கௌரவனால் அனுப்பப்பட்டேன். ஜனங்களுக்குத் தலைவனான துரியோதனராஜன் உங்களை அழைக்கிறான். அரசனுடைய மனத்தினால் விரும்பப்பட்டிருக்கிற அந்தயாகத்தை நீங்கள் பார்க்கக்கடவீர்' என்று கூறினான்.

பிறகு, ராஜஶ்ரேஷ்டரான யுதிஷ்டிரராஜர், அந்தத் தூதனுடையவசனத்தைக்கேட்டு, 'முன்னோர்களுடைய புகழைப் பெருக்குகிற துரியோதனராஜன் தெய்வாதீனமாக யாகங்களுள் முக்கியமான வைஷ்ணவயாகத்தினால் தேவதைகளை ஆராதிக்கிறான். நாங்களும் வருவோம்; ஆனால், எவ்விதத்தாலும் இப்பொழுது வரமுடியாது. பதின்மூன்றுவர்ஷகாலம் முடிவடையுமளவும் நாங்கள் வனத்தில்வஸிக்கக்கடவோமென்கிற எங்களுடையசபதத்தை நாங்கள் பாதுகாக்கவேண்டும்' என்று சொன்

ஞர். தர்மராஜருடைய இந்தவசனத்தைக்கேட்டு, பீமன், தூதனை நோக்கி, 'தர்மங்களால் பிரகாசிக்கிற யுதிஷ்டிரராஜர் அஸ்திரங்களாலும் சஸ்திரங்களாலும் எப்பொழுது அந்தத் துரியோதனனை ஜ்வலிக்கின்ற அக்நியில் விழும்படிசெய்வரோ அப்பொழுது வருவார். பாண்டுநந்தனரான யுதிஷ்டிரமகாராஜர் பதின்மூன்றுவது வர்ஷத்திற்குமேல் திருதராஷ்டிரபுத்திரர்களிடமுள்ள கோபமாகிற ஹவிஸை எப்பொழுது யுத்தமாகிற யாகத்தில் ஹோமம்செய்வாரோ அப்பொழுது நாங்கள் வருவோம் என்று நீ அந்தத்துரியோதனனுக்குச் சொல்' என்று சொன்னான். வேந்தரே! மற்றப்பாண்டவர்கள் அப்ரியமான வசனம் யாதொன்றையும் சொல்லவில்லை. தூதனும், நடந்தவண்ணம் இந்த வரலாற்றைத் துர்யோதனனிடம் தெரிவித்தான். மகாபாக்யசாலியே! பிறகு, புருஷஶ்ரேஷ்டர்களான பற்பலதேசாதிபதிகளும் பிராம்மணர்களும் துரியோதனனுடைய நகரத்தைநோக்கி வந்தார்கள். சாஸ்திரப்படியும் விதிப்படியும் முறைப்படியும் அர்ச்சிக்கப்பட்டவர்களான அந்த அரசர்கள் அதிகஸந்தோஷத்தையுடையவர்களும் பிரீதியுள்ளவர்களுமானார்கள். ராஜஶ்ரேஷ்டரே! திருதராஷ்டிரனும், எல்லாக்கௌரவர்களாலும் சூழப்பட்டவனாகவும் அதிகஸந்தோஷமுள்ளவனாகவும் விதுரரைப்பார்த்து, 'விதுர! எப்படி எல்லாஜனங்களும் யஜ்ஞவாடத்தில் மிருஷ்டான்னபோஜனம் செய்தவர்களும் ஸுகமுள்ளவர்களுமாகி மகிழ்வார்களோ அப்படி நீதியானது ஏற்படுத்தப்படவேண்டும்' என்று சொன்னான். பகைவர்களை அடக்குகிறவரே! கற்றறிந்தவரும் தர்மங்களை அறிந்தவருமான விதுரரோ அதனை அறிந்து எல்லா வர்ணத்தார்களையும் சாஸ்திரப்படி பூஜித்தார். விதுரர், ஸந்தோஷமுள்ளவராக, உண்ணவும் பருகவும் தக்க அன்னபானங்களாலும் நறுமணம் பொருந்திய புஷ்பங்களாலும் பலவித வஸ்திரங்களாலும் எல்லாரையும் ஸந்தோஷமடையச் செய்தார். வீரனான ராஜஶ்ரேஷ்டன் சாஸ்திரப்படியும் முறைப்படியும் அவப்ருதத்தைச்செய்து எல்லாருக்கும் இன்சொற்கூறியும் பலவித தனங்களைக் கொடுத்தும் ஆயிரவர் ஆயிரவராக அரசர்களையும் பிராம்மணர்களையும் தத்தம் இருப்பிடங்களுக்கு அனுப்பினான். துரியோதனன் எல்லா அரசர்களையும் அனுப்பிவிட்டுத் தம்பிமார்களால் சூழப்பட்டுக் கர்ணனுடனும் சகுனி முதலியவர்களுடனும் சேர்ந்து ஹஸ்திநபட்டணத்தில் பிரவேசித்தான்.

---

## இருநூற்றைம்பத்தேட்டாவது அத்யாயம்.

## கோஷயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(துர்யோதனனுடையஸபையில் கர்ணன் அர்ஜுனனுடையவதத்தை ப்ரதிஜ்ஞைசெய்ததும், பாண்டவர்கள் சாரர்கள்முகமாக அதைக் கேட்டதும்.)

மகாராஜரே! நகரத்தில் பிரவேசிக்கிறவனும் பிரஜைகளைப் பாதுகாப்பதினின்று நழுவாதனும் சிறந்தவில்லாளியும் அரசர்களுள் மிகச்சிறந்தவனுமான துரியோதனனை ஸூதர்களும் ஜனங்களும் ஸ்தோத்திரம் செய்தார்கள். ஜனங்கள் பொரிகளையும் சந்தனப்பொடிகளையும் அரசன்மீது வாரிஇறைத்து, 'அரசனே! உன்னால் தொடங்கப்பட்ட இந்தயாகமானது பாக்கியவிசேஷத்தால் இடையூறில்லாமல் முடிவடைந்தது' என்று சொன்னார்கள். அந்த நகரத்தில் நடந்ததைப்பற்றிப்பேசுகிறவர்கள், அந்த அரசனைப் பார்த்து, 'உன்னால் செய்யப்பட்ட இந்தயாகமானது யுதிஷ்டிரரால் செய்யப்பட்ட யாகத்திற்கு ஸமமாகாது' என்று கூறினார்கள். அந்த நகரத்தில் உசிதமாகப்பேசத்தெரியாத சிலர், அந்தத்துர்யோதனமகாராஜனைப்பார்த்து, 'உன்னால் செய்யப்பட்ட இந்த யாகமானது யுதிஷ்டிரரால் அனுஷ்டிக்கப்பட்ட அந்தராஜஸூய யாகத்தின் பதினாறில் ஓர் அம்சத்துக்கும் ஈடாகாது' என்று இவ்வண்ணம் உரைத்தார்கள். அந்தநகரத்தில் துர்யோதனனுடைய நண்பர்கள், 'சிறந்தபுத்தியுள்ளவனான துர்யோதன மகாராஜனால் செய்யப்பட்ட இந்தயாகமானது எல்லாயாகங்களுக்கும் மேற்பட்டிருக்கிறது' என்று சொன்னார்கள். 'நகுஷனுடைய புத்திரனான யயாதியும் மாந்தாதாவும் பரதனும் இந்தயாகத்தைச் செய்து பரிசுத்தர்களாகி எல்லாரும் ஸ்வர்க்கத்தை அடைந்தார்கள்' என்றும் சொன்னார்கள். பரதர்களுள் சிறந்தவரே! துர்யோதனராஜன், நண்பர்களுடைய மங்களகரமான இந்தவசனங்களைக் கேட்டுக்கொண்டு ஸந்தோஷத்துடன் பட்டணத்தில் நுழைந்து தன்அரண்மனையிலும் பிரவேசித்தான். அரசனே! பிதாக்களுக்கு ஆனந்தத்தை உண்டுபண்ணுகிறவனான துர்யோதனன் அரண்மனையில்பிரவேசித்தபிறகு, மாதாபிதாக்கள், பீஷ்மர் த்ரோணர் கிருபர் முதலிய பெரியோர்கள், சிறந்தபுத்தியுள்ளவரான விதுரர் இவர்களுடைய பாதங்களில் தண்டனிட்டு இளைய

ஸஹோதரர்களால் அபிவாதனம் செய்யப்பட்டவனும் அந்தத் தம்பிமார்களால் சூழப்பட்டவனுமாக முக்கியமான ஆஸனத்தில் உட்கார்ந்தான். ஸூதபுத்திரனான கர்ணன், அப்பொழுது எழுந்திருந்து, அந்தத் துர்யோதனமகாராஜனைப் பார்த்து, 'பாரதர்களுள் மேன்மைவாய்ந்தவனே! தொடங்கப்பட்ட இந்த உன்னுடைய மகாயாகமானது பாக்கியவிசேஷத்தால் முடிவடைந்தது. புருஷர்களுள்சிறந்தவனே! யுத்தத்தில் பாண்டவர்கள் கொல்லப்பட்ட பிறகு, உன்னால் அப்படிப்பட்ட ராஜஸூயயாகமானது செய்யப்படும்பொழுது, நான் மீண்டும் உன்னைப்பூஜிப்பேன்' என்று சொன்னான். மகாராஜனும் பெரும்புகழுள்ளவனுமான துரியோதனன், அந்தக் கர்ணனைப்பார்த்து, 'நரஸ்ரேஷ்டனே! உன்னால் கூறப்பட்ட இந்த விஷயம் உண்மை. வீர! துராத்மாக்களான பாண்டவர்கள் கொல்லப்பட்டபிறகு, ராஜஸூயமென்கிற மகாயாகமும் என்னால் செய்யப்பட்டபொழுது, நீ மறுபடியும் இவ்வண்ணம் என்னைப் புகழுவாய்' என்று சொன்னான். மகாராஜரே! பாரதரே! கௌரவராஜன் இவ்வண்ணம் உரைத்துக் கர்ணனைத்தழுவிக்கொண்டு ராஜஸூயமென்கிற சிறந்தயாகத்தைச் சிந்திக்கலானான். அரசர்களுள் மிகச்சிறந்தவனான அந்தத் துர்யோதனராஜன், பக்கத்திலிருக்கிறவர்களும் கர்ணனையும் சகுனியையும் தலைவர்களாகக் கொண்டவர்களுமான கௌரவர்களைப்பார்த்து, 'கௌரவர்களே! எப்பொழுது பாண்டவர்களனைவரையும் கொன்று பெரும்பொருளால் செய்யத்தக்க ராஜஸூயமென்கிற சிறந்தயாகத்தைச் செய்வேனோ?' என்று சொன்னான். அப்பொழுது, கர்ணன், அந்தத் துரியோதனனைப்பார்த்து, 'ராஜகுஞ்சர! என்சொல்லைக் கேள். அர்ஜுனன் கொல்லப்படுகிறவரையில், நான் கால்களை அலம்புகிறதில்லை; மாம்ஸத்தையும் பக்ஷிக்கிறதில்லை; மதுவில்லாமல் உண்கிற விரதத்தைக் கைக்கொள்ளுவேன். எவனால்யாசிக்கப்பட்டாலும் நான் இல்லை என்கிறசொல்லைச் சொல்லமாட்டேன்' என்று சொன்னான்.

பிறகு, கர்ணனால் யுத்தத்தில் அர்ஜுனனுடையவதம் பிரதிஜ்ஞைசெய்யப்பட்டவுடன், மகாவில்லாளிகளும் மகாரதர்களுமான திருதராஷ்டிரபுத்ரர்கள் பேராரவாரம் செய்தார்கள். அப்பொழுது, ஸூதபுத்திரனால் பிரதிஜ்ஞையில் நின்று பல்குனனுடையவதம்சொல்லப்பட்டவுடன், திருதராஷ்டிரனுடையபுத்திரர்கள் பாண்டவர்களை ஜயிக்கப்பட்டவர்களாகவே நினைத்தார்கள்.

ராஜேந்திரரே! துர்யோதனனும் நரச்ரேஷ்டர்களை அவரவர்க ளிருப்பிடத்திற்கு அனுப்பிவிட்டு, நிதிகளுக்கதிபதியும் பிரபுவுமான குபேரன் சைத்ரரதமென்கிற பூந்தோட்டத்தில் பிரவேசிப்பதுபோல அரண்மனையில் நுழைந்தான். பாரதரே! மகாராஜரே! பீஷ்மர் த்ரோணர்முதலிய அந்தமகாவில்லாளிகளனைவரும் தங்கள் தங்கள் வீடுகளுக்குச் சென்றார்கள். பெரியவிற்களையுடைய பாண்டவர்களும் தூதர்களுடையசொற்களால் நன்கு தூண்டப்பட்டவர்களாகவும் அந்தவிஷயத்தையே சிந்திப்பவர்களாகவும் ஓரிடத்திலும் ஒரு ஸமயத்திலும் ஸுகத்தை அடையவில்லை. ராஜச்ரேஷ்டரே! விஜயனுடைய வதத்தைக்குறித்துக் கர்ணனால் செய்யப்பட்ட பிரதிஜ்ஞைச்செய்தி மீண்டும் சாரர்களால் பாண்டவர்களுக்கு அறி விக்கப்பட்டது. அரசரே! இதைக்கேட்டு, தர்மபுத்திரர், மிகப் பயந்தவரும், 'யாதுசெய்யத்தக்கது?' என்று ஆலோசிப்பவரும் கீழ்நோக்கும் முகமுள்ளவருமாக நெடுநேரம் இருந்தார்; கர்ணனை உடைக்கத்தகாதகவசமுள்ளவனென்றும் அத்புதமான பராக்கிரம முடையவனென்றும் எண்ணித் தமக்குநேர்ந்திருக்கிற கிலேசங்களை நினைத்து ஆறுதலை அடையவில்லை. சிந்தையினால்கவரப்பட்டிருக்கிற மகாத்மாவான அந்தயுதிஷ்டிரருக்கு அனேக துஷ்டமிருகங்களால் வியாபிக்கப்பட்ட த்வைதவனத்தை விடுவதற்கு எண்ணம் உண் டாயிற்று. துரியோதனராஜனும், பிராதாக்களோடும் அப்படியே வீரர்களான பீஷ்மரோடும் துரோணரோடும் கிருபரோடும்சேர்ந்து பூமியை ஆண்டுவந்தான். துர்யோதனன் யுத்தத்தில் பிரகாசிக்கின்ற ஸூதபுத்திரனை கர்ணனோடும் சூதாடியான சகுனியோடும் சேர்ந்து எப்பொழுதும் ப்ரீதியுள்ளவனும் அரசர்களுக்கு ப்ரியத் தைச்செய்வதில் எப்பொழுதும் பற்றுதலுள்ளவனுமாகி ஏராள மான தக்ஷிணைகளோடுகூடின யாகங்களால் பிராம்மணோத்தமர் களைப் பூஜித்தான். அரசரே! பகைவர்களைத்தவிக்கச்செய்பவ னும் வீரனுமான அந்தத்துரியோதனன் தனத்தைத் தானத்தையும் போகத்தையும் பலனைக்கொண்டதென்று மனத்தினால் நிச் சயித்து, ப்ராதாக்களுக்கு ப்ரியத்தைச் செய்தான்" என்று சொன்னார்.

கோஷயாத்ராபர்வம் முற்றிற்று.

---

## இருநூற்றைம்பத்தோன்பதாவது அத்யாயம்.

# ம்ருகஸ்வப்நோத்பவ பர்வம்.

(பாண்டவர்களால் கோல்லப்பட்டவைபோக மிச்சமிருக்கிறமிருகங்கள் யுதிஷ்டிரரிடம் ஸ்வப்னத்தில்வந்து தங்கள்குலத்தில் மிச்சம் வைப்பதற்காக வேறிடம்செல்லும்படி வேண்டியதும், யுதிஷ்டிரர் தம்பிமார்களிடம் தாம் ஸ்வப்னத்தில் கண்டதைச் சொல்லி மீண்டும் காம்யகவனம் சேன்றதும்.)

ஜனமேஜயர், "மகாபலசாலிகளான பாண்டுபுத்திரர்கள் துரியோதனனை விடுவித்துவிட்டு அந்த த்வைதவனத்தில் யாது செய்தனர்? அதனை எனக்குச்சொல்லக்கடவீர்" என்று வினவ வைசம்பாயனர் சொல்லத் தொடங்கினர்.

"பிறகு, த்வைதவனத்தில் இரவில் படுத்து உறங்கிக்கொண்டிருக்கிற குந்திபுத்திரரான யுதிஷ்டிரரை மிருகங்கள் கண்ணீரால் தடைப்பட்டகுரலுடன் தூக்கத்தின்முடிவில் (தம்மைக்) காணும்படி செய்தன. ராஜேந்திரரானஅவர், நடுங்குகின்றவைகளும் அஞ்சலிபந்தம் செய்துகொண்டிருப்பவைகளுமான அந்த மிருகங்களைப் பார்த்து, 'சொல்லவிரும்பியிருப்பதைச் சொல்லுங்கள். நீங்கள் யார்? எதைவிரும்புகிறீர்கள்?' என்று சொன்னர். கீர்த்தியுள்ள குந்திபுத்திரரான யுதிஷ்டிரரால் இவ்வாறு சொல்லப்பட்டவைகளும் கொல்லப்பட்டவைகள்போக மிச்சமிருப்பவைகளுமான மிருகங்கள் அங்கே யுதிஷ்டிரரைப் பார்த்து, 'பாரதரே! நாங்கள் த்வைதவனத்தில் கொல்லப்பட்டவைகள்போக மிகுந்திருக்கின்ற மிருகங்கள். மகாராஜரே! நாங்கள் அடியோடு நாசமடையாமலிருப்போமாக. நீங்கள் (வேறிடத்துக்கு) வாஸம் மாற்றுதலைச் செய்துகொள்ளுங்கள். சூரர்களும் எல்லாருமே அஸ்திரங்களைக் கற்றறிந்தவர்களும் பிராதாக்களுமான நீங்கள் வனத்தில் வஸிக்கின்ற மிருகங்களுடைய குலங்களைச் சிறிதே மிகுந்திருக்கும்படி செய்துவிட்டீர்கள். பேரறிவாளரே! மிச்சமிருக்கிற நாங்கள் சிலரே வித்தாக இருக்கின்றோம். ராஜேந்திரரே! யுதிஷ்டிரரே! உம்முடைய அருளால் விருத்தியடையக்கடவோம்' என்று மறுமொழி சொல்லின. நடுங்குகின்றவைகளும் மிகப் பயந்தவைகளும் வித்துமாத்திரமாக மிகுக்கப்பட்டவைகளுமான அந்த மிருகங்களைப்பார்த்து மிக்க துக்கத்தால் பீடிக்கப்பட்ட

வரும் பிரஜைகளை ஆனந்தமடையச்செய்பவரும் எல்லாப் பிராணிகளுக்கும் ஹிதத்தைச் செய்வதில் பற்றுள்ளவரும் தர்மராஜருமான யுதிஷ்டிரர், 'அப்படியே ஆகட்டும். அதனை நீங்கள் சொல்லுகிறபடியே செய்வேன்' என்று சொன்னார். இவ்வண்ணம் விடியற்காலத்தில் கனவுகண்டு விழித்தவரும் அரசர்களுள் உத்தமருமான அந்த யுதிஷ்டிரர், மிருகங்களின்மீது கருணையுள்ளவராக, ஒன்று சேர்ந்திருக்கிற எல்லாப்ராதாக்களையும் பார்த்து, 'இரவில் நித்திரையின் முடிவுக்காலத்தில், கொல்லப்பட்டவைபோக மிகுந்திருக்கிற மிருகங்களால், 'நாங்கள் எண்ணிக்கையினால் குறைந்துவிட்டோம். உமக்கு மங்களம். எங்கள்மீது தயைசெய்யக்கடவீர்' என்று கேட்டுக்கொள்ளப்பட்டிருக்கிறேன்' என்று சொன்னார். அவர்கள், தர்மநந்தனரைப்பார்த்து, 'மிருகங்கள் உண்மை சொல்லின. நாம் வனத்தில்வஸிக்கின்ற மிருகங்களின்மீது தயை பாராட்டவேண்டும். ஒருவருஷம் எட்டுமாதகாலமாக இந்த மிருகங்களைக்கொன்று நாம் உபயோகித்துவந்தோம். பல மிருகங்களுள்ளதும் காடுகளுள் உத்தமமானதும் பாலைவனத்தின் தொடக்கத்திலிருப்பதும் த்ருணபிந்து என்னும் ஸரஸுக்கு அருகிலிருப்பதுமான காம்யகவனம் ரமணீயமாக இருக்கிறது. அதில் விளையாடிக்கொண்டு, மிகுதியிருக்கிற இந்த வனவாஸத்தை ஸுகமாகப் போக்குவோம்' என்று சொன்னார்கள். அரசரே! பிறகு, தர்மங்களை அறிந்தவர்களான அந்தப்பாண்டவர்கள் அந்தத்வைதவனத்தில் உடன்வஸித்துக்கொண்டிருந்தவர்களான அந்தப்ராம்மணர்களோடு சேர்ந்தவர்களாகவும் இந்திரஸேனன் முதலிய வேலைக்காரர்களால் பின்தொடரப்பட்டவர்களாகவும் அப்பொழுது காம்யகவனத்தைக்குறித்து விரைவாகச்சென்றார்கள். அவர்கள் நல்லஸுகத்தைக் கொடுப்பவைகளும் நல்லஉணவுப்பொருள்களுள்ளவைகளும் சுத்தமானஜலத்தையுடையவைகளுமான மார்க்கங்களால் சென்று புண்யமானதும் தவசிகளோடு சேர்ந்ததுமான காம்யகவனத்திலுள்ள ஆச்ரமத்தைக் கண்டார்கள். குருவம்சத்திலுதித்தவர்களும் பரதச்ரேஷ்டர்களுமான அவர்கள், பிராம்மணோத்தமர்களால் சூழப்பட்டவர்களாக, புண்யசாலிகள் ஸ்வர்க்கத்தில் நுழைவதுபோல அந்தக் காம்யகவனத்தில் அப்பொழுது நுழைந்தார்கள்.

ம்ருகஸ்வப்நோத்பவபர்வம் முற்றிற்று.

## இருநூற்றறுபதாவது அத்யாயம்.

# வ்ரீஹித்ரௌணிக பர்வம்.

(ஒருஸமயம் காம்யகவனத்தில் பாண்டவர்களிடம் வந்த வியாஸர் யுதிஷ்டிரரிடம் தானத்தின் பெருமையைக் கூறியது.)

பாரதர்களுள் சிறந்தவரே! வனத்தில் வஸிக்கின்ற மகாத்மாக்களான அந்தப் பாண்டவர்களுக்கு ப்ரயாஸத்தால் பதினொரு வருஷங்கள் சென்றன. ஸுகத்திற்கே தகுந்தவர்களும் உத்தம புருஷர்களுமான அந்தப் பாண்டவர்கள், கனிகிழங்குகளைப் புஜிக்கின்றவர்களாகவும், 'அனுபவிக்கவேண்டிய காலம்' என்று நினைத்துக்கொண்டவர்களாகவும் கடுமையான துக்கத்தைப் பொறுத்தார்கள். நீண்ட கைகளுள்ளவரும் ராஜரிஷியுமான அந்த யுதிஷ்டிரரோ, பிராதாக்களுக்கு நேர்ந்திருக்கிற மிகப்பெரிய துக்கம் தமது செய்கையாகிய குற்றத்தினால் உண்டானதென்பதை எண்ணி மார்பில் இருப்புமுளைகள் பாய்ச்சப்பட்டாற்போல ஸுகமாக உறங்கவில்லை. பாண்டுநந்தனரான யுதிஷ்டிரர், அந்தச் சூதாடும் தருணத்தில் சூதாட்டத்திற்குக் காரணமாக இருந்த சகுனி முதலியவர்களுடைய கெட்ட எண்ணத்தை ஆலோசிப்பவரும் ஸூதபுத்திரனுடைய கடுஞ்சொற்களை நன்கு நினைப்பவரும் பெருமூச்சுவிடுகின்றவரும் தைன்யத்தையடைந்தவருமாகிப் பெரிய கோபமாகிறவிஷத்தை வெளிவிடாமல் அடக்கிக்கொண்டிருந்தார். அர்ஜுனனும் இரட்டைப்பிள்ளைகளான நகுலஸஹதேவர்களிருவரும் கீர்த்தியுள்ளவளான த்ரௌபதியும் எல்லாரைக் காட்டிலும் பலத்தில் மிக்கவனும் மகாதேஜஸ்வியுமான அந்தப் பீமனும், மூத்தவராகப் பிறந்திருப்பவரும் தர்மங்களை அறிந்தவருமான யுதிஷ்டிரரை அப்பொழுது வெறுப்போடு பார்க்கின்றவர்களாகப் பொறுக்கமுடியாத துக்கத்தைப் பொறுத்தார்கள். புருஷச்ரேஷ்டர்கள் வனவாஸகாலத்தைச் சிறிது மிகுந்திருப்பதாக எண்ணி உத்ஸாஹத்தாலும் கோபத்தாலும் செய்கைகளாலும் தேகங்களை வேறுதேகங்கள்போலவே செய்தார்கள். சிறிது காலம் சென்றபிறகு, ஸத்யவதியின் புதல்வரும் மகாயோகியுமான வியாஸர் பாண்டவர்களைப் பார்க்க விருப்பமுள்ளவராக வந்தார்.

குந்தியின்புதல்வரான யுதிஷ்டிரர், வந்திருக்கிற அந்த வியாஸரைப்பார்த்து எதிர்கொண்டுசென்று, மகாத்மாவான அந்த மஹ

யை விதிப்படி வரவேற்றார். உட்கார்ந்துகொண்டிருக்கிற அந்த வியாஸமஹரிஷியை, ஸமீபத்திலுட்கார்ந்திருப்பவரும் ரிஷி வசனத்தைக் கேட்க விருப்பமுள்ளவரும் இந்திரியங்களை அடக்கினவரும் பாண்டவர்களை, ஆனந்தமடையச் செய்பவருமான யுதிஷ்டிரர் தமது நல்லொழுக்கத்தினால் ஸந்தோஷமடையச்செய்தார். மஹரிஷியான வியாஸர், இளைத்திருப்பவர்களும் வனத்தில் அங்குண்டான பொருள்களால் ஜீவிக்கின்றவர்களுமான அந்தப் பேரன்மார்களைப்பார்த்துக் கருணைகூர்ந்து கண்ணீரால் தடைப்பட்ட குரலுடன் பின்வருமாறு கூறலானார்.

'மகாபாகுபலமுள்ளவனே! தார்மிகர்களுள் சிறந்தவனே! யுதிஷ்டிரா! கேள். கடுந்தவம் புரியாதவர்கள் உலகத்தில் பெரிய ஸுகத்தை அடையமாட்டார்கள். மனிதன் ஸுகதுக்கங்களை மாறிமாறி அனுபவிக்கிறான். புருஷஸ்ரேஷ்டனே! ஒருவனாவது கடைசிவரையில் துக்கத்தை அனுபவிக்கமாட்டான். விவேகியான மனிதனே சிறந்த புத்தியுடன்கூடியவனாகவும் [1] உதயாஸ்தமயங்களை அறிந்தவனாகவும் ஸந்தோஷத்தையடைகிறதுமில்லை; துக்கத்தை அடைகிறதுமில்லை. மனிதன் தானாகவந்த ஸுகத்தை அனுபவிக்கின்றவனாகவும் தானாகவந்த துக்கத்தைப் பொறுக்கிறவனாகவும் இருந்துகொண்டு, பயிரிடுகிறவன் பயிரின் பலன்களை அனுபவிப்பதுபோல் அந்த அந்தக் காலங்களில் கிடைத்ததை அனுபவிக்கவேண்டும். தவத்தைவிடச் சிறந்தது ஒன்றுமில்லை. ஞானத்தினால் பிரம்மத்தை அடைகிறான். பாரத! தவத்தினால் ஸாதிக்கத்தகாதது ஒன்றுமில்லையென்று அறிவாயாக. மகாராஜனே! புண்ய கர்மங்களுடன்கூடின மனிதர்களுக்கு ஸத்யம், மனமொழிமெய்களின் ஒற்றுமை, கோபமில்லாமை, அனுபவிக்கத்தக்க வஸ்துக்களை எல்லாருக்கும் பேதமின்றிப் பகுத்தளித்தல், தமம், சமம், அஸூயையில்லாமை, ஹிம்ஸைசெய்யாமை, தூய்மை, இந்திரியங்களினடக்கம் ஆகிய இவைகள் ஸாதனங்கள். அதர்மத்தில் ருசியுள்ளவர்களும் மூடர்களும் விலங்குகளுடைய நடையில்பற்றுள்ளவர்களுமான ஜனங்கள் கஷ்டமான பிறப்பை அடைந்தவர்களாக ஸுகத்தை அடைகிறதில்லை. இவ்வுலகில் எந்த வினை செய்யப்படுகிறதோ அதன்பயன் மறுமையில் அனுபவிக்கப்படுகிறது. வேரில் (தண்ணீரால்) நனைக்கப்பட்ட மரத்துக்குக்

[1] 'உயிர்வாழ்க்கையின் 'உயர்வுகளையும் தாழ்வுகளையும்' என்பது இங்கிலிஷ் மொழிபெயர்ப்பு.

கிளைகளில் பலன் காணப்படுகிறது. ஆகையால், சரீரத்தைத் தவத்தோடும் நியமத்தோடும் சேர்க்கவேண்டும். அரசனே! காலம் நேர்ந்தபொழுது, ஸந்தோஷமுள்ள மனத்தையுடைய வனுகவும் மாத்ஸர்யமில்லாதவனுகவும்' நன்கு பூஜித்தும் நேரில் நமஸ்கரித்தும் சக்திக்குத்தக்கபடி (ஸத்பாத்திரத்தில்) தானம் செய்யவேண்டும். உண்மை பேசுகிறவன் நீண்டவாழ்நாள்களை யும் ச்ரமமில்லாமையையும் மனமொழிமெய்களின் ஒற்றுமையை யும் அடைவான். கோபத்தையும் பொறாமையையும் விட்டவன் சிறந்த ஸுகத்தைஅடைவான். இந்திரியங்களை அடக்கினவனும் சாந்தியை ப்ரதானமாகக்கொண்டவனும் அடிக்கடி கிலேசத்தை அடைகிறதில்லை. மனத்தை அடக்கினவன் அயலானிடத்திலிருக் கிற ஸம்பத்தைப்பார்த்துப் பரிதாபத்தை அடையான். போக்ய வஸ்துக்களை எல்லாருக்கும் வித்யாஸமின்றிப் பகுத்தளிப்பவனும் கொடையாளியுமான மனிதன் சிறந்த போகத்துடன்கூடியவனும் நல்ல ஸுகமுள்ளவனும் ஹிம்ஸைசெய்யாதவனுமாகிறான்; சிற ந்த ஆரோக்கியத்தையும் அடைகிறான். பூஜிக்கத்தக்கவனைப்பூஜிப் பவன் மகாகுலத்தில் பிறப்பை அடைகிறான்; இவ்வுலகத்திலும் பரலோகத்திலும் அளத்தற்கரிய ஸுகத்தை அடைகிறான். இந் திரியங்களை அடக்கினவன் விசனங்களோடு சேர்க்கையை அடை கிறதில்லை. நன்மையையே நாடின புத்தியுள்ள மனிதன் இம்மண் ணுலகில் உயிர்துறந்தபிறகு, அந்தப்புத்தியின் ஸம்பந்தத்தால் நல்லபுத்தியுள்ளவனுகவே பிறக்கிறான்' என்று சொன்னார்.

யுதிஷ்டிரர், 'பகவானே! மகாமுனிவரே! தானதர்மங்கள் (காயக்லேசத்தால் செய்யத்தக்க க்ருச்சிரம் சாந்திராயனம் முத லியவையான) தவம் இவற்றினுள் பரலோகம் சென்றவனுக்கு எது மிகச்சிறந்தது? எது செய்வதற்கு அரியதென்று சொல்லப்படு கிறது?' என்று வினவ, வியாஸர், 'ஐயா! பூமியில் தானத்தைக் காட்டிலும் செய்யமுடியாதது ஒன்றுமில்லை. பொருளில் ஆசை பெரியதாக இருக்கிறது. அந்தப்பொருள் கஷ்டத்தால் அடை யப்படுகிறது. அரசனே! இந்த விஷயம் உலகத்தை ஸாக்ஷி யாகக்கொண்டதாக நேரிலேயே காணப்படுகிறது. பிரியமான உயிரில் (ஆசையை) விட்டுப் போர்க்களத்தில் புகுகிறார்கள்; அப்படியே பெருங்கடலையும் கப்பலால் கடக்கிறார்கள்; அப் படியே அரண்யத்தையும் தாண்டிச்செல்லுகிறார்கள். சிலமனிதர் கள் வேளாண்மையையும் பசுக்காத்தலையும் செய்கிறார்கள். சில

மனிதர்கள் தனத்தில் விருப்பமுள்ளவர்களாகப் பிறருக்கு அடிமைப்படுகிறார்கள். ஆகையால், கஷ்டத்தால்தேடப்பட்டிருக்கிற தனத்தைத்தியாகம்செய்வது எவ்விதத்தாலும் முடியாததே. ஆகையால், தானம் எவ்விதத்தாலும் செய்ய மிகஅரியதென்று நான் எண்ணுகிறேன். இந்தவிஷயத்தில் ஒருவிசேஷம் அறியத்தக்கது. நியாயத்தால் ஸம்பாதிக்கப்பட்ட தனத்தைப் பரிசுத்தியுடன் தக்க ஸமயத்திலும் தக்க இடத்திலும் தக்கபாத்திரத்தில் தானம்செய்ய வேண்டும். எவன் அநீதியினால்தேடப்பட்ட தனத்தால் தானதர்மங்களைச் செய்கிறானோ அந்தக்கர்த்தாவை அந்தத்தானதர்மங்கள் மஹாபயத்தினின்று ஒருகாலும் பாதுகாக்கமாட்டா. யுதிஷ்டிர! காலத்தில் தக்கபாத்திரத்தில் பரிசுத்தமனத்துடன் கொடுக்கப்பட்டபொருள் சிறிதாக இருந்தாலும், பரலோகம்சென்றபின், அந்தமனிதனுக்கு மகாபலன்களைக் கொடுக்கிறதாக எண்ணப்பட்டிருக்கிறது. தர்மத்தை அனுஸரித்த ஶ்ரத்தையானது பிரகாசமுள்ளது; பரிசுத்தமானது; உலகங்களைத் தரிக்கிறது; விரும்பியவைகளை உண்டுபண்ணுகிறது; சிறந்தகர்மபலன்களைப் பயக்கிறது; ஸம்ஸாரமாகிய ஸமுத்திரத்தைக் கடக்கச் செய்கிறது. மகான்களால் சிரத்தையினால் தர்மம் தரிக்கப்படுகிறது; பொருளில் நோக்கமுள்ளவர்களால் தரிக்கப்படுகிறதில்லை. தனமுள்ளவர்களாக இருந்தும், ஶ்ரத்தையில்லாத அரசர்கள் நரகத்தை அடைந்தார்கள். தரித்திரர்களாக இருந்தும் ஶ்ரத்தையுள்ளமுனிவர்கள் ஸ்வர்க்கத்தை அடைந்தார்கள். [1] முத்கலர் தேசத்திலும் காலத்திலும் ஸத்பாத்திரத்தில் பதக்குநெல்லை ஶ்ரத்தையுடன் தானஞ்செய்து பரமபதத்தை அடைந்தார். இந்தவிஷயத்திலும் முத்கலர் பதக்குநெல்லை ஸத்பாத்திரத்தில் தானம்செய்ததனால் நல்ல பயனை அடைந்தாரென்கிற இந்தப் பழமையான இதிஹாஸத்தை எடுத்துச்சொல்லுகிறார்கள்' என்று சொன்னார்.

[1] இவருக்கு மௌத்கல்யரென்றும் பெயர் காணப்படுகிறது.

## இருநூற்றறுபத்தோராவது அத்யாயம்.

## வ்ரீஹித்ரௌணிகபர்வம். (தொடர்ச்சி.)

(முத்கலருடைய சித்தத்தைப் பரீக்ஷிப்பதற்காகத் துர்வாஸமுனிவர் ஆறு தடவை யாசித்தும், முத்கலர் மனம்வேறுபடாமல் அவ்வப்போது அன்னமளித்து அவரை மகிழ்வித்ததும், அவருடைய மகிமையினால் விமானத்துடன் வந்த தேவதூதன் சரீரத்துடன் முத்கலரை ஸ்வர்க்கத்துக்கு அழைத்ததும், முத்கலர் அந்தத் தேவதூதனைநோக்கி ஸ்வர்க்கம் எப்படியிருக்குமென்பதைச் சொல்லும்படி வேண்டினதும்.)

யுதிஷ்டிரர், 'பகவானே! மகாத்மாவான அந்த முத்கலரால் பதக்குநெல்லானது எவ்வண்ணம் தானம் செய்யப்பட்டது? எந்த விதியினால் யாருக்குக் கொடுக்கப்பட்டது? எனக்குச் சொல்வீராக. மனிதர்களுடைய தர்மங்களை நேரில் காண்பவரான ஈஸ்வரர் எந்த மனிதனுடைய செய்கைகளால் ஸந்தோஷமடைகிறாரோ நல்ல தர்மங்களை அநுஷ்டிப்பவனான அவனுடைய பிறப்பைப் பயனுள்ளதென்று நான் நினைக்கிறேன்' என்று வினவ, வியாஸர், 'அரசனே! குருக்ஷேத்திரத்தில் முத்கலரென்னும் முனிவர் [1] ஸிலத்தாலும் உஞ்சத்தாலும் ஜீவனம்செய்பவரும் தர்மத்திலேயே மனத்தைச்செலுத்தினவரும் பொறிகளை நன்கு அடக்கினவரும் ஸத்யவாதியும் அஸூயையில்லாதவருமாயிருந்தார். அதிதிகளைப்பூஜிக்கிற விரதத்தையுடையவரும் நல்லசெய்கைகளையுடையவரும் [2] காபோதிவ்ருத்தியுள்ளவரும் மகாதபஸ்வியுமான முத்கலர் (பசுமுதலியவற்றாலல்லாமல்) இஷ்டிகளாலேயே நிறைவேற்றத்தக்க யஜ்ஞத்தை நன்கு செய்துவந்தார். புத்திரர்களோடும் புத்ரிகளோடும் மனைவியோடும்கூடின அந்தமுத்கலர் பதினைந்து நாள்களுக்கு ஒருமுறை ஆஹாரம்செய்துகொண்டுவந்தார். காபோதிவ்ருத்தியினால் பதினைந்துநாள்களில் ஒரு [3] த்ரோண அள

[1] கதிர்நெற்றுமுதலியவையாகப் பொறுக்கிவந்து அவற்றைக்கொண்டு ஜீவிப்பது ஸிலவ்ருத்தி; தான்யமணிகளை ஒவ்வொன்றாகப் பொறுக்கி எடுத்துவந்து அவற்றால் ஜீவிப்பது உஞ்சவ்ருத்தி; சாந்திபர்வம் 1359-ம் பக்கம், ஆஸ்வமேதிகபர்வம் 246-ம் பக்கம் குறிப்புக்களிற்காண்க.

[2] சாந்திபர்வம் 555-ம் பக்கம், ஆஸ்வமேதிகபர்வம் 248-ம் பக்கம் குறிப்புக்களிற் காண்க. [3] பதக்கு அதாவது இரண்டு மரக்கால்.

வுள்ள தான்யத்தைச் சேர்ப்பார். மத்ஸரமில்லாதவரான அந்த முத்கலர் அந்தநெல்லினால் தர்சத்தையும் பௌர்ணமாஸத்தையும் செய்து தேவதைகளையும் அதிதிகளையும் பூஜித்து மிகுந்ததனால் தேகயாத்திரையைச் செய்துகொண்டிருந்தார். மஹாராஜனே! மகிமைபொருந்தியவனும் மூவுலகங்களுக்கும் தலைவனுமான இந்திரன், தேவர்களோடுசேர்ந்து ஒவ்வொரு பர்வத்திலும்நடக்கிற தர்சபௌர்ணமாஸ இஷ்டிகளில் ஹவிர்ப்பாகத்தைப் பெற்றுக்கொண்டான். அந்தமுத்கலர், பர்வகாலத்தில்செய்யத்தக்க வைதிககர்மாவைச்செய்து முனிவ்ருத்தியுடன் கூடியவராக மிக்கஸந்தோஷமுள்ள மனத்தோடு அதிதிகளுக்கு அன்னத்தை அளித்தார். ப்ரீதியுடன் அன்னத்தைக் கொடுப்பவரும் மஹாத்மாவும் மாத்ஸர்யமில்லாதவருமான முத்கலரிஷியினுடைய பதக்களவுள்ள நெல்லால் செய்யப்பட்ட அந்த அன்னமானது, அதிதிகளைக் கண்டவுடன் வளர்ந்துவந்தது. அந்த அன்னத்தைக் கற்றறிந்தவர்களான நூற்றுக்கணக்கான பிராம்மணர்கள் போஜனம்செய்தார்கள். அந்த அன்னமானது ரிஷியினுடைய தானசுத்தியினால் விருத்திஅடைந்துவந்தது. அரசே! திகம்பரரான துர்வாஸமகரிஷியானவர் தார்மிகரும் விரதத்தை நன்குஅனுஷ்டிப்பவருமான அந்தமுத்கலருடைய வரலாற்றைக்கேட்டு அவரிடம் வந்து சேர்ந்தார். பாண்டவ! பைத்தியம்பிடித்தவன்போல நிலைஇல்லாத வேஷத்தைத்தரித்தவரும் தலைமயிரில்லாதவரும் பலவிதமான கடுஞ்சொற்களைச் சொல்பவரும் பிரம்மஸ்வரூபத்தை மனனம்செய்பவரும் முனிகளுள் மிகச்சிறப்புவாய்ந்தவருமான துர்வாஸமஹரிஷியானவர், அந்தமுத்கலரென்னும் பிராம்மணரிடம் வந்து, 'முனிகளுள் சிறந்தவரே! என்னை அன்னத்தைவிரும்பிக்கொண்டு உம்மிடம்வந்திருப்பவனாக அறியக்கடவீர்' என்று சொன்னார். முத்கலர் துர்வாஸமுனிவரைப்பார்த்து, 'உமதுவரவு நல்வரவாகுக' என்றுகூறினார். விரதத்தைத்தரித்தவரும் அதிதிகளிடத்தில் அன்புள்ளவருமான அந்தமுத்கலர் பாத்யத்தையும் ஆசமனீயத்தையும் ஸமர்ப்பித்து மிக்கச்ரத்தையைக்கைக்கொண்டு தவத்தினால்தேடப்பட்ட அந்த உத்தமமான அன்னத்தைப் பசியுள்ளவரும் உன்மத்தருமான துர்வாஸமகரிஷிக்குக் கொடுத்தார். பிறகு, பசியுள்ளவரும் உன்மத்தருமான அந்தத்துர்வாஸமுனிவர் ருசியுள்ள அந்த அன்னத்தை முழுமையும் புசித்தார். முத்கலரும் அவருக்கு எல்லாஅன்னத்தையும் அளித்தார்.

முனிவர், எல்லா அன்னத்தையும் புஜித்து, பிறகு, உச்சிஷ்டமான அன்னத்தைத் தம்முடைய அங்கத்தில் பூசிக்கொண்டார்; வந்தபடி திரும்பியும் சென்றார். [1] இவ்விதமே இரண்டாவதுபர்வம் வந்தபோதும் துர்வாஸர் வந்து உஞ்சவ்ருத்தியினால் ஜீவிப்பவரும் கற்றறிந்தவருமான முத்கலருடைய அன்னமனைத்தையும் புஜித்தார். அந்த முத்கலமுனிவரோ ஆகாரமில்லாதவராகவே மீண்டும் தான்யங்களைப் பொறுக்கிச் சேர்த்தார். பசியானது அந்தமுத்கலரை வேறுபாட்டை அடைவிக்கத் திறமையுள்ளதாகவில்லை. புத்திரர்களோடும் புத்திரிகளோடும் தாரத்தோடும் உஞ்சவிருத்தியினால் ஜீவிக்கிற பிராம்மணோத்தமரான முத்கலரைக் கோபமாவது மாத்ஸர்யமாவது அவமானமாவது பரபரப்பாவது அடையவில்லை. அவ்வாறு உஞ்சவ்ருத்தியை ஸ்வபாவமாக உடையவரும் முனிகளுள் மிகவும் சிறந்தவருமான முத்கலரிடம் துர்வாஸமகரிஷியானவர் நிச்சயத்துடன்கூடியவராகப் பர்வகாலந்தோறும் தவறாமல் ஆறுதரம் வந்தார். முனிவரான அந்தமுத்கலருடைய மனத்துக்கு ஒருவேறுபாடும் காணப்படவில்லை. சுத்தஸத்வகுணமுள்ளவரான முத்கலருடைய சுத்தமானமனத்தை அந்தத்துர்வாஸமகரிஷியானவர் மாசற்றதென்று கண்டார். பிறகு, மகிழ்ச்சியடைந்தவரான அந்தத் துர்வாஸமுனிவர் அப்பொழுது அந்தமுத்கலரைப்பார்த்து, 'உலகத்தில்உமக்கொப்பான மாத்ஸர்யமில்லாத கொடையாளி ஒருவருமில்லை. பசியானது தர்மசிந்தையை விலக்குகிறது; தைர்யத்தையும் கவர்ந்துகொள்ளுகிறது. நாவானது விஷயங்களை அனுஸரிப்பதாக ரஸங்களைக்குறித்து மனிதனை இழுக்கவேசெய்கிறது. பிராணன்கள் ஆகாரங்களால் நிலைபெறுகின்றன. சஞ்சலமான மனமானது எவ்விதத்தாலும் அடக்கமுடியாதது. மனத்துக்கும் இந்திரியங்களுக்கும் விஷயங்களில் பிரவ்ருத்தி இல்லாமல் தியானிக்கத்தக்க பிரம்மத்தினிடத்திலேயே அசைவற்று இருத்தல் தவம் என்று நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. ஸ்ரமத்தால் ஸம்பாதிக்கப்பட்ட பொருளை நல்லமனத்தோடு [2] கொடுப்பதென்பது கஷ்டமானது. ஸாதுவே! அதுமுழுமையும் உம்மால் உள்ளபடி அனுஷ்டிக்கப்பட்டது. உம்மோடு சேர்க்கைபெற்று மகிழ்ச்சியுற்றவரும் அனுக்ரஹிக்கப்பட்டவருமாகிறோம். இந்திரியஜயம், தைர்யம், போக்ய வஸ்துக்களை எல்லாருக்கும் தன்னோடுஸமமாகப் பங்கிட்டுக்கொடுத்தல், தமம், சமம், தயை, ஸத்யம், தர்மம் இவைஅனைத்தும் உம்மி

---

[1] அதிகபாடமான ஒரு ஸ்லோகம் விடப்பட்டது. [2] வேறுபாடம்.

டத்தில் நிலைபெற்றிருக்கின்றன. தர்மத்தால் சராசரங்களுடன் கூடின எல்லா உலகங்களும் தரிக்கப்படுகின்றன. தைர்யத்தை யுடையவரே! உம்மால் அந்தத் தர்மங்கூட மனத்தினால் தரிக்கப் படுகிறது. சுத்தஸத்வகுணத்தால் நிறைந்தமனிதன் உம்மைத் தவிர வேறு ஒருவனும் இல்லை. உம்முடையகர்மங்களால் உலகங் கள் ஜயிக்கப்பட்டன. உத்தமகதியை அடைந்தவராக இருக்கிறீர். ஆச்சர்யம். ஸ்வர்க்கத்தில் வஸிப்பவர்களால் மிகவும்பெரிதான உம் முடைய தானமானது விசேஷமாகப் புகழ்ந்துகூறப்பட்டது. விரதத் தைநன்குஅனுஷ்டித்தவரே! நீர் சரீரத்துடன்கூடியவராக ஸ்வர்க் கத்தை அடைவீர்' என்று சொன்னார். அந்தத் துர்வாஸமுனிவர் அப்பொழுது இவ்வண்ணம் சொல்லிக்கொண்டிருக்கையிலேயே, தேவதூதன், ஹம்ஸங்களும்ஸாரஸங்களும்பூட்டியதும் [1] கிண்கிணித் திரள்களாலமைந்த மாலைகளையுடையதும் நினைத்தவண்ணம் செல் லுகிறதும் விசித்திரமானதும் திவ்யகந்தமுள்ளதுமான விமானத் துடன் முத்கலரிடம் வந்தான். அந்தத்தேவதூதன், அந்தப்ரம்ம ரிஷியைப்பார்த்து, 'முனிவரே! நல்லகர்மங்களால் ஜயிக்கப்பட்ட இந்தவிமானத்தில் ஏறும். சிறந்தஸித்தியை அடைந்தவராகஇருக் கிறீர்' என்று சொன்னான். இவ்வண்ணம் சொல்லுகின்ற அந்தத் தேவதூதனைப்பார்த்து, முத்கலரிஷியானவர், 'ஸ்வர்க்கவாஸிக ளுடைய குணங்கள் உன்னால்சொல்லப்படவிரும்புகிறேன். அங்கே வஸிப்பவர்களுடையகுணங்கள் எவை? தவம் எது? நிச்சயம் எது? தேவதூதனே! அந்தஸ்வர்க்கத்தில் ஸுகமா? அல்லது கஷ்டமா? நற்குலத்திற்குத்தக்க நன்னடையுள்ள ஸாதுக்கள், 'ஸாதுக்களுடைய நேசம் ஏழு [2] பதங்களால் அடையப்படுகிறது' என்று சொல்லுகிறார்கள். பிரபுவே! மித்ரத்தன்மையைமுன் னிட்டு உன்னை நான் கேட்கிறேன். இந்த விஷயத்தில் எது உண் மையோ, எது நன்மையோ, அதை ஆலோசியாமல் கூறுவாயாக. நீ சொல்வதைக்கேட்டு உன்வசனத்தினால் அப்படி நிச்சயத்தைச் செய்வேன்' என்று கூறினார்.

[1] சிறிய மணிகள். [2] சொற்கள் அல்லது காலடிகள்.

## இருநூற்றறுபத்திரண்டாவது அத்யாயம்.

## வ்ரீஹித்ரௌணிகபர்வம். (தொடர்ச்சி.)

(தேவதூதனிடமிருந்து ஸ்வர்க்கலோகம் நிலையற்றதென்றறிந்த முத்கலர் ஸ்வர்க்கத்தைவிரும்பாமல் தேவதூதனைத் திருப்பி யனுப்பியதும், வியாஸர் முத்கலோபாக்கியானத்தை முடித்துத் தமதாச்ரமம் சென்றதும்.)

தேவதூதன், 'மஹரிஷியே! தானாகவே வந்திருப்பதும் விரும்பத்தக்கதும் மிகச்சிறந்ததுமான ஸ்வர்க்கலோகத்தைப்பற்றி நீர் அறிவில்லாதவர்போல ஆலோசிக்கிறீராதலால், நீர் அகாரியத்தில் புத்தியைச்செலுத்தினவர். ஸ்வர்க்கமென்று பெயருள்ள இந்த உலகமானது எல்லா உலகங்களையும் காட்டிலும் மேலானது. முனிவரே! ஸ்வர்க்கத்தைக்குறித்து மேலேசெல்லுகின்ற நல்லவழியானது அடிக்கடி விமானங்களால் ஸஞ்சரிக்கத்தக்கது. முத்கலரே! தவம்செய்யாதவர்களும் பெரியயாகங்களால் தேவதைகளை ஆராதியாதவர்களும் பொய்சொல்லுகிறவர்களும் நாஸ்திகர்களும் அங்கே செல்வதில்லை. தர்மத்தில் மனத்தைச் செலுத்தினவர்களும் மனத்தைஅடக்கினவர்களும் சாந்தியுள்ளவர்களும் இந்திரியங்களை அடக்கினவர்களும் மாத்ஸர்யமில்லாதவர்களும் தானதர்மத்தில் நோக்குள்ளவர்களும் சூரர்களும் குணங்களால் பிரஸித்தி பெற்றவர்களுமான மனிதர்கள் சமமும் தமமுமாகிய சிறந்ததர்மத்தைச்செய்து அந்தஸ்வர்க்கத்தை அடைகிறார்கள். பிராம்மணரே! ஸாதுக்களானமனிதர்களால் அடையப்பட்ட புண்ணிய புருஷர்களுடைய உலகங்களையும் அடைகிறார்கள். மௌத்கல்யரே! தேவர்கள், ஸாத்தியர்கள், விச்வேதேவர்கள், மஹரிஷிகள், யாமர்கள், தாமர்கள், கந்தர்வர்கள், அப்ஸரஸுகள் ஆகிய இந்தத் தேவகணங்களுடைய ஆலயங்களுள்ள உலகங்கள் தனித்தனியாகவும் பலவாகவும் பிரகாசமுள்ளவைகளாகவும் விரும்பிய பொருள்கள் நிரம்பினவைகளாகவும் தேஜோமயமாகவும் மங்களகரமாகவுமிருக்கின்றன. முத்கலரே! அந்த ஸ்வர்க்கத்தில் முப்பத்துமூவாயிரம்யோஜனை விஸ்தாரமுள்ள பொன்மயமான மேரு வென்கிற சிறந்த பர்வதமும் தேவோத்யானங்களும் இருக்கின்றன. முத்கலரே! அந்தஸ்வர்க்கத்தில் எல்லாராலும் விரும்பப்படத்தக்க பழங்களடர்ந்த மரங்களால் எல்லாப்பக்கங்களிலும்

பிரகாசிக்கின்றவைகளும் மிக அழகியவைகளும் மகிழ்ச்சியைச் செய்பவைகளுமான உத்யானங்கள் இருக்கின்றன. புண்ணிய கர்மங்களைச் செய்தவர்களுக்குப் புண்யமான நந்தனம் முதலிய உத்யானங்கள் விளையாட்டிடங்கள். அங்கே பசிதாகங்கள் இல்லை; வாட்டம் இல்லை; சீதோஷ்ணங்களும் இல்லை. அப்படியே, பயமும் இல்லை. அந்தஸ்வர்க்கலோகத்தில் அருவருப்பை உண்டுபண்ணு கிறபொருளாவது அமங்களமாவது ஒருரோகமாவது இல்லை. ஸ்வர்க்கத்தில் எல்லாவிதத்திலும் ஸுகமான தொடுகையுள்ளவை யும் மனத்துக்கு இன்பத்தைவிளைவிக்கின்றவையுமான நறுமண முள்ள (காற்றுக்கள்) எங்கும் வீசுகின்றன. முனிவரே! அந்த ஸ்வர்க்கத்தில் காதுகளாலும் மனத்தினாலும் அறியத்தக்க இனி மையானசப்தங்கள் எல்லா இடங்களிலும் கேட்கப்படுகின்றன. சோகமாவது முதுமையாவது களைப்பாவது அழுகையாவது அந்த இடத்திலில்லை. முனிவரே! இப்படிப்பட்ட அந்தஉலகத்தையடை வது தன்நல்வினைப்பயனைக் காரணமாகக்கொண்டது. மனிதர்கள் தம்முடைய நல்வினைகளால் அங்கே செல்லுகின்றார்கள். மௌத் கல்யரே! அந்தஸ்வர்க்கத்தில் வாஸம் செய்பவர்களுக்குத் தேஜோ மயமானசரீரங்கள் வினைகளாலேயே உண்டாகின்றன; தாய்தந்தை களால் உண்டுபண்ணப்படுகின்றனவல்ல. முனிவரே! அந்தஸ்வர்க் கத்திலிருப்பவர்களுக்கு வேர்வையாவது துர்க்கந்தமாவது மலமா வது மூத்திரமாவது இல்லை. முனிவரே! அந்தஸ்வர்க்கத்தில் அவர் களுடைய வஸ்திரங்களைப் புழுதியானது மங்கச்செய்கிறதில்லை. தேவலோகத்து மணமுள்ளவைகளும் மனத்தைக்கவருகின்றவை களுமான அவர்களுடையமாலைகள் வாடுகிறதில்லை. பிராம்மணரே! இப்படிப்பட்ட அந்தத்தேவர்கள் விமானங்களால் தாங்கப்படுகி றார்களன்றோ? மகாமுனிவரே! ஸ்வர்க்கத்தைப் புண்யங்களால் அடைந்தவர்கள் பொறாமையையும் சோகத்தையும் வாட்டத்தை யும் விட்டுவிலகினவர்களாகவும் மோகத்தாலும் மாத்ஸர்யத்தா லும் விடப்பட்டவர்களாகவும் அங்கே ஸுகமாக வஸிக்கிறார்கள். முனிவர்களுள் சிறந்தவரே! அப்படிப்பட்ட அந்த உலகங்களுக்கு மேன்மேல் திவ்யமானவையும் குணங்களோடுகூடியவையுமான இந்திரனுடைய லோகங்கள் இருக்கின்றன. அந்த லோகங்களுக்கு அப்புறத்தில் தேஜோமயமாகவும் மங்களகரமாகவுமிருக்கிற பிரம்ம தேவருடைய உலகமிருக்கிறது. பிராம்மணரே! அந்த உலகத்திற் குத் தங்களுடைய நல்வினைகளால் பரிசுத்தர்களான ரிஷிகள்

செல்லுகிறார்கள். அந்த உலகத்தில் தேவர்களுக்கும் தேவதைகளான ருபுக்களென்று பிரஸித்திபெற்ற மற்றவர்கள் இருக்கின்றார்கள். அந்த லோகத்தில் எவர்களைத் தேவர்கள் ஆராதிக்கிறார்களோ அவர்களுடைய லோகங்கள் மிகப்புகழப்படுகின்றன. அந்த உலகங்கள் ஸ்வயம்பிரகாசமுள்ளவைகள்; உத்தமமான ஒளியுள்ளவைகள்; விரும்பினவைகளைக் கொடுப்பவைகள்; மேன்மைவாய்ந்தவைகள். அவர்களுக்கு ஸ்திரீகளால் செய்யப்படும்தாபம் இல்லை. அவர்களுக்குப் போகங்களிலும் ஐஸ்வர்யங்களிலும் மாத்ஸர்யம் இல்லை. அவர்கள் ஆகுதிகளால் ஜீவிக்கிறதில்லை; அமிருதபானம் செய்கிறதில்லை. அவர்கள் அப்படிப்பட்ட திவ்ய சரீரமுள்ளவர்கள்; (இந்திரியங்களால் காணத்தக்க) வடிவமைந்த சரீரமுள்ளவர்களல்லர்; அஸௌக்கியமில்லாதவர்கள். அவர்கள் ஸுகத்திலேயே விருப்பமுள்ளவர்கள். அவர்கள் தேவர்களுக்குத்தேவர்கள்; சாஸ்வதமாக இருப்பவர்கள். அவர்கள் கற்பங்கள் மாறுதலடையுங்காலங்களிலும் மாறுபாடின்றி அப்படியே இருக்கிறார்கள். மூப்பும் மரணமும் அவர்களுக்கு எங்கிருந்துவரும்? அவர்களுக்கு ஸந்தோஷமும் ப்ரீதியும் ஸுகமும் இல்லை. முனிவரே! துக்கமும் ஸுகமும் அவர்களுக்கில்லை. விருப்புவெறுப்புக்கள் எங்கிருந்துவரும்? மௌத்கல்யரே! சிறந்த அந்தக்கதியானது தேவர்களாலும் விரும்பப்பட்டது. நிகரற்றதும் அடைதற்கரிதுமான ஸித்தியானது காமத்திற்கு வசப்பட்டிருப்பவர்களால் எவ்விதத்திலும் அடையமுடியாதது; அணுகவும்முடியாதது. இந்தலோகங்கள் முப்பத்துமூன்று; மற்ற உலகங்கள் கற்றறிந்தவர்களால் சிறந்தநியமங்களாலும் விதியை முன்னிட்ட தானங்களாலும் அடையப்படுகின்றன. தானத்தால் உண்டுபண்ணப்பட்ட அப்படிப்பட்ட இந்தஸம்பத்தானது உம்மால் ஸுகமாக அடையப்பட்டிருக்கிறது. தவத்தினால் பிரகாசிக்கின்ற ஒளியுடன்கூடினநீர் ஸுக்ருதங்களால் அடையப்பட்டிருக்கிற அந்தஸம்பத்தை அனுபவிப்பீராக. பிராம்மணரே! இது ஸ்வர்க்க ஸுகம். அப்படியே உலகங்கள் பலவிதமானவைகள். ஸ்வர்க்கத்தினுடையகுணங்கள் உமக்குக் கூறப்பட்டன. தோஷங்களையும் என்னிடத்திலிருந்து தெரிந்துகொள்ளும்.

(இவ்வுலகில்) செய்த வினையின்பயனே அவ்வுலகில் அனுபவிக்கப்படுகிறது. அங்கே வேறுவினையானது செய்யப்படுகிறதில்லை; அடிவேர் அறுந்துபோகும்படி (வினையானது) மிகுதியின்றி அனுப

விக்கப்படுகிறது. அந்தக் கர்மபலானுபவத்தின்முடிவில் பூமியில் விழுதலென்பதே இந்தஸ்வர்க்கத்திலுள்ள தோஷமென்று என்னால் எண்ணப்பட்டிருக்கிறது. முத்கலரே! மிகப்ரகாசிக்கின்ற ஐஸ்வர்யங்களைப்பார்த்து ஸுகம் நிரம்பின மனத்தைஉடையவர்களாயிருந்து பிறகு கீழேவிழுந்து கீழானஸ்தானத்திலிருப்பவர்களான அவர்களுக்கு மகிழ்ச்சியின்மையும் பரிதாபமும் வருவதென்பது பொறுக்க முடியாதது. ஸ்வர்க்கத்தினின்று கீழே விழுகின்றவர்களுக்குப் புத்திமயக்கமும் ரஜோகுணம் மிகுதலும் மலர்மாலைகள் வாடுதலும் உண்டாகின்றன. அதனால், கீழே விழப்போகிறவனுக்குப் பயம் வந்துவிடுகிறது. மௌத்கல்யரே! பிரம்மாவினுடைய வாஸஸ்தானமான ஸத்யலோகம்வரையில், பயங்கரமான இந்தத்தோஷங்கள் இருக்கின்றன. ஸ்வர்க்கலோகத்தில் ஸுக்ருதம் செய்தவர்களான மனிதர்களுக்குக் குணங்கள் பதினாயிரக்கணக்காக இருக்கின்றன. முனிவரே! ஸ்வர்க்கத்தினின்று நழுவினவர்கள் நல்வினைப்பயன்களில் மிகுதியுள்ளவற்றின் ஸம்பந்தத்தால் மானிடஜாதியில் மீண்டும் பிறக்கிறார்களென்னும் இது எல்லாக்குணங்களையுங்காட்டிலும் சிறந்த வேறு ஒருகுணம். அதிலும், மகாபாக்கியமுள்ளவன் மகாகுலத்தில் பிறக்கிறான். அந்த மகாகுலத்தில் பிறந்திருந்தும் நல்ல அறிவுடையவனாக இராவிடில் அதிலிருந்து அதமமானகதியை அடைகிறான். இந்த மண்ணுலகில் எந்த வினை செய்யப்படுகிறதோ அது பரலோகத்தில் அனுபவிக்கப்படுகிறது. பிராம்மணரே! இது கர்மபூமியென்றும் அது பலபூமியென்றும் எண்ணப்பட்டிருக்கின்றன' என்று சொன்னான்.

முத்கலர், 'தேவதூதனே! உன்னால் ஸ்வர்க்கத்திற்கு இந்தப் பெரியதோஷங்கள் கூறப்பட்டன. வேறு எந்த உலகம் தோஷமில்லாததாகவே இருக்கிறதோ அந்த உலகத்தை எனக்குச்சொல்வாயாக' என்று வினவ, தேவதூதன், 'பிராம்மணரே! எதைச் சுத்தமானதென்றும் பழமையானதென்றும் சிறந்த ஒளியென்றும் ப்ரம்மமென்றும் அறிகிறார்களோ அப்படிப்பட்ட விஷ்ணுவினுடைய நிகரில்லாத ஸ்தானமானது பிரம்மலோகத்திற்கு மேலே இருக்கிறது. பிராம்மணரே! விஷயங்களில் மனத்தைச் செலுத்தினவர்களும் டம்பம், பேராசை, கோபம், மோகம், த்ரோகம் ஆகிய இவைகளால் கவரப்பட்டவர்களும் அங்கே செல்லுகிறதில்லை. (என்னுடையதென்கிற) மமகாரமில்லாதவர்களும் (நான் என்கிற) அஹங்காரமில்லாதவர்

களும் ஸுகதுக்கங்களில்லாதவர்களும் இந்திரியங்களை நன்கு அடக்கினவர்களும் தியானயோகத்தில் பற்றுதலுள்ளவர்களுமான மனிதர்கள் அங்கே செல்லுகின்றார்கள். முத்கலரே! எதைப் பற்றி என்னை நீர் கேட்டீரோ அந்த்விஷயம் முழுதும் உமக்கு என்னால் உரைக்கப்பட்டது. ஸாதுவே! உம்முடையதயையினால் தாமதியாமல் நன்கு செல்வோம்' என்று சொன்னான். மௌத்கல்யர் இந்தவாக்கியத்தைக்கேட்டு, புத்தியினால் ஆலோசித்தார். முனிவர்களுள் மிக்க மேன்மைவாய்ந்த மௌத்கல்யர் நன்றாக ஆலோசித்து, தேவதூதனைப்பார்த்து; 'தேவதூத! உனக்கு வந்தனம். அப்பா! ஸுகமாகத் திரும்பிச்செல். அதிக தோஷங்களோடுகூடின ஸ்வர்க்கத்தாலாவது ஸுகத்தாலாவது எனக்குச் செய்யத்தக்கது யாதொன்றுமில்லை. விழுதலை முடிவாகக்கொண்ட ஸ்வர்க்கத்தில் அதிகதுக்கமுண்டாகிறது. மிக்க கொடுமையான பரிதாபமும் நேர்கிறது. ஸ்வர்க்கத்தை அடைந்திருப்பவர்கள் இங்கே விழுகிறார்கள். ஆகையால், ஸ்வர்க்கத்தை நான் விரும்பவில்லை. எந்த இடத்திற்சென்று சோகத்தையும் மனவருத்தத்தையும் சலனத்தையும் மனிதர்கள் அடைகிறதில்லையோ, அந்த அழிவற்ற ஸ்தானத்தையே நான் தேடப்போகிறேன்' என்று சொன்னார். அந்தமுனிவர் தேவதூதனைப்பார்த்து இவ்வண்ணம் வாக்கியத்தை உரைத்து அவனை அனுப்பிவிட்டு [1] ஸிலோஞ்சவ்ருத்தியைவிட்டு உத்தமமான ஒழிவை அடைந்தார். புகழ்ச்சியையும் இகழ்ச்சியையும் ஸமமாகக் கருதுகின்றவரும் மண்ணாங்கட்டியையும் கல்லையும் பொன்னையும் ஸமமாக எண்ணுகின்றவருமாகிச் சுத்தமான ஜ்ஞானயோகத்தால் எப்பொழுதும் ப்ரம்மத்தியானத்தில் நிலைபெற்றிருந்தார். இந்திரிய ஸமூகங்களை அடக்கி ஜீவாத்மாவினிடத்தில் மனத்தைச் சேர்ப்பித்தார். சேர்க்கப்பட்டமனமுள்ள ஜீவாத்மாவைப் பரமேஸ்வரனிடத்தில் சேர்த்தார். தியானயோகத்தால் வலிமையை அடைந்து சிறந்த புத்தியையுமடைந்து அழிவற்றதும் நிர்வாணம் (=மோக்ஷம்) என்று சொல்லப்படுவதுமான சிறந்த ஸித்தியைப்பெற்றார். குந்திநந்தன! ஆகையால், நீயும் சோகத்தைப்பாராட்டத் தகுதியுள்ளவன் அல்லை. ஐஸ்வர்யத்தால் நிறைந்த ராஜ்யத்தினின்று நழுவின நீ தவத்தினால் அதனை அடைவாய். ஸுகம் முதலிலுண்டாகிறது. அதற்கு அடுத்தது துக்கம். துக்கத்திற்கு அடுத்தது ஸுகம்.

[1] 965-ம் பக்கம் குறிப்பிற் காண்க.

சக்கரத்தின்முனையை அடைந்திருக்கிற ஆரங்கள்போல ஸுகதுக்கங்கள் மனிதனை மாறி மாறி அடைகின்றன. அளவுகடந்த விக்கிரமமுள்ளவனே! பதின்மூன்று வருஷத்திற்குமேல், தகப்பன் பாட்டன்முறையாக ஆளப்பட்டுவந்திருக்கிற ராஜ்யத்தை அடைவாய். உனக்கு மனத்திலுள்ள வருத்தமானது விலகட்டும்' என்றுசொன்னார். சிறந்த புத்தியுள்ளவரான அந்த வியாஸபகவான் பாண்டவர்களுக்கு ஆனந்தத்தை உண்டுபண்ணுகிற யுதிஷ்டிரரைப் பார்த்து இவ்வண்ணமுரைத்து மீண்டுமே தவஞ்செய்வதற்காக ஆச்ரமத்தை நோக்கிச் சென்றார்" என்றார்.

வ்ரீஹித்ரௌணிக பர்வம் முற்றிற்று.

---

## இருநூற்றறுபத்துமூன்றாவது அத்யாயம்.

## த்ரௌபதீஹரணபர்வம்.

(ஒரு ஸமயம் பதினாயிரம் சிஷ்யர்களுடன் துர்வாஸமகரிஷியானவர் துர்யோதனனிடம் சென்றதும், துர்யோதனன் அவரை உபசரித்து மகிழ்வித்து அவரைப் பிராம்மணர் முதலியவர்களும் த்ரௌபதியும் போஜனம் செய்தபிறகு போஜனத்திற்காகப் பாண்டவர்களிடம் செல்லவேண்டினதும், அவர் அவனுக்கு வரங்கொடுத்துப் பாண்டவர்களிடம் சென்றதும்.)

ஜனமேஜயர், "மகாமுனிவரே! மகாத்மாக்களான அந்தப் பாண்டவர்கள், இவ்வண்ணம் வனத்தில் வஸித்துக்கொண்டு, ரிஷிகளோடுகூட விசித்திரமான கதைகளால் ஆநந்தத்தை அடைகின்றவர்களாகி அன்னத்தை விரும்பிவருகிற பிராம்மணர்களை, த்ரௌபதியின் போஜனம்வரையில் வளர்ந்துவருகின்றதும் ஸூர்யனால் கொடுக்கப்பட்டதுமான அக்ஷயபாத்திரத்திலுள்ள அன்னத்தாலும் அரண்யத்திலுள்ள மிருகங்களின் பற்பலவிதமான மாம்ஸங்களாலும் திருப்தியடையச் செய்துகொண்டிருக்கும்பொழுது, துச்சாஸனன், கர்ணன், சகுனி இவர்களுடைய அபிப்பிராயத்தில் நிலைபெற்றிருப்பவர்களும் கெட்ட எண்ணமுள்ளவர்களும் கெட்டநடையுள்ளவர்களும் திருதராஷ்டிரபுத்ரர்களுமான துரியோதனன்முதலிய அனைவரும் அந்தப்பாண்டவர்களிடம் எவ்விதம் இருந்தார்கள்? மகிமைபொருந்தியவரே! வைசம்பாயனரே! எனக்கு இதனை உரைப்பீராக" என்று வினவினார்.

வைசம்பாயனர், "மகாராஜரே! நகரத்தில் வஸிப்பவர்கள் போலக் காட்டில் ஸுகமாக வாஸம்செய்கின்ற அந்தப் பாண்டவர்களுடைய அப்படிப்பட்ட ஜீவனத்தைக் கேட்டுத் துர்யோதனன் அப்படி வஞ்சனையில் நுண்ணறிவுள்ளவர்களான அந்தக் கர்ணன் துச்சாஸனன்முதலியவர்களுடன் அந்தப் பாண்டவர்களிடம் கெடுதியைச் செய்வதற்கு விருப்பமுள்ளவனானன். கெட்ட எண்ணமுள்ளவர்களான அந்தத் திருதராஷ்டிரகுமாரர்கள் பல உபாயங்களால் அந்தப்பாண்டவர்களுக்குக் கெடுதியைச் செய்வதற்காகச் சிந்தித்துக்கொண்டிருக்கையில், தர்மத்தில் மனத்தைச் செலுத்தினவரும் சிறந்த தவமுள்ளவரும் மிகப்பெரிய புகழுள்ளவருமான துர்வாஸரென்கிற மஹரிஷியானவர் தம்மிச்சையினால் பதினாயிரம் சிஷ்யர்களோடுகூடியவராகத் துர்யோதனனை அடைந்தார். வந்தவரும் அதிககோபமுள்ளவருமான துர்வாஸமுனிவரைப்பார்த்துச் சிறந்த செல்வமுள்ளவனும் நன்கு கற்பிக்கப்பட்ட தன்மையுள்ளவனுமான துர்யோதனன் வணக்கத்தோடும் மனத்தின் அடக்கத்தோடும் தம்பிமார்களுடன் சேர்ந்து முனிவரைத் தான் செய்யும் ஆதித்தியத்தைப் பெற்றுக்கொள்ள வேண்டுமென்று பிரார்த்தித்து அழைத்தான்; வேலைக்காரன்போல நின்றுகொண்டு தானே முனிவரை விதிப்படி பூஜைசெய்தான். அந்த முனிஸ்ரேஷ்டர் சிலதினங்கள் அந்த இடத்திலிருந்தார். மஹாராஜரே! துர்யோதனராஜன் அந்தமுனிவருடைய சாபத்திற்குப் பயந்து ஆலஸ்யமில்லாமல் அல்லும்பகலும் அந்தமுனிவருக்குப் பணிவிடையைச் செய்தான். அந்தத் துர்வாஸமகரிஷியானவர், 'அரசனே! நான் பசியுள்ளவனாக இருக்கிறேன். எனக்குச் சீக்கிரமாக அன்னத்தைக்கொடு' என்றுசொல்லிவிட்டு நீராடச் சென்றார்; நெடுநேரங்கழித்துத் திரும்பிவந்தார். வந்தவுடன், 'நான் போஜனம்செய்யமாட்டேன். எனக்கு இப்பொழுது பசியில்லை' என்றுசொல்லிவிட்டு மறைந்துபோய்விட்டார்; திடீரென்றுவந்து, 'விரைவுடன் நம்மைப்புஜிப்பிப்பாயாக' என்று சொன்னார். அந்தமுனிவர் ஒருசமயத்தில் நடுஇரவில் எழுந்திருந்து வஞ்சனையில் நிலைபெற்றவராகி முன்போல அன்னத்தைச்செய்வித்து அந்த அன்னத்தைப் போஜனம்செய்யவில்லை; அந்த அன்னத்தை இகழவுமிகழ்ந்தார். அவர் அவ்விதமிருந்தும் துர்யோதனராஜன் வேறுபாட்டையும் கோபத்தையும் அடையாமலிருந்தபொழுது, முனிவர் மகிழ்ச்சியுள்ளவரானார். பரதவம்சத்தில்

உதித்தவரே! தவத்தின் பெருமையால் எவ்விதத்தாலும் அவமதிக்கமுடியாதவரான துர்வாஸமுனிவர் அந்தத்துர்யோதனனைப்பார்த்து, 'நான் வரன்களைக்கொடுப்பவனாகவிருக்கிறேன். உன் மனத்திலிருக்கிற வரத்தை வேண்டிக்கொள். உனக்கு மங்களம். நான் ப்ரீதியை அடைந்திருக்கையில், எது தர்மத்தைவிட்டு விலகாததோ அது உன்னால் அடையத்தகாததாகாது' என்று சொன்னார். பரமாத்மாவைத்தியானிப்பவரான அந்த மஹரிஷியினுடைய இந்தவசனத்தைக்கேட்டு, அந்தத்துர்யோதனன் தன்னை மீண்டும் பிறந்தவனாக எண்ணினான். முனிவர் ஸந்தோஷமுள்ளவரான போது வரம்கேட்கவேண்டுமென்று கர்ணன் துச்சாஸனன்முதலியவர்களால் முந்தியே ஆலோசிக்கப்பட்டிருந்தது. அரசரே! துர்ப்புத்தியுள்ள துர்யோதனன் பின்வருமாறு வரம்கேட்கத்தக்கதென்று நிச்சயித்து, அதிகஸந்தோஷத்தோடுகூடியவனாக, முனிவரைப்பார்த்து, 'பிராம்மணரே! தேவரீர் சிஷ்யர்களோடுகூட எனக்கு அதிதியாகவந்ததுபோலவே, எங்கள்குலத்தில் மஹாராஜனும் மூத்தவனும் மிக்க சிறப்புடையவனும் வனத்தில் வஸிப்பவனும் தர்மாத்மாவும் தம்பிமார்களால்சூழப்பட்டவனும் உத்தமகுணங்களுள்ளவனும் நன்னடையுள்ளவனுமான யுதிஷ்டிரனுக்கு அதிதியாகக்கடவீர். என்னிடத்தில் தேவரீருக்கு அனுக்கிரஹமிருக்குமேயாகில், ராஜபுத்திரியும் மெல்லியதன்மையுள்ளவளும் சிறந்த கீர்த்தியுள்ளவளும் சிறந்த நிறமுள்ளவளுமான திரௌபதியானவள் பிராம்மணர்களையும் எல்லாப்பர்த்தாக்களையும் புஜிப்பித்துத் தானும் போஜனம்செய்து களைப்பாறிக்கொண்டு ஸுகமாக உட்கார்ந்திருக்கும்பொழுது, தேவரீர் அந்த இடத்திற்குச் செல்வீராக' என்ற வரத்தை வேண்டினான். பிராம்மணோத்தமரான துர்வாஸமகரிஷியும் துர்யோதனனைப் பார்த்து, 'உன்னிடத்திலுள்ள ப்ரீதியினால் அப்படியே செய்வேன்' என்று இவ்வண்ணமுரைத்து வந்தபடியே சென்றார். துர்யோதனன் மிக்க ஸந்தோஷமுள்ளவனாகக் கர்ணனுடைய கையைத் தன் கையினால்பிடித்துக்கொண்டு தன்னை அப்பொழுது விருப்பம் நிறைவேறினவனாகவும் எண்ணினான். கர்ணனும் ப்ராதாக்களுடன் சேர்ந்திருக்கின்ற துர்யோதனராஜனைப்பார்த்து ஸந்தோஷத்துடன், 'கௌரவ! பாக்கியவிசேஷத்தால் விருப்பம் நிறைவேறியது. தெய்வாதீனமாக நீ விருத்தியடைகிறாய். பாக்கியவிசேஷத்தால் உன்னுடைய பகைவர்கள் தாண்டமுடியாத துயரக்கட

யில் முழுகிவிட்டார்கள். பாண்டுபுத்திரர்கள் துர்வாஸருடைய கோபத்தினுலுண்டானநெருப்பில் விழுந்துவிட்டார்கள். அவர்கள் தங்களுடையபாவங்களாலேயே எவ்விதத்தாலும் தாண்ட முடியாத அந்தகாரத்தை அடைந்தார்கள்' என்று சொன்னன். அரசரே! இவ்வண்ணம் வஞ்சனையில் நுண்ணறிவுள்ளவர்களான அந்தத் துர்யோதனன்முதலிய துராத்மாக்கள் சிரித்துக்கொண்டு மனத்தில் மகிழ்ச்சியுள்ளவர்களாகத் தத்தம் வீடுகளைக் குறித்துச் சென்றார்கள்.

## இருநூற்றறுபத்துநான்காவது அத்யாயம்.

## த்ரௌபதீஹரணபர்வம். (தொடர்ச்சி.)

(துர்வாஸர் அகாலத்தில் பாண்டவர்களை அடைந்து அன்னத்தை வேண்டியதும், த்ரௌபதிவேண்ட ஸ்ரீ க்ருஷ்ணன்வந்து துர்வாஸர் செய்தியறிந்து தம்பசிக்கு அன்னம் வேண்டி அன்னபாத்திரத்தை வருவித்து அதிலொட்டியிருந்த கீரையையும் பருக்கையையும் புஜித்து அதனல் துர்வாஸருக்கும் சிஷ்யர்களுக்கும் திருப்தியை உண்டுபண்ணியதும் பீமன் போஜனத்திற்காகத் துர்வாஸரை அழைக்கவே அவர் சிஷ்யர்களுடன் வெட்கி ஓடியதும்.)

பிறகு, துர்வாஸமஹரிஷியானவர் ஒரு ஸமயத்தில் அந்த வனத்தில் பாண்டவர்கள் ஸுகமாக இருக்கிறார்களென்றும் க்ருஷ்ணையும் போஜனம் செய்துவிட்டு ஸுகமாக வீற்றிருக்கிறாளென்றும் அறிந்து, பதினயிரம் சிஷ்யர்களால் சூழப்பட்டவராகப் பாண்டவர்களை நோக்கிவந்தார். வருகின்ற அந்த அதிதியைக் கண்டு, ஸ்ரீமானும் (தர்மத்தினின்று) நழுவாதவருமான யுதிஷ்டிரராஜர் தம்பிமார்களோடுகூட எதிர்கொண்டுசென்றார். இருகரங்களையும் குவித்து அவரை நமஸ்கரித்துச் சிறந்த ஆஸனத்தில் நன்றாக வீற்றிருக்கச்செய்து சாஸ்திரவிதிப்படிபூஜித்து ஆதித்தியத்தைப் பெற்றுக்கொள்ளவேண்டுமென்று அவரைக் கேட்டுக்கொண்டார். 'பகவானே! ஆஹ்னிகத்தைச் செய்துவிட்டுச் சீக்கிரம் வருவீராக' என்றும் சொன்னர். தோஷமில்லாதவரான அந்த முனிவரும், 'சிஷ்யர்களுடன்கூடின என்னை எவ்

பீமஸேனனைப்பார்த்து, 'முனிவர்களைப் போஜனம்செய்வதற்காகச் சீக்கிரம் அழைத்துவா' என்றும் சொன்னார். ராஜஶ்ரேஷ்டரே! பிறகு, பெரும்புகழுள்ளவனான பீமஸேனன் ஸ்நானம் செய்வதற்காகத் தேவநதியைநோக்கிச் சென்ற துர்வாஸர்முதலிய அந்த ரிஷிகளனைவரையும் போஜனத்தின்பொருட்டு அழைப்பதற்காக விரைந்துசென்றான். ஜலத்திலிறங்கினவர்களும் [1] அகமர்ஷண ஸூக்தங்களை ஜபிக்கின்றவர்களுமான அந்த முனிவர்கள் அன்ன ரஸத்துடன்கூடின ஏப்பங்களைக்கண்டு அதிகதிருப்தியுடன் அந்த ஜலத்தினின்று கரையேறி ஒருவரைஒருவர் பார்த்துக்கொண்டார்கள். அந்த எல்லாமுனிவர்களும், துர்வாஸமஹரிஷியைப்பார்த்து, 'பிராம்மணோத்தமரே! அரசனை அன்னத்தைச் செய்விக்கச்சொல்லி நாம் ஸ்நானத்திற்காக வந்தோம். இப்பொழுது நாம் கழுத்துவரையில் அன்னத்தால் நிறைந்து திருப்தியுள்ளவர்களாயிருக்கிறோம். எதை நாம் புஜிக்கப்போகிறோம்? வீணாக நம்மால் சமையல் செய்விக்கப்பட்டது. அந்தவிஷயத்தில் என்ன செய்யக்கடவோம்?' என்று சொன்னார்கள். துர்வாஸர், 'சமையல் வீணாக்கப்பட்டதனால் ராஜரிஷிக்குப் பெரிய குற்றம் செய்யப்பட்டது. பாண்டவர்கள் க்ரூரமானகண்ணால் பார்த்தமாத்திரத்தில் நம்மை எரிக்காமலிருக்கவேண்டுமே. பிராம்மணர்களே! உயர்ந்தபுத்தியுள்ளவரும் ராஜரிஷியுமான அம்பரீஷனுடைய மகிமையை நினைத்து, ஹரியினுடைய பாதத்தை அடுத்திருக்கிற பக்தனிடத்திலிருந்து மிகவும்பயப்படுகிறேன். பாண்டவர்களெல்லாரும் மகாத்மாக்கள்; தர்மத்தையே சரணாகக்கொண்டவர்கள்; சூரர்கள்; வேதவித்தையை நன்குகற்றறிந்தவர்கள்; வேதவ்ரதங்களை அனுஷ்டிப்பவர்கள்; தவத்தில்நிலைபெற்றிருப்பவர்கள்; ஸதாசாரத்தில் பற்றுள்ளவர்கள்; நித்யம் வாஸுதேவரையே கதியாக அடைந்தவர்கள். அவர்கள் கோபித்துக்கொள்வார்களாகில், நெருப்பு பஞ்சுக்குவியலை எரிப்பதுபோல நம்மை மிச்சமின்றி எரித்துவிடுவார்கள். ஆகையால், சிஷ்யர்களே! இவர்களிடம் சொல்லிக்கொள்ளாமலே நீங்கள் விரைவாக ஓடிவிடுங்கள்' என்று சொன்னார்.

இவ்வாறு குருவானமுனிவரால் அப்பொழுது சொல்லப்பட்ட அந்தப்பிராம்மணர்களெல்லாரும் பாண்டவர்களிடமிருந்து மிகப்பயந்தவர்களாகப் பத்துத்திசைகளிலும் ஓடினார்கள். பீமஸேனன் தேவநதியில் முனிஶ்ரேஷ்டர்களைக் காணாமல் அந்த

---

[1] பாவங்களைப்போக்கும் வேதமந்திரங்களின் தொகுதி.

நதியினுடைய துறைகளில் இங்குமங்கும் தேடிக்கொண்டு திரிந்தான். அந்த இடத்திலிருக்கிற தாபதர்களிடமிருந்து அவர்கள் ஓடிவிட்டார்களென்பதைக்கேட்டு, பிறகு, யுதிஷ்டிரரிடம்வந்து அந்தச் செய்தியைத் தெரிவித்தான். பிறகு, அந்தப்பாண்டவர்களனைவரும் அவர்கள் திரும்பிவருதலை விரும்பிச் சிறிதுகாலம் எதிர்பார்த்துக்கொண்டு மனஅடக்கத்துடன் இருந்தார்கள். 'நடுஇரவில் திடீரென்றுவந்து அவர் நம்மை வஞ்சிப்பார். தெய்வத்தாலேற்படுத்தப்பட்டிருக்கிற இந்தக்கஷ்டத்தினின்று எவ்வாறு கரையேறுவோம்?' என்று கவலையுற்று அடிக்கடி பெருமூச்சு விடுகின்ற பாண்டவர்களைக்கண்டு இணைபிரியாதலக்ஷ்மியுடன் கூடின ஸ்ரீ கிருஷ்ணன் நேரில்வந்து அவர்களைப்பார்த்து, 'பார்த்தர்களே! மகாகோபமுள்ளவரான ரிஷியினிடத்தினின்று உங்களுக்குநேர்ந்த ஆபத்தை அறிந்து திரௌபதியினால் சிந்திக்கப்பட்ட நான் விரைவுடன் வந்தேன். அந்தத் துர்வாஸரிஷியினிடத்தினின்று உங்களுக்குப் பயம் சிறிதுமில்லை. உங்களுடைய தேஜஸால் பயந்து முந்தியே அவர் ஓடிவிட்டார். தர்மத்தில் நிலைபெற்றவர்களாக இருக்கிறவர்கள் ஒருஸமயத்திலும் வருத்தமடைகிறதில்லை. உங்களிடம் விடைபெற்றுச்செல்வேன். உங்களுக்குத் தவறாமல் மங்களமுண்டாகட்டும்' என்று சொன்னார்.

கேசவரால் சொல்லப்பட்ட வசனத்தைக்கேட்டு த்ரௌபதியுடன்கூடின பார்த்தர்கள் நல்லநிலைமையை அடைந்தவர்களானார்கள். மனக்கவலை நீங்கினவர்களாக அந்தக்கிருஷ்ணனைப்பார்த்து, 'கோவிந்தரே! பிரபுவே! பெருங்கடலில் முழுகுகிறவர்கள் தெப்பத்தை அடைந்து கடலைக்கடப்பதுபோலத் தாண்டமுடியாத ஆபத்தை அடைந்து நாதரான உம்மால் அந்த ஆபத்தைத் தாண்டினோம். க்ஷேமமாகச் செல்லக்கடவீர். உமக்கு மங்களம்' என்று அனுமதி கொடுக்கப்பட்டவராகத் தம்நகரியைக்குறித்துச் சென்றார். மகா பாக்யமுள்ளவரே! பிரபுவே! பாண்டவர்களும் த்ரௌபதியுடன் மிக்கமனக்களிப்படைந்து காடுகள்தோறும் விளையாடிக்கொண்டு வஸித்துவந்தார்கள். அரசரே! உம்மால் இப்பொழுது நான் எதைப்பற்றி வினவப்பட்டேனோ அது உமக்கு உரைக்கப்பட்டது. வனத்தில் வஸிக்கின்ற பாண்டவர்களிடம் துராத்மாக்களான திருதராஷ்டிரகுமாரர்களால் செய்யப்பட்ட இவ்விதத் தீங்குகள் பயனற்றவைகளாயின.

---

## இருநூற்றறுபத்தைந்தாவது அத்யாயம்.

## த்ரௌபதீஹரணபர்வம். (தொடர்ச்சி.)

(பாண்டவர் ஐவரும் வேட்டைக்குப் போயிருக்கையில் பரிவாரங்களுடன் சென்ற ஜயத்ரதன் வழியில் அவர்களுடைய ஆஶ்ரமத்தில் நுழைந்ததும், அவன் திரௌபதியைப் பார்த்து மனங் கலங்கி அவளுடைய வரலாற்றை அறிய விரும்பிக் கோடிகாஶ்யனை அனுப்பியதும்.)

ஏராளமான மிருகங்களோடுகூடின அந்தக்காம்யகவனத்தில் திரிகின்றவர்களும் மகாரதர்களுமான அந்தப் பரதஶ்ரேஷ்டர்கள் தேவர்கள் ஸ்வர்க்கத்தில் விளையாடுவதுபோல விளையாடினார்கள். இந்திரனுக்கொப்பானவர்களும் பகைவர்களைக் கொல்பவர்களும் வேட்டையாடுவதையே ஸ்வபாவமாகக் கொண்டவர்களுமான பாண்டவர்கள் எல்லாப்பக்கங்களிலும் பலவிதமான வனப்ரதேசங்களையும் பருவத்தால் ரமணீயமாக இருப்பவைகளும் நன்கு பூத்திருப்பவைகளுமான வன ஸமூகங்களையும் பார்த்துக்கொண்டு அந்தப் பெரிய வனத்தில் சிறிதுகாலம் விளையாடினார்கள். பிறகு, பகைவர்களைவாட்டுபவர்களான அந்தப் புருஷஶ்ரேஷ்டர்களெல்லாரும் பிராம்மணர்களுக்காக வேட்டையாடும்பொருட்டு மஹரிஷியும் ஜ்வலிக்கின்ற தவமுள்ளவருமான த்ருணபிந்துவும் புரோகிதரான தௌம்யருமாகிய இவர்களுடைய கட்டளையினால் த்ரௌபதியை ஆஶ்ரமத்தில் இருக்கச் செய்து ஒரேஸமயத்தில் நான்கு திசைகளிலும் சென்றார்கள். பிறகு, மிக்ககீர்த்தியுள்ளவனும் விருத்தக்ஷத்ரனுடைய குமாரனும் அந்த ஸிந்துதேசாதிபதியுமான ஜயத்ரதன் அப்பொழுது விவாஹம் செய்துகொள்ள வேண்டுமென்கிற விருப்பமுள்ளவனாக ஸால்வதேசத்தைக்குறித்துச் சென்றுகொண்டிருந்தான். அவன் அரசர்களுக்குத்தக்க பெரியவையான குடை, சாமரம், சேனைகள், வாகனங்கள் முதலிய பரிவாரங்களால் சூழப்பட்டவனாக அனேக மன்னர்களோடு காம்யகவனத்தை அடைந்தான். ஜனங்களில்லாத அந்தக் காட்டில் ஆஶ்ரமத்தின் வாயிலில் நிற்பவளும் நல்லபுகழுள்ளவளும் பாண்டவர்களுடைய அன்புள்ள மனைவியும் சரீரத்தால் அதிகமாகப் பிரகாசிப்பவளும் உத்தமமான ரூபத்தைத் தரிக்கின்றவளும் கருமையான மேகத்தை விளங்கச் செய்கின்ற மின்னல்போலக் காட்டிடங்களை விளங்கச் செய்கின்றவளுமான திரௌபதியைப் பார்த்தான். 'இவள் அப்ஸரஸோ?

தேவகன்னிகையோ? அல்லது, தெய்வத்தினால் ஏற்படுத்தப்பட்ட மாயையோ?' என்று நினைத்து எல்லாரும் கைகுவித்துக்கொண்டு சிறந்த அழகுள்ளவளான அந்தப் பாஞ்சாலியைக் கண்டார்கள். பிறகு, ஸிந்துதேசத்திற்கு அரசனும் வ்ருத்தக்ஷத்ரனுடைய குமாரனுமான அந்த ஜயத்ரதன், ஆச்சர்யத்தை அடைந்து, தோஷமில்லாத அங்கங்களுள்ளவளான அந்த த்ரௌபதியைப் பார்த்துக் கெட்ட எண்ணமுள்ளவனாகவும் காமனால் மதிமயக்கமுற்றவனாகவும் கோடிகாஸ்யனென்கிற அரசனை நோக்கி, 'தோஷமில்லாத அங்கங்களுள்ள இந்தமாது யாரைச்சேர்ந்தவள்? ஒருகால், இவள் மானிடப் பெண்ணாயிராமற்போனால் அதிக ஸௌந்தர்யமுள்ளவளான இவளைப்பார்த்து எனக்கு விவாஹரூபமான பிரயோஜனம் யாதொன்றும் ஏற்படாது. நான் இவளை எடுத்துக்கொண்டே என்னுடைய வீட்டுக்குச் செல்லப்போகிறேன். அப்பா! போ. இவளைப்பற்றித் தெரிந்துகொள். இவள் எவனுடைய மனைவி? இந்த இடத்திற்கு எங்கிருந்து வந்திருக்கிறாள்? அழகிய புருவங்களுள்ள இந்த மாது. முட்களால் நிறைந்த இந்த வனத்திற்கு எதற்காக வந்திருக்கிறாள்? [1] சிறந்த இடையுள்ளவளும் லோகஸுந்தரியும் நீண்ட கடைக்கண்களையுடையவளும் அழகிய பற்களுள்ளவளும் மெலிந்த இடையுள்ளவளுமான இந்தப் பெண் இப்பொழுது என்னை ப்ரீதியோடு அடைவாளா? இந்த உத்தம ஸ்திரீயை அடைந்து நான் விருப்பம் நிறைவேறினவனாவேனா? கோடிகா! போ. இவளுக்கு நாதன் யார் என்றே அறிவாயாக' என்று சொன்னான். குண்டலங்களை அணிந்த அந்தக் கோடிகாஸ்யன், அந்த வசனத்தைக் கேட்டு, அப்பொழுது ரதத்தினின்று கீழே குதித்து, நரியானது பெண்புலியினருகிற் செல்வதுபோல, அந்தப் பெண்ணினருகிற் சென்று பின்வருமாறு வினவலானான்.

---

## இருநூற்றறுபத்தாறுவது அத்யாயம்.

## த்ரௌபதீஹரணபர்வம். (தொடர்ச்சி.)

(கோடிகாஸ்யன் திரௌபதியை அணுகி அவளுடைய தகப்பன் கணவன் குலமுதலியவைகளை வினவியது.)

கோடிகன், 'அழகிய புருவங்களுள்ளவளும், காற்றினால் மிக அசைக்கப்படுகின்றதும் இரவில் மிகவும் பிரகாசத்துடன் கூடியது

---

[1] 'வராரோஹா' என்பது மூலம்.

மான அக்னிஜ்வாலைபோலப் பிரகாசிப்பவளுமான நீ யார்? கடப்பமரத்தின் கிளையை வணக்கிக்கொண்டு ஏன் ஆஸ்ரமத்தில் நிற்கிறாய்? நீ மிக்க அழகுள்ளவளாக இருக்கிறாய். அரண்யங்களில் எப்படி பயப்படாமலிருக்கிறாய்? நீ தேவஸ்த்ரீயோ? இயக்கியோ? தானவப் பெண்ணோ? சிறந்த அப்ஸரஸோ? சிறந்த தைத்யப் பெண்ணோ? நல்லதேகமுள்ள நாகராஜ கன்னிகையோ? காட்டில் ஸஞ்சரிக்கின்ற ராக்ஷஸ ஸ்த்ரீயோ? நீ தேவராஜனுடைய பத்னியோ? வருணனுடைய பத்னியோ? யமன், சந்திரன், குபேரன், [1] தாதா, விதாதா, பிரபுவான சூரியன், இந்திரன் இவர்களுடைய மாளிகையினின்று நீ இந்த அரண்யத்திற்கு வந்திருக்கிறாயோ? நாங்கள் எவர்களென்பதை நீ கேட்கவில்லை. இந்த வனத்தில் உன்னுடைய நாதனை நாங்கள் அறியவில்லை. கல்யாணி! உன்னுடைய கௌரவத்தை வளரச்செய்துகொண்டு வினவுகிறோம். உன்னுடைய பிரபுவான பிதாவையும் உறவினர்களையும் பதியையும் குலத்தையும் ஜாதியையும் இந்த வனத்தில் செய்கிற காரியத்தையும் சொல்வாயாக. சிறந்த தொடையுள்ளவளே! நான் ஸுரதனென்கிற அரசனுடைய குமாரன். மனிதர்கள் என்னைக் கோடிகாஸ்யனென்று அறிகிறார்கள். நான் இந்திரியங்களை அடக்கினவன்; ஸத்தியத்தில் பற்றுள்ளவன்; ஞானத்தினால் முதிர்ந்தவர்களை உபாஸித்தவன். குருக்களைப் பூஜிப்பவன். பொன்போன்ற மேனியுள்ளவளே! குண்டத்தில் ஹோமம் செய்யப்பட்டிருக்கிற அக்னி போல ரதத்தில் பிரகாசித்துக்கொண்டிருப்பவனும் கமலங்கள் போல அகன்றும் மலர்ந்துமிருக்கிற கண்களுள்ளவனுமான இந்த வீரன் திரிகர்த்ததேசத்து அரசன்; க்ஷேமங்கரனென்கிற பெயருள்ளவன். பெரிய வில்லைக் கையிலேந்தியவனும் இவனைக்காட்டிலும் வேறாக இருப்பவனுமான இந்த வீரன் மிக்க சிறப்புடையவனான குளிந்தாதிபதியினுடைய புத்திரன். அகன்றும் நீண்டுமிருக்கிற கண்களுள்ளவனும் நல்ல மலர்களைச் சூட்டிக்கொண்டிருப்பவனும் பர்வதத்தில் நித்யவாஸம் செய்பவனுமான இந்த ராஜகுமாரன் உன்னைப் பார்க்கிறான். அழகிய மேனியுள்ளவளே! கருமை நிறமுள்ளவனும் யௌவனமுள்ளவனும் இனிய தோற்றமுள்ளவனும் புஷ்கரிணியின் ஸமீபத்திலிருக்கிறவனும் பகைவர்களைக் கொல்பவனுமான இந்த வீரன் இக்ஷ்வாகு குலத்தரசன்;

---

[1] 'தாதா—பிரஜாதிபதி' என்றும், 'விதாதா—கஸ்யபர்' என்றும் கூறுவது பழையவுரை.

ஸுபலனுடைய புத்திரன். கல்யாணி! எவனுடைய படையெடுப்புத்தோறும் ஸௌவீரதேசத்தைச் சார்ந்தவர்களான அங்காரகன், குஞ்சரன், குப்தகன், சத்ருஞ்சயன், ஸஞ்சயன், ஸுப்ரவ்ருத்தன், ப்ரபங்கரன், ப்ரமரன், ரவி, சூரன், ப்ரதாபன், குகனன் என்கிற பன்னிரண்டு ராஜகுமாரர்கள் த்வஜத்துடன் கூடினவர்களாக யாகங்களில் ஜ்வலிக்கின்ற அக்னிகள்போல அனைவரும் சிவந்த குதிரைகள் பூட்டின ரதங்களிலேறிக்கொண்டு செல்லுகிறார்களோ, எவனை ஆறாயிரம் தேராளிகளும் யானைகளும் குதிரைகளும் [1] பதாதிகளும் பின்தொடர்ந்து செல்லுகிறார்களோ அப்படிப்பட்ட இந்த [2] ஸௌவீரதேசாதிபனான ஜயத்ரதனென்பவன் உன்னால் கேட்கப்பட்டிருக்கலாம். தளராத மனமுள்ளவர்களான வலாஹகன், அநீகவிதாரணன் முதலிய அவனுடைய மற்றப்ராதாக்களும், மிகச் சிறப்புற்றவர்களும் யௌவனமுள்ளவர்களும் பலசாலிகளுமான இந்த ஸௌவீரவீரர்களும் அரசனான ஜயத்ரதனைப் பின்தொடர்ந்து செல்லுகின்றார்கள். தேவகணங்களால் நாற்புறங்களிலும் பாதுகாக்கப்பட்ட இந்திரன்போல இந்தத் துணைவீரர்களால் பாதுகாக்கப்பட்டவனாக ஜயத்ரதராஜன் அருகிற்செல்லுகிறான். அழகிய கூந்தலுள்ளவளே! நீ யாருடைய பார்யை? யாருடைய புதல்வி? அறியாதவர்களான எங்களுக்கு இந்த விஷயத்தை வெளிப்படுத்துவாயாக' என்று கூறினான்.

---

## இருநூற்றறுபத்தேழாவது அத்யாயம்.

## த்ரௌபதீஹரணபர்வம். (தொடர்ச்சி.)

(திரௌபதி தன்னுடைய பிறப்பு முதலியவற்றைக் கோடிகாஸ்யனுக்குக் கூறியது.)

பிறகு, சிபிகளுள் சிறந்தவனான அந்தக் கோடிகாஸ்யனால் வினவப்பட்ட ராஜபுத்திரியான திரௌபதியானவள் அவனைப் பார்த்து மெதுவாகக் கிளையை விட்டுவிட்டு வெண்பட்டினாலாகிய மேலாடையை நன்கு இழுத்துப் போர்த்துக்கொண்டு, 'ராஜபுத்திரனே! என்னைப்போன்றவள் உன்னுடன் பேசுதற்குத் தகுதியுள்ளவளாகாளென்பதை நான் புத்தியினால் தெரிந்துகொண்டிருக்கி

[1] 'கால்களாலேயே எப்பொழுதும் செல்லும் தன்மையுடையவர்கள்' என்பது பழையவுரை. [2] இது ஸிந்துதேசத்தைச் சார்ந்தது.

றேன். ஆயினும், இந்த இடத்தில் இந்தச்சமயத்தில் உனக்கு மறுமொழி கூறுவதற்கு வேறு ஆண்பிள்ளையாவது பெண்பிள்ளையாவது இல்லை. நான் இப்பொழுது தனிமையாக இருக்கிறேன். அதனால், உனக்கு மறுமொழி சொல்லவேண்டியவளாகிறேன். [1] ஐயா! இதனை நீ தெரிந்துகொள்வாயாக. ஸ்வதர்மத்தில் நிலைபெற்றிருக்கிற நான் அரண்யத்தில் தனித்திருந்துகொண்டு தனித்திருக்கிற உன்னோடு எவ்வாறு பேசுவேன்? மனிதர்கள் கோடிகாஸ்யனென்கிற பெயருள்ளவனென்று அறிகின்ற நீ ஸுரதனுடைய புத்திரனென்பது எனக்குத்தெரியும். சிபிவம்சத்தில் பிறந்தவனே! ஆகையால், நான் அப்படியே உனக்கு என்னுடைய பந்துக்களையும் பிரஸித்தமான குலத்தையும் சொல்லுகிறேன். சைப்ய! நான் துருபதராஜனுடைய புத்திரி. மனிதர்கள் என்னை க்ருஷ்ணையென்னும் பெயருள்ளவளென்று அறிவார்கள். அப்படிப்பட்ட நான் காண்டவப்ரஸ்தத்திலிருந்தவர்களாக உன்னால் கேட்கப்பட்ட ஐந்து புருஷர்களைப் பதிகளாக வரித்திருக்கிறேன். யுதிஷ்டிரரும், பீமஸேனரும், அர்ஜுனரும், மாத்ரீபுத்திரர்களும் புருஷஶ்ரேஷ்டர்களுமான (நகுலஸஹதேவர்களுமாகிய) அவர்கள் என்னை இந்தக் கானகத்திலிருக்கச்செய்து வேட்டையாடுவதற்காக நான்கு திக்குக்களையும் பகுத்துக்கொண்டு சென்றிருக்கிறார்கள். அரசர் கீழ்த்திசையையும் பீமஸேனர் தென்திசையையும் அர்ஜுனர் மேல்திசையையும் நகுல ஸஹதேவர்கள் வட திசையையும் குறித்துச் சென்றிருக்கிறார்கள். தேராளிகளில் சிறந்தவர்களான அவர்கள் இந்த இடத்தைவிட்டுச் சென்று நெடுநேரமாகிவிட்டது. அவர்கள் இந்த இடத்திற்கு வரும் நேரமாகிவிட்டதென்று நினைக்கிறேன். வாகனங்களைவிட்டு இறங்குங்கள். அவர்களால் உபசரிக்கப்பட்டு இஷ்டப்படி செல்லுவீர்கள். அதிதிகளிடத்தில் ப்ரீதியுள்ளவரும் மகாத்மாவுமான தர்மபுத்திரர் உங்களைப்பார்த்து ப்ரீதியுள்ளவராவார்' என்று சொன்னாள். சந்திரன்போன்ற முகமுள்ளவளும் பிரஸித்திபெற்றவளுமான அந்த த்ருபதராஜகுமாரியானவள் சைப்யகுமாரனைப் பார்த்து இவ்வளவுமாத்திரம் சொல்லிவிட்டு, அவர்களுக்கு ஆதித்யம் செய்யவேண்டிய தன்கடமையை நினைத்து அந்தச் சிறந்த பர்ணசாலையில் பிரவேசித்தாள்.

[1] 'ஸஉ' என்பது மூலம். இது மரியாதையாக அழைக்கும் ஒரு சொல்.

## இருநூற்றறுபத்தேட்டாவது அத்யாயம்.

## த்ரௌபதீஹரணபர்வம். (தொடர்ச்சி.)

(கோடிகாஸ்யனிடத்தினின்று திரௌபதியின் வரலாற்றை அறிந்த ஜயத்ரதன் அவளை அணுகித் தனக்கு மனைவியாகும்படி வேண்டியது.)

பாரதரே! அந்த அரசர்களனைவரும் அவ்வாறு உட்கார்ந்திருக்கும்பொழுது, கோடிகாஸ்யன் ஸிந்துராஜனிருப்பிடத்தைக் குறித்து விரைவாகச் சென்றான்; திரௌபதியினால் சொல்லப்பட்டவையும் அர்த்தத்துடன் கூடினவையுமான அனைத்தையும் தெரிவித்தான். கோடிகாஸ்யனுடைய சொல்லைக்கேட்டு ஜயத்ரதன் அவனைப்பார்த்து, 'சைப்ய! இவள் வாய்திறந்து பேசும்பொழுதே என் மனம் ரமிக்கிறதே. பெண்கள்நாயகமான இவளிடமிருந்து எவ்வாறு நீ திரும்பினாய்? மிக்க புஜபலமுள்ளவனே! இந்தமங்கையைப் பார்த்த என் மனத்துக்கு மற்றப் பெண்கள் பெண்குரங்குகள்போலத் தோன்றுகிறார்கள். இதனை உனக்கு உண்மையாகச் சொல்லுகிறேன். பார்த்ததினாலேயே அவளால் என் மனம் அதிகமாகக் கவரப்பட்டது. சைப்ய! அந்தக் கல்யாணி மானிடப் பெண்ணாயிருந்தால் அவளைப்பற்றி நன்றாகச் சொல்' என்று வினவ, கோடிகாஸ்யன், 'சிறந்த கீர்த்தியுள்ளவளான இந்தப்பெண் த்ருபதராஜகுமாரி; க்ருஷ்ணை என்கிற பெயருள்ளவள். பாண்டுபுத்திரர்களைவருக்கும் மிகவும் மனத்துக்கு இனிய மஹிஷி. பதிவ்ரதையான இவள் எல்லாப் பார்த்தர்களுக்கும் மதிப்புக்குரிய மனைவி. ஜயத்ரத! நீ அவளோடுசேர்ந்து ஸௌவீரதேசத்தை நோக்கிச்செல்வாயாக' என்று சொன்னான்.

இவ்வாறு சொல்லக்கேட்டவனும் ஸௌவீரதேசத்துக்கும் ஸிந்துதேசத்துக்குமதிபதியும் கெட்ட எண்ணமுள்ளவனுமான ஜயத்ரதன், 'த்ரௌபதியை நான் பார்க்கிறேன்' என்று மறுமொழி கூறினான். ஆறுவீரர்களுடன்சேர்ந்து ஏழாமவனாக இருக்கிற அந்த ஜயத்ரதன், சிங்கமிருக்கும்குகையில் ஓநாய் நுழைவதுபோலப் புண்யமான ஆஸ்ரமத்தில் நுழைந்து, திரௌபதியைப்பார்த்து, 'சிறந்த இடையுள்ளவளே! உனக்கு மங்களம். உன்னுடைய பர்த்தாக்கள் [1] அநாமயமுள்ளவர்களாக இருக்கிறார்களா? எவர்

[1] இது க்ஷத்ரியர்களை க்ஷேமம் விசாரிக்கும் முறை; 581-ம் பக்கம் குறிப்பிற் காண்க.

களுடையக்ஷேமத்தில் நீ விருப்பமுள்ளவளாக இருக்கிறாயோ அவர்களும் அநாமயமுள்ளவர்களாக 'இருக்கிறார்களா?' என்று வினவினான். திரௌபதியானவள், 'அரசனே! உன்னுடைய நாட்டிலும் கோசத்திலும் சேனையிலும் க்ஷேமமா? செல்வத்தால் நிறைந்த சிபிதேசத்தையும் ஸிந்துதேசத்துடன் ஸௌவீரதேசத்தையும் இன்னும் உன்னாலடையப்பட்ட மற்றத்தேசங்களையும் நீ ஒருவனே தர்மத்தினால் பாதுகாக்கிறாயா? குருவம்சத்திலுதித்தவரும் குந்தியின்புதல்வருமான யுதிஷ்டிரமகாராஜர் க்ஷேமமாக இருக்கிறார். நான் ஸுகமாக இருக்கிறேன். இந்தயுதிஷ்டிரருடைய பிராதாக்களும் மற்ற எவர்களைப்பற்றிக் குசலப்ரச்னம் பண்ணுகிறாயோ அவர்களும் ஸுகமாக இருக்கிறார்கள். ராஜகுமார! பாத்யத்தையும் இந்தஆஸனத்தையும் பெற்றுக்கொள்வாயாக. ஆண்மான்களையும் பெண்மான்களையும் உனக்குக் காலையாகாரமாகக் கொடுக்கிறேன். குந்திபுத்திரரானயுதிஷ்டிரர் உனக்கு ஏணமான்குட்டிகளையும் புள்ளிமான்களையும் ந்யங்குமான்களையும் ஹரிணமான்களையும் சரபங்களையும் முயல்களையும் கரடிகளையும் ருருமான்களையும் சம்பரமான்களையும் கவயங்களையும் பல மிருகங்களையும் பன்றிகளையும் காட்டெருமைகளையும் இன்னும் வேறுஜாதிமிருகங்களையும் தாமாகவே கொடுப்பார்' என்று சொன்னாள். ஜயத்ரதன், 'என்னுடைய காலைச் சாப்பாட்டுக்குக் குறையொன்றுமில்லை. உன்னால் எனக்கு எல்லாம் கொடுப்பதற்கு விரும்பப்பட்டிருக்கிறது. வா; என் ரதத்தில் ஏறு; ஸுகத்தையே அடை. செல்வத்தை இழந்தவர்களும் ராஜ்யத்தை இழந்தவர்களும் தரித்திரர்களும் புத்தியில்லாதவர்களும் காட்டில் வஸிப்பவர்களுமான பார்த்தர்களை அநுஸரிப்பதற்கு நீ தகுதியுள்ளவளல்லை. கற்றறிந்த ஸ்திரீகள் செல்வத்தை இழந்தவனைப் பர்த்தாவாக உபயோகித்துக்கொள்ளுகிறதில்லை. செல்வத்தோடிருப்பவனைச் சேரவேண்டும். செல்வத்துக்கு அழிவு வரும் பொழுது அவனிடத்தில் வஸிக்கக்கூடாது. உன்னுடைய பர்த்தாக்கள் செல்வமற்றவர்களானார்கள். அநேக வர்ஷகாலங்களாக ராஜ்யத்தினின்றும் விலகிவிட்டார்கள். பாண்டுபுத்திரர்களிடத்திலுள்ள பக்தியினால் நீ க்லேசத்தை அநுபவிக்கவேண்டாம். அழகிய பின்தட்டுக்களுள்ளவளே! எனக்கு நீ பார்யையாகிவிடு; இவர்களை விட்டு விடு. ஸுகத்தை அடைவாயாக. நீ என்னுடன்கூடி ஸிந்துதேசத்தையும் ஸௌவீரதேசத்தையும்

முழுமையும் அடைவாயாக' என்று சொன்னான். ஸிந்துராஜனால் இவ்வாறு மனம் நடுங்கக்கூடிய வசனத்தை உரைக்கக்கேட்ட திரௌபதியானவள், புருவநெரித்தலுடன்கூடின முகமுள்ளவளாக அந்த இடத்தினின்று விலகினாள். அழகிய இடையுள்ள திரௌபதியானவள் ஸைந்தவனுடைய அந்த வாக்கியத்தை அவமதித்தும் மறுத்தும், 'இப்படியன்று; வெட்கத்தையடை' என்று அவனைப் பார்த்து உரைத்தாள். இகழத்தகாதவளான அந்த க்ருஷ்ணையானவள் பார்த்தர்களுடைய வரவை விரும்புகின்றவளாக அந்த ஸைந்தவனுடைய சொற்களுக்கு மறுமொழி உரைத்துக்கொண்டு அதிகமாகக் காலதாமதம்செய்தாள். திரௌபதி, 'மகாபாகுபலமுள்ளவனே! நீ இவ்வண்ணம் சொல்லாதே. நீ நியாயத்தை விட்டு விலகாதமார்க்கத்தை நினைக்கவில்லை. துச்சலையென்பவள் பாண்டவர்களுக்கும் தார்த்தராஷ்டிரர்களுக்கும் இளையஸஹோதரி. ராஜகுலத்தைத்தாங்குபவனே! அந்தத் துச்சலைக்கு நீ கணவன். எனக்கும் நீ முறையினால் ப்ராதா. மகாரதனே! உன்னால் நான் பாதுகாக்கப்படத்தக்கவள். தர்மிஷ்டர்களுடைய குலத்தில் பிறந்திருக்கிற நீ தர்மத்தைப் பார்க்கவில்லை' என்று சொன்னாள். இவ்வண்ணம் சொல்லக்கேட்ட ஸிந்துராஜன், பிறகு, திரௌபதியைப்பார்த்து, 'நீ அரசர்களுடைய தர்மத்தை அறியவில்லை. வித்வான்கள் இந்த உலகத்தில் ஸ்திரீகளையும் ரத்தினங்களையும் எல்லாருக்கும் பொதுவென்று சொல்லுகிறார்கள். அரசர்கள் ஸஹோதரிகளையும் ஸஹோதரிகளின் புத்திரிகளையும் அப்படியே ப்ராதாக்களின் மனைவிகளையும் ஸுகமாக எடுத்துக் கொள்ளுகிறார்கள். அரசர்களிடத்தினின்று பிறந்திருப்பவர்களான அந்தப்பெண்களும் அந்தவிஷயத்தில் அப்படியே செய்கிறார்கள்' என்று மறுமொழி உரைத்தான்.

---

## இருநூற்றறுபத்தோன்பதாவது அத்யாயம்.

## த்ரௌபதீஹரணபர்வம். (தொடர்ச்சி.)

**(த்ரௌபதி தன்னிடம் காதல்கொண்ட ஜயத்ரதனை நிந்தித்ததும், தன் முன்தானையை வலியப் பிடித்திழுத்த அவனை விலக்கித் தள்ளியதும், பின்னும் அவன் விடாமலிழுக்க அவள் அந்தரதத்தில் ஏறினதும்.)**

த்ருபதராஜகுமாரியானவள், பிறகு, கோபத்தால் சிவந்ததும் வாடியதும் அழகியதும் சிவந்த கண்களுள்ளதும் வளைந்த

மேலேறிய புருவங்களுள்ளதுமான முகத்தால் சிறிக்கொண்டு ஸௌவீரதேசாதிபதியான அந்த ஜயத்ரதனைப்பார்த்து மீண்டும் உரைக்கலானாள். 'மூடா! சிறந்த கீர்த்தியுள்ளவர்களும் கொடிய விஷம்போன்றவர்களும் மஹேந்திரனுக்கொப்பானவர்களும் தம் முடைய காரியங்களில் விடாமுயற்சியுள்ளவர்களும் யக்ஷர்கள் ராக்ஷஸர்கள் இவர்களுடைய கூட்டங்களிலும் (சண்டையில்) அசைவற்று நிற்பவர்களுமான மஹாரதர்களைப்பற்றி இகழ்வான வசனங்களைச் சொல்லுகின்ற நீ எவ்வாறு லஜ்ஜையை அடையாமலிருக்கிறாய்? சிறந்தவீரனே! (பாவத்தினின்று நெடுந்தூரம் விலகிச் செல்பவர்களான) ஆர்யர்கள் காட்டில் ஸஞ்சரிப்பவனாக இருந்தாலும் வீட்டில் மனைவியுடன் சேர்ந்திருப்பவனாயிருந்தாலும் கல்விநிரம்பின தவசியைப்பற்றி ஒருவிதமான தோஷத்தையும் சொல்லமாட்டார்கள். நல்லமனிதர்கள் அவனை இவ்வண்ணம் ப்ரீதியுடன் அடைகிறார்கள். பெரியபடுகுழியில் விழுகின்ற உன்னை இப்பொழுது கையில்பிடித்துத் தடுக்கக்கூடிய மனிதன் இந்த அரசர்கூட்டத்தில் உனக்கு ஒருவனுமில்லை என்று நான் நினைக்கிறேன். நீ தர்மராஜரை ஜயிப்பதற்கு விரும்புவது தண்டத்தைமட்டும் ஆயுதமாகக்கொண்டு மதப்பெருக்குள்ளதும் மலையின் சிகரத்திற்கொப்பானதும் இமயமலையின் தாழ்வரையில் ஸஞ்சரிப்பதுமான யானையை யானைக்கூட்டத்தினின்றுவிலக்கி இழுப்பதுபோலிருக்கிறது. நன்றாக உறங்கிக்கொண்டிருப்பதும் அதிகபலமுள்ளதுமான சிங்கத்தைக் காலால் மிதித்துக்கொண்டு அதன் முகத்தினின்று இமைமயிர்களை அறியாமையால் பிடித்திழுக்கிறாய். கோபித்துக்கொண்டிருக்கிற பீமஸேனரை நீ பார்த்தவுடன் ஓடிவிடுவாய். கோபங்கொண்டவரும் உக்கிரமானவருமான அர்ஜுனரை எதிர்த்துப்போர்புரியப்போகிற நீ மகாபலமுள்ளதும் மிக்ககோரமானதும் மிகவளர்ந்ததும் இளமைப்பருவத்திலிருப்பதும் மலைகளின்குகைகளில் உறங்கிக்கொண்டிருப்பதும் கொடியதுமான சிங்கத்தைக் கால்நுனியினால் மிதிக்கிறாய். கடைசியில் பிறந்தவர்களும் புருஷஸ்ரேஷ்டர்களுமான நகுலஸஹதேவர்களோடு யுத்தம்செய்யவிரும்புகிற நீ மதங்கொண்டவனாகிக் கடுமையானமுகமுள்ளவைகளும் இரண்டுநாவுள்ளவைகளுமான இரண்டுகருநாகங்களைக் காலால் வாலில் மிதிக்கிறாய். மூங்கிலும் வாழையும் கோரையும் எவ்வாறு தம்நாசத்தின்பொருட்டுப் பலிக்கின்றனவோ, தம்நன்மையின்பொருட்டுப் பலிக்கிறதில்லையோ,

பெண்நண்டு (எவ்வாறு தன்நாசத்தின்பொருட்டுக்) கர்ப்பத்தை (த்தரிக்கிறதோ) அவ்வாறே அந்தப்பாண்டவர்களால் எல்லாப்பக்கங்களிலும் பாதுகாக்கப்படுகின்ற என்னை (உன்விநாசத்தின் பொருட்டு) எடுக்கப்போகிறாய்' என்றுசொன்னாள்.

ஜயத்ரதன், 'கிருஷ்ணையே! நான் அறிவேன். அந்தராஜகுமாரர்கள் எவ்வித ஸ்வபாவமுள்ளவர்களென்பது என்னால் அறியப்பட்டிருக்கிறது. உன்னால் இப்பொழுது இவ்விதமான இந்தப் பயத்தை உண்டுபண்ணுகிறவசனத்தால் நாங்கள் பயத்தை அடையச்செய்வதற்கு ஸாத்தியப்படாதவர்கள். கிருஷ்ணையே! நாங்கள் எல்லாரும் [1] எட்டுக்கர்மங்களோடும் [2] ஒன்பது சக்தி முதலியவைகளோடும்கூடிய சிறந்தகுலங்களில் பிறந்திருக்கிறோம். சௌர்யம் முதலிய [3] ஆறுகுணங்களால் நாங்கள் மேம்பாடுள்ளவர்களாக இருக்கிறோம். திரௌபதி! பாண்டுபுத்திரர்களை ஆறுகுணங்களால் விடுபட்டவர்களாக எண்ணுகிறோம். அப்படிப்பட்ட நீ விரைவாக யானையின்மீதாவது ரதத்தின்மீதாவது ஏறுவாயாக. நாங்கள் பேச்சினால்மாத்திரம் தடுக்கப்பட முடியாதவர்களன்றோ? நீ தீனமான வசனத்தைச்சொல்லி ஸௌவீரராஜனை என்னுடைய அருளை மீண்டும் பிரார்த்திப்பாயாக' என்று சொன்னான். திரௌபதி, 'நான் மகாபலமுள்ளவள். ஆனால், இப்பொழுது, ஸௌவீரராஜனை உன்னால் பலமில்லாதவள்போல எண்ணப்பட்டிருக்கிறேன். நல்ல பிரஸித்திபெற்றவளான நான் இப்பொழுது மீறப்படுவதனால் ஸௌவீரராஜனைக்குறித்துத் தீனமான வசனத்தை உரைக்கமாட்டேன். ஒரு ரதத்தில் சேர்ந்து வீற்றிருப்பவர்களான க்ருஷ்ணன் அர்ஜுனர் இருவரும் எவளுடைய வழியை அனுஸரித்துச் செல்லுவார்களோ அப்படிப்பட்ட த்ரௌ

[1] 'க்ருஷி, வர்த்தகம், துர்க்கம், அணைகட்டுதல், யானைபிடித்தல், சுரங்கமெடுத்தல், கப்பம் வாங்குதல், பாழ் நிலங்களில் குடியேற்றுதல் ஆகிய எட்டும் அரசர்களுக்குப் பொருள் வருவாய்க்கு வழிகள்' என்பது பழையவுரை.

[2] 'பிரபுசக்தி, மந்த்ரசக்தி, உத்ஸாஹசக்தி, பிரபுஸித்தி, மந்த்ரஸித்தி, உத்ஸாஹஸித்தி, பிரபூதயம், மந்த்ரோதயம், உத்ஸாஹோதயம் ஆகிய ஒன்பதும் ரூபத்தாலும் திறமையாலும் பயனாலும் அந்தக்குலங்களில் என்றும் குடிகொண்டிருக்கின்றன' என்பது பழையவுரை.

[3] 'சௌர்யம், தேஜஸ், தைர்யம், ஔதார்யம், தானம், ஐஶ்வர்யம்' என்பது பழையவுரை.

பதியை இந்திரன்கூட எவ்விதத்தாலும் அபஹரிக்கச் சக்தியுள்ள வனுகான். அப்படிப்பட்ட திரௌபதிவிஷயத்தில் அல்பனுன வேறு ஒரு மனிதன் என்னசெய்யமுடியும்? சத்துருவீரர்களைக் கொல்பவரும் ரதத்திலிருப்பவரும் பகைவர்களுடைய மனங்களைத் துன்பமடையச் செய்பவருமான கிரீடியானவர் கோடைக்காலங்க ளில் உலர்ந்த காட்டை எரிக்கிற நெருப்புப்போல என்னிமித்தம் உன்னுடைய சேனையில் புகுந்து நாசம்செய்வார். அந்தகவீரர்க ளுடனும் வ்ருஷ்ணிவீரர்களுடனும்கூடின கிருஷ்ணனும் பெரிய விற்களைப் பிடித்தவர்களான எல்லாக் கேகயர்களும் இந்த எல்லா ராஜகுமாரர்களும் மிகக்களித்த தோற்றமுள்ளவர்களாக என்னு டையவழியைப் பின்தொடருவார்கள். நாண்கயிற்றில் வைத்து நன்றாக இழுத்துவிடப்பட்டவைகளும் மேகம்போலக் கர்ஜிக்கின்ற வைகளும் காண்டீவத்தினின்று விடுபட்டவைகளும் அதிக வேக முள்ளவைகளும் அச்சந்தருபவைகளுமான அம்புகள், தனஞ்சயரு டைய கையில் நன்றாக மோதி மிக்க கோரமாக ஒலிக்கும். காண்டீ வத்தினின்று விடுபட்டவைகளும் விட்டிற்பூச்சிகளின் கூட்டங்கள் போல மிக்கவேகத்துடன் கூடியவைகளுமான பெரிய பாணஸமூகங் களையும் வீர்யசாலியான அர்ஜுனரையும் எப்பொழுது நீ பார்ப் பாயோ அப்பொழுது நீ உன்புத்தியை நிந்தித்துக்கொள்ளுவாய். சங்கவாத்திய முழக்கத்துடன்கூடியவரும் உள்ளங்கைபுறையில் நாண்கயிறு மோதுவதனுலுண்டாகும் சப்தமுள்ளவரும் அடிக்கடி உரக்கச் சிங்கநாதம் செய்பவரும் காண்டீவத்தை வில்லாகக் கொண்டவருமான அர்ஜுனர் எப்பொழுது உன்னுடைய மார் பில் அம்புகளைப்போடுவரோ அப்பொழுது உன்னுடையமன மானது எப்படியாகுமோ? அதம! கதாயுதத்தைக் கையிலெடுத் துக்கொண்டு உன்னை எதிர்த்தோடிவருகின்ற பீமஸேனரையும் பொறுமையினுலுண்டான கோபமாகிற விஷத்தைக் கக்கிக் கொண்டு பகைவர்களிருக்கிற திசைகளைக்குறித்து எதிர்த்து விரைவாகவருகின்ற மாத்ரீபுத்திரர்களான நகுலஸஹதேவர்களை யும் பார்த்து நெடுங்காலம் மனவருத்தத்தை அடைவாய். நான் மிக்க மேன்மைபெற்றவர்களான கணவர்களை மனத்தால்கூட ஒரு பொழுதும் எவ்விதத்தாலும் மீறி நடக்கிறதில்லையென்கிற ஸத்தி யத்தினுல், இப்பொழுது நீ பார்த்தர்களால் வசப்படுத்தப்பட்டு எல்லாப்பக்கங்களிலும் இழுக்கப்படுகின்றதைப் பார்ப்பேன். நான் க்ரூரனுன உன்னுல் வலிந்து இழுக்கப்பட்டாலும் பயத்தை

அடையமாட்டேன். நான் கௌரவர்களுள் மிகச் சிறந்த வீரர்களான பார்த்தர்களோடு சேர்ந்து மீண்டும் காம்யகவனத்தை வந்தடைவேன்' என்று சொன்னாள்.

இவ்வாறு சொல்லக்கேட்ட அந்தஸிந்துராஜனே விசாலமான கண்களுள்ள அந்தத்திரௌபதியைப்பார்த்து, 'திரௌபதி! நான் உன்னைப் பலாத்காரமாக இழுக்கவில்லை. என்தேரில் விரைவாக ஏறு' என்றான். விசாலமானகண்களுள்ள அந்தத்திரௌபதி, பிடிக்கஎண்ணங்கொண்ட அவர்களைப்பார்த்து அதட்டுகின்றவளாகவும் பயந்தவளாகவும், 'என்னைத்தொடாதீர்கள்' என்று சொன்னாள். அவள் புரோகிதரான தௌம்யரை அலறி அழைத்தாள். ஜயத்ரதன் அந்தத்ரௌபதியை மேலாடையில் பிடித்தான். அவள் அவனை விலக்கித்தள்ளினாள். அந்தத்ரௌபதியினால் நன்குவிலக்கித் தள்ளப்பட்ட சரீரமுள்ள அந்தப் பாபியான ஜயத்ரதன் அடியற்றமரம்போல விழுந்தான். மிக்கவேகத்துடன் கூடின ஜயத்ரதனால் வலிந்து பிடித்திழுக்கப்படுகின்ற ராஜபுத்திரியான கிருஷ்ணையானவள் அடிக்கடி பெருமூச்சுவிட்டுக்கொண்டும் பொறுத்துக்கொண்டும் தௌம்யருடைய சரணங்களில் தண்டனிட்டு ரதத்திலேறினாள். தௌம்யர், 'ஜயத்ரத! மகாரதர்களான பார்த்தர்களை ஜயிக்காமல் இவளை நீ கொண்டுபோதல் முடியாது. பழமையான க்ஷத்திரியதர்மத்தைப் பார்ப்பாயாக. அல்பமான காரியத்தைச் செய்து தர்மராஜரை முதன்மையாகக்கொண்ட வீரர்களான பாண்டவர்களை அடைந்தவுடன் நீ தீமையின்பயனை அடைவாய். ஸம்சயமில்லை' என்று கூறினார். தௌம்யர் இவ்வாறு சொல்லிவிட்டு, கொண்டுபோகப்படுகிறவளும் சிறந்த கீர்த்தியுள்ளவளுமான அந்த ராஜபுத்திரியை அப்பொழுது காலாட்கூட்டங்களின் நடுவை அடைந்தவராகப் பின்தொடர்ந்தார்.

---

இருநூற்றெழுபதாவது அத்யாயம்.

## த்ரௌபதீஹரணபர்வம். (தொடர்ச்சி.)

**(பாண்டவர்கள் கெட்டநிமித்தங்களைக்கண்டுவிபத்துநேருமென்ற ஸந்தேகத்துடன் விரைவாக ஆச்ரமத்துக்குவந்ததும், திரௌபதிக்கு நேர்ந்ததை வேலைக்காரியினால் அறிந்து ஜயத்ரதனைத் தொடர்ந்து சென்று அவனைக் கண்டைக்கழைத்ததும்.)**

விற்பிடித்தவர்களும் பூமியில் மிக்கசிறப்புவாய்ந்தவர்களுமான பார்த்தர்கள் தனித்தனிஸஞ்சரிக்கின்றவர்களாக எல்லாத்

திசைகளையும் நன்றாகச்சூழ்ந்துகொண்டு மான்களையும் பன்றிகளையும் எருமைகளையும் கொன்று, பிறகு, ஒன்றுசேர்ந்தவர்களானார்கள். பிறகு, மான்களாலும் துஷ்டமிருகங்களின் கூட்டங்களாலும் பரவப்பெற்றதும் பறவைகளின் ஒலிகளால் எதிரொலியிடுவதுமான பெரியகானகத்தை அடைந்திருக்கிற அந்தத்தம்பிமார்களை நோக்கி யுதிஷ்டிரர் பேசுகின்ற மிருகங்களுடைய சொற்களைக் கேட்டுப் பின்வருமாறு உரைக்கலானார். 'இந்தமிருகங்களும் பக்ஷிகளும் கொடிய துயரத்தையும் பெரும்பயத்தையும் பகைவர்களால் ஏற்படக்கூடிய அவமானத்தையும் தெரிவிக்கின்றவைகளாக ஸூர்யனால் பிரகாசிக்கின்றதிசையை நோக்கிவந்து குரூரமாகப் பேசுகின்றன. சீக்கிரம் திரும்புங்கள். நமக்கு மிருகங்கள்போதும். என்மனமானது பரிதாபத்தை அடைகிறது; எரிக்கவும்படுகிறது. தேகத்தில் இந்திரியங்களுக்கெல்லாம் பதியான முக்யப்ராணனானது தீனஸ்வபாவத்துடன்கூடியதாக என்புத்தியை மயக்கிக்கொண்டு மிகநடுங்குகிறது. எனக்கு இச்சமயத்தில் இப்படிப்பட்ட காம்யகவனமானது, கருடனால் சிறந்த ஸர்ப்பம் பிடிக்கப்பட்ட தடாகம்போலவும் அரசனுடனழிந்த ராஜ்யம்போலவும் குடிகாரர்களால் கள்குடிக்கப்பட்ட குடம்போலவும் தோன்றுகிறது' என்றார். அந்த வீரர்கள் அக்னிபோலவும் காற்றுப்போலவும் கொடிய வேகமுள்ளவைகளும் அதிக வேகத்தையுடையவைகளுமான ஸிந்துதேசத்தில் பிறந்த குதிரைகளோடு சேர்த்துப் பூட்டப்பட்டவையும் பெரியவையுமான நல்லரதங்களால் சுமக்கப்படுகின்றவர்களாக அப்பொழுது ஆஶ்ரமத்தைநோக்கி வருவாராயினர். திரும்பிவருகின்ற அவர்களுடைய இடப்புறத்தில்வந்து நரியானது அதிகமான சத்தத்துடன் பேசியது. அரசரான தர்மநந்தனர், அதனை நன்றாகஆலோசித்து, பீமனையும் தனஞ்சயனையும் பார்த்து, 'மிக்க இழிவானஜாதியில் பிறந்த இந்த நரியானது நம்முடைய இடப்புறத்தில்வந்து பேசுவதனால் பாவிகளான கௌரவர்களால் நம்மை அவமதித்துப் பலாத்காரத்தால் வெளிப்படையாகவே தீமை செய்யப்பட்டுவிட்டது' என்று சொன்னார். பெரியகாட்டில் வேட்டையாடி, பிறகு, திரும்பிவந்து அந்த வனத்தில் பிரவேசிக்கின்ற அந்தப் பார்த்தர்கள் அப்பொழுது அழுதுகொண்டிருப்பவளும் பிராணநாயகியான திரௌபதிக்கு ஊழியம்செய்பவளும் சிறுமியுமான [1] தாத்ரேயிகையென்பவளைக் கண்டார்கள். இந்திர

[1] வளர்ப்புத்தாயின் மகளை என்றும் கொள்ளலாம்.

ஸேனன், விரைவாக எதிரில்வந்து ரதத்தினின்று குதித்து, பிறகு, அவளைநோக்கி ஓடினன். அரசரே! இந்திரஸேனன் மிகுந்த மனவருத்தமடைந்தவனாக அப்பொழுது அந்தத் தாத்ரேயிகை யைப் பார்த்து, 'ஏன் நீ பூமியில் விழுந்து அழுகிறாய்? ஏன் உன் னுடைய முகமானது நிறம்குன்றி வறட்சியை அடைகிறது? மிக்க கொடுமைகளைச்செய்கின்ற பாவிகளால் ராஜபுத்திரியான திரௌ பதியானவள் துன்புறுத்தப்படாமலிருக்கிறாளா? பாண்டுவின் குமாரர்கள் கானகம் சென்றிருக்கையில் இந்தக்காட்டில் பகைவர்க ளால் தீமை செய்யப்படாமலிருந்ததா?' என்றுவினவினன். மனங் கலங்கின தாத்ரேயிகையானவள், வேகத்துடன் தன்னருகில்வந்த ஸாரதியான இந்திரஸேனனை நன்றாகப் பார்த்து, மிக்ககஷ்டத் துடன் மார்பில் அடித்துக்கொண்டு, அப்பொழுது, 'தேவியானவள் கவரப்பட்டாள்' என்று உரக்க அலறினள். இந்திரஸேனன், 'இகழத்தகாத ரூபமுள்ளவளும் விசாலமான கண்களையுடையவ ளும் குருஶ்ரேஷ்டர்களான பாண்டவர்களுக்குச் சரீரம்போன்ற வளுமான ராஜபத்னியை ஸமயம் பார்த்து எந்தமனிதன் தன் அழிவின்பொருட்டுக் கவர்ந்தான்? தேவியானவள் பூமியினுள் சென்றாலும் ஸ்வர்க்கத்தை அடைந்தாலும் கடலினுள் சென்றா லும் அவளுடைய இருப்பிடத்தில் பார்த்தர்கள் செல்லுவார்கள். தர்மராஜர் அப்படியன்றோ ஸந்தாபத்தை அடைகிறார்? இப்படிப் பட்டவர்களும் பகைவர்களை அழிக்கின்றவர்களும் துன்பங்களைப் பொறுப்பவர்களும் பகைவர்களால் ஜயிக்கமுடியாதவர்களுமான பாண்டவர்களுக்கு ப்ராணனுக்கு ஸமமாக இருப்பவளும் மிக வும் இஷ்டமானவளும் நிகரில்லாத ரத்தினம்போன்றவளுமான பாஞ்சாலியை எந்த மூடன் கவரவிரும்புவான்? பாண்டவர்களுக்கு வெளியில் ஸஞ்சரிக்கின்ற மனமாகஇருக்கிற திரௌபதியை இச் சமயத்தில் இந்தஇடத்தில் நாதனையுடையவளென்று அறியவில்லை. கூருள்ளவைகளும் கோரமானவைகளும் சிறந்தவைகளுமான பாணங்கள் இப்பொழுது எவனுடைய சரீரத்தைப் பிளந்து கொண்டு பூமியில் பிரவேசிக்கப்போகின்றனவோ? பயந்தவளே! அந்தக்ருஷ்ணையைப்பற்றி நீ வியஸனப்படாதே. க்ருஷ்ணையான வள் இப்பொழுது திரும்பிவரப்போகிறாளென்று அறிவாயாக. பார்த்தர்கள் எல்லாப்பகைவர்களையும் மிச்சமில்லாமல் கொன்று, பிறகு, யஜ்ஞஸேனனுடைய குமாரியான க்ருஷ்ணையுடன் திரும்பி வருவார்கள்' என்று சொன்னன்.

பிறகு, தாத்ரேயிகையானவள் அழகிய முகத்தைத் துடைத்துக்கொண்டு ஸாரதியான இந்திரஸேனனைப்பார்த்து, 'இந்திரனுக்கொப்பான ஐவரையும் அலக்ஷ்யம்செய்து கிருஷ்ணையானவள் ஜயத்ரதனால் வலிந்து கவரப்பட்டாள். புதியவழிகள் இதோ இருக்கின்றன. அப்படியே ஒடிக்கப்பட்ட மரங்களும் வாடவில்லை. (தேர்களைத்) திருப்புங்கள். சீக்கிரமாகப் பின்தொடர்ந்து செல்லுங்கள். ராஜபுத்திரியானவள் (அதிக) தூரம்செல்லவில்லையன்றோ? இந்திரனுக்கொப்பான நீங்களனைவருமே பெரிய அழகிய கவசங்களைப் பூட்டிக்கொள்ளுங்கள். அதிகவிலைமதிப்புள்ள விற்களையும் அம்புகளையும் கையிற் பிடியுங்கள். சீக்கிரம் (இந்த) வழியிற் செல்லுங்கள். கிருஷ்ணையானவள் அதட்டுதலாலும் தண்டபயத்தாலும் மதிமயக்கமடையும்படி செய்யப்பட்டவளும் நன்றாகமயங்கின மனமுள்ளவளுமாகி வறட்சியடைகிற முகத்துடன், சிறந்த நெய்யினால் நிறைந்த [1] ஸ்ருக்கைச் சாம்பலில்சேர்ப்பதுபோலத் தகுதியற்ற ஒருவனுக்குத் தன்தேகத்தைக் கொடுத்துவிடப்போகிறாள். பார்த்தர்களே! உமிநெருப்பில் ஹவிஸானது ஹோமம் செய்யப்படப்போகிறது. இடுகாட்டில் மாலையானது எறியப்படப்போகிறது. பிராம்மணர்கள் மிகமயங்கியிருக்கும் தருணத்தில் யாகத்தை அடைந்திருக்கிற ஸோமரஸமானது நாயினால்நக்கப்படப்போகிறது. காராம்பசுவின்பாலினது தாரையானது தோற்பையில் வார்க்கப்படப்போகிறது. முயலுங்கள். நரியானது பெரிய காட்டில் வேட்டையை உத்தேசித்து அலைந்துதிரிந்து தாமரைஓடையில் இறங்கப்போகிறது. மந்திரங்களுடன்கூடின ஆகுதிகளால் பூஜிக்கப்பட்ட ஹோமாக்கினிவேதியில் காக்கையானது உட்காரப்போகிறது. மகாயாகத்தில் நன்றாக ஸ்வரத்துடன் உச்சரிக்கப்பட்ட ஸ்ருதியைப் பாமரன்கெடுப்பதுபோல இந்த ஜயத்ரதன் (திரௌபதியைக்) கெடுக்காமலிருக்கவேண்டும். நல்ல மூக்குள்ளதும் அழகிய கண்களுள்ளதும் சந்திரனுடைய ஒளிபோல மாசற்றிருப்பதும் தெளிவுள்ளதும் மங்களகரமாயிருப்பதுமான உங்களுடைய காதலியின் முகத்தை, தீவினைசெய்கிறஒருவன், யாகத்திலிருக்கிற புரோடாசத்தை நாய்தொடுவதுபோலத் தொட்டுவிடப்போகிறான். இந்தவழிகளைச் சீக்கிரமாகத் தொடர்ந்து செல்லுங்கள். இங்கேயே உங்களுக்கு நேரமானது விரைந்துசெல்லவேண்டாம். அரசர்களே! பாவியான ஜயத்ரதன் இங்கிருந்து அதிக

[1] ஸ்ருக் = ஹோமம் செய்வதற்கு ஸாதனமான கரண்டி.

தூரம்செல்வதற்குள் சீக்கிரம் ஓடுங்கள். புருஷச்ரேஷ்டர்களே! பகைவர்களுடையபக்கத்திலிருந்து லக்ஷ்மியைப்போன்ற ப்ராண நாயகியான திரௌபதியை மீட்டுக்கொண்டுவாருங்கள்' என்று சொன்னாள்.

யுதிஷ்டிரர், 'கல்யாணி! திரும்பி இருப்பிடம் போவாயாக. பேச்சை அடக்கிக்கொள். நம்மிடம் குரூரமான சொற்களைச் சொல்லாதே. பலத்தால் மதங்கொண்டிருக்கிற அரசர்களோ ராஜ புத்திரர்களோ மரணத்தை அடைவார்கள்' என்று சொன்னார். பாண்டவர்கள் இவ்வளவுமட்டில் சொல்லிவிட்டு, அந்தவழிகளையே அநுஸரிக்கின்றவர்களாகவும், அடிக்கடி பெருமூச்சுவிடுகின்றவர்களாகவும், பெரியவிற்களினின்று அம்புகளை எய்வதற்காக நாண் கயிற்றை இழுக்கின்றவர்களாகவும், சீக்கிரமாகச் சென்றார்கள். பிறகு, குதிரைகளின் குளம்புகளால் தூற்றிவிடப்பட்டதும் மேலே எழுந்ததுமான அந்த ஜயத்ரதனுடைய சேனையின் புழுதியையும், காலாட்களின் நடுவிலிருந்துகொண்டு, 'பீம! பார்த்த!' என்று அடிக்கடி அலறி அழைக்கின்ற தௌம்யரையும் கண்டார்கள். அந்த ராஜகுமாரர்கள் மனந்தளர்ந்தவர்களாக, 'நீர் ஸுகமாக வாரும்' என்று தௌம்யரை நல்வார்த்தைகளால் தேறுதலடையச்செய்து, பக்ஷிக்கத்தக்க மாம்ஸத்தில் மிக்க ஆவலுள்ள கழுகுகள்போல வேகத்துடன் அந்த ஸைன்யத்தை நோக்கி ஓடினார்கள். யஜ்ஞஸேனனுடைய குமாரியாகிய க்ருஷ்ணையை அவமதித்ததினால் மிகுந்தகோபமுள்ளவர்களும் மஹேந்திரனுடையவல்லமைபோன்ற வல்லமையுள்ளவர்களுமான அந்தப்பார்த்தர்களுக்கு ஜயத்ரதனையும் அவனுடைய தேரிலிருக்கிற அன்பிற்குரியபாஞ்சாலியையும் பார்த்துக் கோபமானது அதிகமாக ஜ்வலித்தது. பிறகு, பெரிய விற்களைக் கையில் பிடித்தவர்களான விருகோதரனும் தனஞ்சயனும் நகுலஸஹதேவர்களும் யுதிஷ்டிரமஹாராஜனும் ஸிந்து ராஜனான ஜயத்ரதனை உரத்த சத்தத்துடன் கூவி அழைத்தார்கள். பிறகு, பகைவர்களுக்குத் திசைமயக்கமுண்டாயிற்று.

## இருநூற்றெழுபத்தோராவது அத்யாயம்.

## த்ரௌபதீஹரணபர்வம். (தொடர்ச்சி.)

(த்ரௌபதியானவள் ஜயத்ரதனுக்கு யுதிஷ்டிரர்முதலியவர்களை அடையாளங்களுடன் குறிப்பிட்டுக் காட்டியது.)

பிறகு, பீமஸேனனையும் அர்ஜுனனையும் பார்த்துக் கோபம் மூண்ட க்ஷத்திரியர்களுடைய மிகவும் கோரமான சப்தமானது வனத்தில் அப்பொழுது உண்டாயிற்று. கெட்ட எண்ணமுள்ள வனான ஜயத்ரதராஜன், குருஶ்ரேஷ்டர்களான அந்தப் பாண்டவர்களுடைய கொடிகளின் நுனிகளைப்பார்த்துச் சக்தி ஒடுங்கின வனுகித் தேரிலிருக்கிறவளும் காந்தியுள்ளவளுமான பாஞ்சாலியைநோக்கி, 'இதோ ஐந்து பெரிய தேராளிகள் வருகின்றனர். கிருஷ்ணையே! இவர்களை உன்னுடைய பதிகளென்று நினைக்கிறேன். அழகிய கூந்தலுள்ளவளே! தெரிந்தவளான நீ தேரிலிருக்கிற பாண்டவர்களைத் தனித்தனியாக எனக்குக் கூறுவாயாக' என்று தானே சொன்னான்.

த்ரௌபதி, 'மூட! ஆயுளுக்குநாசத்தை உண்டுபண்ணுகிற மிக்க கோரமான காரியத்தைச்செய்து நாசமடையப்போகிற உனக்குப் பெரிய விற்களைத் தரித்தவர்களான பார்த்தர்களை அறிவதனால் யாது பயன்? வீரர்களான இந்த என்னுடைய பதிகள் வந்துவிட்டார்கள். உங்களுள் யுத்தத்தில் இப்பொழுது ஒருவராவது மிகுந்திருக்கப் போகிறதில்லை. வினவப்பட்டிருக்கிற என்னால் சாகப்போகிற உனக்கு எல்லாம் சொல்லத்தக்கதே. இது தர்மம். எனக்கு, தம்பிமார்களுடன்கூடின தர்மராஜரைப் பார்த்தபின் மனவருத்தமாவது உன்னிடத்தில் பயமாவதுஇல்லை. எவருடைய த்வஜத்தின் நுனியில் நன்றாக அமைக்கப்பட்ட நந்தம் உபநந்தமென்கிற மிருதங்கங்கள் இனிமையான ஒலியுடன் ஒலிக்கின்றனவோ தம்முடைய அறம்பொருள்களின் நிச்சயத்தை அறிந்தவரான இவரை நல்ல காரியங்களைச் செய்கிற ஜனங்கள் எப்பொழுதும் அனுஸரிக்கிறார்கள். சுத்தமான பொன்போன்ற நிறமுள்ளவரும் உயர்ந்த மூக்குள்ளவரும் மெலிந்த தேகமுள்ளவரும் அகன்ற கண்களையுடையவருமாக இங்குக் காணப்படுகிற இந்தப் புருஷஶ்ரேஷ்டரைக் கௌரவர்களுள் மிக்க மேன்மை

வாய்ந்தவரும் தர்மதேவதையின் புதல்வரும் என்னுடைய பதியுமான யுதிஷ்டிரரென்று ஜனங்கள் சொல்லுகிறார்கள். மூட! தர்மத்தை அனுஷ்டிப்பவரும் வீரரும் பகைவனுயிருந்தாலும் சரணமென்றடைந்தவனுக்கு உயிரைக்கொடுப்பவருமான இந்த யுதிஷ்டிரரை உன் க்ஷேமத்தைக்கருதி ஆயுதங்களைக் கீழே வைத்துவிட்டு அஞ்சலிபந்தம் செய்துகொண்டு விரைந்து சரணமடைவாயாக. மேலும், நீண்டகைகளுள்ளவரும் ஆச்சாமரம்போல வளர்ந்திருப்பவரும் பற்களால் உதட்டை நன்கு கடித்துக்கொண்டிருப்பவரும் நெரித்தலால் ஒன்று சேர்க்கப்பட்ட புருவங்களுள்ளவரும் ரதத்திலிருப்பவரும் நீ பார்க்கிற ஆண்சிங்கமுமான இவர் என்னுடைய கணவரான விருகோதரர். நல்ல பலமுள்ளவைகளும் நன்றாகப் பழக்கப்பட்டவைகளும் அபரிமிதமான தேகபலமுள்ளவைகளுமான உத்தமஜாதிக் குதிரைகள் இந்தச்சூரரைச் சுமந்து செல்லுகின்றன. இவருடைய செய்கைகள் மனிதன்செய்கைகளை மீறி இருப்பவைகள். அதனுல், இவருக்குப் பூமியில் பீமனென்று பிரஸித்தி ஏற்பட்டிருக்கிறது. இவரிடம் தீங்கிழைத்தவர்கள் மிச்சமிருக்கமாட்டார்கள். இவர் ஒருபொழுதும் வைரத்தை மறக்கமாட்டார். வைரத்திற்கு முடிவை நன்றாகச்செய்தே பிறகு சாந்தியை அடைகிறார். ஆதலால், (வீணே) வருந்திக்கொண்டிருக்கமாட்டார். விற்பிடித்தவர்களுள் சிறந்தவரும் சிறந்ததைர்யமுள்ளவரும் கீர்த்திபுள்ளவரும் இந்திரியங்களை அடக்கினவரும் பெரியோர்களுடன் பழகினவரும் புருஷஸ்ரேஷ்டரும் யுதிஷ்டிரருக்கு ப்ராதாவும் சிஷ்யருமான இவர் என்னுடைய கணவரான தனஞ்சயர். எவர் காமத்தாலும் பயத்தாலும் பேராசையினுலும் தர்மத்தைவிடமாட்டாரோ, கொடியசெய்கையையும் செய்யமாட்டாரோ அக்னிக்கு ஸமமான தேஜஸுள்ளவரும் பகைவர்களின் (எதிர்ப்பைத்) தாங்குபவரும் பகைவர்களை நாசம் செய்பவருமான அப்படிப்பட்ட இந்தவீரர் குந்தியின் புதல்வரான அர்ஜுனனென்று சொல்லப்படுகிறார். விவேகமற்ற மனமுள்ளவனே! எவர் அறம் பொருள்களின் நிச்சயத்தை அறிந்தவரோ, பயத்தால் துன்பமடைந்தவர்களுடைய பயத்தைப் போக்குபவரோ, கற்றறிந்தவரோ, பந்துக்களிடத்தில் பிரீதியுள்ளவரோ, சஸ்திரங்களைத் தரித்தவர்களுள் மிக்க மேன்மைவாய்ந்தவரோ, பெரிய யுத்தங்களில் ஒருவராலும் தடுக்கமுடியாத வீர்யமுள்ளவரோ, பூமியில் எவருடையரூபத்தை உத்தமமென்று சொல்லுகிறார்களோ, தங்களை

அநுஸரிக்கின்ற எவரை எல்லாப்பாண்டவர்களும் உயிரைக்காட்டி லும் பெரியவராக எண்ணிப் பாதுகாக்கிறார்களோ, எவர் கத்திக ளால் சண்டை செய்வதில் மிக்க திறமையுள்ளவரும் லாகவமுள்ள ஆச்சர்யகரமான கைகளையுடையவரும் மகானும் சிறந்தபுத்தி யுள்ளவரும் [1] ஸஹதேவரைத் தம்பியாகவுடையவருமாயிருக்கி றாரோ, யுத்தத்தில் அஸுரஸேனைகளில் இந்திரனுடைய செய் கையைப்போல எவருடைய செய்கையை இப்பொழுது பார்க்கப் போகிறாயோ அப்படிப்பட்ட இந்தவீரர் என்னுடைய பதியான நகுலர். [2] சூரரும், அஸ்திரங்களில் நல்ல தேர்ச்சிபெற்றவரும், சிறந்தபுத்தியுள்ளவரும், உதாரமான மனமுள்ளவரும், அரசரான தர்மநந்தனருக்குப் பிரியத்தைச் செய்பவரும், அக்னியும் சந்திர னும் ஸூர்யனும்போன்ற ஒளியுள்ளவரும், பாண்டவர்களுள் கடைசியில் பிறந்தவரும், அன்புக்குரியவரும், புத்தியிலும் அப்படியே கற்றவர்களின் கூட்டத்தில் பேசுவதிலும் ஒப்பில் லாதவரும், நிச்சயத்தை நன்கு அறிந்தவரும், சூரரும், எப்பொழு தும் பகைவர்கள் செய்த அபகாரத்தைப் பொறுத்தவரும், சிறந்த புத்தியுள்ளவரும், மிகுந்த அறிவுள்ளவருமான இவர் என்னுடைய கணவரான ஸஹதேவர். இவர் பிராணன்களை இழந்தாலுமிழப் பார்; நெருப்பில் புகுந்தாலும் புகுவார்; தர்மத்தைவிட்டு விலகியிருக் கிறவிஷயத்தைச் சொல்லவேமாட்டார். இந்தவீரபுருஷர் எப் பொழுதும் உதாரமனமுள்ளவர்; க்ஷத்ரியதர்மத்தில் பற்றுள்ள வர்; குந்திக்குப் பிராணனைக்காட்டிலும் அதிகப்ரியமானவர். உன் னுடைய இந்தச்சேனை ரத்தினங்களால் எங்கும்நிறைக்கப்பட்டதும் ஸமுத்திரத்தின்மத்தியில் சுறாமீனுடையமுதுகில் மோதிச் சிதறிப் போகின்றதுமான கப்பல்போலப் பாண்டுபுத்திரர்களால் எல்லா யுத்தவீரர்களும்கொல்லப்பட்டுக் கலக்கப்படுவதைப் பார்ப்பாய். எவர்களை நீ அறியாமையால் அவமதித்து அநியாயத்தில் பிரவ்ருத் தித்தாயோ அப்படிப்பட்ட இந்தப்பாண்டுபுத்திரர்கள் இவ்வண் ணம் உனக்கு உரைக்கப்பட்டார்கள். புண்படுத்தப்படாத தேகத் துடன் இவர்களிடத்தினின்று விடுபடுவாயாகில் மீண்டும் பிறப் பையும் உயிரையும் அடைந்தவனாவாய்' என்று சொன்னாள். பிறகு, ஐந்துஇந்திரர்களுக்கு ஒப்பான அந்த ஐந்துபார்த்தர்களும், பயந்தவர்களும் அஞ்சலி செய்கின்றவர்களுமான அந்தக்காலாட்

[1] 'ஸஹதேவத்விதீய:' என்று பாடம் கொள்ளப்பட்டது.

[2] இரட்டித்து வருகிறது.

களை விட்டுவிட்டுக் கோபமூண்டவர்களாகச் சேனையை எல்லாப் பக்கங்களிலும் தடுத்துக்கொண்டு இடைவிடாத சரமாரியினால் உண்டான இருளால் மூடினார்கள்.

---

## இருநூற்றெழுபத்திரண்டாவது அத்யாயம்.

## த்ரௌபதீஹரணபர்வம். (தொடர்ச்சி.)

(யுதிஷ்டிரர்முதலியவர்களுக்கு ஜயத்ரதன்முதலியவர்களோடு யுத்தமும், துணைவீரர்கள் கொல்லப்படவே ஜயத்ரதன் திரௌபதியை விட்டுவிட்டு ஓடியதும், பீமனும் அர்ஜுனனும் கடுஞ்சொற்சொல்லிக்கொண்டு ஜயத்ரதனைத் துரத்தியதும்.)

அரசனான ஸைந்தவன், 'எதிர்த்து நில்லுங்கள்; அடியுங்கள்; விரைவாக எல்லாப்பக்கங்களிலும் எதிர்த்து ஓடுங்கள்' என்று அந்த அரசர்களைத் தூண்டினான். பிறகு, யுதிஷ்டிரருடன்கூடின பீமனையும் அர்ஜுனனையும் நகுல ஸஹதேவர்களையும் பார்த்து ஸைனிகர்களுடைய மிக்ககோரமானசப்தமானது அப்பொழுது போர்க்களத்தில் தோன்றியது. பலம்மிகுந்திருக்கிற புலிகள் போன்றவர்களான அந்தப்புருஷஶ்ரேஷ்டர்களைக்கண்டு, சிபிகளுக்கும் ஸிந்துதேசத்துவீரர்களுக்கும் த்ரிகர்த்தர்களுக்கும் துயரமுண்டாயிற்று. பீமன் பொற்புள்ளிகளுள்ளதும் மிக நீண்டதும் முழுதும் உருக்கினால் செய்ததுமான கதாயுதத்தை எடுத்துக்கொண்டு காலனாலேவப்பட்டிருக்கிற ஸைந்தவனை நோக்கி எதிர்த்து விரைவாகச்சென்றான். பிறகு, கோடிகாஶ்யன், பீமன் ஜயத்ரதன் இருவருடைய மத்தியில் பிரவேசித்துப் பெரியதேர்க்கூட்டத்தால் பீமஸேனனைச்சூழ்ந்துகொண்டு, அவ்விருவருக்கும் இடைவெளியை உண்டுபண்ணினான். வீரர்களுடையகைகளால் பிரயோகிக்கப்பட்ட அனேகசக்திகளாலும் தோமரங்களாலும் நாராசங்களாலும் அடிக்கப்பட்டானானாலும் பீமன் அசையவில்லை. பீமன் ஸைந்தவனுடைய ஸேனாமுகத்தில் பாகனுடன்கூடின ஒரு யானையையும் பதினான்குகாலாட்களையும் கதையினால் கொன்றான். அர்ஜுனன் ஸௌவீரதேசாதிபதியான ஜயத்ரதனைப் பிடிக்க எண்ணங்கொண்டு படைமுகத்தில் சூரர்களும் மகாரதர்களுமான ஐந்நூறு மலைநாட்டுவீரர்களைக் கொன்றான். அரசரான யுதிஷ்டிரர்

அப்பொழுது யுத்தத்தில் பகைவர்களை அடிப்பவர்களும் மிகவும் சிறந்தவர்களுமான நூறு ஸௌவீரர்களைத் தாமே நொடிப் பொழுதில் கொன்றார். நகுலன் அந்த யுத்தத்தில் கத்தியை எடுத்துக்கொண்டு ரதத்தினின்று துள்ளிக் குதித்துப் பதாதிகளுடைய தலைகளைக் கொய்து போர்க்களத்தில் அடிக்கடி விதைகளைப்போல விதைப்பவனாகக் காணப்பட்டான். ஸஹதேவனோ பகைவர்களால் நிறைந்த படையைத் தேரினால் எதிர்த்துச்சென்று மரங்களிலிருந்து மயில்களைக் கீழே விழச்செய்வதுபோல யானைகளினின்று போர்வீரர்களைக் கீழே விழும்படி செய்தான். பிறகு, த்ரிகர்த்தன் வில்லுடன்கூடியவனாகப் பெரிய ரதத்தினின்று கீழே இறங்கிக் கதையினால் அந்த அரசரான யுதிஷ்டிரருடைய நான்கு குதிரைகளையும் அப்பொழுது கொன்றான். குந்தியின் புதல்வரும் அரசருமான தர்மராஜர், பதாதியாகத் தம்மை எதிர்த்து வருகின்ற அந்த த்ரிகர்த்தனை ஓர் அர்த்தசந்திரபாணத்தால் மார்பிலடித்தார். மார்பு பிளக்கப்பட்ட அந்த வீரன், வாயினால் இரத்தத்தை வெளியில் கக்கிக்கொண்டு, வேர் அறுக்கப்பட்ட மரம்போல, நேரில் விழுந்தான். குதிரைகள் கொல்லப்பட்ட தர்மராஜர், இந்திரஸேனனோடு ரதத்தினின்று துள்ளிக்குதித்து ஸஹதேவனுடைய பெரிய ரதத்தை அடைந்தார். க்ஷேமங்கரன் மகாமுகன் இருவரும் நகுலனை எதிர்த்துத் தடுத்து இரண்டு பக்கங்களிலும் கடுமையான அம்புமழைகளை அவன்மீது பொழிந்தார்கள். மாரிகாலத்து மேகங்கள்போல அம்பு மழைகளைப் பொழிகின்ற அவ்விருவரையும் மாத்ரீபுத்திரனான நகுலன் ஒவ்வொரு விபாடபாணத்தால் அடித்தான். பிறகு, யானையின் மீதேறியிருப்பவனும் யானையை நடத்தும் வித்தையை அறிந்தவனும் திரிகர்த்தராஜனுமான ஸுரதன் யானையினால் நகுலனுடைய ரதத்தைத் தூக்கி எறியச்செய்தான். நகுலனோ, பயமில்லாமல் கத்தியையும் கேடகத்தையும் கையில்கொண்டு அந்த ரதத்திலிருந்து உயர எழும்பி வட்டமாகச்சுற்றிப் பூமியை அடைந்து மலைபோல அசைவற்று நின்றான். பிறகு, ஸுரதன், கோபத்தை அடைந்ததும் அதிகமாக மேலே தூக்கப்பட்டிருந்த துதிக்கையையுடையதுமான அந்தக் கஜராஜனை நகுலனைக் கொல்வதற்காகத் தூண்டினான். நகுலன் தன்னுடைய ஸமீபத்தில் வருகின்ற அந்த யானையினுடைய கொம்புகளுடன்கூடின துதிக்கையை அடியில் கத்தியினால் நன்கு அறுத்தான். கிங்கிணிகளால்

அலங்கரிக்கப்பட்ட அந்த யானையானது பெரிய சத்தத்துடன் வீரிட்டுக்கொண்டு தலைகீழாகப் பூமியில் விழுந்து மாவுத்தனை நசுங்கும்படி செய்தது. மகாரதனும் சூரனுமான அந்த மாத்ரீபுத்திரன், அந்தப் பெரிய காரியத்தைச் செய்து, பீமஸேனனுடைய ரதத்தை அடைந்து, ஸுகத்தை அடைந்தான். பீமனோ, யுத்தத்தில் எதிர்த்துவருகின்ற கோடிகாஸ்யனென்கிற அரசனுடைய குதிரைகளை ஓட்டுகின்ற ஸாரதியினுடைய தலையைக் கத்தியினால் அறுத்தான். அந்த அரசன், பாகுபலமுள்ள பீமனால் ஸாரதி கொல்லப்பட்டதை அறியவில்லை. ஸாரதி கொல்லப்பட்ட அவனுடைய குதிரைகள் யுத்தத்தில் ஆங்காங்கு ஓடின. பகைவர்களை அடிப்பவர்களுள் உத்தமனும் பாண்டுநந்தனனுமான பீமன், ரதத்தை இழந்தவனும் ஸாரதி கொல்லப்பட்டவனுமான அந்தக் கோடிகாஸ்யனை எதிர்த்துவந்து, கைப்பிடியுடன்கூடின பிராஸாயுதத்தால் கொன்றான். தனஞ்சயன் கூர்மையுள்ள அர்த்தசந்திரபாணங்களால் ஸௌவீரவீரர்கள் [1] பன்னிருவருடைய விற்களையும் தலைகளையும் அறுத்தான். அதிரதனான தனஞ்சயன் யுத்தத்தில் அம்புகளுக்கு இலக்காக வந்திருக்கின்ற சிபிகளையும் இக்ஷ்வாகுக்களுள் முக்கியமானவர்களையும் த்ரிகர்த்தர்களையும் ஸைந்தவர்களையும் கொன்றான். ஸவ்யஸாசியினால் கொடிகளுடன்கூடின அநேகயானைகளும் த்வஜங்களுடன்கூடின அநேகமகாரதங்களும் நாசம் பண்ணப்பட்டவைகளாகக் காணப்பட்டன. தலையில்லாத உடல்களும் உடலில்லாத தலைகளும் போர்க்களமுழுமையும் தரையை நன்றாக மூடிக்கொண்டிருந்தன. அந்தப்போர்க்களத்தில் நாய்களும் கழுகுகளும் பருந்துகளும் காகோலங்களும் பாருண்டங்களும் நரிகளும் காக்கைகளும் கொல்லப்பட்டிருக்கிறவீரர்களுடைய மாம்ஸங்களாலும் இரத்தங்களாலும் திருப்தியடைந்தன. இவ்வண்ணம், கோபத்துடன்கூடின அர்ஜுனனென்கிறநெருப்பானது காண்டீவமென்கிறகாற்றினால் தூண்டப்பட்ட கூர்மையுள்ள அம்புகளாகிற ஜ்வாலைகளால் ஜயத்ரதனுடைய சேனையாகிற விறகை விரைவாக எரித்தது. வேந்தனே! பிரஜைகளுக்குத் தலைவனே! அந்தப்போர்க்களத்தில் விழுந்திருக்கிற சக்கரங்கள், நுகங்கள், அம்புத்தூணிகள், கொடித்துணிகள், ரதங்களோடுகூடின கொடிகள், ஏர்க்கால்கள், மூக்கணைகள், த்ரிவேணுக்கள், அச்சுக்கள், பூட்டாம் வார்கள், கொறடாக்கள், குண்டலங்களையும் தலைப்பாகை

[1] ஒரு சொல் விடப்பட்டது.

களையும்தரித்தவையும் விழுந்திருப்பவையுமான தலைகள், தோள் வளைகளுடன்கூடின கைகள், கிரீடங்கள், ஹாரங்கள், குடைகள், விசிறிகள், கேடகங்கள், கவசங்கள், அறுக்கப்பட்ட விற்கள், பட்டஸங்கள், சக்திகள், கத்திகள், தோமரங்கள், உருட்டுத்தடிகள் ஆகிய இவற்றின் குவியல்கள் ஆங்காங்குக் காணப்பட்டன. மலைபோல விழுந்திருக்கின்ற வீரர்களுடன்கூடின யானைகளாலும், அப்படியே ஆயுதங்கள் பிடித்த குதிரைவீரர்களோடுகூட இரண்டாகப்பிளக்கப் பட்ட குதிரைகளாலும், அடித்துப்புரட்டித்தள்ளப்பட்ட ரதங் களாலும், கொல்லப்பட்டகாலாட்களாலும் ரணபூமியானது நடந்து செல்லக்கூடாததும் மாம்ஸங்களுடன் கலந்த ரத்தச்சேறுள்ளது மாயிற்று.

அந்தவீரர்கள் கொல்லப்பட்டவுடன், ஸிந்துராஜனான ஜயத்ரதன், கிருஷ்ணையைவிட்டுவிட்டு, மிகப்பயந்துஓடுவதில்நோக்கங் கொண்டவனானான். அந்த நராதமனான ஜயத்ரதன் நெருங்கியிருக்கிற அந்தஸைன்யத்தில் அந்தத்திரௌபதியை ரதத்தினின்று இறக்கி விட்டு அச்சமயத்தில் பிராணனைப்பாதுகாப்பதில் விருப்பமுள்ள வனாக வனத்தில் ஓடினான். தர்மராஜரோ தௌம்யரை முன்னிட்ட திரௌபதியைப்பார்த்து, அப்பொழுது, வீரனான மாத்ரீபுத்திரனால் ரதத்திலேற்றுவித்தார். ஜயத்ரதன் ஓடிப் போனவுடன், அந்தயுத்தகளத்தினின்று ஓடுகின்ற அந்த ஸைன் யத்தைப் பீமஸேனன் (தன்பெயரைச்) சொல்லிச்சொல்லி நாராசங்களால் கொன்றான். ஸவ்யஸாசியோ, அந்த ஜயத்ரதன் ஓடுவதைக்கண்டு, அவனுடையசேனைவீரர்களைக் கொல்லுகின்ற பீமனைத் தடுத்தான். அர்ஜுனன், 'எவனுடைய கெட்டநடையி னால் எவ்விதத்தாலும் அடையத்தகாத இந்தத்துன்பம் நம்மை அடைந்ததோ அந்தஜயத்ரதனை இந்தயுத்தபூமியில் காணவில்லை. மூடனும் வஞ்சகனும் துஷ்டனும் த்ரௌபதிக்குத்துன்பத்தை உண்டுபண்ணினவனுமான அந்தஜயத்ரதனையே தேடுவாயாக. உனக்கு மங்களம். (மற்றப்) போர்வீரர்களை அடித்துக்கொல்லுதலா லுவதால் உனக்கு யாதுபயன்? இந்தக்காரியம் பயனற்றது. நீ தான் எப்படி எண்ணுகிறாய்?' என்று சொன்னான். சிறந்தபுத்தி யுள்ள அர்ஜுனனால் இவ்விதஞ்சொல்லப்பட்டவனும் பேசுகிற திறமையுள்ளவனுமான பீமஸேனனோ, யுதிஷ்டிரரை அடைந்து, 'பகைவர்கள், சிறந்தவீரர்கள் கொல்லப்பட்டுப் பெரும்பான்மை யாகத் திசைகளில் ஓடிவிட்டார்கள். வேந்தரே! நீங்கள் திரௌபதியை அழைத்துக்கொண்டு இந்த இடத்திலிருந்து திரும்

புங்கள். ராஜஸ்ரேஷ்டரே! நகுலஸஹதேவர்களுடனும் மகாத்மாவான தௌம்யருடனும் ஆஸ்ரமத்தை அடைந்து திரௌபதியை ஸமாதானப்படுத்தும். மூடனும் அல்பனுமான ஸைந்தவராஜன், பாதாளத்தை அடைந்திருந்தாலும், அவனுக்கு இந்திரன் ஸாரதியாக இருந்தாலும், உயிரோடு என்னிடமிருந்து விடுபடமாட்டான்' என்கிற வசனத்தை உரைத்தான். யுதிஷ்டிரர், 'மிக்கபுஜபலமுள்ளவனே! ஸைந்தவன் கெட்டஎண்ணமுள்ளவனாக இருந்தாலும் துச்சலையையும் சிறந்த கீர்த்தியுள்ளவளான காந்தாரியையும் உத்தேசித்துக் கொல்லப்படத் தக்கவனல்லன்' என்று சொன்னார். வெட்கப்படுகிறவளும் சிறந்த அறிவுள்ளவளும் பொறிகள் கலங்கினவளுமான திரௌபதியானவள் அந்த வசனத்தைக் கேட்டுக் கோபங்கொண்டவளாகிப் பார்த்தாக்களான பீமார்ஜுனர்களிருவரையும் பார்த்து, 'எனக்குப் பிரியத்தைச் செய்வதாயிருந்தால் மனிதர்களுள் அதமனும் பாவியும் கெட்டபுத்தியுள்ளவனும் குலத்தைக் கெடுக்கிறவனும் அபசதனுமான அந்த ஸைந்தவனைக் கொல்ல வேண்டும். எவன் பார்யையை அபஹரித்தவனோ, எவன் தீர்க்க வைரமுள்ளவனோ, எவன் ராஜ்யத்தைப் பறித்துக்கொண்ட பகைவனோ அவன் யுத்தத்தில் கெஞ்சினுலும் எவ்விதத்தாலும் விடத்தகாதவன்' என்று பயங்கரமாக உரைத்தாள். இவ்வாறு சொல்லப்பட்டவர்களும் புருஷஸ்ரேஷ்டர்களுமான அவ்விருவரும் ஸைந்தவனிருந்த இடத்திற்குச் சென்றார்கள்.

யுதிஷ்டிரராஜர் புரோஹிதரோடு கிருஷ்ணையை அழைத்துக் கொண்டு திரும்பினார். அவர் வனத்தில் நுழைந்து நிலைகுலைந்திருக்கிற ரிஷிகளுடைய ஆஸனங்களோடும் பாய்களோடும்கூடியதும் மார்க்கண்டேயர் முதலிய பிராம்மணர்களால் வியாபிக்கப்பட்டிருப்பதுமான ஆஸ்ரமத்தைக் கண்டார். பிராதாக்களான நகுலஸஹதேவர்களுடைய மத்தியத்தை அடைந்தவரும் பார்யையோடு சேர்ந்திருப்பவரும் மகாப்ராஜ்ஞருமான யுதிஷ்டிரர், திரௌபதியைப்பற்றி வ்யஸனப்படுகின்றவர்களும் திரௌபதியைக் கண்டதனால் மனவமைதி அடைந்தவர்களுமான அந்தப் பிராம்மணர்களோடு சேர்ந்தார். அந்தப் பிராம்மணர்கள், அந்த ஸைந்தவர்களையும் ஸௌவீரர்களையும் ஜயித்து மறுபடியும் மீட்டுக்கொண்டுவரப்பட்ட திரௌபதியையும் திரும்பிவந்த அந்த யுதிஷ்டிரராஜரையும் பார்த்து ஸந்தோஷமடைந்தார்கள். அந்தத் தர்மராஜர்

அவர்களால் சூழப்பட்டு அவ்விடத்திலேயே உட்கார்ந்தார். கோபமுள்ளவளான கிருஷ்ணையானவள் நகுல ஸஹதேவர்களோடுகூட ஆச்ரமத்தினுள் சென்றாள். அந்தப் பீமஸேனனும் அர்ஜுனனும் பகைவன் ஒரு குரோசதூரத்திலிருக்கிறானென்பதைக் கேட்டுத் தாங்களே குதிரைகளை நடத்திக்கொண்டு வேகத்துடனே ஓடினார்கள். அதிரதனான அர்ஜுனன் இந்த யுத்தத்தில் ஒரு க்ரோசதூரம் சென்ற ஸைந்தவனுடைய நேர்க் குதிரைகளைக் கொன்றதாகிய அந்த மிக்க அத்புதமான காரியத்தைச் செய்தான். திவ்யாஸ்திரங்களால் நிறைந்த அந்த அர்ஜுனன் ஸங்கடம் நேர்ந்தகாலத்திலும் மனங்கலங்காமல் அஸ்திர மந்திரங்களால் அபிமந்திரணம்செய்யப்பட்ட பாணங்களால் செய்தற்கரிய காரியத்தைச் செய்தான். பிறகு, வீரர்களான பீமன் தனஞ்சயன் இருவரும், குதிரைகளைப்பறிகொடுத்தவனும் பயந்தவனும் ஸஹாயமற்றவனும் மனங்கலங்கினவனுமான ஸைந்தவனை எதிர்த்து ஓடினார்கள். ஸைந்தவனோ, அப்படித் தன்குதிரைகள் கொல்லப்பட்டதைக்கண்டு, மிக்கதுக்கமுள்ளவனாக ரதத்தினின்று கீழே குதித்துக் கால்களாலேயே ஓடுவானாயினன். மிக்க வீரச்செயல்களைச் செய்கின்ற தனஞ்சயனைக்கண்டு ஸைந்தவன் ஓடுவதில் விருப்பம் வைத்தவனாக வனத்தைக்குறித்து ஓடினான். மிக்க புஜபலமுள்ள பல்குனன் ஓடுவதில் அதிக பராக்கிரமசாலியான ஸைந்தவனைப்பார்த்துப் பின்தொடர்ந்து சென்றுகொண்டு, 'ராஜபுத்திர! இந்த வீரத்தன்மையினால் எவ்வாறு ஸ்திரீயைப் பலாத்காரம் செய்யவிரும்புகிறாய்? திரும்புவாயாக. ஓடுவது உனக்குத் தகுந்ததன்று. உன்னைப் பின்தொடர்ந்துவந்த வீரர்களை எவ்வாறு பகைவர்களுடைய மத்தியில்விட்டு ஓடுகிறாய்?' என்றுசொன்னான். பார்த்தனால் இவ்வண்ணம் சொல்லப்படுகின்ற ஸைந்தவன் திரும்பவில்லை. பலசாலியான பீமன், அவனை, 'நில், நில்' என்று சொல்லிக்கொண்டு விரைந்து ஓடினான். கருணையுள்ளவனான அர்ஜுனன், 'அவனைக்கொல்லாதே' என்று பீமனைப்பார்த்துச் சொன்னான்.

த்ரௌபதீஹரணபர்வம் முற்றிற்று.

---

## இருநூற்றெழுபத்துமூன்றாவது அத்யாயம்.

## ஜயத்ரத விமோக்ஷண பர்வம்.

(பீமன் ஜயத்ரதனை மயிரில் பிடித்துக் கீழேதள்ளித் தலையில் உதைத்து அவனுக்கு ஐந்து குடுமிவைத்துக் கட்டிக்கொண்டு வந்ததும், யுதிஷ்டிரர் அவனை விடுவித்ததும், ஜயத்ரதன் தவத்தினால் மஹாதேவரிடம் வரம்பெற்றதும்.)

ஜயத்ரதனோ, ஆயுதங்களைக் கையிலெடுத்துக்கொண்டு தன்னைத்தொடர்ந்துவருகின்ற பிராதாக்களான பீமார்ஜுனர்களைப் பார்த்து மிக்க துன்பமுற்றவனும் தப்பிப்பிழைப்பதில் விருப்பமுள்ளவனும் ஜாக்கிரதையுள்ளவனுமாக விரைவாக ஓடினான். கோபமுள்ள பீமஸேனனோ கொடிகளால் சூழப்பட்டிருக்கிற புதரில் ரத்தினங்களால் பிரகாசிக்கின்ற கிரீடம் நழுவிவிழ ஓடுகின்றவனும் வனத்தின் மத்தியில் பதுங்குகின்றவனும் புதரில் ஒடுங்குகின்றவனும் பயத்தால் மனக்குழப்பமுள்ளவனுமான அந்த ஜயத்ரதனைத் தேடிக்கொண்டு ரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்ட ரதத்திலிருந்து விரைவாகக் கீழே இறங்கி ஓடி அவனை மயிரில்பிடித்தான். பீமன் அவனை மேலேதூக்கிப் பூமியில்போட்டுத் தேய்த்தான். அரசனான ஸைந்தவனைக் கழுத்திற்பிடித்துக் கீழேதள்ளினான். மிக்க புஜபலமுள்ள அந்தப் பீமன், உயிரோடிருப்பவனும் மேலே எழும்புவதற்கு விருப்பமுள்ளவனும் புலம்பத் தொடங்குகிறவனுமான அந்த ஜயத்ரதனுடைய தலையில் மீண்டும் காலால் உதைத்தான். பீமன் அவனை இரண்டுமுழங்கால்களால் நன்றாக இடித்துக் கைப்பிடியினால் குத்தினான்.

அரசனான ஸைந்தவன் நல்ல அடியினால் துன்புறுத்தப்பட்டு மயக்கத்தை அடைந்தான். பல்குனன் கோபத்துடன்கூடின பீமஸேனனை, 'கௌரவ! அரசரான யுதிஷ்டிரர் துச்சலைக்காக உன்னைப் பார்த்து என்னசொன்னார்?' என்றுசொல்லி விலக்கினான். பீமன், 'துன்பத்தை அடையத்தகாதவளான கிருஷ்ணைக்குத் துன்பத்தை உண்டுபண்ணினவனும் பாவச்செயலுள்ளவனும் மனிதரில் இழிந்தவனுமான இந்தஜயத்ரதன் என்னிடத்தினின்று உயிர்தப்பிப்பிழைப்பதற்குத் தகுதியுள்ளவனல்லன். யுதிஷ்டிரராஜரோ எப்பொழுதும் கருணையுள்ளவர். நீயும் சிறுபிள்ளைப்புத்தியினால் எப்பொழுதும் என்னைத் தொந்தரை செய்கிறாய். நான் என்ன செய்யக்கூடும்?'

என்று சொன்னான். இவ்வாறு சொல்லிவிட்டு, விருகோதரன் அப்பொழுது ஒன்றும் சொல்லாமலிருக்கிற அந்தஜயத்ரதனுக்கு அர்த்தசந்திரபாணத்தால் தலையில் ஐந்துகுடுமிகளை ஏற்படுத்தினான். பிறகு, விருகோதரன் அரசனான ஜயத்ரதனை விகாரப்படுத்தி, 'மூட! நீ உயிரோடிருக்க விரும்புகிறாயாகில் அதற்கு உபாயத்தைச் சொல்லுகின்ற என்னிடமிருந்து கேள். ஜனக்கூட்டங்களிலும் ஸபைகளிலும், 'நான் பாண்டவர்களுக்கு அடிமைப் பட்டேன்!' என்று சொல்லவேண்டும். இப்படிச் சொல்லுவாயாகில் உயிரைக் கொடுப்பேன். இதுதான் யுத்தத்தில் ஜயித்தவன் செய்யவேண்டிய முறை' என்று சொன்னான். கஷ்டத்தை அனுபவிக்கிற ஜயத்ரதராஜன், யுத்தத்தில் பிரகாசிப்பவனும் புருஷ ஸ்ரேஷ்டனுமான பீமனைப்பார்த்து, 'இப்படியே ஆகட்டும்' என்று சொன்னான். பிறகு, குந்தீநந்தனனான விருகோதரன் பல விதமாகப்புரளுகிறவனும் பிரஜ்ஞை இல்லாதவனும் புழுதிபடிந்த தேகமுள்ளவனுமான அந்த ஜயத்ரதனைக் கயிற்றினால்கட்டித் தேரில் ஏற்றினான். பிறகு, பீமன், அவனை ரதத்தில் ஏற்றிவைத்துக் கொண்டு, அப்பொழுது அர்ஜுனன் தொடர்ந்துவர, மூத்தவரும் ஆஸ்ரமத்திலிருப்பவருமான யுதிஷ்டிரரை வந்தடைந்தான்.

பீமனே, அந்த நிலைமையிலிருக்கிற ஜயத்ரதனை யுதிஷ்டிரருக்குக் காண்பித்தான். அரசர் அவனைப் பார்த்து உரக்கச்சிரித்து, 'விட்டுவிடு' என்றும் சொன்னார். பீமன், அரசரைப்பார்த்து, 'பாவ புத்தியுள்ளவனான இந்த ஜயத்ரதன் பாண்டவர்களுக்கு அடிமையாக இருத்தலை அடைந்தான் என்று திரௌபதிக்குச்சொல்லும்' என்று சொன்னான். பிறகு, தமையனாரான தர்மநந்தனர், அந்தப் பீமனைப்பார்த்து, 'உனக்கு நாம் பிரமாணமாயிருந்தால், இழிவானசெய்கையுள்ள இவனை விட்டுவிடு' என்று நயமுள்ளசொல்லைச் சொன்னார். திரௌபதியும், யுதிஷ்டிரரைப் பார்த்துவிட்டு, பீமனை நோக்கி, 'அரசரான யுதிஷ்டிரருக்கு அடிமையான இந்த ஜயத்ரதனை விட்டுவிடுங்கள். உம்மால் ஐந்து குடுமிகளுள்ளவனாகச் செய்யப்பட்டுவிட்டான்' என்று சொன்னாள். பிராதாவினாலும் கிருஷ்ணையினாலும் இவ்வாறு சொல்லப்பட்ட பீமனே, மகாபாவியும் பிரஜ்ஞையில்லாதவனுமான ஜயத்ரதனை அவிழ்த்துவிட்டான். விடப்பட்ட அந்த அரசனான ஜயத்ரதன், மனவருத்தத்துடன், அருகில் வந்து யுதிஷ்டிரராஜரை அபிவாதனம் செய்து அப்பொழுது முதியவர்களான அந்த முனிவர்களையும் அபிவாதனம் செய்

தான். கருணையுள்ளவரும் தர்மநந்தனரும் அரசருமான யுதிஷ்டிரர், அப்படிப்பட்ட நிலைமையிலிருப்பவனும் ஸவ்யஸாசியினால் பிடிக்கப்பட்டிருப்பவனுமான அந்த ஜயத்ரதனைப் பார்த்து, 'அடிமைதீர்ந்தவனாகச் செல். விடப்பட்டாய். இவ்விதமான கெட்ட காரியத்தை மீண்டும் ஓரிடத்திலும் செய்யாதே. ஸ்திரீகளிடத்தில் ஆசையுள்ள உன்னை நிந்திக்கவேண்டும். நீ அல்பன்; [1] அல்பர்களைத் துணைவர்களாக உடையவன். கெட்டபுத்தியுள்ளவனே! உன்னைவிட வேறான எந்தப்புருஷாதமன் தர்மவிரோதமானதும் உலகத்தால் தூஷிக்கப்படுவதுமான இப்படிப்பட்ட காரியத்தைச் செய்வான்?' என்றார். பரதஶ்ரேஷ்டரான தர்மராஜர் கெட்டகாரியத்தைச் செய்தவனான அந்த ஜயத்ரதனை மரித்தவனைப் போல் எண்ணி நன்றாக உற்றுப்பார்த்துக் கருணைபாராட்டினார். 'ஜயத்ரத! தர்மத்தில் உனக்குப் புத்தி விருத்தியடையட்டும். அதர்மத்தில் மனத்தைச் செலுத்தாதே. குதிரைகளோடும் ரதங்களோடும் காலாட்களோடும் க்ஷேமமாகச் செல்' என்று சொன்னார்.

பாரதரே! இவ்வாறு சொல்லப்பட்ட அரசன் துக்கத்தால் அதிகமனவருத்தமுள்ளவனாகவும் ஒன்றும் பேசாமல் தலைகுனிந்தவனாகவும் வெட்கத்துடன் கங்காத்வாரம்சென்றான். அவன் விரூபாக்ஷரும் உமாபதியுமான மகாதேவரைச் சரணமடைந்து பெருந்தவம்புரிந்தான். அவன் விஷயத்தில் விருஷபத்துவஜரும் ப்ரீதியுள்ளவரானார். ப்ரீதியுள்ளவரான முக்கண்ணர் ஜயத்ரதனுடைய பூஜையைத் தாமே நேரில்தோன்றிப் பெற்றுக்கொண்டார். மகாதேவர் அந்த ஜயத்ரதனுக்கு வரத்தையும் கொடுத்தார். அவனும் பெற்றுக்கொண்டான். அதனைக் கேட்கக்கடவீர். அரசனான ஜயத்ரதன், 'ரதங்களுடன் கூடின பாண்டவர்களைவரையும் யுத்தத்தில் ஜயிக்கக் கடவேன்' என்று மகாதேவரைப் பிரார்த்தித்தான். மகாதேவர் அவனைநோக்கி, 'அது முடியாது' என்று சொன்னார். 'பதரிகாஶ்ரமத்தில் தவம்புரிந்தவனும் நாராயணரை ஸஹாயமாகக்கொண்டவனும் எல்லா உலகங்களாலும் ஜயிக்கப்படாதவனும் தேவர்களாலும் எதிர்க்கமுடியாதவனும் நரனென்று பெயருள்ள ஸுரேஶ்வரனும் மகா பாகுபலமுள்ளவனுமான அர்ஜுனனைத் தவிர ஜயிக்கத்தகாதவர்களும் கொல்லத்தகாதவர்களுமான அந்த மற்றப் பாண்டவர்களை யுத்தத்தில் நீ தடுப்பாய்; என்றால் அந்த அர்ஜுனனுக்கு ஒப்பற்ற திவ்யமான பாசுபதாஸ்

[1] வேறு பாடம்.

பார்த்து ஜலத்தில் விளையாடுவதில் மிக்கவிருப்பமுள்ள வராஹரூபத்தை நினைத்தார். பிரபுவான விஷ்ணுவானவர், நான்குவேதமயமாக இருப்பதும் வேதங்களால் சொல்லப்பட்டயஜ்ஞரூபமாக இருப்பதும் பத்துயோஜனைதூரம் அகன்றதும் நூறுயோஜனைதூரம் நீண்டதும் பெரியமலைபோன்ற தேகத்தின்காந்தியுள்ளதும் கூரியதெற்றிப்பற்களுள்ளதும் அதிக காந்தியுள்ளதும் பெரிய மேகக்கூட்டத்தின் இடிமுழக்கம்போன்ற முழக்கமுள்ளதும் கார்மேகம்போன்றதுமான பன்றியின் வடிவத்தையெடுத்து யஜ்ஞவராஹராகி ஜலத்தில் இறங்கினர். ஒருதெற்றிப்பல்லால் பூமியை மேலேதூக்கி அதன் ஸ்தானத்தில் நிலைபெற்றிருக்கச்செய்தார். மிக்கதோள்வலிமையமைந்த பிரபுவான விஷ்ணுவானவர் மீண்டுமே கழுத்துக்குக்கீழ் மனுஷ்யசரீரமுள்ளதும் கழுத்துக்குமேல் ஸிம்மசரீரத்துடன்கூடியதுமான அபூர்வமான சரீரத்தை எடுத்துக்கொண்டும் ஒருகையினால் மற்றொருகையை முறுக்கிக்கொண்டும் தைத்யராஜனுடைய ஸபையை அடைந்தார். தைத்யர்களுக்கு ஆதிபுருஷனும் [1] தேவசத்துருவும், திதியின் புதல்வனும், அபூர்வதேகத்துடன்கூடின விஷ்ணுவைப்பார்த்துக் கோபத்தால் கண்கள் நன்குசிவந்தவனும், சூலத்தைக்கையிலெடுத்தவனும், மாலையை அணிந்தவனும், வீரனுமான ஹிரண்யகசிபுவானவன் மேகமுழக்கம்போன்ற கர்ஜனத்துடன் கூடியவனுகவும் கருமையானமேகங்களின் கூட்டத்திற்கு ஒப்பானவனுகவும் நரஸிம்மத்தை எதிர்த்தோடிவந்தான். பிறகு, அதிகபலசாலியும், மனுஷ்யசரீரத்துடனும் ஸிம்மசரீரத்துடனும் கூடினதுமான சிங்கத்தினல் மேலேபாய்ந்து கூர்மையுள்ள நகங்களினல் ஹிரண்யகசிபுவானவன் நன்றுகப் பிளக்கப்பட்டான். பகவானும் செந்தாமரைமலர்போன்ற கண்களுள்ளவரும் பிரபுவுமான ஸ்ரீமந்நாராயணர், சத்துருக்களைக்கொல்பவனை தைத்யராஜனை இவ்வண்ணம்கொன்று மீண்டும் உலகங்களுக்கு நன்மையைச்செய்வதற்காகக் கஶ்யபருக்குப் புத்திரராக அதிதியினல் கர்ப்பத்தில் தாங்கப்பட்டார். ஆயிரம்வருஷகாலம் நிரம்பினபிறகு, உத்தமமானகர்ப்பத்தை அதிதிதேவியானவள் ஈன்றுள். ஸூர்யபிரகாசமில்லாததினத்திலிருக்கிற மேகத்திற்கு ஒப்பான தேககாந்தியுள்ளவரும் பிரகாசிக்கின்றகண்களுள்ளவரும் குட்டையான வடிவத்தையுடையவரும் தண்டமுள்ளவரும் கமண்டலு

[1] பொருள் இரட்டித்தலால் இரண்டு சொற்கள் விடப்பட்டன.

வைத்தரித்தவரும் ஸ்ரீவத்ஸமென்கிற மச்சத்தால் மார்பில் அலங்கரிக்கப்பட்டவரும் ஜடைகளுள்ளவரும் யஜ்ஞோபவீதத்தைத் தரித்தவரும் பாலனுடையவடிவத்தைத் தரித்தவருமான பகவான் நாராயணர், அப்பொழுது அஸுரராஜனான பலிசக்கரவர்த்தியினுடைய யாகசாலையை அடைந்தார். அந்த வாமனவடிவத்தைத் தரித்தவரான பகவான், பிருஹஸ்பதியைத் துணைக்கொண்டு பலியின் யாகத்தில் பிரவேசித்தார். பலியானவன், குட்டையானசரீரமுள்ள அவரைப்பார்த்து, மிக்கமனக்களிப்படைந்து, 'பிராம்மணா! உன்னைப்பார்த்ததனால் ப்ரீதியுள்ளவனாக இருக்கிறேன். நீ சொல். உனக்கு எதை நான் கொடுக்கக்கடவேன்?' என்று வினவினான். பலியினால் இவ்வாறு வினவப்பட்ட தேவரான வாமனர் பலியைப்பார்த்து, 'ஸ்வஸ்தி (=மங்களம்)' என்று சொல்லிவிட்டுப் புன்சிரிப்புடன், 'தானவர்களுக்குப்பதியே! இப்பொழுது எனக்கு என்காலால் மூன்றடி அளவுள்ள பூமியைக்கொடு' என்று சொன்னார். பலியானவன் மனமகிழ்ந்து அளவு கடந்த தேஜஸுள்ள பிராம்மணருக்கு அவர்கேட்டவண்ணம் கொடுத்தான். பிறகு, காலடிகளால் பூமியை அளக்க எண்ணங்கொண்டபோது, ஹரிக்குத் திவ்யமாயும் மிக்க அத்புதமாயுமிருக்கிற உருவம் உண்டாயிற்று. கலங்கச்செய்யமுடியாதவரான அவர், மூன்று காலடிகளால் பூமியை விரைவாகக் கவர்ந்துகொண்டார். சாச்வதரும் தேவருமான விஷ்ணுவானவர் பூமியை இந்திரனுக்குக் கொடுக்கவும்செய்தார். இந்த வாமனருடைய அவதாரமும் உனக்குச் சொல்லப்பட்டது. அந்த வாமனாவதாரத்தால் தேவர்கள் அபிவிருத்தி அடைந்தார்கள். விஷ்ணுவினால் பலியினிடத்திலிருந்து மீட்கப்பட்டு இந்திரனுக்குக் கொடுக்கப்பட்டபடியால், உலகமும் வைஷ்ணவமென்று சொல்லப்படுகிறது. அவர் துஷ்டர்களைத் தண்டிப்பதற்காகவும் தர்மத்தைக்காப்பதற்காகவும் யதுக்களின்வீட்டில் மானிடர்களுள் அவதரித்திருக்கிறார். இவ்வண்ணம் அவதரித்திருக்கிற அந்தப் பகவானை விஷ்ணுவானவர் க்ருஷ்ணனென்று சொல்லப்படுகிறார்.

ஸைந்தவ! ஆதியந்தமில்லாதவரும் பிறப்பில்லாதவரும் தேவரும் பிரபுவும் உலகங்களால் நமஸ்கரிக்கப்பட்டவருமான பகவானுடைய செய்கைகளை வித்வான்கள் கானம்செய்கிறார்கள். எவரை ஒருவராலும் ஜயிக்கப்படாதவரென்றும் கிருஷ்ணனென்றும் சங்கத்தையும் சக்கரத்தையும் கதையையும் தரித்தவரென்றும் ஸ்ரீவத்ஸ

மென்கிற மறுவையுடையவரென்றும் பீதாம்பரதாரியென்றும் சொல்லுகிறார்களோ அந்தக் கிருஷ்ணனால் அஸ்திரங்களை அறிந்தவர்களுள் சிறந்தவனான அந்த அர்ஜுனன் பாதுகாக்கப்படுகிறான், ஒப்பற்ற ஆற்றலுள்ளவரும் ஸ்ரீமானும் செந்தாமரைமலர்போன்ற கண்களுள்ளவருமான பகவான் துணையாக இருந்து ஒரே ரதத்தில் பார்த்தனை ரதிகனாக வைத்துக்கொண்டு சத்துருவீரர்களைக் கொல்லப் போகிறார். அந்தப் பகவானுடைய உதவியினால், பிறரால் தாங்க முடியாத அந்த அர்ஜுனன் தேவர்களாலும் ஜயிப்பதற்கு ஸாத்தியப்படாதவனாக இருக்கிறான். அவ்வாறிருக்க, மனுஷ்யத் தன்மையுள்ள எந்த மனிதன் யுத்தத்தில் பார்த்தனை ஜயிப்பான்? வேந்தனே! அவனொருவனை விட்டுவிட்டு யுதிஷ்டிரனுடைய எல்லாச் சேனையையும் பகைவர்களான நான்கு பாண்டவர்களையும் ஒரு தினம் ஜயிப்பாய். ஆகையால், நீ அர்ஜுனனைத் தவிர மற்றப் பாண்டவர்களைத் தடுப்பாய். புருஷஶ்ரேஷ்டனே! என்னால் இந்த வரம் உனக்குக் கொடுக்கப்பட்டது' என்று சொன்னார். ராஜஶ்ரேஷ்டனே! ஸிந்துராஜனைப்பார்த்து இவ்வண்ணமுரைத்து எல்லாப் பாவங்களையும் அபஹரிப்பவரும் உமையவளுக்குப்பதியும் பசுபதியும் (தக்ஷனுடைய) யாகத்தை அழித்தவரும் முப்புரங்களை நாசம்செய்தவரும் பகனுடைய கண்களைக் கீழேதள்ளினவரும் உமையவளைத் துணையாகக்கொண்டவரும் பகவானும் முக்கண்ணருமான பரமசிவன், குள்ளர்களும் பெரிய ரூபத்தைத் தரித்தவர்களும் கூனர்களும் உக்கிரமான காதுகளும் கண்களுமுள்ளவர்களும் கோரரூபிகளும் பலவித ஆயுதங்களைக் கையிலெடுத்திருப்பவர்களுமான பாரிஷதர்களால் சூழப்பட்டவராக, அந்த இடத்திலேயே மறைந்தார், இவ்வண்ணமுரைக்கக்கேட்ட அரசனான ஸைந்தவன் தன் வீட்டையே நோக்கிச் சென்றான். பாண்டவர்களும் அப்படியே அந்தக் காம்யகவனத்தில் வஸித்தார்கள்" என்று சொன்னார்.

ஜயத்ரதவிமோக்ஷணபர்வம் முற்றிற்று.

---

## இருநூற்றெழுபத்துநான்காவது அத்யாயம்.

## ராமோபாக்யான பர்வம்.

(யுதிஷ்டிரர், தமக்கொப்பான துக்கமுள்ளவன் உலகத்தி லிருக்கிறனுவென்று மார்க்கண்டேயரை வினவியது.)

ஜனமேஜயர், "இவ்வண்ணம் அதிகதுன்பத்தை அடைந்து க்ருஷ்ணை மீட்கப்பட்ட பிறகு, புருஷஸ்ரேஷ்டர்களான பாண்டவர்கள் யாதுசெய்தனர்?" என்று வினவ, வைசம்பாயனர், "தர்ம ராஜரான யுதிஷ்டிரர், ஜயத்ரதனை ஜயித்து க்ருஷ்ணையை இவ்வண்ணம் விடுவித்து முனிவர்களுடைய கணங்களோடு வீற்றிருந்தார். பாண்டவர்களுடைய விருத்தாந்தங்களைக் கேட்பவர்களும் அனு தாபத்தை அடைகிறவர்களுமான அந்த மஹரிஷிகளின் மத்தியில் பாண்டுநந்தனரான யுதிஷ்டிரர், மார்க்கண்டேயரைப் பார்த்து, பின்வருமாறு வினவலானர். 'பகவானே! தேவரிஷிகளுள் நீர் பிரஸித்திபெற்றவர்; சென்றதையும் வருவதையும் அறிந்தவர். என் உள்ளத்திலுள்ள ஸந்தேகத்தை வினவுகிறேன். (அதனைப்) போக்குவீராக. இந்த த்ருபதனுடையபுத்திரியோ யாகவேதி யின் மத்தியிலிருந்து உதித்தவள்; மனிதகர்ப்பத்தினின்று உண் டானவளல்லள்; மகாபாக்கியவதி; மஹாத்மாவான பாண்டு வின் மருமகள். மகிமையுடைய காலமும், தெய்வமும், பிராணி களுக்கு அவசியம் வருவனவான நன்மை தீமைகளும் மீறமுடியா தவை. அவற்றுக்கு மாறுதலில்லையென்று எண்ணுகிறேன். எங்களுக்கு மனைவியும் தர்மங்களை அறிந்தவளும் தர்மங்களை அனுஷ்டிப்பவளுமான பாஞ்சாலியை, சுத்தனைப் பொய்யான திருட்டுக்குற்றம் அடைவதுபோல, இப்படிப்பட்ட அபகரிக்கப் படுதலென்னும் துன்பமானது எவ்வாறு அடைந்தது? த்ரௌ பதியினால் ஒரு பாவமும் செய்யப்படவில்லை; ஒரு ஸமயத்திலாவது இகழப்பட்ட கார்யம் செய்யப்படவில்லை. பிராம்மணர்கள் விஷ யத்திலேயே மிக்க தர்மம் நன்கு செய்யப்பட்டிருக்கிறது. அப்ப டிப்பட்ட திரௌபதியை, மூடபுத்தியுள்ள ஜயத்ரதராஜன் பலாத் காரமாகக் கவர்ந்தான். அவளைக் கவர்ந்ததனால் ஸஹாயர்களோடு கூடின பாவியான ஜயத்ரதன் தலையில் மயிர்சிதைத்தலையும் யுத் தத்தில் தோல்வியையும் அடைந்தான். அந்த ஸைந்தவனுடைய சேனையைக் கொன்று எங்களால் அப்படியே த்ரௌபதி மீட்டுக்

கொண்டுவரப்பட்டாள். எங்களால் எதிர்பார்க்கப்பட்டிராத அப்படிப்பட்ட மனைவிகவரப்படுதலாகிய துக்கமும் இந்தத் துக்ககரமான வனவாஸமும் வேட்டையாடி ஜீவிப்பதும் பந்துக்களைப் பிரிந்து வேறிடத்தில் வஸித்தலும் அடையப்பட்டன. வீணைகத் தவவேஷம் பூண்டவர்களான எங்களால் காட்டில் வஸிப்பவர்களுடன் சேர்ந்து காட்டிலுள்ள மிருகஜாதிகளின் இந்த வதமும் செய்யப்படுகிறது. என்னோடொத்த மிக்க பாக்கியஹீனனான ஒரு மனிதன் உலகத்திலிருக்கிறானா? எங்கேயாவது தேவரீரால் முன்னம் பார்க்கப்பட்டிருக்கிறானா? அல்லது, கேட்கப்பட்டிருக்கிறானா?' என்று வினவினர்.

---

## இருநூற்றெழுபத்தைந்தாவது அத்யாயம்.

## ராமோபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

(மார்க்கண்டேயர் யுதிஷ்டிரரைக்குறித்து ராமோபாக்கியானத்தைச் சொல்லத் தொடங்கியதும், ராமர்முதலியவர்களுடைய அவதாரமும், ராவணனுடைய உத்பத்தியைக் கூறுமுறையில் குபேரனுடைய உத்பத்தியும்.)

மார்க்கண்டேயர், 'பரதஸ்ரேஷ்டனே! ராமரால் நிகரில்லாத துக்கம் அடையப்பட்டது. அவருடைய (பார்யையான) ஜானகியானவள், மிக்க பலசாலியும் கெட்ட எண்ணமுள்ளவனும் ராக்ஷஸர்களுக்கு அரசனுமான ராவணனென்கிற ராக்ஷஸனால் மாயையைக் கைக்கொண்டு பலத்தினால் ஜடாயுவென்கிற கழுகைக் கொன்று ஆஸ்ரமத்திலிருந்து அபஹரிக்கப்பட்டாள். ராமர் ஸுக்ரீவனுடைய பலத்தை அடுத்துக் கடலுக்கு அணைகட்டிக் கூர்மையுள்ள பாணங்களால் லங்கையை எரித்து அவளை மீட்டுக்கொண்டு வந்தார்' என்று சொன்னார்.

யுதிஷ்டிரர், 'பகவானே! ராமர் எந்தக் குலத்தில் பிறந்தவர்? எவ்விதமான வீர்யமுள்ளவர்? எவ்விதமான பராக்கிரமமுள்ளவர்? ராவணன் யாருடைய புத்திரன்? அவனுக்கு அந்த ராமரோடு என்ன வைரம்? பகவானே! இவை அனைத்தையும் எனக்கு நன்கு சொல்லக்கடவீர். உம்மால் எல்லாம் உள்ளபடி நேரில் காணப்பட்டிருக்கின்றன. புகழத்தக்க செய்கைகளுள்ள ராமருடைய சரித்திரத்தைக் கேட்க விரும்புகிறேன்' என்று சொல்ல, மார்க்

கண்டேயர், 'இக்ஷ்வாகுவம்சத்தில் தோன்றினவனும் மகானு மான அஜனென்கிற ஒரு வேந்தன் இருந்தான். அவனுக்கு எப்பொழுதும் வேதாத்தியயனம்செய்பவனும் சுத்தனுமான தசரதனென்கிற ஒரு புத்திரனிருந்தான். அவனுக்கு அறம் பொருள்களை அறிந்தவர்களான ராமன், லக்ஷ்மணன், மிக்க பல சாலியான பரதன், சத்துருக்னன் என்கிற நான்கு புத்திரர்கள் உண்டானார்கள். கௌஸல்யை என்பவள் ராமனுடைய மாதா. கைகேயியானவள் பரதனுடைய தாயார். ஸுமித்ரைக்குப் பகை வர்களை வாட்டுபவர்களான லக்ஷ்மணனும் சத்துருக்னனும் புத்தி ரர்கள். பிரபுவே! ஜனகன் விதேகதேசத்து அரசன். பிரம்மதேவர் தாமே எந்த ஸீதையென்பவளை (ஸங்கல்பத்தினாலேயே) ராம ருக்கு அன்புக்குரிய மனைவியாகப் படைத்தாரோ அவள் அந்த ஜனகனுடைய புதல்வி. ராமர் ஸீதை இவர்களின் இந்தப் பிறப் பானது உனக்கு உரைக்கப்பட்டது. ஜனங்களுக்கு ஈச்வரனே! ராவணனுடைய பிறப்பையும் உனக்கு விரிவாகச் சொல்லுவேன்.

தாமாகத் தோன்றினவரும் எல்லா உலகங்களையும் படைப் பவரும் பிரபுவும் மிக்க தவமுள்ளவருமான பிரம்மதேவர் ராவண னுக்கு நேரே பாட்டனார். அந்தப் பிரம்மதேவருக்கு புலஸ்த் யரென்கிற அன்புள்ள புத்திரர் மனத்திலிருந்து உண்டானார். அவருக்குக் கோ என்கிற பார்யையினிடத்தில் வைச்ரவணனென் கிற பிரபுவான புத்திரன் பிறந்தான். அவன் பிதாவை விட்டு விட்டுப் பிதாமஹரை அடைந்தான். அரசனே! பிதாவான புலஸ் தியர் வைச்ரவணன்மீதுண்டான கோபத்தால் தம் ஸ்வ ரூபத்தை யோகபலத்தால் விச்ரவஸென்கிற வேறு தேகமாகப் படைத்தார். அந்தப் புலஸ்த்யருடைய சரீரத்தின் பாதியினால் வைச்ரவணன்மீதுண்டான கோபத்தைத் தீர்ப்பதற்காகக் கோ பத்துடன்கூடின அந்த விச்ரவஸென்கிற பிராம்மணர் உண்டா னார். பிரபுவான பிதாமஹரோ ப்ரீதியுள்ள மனத்துடன் வைச்ர வணனுக்கு அமரத்தன்மையையும் தனங்களுக்கு ஈச்வரனாக இருத்தலையும் லோகபாலனாக இருத்தலையும் ஈச்வரரோடு நட்பை யும் நளகூபரனென்கிற புத்திரனையும் ராக்ஷஸர்களுடைய கணங்க ளோடுகூடின லங்கை என்கிற ராஜதானியையும் நினைத்தவண்ணம் செல்லுகின்ற புஷ்பகமென்கிற விமானத்தையும் யக்ஷர்களுக்கு அதிபதியாக இருத்தலையும் அரசர்களுக்கரசனாயிருக்கும் பெரும் பதத்தையும் கொடுத்தார்.

---

## இருநூற்றெழுபத்தாறுவது அத்யாயம்.

## ராமோபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

(விஶ்ரவஸானவர் மூன்றுமனைவிகளிடம் ராவணன் முதலியவர்களை உண்டுபண்ணியதும், ராவணன் தம்பிகளுடன் சேர்ந்து தவத்தினால் ப்ரம்மாவினிடம் வரம்பெற்றுப் புஷ்பகவிமானத்தைக் கவர்ந்துகொண்டு குபேரனை லங்கையைவிட்டு ஓட்டித் தான் அங்கு வஸித்ததும்.)

புலஸ்தியருடைய கோபத்தினால் அவருடைய பாதித் தேகம் எந்த முனிவராயிற்றோ விஶ்ரவஸென்கிற பிரஸித்திபெற்றவரும் கோபத்துடன்கூடினவருமான அந்த முனிவர், வைஶ்ரவணனைப் பார்த்தார். ராக்ஷஸேஶ்வரனான குபேரன், அந்த விஶ்ரவஸென்கிற பிதாவைக் கோபத்துடனிருக்கிறாரென்று அறிந்தான். வேந்தனே! அவரைத் தெளிவிப்பதற்காக எப்பொழுதும் முயன்றான். அந்த ராஜராஜனான நரவாஹனன் லங்கையில் வாஸம் செய்தான். அவன் பிதாவுக்கு மூன்று ராக்ஷஸஸ்த்ரீகளை வேலைக்காரிகளாகக் கொடுத்தான். பரதஶ்ரேஷ்டனே! ஆடுவதிலும் பாடுவதிலும் வல்லவர்களான அவர்கள் எப்பொழுதும் மகாத்மாவான அந்த விஶ்ரவஸ்ரிஷியை ஸந்தோஷமடையச் செய்வதற்கு முயன்றார்கள். பிரஜைகளுக்கு அதிபதியே! அரசனே! அழகிய இடையுள்ளவர்களான புஷ்போத்கடையும் ராகையும் மாலினியும், அன்யோன்யம் போட்டியோடு, நன்மையை அடைவதில் விருப்பமுள்ளவர்களாக ரிஷிக்குப் பணிவிடை செய்து வந்தார்கள். மஹாத்மாவும் பகவானுமான அந்த விஶ்ரவஸானவர் அவர்களிடம் ஸந்தோஷமடைந்து ஒவ்வொருத்திக்கும் அவளவள் விரும்பினவண்ணம் லோகபாலர்களுக்கொப்பான புத்திரர்களை வரன்களாகக் கொடுத்தார். புஷ்போத்கடையினிடம் ராக்ஷஸர்களுக்கு ஈஶ்வரர்களும் பூமியில் பலத்தால் ஒப்பற்றவர்களுமான தசக்ரீவன் கும்பகர்ணன் என்கிற இரண்டுபுத்திரர்கள் உண்டானார்கள். மாலினியானவள் விபீஷணனென்கிற ஒருபுத்திரனை ஈன்றாள். ராகையினிடத்தில் கரன் சூர்ப்பணகை என்கிற ஓர் ஆணும் ஒரு பெண்ணும் உண்டாயினர். விபீஷணனோ ரூபத்தால் எல்லாரைக்காட்டிலும் மேலானவனாக இருந்தான். அந்த விபீஷணன் மகாபாக்யசாலியும் தர்மங்களைப் பாதுகாப்பவனும் நல்ல கர்மானுஷ்டானத்தில் பற்றுள்ளவனுமாயிருந்தான். தசக்ரீவனோ எல்லாரைக்காட்டிலும் சிறந்தவனும்

ராக்ஷஸர்களுக்கு அரசனும் அதிக உத்ஸாஹமுள்ளவனும் அதிக வீர்யமுள்ளவனும் அளவற்ற பலமும் பராக்கிரமமுமுள்ளவனுமானுன். கும்பகர்ணனென்கிற ராக்ஷஸனோ, மாயாவியும் யுத்தத்தில் ஸமர்த்தனும் பயங்கரமானவனும் யுத்தத்தில் பலத்தால் எல்லாரைக்காட்டிலும் மேலிட்டவனுமானுன். கரனென்கிற ராக்ஷஸன் வில்லில் அதிகவல்லமையுள்ளவனும் பிராம்மணர்களைப் பகைப்பவனுமானுன். அப்பொழுது, சூர்ப்பணகையானவள் பயங்கரியும் ஸித்தர்களுக்கு இடையூற்றை உண்டுபண்ணுகிறவளுமாயிருந்தாள். எல்லாரும் வேதத்தை அறிந்தவர்கள். எல்லாரும் சூரர்கள்; விரதங்களை நன்கு அனுஷ்டித்தவர்கள்; பிதாவோடுகூடக் கந்தமாதன பர்வதத்தில் பற்றுதலுள்ளவர்களாக வாஸம் செய்து வந்தார்கள்; பிறகு, அந்தப்பர்வதத்தில் பிதாவோடுகூட நன்ருக வீற்றிருப்பவனும் இணையில்லாத செல்வப்பெருக்குடன் கூடியவனும் நரவாஹனனுமான வைஶ்ரவணனைக் கண்டார்கள்.

பிறகு, அவர்கள் கோபமுள்ளவர்களாகவும் தவம்புரிவதற்கு நிச்சயங்கொண்டவர்களாகவும் கடுந்தவத்தினுல் அப்பொழுது பிரம்மாவை ஸந்தோஷமடையும்படி செய்தார்கள். தசக்ரீவன் வாயுவைப் பக்ஷிக்கின்றவனும் நான்கு அக்னிகளின் மத்தியிலிருந்துகொண்டு சூரியனிடத்தில் கண்களை வைத்தவனும் நன்ருக இந்திரியங்களையும் மனத்தையும் அடக்கினவனுமாக ஆயிரம் வர்ஷகாலம் ஒருகாலால் நின்று தவம்புரிந்தான். கும்பகர்ணன் தரையில் படுத்தவனும் ஆகாரமில்லாதவனும் கடுமையான விரதத்தையுடையவனுமாகத் தவம்புரிந்தான். அதேஸமயத்தில், புத்திமானும் உதார எண்ணமுள்ளவனுமான விபீஷணன், உபவாஸத்தில் பற்றுதலுள்ளவனும் எப்பொழுதும் மந்திரங்களை ஜபிப்பதிலேயே பற்றுதலுள்ளவனுமாக உலர்ந்த இலைகளையே ஆகாரமாக உட்கொண்டு கடுந்தவம்புரிந்தான். கரனும் சூர்ப்பணகையும், ஸந்தோஷமுள்ள மனத்துடன், தவத்தைச் செய்கின்ற அந்த ராவணன்முதலியவர்களுக்குப் பணிவிடையையும் பாதுகாவலையும் செய்தார்கள். ஒருவராலும் அவமதிக்கமுடியாதவனுன தசகண்டன் ஆயிரம் வருஷம் நிரம்புந்தோறும் (ஒவ்வொரு தலைவீதம்) தன்தலைகளை அறுத்து அக்னியில் ஹோமம் செய்தான். அதனுல், உலகங்களுக்குப் பிரபுவான பிரம்மதேவர் ஸந்தோஷமடைந்தார். பிறகு, பிரம்மதேவர் தாமே அவர்களிடம் சென்று அவர்களனைவரையுமே வரங்கொடுப்பதாகத் தனித்

தனி ஆசைகாட்டித் தவத்தினின்று தடுத்தார். பிரம்மா, 'அரு மையான புத்திரர்களே! உங்கள்விஷயத்தில் நான் ப்ரீதியுள்ளவ னாக இருக்கிறேன். திரும்புங்கள். வரன்களைக் கேளுங்கள். சாகாம லிருப்பதொன்றைத்தவிர, எது எது இஷ்டமோ அது அது அப் படி அப்படியே உண்டாகட்டும். பெரியபதத்தை அடைய் வேண்டுமென்கிற எண்ணத்தால் எந்த எந்தத் தலையானது அக்னி யில் ஹோமஞ்செய்யப்பட்டதோ அந்த அந்தத்தலை முழுமையும் அப்படியே உன்னுடைய தேகத்தில் உன்னிஷ்டப்படி உண்டா கும். உன்தேகத்தில் விகாரமும் உண்டாகாது. நினைத்தவண்ணம் ரூபங்களைத் தரிப்பவனாவாய். யுத்தத்தில் சத்துருக்களை ஜயிப் பாய். ஸம்சயமில்லை' என்று சொன்னார். ராவணன், 'கந்தர் வர்கள், தேவர்கள், அசுரர்கள், யக்ஷர்கள், ராக்ஷஸர்கள், நாகர் கள், கின்னரர்கள், பூதங்கள் இவர்களிடத்திலிருந்து எனக்கு அவமானம் உண்டாகக் கூடாது' என்று வேண்டினான்.

பிரம்மதேவர், 'உன்னால் சொல்லப்பட்ட கந்தர்வர்கள் முத லான இந்த வீரர்களனைவரிடத்தினின்றும் உனக்குப் பயம் இல்லை. மனிதனைத்தவிர மற்றவர்களிடத்தினின்று உனக்கு நன் மையுண்டாகும். என்னால் அது அவ்வாறு ஏற்படுத்தப்பட் டிருக்கிறது' என்று கூறினார். இவ்வண்ணம் உரைக்கக்கேட்ட தசக்ரீவன் அப்பொழுது ஸந்தோஷமுள்ளவனானான். கெட்ட புத்தியுள்ள அந்த ராக்ஷஸன் மனிதர்களை மதிக்கவில்லை. பிறகு, பிரபிதாமஹர், அப்படியே கும்பகர்ணனைப்பார்த்து, 'வரத்தைப் பெற்றுக்கொள். உனக்கு மங்களம். ப்ரீதியுள்ளவனாக இருக் கிறேன்' என்று மீண்டும் மீண்டும் சொன்னார். தமோகுணத் தால் கவரப்பட்ட புத்தியுள்ளவனான அந்தக் கும்பகர்ணன் பெரிய தூக்கத்தை வரித்தான். பிரம்மா, 'அப்படியே ஆகும்' என்று சொல்லிவிட்டு, விபீஷணனை அடைந்து, 'புத்ர! நீ வரத்தைக் கேள். ப்ரீதியுள்ளவனாக இருக்கிறேன்' என்று அடிக்கடி சொன்னார். விபீஷணன், 'அதிகமான ஆபத்தை அடைந்திருந்த போதிலும் என்புத்தியானது அதர்மத்தில் செல்லவேண்டாம். பகவானே! குருவின் உபதேசமில்லாமலே பிரம்மாஸ்திரமானது எனக்குத் தோற்றவேண்டும்' என்று கேட்டுக்கொண்டான். பிரம்மா, 'சத்துருக்களை நாசஞ்செய்பவனே! ராக்ஷஸஜாதியில் பிறந்திருந்தாலும் உன்னால் அதர்மத்தில் புத்தியானது வைக்கப் படவில்லையாதலால் உனக்கு மரணமில்லாமையைக் கொடுத்தேன்.

என்றார். பிரஜைகளுக்குப்பதியே! ராக்ஷஸனான தசக்ரீவனே, வரத்தைப் பெற்று யுத்தத்தில் குபேரனை ஜயித்து அவனை லங்கையைவிட்டு ஓடச்செய்தான். பகவானான அந்தத் தனேசுவரன் லங்கையைவிட்டுக் கந்தர்வர்களாலும் யக்ஷர்களாலும் பின் தொடரப்பட்டவனாக ராக்ஷஸர்களோடும் கிம்புருஷர்களோடும் கந்தமாதனத்தில் பிரவேசித்தான். ராவணன் அந்த வைச்ரவணனுடைய புஷ்பகவிமானத்தையும் பலாத்காரத்தால் கைப்பற்றிக் கொண்டான். அந்தக் குபேரன், அவனை நோக்கி, 'இந்த விமானம் உன்னைச்சுமக்காது. எவன் உன்னை யுத்தத்தில் கொல்லுவனோ அவனையே இந்தவிமானம் சுமக்கும். மேலும், குருவையும் என்னையும் அவமதித்ததனால் நீ விரைவாக நாசமடைவாய்' என்று சபித்தான். மஹாராஜனே! தர்மாத்மாவான விபீஷணனோ, தார்மிகர்களுடைய வழியைநினைத்துக்கொண்டு நிகரற்ற செல்வத்துடன்கூடிக் குபேரனை அனுஸரித்தான். சிறந்த புத்தியுள்ளவனும் ப்ராதாவும் பகவானுமான அந்தத் தனேசுவரன் மகிழ்ச்சியுடன் அந்த விபீஷணனுக்கு யக்ஷராக்ஷஸ ஸேனைகளுக்குத் தலைமையைக் கொடுத்தான். ராக்ஷஸர்களும் மனிதர்களைத் தின்னுகின்ற மகாபலமுள்ள பிசாசங்களும் எல்லாரும் ஒன்று சேர்ந்து ராவணனை அரசனாகப் பட்டாபிஷேகம் செய்தார்கள். நினைத்தவண்ணம் உருவத்தையெடுப்பவனும் ஆகாயத்தில் ஸஞ்சரிப்பவனும் பலத்தால் அடங்காத மதமுள்ளவனுமான தசக்ரீவன், தைத்யர்கள் தானவர்கள் இவர்களுடைய சிறந்த பொருள்களை வலிமைசெய்து கவர்ந்தான். உலகத்திலுள்ளோர்களைத் தன் கொடிய செய்கைகளால் ராவம்செய்ய(=அலற)ச் செய்ததனால் ராவணனென்று சொல்லப்படுகிறான். தசக்ரீவன் தன் இஷ்டப்படி பலத்தைப்பெற்றுத் தேவர்களுக்குப் பயத்தை உண்டு பண்ணினான்.

## இருநூற்றெழுபத்தெட்டாவது அத்யாயம்.

## ராமோபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

(தசரதன் ராமனுக்கு இளவரசுப் பட்டம்கட்ட முயன்றதும், மந்தரையினால் கோபமூட்டப்பட்ட கைகேயியின் சொல்லால் ராமர் ஸீதையுடனும் லக்ஷ்மணனுடனும் கானகம் சென்றதும் லக்ஷ்மணன் சூர்ப்பணகையின் மூக்கையரிந்ததும், ராமர் யுத்தத்திற்கு வந்த கரன்முதலியவர்களைக் கொன்றதும், ராவணன் ராமனுக்குத் தீமை செய்ய விரும்பி மாரீசனிடம் சென்றதும்.)

யுதிஷ்டிரர், 'பகவானே! தேவரீரால் தனித்தனியாக ராமர் முதலியவர்களுடைய பிறப்பானது சொல்லப்பட்டது. பிராம்மணரே! அவர்கள் வனத்துக்குச் சென்றதற்குக் காரணத்தைக் கேட்க விரும்புகிறேன். சொல்லக்கடவீர். பிராம்மணரே! தசரதகுமாரர்களும் வீரர்களும் பிராதாக்களுமான ராமரும் லக்ஷ்மணனும் கீர்த்தியுள்ளவளான ஸீதையும் எவ்வாறு கானகத்திற்கு அனுப்பப்பட்டார்கள்?' என்று வினவ, மார்க்கண்டேயர், 'அரசனே! நற்காரியங்களில் பற்றுள்ளவனும் தர்மத்தில் பற்றுள்ளவனும் எப்பொழுதும் ஞானவ்ருத்தர்களை உபாஸிப்பவனுமான தசரதன், புத்திரர்கள் பிறந்ததனால் மகிழ்ச்சியுள்ளவனானன். அந்தத் தசரதனுடைய அந்தப் புத்திரர்கள் நாளடைவில் அதிக பலமுள்ளவர்களும் வேதங்களிலும் ரஹஸ்யங்களுடன்கூடின தனுர்வேதங்களிலும் கரையை அடைந்தவர்களுமாக வளர்ந்தார்கள். அரசனே! அவர்கள், பிரம்மசர்யத்தை நிறைவேற்றித் தாரங்களை மணந்துகொண்டார்கள். தசரதன் ராமரைப் பார்த்து ப்ரீதியுள்ளவனும் ஸுகமுள்ளவனுமானன. அந்தப் புத்திரர்களுள் ராமர் மூத்தவராயிருந்தார்; பிரஜைகளை (தம் குணங்களால்) மகிழ்வித்தார். சிறந்த புத்தியுள்ள ராமர், மனத்தைக் கவருந் தன்மையுடையவராதலால், பிதாவின் உள்ளத்தை ஆனந்திக்கச் செய்தார்.

பாரத! பிறகு, நல்ல புத்தியுள்ள அந்தத் தசரதராஜன் தான் வயது முதிர்ந்தவனானதை எண்ணி, ராமனுக்கு இளவரசுப்பட்டத்தில் அபிஷேகம் செய்விப்பதற்காக மந்திராலோசனை முறையை அறிந்தவர்களான மந்திரிகளோடும் புரோஹிதர்களோடும் ஆலோ

சனை செய்தான். மந்திரிகளுள் சிறந்தவர்களான அவர்களனைவரும் (முடிசூட்டுதற்கு) அது தகுந்தஸமயமென்று நினைத்தார்கள். சிவந்த கண்களுள்ளவரும் நீண்டபுஜங்களுள்ளவரும் மதயானைபோல நடப்பவரும் வலம்புரிச்சங்கம்போன்ற கழுத்துள்ளவரும் அகன்றமார்புள்ளவரும் கறுத்தும் சுருண்டுமிருக்கிற தலைமயிர்களையுடையவரும் காந்தியினால்ஜ்வலிப்பவரும் வீரரும் பலத்தில் இந்திரனைக்காட்டிலும் குறைவில்லாதவரும் எல்லாத்தர்மங்களின் கரையையும் அடைந்தவரும் புத்தியில்பிருஹஸ்பதிபோன்றவரும் பிரஜைகளால் எல்லாவிதத்தாலும் அன்புகாட்டப்பெற்றவரும் எல்லாவித்தைகளிலும் ஸமர்த்தரும் இந்திரியங்களை அடக்கினவரும் பகைவர்களின் கண்களையும் மனத்தையும் கவர்பவரும் துஷ்டர்களைச் சிக்ஷிப்பவரும் தர்மசாரிகளைப்பாதுகாப்பவரும் சிறந்த தைர்யமுள்ளவரும் ஒருவராலும் மீறப்படமுடியாதவரும் (சத்துருக்களை) ஜயிப்பவரும் சத்துருக்களால் வெல்லப்படாதவரும் கௌஸல்யைக்கு ஆநந்தத்தைவிருத்திசெய்பவரும் குலத்தைஸந்தோஷிக்கச் செய்பவருமான புத்திரரைப்பார்த்து, தசரதராஜன், மிக்க மகிழ்ச்சியை அடைந்தான். [1] உனக்கு மங்களம். மகாதேஜஸ்வியும் சிறந்தவீர்யமுள்ளவனுமான தசரதன், ராமருடையகுணங்களைச் சிந்தித்து மகிழ்ச்சியுடன் புரோகிதரைப்பார்த்து, 'பிராம்மணரே! இன்று இரவில் புஷ்யநக்ஷத்திரமானது பரிசுத்தமான யோகத்தை அடையப்போகிறது. அபிஷேகத்திற்குரிய ஸாமக்ரிகளைச் சேகரிக்கவேண்டும். ராமனையும் என்னிடம் அழைத்து வரவேண்டும். எந்தப் புஷ்ய நக்ஷத்திரத்தில் புத்திரனான ராமன் மந்திரிகளோடும் பட்டணத்து ஜனங்களோடும் சேர்ந்து என்னால் யௌவராஜ்யத்தில் அபிஷேகம் செய்விக்கத்தக்கவனோ அந்த நக்ஷத்திரமானது நாளைத்தினமே வரப்போகிறது' என்று சொன்னான். பிறகு, மந்தரையானவள், இவ்வாறான தசரதராஜனுடைய வசனத்தைக்கேட்டுக் கைகேயியிடம் சென்று, 'கைகேயி! இப்பொழுது அரசனால் உன்னுடைய பெரிதான துர்ப்பாக்கியமானது வெளியிடப்பட்டது. துர்ப்பாக்கியமுள்ளவளே! கோபம் மிகுந்த கருநாகமானது மறைந்திருந்து உன்னைக் கடிக்கிறது. எந்தக்கௌஸல்யையினுடையபுத்திரன் அபிஷேகம் செய்விக்கப்படப்போகிறானோ அவளல்லவோ நல்ல பாக்கியவதி?

[1] இந்த வாக்கியத்தை இங்ஙனம் யுதிஷ்டிரருக்காக்குவது பழைய வுரை; புரோஹிதருக்காக்குவது இங்கிலிஷ் மொழிபெயர்ப்பு.

எவளுடையபுத்திரன், ராஜ்யத்தை அடையவில்லையோ அப்படிப் பட்ட உனக்கு ஸௌபாக்கியமேது?' என்று ஸமயத்தில் இந்த வசனத்தை உரைத்தாள். எல்லா ஆபரணங்களாலும் அலங் கரிக்கப்பட்டவளும் யாகவேதிபோல் மெல்லியஇடையுள்ளவளும் உத்தமமான ரூபத்தைத்தரிக்கிறவளுமான அந்தக்கைகேயியான வள், அந்தமந்தரையின் சொல்லை அறிந்துகொண்டு, ஏகாந்தத்தில் பர்த்தாவைஅடைந்து நகைப்பவள்போலவும் அழகியபுன்னகை யுடன் [1] அச்சத்தை விளைவிப்பவள்போலவும், 'சொல்தவறாத வரே! நீர் எனக்கு முன்பு விரும்பிய ஒன்றைக்கொடுப்பதாக (ச்சொல்லியிருக்கிறீர்). அரசரே! அதனை இப்பொழுது கொடுத்து அப்படிப்பட்ட கஷ்டத்தினின்று (உம்மை) விடுவித்துக்கொள் வீராக. வரத்தைக்கொடுப்பவரே! அரசரே! எனக்குக்கொடுத்த அந்தவரத்தை இப்பொழுது ஸத்தியமாகச்செய்யும்' என்று இனி மையான சொல்லைச்சொன்னாள்.

அரசன், 'உனக்கு ஸந்தோஷத்தோடு வரத்தைக்கொடுக்கக் கடமைப்பட்டிருக்கிறேன். எதை விரும்புகிறாயோ அதைப் பெற்றுக்கொள்வாயாக. இப்பொழுது கொல்லப்படத்தகாதவன் எவன் கொல்லப்படவேண்டும்? கொல்லப்படத்தக்கவன் எவன் இப் பொழுது விடப்படவேண்டும்? இப்பொழுது எவனுக்கு நான் தனத்தைக் கொடுக்கவேண்டும்? எவனுடையபொருள் இப்பொழுது பறிக்கப்படவேண்டும்?' இந்தப்பூமியில் பிராம்மணர்களுக்கு உரியதைத்தவிர் வேறானசொத்து ஒருசிறிது எனக்கு இருக்கிறது. பூமியில் அரசர்க்கரசனாக இருக்கிறேன்; நான்குவர்ணத்தார்களையும் காப்பவனாக இருக்கிறேன். கல்யாணி! உன்னால் எந்தவஸ்து விரும் பப்பட்டதோ அதை விளம்பமில்லாமல் 'சொல்வாயாக' என்று சொன்னான். அந்தக்கைகேயி, அரசனுடைய வசனத்தை நன்றாகத் தெரிந்துகொண்டும் அவனைக் கட்டுப்படுத்திக்கொண்டும் தன்னுடைய பலத்தை அறிந்துகொண்டும், பிறகு, அரசனை அவனைப்பார்த்து, 'ராமனுடைய பட்டாபிஷேகத்துக்காக எந்தஸாமக்ரிகள் உம்மால் சேகரிக்கப்பட்டிருக்கின்றனவோ அவைகளைப் பரதனடையவேண் டும். ராமன் வனம் செல்லவேண்டும். ராமன் மரவுரியையும் மான்தோலையும் உடுத்துச் சடைதரித்துத் தாபஸவேஷம்பூண்டு பதினான்குவருஷகாலம் தண்டகாரண்யத்தை அடைந்திருக்க

[1] 'காதலைக் காட்டுகிறவள்போலவும்' என்பது வேறுபாடத்தின் பொருள்.

வேண்டும்' என்று சொன்னாள். பரதஸ்ரேஷ்டனே! அந்த அரசன் அப்ரியமானதும் பயங்கரமாகத் தோன்றியதுமான அந்தவரத்தைக்கேட்டுத் துக்கத்தால் பீடிக்கப்பட்டவனாக ஒன்றும் பேசாமலிருந்துவிட்டான். சிறந்த வீர்யமுள்ள ராமர், பிதாவினிடம் கைகேயி அவ்வாறு சொன்னதையறிந்து, 'தர்மாத்மாவான அரசர் சொல்தவறாதவராகட்டும்' என்றெண்ணி வனத்துக்குப் புறப்பட்டார். ஸ்ரீமானான லக்ஷ்மணன், அப்பொழுது கையில்விற்பிடித்தவனாக அவரைப் பின்தொடர்ந்து சென்றான். விதேஹராஜனான ஜனகனுடையகுமாரியும் (ராமருடைய) பார்யையுமான ஸீதையும், அவரைப் பின்தொடர்ந்து சென்றாள். உனக்கு மங்களம். அப்பொழுது, ராமர் அங்கிருந்து வனத்திற்குப் போனவுடன், தசரதராஜன் சரீரத்துக்குரிய காலகதியை அடைந்தான். ராமர் கானகம் சென்றாரென்றும் தசரதன் உயிர் துறந்தானென்றும் அறிந்து ராஜமஹிஷியும் இழிகுணமுள்ளவளுமான கைகேயியானவள் பரதனையடைந்து, 'தசரதர் ஸ்வர்க்கத்தை அடைந்துவிட்டார். ராமலக்ஷ்மணர்கள் காட்டில் இருக்கிறார்கள். விசாலமானதும் பகையற்றதுமான ராஜ்யத்தை க்ஷேமமாகப் பெற்றுக்கொள்.' என்று சொன்னாள்.

தர்மாத்மாவான அந்தப் பரதன் அந்தக் கைகேயியைப்பார்த்து, 'குலத்தைக்கெடுத்த பாவியே! பொருளில் பேராசைகொண்ட உன்னால் பதியைக்கொன்றும் இந்தக் குலத்தை நாசம்செய்தும் என் தலையில் அபகீர்த்தியை விழச்செய்தும் கொடியகாரியம் செய்யப்பட்டுவிட்டது. கஷ்டம். என்னுடைய தாயே! நீ விரும்பினதை அடைந்தவளாக இரு' என்று சொல்லி உரக்க அழுதான். அந்தப் பரதன் எல்லாக்குடிகளுக்குமெதிரில் தன் நடையை ஸந்தேகத்துக்கு இடமில்லாததாகச் செய்துகொண்டு ப்ராதாவின ராமரைத் திருப்பி அழைத்துவருவதில் விருப்பமுள்ளவனாகப் பின்தொடர்ந்து சென்றான். அந்தப் பரதன், அதிக துக்கமுள்ளவனாகக் கௌஸல்யையும் ஸுமித்திரையையும் கைகேயியையும் முன்னால் புறப்பட்டுப் போகும்படிசெய்து, சத்துருக்கனனோடு கூடியவனாகி வஸிஷ்டரோடும் வாமதேவரோடும் ஆயிரக்கணக்கான மற்றப் பிராம்மணர்களோடும் பட்டணத்து ஜனங்களோடும் நாட்டு ஜனங்களோடும் ராமரை அழைத்துவரவேண்டுமென்கிற விருப்பத்தால் வாகனங்களோடு சென்றான். அந்தப் பரதன், சித்ரகூடத்திலிருப்பவரும் லக்ஷ்மணனோடு சேர்ந்திருப்பவரும் தவசிகளுடைய வேஷத்தைத் தரித்தவரும் வில்லேந்திய

வருமான ராமரைக் கண்டான். அந்தப் பரதன் ரகுகுலத்தில் பிறந்தவர்களுள் உத்தமரான ராமரை நமஸ்கரித்துக் கைகளைக் குவித்துக்கொண்டு அரசனுடைய மரணத்தையும் கோஸலநாடு அரசனில்லாமலிருப்பதையும் தெரிவித்தான்; 'நாதரே! நீர் உம்முடைய ராஜ்யத்தை அடையக்கடவீர்' என்றும் சொன்னான். அந்த ராமர் அவனுடைய சொல்லைக்கேட்டு அதிக துக்கமுள்ளவராக ஸ்நானம்செய்து தேவனுக்கு ஸமானரான பிதாவுக்கு உதகக் கிரியையைச் செய்தார். அப்பொழுது, அந்த ராமர், பிராதாவினிடம் வாத்ஸல்யமுள்ள பிராதாவான பரதனைப்பார்த்து, 'பகைவர்களை வாட்டுபவனே! என்னுடைய பாதுகைகள் ராஜ்யத்தை ஆளுகிறவைகளாகும்' என்று சொன்னார். அப்பொழுது, பரதன், அந்த ராகவரை நமஸ்கரித்து, 'இப்படியே ஆகட்டும்' என்று சொன்னான். பிதாவின் சொல்லைச்செய்பவரான ராமரால் அனுப்பப்பட்ட பரதன், அவருடைய பாதுகைகளை முன்னிட்டுக்கொண்டு நந்திக்கிராமத்தில் ராஜ்யபரிபாலனத்தைச் செய்தான். ராமரோ, பட்டணத்து ஜனங்களும் நாட்டு ஜனங்களும் மீண்டும் வருவார்களென்று ஸந்தேகித்துத் தண்டகாரண்யத்தில் நுழைந்து சரபங்காஸ்ரமத்தை அடைந்தார். தண்டகாரண்யத்தை அடைந்த அவர், சரபங்கரைப் பூஜித்து அழகிய கோதாவரிநதியை அடுத்து அப்பொழுது அங்கு வஸித்துவந்தார். பிறகு, அங்கு வஸித்துக்கொண்டிருக்கிற அந்த ராமருக்கு ஜனஸ்தானத்தில் வஸிக்கின்ற கரனோடு பெரியவைரமானது சூர்ப்பணகையினால் உண்டுபண்ணப்பட்டது. தர்மத்தில் அதிக விருப்பமுள்ள ராகவர், தவசிகளைக் காப்பதற்காகப் பூமியில் பதினாலாயிரம் அரக்கர்களைக் கொன்றார். சிறந்த புத்தியுள்ளவரான ராகவர், மிகுந்த பலசாலிகளான தூஷணனையும் கரனையும் கொன்று மீண்டும் தபோவனங்களை ஸுகமுள்ளவையாகச் செய்தார். அந்தராக்ஷஸர்கள் கொல்லப்பட்டபிறகு, மூக்கும் உதடும் அறுக்கப்பட்ட சூர்ப்பணகையானவள் மீண்டும் பிராதாவான ராவணனுக்கு இருப்பிடமான லங்கையை நோக்கிச் சென்றாள். பிறகு, துக்கம்மேலிட்டவளான ராக்ஷஸியானவள் 'இரத்தம் உலர்ந்திருக்கிற முகத்துடன் ராவணனை அணுகித் தமையனான அவனுடைய கால்களில் விழுந்தாள். அப்படி விகாரப்படுத்தப்பட்ட அவளைப்பார்த்து, ராவணன் மிக்க கோபம்மூண்டு பற்களால் பற்களைக் கடித்துக்கொண்டு ஆஸனத்திலிருந்து எழுந்தான். அந்த ராவணன், தன்மந்திரிகளை விட்டு

விட்டு ஏகாந்தமான இடத்தில் அந்தச் சூர்ப்பணகையைப்பார்த்து, 'கல்யாணி! என்னை நினைக்காமலும் அவமதித்தும் எவனால் இவ் வண்ணம் செய்யப்பட்டாய்? எவன் கூருள்ள சூலாயுதத்தை எடுத்து எல்லா அவயவங்களிலும் குத்திக்கொள்ளுகிறான்? எவன் தலையில் நெருப்பை வைத்துக்கொண்டு கவலையற்று ஸுகமாகத் தூங்குகிறான்? இப்பொழுது எவன் மிக்க கோரமான ஸர்ப்பத்தைக் காலால் தீண்டுகிறான்? மதங்கொண்ட எவன் பிடரிமயிர்களுடன் கூடின சிங்கத்தைத் தெற்றிப்பற்களில் தொட்டுக்கொண்டு நிற்கிறான்?' என்று சொன்னான்.

இவ்வாறு சொல்லுகின்ற அந்த ராவணனுடைய கண்களினின்று அக்னிஜ்வாலைகள் இரவில் எரிக்கப்படுகின்ற மரத்தினுடைய துவாரங்களிலிருந்து வெளிப்படுவதுபோல வெளிப்பட்டன. ஸஹோதரியான சூர்ப்பணகையானவள், ராமருடைய பராக்கிரமம், கரதூஷணர்களோடு கூடின ராக்ஷஸர்களுடைய தோல்வி ஆகிய அவை அனைத்தையும் அவனுக்கு உரைத்தாள். பிறகு, பந்துக்களுடைய வதத்தைக் கேட்டு, காலனால் தூண்டப்பட்டவனான ராவணன், ராமருடைய வதத்தை விரும்பி, மனத்தினால் மாரீசனை நினைத்தான். பிறகு, அந்த ராவணன், செய்யவேண்டிய காரியத்தை நிச்சயித்து நகரத்தில் தகுந்த பாதுகாவலைச்செய்து மாரீசனை அடைவதற்காக உப்புஸமுத்திரத்திற்கு மேலே ஆகாயத்தில் எழும்பினான். அவன், த்ரிகூடத்தையும் காலபர்வதத்தையும் தாண்டி, மகரங்களுக்கிருப்பிடமானதும் ஆழ்ந்த தண்ணீருள்ளதுமான மஹோததியைக் கண்டான். அவன் அதைத்தாண்டி அதற்கு அப்புறத்திலுள்ள மகாத்மாவான சூலபாணிக்குப்ரியமான இருப்பிடமாயிருக்கிற கோகர்ணத்தைக் கவலையற்று அடைந்தான். தசானனன், முந்தி ஒரு ஸமயத்தில் நேர்ந்த ராமபயத்தாலேயே தவசியானவனும், பிழைத்திருப்பதில் பிரியமுள்ளவனும், முன்னே தனக்கு மந்திரியாயிருந்தவனுமான மாரீசனை அந்தக் கோகர்ணத்தில் அடைந்தான்.

## இருநூற்றெழுபத்தோன்பதாவது அத்யாயம்.

## ராமோபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

(ராவணன் ஸந்யாஸியாகி மான்வடிவமெடுத்த மாரீசனோடு ராமருடைய ஆஶ்ரமம் வந்ததும், ராமர் மானைப்பிடிக்கத் தொடர்ந்து சென்று அதனை ராக்ஷஸனென்றறிந்து கொன்றதும், அவன் ஸீதையையும் லக்ஷ்மணனையும் கூவி இறந்ததும், ஸீதையின் கடுஞ்சொல்லால் லக்ஷ்மணன் ராமரைத் தேடிப்போனதும், ராவணன் ஸீதையைத் தூக்கிச் சென்றதும்.)

பிறகு, மாரீசனே, வந்திருக்கிற ராவணனைக் கண்டு பரபரப்புள்ளவனாகக் கிழங்கு வேர்முதலிய பூஜைக்குரிய பொருள்களால் அவனைப் பூஜித்தான். வீற்றிருக்கின்றவனும் இளைப்பாறினவனும் வாக்கியங்களை அறிந்தவனுமான ராவணனை நோக்கி உடனுட்கார்ந்திருப்பவனும் வாக்கியங்களை அறிந்தவனுமான அந்த மாரீசனென்கிற ராக்ஷஸன் வணக்கமுள்ள வாக்கியத்தைப் பின் வருமாறு உரைக்கலானான். 'உன்னுடைய நிறமானது இயற்கைப் படி இருக்கவில்லையே. உன்னுடைய பட்டணத்தில் க்ஷேமமா? (மந்திரிகள்முதலிய) எல்லா வேலைக்காரர்களும் உனக்கு முன்போல ப்ரீதியோடு வேலைசெய்கிறார்களா? ராக்ஷஸேஸ்வர! இங்கே வருவதற்குக் காரணம் யாது? என்ன காரியம்? செய்ய மிக அரியதாக இருந்தாலும் அந்தக்கார்யத்தைச் செய்யப்பட்டதென்றே நீ அறிந்துகொள்வாயாக' என்று கூறினான். ராவணன் கோபத்தோடும் பொறுமையோடுங்கூடினவனாக அந்த ராமருடைய செய்கை அனைத்தையும் செய்யவேண்டியவைகளையும் சுருக்கமாகவே அவனிடம் சொன்னான். மாரீசனே, சுருக்கமாகவே அந்த வசனத்தைக்கேட்டு, ராவணனை நோக்கி, 'நீ ராமனை அணுகாதே. நான் அந்த ராமனுடைய வீர்யத்தை அறிந்திருக்கிறேன். மகாத்மாவான அந்த ராமனுடைய பாணவேகத்தைத் தாங்குவதற்கு எவன் திறமையுள்ளவன்? எனது ஸந்யாஸத்துக்கு அந்தப் புருஷ ஶ்ரேஷ்டனே காரணம். கெட்ட எண்ணமுள்ள எவனால் விநாசத்துக்கு வாயிலாக இருக்கிற இந்தவிஷயம் உனக்கு உரைக்கப் பட்டது?' என்று சொன்னான். பிறகு, ராவணன், கோபத்துடன் கூடியவனாகவும் பயமுறுத்துகின்றவனாகவும் அந்த மாரீசனைப்

பார்த்து, 'நம்முடைய சொற்படி செய்யாமற்போனால் உனக்கு மரணமும் நிச்சயமாக உண்டாகும்' என்று சொன்னான். மாரீசன், 'மரணம் அவசியம் நேருவதாயிருக்கையில் மேலானவனிட மிருந்து மரணமேற்படுவது சிறந்தது. ஆகையால், இந்த விஷயத் தில் இவனுடைய விருப்பத்தைச் செய்வேன்' என்று ஆலோசித் தான். பிறகு, மாரீசன், ராக்ஷஸர்களுள் சிறந்தவனான அந்த ராவ ணனை நோக்கி, 'உனக்கு என்ன உதவி என்னால் செய்யத்தக்கது? நான் உனக்கு வசப்பட்டவனில்லாவிடினும் அதைச் செய்வேன்' என்று மறுமொழி கூறினான். தசக்ரீவன், அந்த மாரீசனைப் பார்த்து, 'போ. ரத்தினமயமான கொம்புகளுள்ளதும் ரத்தினங் களால் விசித்திரமான மயிர்களுள்ளதுமான மானாகி ஸீதையை ஆசைப்படச்செய். ஸீதையானவள் உன்னைப்பார்த்து நிச்சய மாக ராமனை ஏவுவாள். ராமன் விலகிச்சென்றவுடன் ஸீதை யானவள் என் வசப்படுவாள். அவளை நான் எடுத்துக்கொண்டு போய்விடுவேன். பிறகு, கெட்டபுத்தியுள்ள அந்த ராமன் மனைவி யின் பிரிவினால் உயிரோடிருக்கமாட்டான். இந்த உதவியை எனக்குச் செய்வாயாக' என்று சொன்னான். இவ்வாறு சொல்லக் கேட்ட மாரீசன், மிக்கமனவருத்தமுள்ளவனாகித் தனக்கு (எள்ளுந்) தண்ணீரும் இறைத்துவிட்டு, முன்னால் செல்லுகின்ற ராவணனைப் பின்தொடர்ந்துசென்றான்.

பிறகு, புகழப்பட்டசெய்கைகளுள்ள அந்த ராமருடைய ஆச்ர மத்தை அடைந்து அவ்விருவரும் முந்தி ஆலோசித்தபடியே எல்லா வற்றையும் செய்தார்கள். ராவணனே, மொட்டைத்தலையுள்ளவனும் கமண்டலுவையுடையவனும் த்ரிதண்டத்தைத் தரித்தவனுமான ஸந்யாஸியாகியும் மாரீசன் மானாகியும் அந்த இடத்தை அடைந்தார் கள். பொன்மான்வேஷத்தைத் தரித்திருப்பவனான மாரீசன் விதேஹ ராஜகுமாரியான ஜானகியைத் தன்னைப்பார்க்கும்படி செய்தான். தெய் வத்தினால் தூண்டப்பட்ட அந்தஸீதையானவள், அந்த மானைப்பிடிப் பதற்காக ராமரைத் தூண்டினாள். ராமர் அவளுக்குப் பிரியத்தைச் செய்பவராகி வில்லை எடுத்துக்கொண்டு (ஸீதையைப்) பாதுகாப்ப தற்காக லக்ஷ்மணனை வைத்துவிட்டு மானைப்பிடிக்கும் விருப்பத்துடன் விரைந்து சென்றார். அந்த ராமர் விற்பிடித்தவரும் தூணிகட்டிக் கொண்டவரும் கத்தியும் உடும்புத்தோலால்செய்யப்பட்ட விரலுறையு முள்ளவருமாகி [1] ருத்திரர் நக்ஷத்ரமானைத் தொடர்ந்ததுபோல

[1] பிரம்மதேவர் தமது குமாரியைக் காமத்தினால் மானுருவெடுத்துத்

(மாரீச) மானைப் பின்தொடர்ந்தார். அந்த ராக்ஷஸன் மறைந்தும் மறுபடியும் அவருக்கெதிரில் தோன்றியும் (அவரை) நெடுந்தூரம் இழுத்துவிட்டான். பிறகு, ராமர் அவனைத் தெரிந்துகொண்டார். ஸமயத்தில்தோன்றுகிற புத்தியையுடையவரான ராமர் அவனை ராக்ஷஸனென்று அறிந்து வீணாகாத ஓர் அம்பை எடுத்து மான் உருவத்துடனிருக்கிற அவனை அடித்தார். ராமபாணத்தாலடிக்கப் பட்ட அவன், அப்பொழுது, ராமருடையகுரலை அமைத்துக் கொண்டு, 'ஆ! ஸீதையே! லக்ஷ்மணா!' என்று இவ்வண்ணம் துன்பக்குரலுடன் அலறினான். பிறகு, வைதேஹியானவள் அவனுடைய அந்தத் தீனமான சொல்லைக் கேட்டாள். அதனால், அந்தஸீதை கீழே விழுந்தாள். பிறகு, லக்ஷ்மணன் அவளைப் பார்த்து, 'பயந்தவளே! உனக்கு ராமர்விஷயத்தில் பயம் வேண் டாம். எவன் ராமரை அடிப்பான்? நீ, பர்த்தாவான ராமர் ஒரு முகூர்த்தகாலத்தில் புன்னகையுடன் வரக்காண்பாய்' என்று சொன்னான். இவ்வாறு சொல்லக்கேட்டவளும் சுத்தமான நடை யையே பூஷணமாகக்கொண்டவளுமான அவள் பெண்தன்மையால் தாக்கப்பட்டு மிகஅழுகின்றவளாகி லக்ஷ்மணன்மீது ஸந்தேகம் கொண்டாள். ஸாத்வியும் பதிவ்ரதையுமான அவள் அந்த லக்ஷ் மணனைப்பார்த்துக் கடுமையாகப் பேசத்தொடங்கினாள். 'மூடனே! நீ மனத்தினால் விரும்புகிற இந்த விருப்பம் கைகூடாது. நான் கத்தியை எடுத்துக்கொண்டு என்னை நானே மாய்த்துக்கொள்வேன். மலையின் சிகரத்திலிருந்தாவது விழுவேன்; தீயிலாவது புகுவேன். பெண்புலியானது ஆண்நரிக்குட்டியை அடைவதுபோல நான் பர்த்தாவான ராமரைவிட்டு அதமனான உன்னை எவ்விதத்தாலும் அடையமாட்டேன்' என்று சொன்னாள்.

இப்படிப்பட்ட வசனத்தைக்கேட்டு ராகவருக்கு ப்ரியனும் நன் னடையுள்ளவனுமான லக்ஷ்மணன், காதுகளைப் பொத்திக்கொண்டு, ஸ்ரீராமர் சென்ற வழியினால் புறப்பட்டான். விற்பிடித்தவனான அவன் ராமருடைய காலடியைப்பிடித்துக்கொண்டு நடந்தான். லக்ஷ்மணன் அப்பொழுது கோவைப்பழம்போன்ற உதடுள்ள ஜானகியைப் பாராமல் சென்றான். இதனிடையில், சாம்ப லால் மூடப்பட்ட நெருப்புப்போலக் கொடிய உருவத்தை

---

தொடர்ந்தார். பரமசிவன் அந்த ம்ருகத்தின் (=மானின்) சிர் ஷத்தை (=தலையை) வெட்டினார்; அது ஆகாயத்தில் ம்ருகசீர்ஷநக்ஷத்ர மாயிற்று' என்பது பழையவுரை.

நல்ல உருவத்தால் மறைத்துக்கொண்ட ராவணனென்கிற ராக்ஷஸன் காணப்பட்டான். *பாவச்செயலில் நிச்சயங் கொண்ட ராவணன், ஸந்யாஸிவேஷத்தால் மறைக்கப்பட்டவனும் புகழத் தக்கவளான அந்த ஜானகியை அபஹரிக்க எண்ணமுள்ளவனுமாகி அருகில் வந்தான். தர்மங்களை அறிந்தவளான அந்த ஜானகியானவள், வந்திருக்கிற அவனைப்பார்த்து அப்பொழுது பழங்களும் கிழங்குகளுமாகிய உணவுப்பொருள் முதலியவற்றால் (அவனுக்கு) ஆதித்யம் செய்தாள். பிறகு, காமியான ராக்ஷஸேந்திரன் அவை அனைத்தையும் அலக்ஷ்யம்செய்து தன்னுடையதான (ராக்ஷஸ) உருவத்தை எடுத்துக்கொண்டான்; ஸீதையை நோக்கி, 'ஸீதையே! நான் ராக்ஷஸர்களுக்கு அரசன்; ராவணனென்று பிரஸித்திபெற்றவன். ஸமுத்திரத்திற்கு அக்கரையிலிருக்கிற அழகியதான லங்கை என்கிற பெயருள்ள பட்டணம் என்னுடையது. அங்கே, நீ மானிடமங்கையரின் மத்தியில் என்னோடுகூட விளங்குவாய். அழகிய பின்தட்டுக்களுள்ளவளே! எனக்கு நீ மனைவியாகக்கடவாய். தவசியான ராகவனை விட்டுவிடு' என்று நல்வார்த்தையாகச் சொன்னான். பிறகு, அழகிய பின்தட்டுக்களுள்ள ஜானகியானவள் இவைமுதலான அவனுடைய வாக்கியங்களைக்கேட்டுச் செவிகளைப் பொத்திக்கொண்டு, 'இது முறை அன்று' என்று (பின்வரும்) வசனத்தை உரைக்கலானாள். 'நக்ஷத்திரங்களுடன்கூடின ஆகாயமானது விழுந்தாலும்விழும். பூமியானது துண்டுதுண்டாகச் சிதறிப்போனாலும்போகும். ஸமுத்திரத்தில் ஜலமானது வறண்டு போனாலும்போகும். சந்திரன் குளிர்ந்த கிரணங்களுள்ளவனாயிருத்தலை விட்டாலும்விடுவான். ஆதித்யன் உஷ்ணமான கிரணங்களுள்ளவனாயிருத்தலை விட்டாலும்விடுவான். நெருப்பானது உஷ்ணமாக இருத்தலைவிட்டுக் குளிர்ச்சியை அடைந்தாலுமடையும். நான் ரகுநந்தனரை ஒருகாலும் விடமாட்டேன். பெண்யானையானது, மதம் பெருகுகின்ற கபோலங்களுள்ளதும் காட்டில் ஸஞ்சரிக்கின்றதும் புள்ளிகளையுடையதுமான பெரிய ஆண்யானையை அடைந்துவிட்டு, எவ்வாறு பன்றியைத்தொடும்? ஒரு ஸ்த்ரீயானவள் இலுப்பைப் பூவிலிருந்து இறக்கப்பட்ட சாராயத்தையும் தேனிலிருந்து இறக்கப்பட்ட சாராயத்தையும் குடித்துவிட்டுக் காடியில் எப்படி ஆசை வைப்பாள்? இதனை நினைத்துப் பார்' என்றாள். அவள், அவனைப்பார்த்து இவ்வண்ணமுரைத்த

விட்டு, பிறகு, கோபத்தால் உதடுகள் துடிக்க அடிக்கடி கைகளை உதறிக்கொண்டு ஆஸ்ரமத்தில் நுழைந்தாள். அழகிய பின்தட்டுக் களையுடையவளான அவளை, ராவணன் எதிரில் ஓடி மறைத் தான். பயங்கரமான குரலால் வெருட்டி ப்ரஜ்ஞையை இழந்த வளான (ஜானகியைத்) தலைமயிர்களில் பிடித்தான்; பிறகு, ஆகாய மார்க்கத்தில் செல்வதற்கு ஆரம்பித்தான். பிறகு, (பிரஸ்ரவண மென்கிற) மலையில் வஸிப்பவனான ஜடாயுவென்கிற கழுகரசன், 'ராம! ராம!' என்று கதறுகிறவளும் கொண்டுபோகப்படுகிற வளும் இரங்கப்படத்தக்கவளுமான அவளைக் கண்டான்.'

---

## இருநூற்றெண்பதாவது அத்யாயம்.

## ராமோபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

(சீதையை எடுத்துக்கொண்டு செல்லுகின்ற ராவணன் வழியில் போர்புரிந்த ஜடாயுவைக் கொன்று லங்கையில் நுழைந்ததும், திரும்பி வருகின்ற ராமர் நடுவழியில் வந்த லக்ஷ்மண னுடன் தமதாஸ்ரமஞ் சென்றதும், சீதையைக் காணமல் இருவரும் தேடிச்செல்லுகையில் ராமர் கபந்தனைக் கொன்றதும், அவன் கந்தர்வனாகி அவர்களை ஸுக்ரீவ னிடம் செல்லச் சொல்லியதும்.)

கழுகுகளுக்கு அரசனும் மகாவீரனும் ஸம்பாதிக்கு ஸஹோ தரனும் அருணனுக்குக் குமாரனுமான ஜடாயுவானவன் தசரத னுக்கு நண்பனாக இருந்தான். அவன், அப்பொழுது ராவணனு டைய மடியை அடைந்திருப்பவளும் (தசரதனது தோழமையால் தனக்கு) மருமகளுமான ஸீதையைக் கண்டான். பக்ஷிராஜன் கோபத்துடன் கூடியவனாக ராக்ஷஸேஸ்வரனான ராவணனை எதிர்த்து விரைவாகச் சென்றான். பிறகு, கழுகுகளுக்கரசனான ஜடாயு, அந்த ராவணனைப் பார்த்து, 'ராக்ஷஸ! மைதிலியை விடு; விடு. நான் உயிரோடிருக்கையில் நீ எப்படி ஸீதையை அபஹரிப் பாய்? மைதிலியை விடாமல் போவாயாகில் நீ உயிரோடு என்னிட மிருந்து விடுபடமாட்டாய்' என்று சொன்னான். இவ்வாறு சொல்லிவிட்டு, சிறகுகளின் அடிகளாலும் மூக்கின் குத்துக்களா லும் பலமுறை காயப்படுத்தப்பட்ட அந்த ராக்ஷஸராஜனை நகங்

களால் அதிகமாகக் கிழித்தான். ராமருக்கு ப்ரியத்தையும் ஹிதத்தையும் விரும்புகிற ஜடாயுவினால் அடிக்கப்படுகின்ற அந்த ராவணன், மலையானது அருவிகளைப் பெருக்குவதுபோல இரத்தத்தை அதிகமாகப் பெருக்கினன். அந்த ராவணன் கத்தியை எடுத்து அந்தப் பறவையினுடைய இரண்டு சிறகுகளையும் வெட்டினன். அந்த ராக்ஷஸன் கழுகாசனைப் பிளந்து விழுந்த மலைச்சிகரம்போல வெட்டித் தள்ளிவிட்டு ஸீதையை மடியில் வைத்துக்கொண்டு மேலே எழும்புவதற்கு முயன்றான். வைதேஹியானவள் ஆஶ்ரம மண்டலத்தையோ தடாகத்தையோ நதிகளையோ பார்க்குமிடந் தோறும் தன்னுடைய ஆபரணங்களைப் போட்டாள். அவள் ஒரு மலையின் சிகரத்தில் ஐந்து வானராதிபதிகளைக் கண்டாள். உதார மனமுள்ள மைதிலியானவள் அந்த இடத்தில் ( தனது ) திவ்யமான ஒரு பெரிய வஸ்திரத்தை எறிந்தாள். காற்றினால் அடித்துக் கொண்டுபோகப்பட்ட அந்த நல்ல பீதாம்பரமானது மேகங்களுடைய மத்தியில் மின்னல்போல அந்த ஐந்து வானரேந்திரர்களுடைய மத்தியில் விழுந்தது. ஆகாயத்தில் ஸஞ்சரிக்கின்றவனை ராவணன், ஆகாச ஸஞ்சாரியான தேவன்போல அதிசீக்கிரமாகச் சென்றான். பிறகு, அழகியதும் அனேக கோட்டைவாசல்களுடன் கூடியதும் மனத்தைக்கவருகின்றதும் மதில்களாலும் கொத்தளங்களாலும் நெருங்கியதும் விஶ்வகர்மாவினால் படைக்கப்பட்டதுமான லங்காநகரியைக் கண்டான். ராக்ஷஸேஶ்வரன் ஸீதையுடன் லங்காபுரியில் புகுந்தான்.

இவ்வண்ணம் வைதேஹியானவள் கொண்டுபோகப்பட்டதும், ராமர் பெரியமானைக் கொன்று திரும்பி வருகையில் தூரத்தில் தம்பியான லக்ஷ்மணனைக் கண்டார். அவர், பிராதாவான அந்த லக்ஷ்மணனைப் பார்த்து, 'ராக்ஷஸர்களால் வியாபிக்கப்பட்ட காட்டில் எவ்வாறு வைதேஹியை விட்டு வந்தாய்?' என்று நிந்தித்தார். அவர், மான் வடிவம் பூண்ட ராக்ஷஸனால் ( தாம் ) இழுக்கப்பட்டதையும் தம்பி வந்ததையும் நினைத்துப் பரிதாபத்தை அடைந்தார். ராமரோ, 'லக்ஷ்மண! வைதேஹியானவள் உயிரோடிருக்கிறாளா? அவளை நான் பார்ப்பேனா?' என்று அவனை நிந்தித்துக்கொண்டே விரைவாக அருகில் வந்தார். லக்ஷ்மணன், விதேஹராஜகுமாரியான ஸீதை சொல்லிய தகாத இழிவான வசனமனைத்தையும் ராமரிடத்தில் தெரிவித்தான். ராமர் எரிக்கப்படுகின்ற உள்ளத்துடன் ஆஶ்ரமத்தை நோக்கிச் சென்றார். அந்த ராமர், அப்பொழுது, கொல்லப்

பட்டிருப்பதும் மலைபோன்றதுமான கழுகைக் கண்டார். பிறகு, அவர் லக்ஷ்மணனோடுகூடியவராக அந்தக் கழுகைப் பார்த்து ஸந்தேகத்துடன் வில்லை உறுதியாக இழுத்துக்கொண்டு அதனை நோக்கி ஓடினார். தேஜஸ்வியான அது, சேர்ந்திருக்கிற அந்த ராம லக்ஷ்மணர்களைப் பார்த்து, 'உங்களுக்கு மங்களம். நான் கழுகு களுக்கு அரசன். தசரதனுக்குத் தோழன்' என்று சொல்லிற்று. அதனுடைய அந்த வசனத்தைக்கேட்டு, அவ்விருவரும், சிறந்த விற் களை நாணைத்தளர்த்திவிட்டு, 'இவன் யார்? நம்முடைய பிதாவின் நாமதேயத்தைச் சொல்லுகிறான்' என்று சொன்னார்கள். பிறகு, அவர்கள் அந்தப் பறவை இருசிறகுகளும் அறுக்கப்பட்டிருப்ப தைக் கண்டார்கள். கழுகோ 'ஸீதைநிமித்தம் ராவணனிடத்தி லிருந்து தனக்கு நேர்ந்த வதத்தை அவ்விருவருக்கும் தெரிவித்தது. ராகவர், கழுகைப்பார்த்து, 'ராவணன் எந்தத்திசையை நோக்கிச் சென்றான்?' என்று கேட்டார். கழுகானது, தலை அசைத்தல் களால் தெரிவித்துவிட்டு உயிரையும் துறந்தது. ராகவர், 'தென் திசையில்' என்று அதன் குறிப்பினால் தெரிந்துகொண்டு, 'இது பிதாவுக்கு நண்பன்' என்று நன்குமதித்து (அதற்கு) ஸம்ஸ்காரத் தைச் செய்வித்தார். பிறகு, பகைவர்களைத் தவிக்கச்செய்பவர்க ளான அவ்விருவரும் தர்ப்பாஸனங்களும் பாய்களும் புரண்டுகிடப் பதும் கலசங்கள் உடைக்கப்பட்டிருக்கிறதும் சூன்யமானதும் அனேக நரிகளால் வியாபிக்கப்பட்டதுமான ஆஶ்ரமஸ்தானத் தைப்பார்த்துத் துக்கமும் சோகமும் மேலிட்டவர்களும் வைதேஹி கொண்டுபோகப்பட்டதனால் பீடிக்கப்பட்டவர்களுமாகித் தென்திசையை நோக்கித் தண்டகாரண்யத்தில் பிரவேசித்தார் கள். ராமர் லக்ஷ்மணனோடுகூட அந்தப் பெருங்காட்டில் நான்கு பக்கங்களிலும் ஓடுகின்ற மிருகங்களின் கூட்டங்களைக் கண்டார்; மூள்கின்ற காட்டுத்தீயின் சப்தம்போலக் கோரமான பிராணிகளு டைய சப்தத்தையும் கேட்டார். ஒரு முகூர்த்தகாலத்தினுள் கோரமான காட்சியுள்ளவனும் மேகமடர்ந்த மலைபோலிருப்பவ னும் ஆச்சாமரம்போன்ற தோள்களுள்ளவனும் நீண்டபுஜங்க ளுள்ளவனும் மார்பில் விசாலமான கண்களுள்ளவனும் பெரியவயி றுள்ளவனும் பெரியவாயுள்ளவனுமான கபந்தனைக் கண்டார்கள். பிறகு, அந்த ராக்ஷஸன் [1] தற்செயலாகக் கையில் லக்ஷ்மணனைப் பிடித்தான். பாரத! பிறகு, லக்ஷ்மணன் உடனே துயரம்

[1] 'சிறிதும் ஶ்ரமமில்லாமல்' என்பது இங்கிலிஷ் மொழிபெயர்ப்பு.

அடைந்தான். அந்தக் கபந்தன், ராமரைப்பார்த்துக்கொண்டே லக்ஷ்மணனைத் தன்வாயிருக்குமிடத்துக்கு இழுத்தான். லக்ஷ்மணன், துயரமடைந்தவனாக, ராமரைப்பார்த்து, 'என்னுடைய இந்த நிலைமையைப் பாரும். வைதேஹியை(ப் பிறன்) கவர்ந்ததும், என்னுடைய இந்தவிபத்தும், உமக்கு அரசாட்சியினின்று நழுவுதலும், பிதாவின் மரணமும் (எவ்விதம் பொறுக்கத்தக்கவை?) வைதேஹியுடன் சேர்ந்து கோஸலநாட்டை அடைந்து தகப்பன் பாட்டன்முதலானோர்களுடைய பிரஸித்தமான ராஜ்யத்தில் நீர் நிலைபெற்றிருப்பதை நான் பார்க்கப்போகிறதில்லை. எவர்கள் பாக்கியசாலிகளோ, அவர்கள், தர்ப்பங்களுடனும் பொரிகளுடனும் வன்னித்துளிர்களுடனும் பட்டாபிஷேகம் செய்யப்பட்ட ஆர்யரான உங்களுடைய முகத்தை மேகங்களில்லாத ஆகாயத்திலிருக்கிற சந்திரமண்டலத்தைப்போலப் பார்ப்பார்கள்' என்றான். சிறந்தபுத்திசாலியான அந்தலக்ஷ்மணன் இப்படிப் பலவாறு புலம்பினான். பிறகு, ஆபத்துக்களில் கலங்காத ராமர், அந்த லக்ஷ்மணனைப்பார்த்து, 'புருஷஶ்ரேஷ்ட! நீ துயரப்படாதே. வீர! ஸௌமித்திரையின் ஆநந்தத்தை விருத்திபண்ணுகிறவனே! நான் உயிரோடிருக்கையில் ஒருவனும் உன்னை அவமதிப்பதில் சக்தியுள்ளவனாகான். இவனுடைய வலக்கையை வெட்டிவிடு. இடக்கை என்னால் வெட்டப்பட்டுவிட்டது' என்று சொன்னார். இவ்வண்ணம் சொல்லுகின்ற ராமரால் அந்தக் கபந்தனுடைய கையானது மிக்ககூர்மையுள்ள கத்தியினால் எள்ளுக்கட்டைபோல (அவ்வளவு எளிதாக) அறுத்துத் தள்ளப்பட்டது. பிறகு, பலசாலியான லக்ஷ்மணனும், நிற்கின்ற பிராதாவான ராகவரைப்பார்த்துக் கத்தியினால் அந்தக் கபந்தனுடைய வலக்கையை வெட்டினான். மறுபடியும் லக்ஷ்மணன் அந்த ராக்ஷஸனை விலாவில் நன்றாக அடித்தான். பிறகு, மிகப் பருத்தவனான கபந்தன் உயிர்போய்ப் பூமியில் விழுந்தான். அவனுடைய தேகத்தினின்று வெளிப்புறப்பட்டுத் திவ்யமான தோற்றமுள்ள ஒருபுருஷன் ஆகாயத்தில் ஸூர்யன்போல ஆகாயத்தையடைந்து ஜ்வலித்துக்கொண்டு காணப்பட்டான். நன்றாகப்பேசுகிறவரான ராமர், அவனைப்பார்த்து, 'நீ யார்? விருப்பத்துடன் கேட்கின்ற எனக்குச் சொல்வாயாக. இது என்ன விசித்திரம்? எனக்கு ஆச்சர்யமாகத் தோன்றுகிறது' என்று வினவினார். அவன், அவரைப்பார்த்து, 'அரசரே! நான் விஶ்வா

வஸுவென்கிற கந்தர்வன். பிராம்மணசாபத்தால் ராக்ஷஸர்களால் அடையப்பட்ட பிறப்பை அடைந்தேன்.' ஸீதையானவள், ராவணனால் கொண்டுபோகப்பட்டு லங்கையில் வைக்கப்பட்டிருக்கிறாள். ஸுக்ரீவனை நீர் அடைவீராக. அவன் உமக்கு உதவியைச் செய்வான். நல்லஜலமுள்ளதும் அன்னங்களோடும் காரண்டவங்களோடும் சேர்ந்திருப்பதுமான பம்பை என்கிற பெரியகுளமானது இதோ ரிசியமூகபர்வதத்தினருகிலிருக்கிறது. வானரராஜனும் பொன்மாலையை அணிந்தவனுமான வாலியின் தம்பியான ஸுக்ரீவன் நான்குமந்திரிகளுடன் அங்கு வஸிக்கிறான். அவனோடு சேர்ந்து உம்முடைய துக்கத்திற்குக் காரணத்தைத்தெரிவிக்கக்கடவீர். உம்மோடு ஒத்த நிலைமையிலிருக்கிற அந்தஸுக்ரீவன் உதவிசெய்வான். இவ்வளவுமட்டும் நம்மால் சொல்வதற்கு முடியும். ஜானகியைப் பார்ப்பீர். ராவணனுடைய இருப்பிடமானது வானரராஜனான ஸுக்ரீவனுக்கு நிச்சயமாகத்தெரிந்திருக்கும்' என்று சொன்னான். மிக்ககாந்தியுள்ள அந்தத் திவ்யபுருஷன் இவ்வண்ணம் உரைத்துவிட்டு மறைந்தான். மகாசூரர்களான ராமலக்ஷ்மணர்களிருவரும் ஆச்சர்யத்தை அடைந்தார்கள்.

## இருநூற்றெண்பத்தோராவது அத்யாயம்.

## ராமோபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

**(ராமர் ஸுக்ரீவனோடு நட்பைச்செய்து வாலியைக் கொன்றதும், ராவணன் ஸீதையை அசோகவனத்தில்வைத்து அவளை வசப்படுத்துவதற்காக ராக்ஷஸிகளை ஏவியதும், அங்கே த்ரிஜடையானவள் தான் கண்ட கனவைச் சொல்லி ஸீதையைத் தேற்றியதும்.)**

பிறகு, ஸீதை கவரப்பட்டதனாலுண்டான துக்கத்தால் பீடிக்கப்பட்ட ராமர், ஸமீபத்திலிருப்பதும் ஏராளமான தாமரை மலர்களும் உத்பலமலர்களுமுள்ளதுமான பம்பாஸரஸை அடைந்தார். அவர், மிக்ககுளிர்ச்சியானதும் ஸௌக்கியத்தை உண்டுபண்ணுகிறதும் அமிருதம்போன்றதுமான காற்றினால் அந்தவனத்தில் வீசப்பட்டவராகி மனத்தினால் காதலியை நினைத்தார். ராஜஶ்ரேஷ்டரான அந்தராமர் அந்த இடத்தில் தம் பிராணநாயகியை நினைத்துக்கொண்டு புலம்பினார். பிறகு, மன்மதபாணங்களாலடிக்கப்பட்டு ஸந்தாபத்தை

அடைந்திருக்கிற அந்தராமரைப்பார்த்து, லக்ஷ்மணன், 'பகைவர்களுடைய கர்வத்தைப்போக்குகிறவரே! பலமுள்ள மனிதனை வியாதி தொடத்தகாததுபோலப் பெரியோர்களுடன் பழகியிருக்கிற உம்மை இப்படிப்பட்ட எண்ணமானது தொடுதற்குத்தகுதியுள்ளதன்று. ஜானகி, ராவணன் இவர்களுடையசெய்தியானது உம்மால் அறியப்பட்டுவிட்டது. அந்த ஜானகியை நீர் முயற்சியாலும் புத்தியாலும் அடைவீராக. மலையிலிருப்பவனும் வானரஸ்ரேஷ்டனுமான ஸுக்ரீவனை அடைவோம். நான் சிஷ்யனும் வேலைக்காரனும் துணைவனுமாயிருக்கையில் நீர் மனக்கவலை அடையவேண்டாம். தேறுதலடைவீராக' என்று சொன்னான்.

அந்தராகவர் லக்ஷ்மணனால் இவ்வண்ணம் பலவிதமான வாக்கியங்களால் (தேறுதல்) சொல்லப்பட்டுத் தம்நிலைமையை அடைந்தார்; (அடுத்துச்செய்யவேண்டிய) காரியத்தையும் செய்யத் தொடங்கினார். வீரர்களும் பிராதாக்களுமான ராமலக்ஷ்மணர்களிருவரும் பம்பாஜலத்தில் ஸ்நானம்செய்து, பித்ருக்களுக்குத் தர்ப்பணமும்செய்து புறப்பட்டார்கள். வீரர்களான அவ்விருவரும் ஏராளமான கிழங்குகளும் பழந்தரும்மரங்களுமுள்ள ரிசியமூகத்தை அடைந்து மலைபுச்சியில்தங்கியிருக்கிற ஐந்துவானரர்களையும் அப்பொழுது பார்த்தார்கள். ஸுக்ரீவன் சிறந்தபுத்தியுள்ளவரும் மந்திரியும் இமயமலைபோலிருப்பவருமான ஹனுமானென்கிற வானரவீரரை அவர்களிடம் அனுப்பினான். ராமலக்ஷ்மணர்கள் முதலில் அவரோடு ஸம்பாஷித்து, பிறகு, ஸுக்ரீவனை அடைந்தார்கள். அரசனே! ராமர், அப்பொழுது, ஸுக்ரீவனோடு நட்புச்செய்துகொண்டார். பிறகு, ஸுக்ரீவன், ஸீதை அபஹரிக்கப்பட்டதைக்கேட்டு வாலியினால் செய்யப்பட்ட துக்ககரமான கார்யங்களனைத்தையும் அதிக தேஜஸ்வியான ராமருக்குச்சொன்னான்; கொண்டுபோகப்படுகிற ஸீதையானவள் வானரர்களுடையமத்தியில் போட்ட வஸ்திரத்தை, கார்யம் தெரிவிக்கப்பட்ட பிறகு, ராமருக்குக் காண்பித்தான். ராமர் நம்பிக்கையை உண்டுபண்ணுகிற அந்த வஸ்திரத்தைப்பெற்று, வானராதிபதியான ஸுக்ரீவனைப் பூமியில் வானர அரசாட்சியில் தாமே அபிஷேகம் செய்வித்தார். ராமரும், யுத்தத்தில் வாலியின்வதத்தை ப்ரதிஜ்ஞைபண்ணினார். அரசனே! ஸுக்ரீவனும் வைதேஹியை மீட்டுக் கொண்டுவருவதாக ப்ரதிஜ்ஞைசெய்தான். இவ்வண்ணம் சபதத்தைச் செய்துகொண்டு ஒருவரிடத்தொருவர் நம்பிக்கை

யுள்ளவர்களாக எல்லாரும் கிஷ்கிந்தையை அடைந்து (வாலியுடன்) யுத்தத்தில் விருப்பமுள்ளவர்களாக இருந்தார்கள். ஸுக்ரீவன் கிஷ்கிந்தையை அடைந்து [1] ஜனக்கூட்டத்தினுடைய சப்தத்துக் கொப்பான சப்தத்துடன் கர்ஜித்தான். வாலியானவன் அவனுடைய அந்தக் கர்ஜனத்தைப் பொறுக்கவில்லை. தாரையானவள், 'ஸுக்ரீவன் கர்ஜிப்பதனால் அவன் நல்லபலத்துடன் கூடியிருக்கிறானென்று நினைக்கிறேன். ஸஹாயபலமுள்ளவனாக வந்திருக்கிறான். நீர் (சண்டைக்காகப்) புறப்படுதல் தகாது' என்று அந்த வாலியைத் தடுத்தாள். பிறகு, பொன்மாலையை அணிந்தவனும் நன்றாகப் பேசுகிறவனும் வானரங்களுக்கு அரசனும் கணவனுமான வாலியானவன், சந்திரன்போன்ற முகமுள்ள அந்தத் தாரையைநோக்கி, 'நீ எல்லாப்பிராணிகளுடைய சப்தத்தையும் அறிந்தவள். புத்தியினால் ஆராய்ந்து பார். எனக்குத் தம்பியென்று சொல்லப்படுகிற இந்த ஸுக்ரீவன் எவனால் துணைவலியுள்ளவனாக வந்திருக்கிறான்?' என்று வினவினான். சந்திரன்போன்ற ஒளிபொருந்தியவளும் அறிவுடையவளுமான தாரையானவள் ஒருமுகூர்த்தநேரம் ஆலோசித்துத் தன்கணவனைப்பார்த்து, 'வானராதிபரே! எல்லாவற்றையும் கேட்பீராக. மனைவியை இழந்தவனும் மகாவீர்யமுள்ளவனும் தசரதனுடைய குமாரனும் வில்லாளியுமான ராமன், ஸுக்ரீவனோடு ஒத்தபகைவரையும் நண்பரையுமுடைமையை அடைந்திருக்கிறான். மகாபாகுபலமுள்ளவனும் பகைவர்களால் ஜயிக்கப்படாதவனும் மேதாவியும் ஸுமித்ரையின் புத்திரனும் இந்த ராமனுக்கு ப்ராதாவுமான லக்ஷ்மணன், ராமனுடைய கார்யத்தின் பயன் கைகூடும்பொருட்டு ஸன்னத்தனாக இருக்கிறான். மயிந்தனும் த்விவிதனும் வாயுபுத்திரனான ஹனுமானும் கரடிகளுக்கரசனான ஜாம்பவானும் ஸுக்ரீவனுக்கு மந்திரிகளாக இருக்கிறார்கள். இவர்களெல்லாரும் மகாத்மாக்கள்; நல்ல புத்தியுள்ளவர்கள்; மகாபலசாலிகள்; ராமனுடைய வீர்யத்தை அடுத்திருப்பவர்கள்; உம்மை அழிப்பதற்கு ஸாமர்த்தியமுள்ளவர்கள்' என்று உரைத்தாள். வானராதிபனான வாலியானவன் ஹிதமாக உரைக்கப்பட்ட அந்தத்தாரையின் அந்தவசனத்தை மறுத்து, அஸூயையுள்ளவனாகி, அந்தத்தாரையை ஸுக்ரீவனை நாடின மனமுள்ளவளென்று ஸந்தேகித்தான். அந்த வாலியான

[1] 'மலையருவிபோல' என்பது இங்கிலிஷ் மொழிபெயர்ப்பு.

வன், தாரையைப்பார்த்துக் கடிந்துசொல்லிவிட்டுக் குகையின் வாயிலிலிருந்து வெளியில் புறப்பட்டான். அவன், மால்யவானென்கிற மலையினருகிலிருக்கிற ஸுக்ரீவனைப்பார்த்து, 'சக்தியற்றவனே! உயிரில் ஆசையுள்ளவனான நீ என்னால் பலமுறை வெல்லப்பட்டாய். கெட்டபுத்தியுள்ளவனே! நீ எவ்வாறு யுத்தத்தில் மீண்டும் விடுபட்டுச் செல்லப்போகிறாய்?' என்று சொன்னான். இவ்வண்ணமுரைக்கப்பட்ட ஸுக்ரீவன், பிராதாவைப்பார்த்து, நேர்ந்தவிஷயத்தைப் பகைவரைக் கொல்பவரான ராமருக்குத் தெரிவிப்பவன்போல, 'அரசனே! உன்னால் ராஜ்யமும் மனைவியும் கவரப்பட்ட எனக்கு உயிர்வாழ்வதில் என்னபெருமையென்றெண்ணி வந்திருக்கிறேனென்பதை நீ அறி' என்று சொன்னான்.

இவ்வாறு பலவிதமாகப் பேசிவிட்டு, பிறகு, அந்த வாலியும் ஸுக்ரீவனும் ஆச்சாமரங்களையும் பனைமரங்களையும் கற்களையும் ஆயுதங்களாகக்கொண்டு போரில் எதிர்த்தார்கள். இருவரும் ஒருவரை ஒருவர் அடித்தார்கள். இருவரும் பூமியில் விழுந்தார்கள். இருவரும் விசித்திரமாகத் துள்ளிக்குதித்தார்கள்; முஷ்டிகளால் நன்றாகக் குத்தினார்கள். நகங்களாலும் பற்களாலும் காயப்படுத்தப்பட்ட அந்த இரண்டுவீரர்களும் இரத்தத்தால் நனைக்கப்பட்டவர்களாகிப் பூத்திருக்கிற பலாசமரம்போல அப்பொழுது விளங்கினார்கள். யுத்தத்தில் அவ்விருவருள்ளும் ஒருவிதமான வேற்றுமையும் காணப்படாமற்போனபொழுது, ஹனுமான் ஸுக்ரீவனுடைய கழுத்தில் மாலையைப்போட்டார். அப்பொழுது, கழுத்தில் மாட்டப்பட்டிருக்கிற மாலையினால் அந்தவீரன், மேகமாலையினால் சூழப்பட்டதும் மிக்க ஒளிபொருந்தியதுமான மலயமென்கிற பெரியமலைபோல விளங்கினான். பெரியவில்லேந்திய ராமர் ஸுக்ரீவன் அடையாளமிடப்பட்டதைக்கண்டு வாலியை உத்தேசித்துக் குறிபார்த்துச் சிறந்த வில்லை இழுத்தார். அப்பொழுது அந்த வில்லினுடைய ஒலியானது யந்திரத்தின் ஒலிபோல விளங்கியது. அப்பொழுது, அம்பினால் மார்பிலடிக்கப்பட்ட வாலியானவன் அதிகமாகப் பயந்தான். மார்புபிளக்கப்பட்ட அந்த வாலியானவன், வாயினால் இரத்தத்தைக் கக்கிக்கொண்டு, லக்ஷ்மணனோடு எதிரில்நிற்கிற ராமரை அச்சமயத்தில் கண்டான். அவன் ராமரை நிந்தித்து மூர்ச்சையடைந்து பூமியில் விழுந்தான். தாரையானவள் ஆகாயத்தினின்று நழுவிவிழுந்திருக்கிற சந்திரன்போலப் பூமியில் விழுந்திருக்கிற அந்த வாலியைக் கண்டாள்.

வாலி கொல்லப்பட்டபிறகு, ஸுக்ரீவன், கிஷ்கிந்தையையும் சந்திரனுக்கு ஸமமான முகமுள்ளவளும் கணவனையிழந்தவளுமான அந்தத்தாரையையும் அடைந்தான். சிறந்தபுத்தியுள்ள ராமரோ, ஸுக்ரீவனால் பூஜிக்கப்பட்டு மங்களகரமான மால்யவானென்கிற மலையின்மேல் நான்குமாதகாலம் வாஸம்செய்தார்.

காமத்துக்கு வசப்பட்ட ராவணனும் லங்காபுரியை அடைந்து, அசோகவனத்தினிடையில் நந்தனவனத்திற்கொப்பானதும் முனிவர்களின் ஆச்ரமம்போன்றதுமான ஒருமாளிகையில் ஸீதையை இருக்கும்படி செய்தான். பிறகு, விசாலமானகண்களுள்ள அந்த ஸீதையானவள், பர்த்தாவைநினைத்து உடம்புமெலிந்தவளும் தவசிவேஷத்தைத் தரித்தவளும் உபவாஸத்தையும் தவத்தையும் மேற்கொண்டவளும் பழங்களாலும் கிழங்குகளாலும் ஆகாரம் செய்பவளுமாக முனிவர்களின் ஆச்ரமம்போன்ற அசோகவனத்தினருகில் துயரத்துடன் வாஸம்செய்தாள். ராக்ஷஸர்களுக்கு அதிபதியான ராவணன், அங்கே ஸீதையைக்காப்பதற்காக, ப்ராஸங்களையும் கத்திகளையும் சூலங்களையும் கோடாலிகளையும் உலக்கைகளையும் எரிகொள்ளிகளையும் தரித்துக்கொண்டிருக்கிறவர்களான இரண்டு கண்களுள்ளவளும் மூன்றுகண்களுள்ளவளும் நெற்றியில் கண்ணுள்ளவளும் நீண்ட நாக்குள்ளவளும் நாக்கில்லாதவளும் மூன்று கொங்கைகளுள்ளவளும் ஒருகாலுள்ளவளும் மூன்று சடைகளுள்ளவளும் ஒருகண்ணுள்ளவளுமாகிய இப்படிப்பட்ட ராக்ஷஸிகளை ஏற்படுத்தினான். அந்த ராக்ஷஸிகளும், ஜ்வலிக்கின்ற கண்களுள்ளவர்களும் ஒட்டகத்தின்ரோமம்போல மேல்நோக்கின தலைமயிருள்ளவர்களுமான மற்றராக்ஷஸிகளும், இரவும் பகலும் அயராதவர்களாக ஸீதையைச் சூழ்ந்துகொண்டிருந்தார்கள். பயங்கரமான குரலுள்ளவர்களும் குரூரர்களுமான அந்தப்பெண்பேய்களோ, கடுமையைத் தெரிவிக்கிற குரலுடன் நீண்டகண்களுள்ள அந்தஜானகியை, 'நம்முடையமகாராஜனை அவமதித்து இவ்விடத்தில் உயிரோடிருக்கிற இவளைத் தின்னுவோம். இவளைப்பிளந்து எள்ளளவெள்ளளவாகப் பங்கிட்டுக்கொள்வோம்' என்று எப்பொழுதும் வெருட்டினார்கள். இவ்வண்ணம் அதட்டுகின்றவர்களும் அடிக்கடி பயமுறுத்துகின்றவர்களுமான அந்தராக்ஷஸிகளைப்பார்த்து, பர்த்தாவைப்பிரிந்த சோகத்தால் நன்குகவரப்பட்ட ஜானகியானவள், பெருமூச்சுவிட்டுக்கொண்டு, 'ராக்ஷஸிகளே! என்னை விரைவாகத்தின்னுங்கள்.

செந்தாமரைமலர்போன்ற கண்களுள்ளவரும் கறுத்துச்சுருண்ட தலைமயிர்களையுடையவருமான அந்தராமரைவிட்டு ஜீவித்திருப்பதில் எனக்கு ஆசையில்லை. நான் இப்பொழுதே ஆகாரமில்லாதவளும் உயிரில் ஆசையில்லாதவளுமாகி உலர்ந்தமேட்டுத்தரையை அடைந்திருக்கிற கொடிபோல் என்னுடையஅங்கங்களை வறளச்செய்யப்போகிறேன். ராகவரைத்தவிர வேறுபுருஷனை நான் அடையமாட்டேனென்று அறியுங்கள். இது ஸத்யம். அடுத்துச்செய்ய வேண்டியதைச் செய்யுங்கள்' என்று இந்த வசனத்தை உரைத்தாள். அவளுடைய அந்தவசனத்தைக்கேட்டுக் கடுமையான சத்தத்துடன்கூடின அந்தராக்ஷஸிகள் அவை அனைத்தையும் ஆதியோடந்தமாக ராக்ஷஸராஜனிடம் சொல்வதற்குச் சென்றார்கள்.

அவர்களெல்லாரும் சென்றபிறகு, தர்மங்களை அறிந்தவளும் ப்ரியவசனங்களைச் சொல்லுபவளுமான த்ரிஜடை என்கிறராக்ஷஸியானவள், ஸீதையைப்பார்த்து, 'ஸீதையே! உனக்கு ஒரு விஷயத்தை உரைப்பேன். தோழீ! என்னிடம் நம்பிக்கை வைக்கக் கடவாய். அழகியதொடைகளுள்ளவளே! பயத்தை விட்டுவிடு. இந்த என்வசனத்தைக் கேட்பாயாக. நல்ல புத்தி சக்தியுள்ளவனும் வயதுமுதிர்ந்தவனும் ராமருக்கு ஹிதத்தைத் தேடுவதில் நோக்குள்ளவனுமான அவிந்த்யனென்கிற ராக்ஷஸ ச்ரேஷ்டன் உன்னைத் தேறுதலடையச்செய்து ஸந்தோஷப்படுத்தி, 'ஸீதையானவள், 'பலசாலியும் உன்னுடையபர்த்தாவுமான ராமர் லக்ஷ்மணனோடுகூட ஸௌக்யமாக இருக்கிறார். ஸ்ரீமானானராகவர் இந்திரனுக்கொப்பான பலமுள்ள வானரராஜனை ஸுக்ரீவனோடு நட்பைச் செய்துகொண்டார். உன்னை மீட்டுக்கொண்டுபோவதில் நல்லமுயற்சியுள்ளவராக இருக்கிறார். பயந்தவளே! உலகத்தாராலிகழப்பட்ட ராவணனிடமிருந்து உனக்குப் பயம் வேண்டாம். பெண்ணே! நளகூபரசாபத்தால் நீ காப்பாற்றப்பட்டிருக்கிறாய். முற்காலத்தில் இந்தப்பாவியான ராவணன் ரம்பைஎன்கிற மாதைப் பலாத்கரித்து அனுபவித்ததனால் சபிக்கப்பட்டிருக்கிறானன்றோ? இந்திரியங்களுக்கு வசப்பட்டவனான ராவணன் வசப்படாதபெண்ணை நெருங்குவதற்குச் சக்தியுள்ளவனல்லன். உன்னுடையபர்த்தா ஸுக்ரீவனால் பாதுகாக்கப்பட்டு விரைவாக வரப்போகிறார். லக்ஷ்மணனோடுகூடின புத்திமானானராமர் உன்னை இந்த ஆபத்திலிருந்து விடுவிப்பார்' என்று என்வசனத்தால் சொல்லப்படத்தக்கவள்' என்று சொல்லி

உன்க்காக என்னை அனுப்பினான். மிக்க கோரமானவை களும் தீமையைத் தெரிவிக்கின்றவைகளுமான ஸ்வப்னங்களும் கெட்டபுத்தியுள்ள இந்த ராவணனுக்கும் புலஸ்த்யகுலத்துக் கும் அழிவின்பொருட்டு என்னால் காணப்பட்டன. இந்த ராக்ஷஸன் பயங்கரனாகவும் கெட்டமனமுள்ளவனாகவும் இகழத்தக்க காரியங்களைச் செய்கிறவனாகவும் இருக்கிறான். இயற்கையாலும் நடைக்குற்றத்தாலும் எல்லாருக்கும் பயத்தை விருத்திபண்ணுகிற வனாக இருக்கிறான். காலத்தால் கெடுக்கப்பட்டபுத்தியுள்ளவனும் எல்லாத் தேவர்களோடும் விரோதத்தைப்பாராட்டுகிறவனுமான ராவணனுடைய விநாசத்திற்கு அறிகுறிகள் என்னால் ஸ்வப்னத் தில் காணப்பட்டன. தசானனன் எண்ணெய் தேய்த்துக்கொண்ட வனாகவும் தலைமயிரில்லாதவனாகவும் சேற்றிலமிழ்கிறவனாகவும் அடிக்கடி கழுதைகள்பூட்டப்பட்ட ரதத்தில் கூத்தாடுகிறவன் போல நின்றுகொண்டிருந்தான். கும்பகர்ணன்முதலிய இவர்கள் ஆடையில்லாதவர்களாகவும் தலைமயிருதிர்ந்தவர்களாகவும் சிவந்த புஷ்பங்களைச்சூடிச் சிவந்த மேற்பூச்சுள்ளவர்களாகவும் தென் திசையை நோக்கிச் செல்லுகின்றார்கள். விபீஷணன் ஒருவனே வெண்மையான குடைபிடித்தவனாகவும் வெள்ளைத் தலைப்பாகை யுடையவனாகவும் வெண்ணிறமுள்ளபுஷ்பங்களை அணிந்தவனாகவும் வெள்ளைச் சந்தனப்பூச்சுள்ளவனாகவும் வெண்ணிறமுள்ளமலையின் மீது ஏறிஇருந்தான். இந்த விபீஷணனுடைய நான்கு மந்திரி களும் வெண்ணிறமுள்ள புஷ்பங்களையும் சந்தனங்களையுமணிந்த வர்களாக வெண்ணிறமுள்ளமலையின்மீது ஏறி இருந்தார்கள். (இந்த ஐவரே) இந்த மஹாபயத்தினின்று விடுபடப்போகிறார்கள். ராமருடைய அஸ்திரத்தினால் கடல்சூழ்ந்த பூமியானது எல் லாப்பக்கங்களிலும் சூழப்பட்டது. உன்னுடைய பர்த்தா கீர்த்தி யினால் பூமிமுழுமையையும் நிரப்பப்போகிறார். லக்ஷ்மணனும் [1] யானையின் தொடையின்மீதேறினவனாகவும் தேனையும் பாயஸத் தையும் புஜிப்பவனாகவும் எல்லாத்திசைகளையும் எரிக்க எண்ணங் கொண்டவனாகவும் என்னால் காணப்பட்டான். அழுகின்றவளாக வும் இரத்தத்தால்நனைந்த மேனியுள்ளவளாகவும் புலியினால் பாது காக்கப்பட்டவளாகவும் வடதிசையைநோக்கிச் செல்பவளாகவும் நீ அடிக்கடி என்னால் பார்க்கப்பட்டாய். வைதேஹி! ஸீதையே! நீ

[1] 'எலும்புக்குவியலின் மேலிருந்து' என்பது வேறுபாடத்தின் பொருள்.

தம்பியுடனிருக்கும் பர்த்தாவான ராகவரோடு சேர்ந்து சீக்கிரம் ஸந்தோஷத்தை அடைவாய்,' என்று சொன்னாள். மான்குட்டியின் கண்போன்ற கண்களுள்ளவளும் சிறுமியுமான ஸீதையானவள், அந்தத்ரிஜடையினுடைய அப்படிப்பட்ட இந்தவசனத்தைக்கேட்டு, மீண்டும் பர்த்தாவோடு சேருவதில் ஆசையுள்ளவளானாள். பயங்கரமான உருவமுள்ளவர்களும் மிக்க உக்கிரஸ்வபாவமுள்ளவர்களுமான அந்தப் பிசாசிகள் வந்து முன்போல த்ரிஜடையுடன்கூட உட்கார்ந்துகொண்டிருக்கிற அந்த மைதிலியை அப்பொழுது கண்டார்கள்.

## இருநூற்றெண்பத்திரண்டாவது அத்யாயம்.

## ராமோபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

(ராவணன் ஸீதையினருகில்வந்து பலவாறு ஆசைகாட்டியும் அவள் மறுத்து அவனை அவமதித்ததும், அவன் திரும்பிச்சென்றதும்.)

பிறகு, பர்த்தாவைவிட்டுப் பிரிந்த சோகத்தால் பீடிக்கப்பட்டவளும் எளிமையுற்றவளும் அழுக்கடைந்த ஆடையை உடுத்தவளும் (தாலிக்கயிற்றில் கோக்கப்பட்ட) மணிமாத்திரமான அலங்காரமுள்ளவளும் அழுகிறவளும் பதிவ்ரதையும் ராக்ஷஸிகளால் காக்கப்படுகிறவளும் கல்லில் உட்கார்ந்திருப்பவளுமான அந்த ஸீதையை மன்மதபாணத்தால் பீடிக்கப்பட்ட ராவணன் கண்டு கிட்டநெருங்கினான். யுத்தத்தில் தேவர்களாலும் அஸுரர்களாலும் கந்தர்வர்களாலும் யக்ஷர்களாலும் கிம்புருஷர்களாலும் ஜயிக்கப்படாத ராவணன், மன்மதனால் துன்பமடையச்செய்யப்பட்டவனாக, அசோகவனத்தை அடைந்தான். திவ்யவஸ்திரம் தரித்தவனும் நல்ல ஒளிபொருந்தியவனும் நன்றாகக் கடையப்பட்ட ரத்தினங்களிழைத்த குண்டலங்களுள்ளவனும் விசித்திரமான புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்ட மகுடந்தரித்தவனும் உருவெடுத்து வந்திருக்கிற வஸந்தன்போன்றவனும் [1] முயற்சியினால் அலங்கரிக்

[1] வேறுபாடங்கொண்டு, 'ராவணன் முயற்சியினால் அலங்கரிக்கப்பட்டு, இந்திரனுடைய நந்தனவனத்திலுள்ள கல்பகவிருக்ஷம்போல விளங்கினான். ஆனால், எல்லா அலங்காரங்களாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தும், சுடுகாட்டினிடையிலுள்ள மேடை கட்டிய மரம்போல அச்சத்தையே விளைவித்தான்' என்பது இங்கிலிஷ் மொழிபெயர்ப்பு.

கப்பட்டிருந்தும் கல்பகவ்ருக்ஷத்திற்கு ஸமானனாக இல்லாதவனும் அலங்கரிக்கப்பட்டிருந்தும் இடுகாட்டிலுள்ள மேடைகட்டினமரம் போலப் பயத்தை உண்டுபண்ணுகிறவனுமான அந்தராக்ஷஸன், மெல்லிய இடையுள்ள அந்த ஸீதையின் ஸமீபத்தில் ரோஹிணியை அடைந்திருக்கிற சனிக்ரஹம்போலக் காணப்பட்டான். மன்மதனுடைய பாணத்தால் அடிக்கப்பட்டிருக்கிற அந்த ராவணன் அழகிய இடையுள்ளவளும் பயந்திருக்கிற பெண்மான் போன்றவளும் தேகபலமில்லாதவளுமான அவளை அழைத்து, 'ஸீதையே! இவ்வளவுமட்டும் போதுமானது. பர்த்தாவிஷயத்தில் அன்பு செய்யப்பட்டது. மெலிந்த மேனியையுடையவளே! என் விஷயத்தில் தயைசெய்வாயாக. நீ அலங்கரித்துக்கொள். [1]சிறந்த இடையுள்ளவளே! விலையேறப்பெற்ற வஸ்திரங்களையும் ஆபரணங்களையும் அணிந்துகொண்டு என்னை அன்புடன் அடைவாயாக. என்னுடைய எல்லா ஸ்திரீகளுள்ளும் நீ மேன்மைபெற்றவளாக இரு. என்னிடம் தேவகன்னிகைகளும் கந்தர்வஸ்திரீகளும் தானவகன்னிகைகளும் தைத்யஸ்திரீகளும் இருக்கிறார்கள். அழகின்ற கண்களுள்ளவளே! இப்பொழுது என்வசத்திலுள்ள அந்த எல்லாஸ்திரீகளுக்கும் நீ தலைவியாக இருப்பாயாக. பதினன்கு கோடி பிசாசஸ்த்ரீகள் என்வசனத்தில் கட்டுப்பட்டு நிற்கிறார்கள். பயங்கரமான செய்கையுள்ளவர்களும் மனிதர்களைத்தின்பவர்களுமான ராக்ஷஸர்கள் பிசாசிகளுடைய எண்ணிக்கையைவிட இரண்டு மடங்குள்ளவர்களாக இருக்கிறார்கள். என்னுடைய சொற்படி நடக்கிற யக்ஷர்கள் அதைவிட மூன்றுமடங்காக இருக்கிறார்கள். சிலரே, தனதிபனும் என்பிராதாவுமான குபேரனை அடைந்திருக்கிறார்கள். கல்யாணி! அழகிய தொடைகளுள்ளவளே! மதுபான கோஷ்டியை அடைந்திருக்கிற என்னை எப்பொழுதும் கந்தர்வஸ்திரீகளும் அப்ஸரஸுகளும் என்பிராதாவை உபாஸிப்பது போல உபாஸிக்கிறார்கள். நானும் விச்ரவஸென்கிற முனிவரான பிரம்மரிஷியின் ஸாக்ஷாத் புத்திரன். லோகபாலர்களுள் [2]ஐந்தாமவனென்று எனக்குக் கீர்த்தி பிரஸித்தமாக இருக்கிறது. கோபமுள்ளவளே! தேவராஜனுக்கிருப்பதுபோலவே எனக்கும் திவ்யமான பக்ஷ்யபோஜ்யங்களும் பற்பலவிதமான பானங்களும்

---

[1] மூலம் வேறு.

[2] நான்கு திக்குக்கு நால்வர் முக்யமானவர். ராவணன் சிறப்பினால் தன்னை ஐந்தாமவன் என்றான்.

இருக்கின்றன. வனவாஸத்தை உண்டுபண்ணின உன்னுடைய பாபச்செயலானது நாசமடையட்டும். அழகிய இடையுள்ளவளே! மந்தோதரியைப்போலவே நீ எனக்கு மனைவியாக இரு' என்கிற இந்த வாக்கியத்தை உரைத்தான்.

அந்த அரக்கனால் இவ்வாறு உரைக்கப்பட்டவளும் அழகிய முகமுள்ளவளுமான வைதேஹியானவள், அப்புறம்திரும்பிக்கொண்டு ஒரு துரும்பை நடுவில்போட்டு, அந்தராக்ஷஸனை உத்தேசித்துப் பின் வருமாறு உரைக்கலானாள். மிக்க அழகிய இடையுள்ளவளும், சிறுமியும், சேர்ந்திருப்பவைகளும் சாயாமலிருப்பவைகளுமான இரண்டு கொங்கைகளின்மீதும் அமங்களகரமான கண்ணீரால் ஒழிவில்லாமல் பொழிகின்றவளும், துக்கத்தால் மிக்கமயக்கத்தை அடைந்தவளும், பதியைத் தெய்வமாகக் கொண்டவளுமான அந்த வைதேஹியானவள், அதிகபிரயாஸத்தால் மனத்தை நிலைநிறுத்திக்கொண்டு, அல்பனான அந்தராவணனைக்குறித்து, 'ராக்ஷஸேஸ்வர! அடிக்கடிசொல்லுகிற உன்னுடைய துக்ககரமான இப்படிப்பட்ட வாக்கியமானது, பாக்கியமில்லாதவளான என்னால் கேட்கப்பட்டது. (சொந்தமனைவியை அடைவதாகிற)[1] மங்களகரமான ஸௌக்யமுள்ளவனே! உனக்கு மங்களம். மனத்தைத் திருப்பு. நான் அன்யருடைய மனைவியாக இருக்கிறேன். எப்பொழுதும் பதிவ்ரதையானநான் உன்னால் அடையத்தகாதவள். ராக்ஷஸ! மானிடப்பெண்ணாகியநான் உனக்கு உபயோகிக்கத்தக்க மனைவியுமல்லேன். ஸ்வாதீனப்படாதவளைப் பலாத்கரித்து என்னப்ரீதியைஅடைவாய்? உன்னுடைய பிதா பிரம்மதேவருக்கொப்பானவர்; பிராம்மணர்; பிரம்மாவின் புதல்வர். லோகபாலனுக்கொப்பான நீ எவ்வாறு தர்மத்தைப் பரிபாலனம் செய்யாமலிருக்கிறாய்? ராஜராஜனும் மஹேஸ்வரருக்குத்தோழனும் பிரபுவுமான அந்தத்தனேஸ்வரனைப் பிராதாவென்று சொல்லிக்கொண்டு நீ இந்தவிஷயத்தில் எவ்வாறு வெட்கப்படாமலிருக்கிறாய்?' என்று சொன்னாள். மெலிந்ததேகமுள்ள ஸீதையானவள், இவ்வாறு சொல்லிவிட்டு, கழுத்தையும் முகத்தையும் வஸ்திரத்தினால் மூடிக்கொண்டு, இருகொங்கைகளுங்குலுங்க மிக அழுதாள். அழுகின்ற அந்தப்பெண்ணரசியினுடைய நீண்டதும் நன்றாகப்பின்னப்பட்டதும் மிகக்கருமையானதும் பளபளப்புள்ளதுமான பின்னலானது தலையில் கருநாகம்போலக் காணப்பட்டது. துர்ப்புத்தியுள்ள ராவணன், ஸீதையால் சொல்லப்பட்டதும் அதிகநிஷ்டுரமாயுள்ளது

---

[1] வேறு பாடம்.

மான அந்தவாக்கியத்தைக்கேட்டு, ஸீதையால் மறுக்கப்பட்டிருந்தும் மீண்டுமே பின்வருமாறு வசனத்தைச் சொல்லலானான். 'ஸீதையே! மன்மதன் என்னுடைய அங்கங்களை வேண்டியபடி ஹிம்ஸிக்கட்டும். விருப்பமில்லாதவளும் அழகிய இடையுள்ளவளும் அழகிய புன்னகையுள்ளவளுமான உன்னுடன் நான் சேரமாட்டேன். நீ இன்னமும் எமக்கு ஆகாரமாக இருக்கிற மனிதனை ராமனையே அனுஸரிக்கிறாய். நான் என்ன செய்யக்கூடும்?' என்றுசொன்னான். அந்த ராக்ஷஸராஜன், இகழத்தகாத அங்கங்களுள்ளவளான அந்த ஸீதையைப்பார்த்து இவ்வண்ணமுரைத்து அந்த இடத்திலேயே மறைந்தவனாகி, இஷ்டமான திசையைநோக்கிச்சென்றான். ராக்ஷஸிகளால் சூழப்பட்டவளும் சோகத்தால் பிடிக்கப்பட்டவளுமான வைதேஹியானவள், த்ரிஜடையினால் தேற்றப்படுகின்றவளாகி அந்த இடத்திலேயே வஸித்தாள்.

## இருநூற்றெண்பத்துமூன்றாவது அத்யாயம்.

## ராமோபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

(ராமர் ஸுக்ரீவன்வராமையால் அவனிடம் லக்ஷ்மணனை அனுப்பியதும், லக்ஷ்மணன் ஸுக்ரீவனோடு ராமரிடம்வந்து அவன் ஸீதையைத் தேடுதற்காக வானரர்களை அனுப்பினதைத் தெரிவித்ததும், ஸீதையைக் கண்டுவந்த ஹனுமான், அங்கதன் முதலியவர்களோடு மதுவனத்தை அழித்து, ராமருக்கு ஸீதையின் வரலாறு முதலியவற்றைத் தெரிவித்துச் சூடாமணியையுங் கொடுத்ததும்.)

லக்ஷ்மணனோடு சேர்ந்திருக்கிற ராகவர், ஸுக்ரீவனால்பாதுகாக்கப்பட்டு மால்யவானென்கிறமலையின்மீது வஸித்துக்கொண்டிருக்கையில், ஆகாசம் மாசற்றிருப்பதைக் கண்டார். பகைவர்களைக் கொல்பவரும் மலைபோலிருப்பவரும் தர்மாத்மாவுமான அந்தராமர், நிர்மலமான ஆகாயத்தில் மாசற்றிருப்பதும் க்ரஹங்களாலும் (அச்விநிமுதலிய) நக்ஷத்திரங்களாலும் மற்ற நக்ஷத்திரங்களாலும் பின்தொடரப்பட்டதுமான சந்திரனைக்கண்டு, அல்லி கருநெய்தல் தாமரை ஆகிய மலர்களுடைய வாஸனையை எடுத்துக்கொண்டு வீசுகின்ற குளிர்ந்த காற்றினால் விரைந்து எழுப்பப்பட்டவரும், ராக்ஷஸனுடையவீட்டில் சிறையிடப்பட்டிருக்கிற ஸீதையை

நினைத்து மனவருத்தமடைந்தவருமாக, அதிகாலையில் வீரனான லக்ஷ்மணனைப்பார்த்து, 'லக்ஷ்மண! போ. கிஷ்கிந்தையிலிருக்கும் வானரராஜனான ஸுக்ரீவன் சிற்றின்பங்களில் மயங்கியவனும், நன்றிமறந்தவனும், தன் கார்யங்களில் ஸாமர்த்தியமுள்ளவனுமாயிருக்கிறான்; (அதனை) அறி. ரகுகுலத்தைத் தாங்குபவனே! மிக்கபுஜபலமுள்ளவனே! லக்ஷ்மண! குலாதமனான எந்தமூடன் என்னால் ராஜ்யத்தில் அபிஷேகம் செய்விக்கப்பட்டானோ, எவனை எல்லா வானரங்களும் கொண்டைமுசுறுகளும் கரடிகளும் (அரசனாக) அடைகின்றனவோ, எவனுக்காக அப்பொழுது கிஷ்கிந்தையின் உபவனத்தில் உன்னோடு கூடின என்னால் வாலி கொல்லப்பட்டானோ, இப்படிப்பட்ட நிலைமையை அடைந்தவனான எந்த மூடன் என்னை இப்பொழுது அறியவில்லையோ அவனை நான் பூமியில் வானரர்களுள் அதமனென்றும் நன்றிமறந்தவனென்றும் நினைக்கிறேன். இந்தஸுக்ரீவன், மிகவும் அல்பமானபுத்தியினால், உபகாரம் செய்தவனான என்னை அவமதித்துச் சபதத்தைக்காப்பதை நிச்சயமாக அறியவில்லை என்று நினைக்கிறேன். முயற்சி செய்யாமல் காமஸுகத்தில் முழுகினவனாகப் படுத்திருப்பானாகில், அவனை நீ வாலிபோனவழியினால் எல்லாப்பிராணிகளுமடைகிற கதியை அடையச்செய். லக்ஷ்மண! அப்படியின்றி, வானராதிபதியான ஸுக்ரீவன் நம்முடைய காரியத்தில் முயற்சியுள்ளவனாக இருந்தால், அவனைக்கூட்டிக்கொண்டே விரைவாக வா. தாமதியாதே' என்று சொன்னார்.

பிராதாவால் இவ்வண்ணமுரைக்கப்பட்ட லக்ஷ்மணன், குருவான அவருடைய வாக்கியத்திலும் ஹிதத்திலும் பற்றுதலுள்ளவனாக, அழகியதும் நாணேற்றப்பட்டதும் அம்புடன்கூடியதுமான வில்லை எடுத்துக்கொண்டு புறப்பட்டான்; கிஷ்கிந்தையின் வாயிலை அடைந்து தடுக்கப்படாதவனாக உள்ளே சென்றான். அவன் கோபத்துடனிருப்பதை அறிந்து, அரசனான ஸுக்ரீவன் எதிர்கொண்டு வந்தான். மனவடக்கமுள்ளவனும் வானரர்களுக்கு அதிபதியுமான ஸுக்ரீவன் மனைவியோடு மகிழ்ச்சியுடன் அவனுக்குத்தகுந்த பூஜையினால் அவனை வரவேற்றான். ஓரிடத்தினின்றும் பயமில்லாதவனான லக்ஷ்மணன் அந்த ஸுக்ரீவனை நோக்கி ராமருடைய வசனத்தை உரைத்தான். ராஜேந்திரனே! வானராதிபனான அந்த ஸுக்ரீவன், வேலைக்காரர்களுடனும் மனைவியுடனும்கூடி வணக்கமுள்ளவனாகக் கைகூப்பிக்கொண்டு அந்த லக்ஷ்மணன் சொன்ன வசன

களெல்லாவற்றையும் கேட்டு ப்ரீதியுள்ளவனாகிப் புருஷஸ்ரேஷ்டனான லக்ஷ்மணனைப்பார்த்து, 'லக்ஷ்மணரே! நான் துர்ப்புத்தியுள்ளவனல்லேன்; நன்றிமறந்தவனுமல்லேன்; தயையில்லாதவனுமல்லேன். ஸீதையைத் தேடும்விஷயத்தில் நான் செய்த முயற்சியைக் கேளும். நன்கு கற்பிக்கப்பட்டவர்களான வானரர்களனைவரும் என்னால், திக்குக்களில் அனுப்பப்பட்டிருக்கிறார்கள். வீரரே! காடுகளுடனும் மலைகளுடனும் பட்டணங்களுடனும் கூடியதும் கடலால் சூழப்பட்டதும் கிராமங்களுடனும் நகரங்களுடனும் சுரங்கங்களுடனும்கூடியதுமான இந்தப்பூமியில் தேடும்படி சென்ற அந்த எல்லா வீரர்களுக்கும் ஒரு மாஸத்தில் மீண்டு வந்துசேரவேண்டுமென்று காலம் குறிக்கப்பட்டிருக்கிறது. அந்த மாதமானது ஐந்துநாள்களால் நிரம்புவதாயிருக்கிறது. அதற்குப் பிறகு, ராமரோடுகூடினநீர் மிக்கப்ரியமான வசனத்தைக் கேட்பீர்' என்று சொன்னான்.

சிறந்த புத்தியுள்ளவனும் வானரர்களுக்கு அரசனுமான அந்த ஸுக்ரீவனால் இவ்வாறு சொல்லப்பட்ட லக்ஷ்மணன், கோபத்தை விட்டு மனோதைர்யமுள்ளவனாக ஸுக்ரீவனைக் கௌரவித்தான். அந்த லக்ஷ்மணன் ஸுக்ரீவனோடுகூடி மால்யவானென்கிற மலையின் மீது வஸிக்கின்ற ராமரை அடைந்து அந்தக்காரியம் தொடங்கப்பட்டதைத் தெரிவித்தான். தெற்குத்திக்கை அடையாத ஆயிரக்கணக்கான வானரபுங்கவர்கள் இவ்வண்ணம் மூன்று திசைகளையும் தேடித் திரும்பிவந்தார்கள். அங்கே அவர்கள், ராமரிடத்தில், 'கடல் சூழ்ந்த பூமியைத் தேடினோம். வைதேஹியையாவது ராவணனையாவது நாங்கள் காணவில்லை' என்று சொன்னார்கள். மனவருத்தமுற்றவரான ராமர், தென்திசையிற்சென்ற வானரபுங்கவர்களிடத்தில் ஆசையுள்ளவராகப் பிராணனைத் தரித்திருந்தார். இரண்டு மாதகாலம் சென்றபிறகு, (மதுவனத்தைக்காக்கிற) வானரர்கள், ஸுக்ரீவனை அணுகி த்வரையுள்ளவர்களாக, 'வானரஸ்ரேஷ்ட! செழிப்பானதும் பெரிதும் வாலியினாலும் உன்னாலும் பாதுகாக்கப்பட்டதுமான மதுவனத்திலுள்ள (தேனை) வாயுகுமாரனான ஹனுமான் குடிக்கிறான். வாலிபுத்திரனான அங்கதனும் தென்திசையில்தேடுவதற்காக உன்னால் அனுப்பப்பட்ட மற்ற வானரஸ்ரேஷ்டர்களும் குடிக்கிறார்கள்' என்று தெரிவித்தார்கள். அவன், அந்த வானரர்களுடைய அநீதியைக்கேட்டு, 'காரியத்தை ஸாதித்தவர்களான வேலைக்காரர்களுடைய செய்கையன்றோ இது? ஆதலால்

நான் காரியத்தை நிறைவேற்றினவன்' என்று எண்ணினுன். மேதாவியான அந்த வான்ராதிபதியானவன், அந்த விருத்தாந் தத்தை ராமருக்குத் தெரிவித்தான். ராமரும், அனுமானத்தால், 'மைதிலியானவள் காணப்பட்டுவிட்டாள்' என்று எண்ணினுர். அனுமான் முதலிய அந்த வானரர்கள் களைப்பாறினவர்களாக ராமலக்ஷ்மணர்களுடைய ஸந்நிதானத்தில் வானரராஜனுை அவனை அணுகினுர்கள். பாரத! ராமர், ஹனுமானுடைய நடை யையும் முகத்தின்நிறத்தையும் பார்த்து, ஸீதை பார்க்கப்பட்டா ளென்று மீண்டும் நம்பிக்கையை அடைந்தார். ஹனுமானைத் தலைவனுகக் கொண்ட அந்த வானரர்கள், விருப்பம் நிறை வேறினவர்களாக, முறைப்படி ராமரையும் ஸுக்ரீவனையும் லக்ஷ் மணனையும் நமஸ்கரித்தார்கள். நமஸ்கரித்தவர்களான அவர் களைப்பார்த்து, ராமர், அம்புடன்கூடினவில்லை எடுத்துக்கொண்டு, 'என்னை உயிரோடிருக்கும்படிசெய்வீர்களா? உங்களுடையகார்யம் நிறைவேறியதா? நான் யுத்தத்தில் சத்துருக்களைக்கொன்று ஜனக நந்தினியை மீட்டுக்கொண்டு மறுபடியும் அயோத்தியில் ராஜ்யபரி பாலனம்செய்வேனு? மனைவியை இழந்தவனும் பகைவர்களால் அவமதிக்கப்பட்டவனுமான நான் வைதேஹியை விடுவிக்கா மலும் யுத்தத்தில் பகைவர்களைக் கொல்லாமலும் உயிரோடிருக்கப் பிரியப்படவில்லை' என்று சொன்னுர். இவ்வாறு சொல்லிய ராம ரைப்பார்த்து, வாயுபுத்திரனுன ஹனுமான், 'ராமரே! உமக்கு நான் ப்ரியத்தைச் சொல்லுகிறேன். கண்டேன் அந்த ஸீதையை. மலைகளோடும் காடுகளோடும் சுரங்கங்களோடும் கூடியதான தென் திசையை முழுமையும் தேடிக் களைப்பையடைந்து, குறிப்பிடப் பட்ட காலமும்சென்றபிறகு, ஒரு பெரியகுகையைக் கண்டோம். நாங்கள் பலயோஜனைதூரம் நீண்டதும் இருளடர்ந்ததும். அழகிய காடுகளுள்ளதும் புகமுடியாததும் கதண்டுகளால்வியாபிக்கப்பட் டதுமான அந்தக்குகையில் நுழைந்தோம். மிகநீண்ட வழியைக் கடந்து சென்ற பிறகு, ஸூர்யனுடைய ஒளியைக் கண்டோம்; அந்தக்குகையிலேயே நடுவில் ஒரு திவ்யமான மாளிகையையும் கண்டோம். ராகவரே! அந்த வீடானது மயனென்கிற அஸுர னுடையதாம். அப்பொழுது, அந்தமாளிகையில் பிரபாவதி என் கிற தவப்பெண் தவம்புரிந்துகொண்டிருந்தாள். அவளால் கொடுக் கப்பட்ட போஜ்யங்களையும் பலவிதபானங்களையும் சாப்பிட்டுப் பலத்தை அடைந்தவர்களாகி, பிறகு, அவளால் காண்பிக்

கப்பட்டவழியினால் அந்த இடத்திலிருந்து வெளிப்புறப்பட்டு உப்புக்கடலுக்குப்பக்கத்திலிருக்கிற ஸஹ்யபர்வதத்தையும் மலய பர்வதத்தையும் தர்த்துரமென்கிறபெரியமலையையும் கண்டோம். பிறகு, மலயமலையின்மீதேறி ஸமுத்திரத்தைப் பார்க்கின்றவர்க ளான நாங்கள், மனவருத்தமுள்ளவர்களும் விசனமுள்ளவர்களும் ச்ரமத்தை அடைந்தவர்களும் பிழைத்திருப்பதில் சிறிதும் ஆசையில்லாதவர்களுமானோம். பலயோஜனைதூரம் அகன்றதும் திமிகளுக்கும் முதலைகளுக்கும் மீன்களுக்கும் இருப்பிடமுமான பெருங்கடலை நினைந்து அதிகதுக்கத்தை அடைந்தோம். அப்பொழுது, நாங்கள் பிராயோபவேசத்தில் நிச்சயமுள்ளவர்களாக அங்கே உட்கார்ந்திருந்தோம். பிறகு, எங்களுடைய கதைகளின் முடிவில், ஜடாயுவென்கிற கழுகினுடைய பிரஸ்தாவம் வந்தது. பிறகு, மலையின் சிகரம்போலப் பிரகாசிப்பதும் கோரமானரூப முள்ளதும் பயங்கரமானதும் வேறொரு கருடன்போலிருப்பது மான ஒரு பக்ஷியைக் கண்டோம். அது எங்களைத் தின்னக்கருதி யது. பிறகு, அது, எங்களிடம்வந்து, 'ஐயா! என்பிராதாவான ஜடாயுவின்கதையைச் சொல்லுகிறானே, இவன் யார்? நான் ஸம் பாதி என்கிற பிரஸித்திபெற்ற பக்ஷிராஜன். அந்த ஜடாயுவுக்கு நான் தமையன். நாங்களிருவரும் அன்யோன்யம் போட்டியுடன் ஆகாசத்தில் சூரியனிருக்குமிடத்தில் ஏறினோம். அதனால், இந்த என்சிறகுகளிரண்டும் எரிக்கப்பட்டன. ஜடாயுவினுடைய சிறகுகள் எரிக்கப்படவில்லை. ஆதலால், என்னுடைய இனியதம்பியும் கழு கரசனுமான அந்த ஜடாயு நெடுங்காலத்திற்குமுன் பார்க்கப்பட் டான். நான் சிறகுகளெரிக்கப்பட்டு இந்தப் பெரியமலையில் விழுந் தேன். என்ப்ராதாவும் வீரனுமான ஜடாயுவைப் பார்ப்பதற்குச் சக்தியற்றவனாக இருக்கிறேன்' என்கிற வசனத்தைச் சொல்லி யது. இவ்வண்ணம் பேசுகின்ற அந்த ஸம்பாதிக்கு, 'ப்ராதாவான வன் கொல்லப்பட்டான்' என்று தெரிவித்தோம். உங்களுடைய இந்த வ்யஸனமும் சுருக்கமாகவே தெரிவிக்கப்பட்டது. அரசரே! பகைவரையடக்குபவரே! அப்பொழுது, அந்த ஸம்பாதியான வன், மிகவும் அப்ரியமான செய்தியைக்கேட்டுத் துயரமுற்று மீண்டும் எங்களைப்பார்த்து, 'அந்தராமன் யார்? ஸீதை எப் படிப்பட்டவள்? ஜடாயு எவ்வாறு கொல்லப்பட்டான்? வானர ச்ரேஷ்டர்களே! இவை அனைத்தையும் கேட்கவிரும்பு கிறேன்' என்று வினவினான். நான் அந்த ஸம்பாதியினிடம்

உமக்குவந்திருக்கிற இந்தத் துயரமனைத்தையும் எங்களுடைய உண்ணுவிரதத்தின் காரணத்தையும் விஸ்தாரமாகச் சொன்னேன். அந்தப் பக்ஷிராஜன், 'ராவணன் என்னால் அறியப்பட்டிருக்கிறான். அவனுடைய லங்கை என்கிற பெரியபட்டணம் ஸமுத்திரத்தின் அக்கரையில் த்ரிகூடபர்வதத்தின் பள்ளத்தாக்கில் காணப்பட்டது. அந்த இடத்தில் வைதேஹியானவள் இருப்பாள். இந்த விஷயத்தில் எனக்கு ஸந்தேகமில்லை' என்கிற இந்தவாக்கியத்தால் எங்களைத் தேறுதலடையச்செய்தான். பகைவரைத்தவிக்கச் செய்பவரே! இவ்வாறான அந்தஸம்பாதியின் வசனத்தைக்கேட்டு நாங்கள் எழுந்திருந்து விரைவுடன்கூடியவர்களாக ஸமுத்திரத்தைத்தாண்டும்விஷயத்தில் ஆலோசனைசெய்யலானோம். ஒருவனாவது ஸமுத்திரத்தைத்தாண்டும்விஷயத்தில் நிச்சயம்கொள்ளாமற் போனபொழுது, நான் பிதாவான [1] வாயுவினுட்புகுந்து ஜலராக்ஷஸியைக்கொன்று நூறுயோஜனவிஸ்தாரமுள்ள மகா ஸமுத்திரத்தைத் தாண்டினேன். அந்தலங்கையில் ராவணனுடைய அந்தப்புரத்தில் பதிவ்ரதையும் உபவாஸத்தையும் தவத்தையும் இயற்கையாகக்கொண்டவளும் பர்த்தாவைப்பார்ப்பதில் அதிக ஆவலுள்ளவளும் ஜடையுள்ளவளும் அழுக்கினால் பூசப்பட்ட மேனியையுடையவளும் மெலிந்திருப்பவளும் எளிமையுற்றவளும் இரக்கப்படத்தக்கவளுமான ஸீதையானவள் என்னால் பார்க்கப்பட்டாள். நான் அவளைத் தனித்தனியான லக்ஷணங்களால் ஸீதை என்று அறிந்து கிட்ட அணுகி ஜனங்களில்லாத இடத்திலிருக்கிறவளும் பூஜிக்கத்தக்கவளுமான ஸீதையின் எதிரில்சென்று, 'ஸீதையே! வாயுவின்குமாரனும் வானரனுமான நான் ராம தூதன். உன்னைப்பார்ப்பதில் விருப்பமுள்ளவனாக ஆகாயமார்க்கத்தால் இவ்விடம் வந்தேன். ராஜபுத்திரர்களும் பிராதாக்களுமான ராமலக்ஷ்மணர்கள் எல்லாவானரங்களுக்கும் அரசனான ஸுக்ரீவனால் பாதுகாக்கப்பட்டு க்ஷேமமாக இருக்கிறார்கள். ஸீதையே! லக்ஷ்மணனோடுகூட ராமர் க்ஷேமத்தை உனக்குக் கூறினார். ஸுக்ரீவன் ஸகாவாக இருப்பதால் உன்னை க்ஷேமத்தைவினவுகிறான். உன்னுடைய பர்த்தா எல்லாவானரர்களுடனும் சீக்கிரம் வரப்போகிறார். தேவி! என்னிடம் நம்பிக்கை வைப்பாயாக. நான் வானரன். ராக்ஷஸனல்லேன்' என்று சொன்னேன். ஸீதையானவள், ஒருமுகூர்த்தகாலம் ஆலோசித்து

[1] வாயுவின் பலத்தைக்கொண்டு என்பது.

என்னைப்பார்த்து, 'நான் அவிந்த்யனுடையவசனத்தினுல் உன்னை ஹனுமானென்று அறிவேன். மகாபாகுபலமுள்ளவனே! அவிந்த்யனென்கிற ராக்ஷஸன் ஞானவ்ருத்தர்களால் (யோக்கியனென்று) ஒப்புக்கொள்ளப்பட்டவன். அவன் உன்னைப்போன்ற மந்திரிகளால் சுக்ரீவன் சூழப்பட்டிருப்பதாகச் சொன்னுன்' என்றுள். ஸீதையானவள் என்னைப்பார்த்து, 'போகலாம்' என்று சொல்லி, எந்த மணியினுல் புகழப்பட்டவளான அவள் இவ்வளவுகாலம் உயிரோடிருக்கும்படி செய்யப்பட்டாளோ அப்படிப்பட்ட இந்தமணியையும் கொடுத்தாள். புருஷஶ்ரேஷ்டரே! உம்மால் சித்திரகூடமென்கிற பெரியமலையில் காக்கையைக் குறிவைத்து ப்ரம்மாஸ்திரமந்திரத்தினுல் அபிமந்திரணம்செய்து ஒரு சிழ்கம்புல்லானது பிரயோகிக்கப்பட்டதென்றும் அதனுல் கெட்டமனமுள்ள காகமானது ஒருகண் பொட்டையாக்கப்பட்டு உயிரோடு விடப்பட்டதென்றும் இந்தக்கதையை உம்முடைய ஞாபகத்திற்காகவும் நம்பிக்கைக்காகவும் சொன்னுள். நான் என்னை இப்படிப்பட்டவனென்று ஸீதையை அறியும்படிசெய்து, பிறகு, அந்தலங்காபட்டணத்தை எரித்துவிட்டு இவ்விடம் வந்தேன்' என்று தெரிவித்தார். ராமர் ப்ரியத்தைச்சொல்லுகிற அந்த ஹனுமானைப் பாராட்டினுர்.

---

## இருநூற்றெண்பத்துநான்காவது அத்யாயம்.

## ராமோபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

(வானரஸேனுபதிகள் தங்கள் சேனைகளுடன் ராமரையும் ஸுக்ரீவனையும் அடைந்ததும், அவர்களுடன் ராமர் கடற்கரையை அடைந்து ஸமுத்திரராஜனை ஆராதிப்பதற்காகத் தர்ப்பசயனத்தில் படுத்ததும், ஸாகரராஜன் ஸ்வப்னத்தில்வந்து நளனுல் அணையைக் கட்டிக்கொள்ளும்படி சொல்லியதும், ராமர் சரணுகதிசெய்த விபீஷணனுக்கு லங்கையையாளப் பட்டாபிஷேகம் செய்து சேனைகளுடன் லங்கை சென்றதும்.)

பிறகு, அவர்களோடுகூடி அந்த இடத்திலேயே நன்குவீற்றிருக்கின்ற ராமரிடத்தில் அப்பொழுது ஸுக்ரீவனுடைய கட்டளையினுல் வானரஶ்ரேஷ்டர்கள் வந்துசேர்ந்தார்கள். நல்ல

காந்தியுள்ளவனும் வாலிக்கு மாமனுமான ஸுஷேணன் பல சாலிகளான ஆயிரம்கோடிவானரர்களால் சூழப்பட்டு ராமனை வந்தடைந்தான். மகாவீர்யமுள்ளவர்களான கஜன் கவயன் என்கிற வானரஶ்ரேஷ்டர்கள் தனித்தனி நூறுகோடிவானரர்களால் சூழப்பட்டவர்களாகக் காணப்பட்டார்கள். மகாராஜனே! பயங்கரமானதோற்றமுள்ள கவாக்ஷனென்கிற கோலாங்கூலன் அறுபதினாயிரம்கோடி வானரசேனைகளை அழைத்துக்கொண்டு ராமரிடம் வருகின்றவனாகக் காணப்பட்டான். கந்தமாதனத்தில் வஸிப்பவனும் பிரஸித்தனுமான கந்தமாதனன் வானரர்களுடைய நூறாயிரம்கோடி சேனைகளை அழைத்துவந்தான். மேதாவியும் அதிக பலசாலியுமான பனஸன் என்கிற வானரன் ஐம்பத்தேழுகோடி வானரர்களை அழைத்துவந்தான். நல்லதேஜஸுள்ளவனும் வானரர்களுள் வயதுசென்றவனும் மிக்க வல்லமையுள்ளவனுமான ததிமுகனென்பவன் பயங்கரமான சௌர்யமுள்ள வானரர்களுடைய பெரும்படையை நடத்திவந்தான். ஜாம்பவான், கருமைநிறமுள்ளவைகளும் முகத்தில் புண்ட்ர (ம்போன்ற அடையாள) முள்ளவைகளும் பயங்கரமான செய்கையையுடையவைகளுமான நூறாயிரங்கோடிக்கரடிகளுடன் காணப்பட்டான். மகாராஜனே! இவர்களும் இன்னும் மற்ற வானர யூதபதிகளுடைய யூதபதிகளும் எண்ணமுடியாதவர்களாக ராமகார்யநிமித்தம் வந்துசேர்ந்தார்கள். மலைகளின் சிகரங்கள் போன்ற மேனியையுடையவர்களும் சிங்கங்கள்போலக் கர்ஜிக்கின்றவர்களும் ஆங்காங்கு ஓடுகின்றவர்களுமான வானரசேனைவீரர்களுடைய நெருங்கிய ஒலியானது கேட்கப்பட்டது. சிலர் மலைகளின் சிகரங்களுக்கு ஒப்பானவர்கள். சிலர் எருமைபோன்றவர்கள். சிலர் சரத்காலத்து மேகம்போன்றவர்கள். சிலர் ஜாதிலிங்கம்போலச் சிவந்த முகமுள்ளவர்கள். சிலர் மேலேபாய்கின்றவர்களும் கீழே விழுகின்றவர்களும் துள்ளிக்குதிக்கின்றவர்களும் புழுதியை மேலே எழுப்பிவிடுகின்றவர்களுமாக நான்குபக்கங்களிலிருந்தும் வந்தார்கள். நிறைந்திருக்கிற ஸமுத்திரம்போன்ற அந்தவானரப்பெருஞ்சேனையானது, அப்பொழுது, ஸுக்ரீவனுடைய அநுமதியினால் அந்தப்பர்வதத்தில் இருப்பிடத்தை அமைத்துக்கொண்டது. பிறகு, எல்லாப்பக்கங்களிலிருந்தும் அந்த வானரஶ்ரேஷ்டர்கள் வந்து சேர்ந்தவுடன், அப்பொழுது, ஸ்ரீமானான ராகவர் ஸுக்ரீவனோடுகூடிச் சிறந்ததிதியில் நல்லநக்ஷத்திரத்தில் புகழப்பட்ட

முகூர்த்தத்தில் அணிவகுக்கப்பட்டிருக்கிற அந்தச்சேனையால் உலகங்களை மேல்கிழாகப் புரளச்செய்கிறவர்போலப் புறப்பட்டார். வாயுகுமாரனான ஹனுமான் ஸைன்யத்திற்கு முகமானான். ஒருவரிடத்தினின்றும் பயமில்லாத லக்ஷ்மணன் ஸைன்யத்தின் பின்பக்கத்தைப் பாதுகாத்தான். உடும்புத்தோலால் செய்யப்பட்ட விரலுறை கட்டிக்கொண்டவர்களான ராமலக்ஷ்மணர்கள் அந்த இடத்தில் மற்றக்ரஹங்களால் சூழப்பட்ட சந்திரஸூர்யர்கள்போல வானர யூதபதிகளால் சூழப்பட்டுச் சென்றார்கள். ஆச்சாமரங்களையும் பனைமரங்களையும் ஆயுதமாகக்கொண்ட அந்த வானரப்படையானது, ஸூர்யோதயகாலத்தில் விளைந்த மிகப்பெரிய செந்நெல் வயல்போல விளங்கியது. நளனாலும் நீலனாலும் அங்கதனாலும் க்ராதனாலும் மைந்தனாலும் த்விவிதனாலும் பாதுகாக்கப்பட்ட மிகப்பெரிய சேனையானது ராகவருடைய கார்யஸித்தியின் பொருட்டுச் சென்றது. பலவிதமானவைவயும் சிறந்தவையும் மிக்க கிழங்குகளும் பழங்களுமுள்ளவையும் மிகுதியான மதுக்களும் மாம்ஸங்களுமுள்ளவையும் ஜலமுள்ளவையும் அழகியவையுமான மலைகளின் தாழ்வரைகளில் ஒரு துன்பமுமில்லாமல் வஸிக்கின்ற அந்தவானரசேனையாது உவர்நீர்க்கடலை அணுகியது. இரண்டாவது கடல்போன்றதும் அதிகமான த்வஜங்களுள்ளதுமான அந்தச்சேனையானது, அப்பொழுது, கடற்கரையிலுள்ள காட்டை அடைந்து அங்கு வஸித்தது.

பிறகு, ஸ்ரீமானான ஸ்ரீரகுநந்தனர், வானரயூதபதிகளின் மத்தியில் ஸுக்ரீவனைப்பார்த்து, 'கடலைத்தாண்டும் விஷயத்தில் என்ன உபாயமானது உங்களால் எண்ணப்பட்டிருக்கிறது? இந்தச் சேனையோ பெரிது; ஸாகரமோ எவ்விதத்தாலும் தாண்டமுடியாதது' என்று ஸமயத்துக்கேற்ற இந்தவசனத்தைச்சொல்லினர். அந்தஸமயத்தில், ஸமர்த்தர்களென்கிற எண்ணங்கொண்ட சில வானரர்கள், 'வானரர்கள் கடலைத்தாண்டுவதில் வல்லவர்கள்; ஆனால், முழுமையையும் தாண்டுவதில் வல்லவர்களாகார்' என்று சொன்னார்கள். சிலர் ஓடங்களால் தாண்டமுயன்றார்கள். சிலர் பலவிதமான தெப்பங்களால் தாண்ட முயன்றார்கள். ராமரோ, அவர்களனைவரையும், 'இவை ஸரியல்ல' என்று மறுத்து, இன்சொல்லாக, 'வீரர்களான வானரர்களனைவரும் நூறுயோஜனை அகலமுள்ள ஸமுத்திரத்தைத்தாண்டுவதில் சக்தியுள்ளவர்களாகார். உங்களுடைய இந்த எண்ணமானது

நிச்சயமாக நிலைபெருது. சேனையைக் கடலைக் கடப்பிப்பதற்கு அப்படிப் பல படகுகளுமில்லை. நம்மைப்போன்றவன் வணிகர்களுக்குத் 'துன்பத்தை எவ்வாறு செய்வான்? பகைவன் மிகுதியான நம்முடைய ஸைன்யத்தை ஸமயம்பார்த்து அடிப்பான். இந்த ஸமயத்தில் தெப்பங்களாலும் படகுகளாலும் ஸமுத்திரத்தைத் தாண்டுவதென்பது எனக்கு ருசிக்கவில்லை. நானே இந்தக் கடலை உபாயத்தை அறிதற்காக ஆராதிக்கப்போகிறேன். உண்ணுவிரதமுள்ளவனைப் [1] பிரதிசயனம் செய்வேன். அப்படிச் செய்வதனால் ஸமுத்திரராஜன் எனக்குத் தரிசனம் கொடுப்பான். அவன் வழியைக் காட்டிக் கொடாவிடில் தடையற்றவையும் நெருப்பையும் காற்றையும் மீறி ஜ்வலிக்கின்றவையுமான மகாஸ்திரங்களால் நான் இந்த ஸமுத்திரத்தை எரிப்பேன்', என்று கூறினர். ராகவர், இவ்வண்ணமுரைத்து, பிறகு, லக்ஷ்மணனுடன்கூடினவராக ஆசமனம்செய்து சாஸ்திரவிதிப்படி தர்ப்பப்படுக்கையில் ஸமுத்திரராஜனை நோக்கிப் பிரதிசயனம் செய்தார்.

பிறகு, நதங்களுக்கும் நதிகளுக்கும் பர்த்தாவும் ஜலஜந்துக்களுடைய கூட்டங்களால் சூழப்பட்டவனும் காந்தியுள்ளவனும் ஆனந்தமுள்ளவனுமான ஸாகரனே ராகவருக்கு ஸ்வப்னத்தில் தன்னைக் காண்பித்தான். நூறுநூருக ரத்தினங்களின் சுரங்கங்களால் நிரம்பிய ஸமுத்திரராஜன், ராகவரை, 'கௌஸல்யையை மாதாவாகக்கொண்டவனே!' என்று

[1] 'ப்ரதிஶேஷ்யாமி' என்பது மூலம்; பிரதிசயனம் செய்வேன்' என்பது பொருள்; பிரதிசயனம் = ஒருகாரியத்தின்பொருட்டு அது ஸித்தியாகிறவரையில் அதற்குரிய தெய்வஸந்நிதியில் ஆஹாரமின்றிப் படுப்பது; ஸ்ரீராமாயணத்தில் வானரர்கள் செய்ததைக் கூறுமிடத்து, ப்ராயோபவேசம் என்ற சொல்லும் அதன் பரியாயபதங்களுமே உபயோகிக்கப்பட்டுள்ளன. பிரதிசயனமும் பிராயோபவேசமும் ஒன்றென்பதே பண்டிதர் பலருடைய கொள்கை. பரதன்செய்தது பிரத்யுபவேசம். 'பிரத்யுபவேசம் = காரியம் செய்யவேண்டியவருடைய வீட்டுவாயிலில் அந்தக்காரியம் ஆகும்வரையில் ஆகாரமின்றி முகத்தைமூடிக்கொண்டு புரளாமல் ஒருக்கணித்துப் படுப்பது' என்பது ஸ்ரீராமாயணம் திலகவ்யாக்யானம். அங்கங்கேஉள்ள சொல்லாற்றலால் இந்த மூன்றும் சிறிது சிறிது வேறுபாடுடையன என்று தோன்றுகிறது. விவரத்தை வல்லார்வாய்க் கேட்டுணர்க.

அழைத்து, "மதுரமான இந்த வசனத்தை (க் கேள்.) புருஷோத்த மனே! சொல். இச்சமயத்தில் உனக்கு என்ன உதவியைச் செய்யக்கடவேன்? நான் இக்ஷ்வாகுவம்சத்தாரால் உண்டுபண்ணப் பட்டவன். ராம! தவறாத பராக்கிரமமுள்ளவனே! உனக்கு நான் ஞாதியாக இருக்கிறேன்' என்று சொன்னான். ஸமுத் திரனால் இவ்வண்ணமுரைக்கப்பட்ட ராமர், பிறகு, 'நதங் களுக்கும் நதிகளுக்கும் பதியே! எந்த வழியினால் சென்று, குலத்தைக்கெடுத்தபாவியும் என்னுடைய மனைவியைக் கவர்ந்த வனும் ராக்ஷஸனுமான அந்தத் தசக்ரீவனை உறவினர்களுடன் கொல்வேனோ அந்தவழியை என்னுடைய ஸைன்யத்திற்கு நீ கொடுக்க விரும்புகிறேன்.' இப்படி யாசிக்கின்ற எனக்கு நீ வழியைக்கொடாமற்போனால் திவ்யாஸ்திர மந்திரங்களால் அபிமந்திரணம் செய்யப்பட்ட அம்புகளால் உன்னை வறளச்செய் வேன்' என்று சொன்னார். இவ்வாறு சொல்லுகின்ற ராமனு டைய வசனத்தை ஸமுத்திரராஜன் கேட்டு மனவருத்தமடைந்து கரங்களைக்குவித்து நின்றுகொண்டு ராமரைப்பார்த்து, 'உனக் குத் தீங்கை நான் செய்யவிரும்பவில்லை. நான் உனக்குத் தடை யைச்செய்கிறவனுமல்லேன். ராம! என்னுடைய இந்த வசனத் தைக்கேள். கேட்டுச் செய்யத்தக்கதைச் செய். சேனைசெல்லுவ தற்கு உன்னுடைய கட்டளையினால் வழியைக் கொடுப்பேனாகில் மற்றவர்களும் வில்லின்பலத்தால் என்னை இவ்வாறு கட்டளை யிடுவார்கள். 'ராகவா! இந்த வானரசேனையில் த்வஷ்டாவென்கிற விஸ்வகர்மாவுக்குப் புத்திரனும் நல்லபலமுள்ளவனும் சில்பிகளால் ஒப்புக்கொள்ளப்பட்டவனுமான நளனென்கிற வானரன் இருக் கிறான்; அவன் கட்டையையோ புல்லையோ கல்லையோ எதை எதை என்மீது போடுவனோ அவையெல்லாவற்றையும் நான் தாங்கிக் கொண்டிருப்பேன். அது உனக்கு அணையாகும்' என்று சொன் னான். இவ்வண்ணமுரைத்து அவன் மறைந்துபோகவே, ராமர் நளனைப்பார்த்து, 'நள! நீ ஸமுத்திரத்தில் அணையைக்கட்டு. நீ வல்ல வனென்று என்னால் எண்ணப்பட்டிருக்கிறாய்' என்று சொன்னார். எது நளஸேதுவென்று பூமியில் இன்றும் பிரஸித்திபெற்றிருக் கிறதோ பத்துயோஜனம் அகன்றதும் நூறுயோஜனம் நீண்டது மான அந்த அணைக்கட்டை ராகவர் அந்த உபாயத்தால் செய் வித்தார். ராமருடைய கட்டளையை முன்னிட்டு மலைக்கொப்பான அணையானது ஸமுத்திரத்தால் தாங்கப்படுகிறது.

அந்த இடத்திலிருக்கும்பொழுது, ராமரைத் தர்மாத்மாவும் ராக்ஷஸராஜனுக்கு ப்ராதாவுமான விபீஷணன் நான்குமந்திரிகளோடு வந்தடைந்தான். உதாரமனமுள்ள ராமர் அந்த விபீஷணனை நல்வரவுகூறி ஏற்றுக்கொண்டார். ஸுக்ரீவனுக்கு மாத்திரம், 'இவன் ராவணனுடைய ஒற்றனாக இருப்பனோ' என்கிற சந்தேகம் உண்டாயிற்று. ராகவர், உண்மையான செய்கைகளாலும் நல்லநடைகளாலும் குறிப்புக்களாலும் உண்மையாகவே விபீஷணன், விஷயத்தில், ஸந்தோஷமுள்ளவரானமையால், அவனைக் கௌரவித்தார்; எல்லாராக்ஷஸர்களுக்கும் அரசனாயிருத்தலில் விபீஷணனை அபிஷேகம் செய்வித்தார்; விபீஷணனை ஆலோசனை சொல்லுகிற மந்திரியாகவும் லக்ஷ்மணனுக்குத் தோழனாகவும் செய்தார். விபீஷணனுடைய அபிப்ராயப்படி அந்தராமர் ஸைன்யங்களுடன்கூடி அந்த அணைவழியாகவே மகாஸமுத்திரத்தைத் தாண்டினார்; சென்று, பிறகு, லங்காநகரியின் பெரியவையும் பலவுமான உத்யானவனங்களை வானரர்களால் பலவாறு ஒடித்து நாசம் செய்வித்தார். ராவணனுடைய அமாத்யர்களும் சாரர்களுமான சுகன் ஸாரணனென்கிற இரண்டு ராக்ஷஸர்கள் வானரவடிவத்தோடு அந்த இடத்தில் இருந்தார்கள். அவர்களை விபீஷணன் பிடித்தான். அந்த ராக்ஷஸர்கள் ராக்ஷஸரூபத்தை அடைந்தபொழுது, ராமர், (அவர்களை) வானரசேனைக்குக் காண்பித்து, பிறகு, விட்டுவிட்டார். பிறகு, சூரரான அந்தராமர், பெரிய வானரப்படையை உபவனத்தில் வைத்துவிட்டு, ராவணனிடத்திற்கு அங்கதனைத் தூதனுப்பினார்.

---

## இருநூற்றெண்பத்தைந்தாவது அத்யாயம்.

## ராமோபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

(அங்கதன் ராமனுடையகட்டளையை ராவணனிடம் தெரிவித்துமீண்டதும், ராமனுடைய கட்டளையினால் வானரர்கள் லங்காநகரத்தை இடித்து அரக்கர்களோடு போர்புரிந்ததும், ராமர் தம் சேனைகளைத் தனித்தனிவகுத்துப் போர்செய்யக் கட்டளையிட்டதும்.)

ரகுவீரர், மிகுதியான உணவுப்பொருள்களும் தண்ணீருமுள்ளதும் பலவகைக்கிழங்குகனிகளுள்ளதுமான அந்த வனத்தில் சேனையை இறக்கிவைத்து யுத்தமுறைப்படி எல்லாப்பக்கங்

களிலும் பாதுகாத்தார். ராவணன் லங்கையில் யுத்தசாஸ்திரப் படி யந்திரமுதலியவற்றை அமைத்தான். திடமான மதில்களும் கோட்டைவாசல்களுமமைந்ததான லங்கையானது, இயற்கை யாகவே, ஜயிக்கமுடியாததாக இருந்தது. ஆழ்ந்த ஜலமுள்ளவை களும் பயங்கரமான மீன்களாலும் முதலைகளாலும் நிரம்பினவை களும் கருங்காலிமுளைகளால் நிறைக்கப்பட்டவைகளும் தாண்ட முடியாதவைகளுமான ஏழு அகழ்கள் இருந்தன. [1] கதவுகளா லும் யந்திரங்களாலும் பகைவர்களால் பிரவேசிக்கமுடியாதவை களும், மூத்திரம் முதலியவை விடுவதற்கு ஸாதனமான குழாய் களோடும் (பகைவர்கள்மீது தூக்கிஎறியத்தக்க உருண்டைக்) கற்களோடும் கூடியவைகளும், 'பாம்படைத்த குடங்களை வைத் திருக்கும் போர்வீரர்களுள்ளவைகளும், விஷப்பொடிகளுள்ளவை களும், உலக்கைகளோடும் எரிகொள்ளிகளோடும் நாராசங்களோ டும் தோமரங்களோடும் கத்திகளோடும் கோடாலிகளோடும் கூடியவைகளும், சதக்னிகளுள்ளவைகளும், தேன்மெழுகுபூசின முத்கராயுதங்களையுடையவைகளும், காலாட்களால் நிறைந்தவை களும், எண்ணிறந்த யானைகளோடும் குதிரைகளோடும் கூடியவை களுமான [2] ஸ்தாவரகுல்மங்களும் ஜங்கமகுல்மங்களும் பட்டணத் தில் கோட்டைவாசல்களெல்லாவற்றிலும் இருந்தன. பிறகு, அங்கதனை லங்கையின் கோட்டைவாயிலை அடைந்து ராவண னுக்குத் தெரிவிக்கப்பட்டுப் பயமில்லாமல் உள்ளே சென்றான். மிக்கபலசாலியான அங்கதன் அனேக ராக்ஷஸக்கூட்டங்களின் மத்தியில் மேகவரிசைகளால் சூழப்பட்ட சூரியன்போலப் பிரகாசித் தான். சொல்வன்மையுள்ள அந்த அங்கதன் மந்திரிகளால் சூழப்பட்ட ராவணனை அடைந்து அனுமதிபெற்று ராமர் சொல்லி யனுப்பின செய்தியைச் சொல்லத் தொடங்கினான். 'அரசனே! கோஸலநாட்டுக்கு இறைவரும் பெரியபுகழ் படைத்தவருமான ராகவர், உன்னைக்குறித்து, ஸமயத்துக்கேற்ற இந்த வாக்கியத்தைச் சொல்லுகிறார். மிகவும் கெட்டபுத்தியுள்ளவனே! அதனை ஏற்றுக் கொள். 'தேசங்களும் நகரங்களும், அநீதியில் பற்றுதலுள்ளவனும்

---

[1] வேறு பாடம்.

[2] 'குல்மம் = நகரைக்காப்பதற்காகப் பகைவரறியாமல் மறைந்திருக்கு மிடம்; ஸ்தாவரகுல்மங்கள் = மஹா ஸ்தம்பங்கள்; அவை புருஜங்களென்னப் படும்; ஜங்கமகுல்மங்கள் = ஸேனை முதலியவைகள்; அவை அலங்கமென்னப் படும்' என்பது பழையவுரை.

புத்தித்தேர்ச்சியில்லாதவனுமான அரசனை அடைந்தால், அநீதியினால் கவரப்பட்டு அழிந்துவிடுகின்றன. ஸீதையைப் பலாத்காரத்தால் கவர்ந்த உன் ஒருவனால் என்விஷயத்தில் அபராதம் செய்யப்பட்டது. அந்த அபராதமானது, அபராதிகளல்லாத மற்றவர்களுடைய வதத்துக்குங்காரணமாகப்போகிறது. பலமும் கொழுப்பும் மேலிட்ட உன்னால், முற்காலத்தில், வனத்தில் ஸஞ்சரிக்கின்ற ரிஷிகள் பீடிக்கப்பட்டதும், தேவர்கள் அவமதிக்கப்பட்டதும், ராஜரிஷிகள் கொல்லப்பட்டதும், ஸ்திரீகள் அழும்பொழுதே கவரப்பட்டதுமான உன்னுடைய அநியாயத்துக்குப் பயன் இதோ வந்துவிட்டது. உன்னை மந்திரிகளோடுகூடக் கொல்லப்போகிறேன். போர்புரிவாயாக. ஆண்பிள்ளையாக இரு. ராக்ஷஸ! மனிதனுன என் வில்லினுடைய வல்லமையைப் பார். ஜனகநந்தினியான ஸீதையை விட்டுவிடு. என்னிடத்திலிருந்து ஒருபொழுதும் நீ விடுபடமாட்டாய். இந்த உலகத்தைக் கூர்மையுள்ள பாணங்களால் ராக்ஷஸர்களில்லாததாகச் செய்வேன்' என்று சொன்னார்' என்றான்.

இவ்வாறு சொல்லுகின்ற அந்தத்தூதனுடைய கடுமையான வசனத்தைக்கேட்டு, அரசனான ராவணன் கோபம்மூண்டு அதனைப் பொறுக்கவில்லை. பிறகு, அரசனுடையகுறிப்பை அறிந்தவர்களான நான்குராக்ஷஸர்கள், புலியைப் பறவைகள் பிடிப்பதுபோல (அங்கதனை) நான்கு அங்கங்களில் பிடித்துக்கொண்டார்கள். அவ்வாறு அங்கங்களில்பிடித்துக்கொண்டிருக்கிற அந்தராக்ஷஸர்களை அங்கதன் தூக்கிக்கொண்டே ஆகாயத்தில் எழும்பி உப்பரிகையின் மேலிடத்தில் புகுந்தான். வேகத்தோடு மேலே எழும்புகிற அங்கதனிடத்திலிருந்து அந்தராக்ஷஸர்கள் பூமியில்விழுந்து நல்ல அடியினால் துன்பம் உண்டுபண்ணப்பட்டவர்களும் மார்பு நன்கு பிளக்கப்பட்டவர்களும் ஆனார்கள். ராக்ஷஸர்களால் நன்குபிடிக்கப்பட்ட அந்த அங்கதன், அந்த உப்பரிகையின் உச்சியிலிருந்து லங்காபுரியைத்தாண்டி ஸுவேலபர்வதத்தின் ஸமீபத்தில் குதித்தான். தேஜஸ்வியான அங்கதன், பிறகு, கோஸலதேசாதிபதியாகிய ராகவரை அடைந்து எல்லாவற்றையும்தெரிவித்து அவரால் கொண்டாடப்பெற்றுக் களைப்பாறினான். ரகுநந்தனர், பிறகு, காற்றுப்போன்றவேகமுள்ள வானரர்கள் அனைவருங் கூடிச்செய்த முயற்சியினால் லங்கையின்மதிலை இடிக்கச்செய்தார்; லக்ஷ்மணன், விபீஷணனையும் ஜாம்பவானையும் முன்னிட்டுக்கொண்டு,

அணுகமுடியாததான நகரத்தின் தெற்குவாயிலை இடித்தான். அப்பொழுது, [1] கரபம்போலச் சிவந்தமேனியையுடையவர்களும் யுத்தத்தில் ஜயசாலிகளுமான நூறுயிரங்கோடி வானரர்களோடு லங்கையை எதிர்த்துவந்தார். நீண்டபுஜங்களும் தொடைகளும் கைகளும் கணுக்கால்களுமுள்ளவைகளும் சாம்பல்நிறமுள்ளவைகளுமான மூன்றுகோடிக்கரடிகள் யுத்தஸன்னத்தமாக இருந்தன. மேலேபாய்கின்றவர்களும் கீழேகுதிக்கின்றவர்களும் விழுகின்றவர்களுமான வானரர்களால் தூற்றிவிடப்பட்டபுழுதியினால் ஒளிகெடுக்கப்பட்டு அப்பொழுது ஸூர்யன் காணப்படவில்லை. அரசனே! ஸ்த்ரீகளுடனும் வயதுமுதிர்ந்தவர்களுடனும்கூடின அந்த அரக்கர்கள் செந்நெற்கதிரிலிருக்கும் பூப்போன்றவர்களும் வாகைப்பூவின் நிறமுள்ளவர்களும் பாலஸூர்யனுக்கு ஸமானர்களும் சணல்போல வெளுத்தசிவப்புள்ளவர்களுமான வானரர்களால் எல்லாப்பக்கங்களிலும் மஞ்சள்நிறமுள்ளதாகச் செய்யப்பட்டிருக்கிற மதிலை ஆச்சர்யமடைந்தவர்களாக நாற்புறங்களிலும் பார்த்தார்கள். அந்தவானரர்கள் ரத்தின ஸ்தம்பங்களையும் [2] கர்ணாட்ட கிருஹங்களுடைய சிகரங்களையும் பிளந்தார்கள்; முனைகள் உடைத்து நொறுக்கப்பட்ட யந்திரங்களையும் எறிந்தார்கள். அவர்கள், பெரிய ஆரவாரத்தோடுகூடியவர்களாகச் சக்கரங்களுள்ளவைகளும் உருண்டைக் கற்களுடன்கூடியவைகளுமான சதக்னிகளை எடுத்துப் புஜவேகத்தால் லங்கையின்நடுவில் எறிந்தார்கள். அப்படியே, பிராகாரத்திலிருந்த ராக்ஷஸக்கூட்டங்கள் வானரர்களால் நூறுநூறாக எதிர்த்தடிக்கப்பட்டு ஓடின. பிறகு, அரசனுடைய கட்டளையினால், நினைத்தவண்ணம் ரூபத்தை எடுப்பவர்களும் விகாரமான வடிவமுள்ளவர்களுமான ராக்ஷஸர்கள் லக்ஷம் லக்ஷமாகக்கூடிப் புறப்பட்டார்கள். அவர்கள் ஆயுதவர்ஷங்களைப்பொழிந்து வானரங்களை ஓடும்படிசெய்து பிராகாரத்தைப் பிரகாசிக்கச்செய்கின்றவர்களாகி அதிக ஆச்சர்யத்தை அடைந்தார்கள். உளுந்துக்குவியல்போன்றவர்களும் பயங்கரமான தோற்றமுள்ளவர்களுமான ராக்ஷஸர்களால் அந்தப்பிராகாரமா

---

[1] 'கைம்மணிக்கட்டுக்கும் சுண்டுவிரலுக்கும் இடைப்பட்ட உள்ளங்கையின்கீழ்ப்புறம்' என்பது பழையவுரை; 'ஒட்டகக்குட்டி' என்பது இங்கிலிஷ் மொழிபெயர்ப்பு.

[2] 'குறுக்காகச் செல்லும் வாகனம்போலக் கல்முதலியவற்றால் கட்டப்பட்ட ஒருவகை வீடு' என்பது பழையவுரை.

னது மீண்டும் வானரங்களில்லாததாகச் செய்யப்பட்டதாயிற்று. அனேக வானராதிபதிகள் சூலங்களால் அங்கங்கள் பிளக்கப்பட்டுக் கீழேவிழுந்தார்கள். அந்த இடத்தில் ராக்ஷஸர்கள் கோட்டை வாயிலிலுள்ள தூண்களால் பிளக்கப்பட்டு விழுந்தார்கள். வீரர்களான ராக்ஷஸர்களுக்கு வானரர்களோடு நகங்களாலும் பற்களாலும் ஒருவரையொருவர் கிழிக்கின்றவர்களும் கடிக்கின்றவர்களுமாகி மயிர்பிடிச் சண்டை நடந்தது. இரண்டுபக்கத்திலும் அட்டஹாஸம்செய்பவர்களான வானரர்களும் ராக்ஷஸர்களும் அந்த யுத்தத்தில் கொல்லப்பட்டுக் கீழே விழுந்தும் ஒருவரை ஒருவர் விடவில்லை. ராமரோ, மேகம்போல அம்புகளின் ஸமூகங்களைப் பொழிந்தார். அந்த அம்புக்கூட்டங்கள் லங்கையை அடைந்து அந்த ராக்ஷஸர்களைக் கொன்றன. திடமான வில்லையுடையவனும் ஶ்ரமத்தை ஜயித்தவனுமான லக்ஷ்மணனும் நாராசங்களால் குறிப்பிட்டுக் குறிப்பிட்டுத் துர்க்கத்திலிருக்கிற ராக்ஷஸர்களைக் கீழே விழச்செய்தான். லங்கையில் யுத்தம் செய்யப்பட்ட பிறகு, சேனைகளுக்கு ராகவருடைய கட்டளையினால் குறிப்பிட்ட ராக்ஷஸர்களை அடித்து ஜயத்தை மிகுதியாகவுடைய போர் நிறுத்தலானது உண்டாயிற்று.

---

## இருநூற்றெண்பத்தாறுவது அத்யாயம்.

## ராமோபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

(ராமர் லக்ஷ்மணர் முதலியவர்களுக்கு ராவணன் இந்திரஜித் முதலியவர்களோடு த்வந்துவயுத்தம்.)

பிறகு, லங்காபட்டணத்திலிருக்கிற அந்த வானரஸைனியங்களை, பர்வணன், பதனன், ஜம்பன், கரன், க்ரோதவசன், ஹரி, ப்ரருஜன், அருஜன், ப்ரகஸன் ஆகிய இவர்கள் முதலிய ராவணனுடைய வேலைக்காரர்களான பிசாசங்களும் அற்ப ராக்ஷஸர்களுமாகிய இவர்களுடைய கூட்டங்கள் பல எதிர்த்துச் சென்றன. பிறகு, எதிர்த்து வருகின்றவர்களும் கண்ணுக்குப் புலப்படாதவர்களும் கெட்ட எண்ணமுள்ளவர்களுமான அவர்களுடைய அந்தர்த்தான சக்தியின் வதத்தை அதை அறிந்தவனான விபீஷணன் செய்தான். அரசனே! காணப்படுகின்ற அவர்கள் எல்லாரும், பலசாலிகளும் நெடுந்தூரம் பாய்கின்றவர்களுமான வானரர்களால் அடிக்கப்பட்டு உயிர்போய்ப் பூமியில் விழுந்தார்கள். பிறகு,

(அதனைப்) பொருத ராவணன் ஸைன்யங்களுடன் கூடியவனாக யுத்தத்திற்குப் புறப்பட்டான். யுத்த சாஸ்திரத்தின் முறையை அறிந்தவனும் வேறொரு சுக்கிராசார்யர்போலிருப்பவனுமான ராவணன், கோரமான ராக்ஷஸப்படைகளாலும் பிசாசப்படைகளாலும் சூழப்பட்டவனாகச் சுக்கிரநீதியில் சொல்லப்பட்டபடி சேனையை அணிவகுத்துக்கொண்டு வானரர்களை எல்லாப்பக்கங்களிலும் சூழ்ந்துகொண்டான். ராகவரோ, அணிவகுத்துக்கொண்டு யுத்தத்திற்காக வெளிப்பட்டு வருகிற ராவணனை (ப்பார்த்து) ப்ருஹஸ்பதியினால் சொல்லப்பட்ட முறையை உபயோகித்து எதிரணிவகுத்துக்கொண்டு காணப்பட்டார். பிறகு, அந்தஇடத்தில் ராவணன் ராமரோடு எதிர்த்துப் போர்புரிந்தான். அப்படியே, லக்ஷ்மணனும் இந்திரஜித்தோடு போர்புரிந்தான். ஸுக்ரீவன் விரூபாக்ஷனோடும் நிகர்வடன் தாரனோடும் நளன் பௌண்ட்ரனோடும் படுசன் பனஸனோடும் அந்த இடத்தில் போர்புரிந்தார்கள். எவன் எவன் எவனை எவனை எதிர்த்து யுத்தம் செய்யத்தக்கவனென்று எண்ணினானோ அவன் அவன் அவனோடு அவனோடு எதிர்த்தான். யுத்தகாலத்தில் ஒவ்வொருவனும் தன் தன் தோள்வலிமையையே துணையாகக்கொண்டு போர்புரிந்தான். அந்த யுத்தமானது, பயமுள்ளவர்களுக்குப் பயத்தைவளர்ப்பதாகவும் மயிர்க்கூச்சலை உண்டுபண்ணுகிறதாகவும் முற்காலத்தில்நடந்த தேவாஸுரயுத்தம்போலக் கோரமாகவளர்ந்தது. ராவணன், சக்திகள் சூலங்கள் கத்திகள் இவற்றின்மழைகளால் ராமரைத் துன்புறுத்தினான். ராகவரும் தீட்டப்பட்டவைகளும் கூர்மையுள்ளவைகளும் உருக்கினாற்செய்தவைகளுமான அம்புகளால் ராவணனை அடித்தார். அப்படியே, லக்ஷ்மணன் மர்மஸ்தானங்களைப் பிளக்கிறபாணங்களால் முயற்சியுள்ள இந்திரஜித்தை அடித்தான். இந்திரஜித்தும் அனேகபாணங்களால் லக்ஷ்மணனைப் பிளந்தான். அஞ்சாதவிபீஷணன் ப்ரஹஸ்தன்மீதும் ப்ரஹஸ்தன் விபீஷணன்மீதும் பறவைகளின்இறகுகள் கட்டப்பட்டவைகளும் கூர்மையுள்ளவைகளுமான அம்புகளைப் பொழிந்தார்கள். பலமுள்ள அந்த மகாஸ்திரங்களுக்குச் சராசரங்களுடன்கூடின மூவுலகங்களுக்கும் துன்பம்உண்டுபண்ணக்கூடிய எதிர்ப்பு நேர்ந்தது.

---

## இருநூற்றெண்பத்தேழாவது அத்யாயம்.

## ராமோபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

(ராவணன் பிரஹஸ்தனும் தூம்ராக்ஷனும் கொல்லப்பட்டதைக் கேட்டுத் துயருற்று யுத்தத்திற்காகக் கும்பகர்ணனை அனுப்பியது.)

பிறகு, ப்ரஹஸ்தன், விபீஷணனை விரைவாக எதிர்த்துவந்து யுத்தத்தில் கடுமையாகக்கர்ஜித்துக் கதாயுதத்தால் அடித்தான். பயங்கரமானவேகத்துடன்கூடிய அந்தக்கதையினலடிக்கப்பட்டவனும் புத்திமானும் மிக்கபாகுபலமுள்ளவனுமான அந்தவிபீஷணன், இமயமலைபோல மிகவுறுதியாக இருந்துகொண்டு, அசையாமலிருந்தான். பிறகு, விபீஷணன், பெரியதும் நூறுமணிகளுடன் கூடியதுமான மகாசக்தியை எடுத்து அபிமந்திரித்து அவனுடைய தலையைக் குறித்து எறிந்தான். அந்த ராக்ஷஸன், வேகத்தோடு விழுகின்றதும் வஜ்ராயுதத்தின் வேகம்போன்ற வேகமுள்ளதுமான அந்தக்கதையினால் தலைதள்ளப்பட்டுக் காற்றினால் முறிக்கப்பட்ட மரம்போலக் காணப்பட்டான். யுத்தத்தில் அந்த ப்ரஹஸ்தனென்கிற ராக்ஷஸன் கொல்லப்பட்டதைக்கண்டு தூம்ராக்ஷன் அதிகவேகத்தோடு வானரர்களை எதிர்த்தோடினான். பிறகு, மேகத்துக்கொப்பானதும் பயங்கரமானதோற்றமுள்ளதும் வருகின்றதுமான அவனுடையஸைன்யத்தைக் கண்டஅளவில், யுத்தத்தில் வானரவீரர்கள் விரைவாகச்சிதறிவிட்டார்கள். பிறகு, அந்த வானரச்ரேஷ்டர்கள் விரைவாகச் சிதறி ஓடுகின்றதைக் கண்டு, வானரர்களுள் சிறந்தவனும் வாயுவின் புத்திரனுமான ஹனுமான் வெளிப்புறப்பட்டான். அரசனே! அந்த ஹனுமான் யுத்தத்தில் ஸன்னத்தனாக நிற்கின்றதைக்கண்டு வானரர்கள் எல்லாரும் அதிக விரைவுடன் திரும்பினார்கள். பிறகு, அன்யோன்யம் எதிர்த்தோடுகின்ற ராமராவண ஸைன்யங்களுடைய ஆரவாரமானது நெருங்கியதாகவும் மயிர்க்கூச்சலை உண்டுபண்ணுகிறதாகவும் தோன்றியது. கோரமானதும் ரக்தச்சேறுள்ளதுமான அந்தயுத்தம் நடந்துவரவே, தூம்ராக்ஷன் அந்த வானரசேனையைப் பாணங்களால் ஓடும்படி அடித்தான். சத்துருக்களை ஜயிப்பவனும் வாயுவின்புத்திரனுமான அந்த அனுமான் எதிர்த்துவருகின்ற அந்த ராக்ஷஸவீரனைப் பலத்தால் எதிர்த்தான். யுத்தத்தினால் ஒருவனையொருவன் ஜயிக்க எண்ணங்கொண்ட அந்த வானர

வீரனுக்கும் ராக்ஷஸவீரனுக்கும், இந்திரனுக்கும் ப்ரஹ்லாதனுக்கும் நடந்ததுபோல, கோரமானயுத்தம் நடந்தது. ராக்ஷஸன் கதைகளாலும் பரிகங்களாலும் ஹனுமானை அடித்தான். அநுமானும் அடிக்கட்டைகளையும் கிளைகளையுமுடைய மரங்களால் ராக்ஷஸனை அடித்தான். பிறகு, கோபங்கொண்ட வாயுபுத்திரனான ஹனுமான் மிக்ககோபத்துடன் அந்தத் தூம்ராக்ஷனைக் குதிரைகளோடும் ரதத்தோடும் ஸாரதியோடும்கூடக் கொன்றான்.

பிறகு, ராக்ஷஸவீரனான அந்தத்தூம்ராக்ஷன் கொல்லப்பட்டதைக்கண்டு, மற்ற வானரர்கள் பயமற்றவர்களாக ராக்ஷஸஸைனிகர்களைக் கொன்றார்கள். பலசாலிகளும் ஜயத்தினால்பிரகாசிப்பவர்களுமான வானரர்களால் ஹிம்ஸிக்கப்படுகின்ற அந்த அரக்கர்கள் எண்ணம் நிறைவேறாதவர்களாகப் பயத்தினால் லங்கையைக் குறித்து ஓடினார்கள். மீறிய அடிக்கப்பட்டவர்களும் மாண்டவர்கள்போக மிகுந்திருக்கிறவர்களுமான அந்த அரக்கர்கள், பட்டணத்தைநோக்கி ஓடி அரசனான ராவணனுக்கு எல்லாவற்றையும் நடந்தவண்ணம் தெரிவித்தார்கள். ராவணன், அந்த ராக்ஷஸர்களிடத்திலிருந்து யுத்தத்தில் ப்ரஹஸ்தனும் சிறந்தவில்லாளியான தூம்ராக்ஷனும் சேனைகளோடும் ராக்ஷஸர்களோடும் கொல்லப்பட்டதைக்கேட்டு, மிகநீண்ட பெருமூச்சைவிட்டுச் சிறந்த ஆஸனத்திலிருந்து எழுந்து, 'கும்பகர்ணனுடைய செய்கைகளுக்கு ஸமயம் வந்துவிட்டது' என்று சொன்னான். இவ்வண்ணம் உரைத்து, படுத்திருப்பவனும் அதிகமான உறக்கத்தையே ஸ்வபாவமாகக்கொண்டவனுமான கும்பகர்ணனை மிக்கபெரியசத்தத்துடன் கூடிய பற்பலவிதவாத்தியங்களால் எழுப்பும்படிசெய்தான். பிறகு, பயமடைந்தவனும் ராக்ஷஸராஜனுமான ராவணன், அதிக ப்ரயத்தனத்தால் கும்பகர்ணனைவிழிக்கச்செய்து, உறக்கத்தை விட்டவனும் கவலையற்றவனும் தன்னிலைமையிலிருப்பவனும் மகா பலசாலியுமான அந்தக்கும்பகர்ணனைப்பார்த்து, 'கும்பகர்ண! உனக்கு இப்படிப்பட்ட தூக்கம் இருத்தலாலும், நீ மகாபயங்கரமாயும் கொடியதாயுமிருக்கிற இந்தக்காலத்தை அறியவில்லையாதலாலும், நீ பாக்கியசாலியாக இருக்கிறாய். இதோ ராமன் வானரர்களோடுகூட அணையினால் கடலைத் தாண்டி இங்கே நம்மனைவரையும் அவமதித்துப் பெரியநாசத்தைச் செய்கிறான். ஜனகனுடைய புதல்வியும் ஸீதை என்கிற பெயருள்ளவளுமான இவனுடையமனைவி என்னால் கவரப்பட்டாள். அவளை மீட்டுக்

கொண்டுபோவதற்காக அந்தராமன் பெருங்கடலில் அணைகட்டி இங்கே வந்திருக்கிறன். அவனால், ப்ரஹஸ்தன்முதலான நம்முடைய பந்துஜனங்கள் பலர் கொல்லப்பட்டார்கள். பகைவர்களை அழிப்பவனே! உன்னைத்தவிர அவனைக்கொல்பவன் வேறு ஒருவனுமில்லை. பலசாலிகளுள்சிறந்தவனே! அப்படிப்பட்ட நீ இப்பொழுது கவசம்பூண்டு எதிர்த்துச்செல்.' பகைவர்களை அடக்குபவனே! யுத்தத்தில் ராமன்முதலிய எல்லாப் பகைவர்களையும் கொல். தூஷணனுடைய தம்பிமார்களான அந்த வஜ்ரவேகனும் ப்ரமாதியும் பெரியசேனையோடுசேர்ந்து உன்னைப் பின்தொடருவார்கள்' என்று சொன்னான்.

ராக்ஷஸராஜன், பலசாலியான கும்பகர்ணனைநோக்கி இவ்வண்ணம் சொல்லிவிட்டு, வஜ்ரவேகனையும் பிரமாதியையும் செய்யப்படவேண்டிய கார்யத்தில் கட்டளையிட்டான். தூஷணனுடைய தம்பியர்களான அந்தவீரர்கள் ராவணனைப்பார்த்து, 'அப்படியே' என்று சொல்லிவிட்டு, கும்பகர்ணனை முன்னிட்டுக்கொண்டு பட்டணத்திலிருந்து விரைவாக வெளிப்புறப்பட்டார்கள்,

## இருநூற்றெண்பத்தேட்டாவது அத்யாயம்.

## ராமோபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

(லக்ஷ்மணனால் கும்பகர்ணனும் ஹனுமானால் வஜ்ரவேகனும் நீலனால் பிரமாதியும் கோல்லப்பட்டது.)

பிறகு, கும்பகர்ணன், துணைவீரர்களுடன்கூடினவனாகத் தட்பட்டணத்தினின்று புறப்பட்டுத் திடமானமுஷ்டியுடன்கூடியதும் எதிரில்நிற்பதுமான அந்த வானரஸைன்யத்தைக் கண்டான். ராமனைப்பார்ப்பதில் விருப்பத்தால் அந்தச்சேனையைப் பார்க்கின்ற அந்தக் கும்பகர்ணன், வில்லைக்கையில்பிடித்து ஸந்நத்தமாக நிற்கிற லக்ஷ்மணனைக் கண்டான். வானரர்கள் அவனை விரைவாக எதிர்த்துவந்து எல்லாப்பக்கங்களிலும் சூழ்ந்துகொண்டனர். பிறகு, பயங்கரர்களானவானரர்கள் மலைகளையும் மரங்களையும் ஆயுதங்களாகக்கொண்டு சிங்கநாதங்களைச் செய்தனர்; பருத்த உருவங்களுள்ள பலமரங்களால் அடிக்கவும் அடித்தார்கள். சில வானரர்கள் பெரியபயத்தைவிட்டு நகங்களால் துன்பமடையச்செய்தார்கள். அந்தவானரர்கள் யுத்தமார்க்கங்களால் பலவாறு போர்புரி

கின்றவர்களாகிப் பயங்கரமான பலவித ஆயுதங்களால் ராக்ஷஸேந்திரனான கும்பகர்ணனை அடித்தார்கள். அடிக்கப்படுகின்ற அந்தக் கும்பகர்ணன், சிரித்துக்கொண்டு, பலன் சண்டபலன் வஜ்ரபாகு வென்கிற வானரர்களைத் தின்றான். ராக்ஷஸனான கும்பகர்ணனுடைய அப்படிப்பட்ட துன்பத்தை உண்டுபண்ணுகிற செய்கையைக்கண்டு பயந்தவர்களான தாரன் முதலிய வானரர்கள் அப்பொழுது பெருங்கூச்சலிட்டார்கள். ஸுக்ரீவன் உரக்கக் கூச்சலிடுகின்ற வானரசேனையிலுள்ள ஸேனாபதிகளுடைய சத்தத்தைக் கேட்டு, பயமில்லாதவனாகக் கும்பகர்ணனை எதிர்த்தோடினான். பிறகு, உதாரமானமனமுள்ள வானரச்ரேஷ்டன் வேகத்தோடு கும்பகர்ணனை எதிர்த்துப் பலத்துடன் அவன்தலையில் மரத்தால் அடித்தான். மகாத்மாவும் மகாவேகமுள்ளவனுமான அந்த ஸுக்ரீவன் கும்பகர்ணனுடைய தலையில் அடித்து மரத்தைச் சின்னபின்னமாகச் செய்தானேயல்லாமல் கும்பகர்ணனைத் துன்பமடையச் செய்தானில்லை. பிறகு, அந்த ராக்ஷஸன், மரத்தின் அடியினால் தூக்கம்தெளிந்து சிங்கநாதஞ்செய்து இருகைகளாலும் வலிந்து ஸுக்ரீவனைத் தூக்கிக்கொண்டுபோனான். ராக்ஷஸனான கும்பகர்ணனால் ஸுக்ரீவன் கொண்டுபோகப்படுவதைக்கண்டு வீரனான லக்ஷ்மணன் மித்திரர்களை ஆனந்தமடையச் செய்கின்றவனாக ராக்ஷஸனை எதிர்த்தான். பகைவீரர்களைக் கொல்பவனான அந்த லக்ஷ்மணன் எதிர்த்துவந்து மகாவேகமுள்ளதும் பொன்மயமான புங்கமுள்ளதுமான பெரிய அம்பைக் கும்பகர்ணன்மீது பிரயோகித்தான். அந்தப் பாணமானது அவனுடைய கவசத்தையும் தேகத்தையும் பிளந்து ரக்தத்தால் பூசப்பட்டதாகிப் பூமியைப் பிளந்துகொண்டு சென்றது. அப்படி, மார்பு பிளக்கப்பட்ட கும்பகர்ணன் வானராதிபதியை விட்டுவிட்டு மிக்க வேகத்தை அடைந்து லக்ஷ்மணனை, 'நில், நில்' என்று சொன்னான். சிறந்த வில்லாளியும் கல்லை ஆயுதமாகக்கொண்டவனுமான கும்பகர்ணன் பெரியகல்லை ஓங்கிக்கொண்டு லக்ஷ்மணனை எதிர்த்தோடினான். லக்ஷ்மணன் வேகமாகத் தன்னை எதிர்த்துவருகின்ற அவனுடைய மேலேதூக்கப்பட்ட இருகைகளையும் முனைகூர்மையான இரண்டு க்ஷுரப்ரங்களால் வெட்டினான். அவன் நான்கு கைகளுள்ளவனானான். கற்களை ஆயுதங்களாகக்கொண்ட அவனுடைய அந்த எல்லாப்புஜங்களையும் லக்ஷ்மணன் அஸ்திரலாகவத்தைக் காண்பித்துக்கொண்டு க்ஷுரங்களால் அறுத்தான். அவன் பருத்த

சரீரமுள்ளவனும் பலகால்களும் தலைகளும் கைகளுமுள்ளவனும் ஆனான். லக்ஷ்மணன் மலைகளின்குவியலுக்கொப்பான அந்தக் கும்பகர்ணனை ப்ரம்மாஸ்திரத்தினால் பிளந்தான். மகாவீர்ய முள்ளவனான அந்தக்கும்பகர்ணன், யுத்தத்தில் திவ்யாஸ்திரத்தால் அடிக்கப்பட்டு, துளிர்த்திருந்து பேரிடிநெருப்பால் எரிக்கப்பட்ட மரம்போலக் கீழேவிழுந்தான்.

உயிர்போய்க் கீழேவிழுந்திருக்கின்றவனும் வ்ருத்ரனுக்கொப் பானவனும் பலசாலியுமான அந்தக்கும்பகர்ணனைக்கண்டு ராக்ஷஸர்கள் பயத்தால் ஓடினார்கள். அவ்வாறு ஓடுகின்ற அந்தயுத்த வீரர்களைப்பார்த்து மிக்ககோபங்கொண்டவர்களும் தூஷணனு டைய தம்பிமார்களுமான அந்த்வஜ்ரவேகனும் ப்ரமாதியும் அவர் களை நிலைத்துநிற்கச்செய்து, பிறகு, லக்ஷ்மணனை எதிர்த்துச் சென் றார்கள். லக்ஷ்மணன், எதிர்த்துவருகின்றவர்களும் மிகுந்த கோப முள்ளவர்களுமான அவ்விருவரையும் உரக்கக்கர்ஜித்துப் பாணங் களால் எதிர்த்தடித்தான். குந்தீநந்தன! பிறகு, தூஷணனுடைய தம்பிமார்களிருவருக்கும் புத்திமானான லக்ஷ்மணனுக்கும் மிக நெருங்கியதும் மயிர்க்கூச்சலை உண்டுபண்ணுகிறதுமான யுத்தம் நேர்ந்தது. அந்தலக்ஷ்மணன் பெரிய அம்புமழையை ராக்ஷஸர்க ளின்மீதுபொழிந்தான். அவ்விருவீரர்களும் மிக்ககோபங்கொண்டு அந்தலக்ஷ்மணன்மீதும் சரமாரியைப் பொழிந்தார்கள். வஜ்ர வேகன் ப்ரமாதி இருவருக்கும் மிக்கபுஜபலமுள்ள லக்ஷ்மண னுக்கும் மிக்கபயங்கரமானயுத்தமானது ஒருமுகூர்த்தகாலம் இவ்வாறு நடந்தது. பிறகு, வாயுபுத்திரனான ஹனுமான் மலை யின்சிகரத்தை எடுத்துக்கொண்டு எதிர்த்து விரைவாகவந்து வஜ்ரவேகனென்கிற ராக்ஷஸனுடைய உயிரை வாங்கினான். மகா பலசாலியான நீலனென்கிறவானரனும் தூஷணனுடைய தம்பி யான பிரமாதியைக்குறித்து எதிர்த்து ஓடிவந்து பெரிய கல்லினால் அவனைப் பொடியாக்கினான். பிறகு, பரஸ்பரம் எதிர்த்தோடிவருகின்ற ராமராவண ஸைன்யங்களுக்குத் தீமையை விளைவிக்கிற யுத்தமானது மீண்டும் நடக்கத் தொடங்கியது. வனத் தில்வளர்ந்த வானரர்கள் ராக்ஷஸர்களை நூற்றுவர் நூற்றுவராகக் கொன்றனர். ராக்ஷஸர்களும் வானரர்களைக் கொன்றார்கள். அந்த யுத்தத்தில் பெரும்பாலும் ராக்ஷஸர்களே கொல்லப்பட் டார்கள்; வானரர்களோ கொல்லப்படவில்லை.

